உ

ஓம் மகாகணபதயே நமஃ.

# ஸ்ரீ கணேச கீதை

## மூலமும் - உரையும்.

### மங்களம்.

வேதநெறி பிறழாமல் விளங்குமடி யவருளத்தில்
விளங்கி மோன
நாதமடங் கிடுநிலையை நமக்கருள நல்வீர
நூதனனை
போதவுருக் கணபதியே புகன்றருளுந் திருக்கீதைப்
பொருளை யோத
வேதவிநா யகவடிவா மவன்பதமே நினைந்துநிதம்
வியந்து வாழ்வாம்.

### அவதாரிகை.

கரிமுகனு மிவ்வுலகங் கரிவறியும் பொருட்டாய்க்
கரிமுகனைத் தினம்பணியுங் கரிமுகனுன் மகத்தாம்
கரிமுகனார் திருவடியைக் காதலிக்குஞ் சததங்
கரிமுகனின் றாளதாய வதுவிவண்டா னென்னே.
கரிமுகனார் விகுதியென வண்மைவுறுமோ கருதிற்
கரிமுகன்மாட் டத்திப்த்த கற்பனையே யாகுங்
கரிமுகனை யீண்டெடுத்தான் மெய்ம்மையதா மதனைக்
கருணையினு லருள்புரிதி வீரசே சரனே.

# ஸ்ரீ கணேச கீதை

கணங்களின்பதி பதமரை கருத்தினி லிருத்திக்
கணங்களின்பதி வதனநின் றருடருமொழிக்குக்
கணங்களின்பதி திருவருள் கடையனேன் பெறற்கே
கணங்களின்பதி தருமதி கழறுவ னுரையே.

கருமமன்பு ஞானமெனுங் காண்டமூன் றுரூத்திற்
காண்டமென வீண்டுமே காண்டமுஞ் சூத்திரமே
வ்ரும்விருத்தி வார்த்திகமும் வேதாந்தங் களிற்போல்
வழங்குறுக விதிலாதி நான்கத்தி யாயங்
கருமமுறை காண்டமாம் பின்னென்கி லறிவாய்
கருத்துருகும் பத்திநெறி வித்தார மதனைத்
தருநவம முதன்மூன்று ஞானகாண் டார்த்தந்
தருமேக தசமூன்று காண்டமெனத் தகுமே.

அத்தியாயத்தி னதியிற் சூத்திர
மெத்துமீரொன்ப தாயிடுமேலுறு
மத்தியாயத்தி னந்தம்விருத்தியாம்
பத்துமத்திற்கு வார்த்திகம்பாடுமே

சூத்திறத்திற் சுலோகமிரண்டது
யாத்துமாம் விடயம் பிரயோஜனம்
ஆத்தன்மூன்று வைராக்கிய மாறதாம்
தீத்ததத்துவ நான்குதிரியுமேல்.

சீவன்முத்தியைச் செப்புறுஞ்சூத்திரத்
தாவதிப்பொரு ளாகுந்தொகுப்பதாய்
மேவுமங்கங்கு யாவையுமேதுமேல்
ஓவலின்றி யுரைப்பனருளினால்.

கீதைவேறினிற் கீதியாதேததை
யீதினின்றமெடுக்க மற்றீதினி
லோதலாகுமிகத் தொகுத்தோதற்
கீதின்மற்றினி லின்னுரையென்னலாம்.

எவணதோவிலை வாக்கமுதின்கடல்
எவணதோவென வெஞ்சடவிம்மதி
அவனதாடரணி யடைந்தாயினும்
சிவணலாமென வேசிறியேனெணம்.

கருவம் வெற்றி சமர்சரங்காதுகொள்
ளருவபொய்யுத யஞ்சட ராக்குவர்
கரிவதனநின் னன்மொழி காற்கொளென்
பொருவிலானந்தம் புந்தியருந்துமே.

ஈண்டு நலமெலாநல்கும் பகவான் ஸ்ரீ பராசரகுமரர் எல்லா மந்தமத்திம மதிகட்குத் திருவருணயப்பார் சர்வ வேதார்த்த சங்கிரகப் பொருட்டு இதிகாசங்களையும் புராணங்களையும் புரிந்தனர். அவற்றின்மாட்டோ அறம்பொருளின்பம் வீடெனும் பொருள்களை வெளியாகப் பொழிந்தனர் அவற்றுள்ளும் மகாபாரதத்தில் ஸ்ரீ பகவற்கீதைகளாம் உபநிடதங்களான் நன்குணர்த்தப் பெற்றபோதிலும் அருச்சுனன் அவ்வியாவற்றையுமே மறந்தனன் அவன் மீண்டும் ஸ்ரீபகவானைச் சரணடைந்து அசுவமேத சமயத்தில் மீண்டுமுத்தர கீதையால் ஸ்ரீ பகவானால் அனுக்கிரகிக்கப் பெற்றான், ஆகலின் பெரிது தடை யுடையதாம் இவ்வான்மவித்தை ஸ்ரீ விக்கினராஜர் திருமுகத்தினின்றும் திருவருள் செய்யப்பெறின் விக்கினம் யாதொன்று மின்றிக் கைவல்லிய சித்தியின் பொருட்டாம் என்றெண்ணி ஸ்ரீ கஜானனரருள் புரிவதும் வரேண்யன் அருள்பெறுவதும் ஆமிக்கீதையை ஸ்ரீ கணேச புராணமத்தியில் இனிதமைத்தனர். ஆண்டும் ஆதியிற்கேட்பவர் தம் முயல்கையின் பொருட்டுச் சூதர் விழுவாயிலாக விடயப்பிரயோஜனங்களைக் காண்பிக்கின்றார். வருமிரு சுலோகங்களால்:—

# மூ ல ம்.

## முதலாவது
## சாங்கிய சாரார்த்தயோக அத்தியாயம்.

ஸூத உவாச.

[illegible]
[illegible] ||

1. ஆறுமூன்றரு நூலிலருளினாற்
கூறுநல்லமு தந்தனைக் கொண்டனன்
ஏறுமின்சுவை யேயமுதீதினும்
வேறுயர்ந்த விழைந்தனன் மாந்தவே.

(வி - ம்.) ஈண்டுச் சுகமாக அறிந்துகொள்ளும் பொருட்டு ஒருவர்கேட்பது போலும் மற்றவர் கூறுவதுபோலும் என ஆக்கியாயிகைவாயிலாக ஜநகயாஞ்ஞவற்கிய சம்வாதத்தை யொளிர்விக்கும் பிருகதாரண்யகாதி யுபநிடத்துக்களிலே போலும் பிரத்தியக் காத்ம தத்துவம் பிரதிபாதிக்கப்படுகின்றது. அவ்வுணர்வும் கைவல்லியத்தை யடைவிப்பதாய் மோகநீக்கவாயிலாக ஆமென்பது எல்லாவேதாந்தங்களிலும் கண்டா கோஷமாம். ஆண்டிவ்வாதிய சுலோகார்த்தம் பதினென்புராணங்களிலும் கூறப்பட்டுள்ளது. அவை:— "மவ்விரண்டு பவ்விரண்டிரண்டிரண்டு வவ்வதுவா, மவ்வுறும்பிரத்திரயமாலிம்ப மக்கினிபோ, டொவ்வுங்கூஸ்கமுங் காருடமாகியே யொளிரும், செவ்விய பதினெண்புராணங்களுஞ் செறியும்," என்று சங்கிரகிக்கப்பட்டுள்ளன. மவ்விரண்டு — மார்க்கண்டேய புராணம் மத்சிய புராணம், பவ்விரண்டு — பவிஷ்யபுராணம் ஸ்ரீமத் பாகவதம். பிரத்திரயம் — பிரமாண்டபுராணம் பிரமபுராணம் பிரமவைவர்த்தம், இரண்டிரண்டு வவ்வது — விஷ்ணுபுராணம் வாயுபுராணம் வராகபுராணம் வாமனபுராணம்; ஆ — ஆதித்தியபுராணம், லிங் —

இலிங்கபுராணம், ப - பதுமபுராணம், அக்கினி - அக்கினி புராணம், கூ - கூர்மபுராணம், ஸ்க - ஸ்கந்தபுராணம், கருட - கருடபுராணம், ஆகப்பதினெட்டாம், உக்தம் - இவைகளிலியம்பிய, அமுதம் - அமுதம்போலும் பிரீதியை யாக்குவதாகிய நான்கு புருடார்த்தமாம். பிராசிதம் - உட் பாவிக்கப்பட்ட விப்பொருளிது பிராஸ்நாதி திருத்தியைச் செய்யும் பொதுமைபற்றிக் கேள்வியில் நிகழும் த்வயா - தேவரீரால் கேட்பிக்கப்பட்டது அடியேனாற் கேட்கப்பட்ட தென்பது திரண்ட பொருளாம். இவ்வாறு கேட்டபோதி னும் அவற்றின் கேள்வியாற் கிருதார்த்தன் அல்லன்யான். ததோபி - அந்தப் புராணங்களினும், அதி - அத்தியந்தம், ரசவத் - இரதமுடையது, "இரதமேயாமது" வென்னும் மறையான், இரதம் பிரஹ்மானந்தமாம், அதுவே முக்கிய மாகக் கூறுந்தன்மையைக் கொண்டு யாண்டு நிகழாநிற்குமோ அந்நூல் அதிரசமுடையதாம். பாதும் - ஆதரவோடுங் கேட்பதற்கு, இச்சாமி - தேவரீரைப் பிரார்த்திக்கின்றே னென்பது பொருள். அல்லது, ததோ - அந்தப்புராணங்களி னின்றும் மிகச் சுவையதாக யாது மாந்தப்பெற்றதோ அஃதநேகமுறை கேட்பினும் ஆதியான்மிக ஆதிபௌதிக ஆதிதைவிக விக்கினங்களின் மிகுதிப்பாட்டான் மருட்டு கின்றது. அவற்றுள் ஆதிவியாதிஜன்னிய விக்கினம் ஆதி யதாம், இரண்டாவது சிதோஷ்ணாதிஜன்னியமாம், கடை யதோ "ஆதலினிவுர்க்கது பிரியமதன்றும், யாதிதை மனுடருணர்ந்திடலன்றே" எனத் தேவதைகட்குப் பிர ஹ்மவித்தையின்கண்ணே தடைசெய்யுந் தன்மையைக் கூறும் மறையினாலேயே காட்டப்பட்டுள்ளது. ஆகலின் அவ் வமுதத்தை யயில்வான் மூவிதத்தடைகளினின்றும் காக்கக் காதலிக்கின்றேன். ஸ்ரீவிக்நேசுரர் திருமுகத்தினின்றும் வெளிப்போந்த வித்தை யமுதத்தை யுண்பிப்பையேல் அத்

தடைகளான் மருட்டுதற்கு முடியாதென அவ்விடமுற்ற வித்தை நன்கு காக்கப்பட்டதாமென்பது கருத்து. அமிர்த முத்தமம் - "பரமரர் தமக்குப் பிரஜை பின் பிரஜையே, ஆம வர்க்கதுவே மர்த்யமமிர்தமாம்" என்னும் மந்திரவர்ணத்தால் தாழ்ந்தோர்க்குப் புத்திராதியேயமுதமாம். "பருகியே சோமம் பவிப்பமேயமுதாய்" என்னுஞ்சுருதியான் மகத்தாலடையுந் துறக்கவமிருதம் உயர்ந்த வர்க்காம்; - "மேலே வந்தமுதத் தகைமேவுவன்" என்னுஞ் சுருதியினுன் மூர்த்தன்னியநாடியான் முறைமுக்தித்தான வடைவமுதம் உயர்ந்த வரினுமுயர்ந்தவர்க்காம்" மர்த்தியனமுதமயமாமீண்டுச் சத்தியப் பிரமஞ் சார்ந்திடலாகும்." என்னும் மறையான் உயர்ந்த வரினு முயர்ந்தவரினு முயர்ந்தவர்க்கமுதம் பிரஹ்மபாவமாம் அஃதீண்டுத்தமமெனத் தமப்பு விகுதியானே யியம்பப்பெற்றது. அவ்விதனுல் அறியவாஞ்சித்த விடயம் பரம்பிரஹ்மமெனக் காட்டப்பட்டது. (1)

(அ - கை.) விடயம் விளம்பிப் பயன்பகர்கின்றார்;—

யெநாஜ்ஞாதெநயொஸ்ஷிதாவஜ்பாம ஸுஜ்ஞாதெஂயதஃ |
யொமாஜ்ஞதம ஐஹாஸாமதெநூகாருணயாவத. ||

2\. அரும்பாக வமுத மயமாகியே யானெதனுல்,
விரும்பாத சிவ வமுதம் விரவிடுவேன் மிக்கவனுய்த்,
திரும்பாத திருயோகந் திகழுமுந் தெளியதனைப்,
பெரும்பாக வடியேற்குக் கருணையினுற் பேசுதியால்.

(வி - ம்.) யோகம் பிரஹ்மமின்மைக்கியமாம் அதனை யறையும் நூல் அமுதசாதனமாதலின் அமுதமாம், அது யோக அமுதம் அந்தப்பிரஹ்ம வுபநிடதத்தை, மேல் என் பொருட்டு, கருணையால், திருவருள் செய்தியெனச் சம்பந்திமாம் மிருதம் - அசேதனம் காரணசகிதம் நோசமிஞ்சக

மாம், அதனினும் அயலாயது அமிருதஞ் சின்மாத்திரமாம் அம்முக்கிய ஈசுரர் அமிருதமயர். யேந - தேவரீரா லுபதேசிக் கப்பட்டபிரஹ்மாமிருதத்தால் அமிருதமய ஈசுரனுக்காரியவு பாதியைக்களைந்துகாரணவு பாதித்தகைமையைக்கைப்பற்றிக் கடாகாசங்கடுப்பமடாகாசந்தன்மையை யனுபவித்து, அமி ருதம் - காரணோபாதியையுங் கைவிடுதலானே தூய சின் மாத்திரப் பரபிரஹமத்தையடைவல், எல்லா வேதாந்தங் களிலும் சகுணப் பிரஹ்மபாவ அடைவின் வாயிலாகவே நிர்க்குணப்பிரஹ்மபாவ அடைவு இத்தேகத்தினின்றுங் கிளம்பிப் பரஞ்சோதியைப் பற்றித்தன்னுருவத்தானே தான் வீற்றிருக்கும்" என்னுஞ்சுருதியானே கேட்கப்படுகின்றது. "அவனிங்ஙனம் அறிஞன் இவ்வாகபேதத்தினின்று மேலே கிளம்பி இத்துறக்கவுலகத்தில் எல்லாக் காமங்களையுமேயடை ந்து அமிருதத்தையினிதடைவன்" எனவுங் கேட்கப்படுகின் றது., சொரூபமாக நிலைபெறுதலும் சுவர்க்கலோகமடைதலும் சகுணபாவ அடைவாம், பரஞ்சோதியைப்பற்றுதலும் அமி ருத பாவமார்தலும் நிர்க்குணப்பிரஹ்ம பாவவடைவாம், பிரயோஜனம் வித்தைக்கு என விளம்பப்பட்டது. யதஃ— எதனாற் பதினொரு பொறியையும் பந்தித்த முமுக்ஷு தொடக்கத்திலேயே வேதார்த்தத்தை அறிவுற்றவனுகிப் பிரஹ்ம வித்தையின்கண்ணே யதிகாரியாவனோ அதனானே என்பது பொருள். மகாபாகவெனத் தேசிகர் சிறப்பால்: "ஞானமிச்சையிலாமை நறுஞ்செல்வம், மானதன்மமனுஜர் கட்கீசுர, வானமான சிவவடிவானவர்க், கானநற்குண மென்று மமையுமே" என்னுந் தக்ஷஸ்மிருதியினாலும், "ஞானமிச்சையிலாமை நறுஞ்செல்வ, மானதன் மந்திருப்புக ழியாவையும், யானமாமிரு மூன்றும்பகமென, மோனமுற்ற முனிவர் மொழிவரால்" என்பதனாலும், பிரஹ்மவித்தை யின் பொருளையாற் பெற்ற தடையற்ற ஞான ஐசுவர்யாதி

குருவனுசரிக்கத் தக்கதாமெனக் காட்டப்பட்டது. பகங்க ளாகிய ஐசுவர்யாதிகளின் கூட்டம் பாகம் ஆம், மகத்தான பாகம் யாவனுக்கோ அவன் மகாபாகனவன். தீவிரசேவை யினுலேனும், மிகுந்த சாதனங்களாலேனும், வேறு வித்தை யினுலேனும், பிரஹ்மவித்தையின் மறுதானஞ் சம்பவியா தாம் என்பதைக் குறிப்பிக்கும் பொருட்டுக் கருணையாலெ னக் கழறப்பெற்றது. தீவிர சமுசாரதுக்க பீடையுற்றழுந் துமிவர் அவசியம் சமுசாரத்தினின்றும் விடுபடுத்தக் கடவர் என்னும் எண்ணத்தா லென்பது பொருள். ஈண்டுப் பிர ஹ்மகீதைகட்குப் பிரதிபாத்தியப் பிரதிபாதகபாவ சம்பந்த மாம். அதையவாவுவோன் அதிகாரியாவன் என அநுபந்த சதுஷ்டயம் அறையப்பெற்றது சூதரது வினுவாயிலா யென் றுணர்க. (2)

(அ-கை.) இவ்வண்ணம் சாஸ்திர ஆரம்ப அங்கமாய அனுபந்த சதுஷ்டயத்தைச் சூதரது வினுவாயிலாக வினிது காண்பித்து ஸ்ரீ கஜானனவரேண்ய சம்வாத வாயிலாகச் சாஸ்திரத்தைத் தொடங்கும் ஸ்ரீ வியாசபகவான் கூறல்:—

அயமீதாஂவஷ்யக்ஷ்யாமி யோகஸாமஂவஷ்யகாஸிநீஂ |
நியுக்தாவஷ்டஉந்தஹஸ தாமஜே ஹஜநவேநயா.

3. இனியரிய கீதையினையினிதாக வியம்பிடுவாந்
தனையறியும் யோகநெறி தனையொளிர வைப்பதிது
மனனறியமாமுகனுன் மணங்கமழ வழங்கியத்
உனையனைய வெனையவரு முள்ளுணர வினவுவதே.

(வி-ம்.) ஈண்டு ஏறுமின்சுவையதை விழைந்தனன்மாந்திவே யென்று கூறும்சூதரால், அற்பச்சுவையமைந்த அறம்பொரு ளின் பங்களென்னுந் துச்சமாக நிச்சயிக்கப்பட்ட பலன்களி

னின்றும் தமக்கு நித்தியா நித்தியவத்து விவேகமுடைமையும் இகாமுத்திரார்த்த பலபோக விராகமும் காட்டப்பெற்றன; மிக்கவஞ்சூலின் எனச்சமாதி சம்பந்தத்தன்மையும், சிவவமுதஞ் சிவ்ஹுவல் எனமுமுக்ஷுதையும் காட்டப்பட்டன. இவற்றின் பின்னென்பது அதசப்தார்த்தமாம். ஹே சூத! இத்தகைய சாதனசதுஷ்டய சம்பன்னனை உனக்கு அக்கீதையையினிது கூறுவேன் எனக் கொண்டு கூட்டிக்கொள்க. அவ்வெக்கீதையை. யெனின்? யாது வரேண்ய அரசன் பொருட்டு, ஸ்ரீ கஜமுகதேவனால் உணர்வுறுத்தப் (பிரேரிக்கப்) பெற்றதாமோ. அவ்வாறே ஸ்ரீமத் பாகவதத்தும் "கவ்வுமுன்னயன்றன் மனந்தனிற் சருக்கங் கருதுறுமிருதியைக் கதிர்த்துத், தவ்வுறப் பணிப்பக்கலை மகளவன்றன் றனிமுகந் தனினின்றுந் தனித்தா, னிவ்வகையினிய வுருவுற வொளிர்ந்த வெழின்மறையருடரும்பரம், செவ்வுணர்வுறுத்து முனிவரிற்சிறந்த செல்வமே சிறியனேற் கருள்வாய்."

என்று கூறப்பெற்றுளது. அதனானும் ஈசனைப்பிரளயகாலத்திற் பிரஜையாவும் அடைகின்றபடியானும், ஈசனினின்றும் சிருஷ்டிகாலத்தில் பிரஜை யாவும் உண்டாகின்றபடியானும், பிரபஞ்சம்முழுவதன்காரணம் ஈசுரன் கஜவென்னுஞ் சப்தார்த்தமாம், அவ்வீசனே, முகம் பிரதமம், காரியம் ஏதற்கோ அப்பரமாத்மா கஜமுகன், அக்கஜமுகனால் தன்னாற் சிருட்டிக்கப்பட்ட - வரேண்யனுக்கறிவுறுத்தற்பொருட்டுக் கீதையெனப்பெயரிய சரசுவதி, நியுக்தமாம் - பிரேரிக்கப்பெற்றதாம், அதனால் "அயன்றனை முன்னரேயாக்கினோனெவன் மயலறு மறைகளை வழங்கினோனெவன்

௧

கயமுகத்தேவனைக் கழன்மதியொளிர்ப்பனை, யுயுவ தற்கெண்ணியே யுபயமோதுவேன்'' என்னுமிச்சுருதியின் பொருள் காட்டப்பெற்றதாம். ப்ருச்சதே - வினுப்புரிவர் விளங்கும்வேட்கையர் என்பதுபொருளாம். கீதையின் சிறப்பாம் யோகமார்க்கத்தைப் பிரகாசிப்பதென்பது:— "உணர்வுறும்பொறிகளைந்து முளமொடு மொடுங்கி மேவித், தணர்வுறுமதியும் போது தக்கமேற் கதியதென்பர், உணர்வரிங்கதனை யோகமுரம்பொறிநிறுவலுற்ற, பணுமயலறுகப் போதபாயம்போ கியுமன்றே'' என்னும்மறையினும், "பிண்டமாக்கு யொண்புலன்களின் குழுவினைப் பிணக்கில்புந்தி யிற்கோட்டி, விண்டுதான் பொறியதனினைவெவற்றையும் வெறிதுறவறிவேயாய், பண்டை மாமறைமுடியெங்குஞ் சதுரிதுபவிக்குந் தத்துவமாக, வண்டுமாதிய தொடர்மொழிப்பொருளறிவன்புகொண்டாமாறே'' இருவகையிந்திரிய சமுதாயங்களையும் விடயங்களினின்றும் விலகுமாசெய்து மதியதினை மடைந்து சஞ்சலமிலாமற் சாதித்து மிருதியர்தி மனோவியாபார்த்தையு மிழந்து சின்மாத்திராகாரத்தைச் சிவணி அதனனுசாரமாகவே எப்போதுமிலங்குக, யோகநூலறிந்தாரும் இதனை அசம்பிரஞ்ஞாத சமாதியாமென்றுரையாடுவர், சகல மறைச்சிரங்களுமிதிற் சம்மதித்தொளிருமென்பதாம்; என்னும் வார்த்திகத்தும் யோகத்திற்கு முக்கியத்தன்மைகாணப் பெறுகின்றது. அதனலஃதின்றியாயினும் வித்தையநியும் ஆகவுமாகாதாம் என்று கருதியே யோகமார்க்கப் பிரகாசஞ் செய்வது எனப்பட்டது, ஞானமார்க்கப் பிரகாசஞ் செய்வது எனப்படவில்லை. இதனுனே பாதஞ்சலசூத்திர பாடியமாற்றிய ஸ்ரீ பகவான் வாதராயணரால், நிருவிகற்ப சமாதியைப்பற்றி விவகரிக்கும்போது "இவ்வவத்தையின்மாட்டீசனுக்காதல் அநீசனுக்காதல் ஞானிக்காதல் கைவல்லியம் சித்தமாம்'' என வியம்பப்பெற்றதாம். (3)

(அ - கை.) இங்ஙனம் ஸ்ரீ கிருஷ்ண அருச்சுனர்கட்கேபோலும் ஸ்ரீ கணேசவரேண்யர்கட்கும் நூலிலுலே தத்துவம் நிர்ணயிக்கப்பட்டபோதினும் உலக திருஷ்டியை யனுசரித்து அவர் தஞ் சம்வாதம் அறைகின்றார்; ஆண்டு அறியும் வேட்கையனுய - வரேண்யன் கூறல்:—

விஞெயஸ்ய ஊஹாஙபாஹொ ஸவ்விஜ்யா விஸாஙஊ ।
ஸவ்ஸாஸாயஷ்தஜ யொமஂஙெவக்ஷ ஊஹவி. ॥

4. தடையொடிக்குந் தடம்பெருந் தோளினேப்
முடியில் வித்தைகண் முற்றுணர் தாளினு
படையநூற்பொரு ளுண்மையறிந்தநீ
யுடையனுக் குரியாயுரையோகமே.

(வி - ம்.) ஈண்டு வியாதி - யாலசியம் சமுசயாதிகளும், துக்க சிந்தாகுலாதிகளும் தன்னுற்றடைகளாம்; இயக்கர் அரக்கர் மிலேச்சர் சோரர் வேடர் முதலாயினோர் பிறிதாற்றடைகளாம், பாகண்டமார்க்கப் பற்றுமுதலானவை நூலாற்றடைகளாம், அந்த ஞானயோக எதிரிகளை முறையே நீக்க வேண்டிக்கொண்டு முற்பாதியால் விளிக்கின்றனன். அவ்வப்பாவபலன்களாய் விசேடமாகத் தடைபுரியும் ஆதிகட்கு நாசம் விக்கிநேசுர அதீனமாம், மத்தியமங்களின் சர்வஜனபாகுவாதிகளாலே பாகுமதநாசம் மகாபாகுவின் அதீனமாம், அந்தியங்களின் சத்தசத்துநெறியுணர்ந்ததாய் தந்தைசதிங்களினின்றும் ஆப்ததம்னுக்குக் கிருபையினாலே நாசமாம் என்பதாக முறையாய் விளித்தவன்றன்கருத்தாம். அற்றேல், எல்லா நூல்களிலும், தாரணைமுதலியவற்றாற் சாதிப்பதேயோகமென்பதும் அதன் சித்திவாயிலாக ஆவது கைவல்லிய அடைவென்பதும் சமானமாம், ஆகவே சாக்தாதி மார்க்கங்களினின்றும் நீக்கம் வேண்டுவது என்னைகொலோ

வென் ஆசங்கித்துக் கூறுவார், சர்வசாஸ்திரார்த்த தத்வஞ்ஞ என்றார். மேலாகவேனும் கீழாகவேனும் யாவன் அயன் மார்க்கம் ஆசிரயிப்பனோ அவன் பிரத்தியவாய தக்தன் ஆவன், எங்குமே சித்தியையடையமாட்டான் என்பது அவ் வச்சாத்திர இருதயமாம். இதுவிடயம் "கூறினநூல்வழி சேர்குறிபேணு; தேறினவாறு செய்வாரிகலோகம், வேறிய லார்பரலோகம் விளக்கும், பேறினவானவை பேறுபெறு ரால்," தடுத்ததொழில் செய்வதுதகாதது தனக்கே, யடுத்த தொழில் செய்துகெடுமேனுமழகையா, விடுத்த கருமம்பெ ரிது செய்வதனின் மேலோர், தொடுத்தகருமஞ் சிறிது செய்கைதொழிலென்றான். ஸ்ரீ பகவற் கீதையிலும் கூறப் பெற்றுளதாம். எச்சாத்திரார்த்தம் எவற்கனுகூலம் எவற் குப் பிரதிகூலம் என்னுந்தத்துவத்தை நன்குணர்ந்து பரம காருணிகராகிய தேவரீர் அடியேனுக்குயாது இனிதாகத்தக்க யோகமோ அதனையே, மே - அடியேன் பொருட்டு, வக் தும் - அருளுவதற்கு, அர்ஹஸி - ஆற்றலுடையவராக இருக் கின்றீர். (4)

(அ - கை.) இங்ஙனம்வரேண்யராஜாவாற் பிரார்த்திக் கப்பெற்றவராய ஸ்ரீகஜாநநர் அவனைப்புகழ்ந்துகூறுகின்றார்

ஸ்ரீகஜாநந உவாச:— ஸம்யக்வ்யவஸிதா ராஜந் மதிஸ்தே(அ)பீஷ்டதாயிநீ |
ச்ருணு கீதாம் ப்ரவக்ஷ்யாமி யோகம் அப்யாஸநுத்தமம்.

5. மன்னு மென்னருள் நன்மலர்ந்தன்னது
நன்னர்மன்னநயமுணநண்ணுமான்
மன்னயோகவமுதமயமதா
மன்னகீதைசெவிகொள்ளருள்வனே.

(வி - ம்.) ஹேராஜந் ஹேவரேண்ய! தெ - நினது மதியோகக்கேள் விபாலன்புடையதாய்; சம்யக்வியவசிதா - அழ

கியதுணிபுடையதாய்து. ஆண்டேதுவையருளுவார் மம அனுக்கிரகாத் - எமதுதிருவருளால் என்றருளினர். "ஏவ ரையேவேண்டி எதைவிரும்பிடுவான், அவராலிவனதைய டைந்திடுவானே" "கரிமுகனருளினனே கரியகவொருமை காலுந், திரமுறநினைவின்றேற நிரியர்மற்றிருவரான, பரம ருக்கினிதுமேவின் பகரிதுபவமாந்தன்னின் வருபெரும் பயத்தைநூறி வளமுடனளிக்குமன்றே" திருஷ்டஅதிரு ஷ்ட பலத்தோடுகூடிய அத்வைதபுத்தியானது அநேகந் தடைகளோடுகூடியதாதலின் இவ்வத்வைதவாதனை யென் னும் சமஸ்காரம் உயர்ந்தோர்க்குண்டாமாயின் யானைமுகக் கடவுளதுதிருவருளானேயாம். வித்தையுற்பத்திமார்க்கத் துறும் விக்கினங்களெல்லாம் விலகுவதற்கு விக்கினேசுரஆரா தனத்தால் முமுக்ஷுக்கள் முயல்வுறவேண்டும், என்பதாம். பவமாந்தன்னின் வருபெரும்பயத்தை நூறி யென்பது அதன்கண்ணேதுவாம்; வைராக்கியாதிசாதனம் எளிதாக வெய்தாமைகொண்டு சிறப்பாயஅதிகாரி எளிதல்லவென்பார் இருவர் அல்லதுதிரியர் - மூவர்என்றார். இதுஸ்ரீபகவற் கீதையின்கண்ணும் "மாயுமானுடரநேகர்பாலொருவனென் னையாயுமனம்வைத்துளான், ஆயுமானுடரநேகர்பாலொரு வனேயறிந்துமுடிவானையா" எனக்காணப்பெறலாம். என் னும்சுருதிமிருதிகளின் கூற்றானே யோகநிஷ்டத்தன்மை கரி முகன்றிருவருட் பயனெனக்காணலாம். கரிமுகன்அனுக் கிரகமுந்தான் எங்ஙனமெனச்சங்கித்து விளிப்பார் நிருப என்றார், விசுவத்தைக்காக்கும் நின்பால் விசுவவுருவனாகிய எனது அனுக்கிரகம் அமைவதேயா மென்பது கருத்தாம். இவ்வண்ணமாதலினானே தே - நின்பொருட்டு, கீதையையினி தருள்வேன் நீயும் அதைபொருமையுடன்கேட்டி. எத்தகை யது அதுவெனின், யோகாரூதமபி - பிரஹ்மாத்மைக்கியத் தைப் பிரதிபாதிக்குஞ்சாஸ்திரம் அதையே முக்கியமாகச்

கொண்டது, சிருஷ்டியாதிகளோ அதனையுணர்ந்துகோடு முபாயமாக ஈண்டுரையிடப்பெறும், கருத்தானேயன்றி மென்பதுகருத்தாம். (5)

(அ - கை) இனிவைராக்கியமானது முதற்சாதனமாம் அஃதுண்டாம்பொருட்டு அயலார் அங்கீகரித்த யோகங் களைநிடேதித்தருளுகின்றார்:—

நயொாஹஂ யொாஶித்ாஹு யொாயொாயொா நவஶியஃ| நயொாயொாவிஷயெ யொாயொா நவஶோ ஶாதிஸியா. ||

6. ஓதியோகமியோகமென்றோதிலார்
மாதனத்தினியோகமுமாறுமே
ஓதனத்தினி யோகமுமியோகமோ
மாதவாதியுமன்னனுமன்றரோ.

(வி - ம்.) யோகம், அடையாததையடைவது பிரஹ்மவித்துக்கள் யோகம் தந்நூலில் யோகசப்தார்த்தங்கூறிலர்; மற்றோ, நித்தியம் அடையுற்றதேயாய ஆன்மாவைக் கண்டங் கதுவிய மறந்தகண்டாபரணமேபோலும் அஞ்ஞானவழிவு மாத்திரையானே யடையப்படுவதாமென்பர். ஆகலின் லோகசித்தயோகபதார்த்தம் அவர் ஆதரிப்பதில்லை யென்பது பொருள். ஆண்டு, ஆகஆன்மவாதிகளாகிய சார்வாகர்கள் சுவாதந்திரியம் முக்தி பாரா தந்திரியம் பந்தம், அவையும் பொருளிருப்பு இன்மைகளாலவ்னவாம் எனத் தனயோகமே யோகமென்பர். அதனை நிடேதித்தருளுகின்றார் யோகோயோ கோநவஶ்ரீய என. போகப்பொருட்டுப் பொருத்தமுறு தனம் புருடார்த்தமாகாதாம். ஆகலின் தனத்தினுற் சாதிக் கத்தக்க விடயங்களாகிய மாலை சந்தனவணிதை முதலியவற் றுனே யோகம் இன்பவேது அதுவேபுருடார்த்தமென

அப்புறச்சார்வாகர் இந்திரியான் மவாதியரறைவர், அவர் மதத்தை நிடேதித்தருளுகின்றார்:—நயோகோ விஷயைர்யோக என. துயிலின்கண்ணே யுடம்பிற்கும் புலன்சட்கும் போக்தாவாயிராமை வெளியாம், போகமும் பிரமாதா பிரமாணம் பிரமேயங்களின் யோகமில்லாமற் சம்பவியாதாம் என மன ஆத்மவாதியர் வேறு சாருவாகர் பிரமாதாவின் ஸ்ரீகள் யோகம் யோகபதார்த்தம் எண்ணுகிறார்கள் அம்மதத்தை நிடேதித்தருளுகின்றார்:— நவுமாத்ராதிபிஸ்ததா வென. பிரமாத்திராதிகளானே எவ்வியோகம் அதுவும் யோகம் ஆகாதாம் என்பது பொருள். இதனுனே அவர்கள் "வாழுகாறும் வளமுடன் வாழுக, வாழுதேட்டயல் கொண்ட விமாந்துக, காமுசாம்பன் மயமுறுகாமமு, மேழவந்துற லெங்ஙன மீண்டுமே:" இவ்வண்ண மியம்புவர். (6)

(அ - கை.) ஆருகதர்களோ சர்வஞ்ஞகுலத்திற்பிறப்பதே எப்போதுமேலே செல்லும்படியான வடிவகைவல்யத்திற்குச்சாத்கம், ககனத்திற்பறக்கும் பான்மைக்குப் பிறவைப்பிறப்பேபோலும் எனக்கூறுநிற்பர் அதைக்கண்டித்தருளுகின்றார்:—

யொமொயஃ விதூரோதூாெஷ நூ-ஜெயொமொ நாாயிவ | யொமொயொவநூ-வ வாநூாெஷ ய-ஜூா ஷூாஹூ-டுதிஹிஃ வஸஹ. ||

7. அனைதாதைகண்முதலாரொடுமடைவாகியவனுதான்
கனயோகமதலவாஙரகணபாலனவலவ
வினமேமுதன்மகவாதியுவிவரோடுடனிலகி
யுனுநாலிருகுணயோக்முமொளியோகமதலவே.

(வி - ம்.) "தாய்வான் தந்தைவான் ஆய்குருவானவை" என்னும் மறையினுனே சிறந்ததாயாதியோகம் சிறந்த நரர்திப

யோகம்போலும்இவனை யுற்பத்தினின்றும்விலக்குக கற்பகத்திற்சார்வதோசகத்ததிருஷ்ட சாமக்கிரிபலமாம். ஆகலின் அஃதில்லாமல் அவரோடு யோகம்கிட்பலமீரம் என்பதுபொருள். ஆதிபதார்தம் ஆசாரியராவர். அவர் தமக்கும் நிர்ஜரப்பெயரிய யோகாப்யாசத்தானே இஷ்டசித்தியாம் குலத்திற்பிறந்தமாத்திரத்தானே யின்றுமென்பது பொருள். பயின்ற யோகமுடைய்பவனும், உள்ளிருதயத்திற் சென்றவுறவினரையும் வரும் புத்திர பௌத்திராதியரையும் அலௌகிகக் காட்சியானே காண்பன்.

அணிமையும் மகிமாவெளிதாதலும், திணிமையுஞ் செறிவுஞ் செறிகாமமும், பணியுறீ சிதையும் வசிப்பான்மையும், குணங்களெட்டெனக் கூறுவர் சித்தியே." எனப் பிரசித்தமானவற்றோடு சையோகமாதல்யாதோ அதுவும் யோகமாகதாம் என்றருளுவார் யோகமெனறருளுகின்றார். "உள்நிக்ழும் வேற்றுமையைப்பற்றி அஷ்ட னென்பதற்கு ஆத்தன்மையாங் அஷ்டா ஸஹாஸ்ய இஹாஷ்டு என்பதாதி போலுமென்க. அணிமை நுண்டுகளினும் அணுவரிதல்; மகிமா - பொன்மலையாதியினு பெரிதாதல், எளிதாதல் - இலவினுமிலகுவாதல், திணிமை - கன்மலைதன்னினுங் கனமாதல், செறிவு - விதுமண்டலத்தையும் விரல்கொண்டு தீண்டப்பெறல், செறிகாமம் - உள்ளுங்கை யன்னுதிமாத்திரங்கொண்டும் நூறுயிரம் பேர்ஜனம் நுகர்வித்தல், ஈசித்தை - தண்ணில விரவியாதி யரையுந்தன்வாய்ப் படுத்தல், வசிப்பான்மை - திவ்வியதாகிய ஸ்திரீமுதற்பொருளீர், வவ்வினுமுளந்தான் வழுவாதிருத்தல். சென்றது முதலியதெரிதலும், எண்சித்தியும் என்னுமிவற்றோடு சேர்தலும் யோகமாகாதென்பது பொருள். (7)

(அ - கை.) ஆருகதாதியர் கருதியயோகங்களை யகற்றியருளிச் சித்தர் எண்ணியயோகத்தைச் சிறிதாயருளு கின்றார்:—

நஸமெயா்மஃ ஷியாயொமெஹா ஜமஹஹ்ரு-தாஸெவயா।
ஙா்ஜ்யெொமஷ்ரூநொ்யொமெஹா நயொமெஹா மஜவாஜீஷிஃ.

8\. உலகேபுகணலமேனுரு வுறவாடலை யுறனு
மலயோகம துலகான்வரு மரசாயிட லதுவு
மலயோகமெயாண் ணயவாரண மணிதேர்படை யுடைய
நலயோகமு மலயோகமெய் நணிதேர்வுறி னிறையே.

சித்தரோமண்ணீரனல்கால் விண்ணின்றெழுந்த ஐந்தன் வடிவமாய யோககுணமுயலுங்கால் "நோயுஞ்சரையுமாயுமி யோகத், தீயின்மயமாங் காயமுற்றார்க்கிலை." என்னும் மறை யால் ஐம்பூதங்களையும் வெற்றிகொண்ட யோகியினது ஐம் பூதவிகார ஆகம் ஜரையற்றதும் மரணமற்றதுமாம். அவ னும் அவ்வபுவுடன் எல்லாத்தேவவுலகங்களினும் உலவி இரம்பை திலோத்தமை ஊர்வசியாதி யற்புதமாதரோடு மிவ் வண்ணம் எவ்வியோகமியையுமோ, எங்ஙனம்வாழ்வுற்றிருந்த ஜனகராஜனது தேகத்திற் சுலபையெனப்பெயரிய யோகினி புகுந்துவாழ்ந்தனளோ எங்ஙனந்தான், இறந்தநந்தஅரச னது தேகத்திலொருயோகிபுகுந்து யோகாநந்தனெனப்பெய ரிய மன்னவனாகியிருந்தனனோ, எங்ஙனந்தான் ஸ்ரீவசிஷ்ட ரது தேனுவானது விசுவாமித்திரஅரசருடைய அடக்கப் பொருட்டு அளவிறந்த கரிபரிகளோடுற்ற சேனையையோக வல்லமையாற் சிருஷ்டித்ததோ; அத்தகையயோகமும் இம் மோக்ஷசாஸ்திரத்தில் யோகபதப்பொருளாகாதாம் என்பது பொருள். மூன்றுலகங்களிலும் அற்புதவடிவம்வாய்ந்த முகிண்முலைக் கருங்கட்செவ்வாய்ப் பாவையர்தம்மோடும்

சேர்ந்துவாழ்தல்யாதோ அதுவும்யோகமாகாதாம் எனயா தென்னுஞ்சப்தத்தைக் கூட்டிக்கூட்டுக. இங்ஙனங்கரிப்ரிக ளோடு மெய்வியோகம் அதுவும்யோகம் ஆகாதாம் என்க. மற்றனதெற்றெனப்புலனும்.

(அ-கை.) அற்றேற் சார்வாகமதத்தில் மரணமேமோக்ஷ மென்ப அஃதெல்லாநூலோடும் முரண்படுதலின் எள்ளத் தக்கதேயாம். அயலாயமதமிரண்டும், "அவைசமாதியிலிடை யூறுகும், சிவவெழுச்சியிற் சித்திகளாமே" என்னும் ஸ்ரீபதஞ் சலிபகவானது சூத்திரத்தால்; சித்தியைச்சேவிக்கும் யோகி களேயும் சித்திகளேயும் சமாதியிடையூறதாகக் கைவல்யத் தடையென விலக்கவேவேண்டும், அவ்விருமதங்களும் வேத சம்மதமாகாமையின், வேதத்தினுபதேசிக்கப்பட்ட யோ கத்தைவிலக்கமுடியாமை வலுக்கலாமே யெனக்கடாவிவிடை யிறுத்தருளுகின்றார்:— (8)

யொமொநெநுவஉவஷ்ாவி யொமெ்ாயொமாயிஃநஃ வ்ியஃ । யொமாயஃ ஸதுமொகஷ நஷயொமொ ஃடொஃஃ. ॥

9. கண்ணுயிரன் பதமேயுறு கதியோகமு மியோக
மெண்ணுவுரு தவர்யோகம தெண்ணரய னுயர்வா
னண்ணுவது நலயோகம தலவாமிக நாடின்
றண்ணரளி யுருவாநிறை தமியேனுள மிலையால்.

ஜீவப்பிரஹ்மஐக்கியத்தை விரும்பியமுமுக்ஷுவிற்குப் பரிமேதசதம்புயப்பதாய இந்திரபதத்தின் ஆதிபத்திய அடைவுவ்டிவயோகமியாதோ அதுவும்பிரியமின்றாம். இட் டப்பட்டதொன்றன்றாம். "பண்ணியதொழிற்குபயன்களி யாவையு; மண்ணிடைநுகர்ந்திடமாளுமாறுபோற், புண் ணியவினைதரும்போகமியாவையும், விண்ணிடையிருந்தனுப

வித்துமீளுமால்" என்னுஞ்சுருதியினால், அதற்கழிவுபாடாந் தன்மை யறையப்பட்டிருத்தலின். உபாசனையோடுகூடிய தொழிலான் அடையத்தக்கதாய சத்தியலோகத்தின் ஏவ்வியோகமுளதோ அதுவேமுக்கியயோகமாக இருக்குகவெனின்? அறைவார். யோகோயஎன. சத்தியலோகம் - பிரஹ்மலோகமாம். "அயனுலகடைந்தோர்யாவருமயனார், வியன்வீடுறுங்கான் விழுமதியமுதாற், பயனுருவீட்டைப் பற்றிநிற்பாரே" "அயனிறுேடுமவர்களனைவருங், கயமுறுங்கடைக் காலங்குறுகவே, யயன்முடிவிலறிவையடைந்துமெய், யியல்பரம்பதமெய்துவரென்பவே" என்னுஞ்சுருதிமிருதிகளினுனே. சத்தியவுலகத்தின்யோகம் முறைமுத்தியின்பயன், அந்தத்திலறிவுபெறுதலாற்பெறலாம், என்றாலும், ஆண்டுப்பாவனையின் ஏற்றத்தாழ்வா லியற்றப்பட்ட மேற்கீழ்த்தகைமைகளாகிய மகிழ்ச்சிவாட்டவேதுக்களிருத்தலின், அயனார் வாழும்வரை அவ்வனுபவமகற்றமுடியாததேயாகும். ஆகலின் மம - உடனேகைவல்யத்தையடைவிக்கும் உணர்வையருளும் எமது, புந்திக்குச்சத்தியலோகயோகமும் முக்கியயோகமாக இலையந்திலையென்பதாம். (9)

(அ - கை.) கேவலங்கருமத்தினுதல், உபாசனையோடுற்றகருமத்தினுதல் அடையத்தக்கலோக்யோக முக்கியயோகமாகாதொழிக, அநித்தியபலத்தோடுற்றமையானும், அதிசயவாநந்தத்திற்கிடனுகலானும்; யாண்டுதான் யானே சர்வேசுரன் எனக்கே இந்நந்திகேசுராதியரும் ஜயவிஜயாதியரும் ஏவலராவர், சனகாதியரும் என்னையேதுதித்தேத்துவர், எனதுமைந்தரேயாய இரணியகருப்பாதியர் எனதாணையினுனே சிருஷ்டியைச்செய்கின்றனர் என்னுமபிமானம் கோமுதலியவற்றிற் கோத்தன்மைமுதலியவற்றைப்போலும், ஒவ்வொருபாசகன்பொருட்டும் முடிவுபேறடைதல்காணப்

படுகின்றது அவ்விவ்வெல்லாருமே துல்லியர் யாவருமேயழி வற்றவர், யாவருமேநாற்றோளர் ஆண்டென்னும் சுருதிபுரா ணாதிகளின் பிரமாணத்தினுனே அச்சைவ அல்லது வைஷ் ணவலோகயோகம் முக்கியயோகமாகப்பவிக்குகவேயெனின்? கூறியருளுகின்றார்:—

𑌶𑍈𑌵𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌯𑍋𑌗𑍋 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌸𑍍𑌯
[illegible] । 𑌨 𑌯𑍋𑌗𑍋 [illegible]
[illegible] ॥

10. பலமுறுந் தெய்வசைவப் பதத்தினிற் றிதித்தாறனும்
வலிமிகு யோகேயன்றும் வைணவபதத்தில் வாழ்தல்
தலைமைசெய் புட்பவந்தத் தகைமைகள் யோகமாகா
மலிபொரு ளகைமன்னு மன்னவ யோகமாகா.

(வி - ம்) சைவபதத்தின் எச்சேர்க்கையுளதே அது வும்யோகமாகாததேயாம், இன்னணம், வைஷ்ணவபதத்தின் எச்சேர்க்கையுளதோ அதுவும்யோகமாகாததேயாம், என ஆவிருத்தியாற்றிப்பொருத்துக. நோ என்பது, ந்-உ என்னும் நிபாதமிரண்டன்றொகை ஆகாததேயென்பதுபொருள். இவ் விருபக்கங்கட்கும் அவைதிகத்தகைமையைக் குறிக்கும் பொருட்டு உ-என்னுந் தேற்றப்பொருணிபாதமாம், வைதிக மதத்திலா சத்தியலோகத்தினும் மேலாகஞானகருமபலமில தாமென்பதுதுணிபாம், எங்ஙனம், பழுதைப்பாம்பு ஒவ் வொருபுருடனுக்கும் முடிவுபேறடைகின்றதோ அங்ஙனம் ஈசுரத்தகைமையபிமானமும் அத்தகைத்தேயாம் அவித்தை யாலர்வதாகலின் வேறுபடுவதின்றாமென்பதுகருத்தாம். "தழு தழுத்தோடிமிருவர்கடமக்குப்பழுதைப் பாம்பிருபங்கொளி ராதாம்" எனவிராட்டுப் பாவனையைமுன்னிட்டு ஸ்ரீவார்த் திகத்தில் வழங்கப்பட்டுளதாம். அவ்வத்தேவதைகளின்பத

அதுவேயோகமாகாதொழிக, அவ்வத்தேவதைத்தன்மைய டைவோ யோகமாகலாமேயெனின்? கூறியருளுகின்றார்:—
நயோகோரூபசூர்யத்வஞ்சந்த்ரத்வம் நகுபேரதாவென. சந்த்ரத்வம் ந-என்னும்நகாரத்தைக்குபேரதா ந-எனமீண்டும்வருத்திக்கொள்க, நினது ரூபத்தன்மை கிரியையின்பயனுதலே போலச் சூரியத்தன்மைமுதலனவும் காரியத்தன்மையானே கிரியாபலமேயாம் இவ்வாறு சைவவைஷ்ணவத்தகைமையும் பாவனையின்காரியமாகலின் மானதவினையின்பயனும், அவ் விரண்டும் அநித்யமாமென ஸ்ரீவார்த்திகஆசிரியர் கூறியுள்ளார். "எதுநீணினைவால்வருமின்பயனென்னவேயும், எது தான்வினையாலெழுமின்பயனென்னவேனும், அது தானிலையன்றெனநீயகத்தார்ந்துவாழ்தி, பொதுமாதர்கள்காதலிற் போதலைப்போலுமன்றே". யாவர்தாம் அஞ்ஞானத்தடைத் தகைமையை யவாவாதவராய் நேராகவேதியானுதிசாத்திய மாயமோக்ஷமறைவரோ அவர்பொருட்டறைந்ததா மிது வென்க. பாவனையதீனபலத்திற்கு நிலையிலாப்பன்மையிற் றிருட்டாந்தம் பொதுமாதர்போதல். கற்பகோடிகாலத்திய துங்கித்வபாவனையேஎடுபடும்போது அற்பப்பயிற்சியாலாகிய பாவனை அழியாதெங்ஙனிற்கும். தத்தம்பக்கங்களைமேன்மையாகமிழற்றும் சைவவைஷ்ணவப் போலிகளின்நீக்கப் பொருட்டு இரண்டையுங்கவர்ந்தருளியதாம். (10)

(அ - கை.) பஞ்சமகாபூதங்களுள் ஒவ்வொருவிடயதாரணையான் அவ்வப்பூதத்தன்மையி னடைவுண்டாமெனப் பௌதிகர் எண்ணுகின்றனர் அவரைநீக்கியருளுகின்றார்:—

நாபூமித்வம் நாஜலத்வம் நாக்நித்வம் நகாநிலத்வம் நவாகாசத்வம் நசேந்த்ரியத்வம் நசேதநத்வம் ...
[illegible]

11. அலைவுறு மநிலத் தன்மை யழற்றிடு மநலத் தன்மை,
பொலிதரு மமரத் தன்மை பொன்றிடுங் காலத் தன்மை
நிலவுறும் வருணத் தன்மை நிருதியாந் தன்மை தானும்
தலமிகு சார்வ பௌமத் தன்மை யும்யோக மாகா.

அநிலத்வம் - காற்றுத் தகைமையினடைவு யோகமா காதாம், இன்னணம் அநலத்தன்மை - தீத்தன்மைச்சேர்க் கையோகமாகாதாம். ஈண்டு அநில அநலசத்தங்களான் அவற்றை யபிமானிக்குந்தேவதைகள் கவரத்தக்கனவாம், அவரும் பிரளயகாலத்தில் தமதுஉபாதியின்ஒழிவான் அழி வர். ஆகாயமோஅவயவமற்றதாம் அழிவின்காரணமாய அவயவப்பிரிவுபொருந்தாமையின் அமரமாம், அத்தன்மை யினடைவு அமரத்தன்மையாம் அதுவும்யோகமாகாதாம். பிறப்பவெல்லாங் காலோபாதியென்பதாற், ககனமீருபவு பாதியாவுமழியுங்காற் காலமுங்கழியுமாதலின் காலஅபி மானிதேவதைத்தன்மையடைவும் யோகமாகாது என்றரு ளியதாம், நகாலதாஎன்பது. வருணன்ஜலஅபிமானிதே வதை, அத்தன்மையினடைவைவருணத்தன்மையென்றதாம், அதுவும்யோகமாகாதாம். நிருதி - பிருதிவி; அதிதி, இலா நிருதிஎன்னும்வேதாங்கநிகண்டின்கண்ணே பிருதிவிப்பெயர் களில் நிருதிபதத்தின்பாடமிருத்தலின், அதனபிமானிதேவ தைத்தன்மையினடைவு நிருதியாந்தன்மையெனப்பட்டது, அதுவும்யோகமாகாதாம் என்பதுபொருள். பிரகிருதி மகத்து அகங்கார இந்திரியபூதபௌதிகப்பெயர்வாய்ந்த சித்தும்பற்றுமெல்லாப்பூமிகளிலும் பாவன்சஞ்சரிக்கின்றன னோ அவ்வப்பூமியேன்மைப்பட்டபோழ்து அவ்வப்பூமி தாதான்மியத்தையடைந்து அழிவதில்லையென்பதை யோக வாசிட்டத்திற் கூறப்பட்டபுசுண்டரெனப்பெயரிய காகத்தி னிடத்திற்கண்டாம்; அப்புசுண்டர் அநந்தபூதபௌதிகப்

பிரளயங்கள் சென்றொழிந்தபோதினும் இன்றும்வாழ்கின்ற னர் எனக்கேட்கப்படுகின்றனர், அவரும் சகுணவித்தையின் பலத்தாற் கட்டுற்றவராகி இப்போழ்தும் விதேககைவல் யத்தை யிடையாமலிருக்கின்றனர், ஆகலின் அத்தகைய வன்யாவனே அவன்சார்வபௌமனெனப்படுகின்றனன், அத் தன்மையினடைவு சார்வபௌமத்தன்மையாம்; அதுவும் யோகமாகாதாம்; யோகோநசார்வ பௌமதாஎன்பதன் கண்ணே மூன்றாவதுஅக்ஷரத்திற்குக் குறுமையுண்மையின் கட்டுக்குலையுங்கசடு ஆர்ஷமாதலின் உபேக்ஷிக்கத்தக்கதாம், இவ்வெல்லாயோகங்களின் யோகபலத்தின் அளவுண்மை வாயுவழங்கியபுராணத்தில் வழங்கப்பட்டுளது:—"பொறியி னைச்சிந்தைசெய்வோர் புகறசமனுவினெல்லை, நெறியுறவிருப் ப்பூர்தநிகழ்வினை நினைவரானோர், தறிசதநிறைந்ததான சகத் திரமிருப்பர்புத்த, ரறிவினரொராற்றார்வதாயிரந்தசமென்பா ரால் பூன்றநூறாயிரந்தான் பொன்றுரார்புலப்படாத, வான் றருமாயைதன்னை வணங்கிடுமனத்தினோர்கள், தோன்றிடுங் குணமதொன்றுந் தோன்றுறாப்புருடன்றன்னை, வான்றவத் தடைந்துகாலவரையறைவழங்கலின்றே." நிர்க்குணமாய்த் தூய்தாய்த் துவம்பதார்த்தமாயபுருடனையடைந்து காலஎண் ணிக்கையிலதாம்என்பதனாற் பிரகிருதியின்கண்ணே இலயப் படுமெனவியம்பப்பட்டதாம், அவனும் அயற்கற்பத்தில் மீண்டுமுற்பவிப்பன். அவ்வாறே பரமஇருடியரின்சூத்திர மும் :— "பிரப்பின்பிரத்யயம் பிரியுடற்பகுதி, யிறப்புறு மனத்தரினெனவாமென்ப" எனக்கூறுகின்றது. பிறப்பு - ஜன்மம், பிரத்யயம் - காரணம்; ஜன்மமேயவர்தஞ்சமாதி லாபத்திற்காரணம், அவர்தஞ்சமாதி பிறப்பின்வேறதுவாம், அல்துகைவல்யகாரணமாகாதாம்; என்பதுசூத்திரபதத்தின் பொருளாம். இவ்வியோகபலன்களினின்றும் யாவன் விரக் தனோ அவன்எமதுகருத்திற்கிசைந்த ஜீவப்பிரஹ்மாத்மைக்

கிய சாக்ஷாத்காரயோகத்தில் அதிகாரியென ஆறுசுலோகங்களானே நிரூபிக்கப்பட்டனன். (11)

(அ - கை.) திருவாய்மலர்ந்தருளிய பலவேறுவகையாய எல்லாயோகங்களின் பயன்களும் நதிக்கடனியாயம்பற்றியாண்டுள்ளடங்காநிற்குமோ தமது திருக்கருத்திற் கிசைந்ததான அந்தஞானயோகத்தைத் திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—

யோகம் நாநாவிதம் ஸம்யக்ஜ்ஞாத்வா ஜ்ஞாநவ்ருத்தம்
ஸந்தி வித்யாயோகேஜிதாஹாரா விரதஸ:. ||

12. அறிவினர் பயில்வர் நீதி யவனிகா வலனை கேணீ
செறிபல வகையின் யோகஞ் செப்பினம் விரிவ தாக
பொறிபயி லுலகில் வேட்கை போக்கின ராவர் போக
நெறியிலர் வீரி யந்தா னெகிழ்த்திலர் நிமலர் தாமே.

இதனதுபொருள்:—ஈண்டு அறிவினர்-அவாவற்ற அதிகாரிகள், இனியாம்நிகழ்ச்சியைப்பற்றி அறிவினர்என அறையப்பெற்றனர். "அக்கினியவாவியது அன்னதனமார்க்காவேன்" என்பதன்கண்ணே அக்கினித்தன்மைக் காமனாகியயஜமானன் அக்கினியெனக்கூறப்படுவதேபோல அறிவினைவிரும்பியோர், யோகம் - ஞானோபாயத்தை, யுஞ்ஜந்தி - அனுட்டிப்பர், பஞ்சமலகாரகற்பனையாற்பயில்வரெனவிதித்ததாம்என்பதுபொருள். "இனியதைக்காணுமருமுபாயம்யோகம்" என யோகத்திற்கு ஞானவுபாயத்தன்மைஸ்ரீ இரணியகருப்பபகவானாற் சூத்தரிக்கப்பட்டது. "தனதா மனுபூதியினாலலதோர் தனியாமறிவாரறிவாரினிதே, கனிவாய்மடவார்சுகமாமிகநேர் கனியானவளோவறிவாள்விழிதூ, னனிமேவிலதாதியிலேகடினனிலமேவுறவோவறிவாரதுபோற், கனயோகிலர்காணுவரோ கரியைக் கரிமாமுகனாருளுடிலரே. என்றத்தக்கராற்றிரிபு வாயிலாகக்காட்டப்பட்டது. யோகியேகாண்பனென்பது

கடையடிபின் கருத்தாம். பூபவென விளித்தருளியது பூமியைப் பொறுமையுடன் காப்பதே போலப் படியாக ஏறும் முறையானே வெற்றிகொண்ட அவ்வவ்வியோக பூமியையும் காப்பதற் காற்றலுடையவனுவாயென அரசனை யுற்சாகப்படுத்தியருளியதாம். அவ்வியோகம் எத்தகையதெனின் நாநாவிதமாம் - வெகு வகையினவாம், அங்ஙனமன்றே:—சவிகற்ப நிருவிகற்ப வேற்றுமையானே இருவகையாம் யோகம் சவிகற்பமும் விதர்க்கத்தோடு கூடியதும், விசாரத்தோடு கூடியதும், ஆநந்தத்தோடு கூடியதும், அஸ்மிதையோடு கூடியதும் என நால்வகையாம், அவற்றினுள்ளும் விதர்க்கமானது சவிதர்க்கம், நிர்விதர்க்கம் என்னும் வேறுபாட்டால் இருவகையாம், இவ்வாறே விசாரமும் சவிசாரம் நிர்விசாரமென்னும் வேறுபாட்டால் உணர்க. நிர்விகற்பமும் பவப்பிரத்யயம், உபாயப் பிரத்யயம் என இருவகையாம், பவப்பிரத்யயம் விதேகர்கட்கயல் பிரகிருதி லயர்கட்கயல் என்பதாக இருவகையாம், உபாயப்பிரத்யயமும் தானே, கிளம்பல் பிறராற்கிளம்பல் இரண்டானுங் கிளம்பாமையென மூவகையாம், ஆகவே நிருவிகற்பம் ஐவகைப் பேதத்ததாம். இவற்றின் இலக்கணங்கள் மேலே வெளிப்படுத்தப்படும். ததம் - விரிவாகவிளம்பினும், பிரமாண சொரூப சாதனபிரயோஜனங்களான் இனிதாக இயம்பினேம். அல்லது, அயல் யோகங்களின் பயன்களாகிய ஐசுவரியங்கள் எதனது ஏகதேயத்தி லொடுங்குகின்றனவோ அதனுலிது விரிவதாகச் செப்பினம், இவ்வாறுயு யோகத்தை யனுஷ்டிப்பவரின் பலத்தை யருள்புரிவார்:—பவந்தி வீத்ருஷா லோகே என்றருளினர். நோக்கப் படுதலின் லோகம் - விடயம். சுவர்க்கலோகம், மனத்தான் மிகவினிது விளங்கும் எனக் காண்டலின், யோகபூமியும் உலகமாம். இருவகை

யாய வுலகத்திலும் விடயத்திலும் வேட்கை யிலாமை - பற்றின்மை திருஷ்ணைபிபாசை லிப்சை அஃதற்றவர் "அவ்வான் மாவை யாவனன்கறிவன், செவ்விய வவனெலா லோக்முஞ் செறிவன், அவ்வியல் காமமனைத்தையு மடைவன்" எனஞானபலத்திலெல்லாப் பலன்களும் அடங்கக்காண்டலின் இவ் வேட்கை யிலாமையையும் சித்தனுக்குந் தானகச் சித்தமாம், சாதகனுக்கோ முயல்வாற் சாதிக்கத்தக்கதாம். "சிறப்பதாகிய தன்னறிவுருவினைத் தெரியின், வெறுப்பிலாமையே முதலன குணமெலாம் விரவும், மறப்புறுவொரு முயல் விலாமல் லிவன்றனக்குப், பொறுப்பதே முதற்சாதனமாகவோ பொருந்தா," எனவியம்பப் பெற்றுளது. எவை சித்தவிலக்கணங்கள் எனப்படுவனவோ அவையே பயில்பவனுக்குப் பயில்வாலாக்கத் தக்கனவா மெனப் பகர்தலின், வருவனவற்றின் கண்ணும் இத்தகைய நியமத்தைக் கண்டுகொள்க. வேட்கையின்மை யாங்ஙனமா மாலோவெனின்? ஜிதாஹாராதலின் போகேச்சை யற்றவராதலின், "துன்புறுத்தாமற் பிறரைப் போகவின்பந் துய்ப்பதிங்கிலையோமால்" என்னும் நியாயத்தான் முற்றினும் ஹிம்சை செய்யாதவர் ஆவர் என்பதாம். விரேதசர் - வீரியத்தை நெகிழ்த்திலர் - மேனோக்கிய வீரியத்தை யுடையவர் - பிரஹ்மசாரி விரதத்தில் நிலை பெற்றவரென்பது துணிபு. "பரம் பிரமச்சரி யத்தாற்பார்க்கிற், றிரமிவ்வான்மாத் தீர்வழிலாததே எனப் பிரஹ்ம சரியம் கெடாத ஆன்மஞான வேதுவாமெனக் காணப் பெறுகின்றது. இயம நியமங்கட்கு மிஃது பலக்கணமாம். அவையும்:—கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பெண்ணய வாமை. ஏராமை, இயமங்களாம். தூய்மை, மகிழ்ச்சி, தவம், தன்மறைபயிறல், கடவுளை வழிபடல், நியமங்களாம். என்னுஞ் சூத்திரங்களால் யோக சூத்திரத்திற் காண்பிக்கப் பட்டனவாம்.

(அ உ கை.), வேட்கையின்மை முதலிய மூன்றும் அமானித்தன்மை முதலிய வெல்லாச் சாதன உபலக்கணப் பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளப்பட்டனவாம். அதன துள்ளடங்கிய பயனைப் பகர்ந்தருளுகின்றார்:—

[illegible]

[illegible]

13. புனிதம் பெற யாரையுமே செயும் புண்ணியர்காண்
டனிதந்திடு மும்மையுலகையுந் தம்வயத்தோர்
கனிதந்தயையா னிறைமாமனக் காரரோரோர்
சனிதம்பெறுசாதனர்க் குண்மையைச் சாற்றுகிற்போர்.

அவர்களோ வேட்கையின்மை முதலியவற்றானே குறிப் பிக்கப்பட்ட இயமநியமாதிகளால் தாமே இராகத்துவேடாதி யின்மையிற் புனிதராகி யாவரையும் புனிதராக்குவர் - புனித மாகிய வேட்கையின்மை முதலிய குணங்களோடு கூடிய வராகச் செய்வர். ஆகலின், யாவருக்கு முபகரிக்குந் தன் மையினானே, மும்மையுலகையுந் தம்வயஞ் செய்தவர், உல கத்திலுள்ள உத்தம மத்திம அதம மூன்று வகையுயிர்களை யும் தமது வயப்படுத்தியவர். அவ்வாறே:—அகிஞ்சை நிலைத் திடிலதன் சந்நிதியில், மகிபுகழ் வைரத்தியாகம் வருமே" என் னுஞ் சூத்திரமுமாம், சாதகனது சார்வபௌம அஹிம்சாதி களானே அதமங்களாய்ப் பிறப்பிலே வைரமுடையபூனை யெலி முதலியவையும் அவனது சந்நிதியில் அஹிம்சாதி பரங்களாம் என்பது சூத்திரார்த்தமாம், கருணை - தீனர்களி டத்தில் அனுக்கிரகபுத்தி, அதனானிறைந்த மனத்தினர். இதுவும் மைத்திரியாதிகட்கும் உபலக்ஷணமாம், இதனானே யிவருக்கும், ஞேயராகிய அவர் ஒரோரதிகாரிகளை யநீட

வுற்று அவர்கட்கு இதத்தையுணர்த்துகின்றனர், சாதனர்க் கென்றமையானே அநதிகாரிகளை யுபேக்ஷிப்ப ரென்பதாம்.

(அ - கை.) இவ்வண்ணஞ் சாதனங்களையும் அதன் பலன்களைக் கூறியருளிக் கூறியருளிய யோகத்தின் துநாலு வகைமையை விரித்தருளுகின்றார்:—

ஜீவந்மாக்ஷஹ்யெகிஹாஃ வாஷ்ராநந்ஃஃவிணி ।
நிஜீஷ்யாகக்ஷீணிவஷ்ந்ஃ வாஂஷ்யஹஹாதிஷ்டிதம்.

14. பரமா சுக வுருவாகிய பனிமா மடு தனிலே
திரமா முழுகினர் வாழ்தரு திகழ்வீடுறு பெரியோர்
உருமேய்விழி யிமைமூடியு ளுயிர்வாகிய சிவமாம்
புரமேய்மன நிலையே யுறு பொருள்காணுவர் திறனே.

ஈண்டு யோக சூத்திரமிது:—"சிறப்புண்மை சிறப்பின்மை குறிமாத்திரமே குறிப்பின்மை யென்பவை குணங்களின் படியே" அவற்றுட் சிறப்புண்மையன - தூலபூதங்களாம் சிறப்பின்மையன — ஐந்து தன்மாத்திரைகளும் பதினொரு பொறிகளுமாம், குறிமாத்திரம் - மகத் தத்துவமாம், குறிப்பின்மை - பிரதானமாம், ஆண்டு இயமநியமங்களிலமைந்த யோகியாய்ச் சுவாசத்தை நிறுத்திப் பிராணனை வென்றி புரிந்தவனாய் மனத்தை வழிப்படுத்த வாஞ்சித்தவனாய்ச் சிறப்பினின்றும் சிறப்பின்றியதற்குச் செல்ல இச்சித்தவனாய் முன்மொழிந்த ஊன்களானே சித்தத்தை யொருமைப் படுத்துபவனா யிருப்பவனுக்குத் தினந்தினமயப்பயிற்சியாற் சிறப்பின்றி யதன் அடைவின் முன் எச்சித்தலயமுளதோ அது தயிலேயேயாம், சிறப்பின்றியதை யடைந்து அதன்பின் குறிமாத்திரத்தை யடைய அவாவியவனுக்கு அதனை யடைவதற்கு முன்பு சித்தலயமாம் அதேவிதே கர்

தம், அசம்பிரஞ்ஞாதமாம். இவ்வண்ணம் குறிமாத்திரத் திலை யடைந்து அதன்பின் புருடனையடைய அவாவியவன் அவனை யடையாமல் இடையில் எச்சித்தலயமுளதோ அது பிரகிருதி லயர்த்தம் நிருவிகற்பமாம், அவற்றுள் ஆதியது தூலதேகத்தினின்றும் விடுபட்டிருத்தலின் விதேகமெனப் பெயரிய அஃதிங்கு ஜீவன் முக்தபதார்த்தமாம், இரண்டாவது பகுதியின்பால் லீனமாதலின் பகுதிலயமெனப் பெயரிய அஃதிங்கு, ஹ்ருதே - காரணத்தில் மக்னமென மலரப் பெறும், ஹ்ருதத்தைச் சிறப்பித்தருளு கின்றார் பரமாநந்த ரூபியென. மேலாய ஆனந்தத்தின் ரூபம் இருமைகாணுமை அஃதுடைய தென்பதாம். இருமைகாணுமையும் துயிலினும் நிருவிகற்பத்தினும் ஒப்புடையதாகவே கூறப் பெறுகின்றது "யாததுகண்டிலது கண்டமது காணத்தக்கதைக் கண்டிலது" என்பதாதியான் அவ்விவைகளென அசம்பிரஞ்ஞாதங்களாம் பவப்பிரத்யயங்கள், சமாசத்தாற்றுமை யான பரமானந்த பதத்தான் உபாயப் பிரத்யயம் முக்கிய அசம்பிரஞ்ஞாதமென அதைப் பெறும் உபாயமும் பவப்பிரத்யயம் விதேகப் பிரகிருதிபெயர்கட்கு என்பதியம்பப்பட்டது, "சிரத்தை வீரியமிருதி சமாதி பிரஞ்ஞைவாயிலாயயலார்கட்கு" எனச் சிரத்தை முதலியவை சூத்திரிக்கப்பட்டன. அதன் வாயிலாயாம் அசம்பிரஞ்ஞாதம் முக்கியமாம். உபாயப் பிரத்யயம் என்ற சிரத்தை சித்தத்திற்குத் தெளிவைத்தரும், அதுவோதாய் போலக் கல்யாணியாய் யோகியரைக்காக்கும், சிரத்தை மிகுந்த விவேகம் விரும்பியவனுக்கு வீரியம் விளையும், வீரியம் விளைந்தானுக்கு ஸ்மிருதி பதியும், ஸ்மிருதிபதிந்தவழி சித்தம் ஆகுலமற்றொருமுகதாம், ஒழுங்காய மனனுக்கு பிரஞ்ஞை விவேகம் பிறந்தொளிரும் அதனானுண்மைப் பொருளறிவன், அதன் பயிற்சியான் விதே

கப்பிரகிருதிலயமறினு மயலார்கட்கு அவ்வவ் விடயங்களினின்றும் வைராக்யத்தானே அசம்பிரஞ்ஞாத சமாதியாம். ஈண்டும் • பரமசப்தத்தானே கடைவாசியாக முதலிடைகள் ஆக்ஷேபிக்கப் படுகின்றன, அதனாற்றானே கிளம்பல் முதலதாம். பிறராற் கிளம்பலிடையதாம், இருவிதத்தானுங் கிளம்பாமை கடையதாம் பரமானந்த பதார்த்தமாம். இவ்வண்ணம் ஐந்து விதமாய அசம்பிரஞ்ஞாதமும் சுலோக பூர்வார்த்தாற் கூறப்பட்டது. நிமீல்யஎன்பது, அக்ஷீணி - இந்திரியங்கள் மனத்துடன் கூட்டிப் பதிதென்றும், நிமீல்ய - தடை செய்து, புத்தி நிரோதத்தைச் செய்யாது இருக்கின்றேன் என்னும் பிரத்யயமாத்திரத்தைப் பற்றிய விஸ்மிதர் சம்பிரஞ்ஞாதர் எனப்படுவர். பாலனத்தானும் பூரணத்தானும் பரம்பிரஹ்மம் சர்வேசுரமும் சர்வான்கமும் ஆம், "எதனையுணர்ந்ததான் யாவுமுணர்ந்ததாம் எதனைக்கேட்டில வெவையுங் கேட்டதாம், எதனுலெண்ணில வெதுமெண்ணியதாம், எதனுலறிகிலாதேது மறிந்ததாம்," எனக்கேட்கப் பெறுகின்றது. அவ்வான்மாவை ஆநந்தத்தோடு கூடிய சவிகற்ப சமாதியில், யோகியர் காண்கின்றனர், யாண்டு, இருதயத்தின் கண்ணே யிருப்பதை பாவனையாற் கற்பிக்கப் பட்டதையன்றும், இங்ஙனம் உத்தரார்த்தத்தான் இருசம்பிரஞ்ஞாதங்கள் இயம்பப் பெற்றன. இங்ஙனம் பூவிரை முளைமரக்கனிகளையொத்த ஐம்பிரமங்களுள், எப்பூஸ்தானத்தது நிர்க்குணமோ அது முக்கிய நிருவிகற்பத்தைப் பற்றியதாம், எவ்விரையொப்பதாய காரணமோ, அதுவேகளை நிருவிகற்பத்தைப் பற்றியதாம், எம்முளைக்கொப்பாய சூத்திரமெனப் பெரிய சூக்குமகாரியமோ அது விஸ்மிதத்தோடு கூடிய சவிகற்பத்தைப் பற்றியதாம் ,எம்மர வொப்பாய தூலவிராட்டெனப் பெயரிய காரியமோ அது ஆனந்தத்தோடு கூடிய சவிகற்பக்

னைதப் பற்றியதாம், எது தான் ஐந்தாவது பலமோப்போ ஹரிஹரகௌரி கணேசாதித்தியாதிகளுள் ஒன்றான விக்கிரக ரூபமாம், அவ்திருவிக்கையாம், மானதம் பாகியமும் பிரமாதி ரூபம், அவற்றுள் மானதம் விசாரத்தைப் பற்றியதாம், பாகியம் விதர்க்கத்தைப் பற்றியதாம். ஆண்டு எக்கால் மான தீங்களாய சப்தார்த்த ஞானவிகற்பங்களானே கலப்புற்ற பிரஹ்மபாவனை பிரவிருத்திக்கின்றதோ அக்காலிது விசாரத் தோடு கூடியதெனை விளம்பப்படும். எக்காற்றான் சப்தாதிய னுசந்தான மில்லாமலே மிகப்பயிற்சியினால் தான்றானே பிரஹ்மபாவம் விளங்குமோ அக்கால் அது விசாரமற்ற சவி கற்பமெனச் சாற்றப்பெறும். "உரையிறந்துணர்விறந்திட் டுணர்ந்திடுவரே, யுணவுமங்கையில் வரும்பலி யுகந்திடுவரே திரையிறந்தள விறந்துளபரங்கடலுளே செறிதரும்படி வருந்திருவகம்புடியரே" எனவுங் காண்க.

ஸ்யாயந்த: ஸர்வம் ப்ரஹ்மேதி யோமவஸ்ஸு... ।
ஸந்தாநிஷ்டாதநாத... ஸவப்ராணிமணயந்தே... ॥

15. எண்ணுவர் பரமமான பிரமமாமெந்தாய் தன்னை
வண்ணநல்யோகந் தன்னால் வயஞ்செயுஞ் சித்தந்தன்னில்
உண்ணுமெவ் வுயிரையுந் தானெனப்பெண் வுருகிக்காண்பர்
தண்ணளி யருண்மதத்த தாணுவைப் பேணுவோரே.

தியாயந்த – கற்பித மூர்த்திவிடயஞ் சித்தவிருத்திப் பிரவாஹம் செய்பவராய் அதேபரமம் பிரஹ்மமாய் பார்ப்பர் அதைப் பார்க்கும் பலம் ஸ்ரீ பகவான் பதஞ்சலிமுனிவ ரானே சூத்திரிக்கப்பட்டுளது.—விசாரம் விண்டவற்கரிய தாங்தெளிவில் "விளைந்திடுமத்தியாத்மப் பிரசாதம்" அசுத்தி யாவரண மலமற்ற வொளிவடிவமாய சத்துவ புத்தியினது

இரஜதமங்களான் மறையாத சொச்ச த்திப்பிரவாகம் ஆரி யதாம் தெளிவாம்; எக்கால் எண்ணமிழந்தவனுக்குச் சமாதி யால் இவ்வருந் தெளிவானதுண்டாமோ அக்கால் யோகிக் குண்டாம் அத்தியாத்மப் பிரசாதம் பூதார்த்த விடயம் முறை பிறழ்ந்தொழிர காலத்தில் விளக்கமாகப் பிரஞ்ஞாலோகமாம். "இருதம்பரையுணர்வாண் டெளிதினிலெழுமே" அவ்வொரு மையுற்றமனத்தினனுக் குண்டாம் பிரஞ்ஞைக்கு இருதம் பரையெனப் பெயராம், இருதம் - உண்மையே, பரை - தரிக்கின்றது என இருதம்பரையாம். அதன்கட்டிரிபுணர்வு மணமும் இன்றுமென்றறிக." "மறை யனுமான வுணர்வு கட்டமினும், திறவயல் விடயஞ் சிறப்புறுதலினே", மறை யால் வருமுணர்வுபொதுவிடயமதாம், மறையாற் சிறப்பாய றைய வொணாதாம், என்னை, சத்தம் சிறப்பாய்க் குறிப்பிடா தாம்; அன்னணம் அனுமானம் பொது விடயத்ததேயாம், யாண்டடைவாமாண்டுக் கதியாம், யாண்டடைவிலதாம் கதி யாண்டின்றும், ஆகலினீண்டுச் கருதலானே பொதுமையின் முடிபாம், ஆகவே சுருதகருதல் விடயஞ் சிறப்பாகா தாமொன்று மென்றறிக. சூக்கும தடையுற்ற தூரத்த வத்து வை உலகக்காட்சியானே கவரான் யோகி, விசேட அப்பிர மாணகத்தின் இன்மையவனுக்கின்றும் என்பதனாற் சமாதி யுணர்வு நன்கு கவர்வதேயாம், அச்சிறப்பாயது, பூதசூக்குமத் திருந்தேனும் புருடன் பாலிருந்தேனு மென்க. ஆகலின் சுருக்கருதலுணர்வுகளினும் அயல் விடயத்தேயாம் அவ் வுணர்வு, சிறப்புப் பொருளுடையதாதலின், என அத்தி யாத்மப் பிரசாதமாம் - இரஜதமங்களின் சூனியா சித்த சத்துவஹற்கர்ஷமாம். ஆண்டு சற்பூதார்த்தத்தை விடயப் படுத்தும் சாக்ஷாத்கார ரூப உணர்ச்சியுண்டாம்; அதனானே யோகியர் சென்றனமுதலிய பொருள்களைக் கரதலாமலகம்

போலக்காண்பர். ஆகலின் அதற்கு மானசமாயினும் விடயம் பிரஹ்ம சற்பூதமேயாம், அதனாற்றான் மூர்த்திக்கும் நித்தியம் பக்தியை நிகழ்த்துவர். அஃதெண்ணியே யிஃதருளப் பெருகின்றது:—தியாயந்தஹ்பரம் பிரஹ்மமென. விசாரப் பிரவிருத்தி விதர்க்கவாயிலாம் என்றருளுவார், சித்தே யோகவசீக்ருத மென்றருளினார், யோகம் சித்தத்தினது தூலப்பற்றில் முன்போலச் சத்தாதியனு சந்தானவாயிலாகவும் அஃதின்றியதாகவும் பாவனை பிரவிருத்திக்கும், அக்கால் சவிதர்க்க நிர்விதர்க்க மென்னும் அவ்விரண்டு சவிகற்பங்களுமுண்டாம்; அவற்றுள் நிர்விதர்க்க யோக வசீகருதமாகிச் சித்தத்திற் புகுத்தப்பெற்ற சற்பூதார்த்த விடய வுணர்வைத் தருவதாக ஆமென்பது பொருள். இருதம்பரை யுணர்வைக் கொடுப்பதேயாய இவ்வுணர்வினால் என்னேயயன் எனக்கடாவ விடையருளுகின்றார்:—பூதாநி சுவாத்மநாதுல்யம் சர்வாணி கணயந்தேே, என. எனது முற்றுருவாந் தன்மை தானே அணிவுற்றதேயாம் தேகமாத்திரமோ அவித்தையாலாயதாம், இங்ஙனம் எறும்பு முதலியவைகட்கும் அது ஒப்பேயாம் என்பதாக எப்பிரா...ரியையுமே அவதிக்க மாட்டார் என்பது பொருள். (15)

(அ-கை.) இங்ஙன மறிபவராயுலகத்தில் எங்ஙனம் நிகழுகின்றனர் எனின் அதை மூன்றாலருளுகின்றார்:—

யெ நகெ நவிஊாஹிநா யெ நகெ நவிஊாஹூதாஃ।
யெ நகெ நவிஊாக்ருஷ்டா யெ நகெ நவிஊாஶ்ரிதாஃ॥

16. எவ்வொருவர் தமமானு மேதமிடப் படமாட்டார்
எவரொருவர் தம்மானுமிடர்பெரிது மெய்துகிலார்
எவரொருவர் தம்பாலுமெரிசினமற் றேவாதார்
எவரொருவர் தம்பாலுமியல்பானே பற்றேர.

(வி - ம்.) எப்புருடர் எச்சோரராலும் தனதிகவர்வதிலா
னையின் ஆயுதாதியார் சேதிக்அகப்பெருர்.இங்ஙனமே, எத்தி
யாதாதியானேனும் மனைகாணியாதிகளையும் விட்டிருத்தலின்
லத்தாதியால்(லத்தையோகவிசேடம்)இடர்ப்பட்டார். அஹிம்
சையாகிய மேலாய ஒழுக்கமுடையவ ராதலின் எவரோடுமே
கடின வார்த்தையாடிக் கலுழ்ந்துழலார்; எவரானுந் தாமும்
கடுபாஷணத்தாற் கண்கரையார். பரரால்அடிபட்டும் பரரை
யிடித்தும் வாழ்ந்துபரரற் சீறப்பெற்றும் பரரைச் சீறியும்
பண்படுத்தப் புண்படல் வெளியாம், எச் சீடராதியரானும்
பற்றுரு; ஏகாங்கியாகியே யிருத்தலின், அல்லது எவ்வுன்
மத்தனுலேனும் தடுத்துபத்திரவப்படுத்தின போதினும் இன்
னணமே எப்பாவியாலேனும் இடர்ப்படுத்தப்பட்ட போதி
னும், எப்பர அபவாதசீலனு லேனும் கோபதாபாதிகள் ஏற்
படினும், எவ்வரச சம்பந்திகளாலேனும் ஜடபரதரொப்பச்
சிவிகை முதலியவை சுமக்கும் பொருட்டுக் கழுத்தைப்
பிடித்து நெட்டிக்கொண்டு போனபோதினும் பிறவரினும்
விகாரமடையார். "இந்த வுலகந்தரஞ்செய் தெழுகடலெண்
டிசை கலங்கினின் றகுலமலை, வந்து விழுமன்று மொன்று
மசைவிலர் வந்தபடி கண்டிருந்து மகிழ்வரே" சந்தன குங்கு
மங்கள் புழுகுகில் தண்பனிதஞ் சொரிந்து மகிழ்விலர் நொந்
தன் கொண்டரிந்து நுகரென நொந்திலர் முந்தை யென்று
நகுவரே" என்னும் பெரியாருரையுங் கண்டுகொள்க. (16)

(அ - தை.) இதன்கண் ஞேதுவைக் கூறியருளுகின்
ருர்:—

கர்ணாவேத³ணுஹ்ருஷ்யாஹ்ருஷ்டி யாநஸ்தே |
ஸ்கந்தஹாயஹஸிதாநாஜ்ஞிதகேராயாஜிதெதியா:॥

17. கருணாலயமாகிக் கனிமனராய்த்
தெருணாடுசினம்பொறி செற்றவரா
யருணேடுமெவர்க்கருளே யருள்வான்
றரணீதலந் தன்னில் வலம்வருவார்.

(வி - ம்.) சினத்தைச் செயித்தவராதலின் அபகாரம் வந்தவிடத்தும் விகாரத்தை யடையார். கருணையானிறைந்த உளத்தவராதலின் துட்டப்பிராணிகட்கும் விநாச முண்டாக வேண்டாம் என அவர்கட்கு ஞானப்பிரதானத்தால் திருவருள் புரியவேண்டி பூமண்டலத்தில் வலமாக சரித்துக்கொண்டிருப்பர். சஞ்சரித்த போதினும் பொறிவென்றமையின் உயிர்கட்கனுக்கிரகஞ் செய்வதொழிந்து ஒழிந்தவை யொன்றையுங் காதலியாதவர் என்பதாம். "செற்றவர்கள் தன்னுடனுஞ் செறுதற்கென்றுஞ் சிந்தைசெயுந் திறமறந்து சிறப்பே செய்யக் கற்றவர்" என்னும், "நொந்தனர் கன்றிவந்து நலிபவர் நுந்தனரென்ற மைந்தகடனற வந்தன வென்றிடும் மைவரமகிழ் வந்தனரங்கிரண்டு முடையரே" என்னும் அரிய திருமொழிக ளிங்கெண்ணலாம்.

"அழுதன் மாறுதலிலா விழியர்பாலருள்வரே, யவர்களாகமுமெலாம் விழியதாய் மொழிவரே, யெழுதன் மாறுதலிலா விரவியா முருவரே, யிகலுமார் வழுமிலா திலகுஞைபரவர்களே". (17)

அவனிவா னடையவோ ரணுவதா நெடியரே
யணுவுமே ருகிரியா யறவுநே ரியர்களே
புவனிவா னடையவோர் பவனிபோ துவர்களே
புதலுமேகோ மளவியா மளேபுராதனர்களே.

என்பவற்றையு மெண்ணுக.

𑌦𑍇𑌹𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑍋 𑌭𑍂𑌪 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌾𑌃 । 𑌭𑌾𑌗𑍍𑌯𑌭𑌾𑌜𑍋 𑌮𑌹𑌾𑌭𑌾𑌗𑌾𑌃 𑌦𑍃𑌗𑍍𑌭𑍂𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯 ॥

18. உடன்மாத்திரம் பூபவொன்றே யுறவார்
மடமோடுமணிச்சம மாமையர்காண்
டிடமாவிவர்பாக்கியர் தேவெனக்கும்
உடையார்விழிகாண வுவப்புடையோய்.

(வி-ம்.) உடன்மாத்திரத்தைத் தாங்கியவர் என்றருளிய தானேகந்தை கமண்டலம் தண்டம் பரதுகை முதலியவற்றை யும், தரிக்கமாட்டார் என்றருளியதா மென்க. பூப என்பது பூ பாலகனாகிய உன்னால் திகம்பரர் சர்வ உபாயங்களானும் காக்கக்கடவர் என அறிவித்தருளியதாம். ஓடும் பொன்முதல னவும் ஒப்பாம் எவர்க்கோ அவர் சமலோஷ்டாஸ்மகாஞ்சன ராவர். லோஷ்டம் - மண்ணாங்கட்டி, அஸ்மங்கள் - அரதனமணிகள். காஞ்சனம் - பொன். இத்தகைய தீவிரவைவ ராக்கியரூப பெரும்பாக்கிய ஐசுவர்யம் எவர்க்கோ அவர் ஏதாத்ருசாமகாபாக்கியராவர். வைராக்கியத்தினும் உயர்ந்த பாக்கியமிலாதா மென்பதனானே வைராக்கியத்திற்குப் பெ ரும்பாக்கியத் தன்மை கணிக்கப்பட்டது. இவர் எமது திரு விழிகட்குக் களிப்பருள்பவரா யிலகுவராக. இங்ஙனம் யா மும் அவர் தம் தரிசனத்தை யவாவுகின்றோம்; நீயும் எம் மன்பனாதலின் அவர் தம் தரிசனத்தை யடைவாயாக வெனக் குறிப்பித்தருளுவார். உவப்புடையோய் - பிரிய என விளித் தனின்னர்.

"அலைபொருமலொருகா றலையெடாதமைவரே
யருள்பொருமலொருகாவருவிபாய் நயனரே
கலைபொருமலொருகோவணவ ராய்விடுவரே
கவலைதீர் பலிகொணீள் கரகபாலியர்களே"

இதனையுமுணர்க.

(அ - கை.) கூறியவாறாக ஆதி இரு சுலோகங்களால் விடயப்பிரயோஜனங்களும், மூன்றால் நூலியையும், ஆறால் வேறு மதவிலக்கமும், அயன் மூன்றால், அறிஞர்களின் நிலை பேறும் காட்டப்பட்டன. எஞ்சிய நான்கால்யோகம் நாநா வித மென்பதாதியால் பிரஹ்ம வித்தையென்பதாதி சூத்திரிக்கப்பட்டன, அங்ஙனஞ் சூத்திரிக்கப்பட்ட இவ்வியோகத்தை எஞ்சிய அத்தியாயத்தால் அதன் விருத்தி ரூபத்தால் விரிவாக வுரையருளற்பொருட்டுப் பதிஞ்ஞை செய்தருளுகின்றார்:— (18)

தமிதாநீமஹம்வக்ஷ்யே ஶ்ருணுயோகமநுத்தமம் ।
ஶ்ருத்வாயம்ஸம்ப்ரமுச்யந்தே ப்ராஹ்மணா ஸர்வபாதகை: ॥

19. பவமாங்கடறன்னி னின்றும் பெரும்பாவநின்றுஞ்
சிவமாமெதைக்கொண்டு செவிதனிற் சீவரேகும்
உவமானமில்யோக மெய்யுத்தம வுத்தமந்தா
னவமாமதைநாஞ்சொல வின்றி நயந்துகேட்டி.

(வி - ம்) தம் - சூத்திரிக்கப்பட்ட யோகத்தை, இதானீம்-உனததிகார அடைவின்பின்னர், அஹம் - வேதங்களின் கர்த்தாவாகிய பரமேசுரனானயாம், வக்ஷ்யே - வியாக்யானரூபமாக நீயும் எம்மான் விரித்துரைக்கப்பட்ட அவ்வியோகத்தைக் கேட்பாயாக; கேட்கும் பொருட்டு ஒருமையுடையவனாதியென்பதாம். அநுத்தமம் - இதனினும் உத்தமம் வேறு இலாதாதலின் அநுத்தமமாம். "இதனினும் அயற்பொய்"

என மறையிருத்தலின், எவ்வேதாந்தப் பிரதிபாத்திய யோகத்தைக் கேட்டு மத்தியம ஜந்து பாவங்களினின்றும் விடுபடுமோ அங்ஙனமே சுருதி வேதாந்தங்களா லுற்பன்னமாகிய பரோக்ஷ ஞானவான்கட்டு முறை முத்தித்தான, அடைவு "அந்த மாமறையா குடிய பொருளை யமுகுறவறுதியிட்டல்லற், பந்தமாமயற் பற்றறுத்த மாதவரிப்பரம யோகத்திலேயெல்லாம், வந்து மாய்விட மாயனைத்தினும் பரமாய் மதிக்கொளு மாயையினுடைய, வந்த காலத்தே யந்தமற்றிந்தவ மிர்திருலரிய வீடடைவார்" என அறையப் பெற்றுளது. கீழ்வீழ்ச்சிக்குக் காரணமாய பாவங்களினின்றும் விடுபடும் உத்தம ஜந்து, கருமங்களினலே சோதிக்கப்பட்ட உபாசனையால் ஒருமைப்படுத்தப்பட்ட சித்தத்தில் எந்த யோகத்தைக் கேட்டு,பதின்ம னீயா யிருக்கின்ற யென்னும் வாக்கியத்தாற் பதின்மனைப்போல அது நீயாயிருக்கின்ற ,யென்னும் வாக்கியத்தாற் பிரஹ்மாத்ம ஐக்கியத்தைக் கேட்டு அபரோகம் புரியும், அதனற் சமுசாரத்தினின்றே விடுபடும், "அறிவினையறிந்த அந்தப் போதினில், அபயமே ஜனக, அடைந்தவனதி" எனச் சிரவண மாத்திராதியினனேயும் அபய அடையும் ஞானேதயமுங் காணப்படுதலின். யாதொரு அதமஜந்து உளதோ அதுவும்தேசவிசேஷ விசிஷ்டகுருவனுக்கிரகத்தாள், இந்த யோகத்தைக் கேட்டுச் சமுசாரத்தினின்றும் விடுபடும், அவ்வாறே அவிமுக்தத்தைத் தொடங்கி ஜாபாலங்கள் கூறுகின்றன:—"ஈண்டே யுயிருயி ருாழும்புங்காலேயிற் ருண்டவன்ருரகப்பிரமந்தருவன், மாண்டவனெதனு னமிருதமயமாய்த் தூண்டருமோக்ஷந் துண்ணிவாழ்ந்திடுமே" இதுவும் தரும அனதிகாரியாய துச்சரிபிரர்ணிவாசகமாகியஜந்து பதம் பிரயோகித்தருளிய ஸ்ரீ பகவான் கஜானனராற்குறிப்பித்தருளப்பட்டதாம். (19)

(அ. - கை) அவ்வனுத்தம யோகத்தையே யருளிச் செய்கின்றார்.

ஶிவெவிஷ்ணௌ வஶஶ்க்தௌ வஶூர்யெ-ஃயஜ-நாராயிவ|.
யாஹெஉஃவ்--யெ-ா ஶ: ஸஸ்ரெ ஜ்யா மொஉ-தாஉஉ,||

20. மன்று டிறைவன் றமின்மாட்டு
மாலின்மாட்டு மாயையெனுங்
கன்றுக்குமரி தனின்மாட்டுங்
கதிரோன்மாட்டு மெழின்மாட்டு
மின்றார்நரர்தம் மிறையவனே
யேதபேத மதியோகம்
நன்றும்யோக மதுவெனவே
நமது நதமென் றணருதியால்.

(வி - ம்.) ஈண்டுச் சிவாதிகளாகிய பஞ்சாயதன தேவதைகளிடத்தில் எவ்வபேத மதியுளதோ அது பரமயோகமெனப் பொருள் காணப்படுகின்றது, இதுவோ பொருந்தாதாம், ஒன்றற் கொன்று விலகுதலுற்ற வுபாதிகள் வாய்ந்த நனவுறுட வைகளில் முக்கியமான அபேதபுத்தி சம்பவியாமையினானும், ஆகாரியமாயவதற்கோ முக்கிய யோகத்தன்மை கூடாமையானும் என்க. விலக்கப்பட்ட முழு உபாதியபேக்ஷையானே அபேத புத்தி பிரமமுதற்றுவர மீறாக வுள்ளவைகளிற் சிறப்பின்று மென ஐந்து க்ளேயே கொண்டது அநர்த்தகமாம்; ஆகலின் இப் பொருள் துணியத்தக்க நல்லதொன்றல்லவாம், ஆயின் யாதுதான், ஓதவிழை வெனின், நுதலுதும்:—"சிவமத்வை தம் நான்காவதா மதைநாடுவர்." என்னுஞ் சுருதியினானே,சிவே - விசுவந்தை ஜசபிராஞ்ஞ அபேக்ஷயானே நான்காவதாகிய நிர்க்குணப் பிரஹ்மத்தின் கண்ணேயும், "பூதங்கள் விஷ்ணு புவனங்கள்

விஷ்ணு" வென்னும் வைஷ்ணவத்தானே, விஷ்ணௌ - உபாதீனமதாக வியாபகமாயா சபளத்தினிடத்தும், சக்தௌ - அதனினுந் தாழ்ந்த மாயையின் மாட்டும், சூர்யே - ஆதித்திய மண்டலத்திலிருக்கும் பொன்மயத்தின் மாட்டும், மயி - நமதிடத்தும், என்னுமிவைகளிடத்திற் றாயசின்மாத்திர ரூபங்களே இவைகள் என்பதாகவுண்டாம் அபேதமதியாதுளதோ அது, மம - முற்றறிவுடைய எமது, சம்யக்யோகம் - நல்ல யோகம், என, மத: - சம்மதமாம். அற்றேல் விலக்கப்பட்ட முழுஉபாதி அபேக்ஷயினனே ஈண்டபேதபுத்தியானது வேறு லகையானே விளம்பப்பட்டது எனின்? உபாதிகட்கு மீண்டு சின்மாத்திரத் தன்மையே கூற விழைவிருத்தலின்; அங்ஙனமன்றே:—அத்தியாரோப அபவாதங்களானே நிட்பிரபஞ்சம் பிரபஞ்சிக்கப்படும் என்னும் வசனத்தான் அத்தியாரோப பக்ஷத்திற் பரிணமவாத ஆசிரயத்தில் குடஞ்சால் பானை குதிர் முதலியவற்றிற்கு மண்ணினும் அயலின்மை மன்னுமேனும் ஒன்றற்கொன்றுள்ள வேற்றுமை விலக்கொணாதாம், அங்ஙனமே சிவாதிகட்கும் சத்தினும் அயலின்மை யமைந்தபோதினும் பரஸ்பரம் வேறு வேறாய அவற்றின் மாட்டபேத புத்தி சம்பவியாமையின் அத்தியாரோபமாகாதாம் அபவாதத்திலோபரிணமமற்ற விவர்த்தமற்ற விகற்பமற்ற சின்மாத்திர ரூபத்தன்மையானே யாவற்றிலும் அபேத புத்தி சம்பவித்தலின், அக்கருத்தானே சிவாதிகளிடத்தேய பேதபுத்திவிதிக்கப்பெறும், அதனாற்றான் வேதாந்தங்களில் அத்தியாரோபாதிகள் சுத்தப் பிரஹ்மத்தை யுணர்ந்து கொள்ளும் பொருட்டுக் கூறப்படுகின்றது. அங்ஙனமன்றே:—"அஃதவாவியது வெகு பிரஜைக ளாவேமெனவும், இவையாவற்றையுஞ் சிருட்டித்தது, அது சிருஷ்டித்து அதுவே புகுந்தது, அதுபுகுந்து தூலசூக்குமபூதங்க

ளாகியது". எனவும் தைத்திரீயத்தில் ஈசுரசக்தி சபல ஆத்ம • காமபூர்வகந்தன்னைச் சிருட்டிக்கின்றது எனவும் வியாக்கியான மீரண்டு கேட்கப் படுதலின் தன்னைத்தானே சர்வப்பிரபஞ்சாகாரமாகச் செய்தது அதனால் அந்தப் பிரபஞ்சத்தைப் பற்றிப் புகுந்து அவ்விம் மூர்த்தா மூர்த்த ரூபமாயது என்பதாக அதற்கே சகசீவ ரூபமாகப் பரிணாமம் பகரப்பெற்றது அவ்விது அத்தியா ரோபமாம். அதன் பின்னர் "உண்மையுமின்மையும் சத்தியமாயது எவ்வொரு சிறிதுளதோ அவ்வியாவுமே சத்தியமெனச் சாற்றப் பெறும்" எனப்பரமாகிய சத்தியத்தின் கண்ணே ஈசஜீவஜகமென்னும் மூன்றன் அத்தியாசமாம் மூன்றிலும் சத்தியாத்தியாச மென அன்னியோன்னியாத்தியாச வாயிலாக மூன்றற்கும் சத்திய விவர்த்தத்தன்மை கூறப்பட்டதாம், அதன் பின்னர் "இவ்வியாவற்றிற்கு முன் அவிகிருதப்பிரஹ்மமே யிருந்தது, அதினின்றுந் தானே விகிருத நாம ரூபவிசேஷ முண்டாயது, அது தன்னையே தானே செய்தது, ஆகலினது சுகிருதமென அறையப் பெறும்' என விவர்த்தஹேது வாய அஞ்ஞானத்தை சத்தியத்தினும் அயலாகத்துணிந்து அன்னிய அபேக்ஷையற்றதாய் அசத்சப்தத்தாற் கூறப்படுவதாய அதற்கே சர்வ காரணத்தன்மை சாற்றப் பெற்றது. கஜைப்பிரபஞ்ச சிருஷ்டியின் கண்ணே அஞ்ஞானத்திற்கே சர்வத்தையுஞ் செய்யுந் தகைமை காணவும் படுகின்றது. அஞ்ஞானமும் துச்சமாதலின் அசுத்துத் தன்மையானே பரிணாம யோக்கியம் அன்றாமென அதனை மூலமாக வுடையது மூன்றும் விகற்பமாத்திர மெனச் சித்தமாம். யாதுளதோ அது சுகிருதமாம் இரதமேயாமது "வெனச் சுகிருதவயற் பெயர்வரப்ந்தவதற்கே பாதவயற் பெயரிய இரச அவசேஷ நர்சங் கூறப்பெற்றது அவ்விது அப

விரதமாம்; அதுவும் லோகத்தில் இருவகையாகக் காணப் படுகின்றது:—வெந்த ஆடை வியகத்தியழிந்திடினும் ஆகிரு திவிளங்கு கின்றதே போலும், எரிந்த கற்பூரத்திற்கோ ஒன் றுமே காணப்படுவதின்றும், அவ்விற்றுளாதிபுது எல்லா வடிவ விலங்கும் வடிவம் உபாதியோடு கூடிய பிரஹ்ம வித் தனுபவிக்கின்றான்; அது காண்பிக்கப்பட்டுளது சாமகா னத்தில் "யானன்னம் யானன்னம் யானன்னம்; யான் அன்னு தன்யான் அன்னுதன் யான் அன்னுதன், யான் சுலோகஞ் செய்பவன் யான சுலோகஞ் செய்பவன் யான் சுலோகஞ் செய்பவன், யானிருக்கின்றேன் முதலுண்டானவன், சத்தியத்தின்" பொருள், யான் - அசங்க உதாசீனனுகிய ஆனந்தாத்மா, அநாதி யநிர்வாச்சிய அவித்தையினுலே, அன்னம் - உண்ணத்தக்க உபயோக்கியமாம். அன்னுதன் - அன்னத்தை யுண்ணும் போக்தா, மும்முறை மொழிந்தது விஸ்மயவெளிப்பாட்டின் பொருட்டாம், பூலோக புவலோக சுவர்க்க லோகத்துள்ளார் பொருட்டெனினுமாம். சுலோக மென்பது அன்ன அன்னுதரின் சங்காதமாம், அதனது செய்பவன் கர்த்தாவாகிய சேதனவான். கீர்த்தியைச் செய் பவனெனினுமாம். ஆனந்தாத்மாவாகிய யானிருக்கின்றேன், முதலினுண்டான இரணிய கருப்பன் சத்தியத்தின் - மூர்த்த அமூர்த்த வடிவமாயிராநின்ற பிரபஞ்சத்தின் (கருத்தா முத லில்) என்பதாம். என்பதாக, இரண்டாவது இயம்பமுடி யாத உபாதியற்ற பிரஹ்மவித்து அனுபவிக்கின்றான். அவ் னும் "எக்காற்றுன் இவன் திருசியமற்றுத் திகழ்வடிவற்று ஒரு சொலுமற்று ஓரிடமற்றுள ஏரியயமிலது இனிது நிலை பெறுமோ அக்கால் அபயத்தை யடைந்தவனுவன்" என் னுஞ் சுருதியினுனே காண்பிக்கப்பட்டுள்ளான், இவ்வண்ண மே "உற்றவ னுபாதியை யற்றவனுபாதியை, நற்றவரிருவ

ரெனவே யுளதாம், முற்றவன் சருவாத்மாவாய் முதிர்வன் பிற்றவன் நிருபாக்கியனுகுவனே'' எனவார்த்திகத்தே கூறப் பெற்றுளது. (20.)

(அ - கை) இங்ஙனம், நிட்களானந்த மாத்திர சொரூபத்தை யுடைய ஆத்மாவிற்கே ஜகத்தின் ஜன்மஸ்திதி லயகாரணத் தன்மையைக் கூறியருளுகின்றார்:—

ஸஹஜைவஜமஹ்யாதஜாதி வாமயாஇவ |
க்ருத்வா நாநாவிதம்வேஷம் ஸம்ஹராமிஷலீலயா.

21. யானே யுலகந்தனையாததனு
லானவனே வனகங்காத்திடுவேன்
நானுவிதவேடந் தனைநணியே
தானே யழிப்பேன் றனிலீலையினுல்.

(வி - ம்.) நாநாவித வேஷங் கிருத்வா - பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்களின் ஆகிருதிகளைக் கொண்டு உலகத்தின் சிருஷ்டியாதிகளை விளையாட்டாக மற்றையரா லேவப்பெறு மலே செய்வேன். அங்ஙனமே மறையும் "ஆநந்தந் தன்னி னின்றே யாயின விவையெலாமும், ஆநந்தந் தன்னினுனே யாயின விவைகள் வாழும், ஆநந்தந்தன்னிற் சென்றே யடங்கியே யிவைகள்யாவும், ஆநந்த மயமதாயே யடங் கியே யமையுமன்றே" என கூலர்கின்றது. இதனுனே பூர்வ சுலோகத்திற் புகன்ற விஷ்ணு மாயாவிசர்க்காதிகர்த்தா ஆனந்தைகர சமாய என்னினின்றும் பேதிப்பதின்று மென வோதியருளப்பெற்றதாம்.

(அ - கை.) தேவதை முதலிய வேற்றுமையைக்காட் டும் மாயையும் தன்து காரிய சக்திமாக யானே யென்றரு ளிச் செய்கின்றார்:—

அஹமேவ மஹாவிஷ்ணு ரஹமேவ ஸதாஶிவ: |
அஹமேவ மஹாஶக்தி ரஹமேவார்யமா ப்ரிய. ||

22. அகமேமகத் தாகிய நாரணனும்
அகமே யருளண்ணல் சதாசிவனும்
• அகமே மகத்தாகிய சத்தியுந்தா
னகமே தினமாக்குவனும் பிரியோய்.

(வி - ம்) அகார உகார மகார அருத்தர்கள்பிரஹ்மா விஷ்ணு·ருத்திரர்கள் அன்னியர்கள் முழுப்பிரணவ அருத்தர்கள் • சூரிய மூர்த்தியன்னியம்; அதனை வைணவர் மகா விஷ்ணுவென மலராநிற்பர், சைவர் சதாசிவனெனவும் சௌரர் அரியமா எனவும், சாக்தர் சக்தியெனவும் சாற்றி நிற்பர். அவர் யாவருமே அகண்டானந்த ரூபயாமேயாம், எம்மினின்றும் உண்டாகியிருத்தலின் அவர்கள் "அக்கால் இலதாமிரஜம் இலதாம் வியோம அபரமியாது" என்ச் சிருஷ்டியின் முன்பு இரஜ ஆதியையுடைய மாயைக்கும் அசத்துவங் கேட்கப் படுதலின் எம்மிடத்திலிருந்தே பரம வியோமமெனப் பெரிய சக்தி யுண்டாகின்றது அதினின்றும் முண்டாய மகா விஷ்ணுவாதிகட்கு என்னே யுரைப்பது, ஆகலின் அவர்களும் விசுத்தமாய எம்மினின்றும் வேறுகமாட்டார். அல்லது யாவர் முற்சுலோகத்திற் சிவ விஷ்ணுசக்தி சூரிய சப்தங்களால் முறையே சுத்த சபல சாக்ஷியசாக்ஷிகளாகக் கூறப் பெற்றனர் அவர்க்குத் தனித்தனிமயி என்பதனோடு சாமானாதிகரண்யப்படுத்தலான் அகமருத்த அபேதங் கூறப்பெற்றதாம். அதனால் அகமர்த்தத்திற்கே யானந்தத்தன்மையுண்மையின் அதனினின்றும் ஜகத்தின் ஜன்மாதி சாற்றப் பெற்றது இரண்டாவதில், மூன்றாவதில் உபக்கிரம சுலோகங் குறிப்பித்த அவர் தம் மகமர்த்த அபேதம் வெளியாக்கப் பெற்றது; அங்ஙனமன்றோ சாமகானத்தி லுதாகரிக்

கப் பெற்றது:—அகமன்னமெனச் சாக்ஷியத்தோடும், அகமன் னுதனெனச் சாக்ஷியோடும், அஹம் சுலோக கிருத்தெனச் சபலத்தோடும், யானிருக்கின்றேன் முதலினுண்டானவன் என அவ்வை தம்மதிஷ்டான சுத்தத்தோடும் அகம் பொரு ளின் அபேதங் கேட்கப் படுகின்றது. அவ்விம் மூன்று சுலோகங்களின் பொருட் டொகுப் பிதுவாம்:—"சத்தலவிட யஞ் சத்தியாந்திருசிசார சுரவிசுகமயமா, மத்தவை சிருட்டா விட் டிணுவாகுமதனதி கிருதிமெய்சிவமே, யெத்திரண்டிரண் டன் சங்கமீ தொளிறு மெதனதிங் கொருமையர் லினிதாய்த், தத்தகங் கிருதிதோதியே சோதிசயகன ராஜனென் றுணர்மோ".

"அசத்தே இவற்றின் முன்னிருந்தது" என்னும்மறை யறைந்த அசத்து பரமவியோம மெனப் பெயரிய மாயை பஞ்சாயதன தேவதைகளுள் சக்தி யெனச் சாற்றப்பெறும் அதுவே சருவதிருசியம். "தாவரசங்கம சகலத்துக்கும் ஆவது ஆத்மா அருக்கன் சூரியன்" என்னும் மந்திரவருணத் தான், அதுவும் அசுசார் - உயிருற்றது அசு உபலக்ஷிதமாக ஐந்து கோசங்களையும் வடிவமாகத் தாங்குகின்ற தெனவுயி ருற்றதாம் உளமுற்றதுமாம், மனுடன் யானுண்கின்றேன் சோகிக்கின்றேன் செய்கின்றேன் துயில்கின்றேன் என அன்னமயாதி தருமங்கட்கு ஆன்மாவின் கண்ணே யாரோபங் காண்டலின். இங்ஙனமாயினும் திருசி — அறிவு அருக்கனை யன்ன ஒளி செய்வதாம். எனதுடம்பு, எனதுயிர், எனது மனது, எனதுமதி, என்றுணர்வு, என அதைக்காட்டும் அநுபவ முண்மையின். "மோகவிருளான் மூடிய கூடமாம், ஏக விரவியைத் துரியமாம் பிரம, மாகவடிவமா யறிந்தன னத்திரி" யென் அகிலலோக முடைமை நீக்கத்தாற் சூரியன் ஜீவாத்மா, சுகமய - ஆநந்தமய ஈசுரர் ஜகஜீவர்களின் சிருட்

டாவரீவர் "அளவறு பிரஜையாவோமெனவே, உளமதிலவா வையுற்றது பின்னர், வளமுறு யாவையும் வருமாவனைந்தது, புளகிதமுறவதிற்புகுந்தது, புகுந்துதெளிவுறு மூர்த்தமமூர்த்தமாய்துவே" என்வதற்கே அதனுன் மத்தன்மைத் தரிசனத்தான், அஃதீண்டு விட்டுணுவென விளம்பப்பெறும். யாது தான் அதனதிகிருதி அவை மூன்றன் அத்தியாசத்தின் அதிகரணம் தன் சத்தையானே அவற்றைப் பிரதிபம்பிங்களைப் பிம்பம்போலப் பூரிக்கச் செய்கின்றது. "அஃதுண்மையும் இன்மையும் ஆம் சத்தியமாயது யாது ஒரு சிறிது தோற்றுகின்றது அது சத்தியமெனச் சாற்றப் பெறும்" எனச் சுருதிப் பிரசித்தமா யசத்தியம் அஃதீண்டு சிவசப்தார்த்தமாம். இந் நான்கன்சங்கம் கணம் எதனபேதத்தான் "யான் அன்னப் யான் அன்னுதன் யான் சுலோகஞ் செய்பவன் யான் உளன்முதலி னுண்டாயவன்" எனவாம். ஒளிரும் - விளங்கும் அது அகங்கிருதி தோதி ஜோதி. யான் என அபிமானஞ் செய்தலானே அகங்கிருதி, உணர்வு ஆண்டுப் பிரதிபிம்பித சைதன்யம், அது விளங்குகின்றது எதனுல் அது பிம்பவடிவம் நான்காவது சிவமெனப் பெயரிய அகங்கிருதித்தோதியாம், உபாதி யொழிந்தவழி பிரதிபிம்பம் போலப் பிம்பத்தன்மையும் ஒழிய யாது எஞ்சும் விலக்கப்படாமற்றொடர்பற்று நான்காவதோடு ஒருமை யுறினும் துரியாதீதமாமோ, ஜோதியதுவே நான் கன்கணம் இலங்குகின்றது இதனுல் என்னும் விற்பத்தியால் கணராஜன் எனக்கழறப் பெறுவது வெல்க. அங்ஙனமே மந்திரவர்ணமும் "சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்" என் மலர்கின்றது. சிவத்திற்குச் சத்திய ஞானரூபத்தன்மை யிருப்பினும் நான் கன் பூரணத்தன்மையானே இதரத்தினின்றும் விலகி யதற்கு முக்கிய அநந்தியங் கூடாமையின்; ஆகலின் யாதுதான்

துரியாதீதம் அதுவே கணராஜ சப்தார்த்த பூதமாய பிரஹ்மமாம். (22)

(அ.- கை.) என்றிந்தப் பிரகாரம் ஆன்மாவின் தத்துவம் அறைந்தருளி மந்தமதியுணர்ந்து கோடற்பொருட்டு அதற்கே மாயாசபலம் ரூபமருள் கின்றார்:—

சஹஜெகொ நூணாஂநாமெஜாதஃ வஞ்சவிய ஃ வாரா।
அஜாநா நாஂ நஜாநந்தி ஸவடுகாரண காரணஂ॥

23. ஒன்றாயாமே யெவர்தமக்கு
முரியகடவுளாகின்றேம்,
மூன்றுனிரண்டு மூன்றுவகை
முறையின் முளைத்து முதிர்ந்துள்ளோம்,
நன்றாயறியப் பெறுவதிலர்
நம்மை யறியாமையினுனே,
பொன்றா தெவற்றின் காரணத்தின்
பூன்ற வேதுவது வாவேம்.

(வி - ம்.) ஒன்றாயயாமே, ந்ருணும் - இயங்காவியங்கும் உயிர்களின், நாதன் - ஈசுவரன் அந்தரியாமி, புரா - சிருஷ்டியின் ஆதிகாலத்தில், பஞ்ச - விண்முதலிய விதம் - ஐவகையாய, ஜாதஃ - காஞ்சனகட நியாயமாக யாமே விண் முதல்வற்றின் வடிவத்தை அடைந்தேம். அற்றேல் அசங்கராகிய தேவரீர் யாதின்பொருட்டுத் தங்கட்கு மாயாசபலப் பான்மையை யிலக்குகின்றீர் என்றாசங்கிப்ப அருளுகின்றார்:— அஞ்ஞானத்தான் என. காரணமாகிய் மாயாவிதனக்கும் காரணமான தூயவின்ப வடிவனன்னை, அஞ்ஞானத்தான் - மோகத்தான் அறிகிற்றிலர். ஆகலின் அவர் தம் அனுக்கிரகப் பொருட்டு மாயா சபலமேயாய வடிவத்தை முதலில் ஒளிர்விப்போம் என்பது பொருள்.

(அ - கை.) யாம் ஐந்து வகையாக் ஆனேம் என்றரு ளப் பெற்றது அவ் வைந்து வகையையே அருளிச் செய்கின்றார்:—

𑌮𑌤𑍍𑌤𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑌾𑌪𑍋𑌧𑌰𑌣𑍀 𑌮𑌤𑍍𑌤 𑌆𑌕𑌾𑌶𑌮𑌾𑌰𑍁𑌤𑍌 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌶𑍍𑌚 𑌰𑍁𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌾𑌦𑌿𑌶𑍋𑌦𑌶 ॥

23. எமினின்றெரிநீ ரெழிவார் தரணீ
யெமினின் றெறிகால்வெளியென் று மெலாம்
எமினின்றயன்மா லுமையீசனுமே
மெமினின் றுலகோம்பு வரெத்திசையே.

(வி - ம்.) மத்தவென்பதையும் ஜாதவென்பதையும் யாண்டுங் கூட்டுக. மத்தவென்னும் ஐந்தாம் வேற்றுமை யால் ஜனிகர்த்தாவிற்குப் பகுதியென்னும் மிருதியினல் உண் டாகிய அக்கினி முதலவற்றின் உபாதானத்தன்மை தமக்குக் காட்டியருளப்பட்டது. இதுவும் ஆன்ம வொருமை யுணர்ச் சியின் பொருட்டாம்; எல்லா விடங்களிலுமே மறைச்சிரங் களிற் சிருஷ்டிமறைகள் ஆன்மவொருமை யுணர்த்தற் பொ ருட்டே யாம் என்பது கண்டாமணியோசையாம். "எதனை யந்தியமின்றியதென முதலியம்பி, யதுதுணிந்திட வளவை யிற் பெரிய வாரணங்கள், விதவுலகளை யதனது காரியம் விளம்பும், அது பிரம மென்றறுதிசெய்யானை மாமுகனும்" என்று பெரியோர் இயம்புவர். அக்கினி - தேயு - எரி. நீர் முதலியவை தெரிந்தவையே. கேவலம் ஐம்பெரும் பூதங் கண் மாத்திரம் எம்மிடத்திருந் துண்டாயின வென்பதாக விலதாம் மற்றே பிரஹ்மாதி ஸ்தாவராந்தங்களாய பௌதிக சரீரங்களுக்கும் எம்மினும் அயலாக அவாந்தர காரணம் இலதாம் என்றருளுவார், பிரஹ்மா என்றருளினர். பிரஹ்மா - நான்முகன், விஷ்ணு - திருமார்பன், ருத்ரன் -

பார்வதிப்தி, லோகபாலர்—இந்திராதியர், சூரியகதி நற்கற்பித கிழக்கு முதலியவை பத்து திசைகளாம். (24)

(அ - ஸ்கை.)

வஸவோ மநவோ காவோ ருஷய: பஶவோऽபிச |
ஸரித: ஸாகரா யக்ஷா வ்ருக்ஷா: பக்ஷிகணாஸ்ததா. || (25)

ஏகவிம்ஶதி: ஸ்வர்கா நாமா: ஸப்தத்வீபாநி ச |
மநுஷ்யா: பர்வதா: ஸாத்யா: ஸித்தராக்ஷஸமண்
ஸ்ததா. ||

26. பூகழூறு வசுக்கண் மனுக்களே கோக்கள்
புண்ணிய முனிகளுற்'காற்க
ணெகிணதிகடல்க ளியக்கர்க டருக்க
ணெடுவிசும் புறப்பவைதாமும்
மிகழிரு பதின்ஞென் றுகிய சுவர்க்கம்
நீளரவெழு வனங்களுமே
திகழூறுமனுடர் மலைகள் சாத்தியர்கள்
சித்தரு மரக்கருமாங்கே.

(வி - ம்.) வசுக்கள் எண்மர்தராதியர், இதுவும் பதினொரு உருத்திரர், பன்னிரு ஆதித்தர், பதின் மூன்று விசுவதேவர், என்பவரே முதலான கணதேவர்கட்கும் உபலக்ஷணமாம். மனுக்கள் பதினல்வர், கோக்கள் சுரபியாதிகள், முனிகள் வசிட்டாதிகள், நாற்நால்களாகிய பசுக்கள் ஆகுதிரை முதலன, அபிச என்னும் உம்மைகளாற் கூறுந கந்தருவாதிகள், நதிகள் கங்கை முதலன, கடல்கள் பாற்கடல் முதலன, இயக்கர் குபேராதியர், தருக்கள் ஆல் அரசு முதலன, பக்ஷிகணம் அன்னஞ் சராசமுதலன, உம்மையானே வேறுயுள்ள விண்ணிற் சரிப்பனவாய பூத வேதாளாதிகளு

மாம். இருபத்தொரு சுவர்க்கங்கள் ஏழு தீவுகள் மேருப் பிருட்டமு மென வெட்டு பூலோகத்துள்ளடங்கினவாகிய யோக பூமிகளாம் புவாதிகள் ஆறு, ஏழு பாதாலங்களும் எனவாம். நாகங்கள் வாசுகிமுதலன, ஏழுவனங்கள் காமிய காதிகள், உம்மையானே நைமிஷாதி நவ ஆரண்யங்கள், மனுடரும் மலைகளும் வெளியாம், சாத்தியர் தேவதைகட்குந் தேவதைகள், சித்தர் கபிலாதியர், அரக்கர்கணம் புலஸ்திய சம்பந்திகள், ஆங்கே - அவர்க் கொப்பான ஹிரணியாக்ஷாதிய சுரருமாவர். (26)

(அ - கை.) இன்னணம் சிவ பெருமானிடத்திலும் திருமாலிடத்திலும் என்பதாதி மூன்று சுலோகங்களானே மேன்மைப் படுத்தலின் துரியாதீத கணேசரை விரித்துரைத் தருளி ஒன்றாகிய யாம் என்பதாதிநான்கு சுலோகங்களானே மூன்றாவது விட்டுணுவையும் வியாக்கியானித் தருளி சாக்ஷியத்தினின்றும் சாரமாகிய சாக்ஷியாகிய சூரியனை வியாக்கியானித் தருளுகின்றார்:—

ஸாக்ஷீ ஜகச்சக்ஷுரலிப்த: ஸர்வகோசர:।
அவிகாரோ(அ)வ்யயோ(அ)ஸங்கோ விஶ்வோ ஹ்யவ்யய:.

27. சான்றாயுளன்யான் சகச்சக்ஷுவுஞ் சாருகில்லேன்
மூன்றாவினையா லவிகாரம் விடயமூளேன்
யான்றானவியத்த மெனப்படும் யாதினாடும்
மூன்றாவெனப் பூரணனென்றகம் பொன்றிலேனே.

(வி - ம்.) சகச்சக்ஷு - ஆதித்தியன், அஃதுடைத்தாய் ப்பிரகாசியமாய சகத்திலும் அன்னியனாகிப் பிரகாசகனுவேன், இதனானே சாக்ஷாத் திந்திரியமன ஆலோக மறைப்பில்லாமலே நோக்கலின் - சாக்ஷி, எல்லாக் கோசங்களின் காயவாக்கு மனங்களாற் செய்யப்பட்ட பாவங்களாற்

பற்றற்றவுன். "எவ்வீான்மா பாவமற்றது ஜரையற்றது மிருத்தியுவற்றது சோகமற்றது பசியற்றது தாகமற்றது" என்பதாக அதன் கண்ணுறுவனவாய கோசதன்மங்கட்கு நிடேதங் காணப்படுதலின் அவிகாரம் விகாரத்தினும் வேறும் விகாரம் விண்டதுமாம், அப்பிரமேயன், ரூபாதி ஹீனத்தன்மை யுண்மையின், அவ்யக்தன், ரூபாதி ஹீனனு மினும் ஆகாயம் போல வியக்தன் அல்லன், விசுவகன் என்றது விசுவத்தினின்றும் விலகியதாந்தன்மையையும் விசுவத் திருக்குந்தன்மையையும் இயம்பியதாம். அவ்யயன் - அபக்ஷயாதி தருமமற்றவன். (27).

(அ - கை.) அற்றேல் உபகிதமா யுபாதிதன்மங்களைத் தன்பால் அபிமானித்துக்கொள்ளும் சான்றிற்குயாங்ஙனம் அவிகாரத்தன்மைமுதலனவென ஆசங்கிப்ப உண்மையாக அதற்குப்பரப்ரஹ்ம அனன்னியத்தன்மை யுண்மையின் என்றருளுகின்றார்:—

ஸஹமேவபரம்ப்ரஹ்ம வ்யாநம்ஹாத்மகம்ஸ்வ
ஸ்ராஹய த்விஸாநயா மோஹாத்மநாநீ நீ. ||

28. அகமே யுயர்வாம் பரம்பிரம
மழியாதான பெருமையுடன்
சுகமே யுருவா யிலகுவது
தொலையா மலையாக் கலையரையும்
இகமே பரமே யெவர்தமையு
மிடரேபடுத்தி யெடுத்தயினும்
மகமா மாயை யெமதுசெயன்
மயலே யியலா மின்னிமன்னு.

(வி - ம்) அகமென்பது யாமேதேகாதி யுபகிதமாயினும் உண்மையாக அவ்யயம் - அகண்டம், அஜ்ஞானந்தமாத

லின் அவ்யய ஆனந்தமெனப்பெறும் " அத்தகையவடிவுடை யேம்யாம்; ஆகலின் காரணத்தோடுற்ற 'பஞ்சகோசங்களி னின்றும் பரமாய்ப் பிரஹ்மமாயவெமக்கு அவிகாரத்தன்மை முதலியவை பொருத்தமேயாமென்பீதுபொருள்: அற்றேல், அக்கினியும் அப்பும் எம்மிடத்தினின்றும் என்பதாதி தம் வசனத்தானே அக்கினியாதிரூபமாக விகாரமடைந்து புறப் பொறி கவர்வதாய் விபக்தமாய் பரிச்சின்னமாய்க் காரிய மாய் ரூபத்தால் ஜன்மாதியுடையதற்கு யாங்ஙனம் "அவிகா ரம் விடயமூவிளன்யான்றனவியத்தமெனப்படும் யீதினாடும் மூன்றுவெனப் பூரணனென்றகம்பொன் றிலேனே." எனக்கூறி யருளிய தருமம்பொருந்துதல்கூடும், ஆகலிற்பூர்வாபரவிரோ தம் ஆமென ஆசங்கிப்ப அருளுகின்றார்:—மோகமாதியென. கூடாததைக் கூட்டிவைக்கும் ஆற்றலையுடைய மாயை மேன் மைதங்கிய ஆத்மஞான ஐசுவரியாதியுடைமையானே பெரும் பெரும் பெருமைபுகழ்வாய்ந்த பிரஹ்மாதிகளையும் பிறரை யெவரையும், சுரநராதிமுறையாக இயங்காப்பொருளீறாய நரரையும், தேகஇந்திரியாதி நடத்தலான் அதனபிமானத் தாற் பிரஹ்மாயான்என்பதாதியாய்க் கூறிய ரூபமாகப் பொருந்தியவர்களையு மோகிப்பிக்கும் - அயலாறாய் மதியை யாற்றிவைக்கும். (28)

(அ - கை.) மோகிப்பிக்கின்றது என்றவிதனையே விரித்தருளுகின்றார்.

ஸ்வாஹாஷ்வீகாரெஷ்டாநியம் யொஜயெஷுஸம்
ஹிக்வாஜாவடூமும் ஜஙாமெ நகெஜ நஹி ஸமெநு
விஜ்ரஷ்வி நகிஷு ஹவிஷயெஷ் ஸமெவாயதஃ.

29. அறுவிகாரத்தி லென்றுமவை யிலந்தமைய முற்றும்
உறுமனைப் படலந்தாங்கி யுயிர்பல பிறவியானே
சிறுசிறு வகையில்விட்டுச் சீருறு பிரமந்தன்னை
யெறிவிடயங் கடம்மிலினிய போதத்தா லெய்தும்.

(வி - ம்) சர்வ்தாஷட்விகாரேஷு - எப்போதும் ஆறு விகாரங்களில், ஹித்வாஜாபடலம் ஐந்து - தொடுத்துயிர் அறியாமைப்படலத்தை, விரஜ்யவிந்ததிபிரஹ்மவிஷயேஷு ஸுபோதத இதி - வைராக்கியமுற்றுச் சர்வவிடயங்களையும் நன்கு விளக்கிக்கொண்டிருக்கும் பிரஹ்மத்தை யடைவன் என்பதாம். தாந்ஙராங்கியம் மாயாஷட்விகாரேஷு - அந் நரர்தமை இம்மாயை அறுவகைவிகாரங்களிற்செலுத்தும்- அறுவகைவிகாரங்கள் - பிறத்தல் பிறந்துளவாதல் வேறுபட வளர்தல் வளர்ந்தயலொன்றாய் விளைந்தமைதல் மாறுபடத் தேய்தல் அறமாய்தல்எனவருகின்றனவாம் பிறத்தல், இருத்தல், திரித்தல், பருத்தல், இரித்தல், இறத்தல் என்பனவாம் இவ்வாறுவிகாரங்களும் ஸ்ரீபாஸ்கராற் கூறப்பெற்றனவாம். எண்பத்துநான்கு என்னப்பட்ட லக்ஷயோனிரூபவுபாதிகளில், பிருசம் - அத்தியந்தம், அவ்வடிவப்பாவத்தான் எப்போதும் முதன்முடிபிலதாய் அநவரதம் புகுத்தும் புகுத்துதலாவது, ஒன்றற்கொன்று விலகியிருப்பனவாகிய பாலியாதி ஜாககிரதாதியவஸ்தைகளிலும் தொடர்ந்திலங்காநின்ற வொன்றாய் அகமர்த்தமாயுற்ற ஆன்மாவை மலர்நார்நியாயம் பற்றிப் பின்னமெனவுணரினும் அதனபேத அத்தியாசத்தினால் அதன்றன்மத்தையனுபவிப்பதாயும்ஆம். எவ்வியான் பாலியத்திற் றந்தையால் வளர்க்கப்பெற்றேனோ அவ்வியானே விருத்தாவஸ்தையில் பேரன் றன்பேரரையுமனுபவிக்கின் றேன். அவ்வாறே எவ்வியான் ஒன்றுந்தெரியானாய்ச் சுகியாய்பெருந்துயிலிற்றேனோ அவ்வியானே கனாக்கண்டேன் அவ்வியானே இஞ்ஞான்றுநனவுற்றுளேன். இங்ஙனம், தேகாதிகளினின்றும் தனித்திராநின்ற ஆன்மாவையறிந்தும் யான்பாலகன், யான்யவ்வனன், யான்விருத்தன், யான் இளைத்தவன், யான்நொண்டியென்பதாகத் தேகதருமங்களைத் தன்பாற்றுணிவன். குருடன்யான் செவிடன்யான் என்ப

தாக இந்திரியதருமங்களையும், பசித்தவன்யான் தாகித்தவன் யான், சோகிப்பவன்யான், மோகிப்பவன்யான், சுகியான் துக்கியான், கருத்தாயான், போக்தாயான், அறிபவன்யான் அறியாமையன் யான் ஒன்றுமறிகிலேன் என்பதாக முறையே பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆனந்தமய மெனப்பெய ரிய நான்குகோசதருமங்களை ஆன்மாவின்கண்ணே துன்னி வன். இவ்வண்ணமாகவே சங்காதத்தினும் அயலாக இருந் தும் ஜீவன் சங்காதவடிவமாகத் தன்னைத்தக்கவாறெண்ணு கின்றனன், அதனானே வினைவழி எல்லாப்போக்யக்கூட்டங் களையும் உண்டாக்குவன் காக்குவன் ஒழிக்குவனுமாவன். இங்ஙனம் சிவன்மாயாப்பிரகாசகராயினும் மாயையைத் தஞ் சரீரமதாக நன்குகவர்ந்து அதன்றன்மங்களாகிய ஜகத்தின் ஜன்ம ஸ்திதி சங்கார கர்த்துருத்தன்மைமுதலவற்றை ஆன் மாவின்கண்ணே யெண்ணியவராயே ஜகச்சன்மாதிகாரண ராகவெண்ணுவர், எம்மினின்றும் அக்கினி நீர் என்பதாதி யானே அதுகாட்டப்பட்டது. அற்றேல், மாயையினது மகிமையிங்ஙனமாகுமாயின் எம்மனோருக்கு மோக்ஷமை யாங்ஙன முண்டாமெனின் அருளுகின்றார்:—ஹித்வாவென. இதுததாதியின் ரூபமாம். அஜாபடலம் - மாயாபடலம், மாயாரூபம் ஆவரணம் பிராஹ்மணன் யான் இல்லறத்தான் யான் என்பதாக்வருண, ஆசிரம அபிமானரூபத்தைத் தரித் தே ஆண்டு ஆண்டு விகிதமாகி யிருக்குங்கருமங்களைச் செய்து ஐந்து பையப்பைய ஏறுமுறையாக அநேக ஜன்மங்களி னாலே வைராக்யத்தை யடையும், வைராக்யத்தினாலேயும் யமாதியையனுட்டித்துச் சற்குருவின் றிருவருளினாலேகிடைக் கப்பெற்ற யோகமார்க்க முடையவனாய், பிரஹ்மம்சத்திய ஞான அநந்த ஆனந்த சொரூபத்தை முழுமாயை யொழிந்த வழியடைவன். கருமங்கட்குச்சித்தசோத்கத்தன்மை யுண் மையின் மோக்ஷசாதனத்தன்மையாம், என்பது மேல்அருளப்

படும்; ஸ்ரீ பகவானாலும் உடன்பாடெதிர்மறைகளானே அருளிச் செய்யப்பட்டுளது:—"காதலாலரசன் சனகனே முதலோர் கருமமோ டொழுகியேயன்றே; பேர்தராயுலகம் புக்கதே" "தீதியலவாவருன் செயலை மாற்றுவான் பீதியல் வினையுளுன் வீடுமே விட்டான்" எனவாம். அற்றேற்சித்த சுத்தி முதலியவை மாயையைப்பற்றியே யுண்டாக வேண்டியதாக இருக்குமன்றே பிரஹ்மபாவமோ மாயை மாயுமாத்திரத்தானே அடையத்தக்கதாக முடியும், யாங்ஙனம் ஹித்வா வென்பதற்குத் தாங்கி யென்பதாக வியாக்கியானிப்பது என்பதானே கூறப்படுகின்றது: விடயங்களில் என. விடயங்களில் - திருசியங்களில், பிரமாதா பிரமாணம் பிரமேயம் என்னும் இவைகள் உளவாயவழி அவற்றின் பிரகாசகமாயபிரஹ்மம் திருக்குருவமாய்ப் பிரகாசிக்கின்றது, அன்றாயினோ அவை சுழுத்தியிற்போல அகம்பிரஹ்மாஸ்மியெனப் போத சம்பாவனையின்றாம். "வெளிப்பொருட் பிரமேயங்களாமதனிற், களிப்புறு வாக்கியத்தாந்தன்மையானே, உளச்சம மதமா வுணர்வதுதானே, தெளித்தமறை முடி செப்பளவையினால், விளேத்திடு மீண்டுமேயமாம் பொருளே." எனவுங் கூறப்பெற்றுளதாம். அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் வாக்கிய ஜன்னியவிருத்தியும் மாயையே, ஆண்டு நீர் நிலாவாயிலாலாகச் சீர் நிலாக்கவரப்படுவதேபோல வாக்கியத்தாலுளவாய விருத்தியின் கண்ணே பிரதிபிம்பித்த அறிவுவாயிலாக முக்கியசித்துக் கவரப்பெறும், மாயையின் மாய்வு அதன் அங்கமதாக அமையும், வாக்கியஜன்னிய விருத்தியில்லாமல் அம்மாத்திரையானே பிரஹ்மலாபஞ் சம்பவியாமையின்

எனப் பொருத்தமாகவே விடயங்களிற் சுபோதத்தால் என்பதாகப் புகன்றருளப் பெற்றதாம். (29)

(அ - கை) இவ்வகையாக விஷ்ணு சூரியசக்திப் பெயர் வாய்ந்தனவாய பரஸ்பரம் விலகியுள்ள உபாதியோடு கூடிய பிரஹ்மங்களில் யாதொரு நான்காவதாய முத்தர்க்குத் தெரிவுறுமாறுற்ற சிவமெனப் பெயரிய பிரஹ்மம் தொடர்ந்திருக்குமோ ஆண்டுப் பிம்பபூதப் பிரஹ்மத்தின் கட்பிரதிபிம்பங்களிற்போல உபாதி தர்மங்களின் அடைவு இல்லையாம் எனக் கூறுவதற்கு அடைவுற்ற பிரஹ்மத்தைச் சிறப்பித்தருளுகின்றார்:-

யதேந்த்ரம் ஸஹஸம்வாஸோ தாஹாதயே நதே யதா
யதேந்த்ரம் ஸ்ம்வஸாவதே நாபோஷாம் ஜாதநா
யஸ்யம்வஸ்யோ நவிவர்ஸோ நவிதாயிவ. ॥

31. காதிடா தொடாயுதங்கள் காதிசாதவேதனை
லோதநீது றாதுநீரி னுமோடிடாதுகாண்
வாதமேதினும் வாடிடாது வாதைமோதினு
மீதுதேகம் வாதையேது மில்லையில்லை மன்னனே.

(வி - ம்.) கட்டையையுபாதியாக வுடையதீ. கட்டையிரிந்திடினும் எரிந்திடினும் இரிவதுமில்லை எரிவது மில்லையென்பதுபோல, எதனால் உபகிதமாயினும் விஷ்ணுவை உபாதிதருமங்கள் தீண்டாதனவேயாம், அக்கால் அநுபகிதமான சிவத்தில் அதனடைவு சேய்மையின் கண்ணூக்கப் பெற்றதேயாம். அற்றேற் பொருந்தமுடையதேயாம் விஷ்ணுவின் ஐசுவரியத்தால் உபாதிதருமந் தீண்டாமை, ஜீவன்பாலோ நீரிரவினியாயத்தானே உபாதியினது தருமந் தீண்டல் நீக்கத்தகாததாம் எனக்கடாவவிடையருளுவீர், அக்லேத்ய

மென்றார். அக்லேதய்ம் பூபபுவனே ரசோஷ்யம்மாருதே ஈச என்பது:— நீரிரவியினிடத்தில் நடுக்கம்போலத் தேகியின்மா ட்டுத்துயரமுதலியவை தோன்றுகின்றன என்றாலும் அஃ துண்மையாகாதாம்; உபாதியுபகிதங்கட்கு வர்ஸ்தவசங்கமின் மையின். "சங்கமங்கியவதற்குச் சசங்கமதோடுந், துங்ககூடத் தன் றனக்கு விகாரியதோடும், பொங்குதா னெனும் பொரு ளுக்குத் தானலாதோடும், இங்கு வாத்தவயோகம தெய்துவ தில்லையே." எனவும் இயம்பப் பெற்றுளது. இதனானே சூரியப்பிரதிபிம்பம் நீரா னுட்புகுதலாயினும் அவயவங்கள் கெட்டு ஆடி வாடுறுவதில்லை, அங்ஙனம் ஜீவனும் உபாதி தருமங்களான் விகாரப்படுவதின்றாம் என்பது பொருள். "துக்கியெனல் விக்கிரியை தொக்கிலது தொக்கா, சிக்குமது விக்கிரியை சிற் கரிமைசிக்கா, பக்குமதி விக்கிரியை பத்து பத்து பத்தே, யுக்கரிய விக்கிரியன் யான் மெய்யதனானே." என ஸ்ரீ சுரேசுவரவாக்கியமு முளதாம், யாவும்பிறழ்வதெனி னும் ஆன்மவஸ்துவே பிறழாதிருப்பதாம். துக்கிக்குச் சாக்ஷித்தன்மை யாங்ஙனம் அமையாது என அவாங்கழ அதன்பொருட்டுக் கூறியருளியதாமிது. துக்கித்தன்மை யென்பது விகாரித்தன்மையாம், விகாரிக்குச்சாக்ஷித்தன்மை பொருந்தாதாம். ஆன்மாவோ சருவ புத்திவிருத்திகளின் சாக்ஷியாம், அதனால் எல்லாப் பரிணாமங்களும் நீக்கப்பட்டே யிருக்கின்றனவாம். விக்கிரியத்தன்மை யின்றேலாயினும் யாங்ஙனம் துக்காதியுடைமையிலதாதல் எனின் ஆண்டருளு வர் துக்கியென. விக்கிரியை யுடைமையேற் றேடமருளு வார் சிற்கரிதை யென்றருளினார். சிற்சரிதை - சிற்சாக்ஷித் தன்மை. சாக்ஷி சேதனன் என்பதாதி சுருதிகளைப் பின் பற்றி முடிந்த பயன் மொழிந்தருளுவார், மதிவிக்கிரியைக ளாயிரத்திற்குஞ் சான்றேயான் என்றருளினார். துக்கித்தன் மை சாக்ஷித்தன்மைகட்கு ஓரிடத்திற் கூடாமைக் கேதுவரு

ளுவார் துக்கியென்றருளினார். பரிணாமித்தன்மையிலாது துக்கித்தன்மையின்றாம் என்பது பொருள். பரிணாமித்தன் மையிருந்தபோதினும் சாக்ஷித்தன்மை யாசங்கித்தருளுகின் றார் சிற்கரிமையென. அதனது ஜரீட்டியத்தன்மையானே அசாக்ஷித்தன்மையா மென்பதுபொருள். விகாரிக்கு அசா க்ஷித்தன்மை யமைவாகப் பயன்வந்ததென்னே யெனின்? மதிவிக்கிரியை யென்பதாம், பிரத்தியக்காத்மா நிர்விகார மாய்ப் புத்தியதன் விருத்திசாக்ஷியா யிலகு மென்றியம்பிய தாம். "உருப்பான்மை மற்றதனுக்கொருநாளு மின்மையான், செருப்பால் வெம்படைக்கலங்கள் சேதிக்கமாட்டாவா, னெருப்பால் வெந்தழியாது நீரானெக் கொழுகாது, மருத்தா லுஞ் சலியாது மற்றதன்றன் வகைகேளாய்" என்னும் ஸ்ரீ பக வத்வசனமும் ஈண்டுசிந்திக்கப்பாலதாம். இங்ஙனம் காற்றி னாலே நீர்வற்றப் பெறினும் நீரிரவிகாய்வதில்லையாம் ஆங்கே, ஜீவனும் உபாதி மொழிவுறுங்காலையில் மார்த்தாண்டனை மானும் உபகிதமல்லாத வடிவத்தானே நிகழாநிற்பன் என் பது பொருள். அவ்வாறே சக்தியும் அவ்வியக்தரூபமா யிருந்து வியக்தவதத்தானே வாதிக்கப்படுவதின்று மென்றரு ளுவார், அவத்யம் வத்யமாநேபிசரீரேஸ் மிந்நராதிப என்றரு ளினார். யாது வியக்தமாய் அழியத்தகுதியதாய்க் காரண மாமோ மண்பொன்னாதி அதுவும் கடகடாதி நாசத்தானே நாசமாகாதாம் என்றால் அழியத்தகுதியதாகாததாய அவ்வி யக்தம் அழியாதென்பதைப் பற்றியாது ஓதவேண்டிய துளது. (31)

(அ - கை.) இன்னணம், ஜீவன்முக்தாஹ்ருதேமக்நா: பரமானந்தபேணீ என்பதன்கண்ணே குறிப்பிக்கப்பட்ட பரம ஆனந்தம், விஷ்ணு சூரியசக்திகளாகிய பிரதிபிம்பங்க ளைக் குறித்துப் பிம்பபூதமாய சிவத்தினின்றும் அன்னியம்

கணபதியென வியாக்கியானிக்கப்பட்டது. ஜீவன் முக்தர் என முக்திப்பிரதியோகித் தன்மையானே குறிப்பிக்கப்பெற்ற பந்தமும் வியாக்கியானிக்கத்தக்கதாம். அவ்வாறே நீர் நிலா நடுங்குவதேபோலச் சீவனிடத்தில் துயரமுதலியவை பொய்யென அறியாத ஐந்து தேவதையினின்றுந் திரும்பிய மந்தனுக்குக் கதியையும் வியாக்கியானிக்கத் தக்கதாம் அஃதிரண்டும் தந்திரத்தால் வியாக்கியானிக்கப்படும், யாமிமாம் என்பதாதி மூச்சுலோகங்களானே.

𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌂 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 ।
𑌵𑍇𑌦𑌵𑌾𑌦𑌰𑌤𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 ॥ 32.

𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌪𑌰𑌾 𑌜𑌨𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌾𑌮𑍍 ।
𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑌹𑍁𑌲𑌾𑌂 𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 ॥33.

𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌮𑌾𑌧𑍌 𑌨 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥ 34.

34. மலர்வுறு மெந்தவிந்த மறையறை மொழியவாழ்த்தி
நலவிதிலயல தொன்றை நாடவுங் கூடார்மூன்றும்
பலமொழி மகிழ்வர் மூடர் பயன்பிறப் பிறப்பையீயுஞ்
சிலவினைநாளு மாள்வர் சேதன மிறந்தமாந்தர்.
போகமா மதியராகிப் பொலம்புரித் திருவைபோற்றி
யேகவர் தமதுகட்டைடந் தம்மிறைலெடுத்துக்கொள்வர்
மோகவச் சடராம்பேயர் மொய்வினைப் பரரேயாகிச்
சோகவிக்குடும்ப வாழ்வி சுழற்றுவர் சுழலா நிற்பர்.

(வி - ம்.) எவ்வில் வத்தியயனஞ்செய்பவராற் பிரசித்தமாய, வாசம் - வாணியை, சுருதீரிதாம் - தன்னானே பிரமாணபூதமாய வேகத்தானே புகலப் பெற்ற "நான்கு மாதசம்

பந்தயாக வான்கள் அழிவிலாத சுகிருதத்தை யடைவர்கள்" "சோமத்தை மாந்தித்துன்னுவோ மமிருதமாய்" என்பன முதலிய கருபலத்தைக் கெடாததெனப் பிரதிபாதிக்கும், புஷ்பிதாம் - மலர்ந்தகொடி மானதம்தொடக்கத்தின் மாத்திரம் இரமணீயமா யிருப்பதாய, கருமபலத்திற்கு அழியாதிருத்தல் அசம்பவமாதலின், விளம்ப விளையாத தற்பெர்ருளதாய என்பதுபொருள். அவ்வாறே யாது செயற்கையது அஃதநித்தியம் என்னுந் தருக்கத்தானே யனுக்கிரகிக்கப் பெற்ற சுருதியுமுளது "பண்ணிய தொழிறருபயன்களியாவையு, மண்ணிடை துகர்ந்திட மாளுமாறு போற், புண்ணிய வினைதரும் போகமியாவையும், விண்ணிடை யிருந்தனுபவித்து மீளுமால்." இரிவன வாகியாதி ஞலிவைகளிரு முரவற்றவாய் மகத்தின், உருவனவாகி யொன்பதொ டொன்பான்னுரையவர வரமாங்கருமம், கருமமிதுயர்வாய்க் கருதியெம்மூடர் களித்தொரு கரியினைக்கருதார், சரையொடு மரணந்தம்மையேயவர்கள் சாருவருவர் மறித்து மேமறித்தும்" எனக்கருமங்களினலே சமுசார நிவிருத்திகாணப் பெருமையான். இவ்வுலகத்தின் கண்ணே சுவாமி யாணையை யனுசரித்துச் சரிக்கும் அப்பிரஜைகட்கே சேவாதிகளாற் சம்பாதிக்கப்பட்ட பராதீன உபயோகம் அந்தமுடையதாவதே போல அவ்வுலகத்தும் அக்கினி கோத்திராதி புண்ணியத்தால் நண்ணிய பராதீன உபயோகம் அந்தமுடையதேயாம். ஞானமற்ற வினை மேலும் மேலும் வாசனைவயத்தாற் பிறப்பையே துயரையேதருதலின் அசாரமாம். கருமங்கள் அநித்தியங்கள் அஸ்திரங்கள் யாகவடிவங்கள், பதினாறு இருத்துவிக்குகள் பத்தினியஜமா னனுடன் பதினெண்மர் ஆவர். இவர்தமைக்கொண்டாம் கருமம், சாத்திரத்தாற் சாற்றப்பெறும், அவர் - பதினெண்மரிடத்தே அவரம்—கேவலம் ஞானவர்ஜிதம் கருமம். அவரகருமத்தைப் பற்றிய் அவர்

கவிழ்வர், குண்டடங்கவீழப் பாறயிர் கவிழுமாபோல, இதனை மேலாயதென எம்மூடர் மகிழ்வரோ அவர் மீண்டும் மீண்டும் ஜரைமரணமனுபவிப்பர் என்பதாம். த்ரயீ - மூன்று வேதங்கள், அவற்றின் மாட்டெவை கூறப்பட்டனவோ, வாதா - அக்ஷயபலப்பான்மை முதலிய அருத்தவாதங்கள், அம்மாத்திர நிஷ்டையுடையவர்கள் த்ரயீவாத ரதர்கள் ஆவர்கள்; இதனானே மூடர், மூடத்தன்மையினானே இதனினுமயலாகப் பேரானந்த சாதனமாய் உபாசனை வடிவமாதல் ஞானவடிவமாதல் பெரும்பயனிருப்பதாக, மங்வதே நெமனத்தினாலும் எண்ணமாட்டார்கள் என்பது பொருள். 32.

இதனானே வெகுவாயிலாய தருமத்திற்கு விபலக்கிரியை யீண்டிலதாமெனும் பாரதத்தில் எல்லாத்தருமத்திற்கும் விபலத்தன்மை யில்லையாமென விளம்பப்பெறும். அங்ஙனமன்றே—"கதிர் கருகக் கதிர்முதிர் காமன் காரீரியால்வேட்டக" என்பதாதி சாஸ்திரம் விதித்த திருஷ்டபலகாரீ ரியாதி தருமம் திருஷ்டபலத்தை யுடைய பலபொருனட்ட கட்டத் தாற் சாதிக்கத்தக்க வினைகளில் விசுவாசம் உண்டாக்கற்குப் பொருந்தும். அவ்வாறே துறக்கத்தையே பலமாகவுடைய தருமமும் சிறந்த தேகத்தை யடைவிப்பதாதலின், சிறந்த தேகத்திற் கருவிற்கு சத்துவ மேம்பா டாதீனத்தன்மை யுண்மையின், சத்துவமேம்பாடும் வைராக்கியாதி யேதுவாம் பரம்பரையாக முக்தியேதுவாம். இதுவார்த்திகத்தின் கண்ணும் வழங்கப்பெற்றுளது:—காமியத்தினுந் தூய்மையதுள்ளதே கணிக்கிற், யோமப் போகத்தின் சித்தியின் பொருட்டேயதுவும், சிமலப் பன்றியாதிய தேகத்தினாலே, ஏமவிந்திரப்தப் பலமயிலுவதிலையே. நித்தியங்களிற் சுத்தியின் முக்கிய நிகழ்வான், அத்தடையிலை யாதலிற் யோகமுமமையும், புத்தி சுத்தியின் பொலிதருமனுசரப் புரிவான், வைத்தயோ

கத்தைப் பங்குரமெனக் கண்டு வாடார்." தூய்மை முக்கி யீத் தன்மையுண்மையின் எனக்கூறுபவராய்க் காமியத்திலும் தொடர்ந்துள்ளதாய அதை யங்கீகரித்தவரே யாவர், மாறு பினே முக்கியதம் முரணுறுதலின், அதைக்கூறுகின்றார்:காமி யமென, அதுவும் நித்தியாதி நிமித்த சுத்திபோல வித்தை யுபயோகியாமாங்கொல் லெனக் கடாவிவிடையிறுவார், யோகமென்றார். றேற்ற ஏகாரம் யோகத்துக்கு தடைவிலக் கற்பொருட்டாம், தூய்மைக்கு யோகப்பொருட்டாந் தகை மையை யனுபவத்தாற் சாதிப்பார், சீமலவென்றார். வரா காதிவபுவிற் மதிசுத்தியிலதாம் ஆகலின் அதனுற் புருடன் இந்திராதி யோகமனுபவியான். தெய்வசம்பந்தமான தேகத் தானே மிகுந்த தூய்மைமேவலானே அதனுப போகவாக்கிய மாமென்க. நித்தியாதி கருமங்கட்கு பாவந் தீர்தலினும் வேறு பயனே யுடன்படில் அப்போகத்திற்குத் தூய்மைத் தடையுண்மையின் அது ஞானத்தை யுண்டாக்கமாட்டா தாம் என வினவவிடைதருவார் நித்தியமென்றார். அவற்றிற் பிதுருலோகாதி யோகம் உண்டான போதினும் தூய்மைக் குத் தடையிலதாம். அதற்காண்டு முக்கியத்தன்மை யுண் மையின், அது பிரதானமாக விருந்துகொண்டு யோகத்சுத அணுகுணமாக்கும், அற்றேல் நித்தியாதிகளில் தூய்மை யோகங்கட்கு ஒப்பேயுளதாகுக, தூய்மையின் முக்கியத்தில் ஏது காணப்பெறுமையின். ஆகலின் ஆண்டு தூய்மையோ கத்தையேனும், யோகந் தூய்மையையேனும் தடைப்படுத் தாதாம் எனின்? கூறுவார், புத்தி யென்றார். தூய்மையா னது விவேகவாயிலாக போகவைராக்க வேதுவாம்.என்க. (33)

அற்றேல்வைதிககருமங்கள் பரம்பரையாகமோக்ஷஹே துக்களாதலின் பந்தத்தைக் கொடுப்பனவெனக் கூறுவது பொருத்தமற்றதே யாமெனின்? உண்மையே கருமாதிகாரி

கள் மூவிதமாவர், ஒருவர் இழந்த அறிவினர் முற்றினும் மூடர் தாமதர் பரலோக வார்த்தை யறியாதவர், பரலோக மேனும் பரலோக சாதனமேனும் பாலனுக்கும் பிரமாதத் தோடு கூடியவனுக்கும் சித்தலோபத்தான் மூடனுக்கும் தோற்றுவதின்றாம், இவ்வுலகமு மில்லை யென்றே யியம்ப லாம். அதனையே யருளுகின்றார், குர்வந்தியென. மற்ற வர் இகலோகத்திய பரலோகத்திய இன்பமேங்கியர் அவர் யோகபுத்தியராய இராஜதர் சுவர்க்கை சுவரிய ரதர் எதனால், "மானி மீண்டும் மீண்டும் வசம் அடைவன் யாவன்" என் னுஞ் சுருதிப்பிரசித்தர். அவர் வைதிகங்களாய சேனுதிக ளென்னும் சத்துருவதாதி பயனுற்ற யாகங்களில் எப்போழ் தும் முயல்பவராகிச் சனனமரண பரம்பரையையே யடை வர்; சேனுதிகட்குப் பலவாயிலாய் அநர்த்தஹேதுத் தன்மை யுண்மையானே தருமத்தன்மை யின்மையாதலின். "கரும மென்றெது கால்பலனுனுமே, வருமமான வார்த்தத்தை வார்த்திடா, வருமையா மன்பினே துதையாதலிற், றருமு மென்றது சாற்றிடலாகுமால்" எனக் கூறவும் பட்டுளது. யயாதி நகுஷர்முதலாயினர் இரஜப்பரிணமத்தினால் சர்வபூத அபிமானத்தாலும் பரதார ஆசையாலும் தம்மானேயே தமக்கு பந்தனத்தையும் கீழ்வீழ்தல் வடிவத்தையும் திரியக் கயோனியிற்புகுதலையும் சம்பாதித்தார் என்பது பாரதத் திற் பிரசித்தமாம். ஆகலினிஃதருளப் பெருகின்றது. சுவர்க் கைசுவரியாதியால் உபசங்கரித்தருளுகின்றார்: சமுசா ரமென், ஜடர் — மேற்கூறப் பெறும் எமது கருத்திற்கிசைந்த கரும யோகத்தை யறியாதவர், சமுசாரசக்கிரத்தை, வுஞ் சந்தி — எப்போதுஞ் சுழற்சிச் சுழன்று கொண்டே யிருப் பர். வைதிக கருமபரர்களே யாயினும் முக்திவாயிலை அடை யார் என்பது பொருள். வெகுவாயில் என, யோகம்பங்கு ரும் என முதலாய பாரதவார்த்திக வசனமோ சாத்துவிக

தரும அபிப்பிராய மென யாதொரு கோதுமிலதாம். "தெளி பவருணர் வொன்றே தெளிவிலருணர் வோதிற்றளிர் நிகர்பல வாகுந் தருபயனது மேவு, மொளிமறை நெறிமேலா முணர் பொருளெனவோது, மளியவர் தெளியாதா ரனையலதறியா ரால். புண்ணிய வுலகத்தே பொருண்முடி வெனவைப்பார் மண்ணியல் பிறவிக்கே வரும் வழி நெறிநிற்பார், பண்ணிய வினைகட்கே பயனினைபவர் தம்பா, லுண்ணிய பொருள்செப் பார் நுணுகிய வறிவுற்றோர்." என்னும் ஸ்ரீமத் பகவத் வசனத்தைப் மீண்டுதாகரித்துக்கொள்க. (34)

(அ - கை.) இவ்வண்ணம் தாமதம் இராஜதமுமாய கருமம் வேதத்தில் விளம்புற்றதாயினும் கட்டுப்படுத்துவ தென வருளப்பெற்றது, இப்போது ஹித்வாஜ படலம் என மாயையைப் பற்றியே வைராக்கியாதி யுற்பத்திவாயிலாகப் பிரஹ்மம் அடையப் பெறும் என யாதருளப் பெற்றதோ அதனை விரித்தருளுகின்றார் சாத்துவிக கருமயோகதரிசனத் தால் யஸ்யயத்விகிதம் கருமமென்பதாதி ஐந்து சுலோகங் களால்:—

யஸ்ய யத்விஹிதம் கர்ம தத்கர்தவ்யம் மதர்ப்பணம் ததோஸ்ய |
கர்மபீஜானாமுச்சின்னா: ஸ்யுர்மஹாங்குரா: || 35

எவ்வினையெவன்றனக்கிங் கியற்றுமாறேவியுள்ளேஞ்
செவ்விதினதனை யாற்றிச் செலுத்துக வெம்பானம்பி
யவ்வகையமைக்க வன்னோருவினை விரைகள்காலூ
மொவ்வரும் பெரியவாயமுளையெலா மொழிந்துபோமே

(வி - ம்.) உள் வெளிப் பொறிகளை யொடுக்கல் ஏன்ப தாதியாக இந்நூன்முடிவிற் புகன்றருளப் போமுறையாய், யஸ்ய - பிராஹ்மணாதி வருணத்திற்கேனும் கிருகஸ்தாதி யாசிரமத்திற்கேனும், யத்விஹிதம் - சுருதிஸ்மிருதியாசங்களா

னே, எக்கருமம் விதிக்கப்பெற்றுளதோ, தத் = அதனை யனுட்டித்து எமதர்ப்பணஞ் செய்யத்தக்கதாம். அர்ப்பண மென்பது, அர்ப்பிக்கப்படுகின்றது இதனாலெனக் கரணவிற் பத்தியினாலே அர்ப்பணசாதனம் மனமாம்; அர்ப்பிக்கப்படு கின்றது இதன்கண்ணென அதிகரணவிற்பத்தியினாலே அர்ப் பணஸ்தானமும் ஆம். ஈசுரார்த்து ஏவுதலினாலே செய்யப் பட்ட கருமம் ஈசுரரிடத்தே அர்ப்பிதமாகுகவெனச் சகல பூலத்தியாக பூர்வகமாகக் கருமம் செய்யத்தக்கதா மென்பது பொருள். தத் = இத்தகைய கருமஞ் செய்தலானே, இத னைச்செய்பவனுக்கு, கருமபீஜங்களாய வாசனைகளின் பேரங் குரங்கள் = மகாபலக்காரிய ஆசைகள் இஃதெனக்குள தாகுக இஃதெனக்குளதாகுக வென்னும் மனோரதங்கள் பல பரியந்தம் முயற்சியை யுண்டாக்குவனவா யுள்ளவையொழி ந்து செல்வனவாம்.

(அ - கை.) அதனால் என்னேயெனின் அறைந்தருளு கின்றார்.

ஶ்ரீதஸாத்விஸஹேதீவிஜ்ஞாநவஸாயிகாஹவெகூ,
விஜ்ஞாநேந ஹிவிஜ்ஞாதம்வாஸம்ஸூஹஊ்நீஸஂஶொ: (36)

சித்தத்தின் றாய்மை தானுஞ் செறிதரும் பெரிது விஞ்ஞா, நத்துக்கு மேது வாகு நல்லுணர் வீதனா லன்றோ, சித்தத்வ மேலா மெய்மைச் சிவணியே யறிந்து வாழ்வர், சித்தத்தின் சுற்றல் செற்ற சீர்முனிக் கணங்க டாமே.

(வி - ம்.) இங்ஙனம் வினைகளை எமக்கருப்பித்துக் கொண்டுவருபவனுக்கு மக்த்தாய மனத்தூய்மை மருவும் இஃதெனக்குண்டாகுக வென்னுங் காமம் உதியாதொழியவே விருப்புவெறுப்புமுதலிய குற்றமற்ற வுள்ளம் யாமருளிய யோகஅனுஷ்டான.யோக்கியம் ஆம். உம்மையானே சுத்த

மாயசித்தத்தில் எமது விடயமாய அறியும் வேட்கையும் விஞ்ஞானமும் அக்கரும அர்ப்பண யோகத்தானே யுண்டாமெனத் துணிந்துகொள்க அங்ஙனமன்றே: "எவனுக்கிந்நாற்பத்தெட்டுச் சமஸ்காரங்கள் உளவாமோ அந்தப் பிராஹ்மணன் சாயுஜ்யம் சாலோகத்தன்மை யடைவன்" என்னும் ஸ்மிருதியினானே கருமங்கட்குச் சித்தசுத்திரூப சமஸ்காரமாத்திர அருத்தத்தன்மை யறியப்பெறும். அதன்பொருட்டே யாவனவாயினும் அவை இயைபுபற்றிச் சுவர்க்கரூப பலத்தையும் தருமெனத் தெரிகின்றது.

"இங்குமாங் கனியை யெய்வா னெழில்விதை யிட்டானுக்குத், தங்கிட நிழலு மன்றித் தனிமணந் தானுஞ் சாரும், செங்கன்றின் சேர்க்கையானே செப்பிலித் தருமமாங்கே, துங்கமாய்ச் செய்வா னுக்குத் துகளறு பயன்கள் நல்கும்."

என ஆபஸ்தம்பர் கூறிய மாத்திருட்டாந்தத்தானென்க.

"பூதபதிபூத பாலனுலகூடு போகமுடியாத தானதோர்,
சேதுமெனுமீச னைவனேமேவ தேடிவழிபாடு மேவியே,
வேதமொழியாலும் வேள்விபலவாலு மேவுதவதானபூசையே,
யாதிவழியாலு மாதரவினாலு மாயுமுனி ஞானி யாகுவான்."

என்னுஞ் சுருதியானே வேதானுவசனாதியாய பிரஹ்மசாரி தருமங்கட்கும், யாகதானாதியாய கிருகஸ்த தருமங்கட்கும், தவம் பூசை காமநீக்காதியாய வானப்பிரஸ்த தருமங்கட்கும், ஆன்மாவையறியும் அவாப்பொருட்டாந்தன்மை இவ்வாக்கியத்தினானே யறியப்பெறலாம். வாசியாற்செல்வன் வசியால்வெல்வன் என்பதேபோலக் கரணத்திற்குப் பகுதிப்பொருளோடும் அன்வயமாதலின், கருமங்கட்கு வித்தையின் பொருட்டாந்தன்மையும் உணரப்பெறும் எனமுதலதொடு மூன்றுபக்ஷங்களாம், ஆண்டுக் கருமங்கட்குச் சமஸ்

காரகத்தன்மைப் பக்கத்தில் விவிதிஷாதிகம் சற்சங்காதி பலமாம், விவிதிஷார்த்தத்தன்மையேலோ (விவிதிஷை = அறியுமவா) சிறந்த தேசிகராதிலாபம் தன்முயற்சிசாத்தியம், வித்தைப்பொருட்டாந் தன்மைப்பக்கத்திலோ திடையொன்றுமொன்றுது வித்தைலாபம்வரை கரும அபூர்வமேவியாபாரிக்கும் எனச்சிறப்பாம். இதேபக்ஷம் எமதபிமதமென்னக் கூறியருளப் பெறுகின்றது விஞ்ஞான சாதிகையென. விஞ்ஞாநேந — வித்தையால், விஞ்ஞாதம் = சாக்ஷாத்கரிக்கப்பட்டது. இதனுனே யுத்தரார்த்தத்தில் தம்பக்கத்திற்கே நன்குரியதாந் தகைமை காட்டியருளப்பெற்றதாம். (36)

(அ - கை.) அருளிய சொரூபபலத்தோடுற்ற கருமயோகத்தை யுபசங்கரித்தருளுகின்றார் :—

தஸ்மாத்கர்மாணி குர்வீத புத்3தி4யுக்தோ நராதி4ப
நஹ்யகர்மா க்வசித்கோபி ப4வேத்3 தா3மவாஸ்த3யா

ஆதலிற் ஒழிவிலேயே யறிவுசார்ந்தவன், கோதறக் குயிற்றுக குலநராதிப, மேதினி வினையிலா னெவனு மேவிலான், ஆதன தருமமே யகற்று வானரோ.

ஆ= அவ்வாறு வினைசெய்யாது வாளாவாழ்வனேல்,

(வி - ம்.) எதனுல் இங்ஙனம் அதனுல், புத்தியுக்த:— அதனையனுட்டித்து எமதர்ப்பணம் செய்யத்தக்கதாம், என எம்மாலியம்பப்பெற்ற புத்தியோடுகூடியவன் விஞ்ஞானகாமன்சாத்விகமான கருமங்களைச்செய்க. சொரூபமாகக் கருமத்தியாகஞ்செய்யின் தோஷமருளல்: அகர்மா = கருமஞ்செய்யாதவனுய், கோபி — எவனும், நபவேத் = இருக்கலாகாது. விதித்தவினையை எல்லாவற்றுனுமே விடுதல் கூடாதாம் என்பது பொருள். மறுபக்கத்திற் றேடமருளல்: தயாஸதி=

கருமத்தியாகம் செய்வானாயின், தன் தருமத்தியாக வரானுவன், விதித்ததைச் செய்யாதொழியின் வெகுவித துன்பிற் காளாவன் என்பதாம். அங்ஙனமே மிருதியும்:—காலையின் முழுகுதல் கட்டுக்குமேழுநாண், மூலையிற் சந்தியை முடக்கு மூன்றுநாள், ஆலுமகக்கினி யாறு மாறுநாள், சீல மிறுவி ஜன் சூத்திரத்வஞ்சேர்வனே. என்பதாகக் கருமத்தியாகத் திற்கு ஜாதிக்கேடு செய்யுந்தன்மையை யறைகின்றது. நராதிப = சம்போதனம், நரர்செய்யும் நன்மைக்குநீயே காரணமாதலின் நன்மையே எம்பொருட்டுச் செய்தியென்றதாம்.

(அ - கை.) இதனை யியம்பியருளல்.

ஜஹாதியதிகஉ-ர்ாணி-தத꞉ ஸிஜிம்-நவிᳲஉ-தி
குஉளஜ்ஞாநெந-நாயிகாஶ꞉ கஉ-ர்ணேவஸய-ஜ்ஞநெத.

வேதநல் வினைகளை விடுத்து வாழ்பவன், போதருஞ் சித்தியைப் பொருந்து றானவன், ஆதியிலுணர்வினி லமைவதாகுமோ, தீதறு வினைகளே செய்யவேண்டுமால்.

(வி - ம்.) இவன் பிரமாதத்தான் மனத்தூய்மை வாராதவனாயிருந்தும் கருமங்களை யதிஜஹாதி=விடுவனேல், தத꞉ அத்தகைய கருமத்தியாகத்தால்;சித்திம்=சங்யாசபலயோகத்தை, நவிந்ததி = அடையமாட்டான் ; மாறாகவோ, பெருந் துயரையே பெறுவன். அற்றேல், பூரணவுணர்வைப் பொருந்த விரும்பினோன் சமாதிவாயிலாய கேள்விமுதலிய ஞான சாதனங்களையே அனுட்டிக்கவேண்டும், இவனுக்குக் கரும அனுட்டானத்தானே ஆகவேண்டியதென்னே! "மனந்தனி னன்பினை மருவி மாண்புற, அனுந்தனிக் குருபணி யுறுவதாகிய, தினந்தின மறைமுடிச் சிவணத் தாற்பய, னெனுந் தனக் கிருச்சிர மென்பதாகுமே" என்னும் மிருதியினுமே.

சிரவண ஜன்னிய கருமத்தாற் சித்தசுத்தியும் சம்பவித்த வான் எனின்? அருளுகின்றார்: ஆதியில் கருமம் ஆற்றாத வனுக்குக் கருமபலபூதமான அறியும் வேட்கையான தின்மை யின் வித்யாசாதனத்திற் பிரவிருத்தி யசம்பவமாதலின். உற் சாகமாத்திரத்தானே சிரவணதியின்மாட்டு முயன்றானுக்கு விதிசம்பந்தமாயினும் பலப்பொருட்டாகாதாம், மலடிமணாள னுக்கு இருதுவிலில்லாள்பா லெய்துகவென்னும் விதியாற் கிடைத்த உபகமன பலம்போலுமெனவுணர்க. அங்ஙனமே "கேள்வியினும் வெகுபேர்க்குக் கிடையாத வத்துவிது, கேட்டபினு மளவிலர்க்குக் கிட்டாத வத்துவிது" கடசுருதி யுங் கழறுகின்றது. பொருள்:—அநேக ஜன்மார்ஜித சுகிரு தப் பிரசாதத்தாற் கிடைக்கப்பெற்ற சுத்தபுத்தி யாவன் காமாதிவிமுகனாய் நிரதிசய புருடார்த்தப் பிரஹ்மத்தைத் தன்வடிவானே யறிவனோ, ஆயிரக்கணக்கருள் நசிகேத ச திருசன் அவன் ஒருவனேயாவன். எவ்வேதுவினாலெனின்? அநேகருக்குக் கேட்பதற்குங்கூடக் கிடைப்பதின்றாம் ஆத் மா: சிரவணத்திற்குத் திருஷ்டபலத்தன்மை யுண்மையின் நிர்விடயத்திற்கும் சாக்ஷாத்கார அஜனகத்தன்மை யுண்மை யின், ஜனிதத்திற்கும் பிரதிபைப் பிரத்யயம் போலும் பிராந் தித்தன்மை யுண்மையின் ஆத்மா அவிடயமேயென அங்கீ கரிக்கத்தக்கதாம் என்பது கருத்து. சிலர்க்குக் கேட்பதற் குந் துர்லபம், சிலர்க்கோ கேட்டபோதினும் அறிவதற்குத் துர்பலம் எனல்: கேட்டபோதினும் வேறுபகுபேர் எவ்வான் மாவை யறிந்துகொள்வதே யில்லையோ, காரணம் பாக்கிய மின்மையின், பாக்கிய மிருந்தாலன்றோபழமறை மொழிந் திட்ட வாக்கியங் கேட்குதல் கூடும்.

ஒருவனென்றுங் கண்டறியா ததுகண் டாற்போலுணர்ந் திருக்கு, மொருவ னென்று" முரைத்தறியா ததனை யுரைத்

தாற்போலுரைக்கு, மொருவனென்றுங் கேட்டறியாதத னைக்கேட்டாற் போலுவக்கு, மொருவனென்றுங் கேட்டானு மறியானிந்த வுண்மையினை என ஸ்ரீ பகவானும் அருளியுள் ளார். நித்திய நைமித்திகங்களானே சம்ஸ்கரிக்கப்படாத அந் தக்கரணத்தை யுடையவராதலின் அறிவற்கெங்ஙன் கூடும்? கூடாதாம். • எதனைக் கேட்பவரும் அறிபவரும் துர்லபரே? அதனால் எவனோ ஒருவனே யதிகாரி யாவனென்றுணர்க. ஆகலின், ஆதௌ = கரும அனுட்டானத்தினும் மூன்கரு மத்தின்கண்ணே அதிகாரங்கூடும் ஞானத்திலில்லையாம். ஜட பரத விதுர தரும வியாதாதியர்க்கு அதிகாரமின்மையி னானே கமருஞ்செய்தல் காணுமலே உணர்வினுதயங் காணப் படுதற்கு ஜன்மாந்தரீய தரும அனுஷ்டானம் கற்பிக்கலா மெனத் தோடம் தொடராதாம். சாஸ்திர சமர்ப்பித சாத னத்தன்மைக்குப் பிறழ்ச்சியுறுதல் கூடாமையின். (38)

(அ – கை.) தாமருளிய புத்தியோகத்தைப் பலசூசித மாக உபசங்கரித்தருளல் :—

கர்மணா ஶுத்தஹ்ருதயோ(அ)பேதபுத்திமவாப்நுயாத்,
ஸ ச யோகோ மஹாஸாத்யோ(அ)ம்ருதத்வாய ஹி கல்பதே. 39

தொழிலினா னறுந் தூயவிருதய னெழிலபேதமதியினை யெய்துவான், மொழியெமா லினி தாகுமவ் யோகமு, மழி விலா வமு தப்பொருட் டாகுமால்.

(வி - ம்.) அபேதபுத்திம் அம்ருதத்வாயவெனப் பிரித் துக்கொள்க. "தன்மத்தாற் பாவத்தைத் தள்ளிவிடுகின்றான்" என்னுஞ் சுருதியினானே சர்மணா = தன்றரும அனுட்டா னத்தானே, சோதிக்கப்பெற்ற சுத்தஇருதயத்தை யுடைய வன், அபேதபுத்திம் = ஜீவப்ரஹ்ம ஒருமையுணர்ச்சியை,

உபநிடதங்களினுல், உபைஷ்யதி = அடைவன் = நீட்சி யின்றியே நேர்வன். ஆகலினுனே எம்மால் முன்னர் எப்பூர மாநந்தத்தை யடைவிக்கும் யோகம் இனிதியம்பப்பெற்ற தோ, ஸ வ் = அதுவும், அபேத அறிவின் இலாபத்தின் முன் அனுட்டிக்கப்படுவதாயினும், ஆன்ம வொருமைஅறிவு உதயமாகியவழி, அமிருதத்வாய = கைவல்யத்தை யீயும் பொருட்டு, கல்பதே = சமர்த்தமுடையதாம். சிரவணத்தின் முன்னர்ச் சமாதி மத்தியில் யோகம் அனுட்டிக்கப்பட்டிரா தாயின் அக்கால், நிதித்தியாசன பரிபாகரூபமாய அதுவே, அமிருதத்தன்மையின் பொருட்டுக் கற்பிக்கப்பெறும். இவ் விரண்டனுள் முதற்பக்கத்தில் ஆன்மா வுபநிடதமொன்ற ஞலேயே யுணரப்பெறுவதென வுரைத்ததாம், "அவ்வுப நிடதமுரைக்கும் புருடனைப்பற்றி யுன்னை யுசாவுகின்றேன்", எனவாம்; இரண்டாவதுபக்கத்தில் மனோமாத்திரத் துணரப் பெறுவதாம், மனத்தினுனே யிதுமருவுறத்தக்கதெனவாம்.

"விடலரும் வகை யிற்றும் வினைப்பய னது விட்டே, கடவிய வினை முட்டா வகைசெய்து கழிவுற்றோ, னுடலொ டிவ் வுல கத்தே யுளனென நிகழ் பெற்றே, யிடரினை யற விட்டா னெனையறி வகை பெற்றான்" என்பதாக ஸ்ரீ பகவா னும் இப்பொருளை யருளியுள்ளார். (39)

(அ - கை.) ஆகலின் இங்ஙனம் சங்கபலத்தியாக வாயி லாய்த் தன்றரும அனுட்டானம் புத்தியோகமாம், அதனது பயன் புத்திப்பிரசாதமாம், தெளிந்தமதியின் மாட்டுப் பாவ ஞ்யோகம் புரியப்பெறுமென அதனையறைந்தருளப் பிதிஞ் ஞை செய்தருளுகின்றார் யோகமந்ய மென்னும்ஆறால் :—

யோகமந்யம் ப்ரவக்ஷ்யாமி ச்ருணு பூப ததுத்தமம்,
பசௌ புத்ரே ததா மித்ரே சத்ரௌ பந்தௌ ஸு
ஹ்ருஜ்ஜநே. (40)

வினவுதிவேறுயோகம் விளம்புதும் விரித்துப்பூப, உனு வெணைப்பசுவின்பாலு முதிளையவர்தம்பாலும், நனிவரு நேயர் பாலு நாடிலரவர்தம்பாலும், எனவுறவினர்கள்பாலு மினி யவைசெய்வோர்பாலும்.

(வி - ம்.) பசுபுத்திராதிகளில் எம்மைப் பார்க்கவேண்டுமென்று, சமோமாம்என்னும் நான்காவிதன்பாலுள்ளமாம் என்பதனோடு அந்நுவயமாம்; பார்ப்பதன் பயனே இன்ப முதலியவற்றை ஒப்புறுக வென்பதாம். ஹேபூப! இச்சம் போதனம் நீபூமிபாலகனுதலின் முன்கயோபூமியைக்காத்து இவ்வுத்தரபூமியைக் காப்பான் வருதல்எளிதென்பது தோன்றவாம். கருமயோகத்தைக்குறித்து உத்தமம் = உத்தமமான அன்னியம்யோகம் = சமமுடைமைப் பாவனுரூபம், ப்ரவக்ஷ்யாமி — இனிதியம்புவேம், தம் = அதனை, நீ, ச்ருணு கேட்குதி. பசௌ = கோகுதிரைகளில், புத்ரே = ஆண் குழந்தையினிடத்தும் பெண்குழந்தை யினிடத்தும், மித்ரே = உபகாரியினிடத்தும், சத்ரௌ = அபகாரியினிடத்தும், பந்தௌ = வித்யாயோநி சம்பந்தவான்களாய ஆசார்ய மருமகனுதியர்மாட்டு, சுஹ்ருஜ்ஜநே = உபகாரத்தைக் கருதாமல் எல்லா வுயிரிதகாரிகளாகிய ஜாதுஜனங்களிடத்தில்என்பதாம். (40)

(அ - கை.) இவைகளினிடத்தில் யாங்ஙனந் தேவரீரைக் காண்பதடியேன் என ஆசங்கிப்பஅருளல்:—

பஹிஶ்சாந்தஶ்ச யா த்ருஷ்டிஸ் ஸமயா த்ருஶ்யதே யதா
ஸுகேது:கே ததாऽமர்ஷே ஹர்ஷே பீதௌ ஸதா ஸமோ
ஸ்யேவம். (41)

க. பன்னுவெளி மனந் தனிலே சமமான பார்வையினால்
உன்னிடுக வென்றனையே யொன்றுபட வுயர்வுறுவோன்
மன்னுசுக துக்க மொடு மாச்சரிய மகிழ் பீதி
யென்னுமிவை யெழும் போது மிருந்திடுக வொப் பாயே.

(வி-ம்.) எம்மினின்றும் எரிநீர் என்பதாதிவசனத்தானே ஈசனிடத்தினின்றும் உண்டானயாவும்ஈசனே, என்னும் அபேதபுத்தியினானே, ஆதித்தியாதிகளில் அதேசமதிருஷ்டி. பகிர்=பாகியமாம்,(வெளி)ஹ்ருத்ஸ்தயாசசமயாத்ருஷ்ட்யா= உள்ளேயுள்ள ஒப்பானபார்வையானே, இப்பசுமுதலியவை எம்மனோமாத்திரகற்பிதங்கள் எம்மினும் அயலாயிரா என்னும் இவ்வடிவினதாய உட்பார்வையானே பிரத்தியேகாத்மாவாகிய எம்மையாண்டும்காண்க. அங்ஙனமே:—ஈசன் சீவகலை தொடுமேய்ந்தனன், பாசமற்ற பகவானிவையென, நேசமுற்று மணிற்றண்டநேரதாய், நீசன் கோபரிமுன்னமநேர்கவே. " என்று மிருதிமிழற்றுகின்றது. சுருதியும் "ஆன்மாவே யிவையாவையும் எவ்விவ்வான்மா" உளது, இதுவத்துவின் நிலையாயினும் பேததரிசனப் பிரபலத்தன்மையானே பாவனைத் தன்மையால் விதிக்கப்பெறுகின்றது உள்ளேயுள்ள என்னுமிவ்வம்சத்தால். இதனது பயனையருளல்: சுகே=அநுகூலமென வுணர்வதிலும், துக்கே=பிரதிகூலமென உணர்வதிலும் அமர்ஷே=பரர் தம்மேன்மையைப் பார்க்கப் பொறுமையிலும், ஹர்ஷே=இஷ்ட லாபத்தானுளதாய மநோல்லாசத்திலும், பீதௌ=தன்னையழிக்குஞ் சங்கையிலும், உற்றவுற்ற

போது, சமோ = நிருவிகாரமாய், பவேத் = நிலையுற்றிருக்க வேண்டும். (41)

[illegible]
[illegible]

ஆமயமணுகும் போது மருந்தன்முன் பொருந்தும் போதும், நேமிய சயநேர்ந்தாலு மபசய நிகழ்ந்திட் டாலும், மாமன்னு மன்னுப்போது மாழைபெற் றற்ற போதும், ஆமிரு தியதாம்போது மமைவுறச் சமம தாயே. (42)

(வி-ம்.) ரோக := சூலாதி, போகோ = போகசாதனமான திவ்ய வனிதைமுதலன, இவை யடைவுறும் போதும், ஜயே = போர் முதலியவற்றில் மேம்பாடுற்றபோதும், அவிஜயே = தோல்வியுற்ற காலத்தும், அபி, வ, என்னும் பதங்களானே தட்ப வெப்ப புகழ்ச்சி யிகழ்ச்சியாதிகளிலும், ஸ்ரீயோ = இலக்குமி கைவிட்டபோதிலும், யோகே = உற்றபோதிலும், லாபே = வருத்தனத்திலும், அலாபே = முயன்றபோதினும் பலமிலாவழியும், ம்ருதௌ = இறப்பிலும், அபிசப்தத்தானே ஜரையிலும், அதுதந்த குருட்டுத்தகைமை செவிட்டுத்தகைமையாதியிலும், உற்றவுற்றபோது சமமேயுறுக வெனப் பொருத்துக. (42)

(அ-கை.) யாங்ஙனஞ்சமமுண்டாமெனச்சங்கிப்ப அருளுகின்றார்:—

[illegible]
[illegible]
[illegible]
[illegible] 43

[illegible]
[illegible] 45

க. உள்ளாயும் வெளியாயு முண்டாகி யெப்பொருளி
னுள்ளுடுங் கலந்தவெவைடி, யுண்ணுேக்கி யொப்புறலாம்
அள்ளுதை யருக்கண்மதி யம்புவன்னி யன்னைபிதா
தெள்ளுறும் பெரியநதி தீர்த்தமடுத் திரிநாலோன்.

அகமகற்றுங் கேத்திரமா லனைத்தமர ரியக்கராத்
திகைமநுடர் கந்தருவர் திரியக்குப் பிறப்பனவே
தொகுமிவற்றி லெந்தமையே சந்ததமுந் தொழுநேர்க்கு
மவன்போகமறிந்தவனென் றுகமங்க ளறைதருமே.

(வி - ம்.) அந்த: ஸ்திதம் = மனோமாத்திரையால் தன்தன் மனோரத சுகதுக்கரூபத்தானும், பஹி:ஸ்திதம் = எல்லாபௌதிகரூபத்தானும் இருப்பதாகி எல்லாவஸ்து சாமானியங்களினும் உண்மையுருவமாகத் தொடர்ந்திராநின்ற அதனைத் தரிசித்துச் சமத்தை யடைந்திடுக. வஸ்துசமுதாயங்களையே தாமேயருளல் : சூரியன், சோமன், ஜலம், வன்னி = தீசிவன், சக்தி, காற்று, இருபிறப்பாளான், மடு, மகாநதி தீர்த்தம், பாவத்தைத்தீர்க்கும் க்ஷேத்திரம், விஷ்ணு, சர்வதேவர், இயக்கர், நாகர், கந்தருவர், மநுடர், பசுபக்ஷியாதிகள். எங்ஙனம் பொன்மயமாய சுர நர திரியக்குப் பிரதிமைகளில் காஞ்சனத்தன்மை சமானமாமோ, அங்ஙனம் சூரிய சோம சத்துரு மித்துரு பரி பன்றியாதிகளில் சர்வ உபாதானபூதமாய பிரஹ்மம் சமானமாம் என்னும் வடிவ எவ்விடைவிடாத மதியுளதோ அதுவே பாவனுயோகமாம், அதனையுடையவன், புத்தியோக முணர்ந்தவனைப்பார்க்கினும் மேன்மையான யோகமுணர்ந்தவ னென்பதாம். 43-44-45

(அ-கை.) இவ்வண்ணம் யாவனுக்கெக்கருமம் விதிக்கப்பெற்றுளதோ, என்பதாதியான சுலோகபஞ்சகங்களானே புத்திவிசேடப் பிரதான சாக்தயோக மருளப்பெற்றது; அவ்வண்ணமே, வேறுயோகம் விளம்பிசருள்வேம். என்பதாதியானே சர்வம் விஷ்ணுமயம் ஜகத்தென்பதாக ஏகாத்மிய பாவனைவடிவ வைஷ்ணவ இரண்டாவது யோகம் அருள் செய்யப்பட்டது, இஞ்ஞான்று ஆத்மாநாத்ம விவேகரூப கருமசமுச்சித மூன்றுவதாய சௌரயோகத்தை இருசுலோகங்களானே அருளிச்செய்கின்றார்:—

ஸம்வரிவர்த்யஸா ஹ்ருதமிந்த்ரியாணிவிவேகதஃ,
ஸர்வத்ரஸமயா புத்த்யா ஸோஹ்யோகோ மதோ மம (46)

க. வலியவலித்துப் பொறிகடமை வரவின்பொருட்டாப்பகுத் துணர்வின், ஒலியைமுதலாம் பொறிக்குரிய வுவக்கும்விடயந் தமினிருந்தே, துலியவெவணு மடக்கமதார் தூயமதிதான் யாதுளதோ, பொலியுமதுவே யோகமெனப் பூபவெமது சம்மதமே.

(வி-ம்.) இந்திரியாணி=செவிமுதலியவைஐந்து, ஸ்வார்த்தேப்ய: =தனித்தனிஅசாதாரணமாக அமையும் தன் தன் விடயங்களாய வெளிச்சத்தாதிகளி னின்றும், பரார்வ்ருத்ய=விபரீதமுயல்வானே பிரத்தியக்கான்மாவைப் பெரிதுநாடும் படிசெய்து, விவேகத:=விவேகப்பொருட்டு, எல்லாவிபக்தியுடையது தசி: விகுதி. ஆத்மாநாத்ம விவேகப்பொருட்டு, சர்வத்ர=எதாவதொரு விடயத்தில் சமயதாபுத்தி=அடக்கமுடையதாகப் புத்தியாம்; அப்புத்தியே சமயரூப யோகமாம், ஹேபூபனுகிய வரேண்யனே! எமக்கு சிரேயசாதனத் தன்மையானே சம்மதமாம்; சர்வகாமங்களால் 'தரிசபூர்ணமா

சங்களில் என்பதன்கண் ஒருபிரயோகத்தில் ஒரேகாமமாம லத்து மற்றுயாவையும் அல்லவாம் அநர்த்தம்வந் தடைவுறுத லின், என்பதுபோல ஓரடக்கத்திற்கு ஒரேவிடயமாம், ஒரே போதில் யாவும் அல்லவாம், சூரியனிடத்திற் சம்யமத்தாற் புவனஞானம், சந்திரனிடத்திற் றூராகிரகஞானம், பிரத்யயத் தின் பரசித்தஞானம் என விடயவேற்றுமையானே சம்ய மத்திற்கு நானாத்தன்மை ஸ்மரிக்கப்படுதலின்; அதாவது, சுழும்நாதிசகத்திர கிரணமாலைவேய்ந்து திவியில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் மார்த்தண்டமண்டலத்தில் மனத்தை யடக் கலான் திருசியாபின்னஞ் சித்தம் சதுர்தசபுவனங்களைச் சாக்ஷாத்கரிக்குமென்பது சூரியன்பாற் சம்யமத்தாற்புவன வுணர்வுஎன்பதின் பொருளாம். சகலபுவன சாக்ஷாத்கார மாகிய இதுவே யோகசாஸ்திரத்தில் மதுமதீயென்னுஞ் சித்தி யென் றியம்பப்பெறும். சந்திரனிடத்திற் றூராகிரக ஞா னம்—நக்ஷத்ரபதியாகிய துஷாரகர பிம்பத்தில் சம்யமஞ்செய் தலாவ் நக்ஷத்ரங்களின் சந்நிவேச விசேஷம் சாக்ஷாத்கரிக்கப் பெறும். சூரியனுக்கு நக்ஷத்ரத்தை மறைக்குந்தன்மை யுண் மையின் அதின் சம்யமத்தானே அதன் சாக்ஷாத்காரம் ஆவ தின்றுமென்பது அபிப்பிராயம். பிரத்யயத்தின் பரசித்த ஞானமாவது: அன்னிய சித்தமாகிய பிரத்யயத்தின் சம்ய மத்தானே அதன் சாக்ஷாத்காரமாமென்பதாம். சம்யமமோ ஒருவிடயத்தில் தாரணை தியான சமாதிமூன்றுமாம்; அங்ங னமே பரமஇருடியின் சூத்திரங்கள்:—தேசபந்தம் சித்தத் தின்றாரணை. 1. ஆண்டுப் பிரத்யயவேகதானதை தியானம் 2. அதேயருத்தமாத்திர நிர்பாசம்சொரூப சூன்யம்போலும் சமாதி. 3. மூன்றுமோரிடத்தே சம்யமமாம். 4. பொரு ளித்துவாம்:—1:-ஆதாராதிதேசங்கள் கீழிருந்து கிளத்தப் பெறுகின்றன (ஸ்ரீ ஆத்மபுராணம் 11-வது அத்தியாயம்) ஆண்

டேனும் ஆத்மாவின் பாலேனும், சித்தத்தின், பந்தம்=ஸ்தாபனம் தாரணையெனச் சாற்றப்பெறும்; "இம்மம் திருணங்களியைந்திடும், அயமனத்தின்றி திதிநியாத்மனில், நயவியோக நன்னூற்றெளி நாதர்தாம், பயிற்றுதாரணை யென்னப் பகர்வரால்" எனயோகயாஞ்ஞவற்கியத்தே கூறப்பெற்றுளது. 2:—அதனாற் சாதிக்கத்தக்க தியானங் குறிக்கப்பெறுகின்றது:—ஆண்டு=கூறியதேயத்தில், பிரத்யயத்தின்=விருத்திஞானத்தின், ஏகதானதை=ஏகவிடயப் பிரவாகம்; அதுவும் நின்று நின்றுண்டாவது தியானமாம். "வந்தவகையி னெதிர்வகையின் வாங்கியோங்கன் முழுதினையும், சொருபமாகிப்பரிசீட்டசொரூபமாகிச் சுகமாகி, யந்தமிலதாஞ்சன்மாத்ரவறிவு வடிவாயகத்தமரும், தந்திவதனன் றிருவுருவைச்சததம்நினைக நினைகுகவே" என அதுகூறவும்பெற்றுளது. 3:—தியானமுதிர்ச்சியானே சந்ததம் ஏகவிடயப்பிரவாகம் சமாதியாம் அதனையுணர்த்துகின்றார்:—அதே=தியானமே, அருத்தமாத்திரநிர்பாசம் = தியேயஏககோசரமதாக நன்கிலங்குவதாகி, சொரூபசூன்யம்போலும் சமாதி=தியானசொரூப சூனியம் போலும் இருப்பது சமாதியெனப்படும். "இகழகங் கிருதியின்றி யிரும்பிரமாகாரத்தாய்ப், புகழ்மன விருத்திப்போக்கு புந்தியிற்றியானமிக்கே, திகழ்பயிற்சியினாலுண்டாந் தேசிகன் கருணை யானே, நிகழ்திதை விகற்ப முற்ற நேர்சமாதியதாமென்பர்." என வியம்பப்பெற்றுளது. ஈண்டு அங்க அங்கிட்கு அத்தியந்தம் அபேதம் சங்கிக்கத் தக்கதன்றாம், அற்பவேற்றுமைக் கிருப்புண்மையின். அங்ஙனமன்றே:—கர்த்தா கரண அனுசந்தானவாயிலாக வுண்டாகும் உணர்வு தியானமாம், அதன் மிகுதியானே சூக்குமத்தானே, கருத்தா கரண அநுசந்தான மில்லாமலே தியேயமாத்திர கோசரமாக் நிகழ்ந்திலங்குவது சமாதியாம். "அதுவே யப்பரவைராக்கிய

வாயிலாக ஆதரவோடும் நிரந்தர நீள்போது சேவிக்கப்பெற்ற தாகி, இரஜஸ் தமசுமகன்று லேசசுகப் பிரகாசமய சத்வக் கிளர்ச்சியினுற் குற்றமற்ற விசுத்த விளக்கவடிவமாய்ச் சிர தரம் அநுவர்த்தித்து நிற்பதாகிச் சம்பிரஞ்ஞாத சமாதி யெனப்படும். பரவைராக்கியவாயிலாய் நிரோதமுயற்சியா னே அதற்கும் நிரோதமுளதாகியவழி சருவவிருத்தி நிரோ தத்தான் நிர்ப்பீஜசமாதியாம், அசம்பிரஞ்ஞாதமென்னும் நிர்விகற்பசமாதியாம். "விருத்தி சூனியமாகியே விளங்குளந் தனதின், திருத்தியாகிய பிரமவா காரமெய்த் திதிதான், பெருத்ததா மசம் பிரஞ்ஞாத மெனப்பெயர் வாய்ந்த, விருத்த நீங்கு சமாதிய தென்னவே விளம்பும்." என்றது கூறப்பெற் றுளது; என்னும் இவ்விபாகம் காணத்தக்கதாம். 4. இவ் வண்ணம் முற்பாதத்தே மொழிந்த தாரணைதிமூன்றையும், வியாக்கியானித்து அதனது விவகார லாகவப்பொருட்டுச் சம்யமப்பெயரைச் சாற்றல்:—ஓரிடத்தே = ஏகவிடயம் பற் றிய, மூன்றும், = தாரணைதியமூன்றும், சம்யமமாம் = சம்ய மப்பெயரை யடையும் என்பதாம். (46)

ஆத்மாநாத்மவிவேகேநயாபுத்திர்தைவயோகத:
ஸம்ஸித்தாஸத்த்வஸ்ய தத்யோகமேவயோகமாஹுருத்தமம்.

க. தெய்வயோ கத்தா லாத்ம மதிகளின் றெரிவினுனே
கைவந்த வுணர்வு யாதோ கருதத னடைவே யோகம்
மெய்வந்த தருமம் பற்றி யிளிர்மன முனிதனக்குச்
செய்வந்த வந்த யோகஞ் சிறப்பெனச் செப்ப லாமே.

(வி - ம்.) ஆத்மா = புருடன், அநாத்மா = புத்திசத்வம், இவற்றின் விவேகம் = தனித்தனிஞானம், அவ்வுருவமதாக எப்புத்தி, சர்வதர்மஜன்னிய அதிருஷ்டயோகத்தானே பரிண மித்ததோ அதன்யோகம் = அதனது அடைவுயாதோ அது

வே யோகமாம், மூன் யோகமிரண்டன் அபேக்ஷையால் முக்கியயோகமென மொழியப்பெறும், ஸ்வதர்ம ஆசக்த சித்தஸ்ய என்பதனுனே, அதிகாரிக்கு வருணுசிரமதரும சமுச்சயம் விதிக்கப்பெறுகின்றது. பிறழ்ந்த ஒழுக்கமுடையவனுக்கு யோகானுட்டானம் உண்டாகமாட்டாதா மென்பது பொருள். இதனதுபலம் யோகசாஸ்திரத்திற் சூத்திரிக்கப் பெற்றுளதாம்:—"சத்வபுருஷ அந்யதாக்கியாதி மாத்திரத்தானே சர்வஞாத்ருத்தன்மையும் சர்வபாவாதிஷ்டாத்ருத்தன்மையும்" பொருள்: முன் அடக்கத்தானே சிரத்தைவாயிலாக விவேகக்கியாதி யருத்தங்களாம் ஞானக் கிரியா சித்திகளைக் கூறி இப்போது விவேகக்கியாதியின் அவாந்தர சித்தியைக் கூறத்தொடங்கல்:—முன்மொழியப்பெற்ற தற்பொருட்சம்யமத்தானே இரஜதம மலங்கள் நீக்கப்பெற்ற சித்தத்தினது வெற்றியுற்று வசீகாரசம்ஞைவடிவ பரவைராக்கியத்தில் நிலைபெற்றானுக்குச் சத்துவபுருடர்களின் விவேகக்கியாதி இனிதாகவுளதாகும். (ஆத்மாநாத்மாக்களின் வேற்றுமையுணர்ச்சி) தான்மாத்திரமாய் அந்நிஷ்டையிலிருக்கும் யோகிக்கு, சர்வபாவ அதிஷ்டாத்ருத்வம் = சர்வஜடப்பிரகாசரூப வியவசாய வியவசேய வடிவகுண பரிணமரூபங்களின் ஆக்கிரமணமுண்டாம்; இதுகிரியை யைசுவரியமாம். சர்வஞாதுருத்தகைமை = சாந்தஷித அவ்யபதேசிய தருமித்தன்மையானே இராநின்ற அவைகளினவே விவேகவுணர்வுமுண்டாம். இதுஞான ஐசுவர்யமாம், இதுவிசோகமென்னுஞ் சித்தியாம். (47)

(அ - கை.) இங்ஙனம் சௌரமென்னும் மூன்ருவது விவேகயோகம் விளம்பியருளிச் சைவமென்னும் சதுர்த்தமாம் அசம்பிரஞ்ஞாத யோகத்தை யருளிச்செய்கின்ருர்:—

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே,
தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோக꞉ கர்மஸு கௌஶலம்.

க. அவ்வகை விடுத்தவ னறத்தொடு மறத்திடர்
இவ்விரண் டையுமிவ ணெறிவ னாகலின்
பவ்விய யோகுறப் பயில்வதே முயல்
செவ்விதி தமிலிது சிறந்த தாகுமால்.

(வி-ம்.) தயா = சத்வபுருஷ அந்யதாக்கியாதியென்னும் விவேக புத்தியினாலே, த்யக்தஃ = அற்றவன்தக்க சம்பிரஞ்ஞாத, சமாதியைப்பெருக்கி யவன் அதன்பெருமையாலே, பவபீஜபூதங்களாய தரும அதருமங்களை, ஜஹாதி = விடுவன்; இஹ = இவ்வுலகிலேயே. உபாவபி இரண்டையும், என்பது பாவம்போலும் புண்ணியமும் பந்தகமாகவிருத்தலின் றள்ளத்தக்கதேயாம் என்பதையுணர்த்திநின்றது. எதனால் யோகத்தினது பெருமை இத்தகையதாமோ, அதஃ = அவ்வேதுவினாலே, யோகாய = நிர்ப்பீஜ = நிர்விகற்பயோக லாபப்பொருட்டு, யுஞ்ஜீத = யோகத்தை யனுஷ்டிக்கவேண்டும்; யோக = இவ்வசம்பிரஞ்ஞாதயோகம், வைதேஷு = புருடப்பிரயத்ந சாத்தியமாகிய வேதம்விதித்தவற்றுள், கௌஶலம் = பிரஞ்ஞைத்தியாகம்வரை புருடப்பிரயத்நசாத்யம், பெருஞ்சாதுரியமா மாதலின். "எதனால் விடுதியோ அதனையும் விடுதி" எனவும் "நிஸ்சங்கன் பிரஞ்ஞையாற் பயிக்குக" எனவும் கூறவும்பெற்றுளதாம். (48)

(அ-கை.) இதனது பயனை யியம்பியருளல்:—

கர்மஜம் புத்தியுக்தா ஹி ஃபலம் த்யக்த்வா மநீஷிண꞉
ஜந்மபந்தவிநிர்முக்தா꞉ பதம் கச்சந்த்யநாமயம். (49)

க. மனமெனும் பகையை வென்று மறுவுறு பொறி...
மூய்த்தோன், பனுமற மறம தீயும் பயன்றனைப் பாறி ...
ஞய்ச், செனிபந்த மதனைத் தீர்ந்து திரும்புவ தென்று மில்...
வினியநா மயம் தான விடத்தினை யெய்து வானே.

(வி-ம்.) தர்மாதர்மபலே-மேற்கீழ்க்கதிகளை, த்யக்த்...
விட்டு; மநீஷீ=மனத்தையொடுக்கும் மாண்பினன், விஜி...
திரிய=விடயங்களினின்றும் விடுவித்திழுத்த கரணஞ்தலி...
என்னும் விசேஷணங்களினுனே, அதுபரம் புருட்க்கிய...
யாற் குணவைராக்கியமாம்; கண்ட கேட்ட விடய விதி...
ணனுக்கு வசிகாரசம்ஞை வைராக்கிமாம்; என்னும் ...
திரமிரண்டாற் கூறப்பெற்ற பர அபரவைராக்கியம் அ...
வுற்றமை யருளப்பெற்றதாம். சூத்திரப்பொருள்:—நி...
கற்பத்தின் அந்தராங்கமாய பரவைராக்கியம் பகரல்:
பிரஞ்ஞாத சமாதியப்பியாச சாமர்த்தியத்தானே முக்கு...
வடிவமாய பிரதானத்தினின்றும் பிரிவுபட்ட புருட...
னுடைய, கியாதி=சாக்ஷாத்காரம், அதனால் அசேஷ குண...
திரயவிவகாரத்தில் ஆசையின்மையாதோ அது பரவைரா...
கியம் என்பதாம். அபாவைராக்கியமும், யதமான வியதி...
ஏகேந்திரிய வசீகாரபேதத்தானே நான்குவகையாம்; அ...
றுள் ஆதியமூன்றையும் பொருளாற்குறிப்பித்துச் சாக்ஷ...
சதுர்த்தத்தைச் சாற்றுகின்றார்: மாலை சந்தனாதி விடயங்...
கண்டவையாம், வேதம்விளம்பிய துறக்கமுதலியவை கே...
டவையாம், அவ்விரண்டன்பாலும் ஆசையானதிருந்தபோ...
னும் விவேகதாரதம்மியத்தானே யதமாஞதி வைராக்...
மூன்றுமுண்டாம். யதமானத்தன்மை யென்பது, இவ்வு...
லெதுசாரம் எஃதசாரம் எனக்குருசாஸ்திரங்களானே ...
கறிவேன் என்னும் உத்யோகமாம். தன்சித்தத்தில் முன்...
ருப்பனவாய தோஷங்களின்மத்தியில் பயிற்சிசெய்யும் வி...

கத்தினாலே இவ்வளவின பக்குவப்பட்டன, இவ்வளவின எஞ்சிநிற்கின்றன" என்னும் பகுத்துணர்வு வியதிரேகமாம் கண்டுகேட்ட விடயப்பிரவிருத்தியானது துயர்வடிவென்னும் உணர்ச்சியாலே அந்தப்பிரவிருத்தியை விடுத்து மனத்தில் நசைமாத்திரத்தாலே ஆசையுற்றிருத்தல் ஏகேந்திரியத்தன்மையாம், விதிருஷ்ணத்தன்மை வசீகாரமாம், அவ்விவ்வபர வைராக்கியம் அஷ்டாங்கயோகப் பிரவர்த்தகத்தன்மையாலே சம்பிரஞ்ஞாதத்திற்கு அந்தரங்கமாம், அசம்பிரஞ்ஞாதத்திற்கோ பகிரங்கமாம். ஜநி = ஜந்மம், அதுவேயந்தமாம், தன்னானிர்முக்தன்; ஸ்தானம் = எதனினின்றும் மீண்டுந் திரும்புவதில்லையோ அவ்வுலகினை, இனியெய்துவன். ஆமயம் = சம்சாரரோகம், அஃதில்லாதது அநாமயம். எத்தானத்தைக் குறித்தியம்பப்பெற்றது "மன்வந்தரங்கள் பத்தீண்டுமன்னுவா ரிந்தியசிந்தகர்" என்பதாதியாக, "நிர்க்குணபுருடனைத்தானுய் சேர்ந்து நியமிதகாலும் நிற்பதில்லையே" என்பதந்தம். புருஷம் என்பதற்குக்காரியபிரஹ்மத்தோடு விடுபடுவன் என்பது பொருள். "அந்தகா லத்தே யந்தமற் றிந்த வமிர்தினு லரியவீ டடைவர்" என அதுவும் உதாகரிக்கப்பெற்றுளது. இவ்விரு சுலோகங்களின் றிருக்கருத்தை ஸ்ரீகீதாசிரியரும் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்:—தருபய னது விட்டே தகும்வினை செய லுற்று, லருமய லறுமற்று லறிவுறு மறி வுற்று, லிரு வினை விடும் விட்டா லிழவொடு பெறு தற்பா, லொருமனம் வரு மத்தா லெனையுணர் வுணர் வப்பால். (49)

(அ-கை.) அற்றேல் பரம்வைராக்கியத்தையனுசரித்து யோகபாடியத்திற் கூறப்பெற்றது: இதற்கே யின்றியமையாதுண்டாகத்தக்கபலம் கைவல்யமென. எங்ஙனம்:—நிரோத சமஸ்கார மிகுதிப்பாட்டால் கிளம்பியசமஸ்காரங்கள் அத்தியந்தம் பிரளயமாகியவழி அறியத்தக்கதொன்றின்மையின்

புத்தியும் அட்டவிறகின் அனலம்போலும் அழிந்துபோதல் இன்மையாமென இடையூறற்றகைவல்யம் ஆன்மாவிற்கு நிரோதசமாதியினுனே எய்தலாம் என்பதாகப் பாதஞ்சல யோகியர் பகர்வர்; ஆகலின், அநாமயமதான இடத்தினை யெய்துவான் என்றஇது நிர்விகற்ப சமாதியின் பிரயோஜனம் எனயாங்ஙன மியம்பியருளல் ஏலும் என ஆசங்கிப்ப உத்தரம் அருளுகின்றார்:—

𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌾𑌲𑍁𑌷𑍍𑌯𑌂 𑌜𑌨𑍍𑌤𑍋𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌕𑍍𑌰𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌦𑌾𑌸𑍌 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌂 𑌵𑍇𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍 ॥

௬. உயிர்மதி யறி யாமை யுறுகுறை முறை யானே
மயலறு மெது காலை மருவிது வது போதே
செயலறு வயிராகஞ் செறிதரு முர மாமெய
சயமறை மொழி யாதி தமின்முறை முறையானே.

(வி-ம்) உளதேயாமன்றே, சென்ற அநந்தகோடிசென்மங்களிற் றேடிவைத்த வாசனைச்சிகாமய அஞ்ஞானசமுத்திரம். அதனது ஒருதரங்கம்புத்தியாம் எப்போதும் எழும்பியடங்குமியற்கையதாம் அது யாங்ஙனம் விசுவரூப அஞ்ஞானம் விலாசஞ் செய்துகொண்டிருக்கும்போது முற்றினுமற்றுவிடுதலைப் பற்றுறும், அதுவும் முக்குணவடிவமான அஞ்ஞானத்தை யொளிர்விப்பதனுனே சாத்துவிக பரிணாமமாம், இரஜதமோ மலங்களாற் களங்கமுற்றதாம், அதுவும் அசம்பிரஞ்ஞாத சமாதியந்தமான கருமயோகத்தாற் களங்கம்முழுமையும் கழன்றபின் கதகரேணுபோலும் முறையாக அஞ்ஞானத்தைய்கற்றித் தானும் விலயத்தையடையும். ஆகலின் இஃதருளப்பெறுகின்றது: யதா = எப்போது, ஜந்தோபுத்தி = பிராணியின்மதி, அஞ்ஞானகாலுஷ்யம் = அறியாமைக்களங்கத்தை, க்ரமிஷ்யதி = முறையேகடக்குமோ, என்பது.

ஹிசப்தம், ஞானத்தனையே கைவல்யம், ஆன்மாவையறிந்தவன் அருஞ்சோகங்கடப்பன், என்னுஞ் சாந்தோக்கியங்கொண்டு ஞானத்தானே சாதிக்கத்தக்கதாய கைவல்யத்தின் வெளிப்பாட்டை விளக்குவதின் பொருட்டாம். "இதுவே பரமமாந் தருமமியாது, அதியோ கத்தா லாத்தும தரிசனம்" என யோகத்திற்கு ஆன்மதரிசன சாதனத்தன்மை யுளதாமாயினும் யோகஜதரிசனம் தருமமேயாம்; அது, அகம் பிரஹ்மாஸ்மி அயமாத்மாபிரஹ்மம் தத்வமசி என்பதாதி வாக்கியத்தாலுண்டாய விருத்திரூபமோ ஆகாதாம்; அஃதில்லாமலோ கைவல்யம் அசம்பவமாதலின். பொருத்தமாகவே, யருளப்பெற்றது அவ்வாறுவிட்டவன் அடைகுவ னிடத்தையென்பது; யோகத்தானே தியாகித்த மதியனுக்குக் கிரமமுக்தியிடத்தினடைவு என்பதாம். எக்கால் அநேககருமம் ஏகஜன்மத்திற்றொடங்கின் அக்கால், முன்னுண்டாவதாய வாசனைகளின் அபூர்வத்தால், கிடைத்தஜன்மத்திற் கிளம்பிய வாசனைகட்கும் நிரோதப்பயில்வினாலே கெடுதல் வருதலின் கைவல்யம் அடைவுறலாம்; ஆனாலிது பொருத்தமுடையதாகாதாம், ஒருகருமத்திற்குப் பலபிறப்பைத் தொடங்குந் தன்மை காணப்பெறுதலின். அவ்வாறன்றோ, ஏகமாநுட ஜன்மம் கருமத்தைச்சம்பாதிக்கும் இடம், போகஇடங்களோ அளவற்றனவாகக் காணப்பெறுகின்றன; ஆகலின் இவ்வேகபவிக நியாயம் பொருத்தமற்றதேயாம். அற்றேல் எவ்வுபாயத்தானே புத்தி அஞ்ஞானத்தை முறையிற்றுண்டும் எனக் கடாவ விடையருளுகின்றார்: அக்கால் என்பது. வேதவாக்கியங்கள் தத்துவம்பதார்த்த சோதகங்கள், "யாதுமுணர்ந்தெனை யும்முணர்வல்லவ ரியாரியாவன், போதமயந்தவமாவுடையன்னுள போலேயன், றுதிகளங்க ணிகழ்ந்ததடங்கவிந் நானவா, வாதிவரும்பிர மங்களைவொக்கும் தாயுங்கால்" யாது

முண்டார்ந் தெவையும் உணர்தலாவது, சாமானியமாய்ச்சருவமு மறிதலும் விசேடமாகச் சருவமும்அறிதலும் ஆமென்றறிக. "ஏவ்விவ் விஞ்ஞானமயன்பிராணன்தளில், ஹிருதியந்தர்ச் சோதிபுருடன்." என்பனவாதியாய அவாந்தரவாக்கியங்கள், தத்மசியாதி மகாவாக்கியங்கள், அவற்றின் சிரவணம் = உபக்கிரம உபசங்கார ஐக்கியரூப்யாதி அறுவகைலிங்கங்களானே தாற்பரியந்துணிதல்; அதனானே பிரமாணகத அசம்பாவனையின் நீக்கமாம். ஆதிபதத்தான் மனனம் = சிரவணித்த பொருளின் ஊகங்களானேதொடர்ந்தசிந்தனம்; அதனாற் பிரமேயகத அசம்பாவனைநீக்கமாம். நிதித்தியாசனம் = விஜாதீய எண்ணங்களின் திரஸ்காரவாயிலாக, சஜாதீயப் பிரஹ்மைவாக விருத்திப் பிரவாகவிருத்தியாக்கல்; அவற்றால் சமாதியோடு கூடியவனும், முறையாகப் படியேறும் நியாயம்போல மேன்மேற் பூமியையேறுபவனும், ஆன்மயதார்த்தத்தை நேரிற்கண்டவனும், ஆகிய, ஜந்தோ = அதிகாரிபுருடனுக்கு அக்கேள்வியாதிகளில் கரைகடந்தவனுக்கு ஓடத்திற்போலும் வைராக்கியம் உண்டாம்; வைராக்கியமும் உண்டாகியபோதே மதியின் அறியாமைக்களங்கம் சென்றதாமென்றே சிந்திக்கவேண்டும். ஈண்டுக், கிரமாத் = முறையாக என்றதனானே, ஞானதாநாஜ்ஞாத்ருநாஜ்ஞாகவிக்ஷெள் என்னும் சுருதியந்தரப் பிரசித்தமாய நான்கு திருஷ்டிகள் அருளப்பெற்றனவாம்; அவற்றின்றொகுப்பிது வாம்:—அத்தியா ரோபமதி னுலகறிவு கனக, வரியபரிணதி சருவ மாத்மவெனு மொழியா; லொத்ததா யிஃதறிவின் விவர்த்தமா வலங்க, லொப்பாகுஞ் சொப்பனமா யாவெனுரையதனன்; நித்தமா மறையதனு லிஃதறிவின் விகற்ப, நிறைககன தலசமமா நேகநா நாவென்லாற்; சித்தமார் சித்விகற்

பஞ்சிதைந்து செயமுறுமாந், தெளியுளத்திற் குரையுள்ங்கள் கடந்ததெனலானே.

அற்றேல், இவையாவும் எவ்விவ்வான்மா, இந்திரஜாலம்போலும் மாயாமயம் கனுக்கடுப்பப் பொய்யாயகாட்சி காண்டுப்பலவிலையெதுவும், எதனினின்றும் வசனமுறுமற் றிதவுளத்தோடுந் திரும்புவதாமோ, என்பதாக ஒன்றற்கொன்று முரண்பட்ட பொருள்களோடுற்ற சுருதிகட்குபாங்கனம் தத்துவத்தையுணர்த்தும் வடிவப்பிரமாணத்தன்மையென ஆசங்கித்து அநிருதமாயசத்திற்கே சீடமதியவதாரார்த்தந்திற் பரிஞமாதிதிருஷ்டிகள் இனிதுகாட்டப் பெறுமென்றதும் கவியானே தொகுத்திடினும் எதனை வாங்மனங்களின் பகிர்லோகாகார பரஞான அவிகற்பம் செய்யப்பெறும்.

தைத்திரீயத்தில், சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்—இது பிரஹ்மத்தின் இலக்கணப்பொருட்டாம் சத்தியாதிமூன்றும் விசேஷணபதங்கள், பிரஹ்மம்விசேடியம், விசேஷண விசேடியத்தன்மையானே ஏகவேற்றுமை முடிபுடைய சுத்தியாதிபதங்கள் சமாஞதிகாணங்களாம். பிருகத் தன்மையானே பிரஹ்மமென விற்பத்திபலத்தால் யாதேனும் பெரியவஸ்துளதாம் ஒப்பாகலுளிரும், அதனுல் இலக்கிய உத்தேசங்கொண்டு இலக்கணவிதாநமெனப் பிரசித்திகூடும், அவ்யாகிருதாதி பிரஹ்மசப்த வாச்சியமாதலினுனே சஜாதீயம், குடமுதலியவைவிஜாதீயும், ஆகலின் சஜாதீய விஜாதீயங்களை விலக்குவதானே சத்தியாதிலக்ஷணத்திற்கு இலக்கணத்தன்மைப் பிரசித்திகூடும். நீலம் மகத்சுகந்தி யுற்பலம் என்பதாதியில் விசேஷணவிசேடிய பாவமிருந்தே சமாஞதிகரணத்தன்மையான் ஏகவிபக்தி யந்தங்கள் பிரசித்தங்களாம் இவைகளும் அவ்வடிவினவேயாகி நாநார்த்தகத விசேஷண

விசேடியபாவ நிபந்தனங்களாம். சத்தியாதிகட்கு அசத்தியாதிதரும நிவிருத்திபரத்தன்மையுண்மையின் விசேடியமாய பிரஹ்மத்திற்கு உற்பலாதிபோலும் அப்பிரசித்தத்தன்மையுண்மையின்; வெந்த கானிலின் புனலினில் வெருவதாய் மூழ்கிக், கூந்த விண்மல ரலர்ந்தசேகரனென மிளிர்ந்தே, தந்துறு முயற் கொம்புவிற் றரித்தபாணியனும், மிந்த வந்தியைமைந்தனு மேகுகின் றனனே. என்பதுபோலச் சத்தியாதிவாக்கியத்திற்குச் சூன்யார்த்தத்தன்மையே யடைவுறும் எனின்? ஏலாதாம், இலக்கணார்த்தத்தன்மையுண்மையின், சத்தியாதிகட்கு விசேஷணத்தன்மையேனும் இலக்ஷணார்த்தப்பிராதான்யமென்பேம், இலக்கியஞ்சூனியமாயினோ இலக்கணவசனம் பயனுடையதாகாதாம், இலக்கணார்த்தத்தன்மையுண்மையின் சூனியார்த்தத்தகைமை யிலதாமெனநினைவேம், சத்தியாதிகட்கு விசேஷண அர்த்தத்தன்மையுண்மையேனும் தற்பொருளின் விடுதலின்மையேயாம்; சத்தியாதிசப்தங்கட்குச் சூனியார்த்தத்தன்மையேலோ விசேடியநியந்துருத்வம் பொருந்தாமையாம்; சத்தியாதியருத்தங்களால் அருத்தமுடைமையேலோ அதன்விபரீததருமவான்களாயு விசேடீங்களினின்றும் பிரஹ்மமாகிய விசேடியத்திற்கு நியந்துருத்தகைமை பொருந்துறுநிற்கும், பிரஹ்மசப்தமும் தற்பொருளானே பயனுடையதேயாம், ஆண்டநந்தசப்தம் அந்தமுடைமைநிடேதவாயிலாய் விசேஷணமாம், சத்தியஞானசப்தங்களோ தம்பொருட்சமர்ப்பணத்தினனே விசேஷணங்களாம். சத்தியாதிசப்தங்கள் பரஸ்பரம்சம்பந்திப்பனவாகாவாம்பரார்த்தத்தன்மையுண்மையின் அவை விசேடியார்த்தத்தனவேயாம், ஆகலின் ஒவ்வொருவிசேஷணசப்தமும் பரஸ்பரம்நிரபேக்ஷ்யதாய்ப் பிரஹ்மசப்தத்தோடும், சம்பந்திக்கும்சத்தியம் பிரஹ்மம், ஞானம்பிரஹ்மம், அநந்தம்பிரஹ்மம்

என, "மதியிற் சிறந்தவவ் யாகிருத மதனில், திதிபெறு மான் மனைத் தெரிபவ னென்னே" என்றிவ்வண்ணம் பிரஹ்மமும் அதனைமறைதற்செய்தலானே குகையெனப்பெயரிய பரம் ஆகாசமும் உபந்யசிக்கப்பெற்றன. ஆண்டுப்பிரஹ்மத்திற் குச் சத்தியஞானரூபத்தன்மை அநந்தத்தன்மைகளை யொ ளிர்விக்கும் மந்திர வர்ணத்தானே அதற்கயலாய வியோமத்திற் குப் பொருளால் அசத்திய அஞ்ஞானரூபத்தன்மையும் சாந் தத்தன்மையும் காட்டப்பட்டது. அங்ஙனமே, அவ்விவ்வான் மனின்றும் ஆகாசமுண்டாயது. பிராஹ்மணபாகத்தா னும் மந்திரபாகத்தானும் உரையாடப்பெற்றதையுணர்த்தும் அவ்விவ்வென்பது. இதன்கண்ணே ஆகாசாதிசிருஷ்டிக்கும் ஆன்மாவிற்கு பிரஹ்ம வியோமங்களைக் குறிப்பிக்கும் அது இது என்னுஞ் சப்தங்களோடு சாமானாதிகரண்ய முண்மை யின், அதற்குச் சத்யஅசத்ய சாபல்யம் உணரப்பெறும், அதுவும் சத்தியாம்கிச முக்கியத்தகைமையானே ஈசன், அசத்தியாங்கிச முக்கியத்தகைமையானே ஜீவன், உலகிலும் அபுத்திவாயிலாகத் தாம்புபாம்பாதி சிருஷ்டியும், புத்திபூர் வகமாகஉண்டாம் மனோராச்சியசிருஷ்டியும் பொய்யாகவே காணப்பெறுகின்றது. அவ்விரண்டும் ஈண்டு முறையாகக் காணப்பெறுகின்றன, ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாய தெனவும், அஃதவாவியதநேகம் பிரஜைகளாவேமென்று என் பதாதியவும்ஆக. அவ்விது, பசுத்தபோலோகம் பசுபதிமனோ ராஜ்யம் அசலம் என்பதாகக் கூறவும்பெற்றுளதாம். அச லம்என்னுஞ் சிறப்பினானே பசுபதிமனோராஜ்யத்திற்குக் கற் பிதத்தன்மையானே பொய்ம்மையிருந்தபோதினும் சொப் பனராஜ்ஜியம் போலும் பிரதீதிவிரிவுறல் அர்த்தக்கிரியா காரித்தன்மை கூறப்பட்டதாம். தடையுற்ற ஐசுவரியங்க ளானே சௌபரி பரத்வாஜ கும்ப உற்பவர் முதலியவரானே

கற்பிதமாய் அருத்தங்கட்கே புராண ஆகமாதிகளில் புஷ்கல அருத்தக்கிரியாகாரித்வம் காணப்பெறுகின்றது என்றால் தடையின்றிய ஐசுவரியத்தானே பசுபதியினுற் கற்பிதமாயதில், அத்ததைமையா யிருத்தலைப்பற்றி மற்றென்னே கூறக் கிடக்கின்றது. இதனுனே கரும உபாஸ்தி காண்டங்களினும் சாதனபலாதிப் பிரதிபாதக ஞானகாண்டத்திலும் ஆன்மாவிற்கு முற்றறிவுண்மையையும், முழுதையுஞ் செய்கையையும், எல்லாமாதலையும், எவற்றையும் புசித்தலையும், இவைபோன்றமற்றும் பிறவற்றையும் பிரதிபாதிக்கும் வேதமானது அஞ்ஞானமிருக்கும்வரை தடையற்றபிரமாணமாதலை யனுபவிக்கும் சககாரிவடிவம் விரும்பாததேயாய பொய்யேயான அஞ்ஞானத்திற்காதல், அதன்சிறப்புவாய்ந்த புருடனுக்காதல் சொப்பன மனோராஜ்ஜியங்களில் எல்லாம்வல்லதாம் பான்மையைக்கண்டாமன்றோ, சத்தியவெதற்குமிலதாம். சத்தியமாய பீஜசக்தியானது பிரகிருதிவேறில்லாமலே ஆலாதற்கேலாதாம், சத்தியமாயகனகமும் நிமித்தாந்தரமில்லாமலே குண்டலமாதற் கொல்லாததேயாமன்றே. சுருதியோ: அசத்வா இதமக்ர ஆஸீத்: அசத்தென வியாகிருத நாமரூப விசேடவிபரீதரூபம் அவிகிருதம் பிரஹ்மம் கூறப்பெறும்; அத்தியந்தமேயஃதசத்தெனலாகாதாம், அசத்தினின்றும் சந்சன்மம்உளதாகாதன்றே; இதமென்பது, நாமரூபச்சிறப்புடைய வியாகிருத வுலகமாம், அக்ரே பூர்வம் உண்டாவதற்குமுன் பிரஹ்மமே அசத்சப்தவாச்சியமாக இருந்தது. என அஞ்ஞானமாத்திரத்திற்கு; எதனினின்றும் ஆகாயமுண்டாயதோ அவ்வாத்மா ஆசையுற்றது என்பதன்கண் அதன்விசிஷ்டமாய ஆநந்தமயத்திற்கும், தனியதற்கே யாவுஞ்செய்யும்பான்மையைக் காட்டுகின்றது. அற்றேல் இங்ஙனம் பசு பசுபதிகட்கீண்டு அவைசிஷ்டியம் வாஸ்தவம் என ஆசங்கித்து, அவர்த்

குத், தாஞ்சிருஷ்டித்த உலகத்தோடு பரமாய சத்தியத்தில் அத்தியாசம், அம்மூன்றன்கண்ணே அதிஷ்டானசத்வ அத்தியாசத்தையும் சுருதிகூறுகின்றது:— "மெய்யும் பொய்யும் மெய்யுண்டாயது எவ்விது சிறிது" என. ஆதலானே, சத்தியத்தில் அத்தியஸ்தத் தன்மை யுண்மையின் சத்தியத்தின் விவர்த்தமாம் மூன்றும் அஞ்ஞானத்தை மூலமாகவுடைமையின் நான்காவதாய அஞ்ஞானசொரூபமாகவே அசத்தின் விகற்பமாத்திரம் சப்தஜம் அது எனக்கூறப்பெறுகின்றது விவர்த்தம் சத்தியத்தின்மூன்றும் விகற்பம் அது அசத்தினது; மூன்றும் விவர்த்தம் மூன்றும்விகற்பம் எனவும் யோஜிக்கத்தக்கது. இதனானே திரிதயகாரணமாய்ச் சுகிருதமென வேறுபெயர்பெற்ற அசத்தின் ரசாவசேஷபோதங் காணப்பெறுகின்றது "எவ்விது சுகிருதம் உரனுய் ரசமது" அவ்விரசாவசேஷ போதமும், நிர்விகற்பத்தில் அநுபவிக்கப்பெறும். அதனாற் கௌம்பியயோகி விசுவத்தைப் பிரத்தியக் கபின்னமாயும் இரச ஆகாரமாயும் காண்பன், அவ்விரண்டையும் எப்போது நீக்கும், யான் அன்னமெனவும் சுருதியாற் காட்டப்படும். அவ்விது கூறப்பெற்றதாம் அசத் பரீக்ஷத்தான் என்பதாதிபால். இதனானே விஷ்ணுபுராணத்தில் உலகம் ஞானசொரூபமென ஸ்மரிக்கப்பெறுகின்றது:— "அறிவுறு பெரியோர்தாம கிலமு மறி வாயே, மறையுறு நெறியானே மதியுறு வகை யேய்வர் பொறியுறு சிறி யோரே பொருளிவையெவை தாமும், உறுநிறை மய லானே யுளவென மருள்வாரால்" சர்வம்பிரஹ்மமெனச் சாமானுதிகாண்யமும் தன், மாத்திரப்பொருட்டுறுவதாய்ச் சற்சீட வேற்றுமையானுதல், உணர்ச்சிமுறை வேற்றுமையானுதல் அபேதத்தில் வாதையில் அவ்விபதிரேகத்திலாதல், கூறப்பெறும். அங்ஙனமன்றே:—தார்க்கிகர் காரியகாரணங்கட்

குக் கரிபரிபோலும் பேதமிச்சிப்பர் அதன்பாதப்பொருட்டு ஆதியபக்கமாம், ஆரம்பவாதி நிராசமாம். காரணய ஐக்கிய சித்தியுபயோகி ஆன்ம அனான்மாக்கட்டு அன்னியோன்னிய அத்தியாசத்தான் அநான்மாவைப்போலும் ஆன்மாவிற்கு அத்தியஸ்தத்தகைமை யொப்பாதலின் 'பொய்யென்ன வுலக மயலதிஷ்டானம் சூனியமே எஞ்சாநிற்குமென மாத்தியமிகர் பக்க நீக்கப்பொருட்டு; இரண்டாவதுபக்கம் சூனியவாதநீக்க மாம், காரணசத்தைச் சாதகமாம். அதிஷ்டானமில்லாத் தாய் மயல் அசம்பவமாதலினானும், அவதியில்லாதபாதங் கூடாமையானும், உளதாஞ்சிறிது அவற்றின் பற்றுக்கோடா ய்ச் சத்தியமென, எதுவெள்ளி யது இப்பியே, யாதுபாம்பு அதுதாம்பே யென்பதுபோல, யாதுலகம் அதுபிரஹ்மமே யென வாதையில் சாமானாதிகரண்யம். சாங்கியர் காரிய கார ணங்களாகிய சமசத்தைப்பொருள்கட்கு அபேதத்தையவாவு கின்றனர் அதை நீக்கும்பொருட் அவ்யதிரேகபக்கம் மூன்று வதாம் பரிணாமவாத நீக்கப்பொருட்டாம், யாதுகாரணம் அதுவேகாரியம் காரணத்தினும் வேறாகக் காரியம்இல்லை வியோமத்திற்குவேறாகத் தனித்தலத்தன்மை யிலாததே போலும்; கீழ்முகவடிவ மகேந்திரமணிமயகடாக ஆகாரத் தன்மை யென்பதுபொருள். அல்லது மந்தஅதிகாரிக்கு ஆன்மஐக்கியத்தில் மதியுண்டாதற்பொருட்டுப் பரிணாமவா தம்பற்றிச் சர்வம்பிரஹ்மமெனச் சாமானாதிகரண்யம் அபே தத்தில், அப்பக்குவனுக்கே பிரபஞ்ச மித்தியாத்தன்மைப் போதப்பொருட்டு விவர்த்தவாதம்பற்றி அதுவே வாதையி லிஷ்டமாம், அப்பக்குவதரனுக்கே பிரபஞ்ச அத்தியந்த அபாவ போதப்பொருட்டு விகற்பவாதம்பற்றி அவ்வியதிரே கத்தில் அஃதிஷ்டமாம், விகற்பத்திற்கும் எழுதலிலாமையின் அவிகற்பத்திற் பரம் பெருமையுற்றிலகும். பரிணாமாதிப்

பிரதிபாதனவிற்றிற் சங்க்ஷேபசாரீரகத்தில் அநுகூறப்பெற்றுளது:—அதவெனுஞ் சத்தத் தானே யறிவித்தமுமுக்குவானேன், இதுவரன் றிருட்டி பேத மெழுகின்ற முறையினுனே, துதைதரு மகிலே தீயும் தொலைந்திடுங் காலந்தன்னில், வதிதருந் தனது தான் மகிமையி லதனுல் வந்தே" பொருள்: அற்றேல், முமுக்ஷுவாய சிரவணுதிகாரிக்கு மோக்ஷசாதன சாக்ஷாத்காரமே சாதிக்கத்தக்கதாம், பரிணுமாதி திருஷ்டியாலாவதென்னே யெனின்? உண்மையே, அதுவேயவற்றுலன்றி யுண்டாகமாட்டாதென்னும் அபிப்பிராயத்தால் ஆறையப்பெறுகின்றது, அதவென. அதாதோ பிரஹ்மஜிஞ்ஞாசா என்னும் சூத்திரத்திலிருக்கும் அய சப்தத்தானே சூசிதமாய, எவ்விவேக வைராக்கியாதி மாக்முமுக்ஷுவாய சிரவணுதிகாரிஉரனை இத்திருஷ்டிபேதத்தை முறையே அடையாநிற்பன் எக்கால் அதனுல் அக்கால் எல்லா எண்ணங்களையும் இழந்தவனுய், தன் மகிமையின்மாட்டே யிருப்பன் தன்வடிவத்தில் நிலைபெற்றிருப்பன் என்பதாம். சூத்திரக்காரருக்கும் இம்முறையாய திருஷ்டிபேதஞ்சம்மதம் எனத்தெரிவிப்பார் அதவெனுஞ்சத்தத்தானே யென்றுர். இவ்வரும்பொருளை "பேதமை யடை வுற்றே பிறிவுறு மன மற்றே யேதமி றெளிவுற்று னியாதொரு பொழு தப்போ, தோதலொடுல கத்தோருரைகளி னுளம் விட்டா னுதலி னெனை மெய்ப்பா டடைதரு நெறி யைக்கேள். என்பதாக ஸ்ரீதேவகி பரமானந்தரும் தெரிவித்தருளியுள்ளார்.



அ-கை. இவ்வண்ணம் கேள்விமுதலியவற்றுனே அஞ்ஞானமகன்றவனுக்கு அநுட்டிக்கத்தக்க மகாயோகமருளல்:-

[illegible]
[illegible]

க. மூன்று நன்று முயுன்றுறு வோனுக்கெஞ்
ஞான்று தானுதை நண்ணுத லாகுமஞ்
ஞான்று புந்தி பரம்பொரு ளிற்சலங்
கான்று யோகங் கதுவு மிவனரோ்.

(வி - ம்) ஸ்ரீஞானவாசிட்டத்தில் "ஞானபூமியைமுடிவிற் பேதமாக நவிலுவர்வா தியரவற்றி னமக்கு நல்ல, தான வினை யினையறிதன் ஞான மாகு மறிந்தவிவற் றந்தமே யழிவில் வீடா, மானமுறு சுபம்விரும்பல் விசாரமெய்தன் மனஞ் சிறுக லுண்மையிலே மன்னி நிற்ற; லீனமறு சங்கற்ப மறல் பதார்த்த வெண்ணமறுத் திடறரிய மிவையே மூாகும். "என்பதாக ஏழுஞானபூமிகள் ஸ்மரிக்கப்பெறுகின்றன, அவற்றுள் ஆதியதாய சுபேச்சை சாதனசதுஷ்டய சம்பத்தியாம், சிரவணமனனமெனப் பெயரியவிசாரவடிவதாம் இரண்டாவது விசாரணையாம், நிதித்தியாசனம் மூன்றுவதாம், கூறிய வண்ணமூன்றன் வடிவமாயதிரயத்தால் விதிக்கப்பெறும் விடயம்திரயீ சப்தத்தானே கூறியருளப்பெற்றுளது. த்ரயீவிப்ரதிபந்நஸ்ய = அம்மூன்றையும் விசேடமாயடைந்து அம்மூன்றுபூமிகளையும் வென்றவனுக்குச் சத்துவாபத்தியெனப் பெயரிய நான்காவதுபூமி, நிரோதசயாதிக்குமுன்னரே உண்டாம். அதனதுள் ஐந்து சம்பிரஞ்ஞாத பலவடிவமாய சித்திகளில் ஆசையற்றவனுக்கு வசீகாரசம்ஞையெனப் பெயரியவைராக்கியத்தோடுகூடிய அவனுக்கு, அசம்சக்தியெனப் பெயர்வாய்ந்த அசம்பிரஞ்ஞாத யோகரூப அபிமுகீ பஞ்சமியோக பூமியுண்டாம். அவ்விப்புத்தியின் விஷயங் கொள்ளா வடிவஸ்தைரியம் பரமாத்மாவின்மாட்டுத் தானுத் தன்மையெனச் சாற்றப்பெறும் யாவன் இப்பூமியை எக்காற்றுனே விடானே, மற்றோ பரமுயற்சியினுனே கிளம்பி வருவானே, அக்கால் பதார்த்தாபாவனீயென்னும் ஆறும்பூமி

யேறினனென அவனையறியலாம். எக்காற்றான் தானாகவே னும் மற்றெவனாலேனும் கிளம்பாதே விருத்தியருத்த நிட்டமாகாதோ அக்கால் ஏழாவது பூமியையடைந்தவனாவன், அவ்விலை தருளப்பெறுகின்றது பராத்மாவினிடத்தில் அசலாபுத்தி யென்பதாக. யதா = எக்கால் இவ்வித அவஸ்தையை ஜந்து அடையுமோ ததா = அக்கால் அசௌ = இது ஜீவப்பிரஹ்ம அபேதயோகம் ஆப்நுயாத் = அடையாநிற்கும்; மற்றோராற்றாலின்றாம். தலைநின்ற பொருளைய மின்றியே சலியாதே, நிலைநின்றான் யாதொருபோ தப்போதே நெறிநின்றான், கலைநின்ற மெய்ஞ்ஞான யோகங்கண்ணுறுமென்னச் சிலைநின்ற தோள்விசய னிவ்வண்ணஞ் செப்பினான். என்பதாக இத் திருக்கருத்தை ஸ்ரீவசுதேவ சுதரும் வகுத்தருளியுள்ளார்.

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த மநோகதாந்,
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே.

க. மானசமான காம மியாவையு மதிமானெக்காற்
றானவை யிலது விட்டான் றன்னுருத் தன்னிற் றன்னா
லானசந் தோஷ னாகி யமருவ னன்ப வக்காற்
றானுசை வற்ற புத்தி யென்றவற் சாற்று கிற்பார்.

(வி - ம்.) நானாவிதமான காமங்கள்யாவை தம்பிரதீதி மாத்திர விடயங்களாமோ, இருதய ஆகாயத்திருப்பனவாமோ, யாவைதாம் வியாவகாரிகங்களாமோ சௌபரியாதிகட்கேபோலும் காயவியூகாதிகளாமோ, யாவைதிவ்வியமாய இரம்பைலாபாதிகளாமோ, ஸ்வாத்மநி = நிர்விகற்பமாயதம்பால், ஸ்வேந = அகண்டாநந்த அநுபவத்தால். மற்றது வெளிப்படை. 52

அ - ஸ்கை. இப்போதுரைத்த திரபுத்தியினது இலக்கண மருளப்பெறுகின்றது;—

வித்ருஷ்ண: ஸர்வஸௌக்யேஷு நோத்விக்னோ து:கஸங்கமே,
கதஸாத்வஸருக்ராக: ஸ்திதப்ரஜ்ஞ உச்யதே.

க. இன்பமெவை யெய்திடினு மிச்சையிலா திலங்கிடுவன்
துன்பமெவை தோன்றுறினுந் துயரமிறை யுந்தொடரா
னன்பயஞ் சினமாசை யடையாத போதவன்றான்
மன்பெருகுந் திரவறிவ னென்றவனை மலருவரால்.

வி. கதஸாத்வச = பயமற்றவன், எழுந்திருந்தபோதினும் பேததரிசனமின்மையின். கதருட் = ரோஷமற்றவன், எல்லாப்பிராணிகட்கும் அபயத்தையினிதீதலின். கதராக = ஆசையற்றவன், சகலகாமங்களையு மடைந்திருத்தலின். எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌமாதி யிரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற, நல்லாநந் தங்களெலாம் பற்றிலா வறிஞ னணுகுதலான் ஞானங்கொண் டறிசிவத்தின் கூறுய்த் தொல்லாநந் தங்களெலா நிற்கையினு லவற்குத் தோமிலகண் டானந்தச் சித்தித்தோன் றுதலே, பொல்லாத வினைப்பகையைக் கடந்தபெருந் தவர்கள் புகன்றிடுவர் சகலகா மாப்தியென வன்றே. என்றது கூறவும்பெற்றுளது. வித்ருஷ்ண = மகிழ்வின்மை நோத்விக்ன = வாட்டமின்மை. சங்கமம் = அடைவு திருவாய்மலர்ந்தருளிய இரண்டுசுலோகங்களின்பொருளை ஸ்ரீபார்த்தசாரதியெம்பெருமானும் உபதேசித்தருளியுள்ளார்:— அறிவினிற் றன்னு லின்புற் றனைத் தவா வினையு நீக்கி, வெறிதரு வெகுளி காம மயக்கநீத்தின்ப துன்பம், வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சியென் றிவையு மாய்த்துப், பொறிதரு நலனுங் தீங்கும் போற்றல் போற்றுமை போக்கி. 53

யதாऽயங்கச்சபோऽங்காநி ஸங்கோச்ய திஷ்டதி ஸ்வத:
விஷயேப்யஸ்ததாங்காநி ஸங்கர்ஷேத்யோகதத்பர:.

க. கமட மென்ன மங்ஙனமவயவங் களைத்தா
னிமிடங் கொண்டுற முற்றினு னிட்டையே முயல்வோன்
சுமடு றும்விட யங்களிற் சுரோத்திராதிகளை
நிமிடங் கொண்டிடிற் றிரப்பிரஞ் ஞையனென நிகழ்வான்.

(வி - ம்.) எந்த யோகதற்பர = தியானமே செய்வதில் முயலும், யோகியானவன், கமட = ஆமையயா = எங்ஙனம் அங்காநி = அங்கங்களைத் தன்னிச்சைப்படி சங்கோசயுதி = சுருக்கிக்கொள்ளுமோ, தயா = அங்ஙனம், விஷயேப்ய = சத்தாதிகளினின்றும், ஆயாசமில்லாமலே, காநி = புலன்களை, வயப்படுத்தப்பட்ட அவற்றை, சங்கர்ஷேத் = சுருக்கிக் கொள்ளுவானோ, அவன் திடப்பிரஞ்ஞன் எனப்படுவன் னென முன்னன்னுவயமாம். சர்வத = எல்லாவிடயங்களி னின்றும். அயம் = இந்த, பிரசித்தமெனக் காட்டற்பொருட் டாம். ஸ்ரீபகவற்கீதையிலும்: ஆமைதன் னுறுப்போரைந்து மதனுளேயடக்குமா போற், றீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தி, வாய்மையு ணிகழு மின்னே வழுத்தவும் படுகின் றானுற், றூய்மைசெய் தவையே நாளுஞ் சொல்லுவ தவன்றன் சொல்லால். இங்ஙனம் அருளப் பெற்றுளது.

(அ - கை.) இந்திரிய ஜய உபாயத்தையருளல்:—

வ்யவததெந்த்ரவ்யவிஷயாஸ்த்வக்தாஹாரஸ்யவஹிடிணஃ,
விநாராமஂவாராமொவிஷ்ட்ருஷ்ட்வாநிவநஸ்யதி.

சு. ஓசையே முதலா யுற்ற வுறவினை வுற்றி லானை
வீசியே வெறுக்கு மாகத் தகுமெனல் விடலின் றேனும்
ஆசையார் வெறுப்பு முள்ளத் தமர்தரு மவையு மேகும்
மாசிலாப் பிரமந் தன்னைக் காண்புறு மாண்பி னனே.

(வி-ம்.) வர்ஷ்மிண = தேகஅபிமான வானுயினும், அஸ்யத்யகத்தாஹாரஸ்ய = ஆஹாரணம் விடயமடைய்யும் பொருட்டான முயற்சியாம், அதுயாவனுல் விடப்பெற்றதோ அத்தகையதியாகியை, தானேவந்து கிடைத்ததில் மகிழ் பவனை, விடயநினைவற்றவனை, விஷயா = விடயங்களாகிய ஒலி யாதிகள் தாமாகவே,வ் யாவர்த்தந்தே = விடுகின்றன. ஆனுல் ராகஞ்ச = விருப்பும்உம்மையால் வெறுப்பும், விநா = இன்பத் தைத்தரும் விடயத்திலிச்சையும், துன்பத்தைத்தரும் விட் யத்திற் றுவேடமும் ஆகிய இவை சூக்குமவடிவமாக உள்ளத் திருக்கும், நீங்கமாட்டா, ராகோபி = அவையும், பிரஹ்வ த்ருஷ்ட்வா = பிரஹ்மசாக்ஷாத்காரஞ்செய்தவனை,விநஶ்யதி = பிரஹ்மவித்தையினது பெருமையினுலே விட்டுநீங்கும். 55

விபஶ்சித³ப்யதோ ஹேரம்ப³ யோகி³நஸ்தி²திமாஶ்ரயேத்,
ஆஸ்தா²யாந்த்யகாலேபி ஸ்வாத்மாநம் நிவர்தயேத்.

க. மன்னவுணர்ந் தவனெனினு மாசிறவர் நிலையேய்ந்தே
யின்னமுயன் றிடல்வேண்டு மில்லாக்கா லிந்தியங்கள்
ஞன்னுடைய மனந்தனையும் ஞாளியென வலையுரிந்து
பன்னுகின்ற வல்லமையாற் படியிலிடர்ப் படுத்திடுமே.

(வி-ம்.) எதனுலிங்ஙனம் அதனுல், பிரஹ்மதரிசனத் தானே இராகத்துவேஷமும் நிவர்த்திக்கும் எனினும், விபச் சித் = ஆன்மதரிசியானவன், ஹேரம்ப! யோகிநஸ்திதிம் = காலமெல்லாம் பெரியோராற்றும் சமாதியனுட்டானத்தை, ஆஸ்தாய = பின்பற்றி, யததே = முயன்றுசெய்வன், என்றரு ளாள், முயன்றுகொண்டே யிருக்கவேண்டும் என்பதாயிற்று. ஒப்பாதபக்ஷத்திற் பாதகம் அருளுவார் மந்தயித்வா என்றரு ளினுர். அஸ்ய = பிரஹ்மதரிசனஞ் செய்தவனுயினும் நிட்டை யில்லாதவன்றன் இந்திரியங்களாகிய கருத்தாக்கள், மனத்

தை, மந்தயித்வா = தம்வயப்படுத்தி யாகுலம்புரிவித்து, பலத = தம்மாற்றலினனே, ஞானநிஷ்டையினின்றும் நழு வும்படிசெய்வித்து, ஆஹரந்தி = விடயங்களில் உழலும்படி செய்விக்கும்; ஆகலின் ஞானத்தை யினிதுகாத்தற்பொருட் டுச் சமாதிப்பியாசத்தை விடவேகூடாதென்பதாம். அரு ளிய இரண்டுசுலோக அரும்பொருளையும் ஸ்ரீகிருஷ்ணமூர்த் தியும் ஸ்மரித்தருளியுள்ளார்: —குறையுமாப் பிணிப்புற் றுறலுங் கொண்டவிப்புலன்களெண்ணி, லறைகடலனைய நெஞ் சத் தவாவறு னறிவி னில்லான், மறைமொழிப லவுமோதி யடக்குவான் மனத்தைவாங்கிப், பொறைகெடப் புலன்க ளைந்தும் பொறியிலே புகட்டுங் கண்டாய். 56

(அ - கை.) இதனையே யருளிச்செய்கின்றார்:—

தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:,
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா.

க. பொருந்தின னவைவயம் புரிந்தெப் போதுமே
பொருந்துக நம்பரம் புலன்க ளானவை
திருந்திவ ணடங்கிடல் செறிந்த மாதவன்
மருந்துருங் கிருததீ மகம தாகுமால்.

(வி - ம்.) மனத்தை யொருமைப்படுத்தி முடித்தவன், பொறியைவென்றவன், தியானபரனாயவனே அவனே கிரு ததீயெனப்படுவன், மற்றையன் அல்லன் என்றறிக. யுக்த= பொருந்தியவன், தாநி = அவற்றை, வசேகிருத்வா=வயம் புரிந்து, சர்வதா = என்ஞான்றும், மத்பரேபவேத்=எம = நிஷ்டையிற் றற்பரனா யினிதுநிற்க; இஹ = ஈண்டு, யஸ்ய= எவனுடைய, இந்திரியாணி=காதுமுதலியவை, சம்யதாநி= அடங்கினின்றனவோ, அசௌ = அவ்விதத்தகையனே, கிரு ததீ = மதிமடக்கியவன் என்பதாக, மத: = சம்மதம். 57

(அ - கை.) ஜிதேந்திரியனல்லாத வுணர்வுடையவன் கெடுதலின் முறையை இருசுலோகங்களா லருளிச்செய்கின்றார்:—

விஷயாந்த்யாயதோ நித்யம் விஷயேஷ்விஹ ஜாயதே,
ஸங்காத்ஸஞ்ஜாயதே காமஸ்தத: க்ரோதோ(அ)பிவர்த்ததே,
க்ரோதாதஜ்ஞானஸம்பூதிர் விப்ரமஸ்தத ஏவ ச,
ஸ்ம்ருதிப்ரம்ஸாத்புத்திநாசோ புத்திநாசாத்விநச்யதி. 59.

க. வருபொருணினைவோர்க் கன்னவற்றிலே பற்றாமத்தால், வருநசை யதனாற் கோபங் கோபத்தான் வருமான் மோகம், மிருதியினிரிதலத்தான் மிளிர்மதித் தளர்வுதன்றாற், பொருவரு மவனும் மொன்றிப் போவனென் றுணர்திபூவோய்.

(வி - ம்.) விஞ்ஞானவாயினும், இந்திரியத்தானே கண்ட, விஷயாந் = விடயங்களை, சிந்தயாநஸ்ய = தியாநஞ் செய்து கொண்டிருக்கப்பட்டவனுக்கு, தேஷு = அவற்றின் கண்ணே, இஃதெனதிட்டமென ஆண்டு, ஸங்க: = பற்றுதல், உபஜாயதே = உண்டாம்ததஃ= அதன்பின், காம: சஞ்யாதேன இஃதெனக்குண்டாகுகவென, அதன் விடயக ஆசையுண்டாம், தஸ்மாத் = அதனால், அதனைச் சம்பாதிக்க வேண்டுமென்று முயன்றபோது தடையுற்றவழி, க்ரோதோ அபிவர்த்ததே = சினமானது சிதையாமல் வளரும். க்ரோதாத் = சினத்தினானே, அஞ்ஞானசம்பூதி = பெருமோகமானதுண்டாம், மூடனுக்குச் செய்யத்தக்கதாய பொருளிலும் பூத்தி விபரீதத்தையடையும், தத: = அதனானே, ஸ்ம்ருதேவிப்ரமஸ்து = அவசியம் அநுஷ்டிக்கத்தக்க விடயமும் மறந்து

போய்விடும், ஸ்ம்ருதேப்ரம்ஸாத் = ஸ்மிருதியின் பிறழ்ச்சி யினுலே, முன்சம்பாதித்த, மதேர்த்வம்ச: = பிரஞ்ஞையும் போய்விடும், தத்த்வம்சாத் = அது அழிந்ததேவே, சோபி நஸ்யதி = அவ்விவனுங்கெட்டுச் சமுசாரமுறுவன். இது விடயத்தை ஸ்ரீபார்த்ததேசிகனும் அருளியுள்ளார்:—ஆத லிற் புலன் களைந்து மடக்கரி தடங்கா தாகாதலாற் புகைந்து வெய்ய காமமாய்க் கொளுந்திக் காம, மேதலா காமை தீய வெகுளியா யெரியு மன்றே. எரிநிகர் வெகுளி பொங்க மயக் கம்வந் தெய்து மெய்தத், தெரிபவை சிதையு முள்ளந் தெரிந்தவை சிதைந்த போதே, யுரியதன் னுணர் வுமாயு, முணர்வுமாய்ந் தொழிந்த வாறே, யரியவென் றறிஞர் பேசு மினைத்துமாய்ந் தொழியு மன்றே. (58-59)

(அ - கை.) இங்ஙனம் புலனைவலியாத மனனைமுனி யாத பூன்றவுணர்வினனது பொன்றுதல் புகன்றருளப்பெற் றது, யாவன் பொறியைநிறுவினுன் உளத்தையழுத்தினுன் அவன்வயமான இந்திரியங்களானே வரும்விடயத்தில் வழங் கியபோதினும் வசிகிருதமனத்தனுயிருத்தலின் எத்துணையும் விருப்பு வெறுப்பின்மையின், பற்றுமுதலியவற்றை யியற் றுன்; மற்றோ, அடைந்ததின்மகிழ்ந்து அலம்புந்தியையே யவன் அழகாயடைவன் என்றருளிச் செய்கின்றார்:—

விநாஜெஷஂவாாஹஂவெஷாவாாநிஸூ-ஹெவஸூஜொகூ,
ஹுாயீநஹூஜெயொவஹெவஷஂஹெெதாஷஂஹஸஹூஜி.

க. விருப்பொடு வெறுப்பு தின்றி விடயோ கங்க ளேய்ப் பான், திருப்பிடு புலன்க ளானே திருவுரு மறவா தேவுன், இருப்புறுந் தனுத தீன விருதய முடைய வன்னுன், அருப் பெரு மகிழ்வி னேடுமெலம்வந்தங் கமரு வானுல்,

(வி - ம்.) விராத்வேஷஞ்சஇராகஞ்ச = வெறுப்பும் விருப்புமின்றி, கோசராந் = விடயங்களை, வஶ்யைகை: = வயமாய இந்திரியங்களானே, சரேத்யஸ்து - யாவன்றான் அநுபவிப்பன், ஸ்வாதீன ஹ்ருதயோஸௌ = தன்வயம்புரிந்த மனத்தினனான அவன், சந்தோஷம் சம்ருச்சதி = மகிழ்ச்சியைமருவி வாழ்வான். 60

(அ - கை.) சந்தோஷம் சாதகனுக்கும் இஷ்டமென்றருளிச்செய்கின்றார் :—

த்ரிவிதஸ்யாபிதுகஸ்ய ஸம்தோஷே க்ஷபணம் பவேத், ப்ரஜ்ஞயா ஸம்ஸ்திதஸ்யாயம் ப்ரஸந்நஹ்ருதயோ பவேத்.

க. மகிழ்வுறிற் றுயர் மூன்று மடிந்திடும்
புகழ்வுறும் பரி பூரண ஞானமா
ரிகழ்விலாத மெய்ச் சாதக னோர்மனந்
திகழ்வுறுந் தெளி வாகத் தெரியுமால்.

(வி - ம்.) தூலதேகத்துற்றனவும் சூக்குமதேகத்துற்றனவும் ஆக வருவது அத்யாத்மிகதுக்கமாம்; சீதவாதாதிஜன்யம் ஆதிபௌதிகமாம்; பூதப்பிரேதாதிஜன்னியம் ஆதிதைவிகமாம்; இத்தகைய திரிவிதஸ்யாபிதுச்கஸ்ய = மூன்றுவகையாய துயரமும், சந்தோஷே = சந்தோஷஞ் சார்ந்தபோது, க்ஷபணம்பவேத் = சாம்பிப்போம்; ப்ரஜ்ஞயாசம்ஸ்திதஸ்ய அயம் = பிரஞ்ஞையோடுகூடிய புத்தியோகத்தையுடைய இந்தச்சாதகன், ப்ரசந்நஹ்ருதயோபவேத் = தெளிந்த வுளத்தினனாகத்திகழ்வன். இம்மூவிததுக்கத்தைப் பெரியாரும் கூறியுள்ளார்:—இருவகையா மான்மிகமிக் காயத்தி னெஞ்சின், வருமவைதா னேதக்கேண் மாணுப் — பொருவரிய, குன்மமதிசாரம் வெப்புக் கொடுஞ்சூலை, யன்னபிற வின்னங்களாய். மக்களொடுதுட்ட மிருகம்பேய்வன்பசுநற்,

பக்ஷிபறிப் போரசுரர் பற்பலவுந், தொக்கிலுறல், சோகமரு
வை யபிமான மாற்சரிய, மாகுபல வுள்ளுறு நோயாம். சீத
முடன் வெம்மை செறிந்து மிகச்சலிக்கும், வாதமழை தடி
த்து வாணிலிடி—தீதிற், கௌரியொரு பாகன் கருணையினா
லாகும், பௌதிகமீ தென்றே பகர். கருவா யுதரத்திற் கட்
டுண்டன் மண்ணி, லுருவாகி யுற்பவித்த லோங்க, னரை
திரை தான், மைவிரவனு ஞானமரண நரகஞ் சனனந், தெய்
விகமீ தென்றே தெளி. 61

(அ - கை.) சந்தோஷத்தானே தெளிந்த இருதயனும் கூறியவகைக் கருமயோக நிலைநின்றவனும் ஆகிய முனிவனுக்குப் புகன்றருளிய பூமிலாபம் பொருந்தும் என்பதாக வெதிரேகமுகத்தான் மலர்ந்தருளல்.

விநாப்ரஸாதம் நமதிர் விநாமத்யா நபாவநா,
விநாதாம் நஸமோ பூப விநாதேந குத: ஸுகம்.

க. அன்றிமெய் யருண்மதி யமைவுறு மதி
யின்றியெம் பாவனை யிலையுறு தஃ
தின்றியின் சமமுறு விறைவனே யஃ
தின்றிநல் லின்புற லெங்ஙனே யுமே.

(வி - ம்.) விநாப்ரசாதம்=பிரசாதமின்றி, நமதி = மதியில்லை, விநாமத்யா = மதியாலன்றி, நபாவநா = பாவனையில்லையாம், விநாதாம் = அஃதில்லாமல், நஸமோ = சாந்தியின்றும்; பூப!=பூமிபால ! விநாதேந = அஃதாலன்றி, குத: சுகம்=யாங்ஙனமின்பம். திருவருள்பெற்றவனுக்கு ஆன்மாவை யறியவேண்டுமென்னும் அவாவாகிய மதியாம், அதனானே ஆத்மைகபாவனை, அதனானே சமமென்னும் அந்தரிந்திரிய க்கிரகம், அதனால்சம்பிரஞ்ஞை யதன்சுகம், நவம், பக்குவம், பக்குவ

தரிம்,பக்குவதமம், என அச்சம்பிரஞ்ஞாத சுகம் நால்வகைத் தாம். அவற்றுள் ஆதிகிது சமீவித்வான், இரண்டாவது வித்வத் வரன், மூன்றாவது வித்வத்வரியாந், நான்காவது வித்வத் வரிஷ்டன்; என்பதாம். அருளிய மூன்றிசுலோகங்களி லருளிய பொருளை ஸ்ரீபகவானுமருளல் :— "வேண்டல்வேண்டாமை யின்றி மிக்கசெலாப் புலன்களாலே, மாண்டயோ கங்க ஞெய்ப்பான் மனங்கலக் குறான் மற்றத்தா, வீண்டிய தெளிவுண்டாமாற் றெளியவே யெல்லையின்றிப், பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனிலை நிற்கு மன்றே. அடுத்தலைம் புலன் செயாதார்க் கறிவில்லை மறிவின்றாக, விடுத்தமெய் யுணர்வின் றாமான் மெய்யுணர் வில்லை யாகிற், றெடுத்தபின் சித்த சாந்தி தோன்றிடா ததுதோன் றாதா, லெடுத்தநல் லின்பந் தானு மில்லையே யிசைக்க வேண்டா. 62

(அ - கை.) இந்திரியங்கட்கு மனோதூஷகத் தன்மை யானே, ஞானநாசகத்தகைமை நாட்டியருளியதை முடித் தருளுகின்றார்:—

[illegible]

க. பொருள்களை நுங்கும் பங்கப் புலன்களாம் பரிகளோடு, மருள்பெறத் தொடர்ந்து மேவு மனந்தனைப் புலன்கண் மாற்றி, யருள்வர வுடன்செல் காலே யுததியிற் பஃறியொத்தே, யருள்களைந் தறிவை மாய்த்திங் கலைவுறச் செய்யு மன்றே.

(வி - ம்.) மந : = மனமானது, யத்விஷயாந் இந்திரிய அஸ்வாந்விசரதோ = எத்தத்தமது சப்தாதிகளைக் கோசரிக்கும் இந்திரியங்களாகிய அசுவங்களை யநுசரித்து நடாத்திச் செல்லுமோ விஷயாந் அநுவர்த்ததே = எவ்விந்திரியங்கள்

வாயிலாக விடயங்களின் றொடர்ச்சியுறுமோ, தத் = அவ்விந்திரியம், இச்சநதகனது, மதிம் = உண்டாகியிருக்கும் உணர்வையும், ஹரதி = நசிப்பிக்கும், அப்சுநாவம் மருத்யதா = காற்றோடத்தைக்கடலிற் கவிழ்த்தல்போல். ஆகலின்யோகியினால் எப்போதுமே இந்திரிய ஜயம் செய்யத் தக்கதேயாம். ஸ்ரீமத்பகவற்கீதையிலும் இஃதருளப்பெற்றுளது:—ஆறு செல் பொருள்கடுய்க்கு மைம்புல னுக்கும் பின்னே, காமுெடர் நெஞ்ச மந்தப் புலன்றனைக் கலக்கு மாங்கே, யூறிய டைனு ளோடு கலத்தினை யுடன்செல் காற்றே, வேறுசெய் தறைந்து மாய்த்து வீழ்த்துமா போலவே யாம்.

(அ - கை.) காக உலூகநிசா நிகர்ப்ப அறிஞ அறியாரது அநுபவவிடம பாவத்தை யருளல்:—

யாநிஶா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே:

க. எவ்வுயிர் தமக்கு மியாதிங் கிரவெனப் படுவ தொன்று, மவ்வயின் ஞானி யானே னயர்துமே துயிலா னல்லார், எவ்வுழித் துயிலே யின்றி யேங்குவ ராங்கு மேலோன், செவ்விதிற் றுயில்வன் கண்டாய் செழுநில மளிக்கும் வேலோய்.

(வி - ம்.) யாராத்ரிஸர் வஜந்தூநாம் = எல்லாப் பிராணிகட்டும் யாதுஇரவாமோ, எதன்விடயத்தில் மூடர்துயில்வரோ, தஸ்யாம்ஸ: நைவநித்ராதி = அந்தப்பிரத்தியக்குவஸ்துவின்கண் அறிஞன் துயிலவேதுயிலான், மற்றுேவிழித்தேயிருப்பன். யத்ர = எவ்வெளிவத்துக்களில், இஹ = இங்கு, தே = அம்மூடர், விழித்திருப்பர், அல்லாமல், நஸ்வபந்தி = தூங்கவேதூங்காரோ; ஸாராத்ரி = அஃதிரவாம், தஸ்ய = அவனுக்கு, ஆண்டறிஞன் தூங்கியே யிருப்பன்,

விழித்தேயிரான் என்பதுபொருள். சமுசாரத்தின் அத்தியந்த அபாவபரியந்தம் இந்திரியஜயம் அப்யசிக்கத் தக்கதாம். ஸ்ரீகீதாஸ்மிருதியிலும்:—யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்போற் காணு மாதரு ஞானியத்தை யுளங்கையிற் கனிபோற் காணு, மியாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காண்பார், காதலின் ஞானியத்தைக் கண்ணிற்றெரியக் காணான். அருள்செய் பொருள் அருளப்பெற்றதாம். அஞ்ஞவதைப்பரணியின் கண்ணும் "ஒழித்தேயுள்ள முணர் வடைய வொழியா வொருவன் வருமவவும், விழித்தே யுறங்கும் விளங்கிழையீர் மேவுங் கபாடந் திறமினோ" எனஇது காணலாம். பூப! விளி. 64

(அ - கை.) இன்மையிற் றிருட்டாந்த மியம்பியருளல்:—

ஸரிதாம்பதிரேயாந்திவநாநிஸர்வதோ யதா.
ஆயாந்தியம் தயா காமாஸ்ஸர்வா நாஸாந்திம்ஸ்ப்ருஹ..

க. எங்கும் பொங்கும்பு னலிவை யாவையுந்
தங்கு மாற்றின்ப தியினிற் றன்மைபோ
லிங்கு மெய்யனைக் காமங்க ளெய்வுறும்
பங்க சாந்தியைப் பற்றில னெங்குமே.

(வி - ம்.) பங்கசாந்தி = அசாந்தி, பங்குஅசாந்தி = பரிச்சின்ன மதியாலுற்ற அசாந்தி. எங்குமே = எப்போதுமே. வநாநிஸர்வதோ = எப்பக்கங்களிற் றோற்றுகின்ற நீர்களும், யதாஸரிதாம்பதிம் ஆயாந்தி = எங்ஙனம் நதிகளின் பதியாகிய சமுத்திரத்தைச் சாராநிற்குமோ, தயா = அங்ஙனம், யம் = சத்தியகாமனுய் சத்தியசங்கற்பனுயுள்ளவனை. காமா = எல்லாக்காமங்களும், ஆயாந்தி = எய்துறுநிற்கும்,

சம்பிரஞ்ஞாதத்தில் நன்குசார்வுற்றே சமுத்திரத்திற்சலாந் தரங்கள்போலும் எவனது அசம்பிரஞ்ஞாதத்தில் லீனமோ மோச = அவன், க்வசித் = எக்காலத்திலுமே, அசாந் = திம் கிளர்ச்சியை, நலபேத் = அடையான். ஸ்ரீமத்பகவற்கீதையிலும்: —நீரிஞ் னிறைந்து நின்ற கடலிலே நெறிமேற் கொண்டு, நீரிஞ் னிறைந்த வாறுவிழுந்தன நிறைவுறுது, தேரிஞ மதுபோ லரிசை செறிந்தவர் திறமே நோக்கிச், சாரு மாலாகி லத்தை யவர்களுஞ் சலித்தல் செய்யார். இப்பெரும் பொருள்காணலாம்.

(அ - கை.) சாதன சர்வைசுவரியத்தை யுடசங்கரித் தருளல்.

தஸ்மாதீஹஸம்ருத்ய ஸர்வதோ நிரோதவ:
ஸ்வாந்யேந்த்ரியாணி ஸ்வார்தேப்ய: ஸ்திரா நிருணா.

க. ஆகலிற் றத்தம விடய மார்வுற,
வேகமுற் றிடும்புலன் வெறுத்து மானவன்
ஏகமுற் றினுமிவ னெதிர்த்தபோதினின்
மோகமற் றிவன்மதி முதிர்ந்து தோன்றுமே.

(வி - ம்) அத = எக்காரணத்தானே இந்திரியஜயப் பொருட்டு ஏகைகைவல்யம், அக்காரணத்தானே, காணி தாணி = அவ்விந்திரியங்களை, இக = ஈண்டு, ஸ்வஸ்வ அர்த் தேப்ய: = தத்தமதுவிடயங்களினின்றும், சர்வஶ: = முற்றி னும், சம்ருத்ய = தடுத்துத்திருப்பி எக்கால், மாநவ = இவ் வதிகாரியிருப்பன், ததா அஸ்ய = அக்காலிவனது, புத்தி = மதியானது, ஸ்திரா = திரமுறப்பெறும். அப்புலன்கள் எத் தன்கயனவெனின், தம்சப்தாதிகளின் பொருட்டு, ப்ரதா வந்தி = ட்ஓடமெடுப்பன வென்பதாம்.

(அ-கை.) அத்தியாயத்தின் சர்வ அர்த்தங்களையும் உபசங்கரித்தருளல்.:—

மமதாஹங்க்ருதீ த்யக்த்வா ஸர்வாந் காமாம்ஶ்ச யத்நத:,
நித்யம் ஜ்ஞாநரதோ பூயாத் ஜ்ஞாநாந்முக்திம் ஸ யாஸ்யதி.

க. எனதினோ டகங் காரத்தை யீர்த்தவன்
மனதினெ டெந்த வாஞ்சையு மாய்த்தவன்
தனதுஞா னத்தி னுனிதஞ் சார்ந்தவன்
இனிதுஞா னத்தி னுன்முத்தி யெய்வனல்.

(வி - ம்.) மமதாஹங்க்கிருதீத்யக்த்வா = எனதென்ப தன் விடயமாய மனைவியராதி வெளிப்பொருள் மாத்திரத் தின் றியாகம் மமதைத் தியாகமாம், அகங்கிருதித்தியாகம் அதன் விகாரங்களாய தம்பதர்ப்பாதிகளின் றியாகமாம், இவ் விரண்டு தியாகங்களையு மியற்றி, சர்வாங்காமாங்சத்யஜேத் = வித்தையின் பலவடிவ திவ்ய அதிவ்ய விடயமியாவற்றையும் விட்டு, நித்யம்ஞாநரத: பூயாத் = எப்போதும் நிர்ப்பீஜ (நிர் விகற்ப) சமாதிபரமுற்று ஞப்தி (அறிவு) மாத்திர சொரூபப் பிரஹ்மநிஷ்டன் ஆகுக; இத்தகையனுகியோன், ய: = யா வன், ஸ = அவன், ஜீவன்முக்தனுயினும், ஞானுன்முக்திம் யாஸ்யதி = ஞானத்தால் விதேகமுக்தியை யடைவன். "விமுக் தனுயிருந்தே விடுபட்டிடுவன்:" எனச் சுருதியுமுளது. ஈண் டேயவித்தையாலாக்கப்பெற்ற காமகரும பந்தனங்களினின் றும் விடுபட்டவனுயிருந்து மீண்டுஞ்சரீரத்தைக் கவரமாட் டான் என்பதாம். இதனுனே முத்தன் பிராரப்தகரும அப த்தினுய்ச்சிறிதுகாலம் இருப்பன் எனக்காட்டியருளியதாகும்.

ஸதாம் ப்ரஹ்மீயம் ஸம்வேத்யோ விஜ்ஞாநாதி தைவதம்
தஸ்யாவஸாநம் ப்ராப்யாவிர்பூய ஸம்வேத்ய ஸித்யதி.

க. இப்பெரிய ஞானமதை யிறைவவெவ னெம்மருளாற், றப்பிலது கடைகாலந் தழுவியுமே யறிந்திடுவன், செப்பரிய சீலமொடு முத்தியையுஞ் செறிந்திடுவ னப்பெரியன் றன்பே ருமை யளவிடுதற் காகுமதோ.

தன்னை மன்னவ ஞானி தரணியோர், மன்னும் வண்ணம் மலர்ந்தருள் செய்பவே, அன்னையென்ன வகணஜயி னங்க மேன், மன்னு மாரியன் மாண்பதம்பூண்பமால்.

ஓம் தத்சத் இதி உபநிடதார்த்த கருப்பம் வாய்ந்த ஸ்ரீமத் கணேசகீதையென்னும் யோகாமிருத அர்த்தசாஸ்திரத்தில் ஸ்ரீமதாதிகணேச : புராணத்திலுள்ள ஸ்ரீகஜானனவரேண்ய சம்வாதத்தில் சாங்கியசாரார்த்த யோகமென்னும் முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

(வி - ம்.) ஏதாம்=எம்மாலுபதேசிக்கப்பெற்ற, பிரஹ்மதியம்=பிரஹ்மவித்தையை, பூப !=நரேந்திர ! யோவிஜாநாதி தைவத :=யதார்த்தமாக ஈசுவர அநுக்கிரகத்தால் யாவனறிவனோ, ஸ = அவன், துர்யாவஸ்தாம்ப்ராப்யாபி= அந்தியவயதை யடைந்தும், ஆண்டு ஞானமுற்றவனாகி, ஞானத்தின் பலமாகிய, யேநகேநசித் தென்பதாதியானே சூத்திரக்கிரந்தத்திற் கூறப்பெற்ற சீலம்=ஒழுக்கத்தையும், முக்திம்=கைவல்யத்தையும், ருச்சதி=அடைவன். இவ்வரிய அருத்தம் பரமார்த்ததரிசனத்தும்காணலாம். யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான், றனெனச் சரிக்கின்றான் யா ரவனேயே யடையுஞ் சாந்தி, யீனம தடையா ரித்தை யடைந்தவ ரிறக்கும் போது, ஞானமே யுடையா ரென்னை நண்ணுவர் பிறவி நண்ணார்.

ஈசன்றிருவருளானே கிடைக்குமென்பது மகான்களானும் மலரப்பெற்றுளது :—ஸ்ரீகண்டனகண்டகாத்தியம், பர

சிவனருளி னானே பரவத்து விதத்தை நாடுங், திரமுறு நினை வின்செல்வங் திகழிரண் டிலது மூன்று, பரமருக் கினிதுண் டாயின் பகரிது சமுசாரத்தில், வருமிரும் பயத்தை நீக்கி வளமுடன் காக்கு மன்றே. மூலசித்தி :—பொறிபுலன் கரணங் காணேன் புணர்தரு விடயங் காணேன், அறிவுட னயர்வுங் காணேன் அநமித மெவையுங் காணேன், மறவியு நினைவுங் காணேன் வள்ளலார் பார்த்த போதே, யறிவரு மறிவே யான வருள்விழி யாண்ட வாறே. அந்தியாவஸ்தை யடைந்தபோது மறிவுறலாமென்பது ஸ்ரீமத் பாகவதத்தும் பிரசித்தமாம்:—கழிபுகழ் கட்டு வாங்கனென் றுரைப்போன் கடவுளர் சொல்லினுள் ளாவி, யொழிவதற் கிரண்டு கன்னலுண் டினியென் றுணர்ந்தன னனைத்தும்விட் டொருவி, யழலவிர் மணிச்சூட் டரவினின் றுடு மமலனை நினைத்துவீ டுற்று, ஞெழுபகல் கிடந்த வுனக்குமற் றெண்ணிலென் னைகொல் பெறுவதற் கரிதோ ஸ்ரீகணேசப்பெருமான் மூன்றுவதத்தியாய ஆரம்பத்தில் தாம் சருக்காதியில் ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு இவ்வுத்தமயோகத்தைத் திருவருள்செய்ததாகத் திருவாய்மலர்தரப்போதலின் ஈண்டாங்காங்கு ஸ்ரீமந்பகவற்கீதையையும் சாமியப்படுத்தியுதாகரித்தாம், இனிவருமிடங்களினும் சிலபாற்காட்டுவாம். பிறப்பொடு மிறப்பை யகற்றுகம் பிரப் பெருமருஞ் சற்பொருள் பெரிதுங், திறப்புறக் காட்டுங் கணபதி கருத்தின் றீபிகை யெனுங்கணேச் சுரன்றன், சிறப்புறு சாதுர் தானனி புரிந்த திவ்விய கீதையி னுரையின், மறப்பறு முதல தாமத்தி யாயம் மாமுகன் றிருவடி மகிழ்வே.

ஸ்ரீமத் பதவாக்கியப்பிரமாண மர்யாதாதுரந்தர சாதுர்தர வம்சாவதம்ச கோவிந்தசூரிசூனு ஸ்ரீநீலகண்டபண்டிதராற்றிய ஸ்ரீகணேசகீதை டீகையில் இது முதலத்தியாயமாம்:



## இரண்டாவதத்தியாயம்

(அ - கை) ஸ்ரீகண்டபதிகீதைத் திருக்கருத்தை ஸ்ரீகணேசப்பெருமானன்றி மறிவார், அயலாரறியார், என்றாலும் அச்சூத்திரவிருத்திகள் அறையப்பெற்றன ஒருவாறாக, இனியதன் எஞ்சியவார்த்திகத்தை விரித்திடமுயல்வாம். அற்றேல் ஈண்டு விருத்தியில், சக்தி சூரிய விஷ்ணு சதாசிவ கணேசசப்தங்களான் முறையே அன்னப்பிராண மநவிஞ்ஞான ஆநந்தமெனப் பெயரிய பஞ்சப்பிரஹ்மங்களை யுபந்யசித்தருளி "அகமே மகத்தா கியகா ரணனும்; அகமே யருளண்ணல்சதா சிவனும், அகமே மகத்தா கியசத் தியுந்தா, னகமே தினமாக் குவனும் பிரியோய். என ஐந்தினுக்கும் துரியா, தீத ஆனந்தமாத்திர சொரூபத்தன்மை தொகுத்தருளப்பெற்றது. அவ்வாறே சூத்திரத்திலோ: அயனுயர்வா. னண்ணுவது நலயோகம தலவாமிக நாடின், றண்ணரளி யுருவாநிறைதமியேனுள மிலையால். பலமுறுந் தெய்வ சைவப் பதத்தினிற் றிகித்தன் றானும்; வலிமிகு யோகே யன்றாம் வைணவபதத்தில் வாழ்தால், தலைமைசெய் புட்பவந்தத்தகைமைகள் யோக மாகா. என்பதாதியவாய நான்கினுக்கும் மேன்மை நிஷித்தமாம்; ஓரே சத்தியலோகத்திற்கு அயற்பெயர் விராட்டுருவமென விலதாம், பலத்தின் றுச்சத்தன்மையும் ஆநந்தைகரசத்தன்மையானே பரமார்த்தசத்தியத்தன்மையும் பரஸ்பரம் விருத்தஞ் சம்பவியாதாம்; ஆகலின் முன்பின்முரண்பாடுண்மையின் இவ்வார்த்திகம் வியாக்கியானிக்கத் தக்கதன்றாம் எனின்? இதுதோஷமாகாதாம். கனம்போலுமாலங்கட்டிபோலும் இயற்கை செயற்கையாய கரைவுகளைப்போலும் ஒன்றினுக்கே வித்தை யவித்தை அவத்தைப்பேதத்

தானே உபஸ்ரூபத்தன்மை யெவ்வலின். அங்ஙனமன்றே:--அன்னுதிநான்கையும் தனித்தனியுபாசகர் அந்தகஜநியராய்த் தானே ஒவ்வொன்றையும் பிரித்து, முழுதும் பிரஹ்மமெனத் தியானிப்பவராய் முழுப்புருடார்த்தத்தைப் பஜிப்பவராகார் என அவற்றின்மேன்மை, அயனுயர்வர் னண்ணுவது நல யோகம தலவாம் என்பதாதியானே நிஷித்தமாம். அங்ஙன மன்றே சமுச்சயத்தில்: இரண்டாவது பாதவீற்றில் பிரா தேசமாத்திர வைசுவாநா பரமாத்மாவெனத் துணியப்பெறும். ஆண்டு யாங்ஙனம் அதிமாத்திரமாய பரமான்மாவிற்குப் பிரா தேசமாத்திரத்தகைமை யென்னுஞ் சங்கையுளதாக. சம் பத்தேரிதிஜைமிநி = மூர்த்தமுதலாய் சுபுகமீறாயுற்ற பிரா தேசமாத்திரத்தில் வைசுவாநரரின் உபாசியத்தன்மைப் பிரதி பாதனத்தாற் பரமேச்சுரருக்குப் பிராதேசமாத்திரத்தன்மை சம்பந்தமாம். அந்தப்பிராதேச மாத்திரத்தன்மைச் சம்பத்தி யினுல் பிராதேசமாத்திர சுருதி பொருந்தாதிற்கு மென்பதாக ஜைமிநியாசிரியர் எண்ணுகின்றனர். என்னுமிச் சூத்திரத்தினு லேமூர்த்தாதிசிபுகாந்தப் பிரதேசபிராதேச மாத்திரத்தில் மூவுலகவடிவமாய வைசுவாநரருக்குச் சம்பாத்திய வுபாஸ்ய மானத்தன்மையுண்மையின் அவருக்கும் பிராதேசமாத்திரத் தன்மையாம். இவ்வுபாசனையினது கண்கண்டபலம் "பாவஞ் சைமிநிவிகற்ப மநநத்தால்" சரீரஇந்திரியங்கட்கு மனத்திற் கேபோலும் சத்துவம் ஜைமிநியாசிரியர் எண்ணுகின்றனர் "அவனொருவகையாவன் மூவகையாவன்" என்பதாதியானே அறிஞனுக்கு அநேகவகைப் பாவவிகற்பா மனனத்தான்; சரீரபேதமில்லாமல், ஒருகாலொருவகைம் பாவம், ஒருகால் அநேகவகைப்பாவம் சம்பவியாதன்றே என்னுமிச் சூத்திரத் தானே காயவியூகாதி ஐசுவரியம் எனக்கூறப் பெற்றுளது. தேகாந்தத்திலோ அர்ச்சிராதி மார்க்கத்தானே மூர்த்தன்ய

நாடியால் காரியப்பிரஹ்மலோகப் பிராப்தியாம். அதுவே நித்தியம்பரம் பிரஹ்மமென மோகத்தானே நினைகின்றனர் சிலர். "பரம்ஜைமினி முக்கியத்தன்மையான்" நபும்சப்பிர ஹ்மசப்தத்திற்குப் பர்த்தின்கண்ணே முக்கியத்தன்மை யுண் மையின் பரமேயாய பிரஹ்மம் அடைவிப்பன் ஆமானவன் என ஜைமினியாசிரியர் நினைகின்றனர். என்றது சூத்திரிக் கப்பெற்றுளது. அவ்வாறே பிராதேசமாத்திரமாய இருதய தருப்பணத்தில் வைசுவாநரர்தம் முக்காலத்திய சகல வஸ்து வாத்மத்தன்மை மிகவிளக்கமாகக் கவரப்பெறும்; இவ்வியா வும் எவ்விவ்வான்மாஎனவும், எது விவனுளதாமெது வில தெவையும் அது விவணடைவுற்றறிதருமன்றே" என்னுஞ் சுருதியுண்மையின், "அபிவியக்தியாதலின் என்பர். ஆஸ் மரத்யர்" அநவச்சின்னமாய் பரமான்மாவிற்கும் பிராதேச மாத்திரத்தன்மைபொருந்தும், என்னை, அபிவியக்தியாத லின், உபாசகர்களின் அனுக்கிரகப்பொருட்டுப் பரமேச்சுரர் இருதயாதிஸ்தானங்களில் பிராதேசபரிமாணமாக இலங்கா நிற்பர், என்பதாக ஆஸ்மரத்யாசிரியர் துணிவர். என்னுஞ் சூத்திரத்தானே பரமேச்சுரருக்கும் உபாதியாலாய பிராதேச மாத்திரத்தன்மை பகரப்பெற்றுளது. இதற்கும் கண்கண்ட பலம் சர்வஞ்ஞத்தன்மையாம், அதிருஷ்டபலமோ முன் போன்றே சத்தியலோகஅடைவாம். அவ்வாறே, "அநு ஸ்மிருதியினுற் பாதரி" பிராதேசமாத்திர இருதயபுண்டரீ கத் திருக்கும் மனத்தினுலே தியானிக்கப்பெறுதலால் பிரா தேசமாத்திரமென வுபசரிக்கப்பெறுகின்றது என்பதாக பாதரியராசிரியர் துணிவர். என்னுஞ்சூத்திரத்தானே பிரா தேசமாத்திர இருதயத்தை யதிட்டித்துநின்ற மனத்தானே அனுஸ்மரியமாணத்தன்மை யுண்மையின் பரமான்மாவிற்கும் பிராதேசமாத்திரத்தன்மை புரைக்கப்பெற்றது. இதனது

க்ண் கண்டபயன் மாநஸிகமேயாய ஐச்வர்யமாம்; அதிர்ஷ்டமோ காரியப்பிராப்தியேயாம், "காரியம் பாதரியிதன்கதியுபபத்தியினுன்" காரியமேயாய பிரஹ்மம் அடையத்தக்கது எனப் பாதரியாசிரியர் துணிகின்றனர், என்னே, இக்காரிய பரிச்சின்னப்பிரஹ்ம அடைவு கூடலின் அதாவது அடையத்தக்கதாந்தன்மை கூடலின் என்பதாம். என்று சூத்திரிக்கப்பட்டிருத்தலின், அவ்வாறே "இயம்புகின்றனனே யிவன் றன்னை யிதனில்" இந்தப் பிராதேச பரிமாணமூர்த்த சுபுத அந்தராளத்தில் இப்பரமேச்சுரன்றன்னை ஜாபாலங்கள்" எவ்விவ்வனந்த அவ்யக்த ஆத்மாவுளதோ அது அவிமுக்தத்தில் 'பிரதிஷ்டிதமாம்" என்பதாதியாகப் பிரதிபாதிக்கின்றன; ஆகலின் பிராதேசமாத்திர சுருதிபொருத்தமுடைத்தேயாம், ஆகலின் சர்வான்மகமாய பரமான்மாவே ஈண்டுபாசிக்கத்தக்கதாம் என அதிசோப்பனம் என்றிவ்வாறு பிராதேசமாத்திரமாகிய புருவக்கிராணசந்தியில் அநந்தமாம் அவ்யக்தமாயிலகும் ஆத்மாவின் உபாசனத்தை ஜாபாலங்கள் விதிக்கின்றன. அவ்வவிமுக்தம் உபாசிக்கத்தக்கது என இதற்குத்தானமென்னென்னும் வினவாயிலாய்ப்புருவக்கிராணங்களினது எச்சந்தியுளதோ அது என்பதாக ஆத்தியாத்மிக அவிமுக்த ஸ்தானங் காட்டப்பட்டிருத்தலின், ஆகலின் பரமான்மாவிற்கும் பிராதேசமாத்திரத்தன்மை கூறப்பட்டது, ஈண்டு, "எழும் புவனுக்கிங்ஙன் பாவத்தாலென்பவ வுடுலோமி" சமுசாரதசையில் முற்றினும் பிரஹ்மத்தினின்றும் அயலாய்ப் பிரஹ்மாத்ம சாக்ஷாத்காரத்தால், காரியவிரண சங்காதத்தினின்றும் கிளம்புவனுக்குப் 'பரமாத்மாவின்' ஏகீபாவத்தான், வரும் அபேதங்கொண்டு ஜீவோபக்கிரமமென ஔடுலோமி யாசிரியர் துணிவர். ஆன்மாவேயடிகாணத்தக்கது என்னும் மந்திரத்தில் ஆன்மசப்தம் பரமான்மாவென்பது சித்தாந்தமாம்,

ஜீவஉப்க்கிரமமிருத்தலின் ஜீவன்ஏனுகான் என்னும் விஞக் கண்ணுளதிது. இந்தனத்தினின்றுங் கிளம்பிய எரிக்குக் கொளுத்தலும் ஒளிர்த்தலும் உண்மையாமாறு கிளம்பியவ னுக்கு அபேதத்தன்மையும் உண்மையாம்; என்பதாகப் பே தாபேதவாதி யெண்ணுவன்? அவ்விருநால்வரும், அந்தகஜம் போலும், குறையானபிரஹ்மத்தைக் கொண்டவராதலின் காரியப்பிரஹ்மத்தையேயடைவர். அவ்வாறேயீண்டும் ஜைமி நிபாதரிகள் அத்தியந்தம் அறியார்கள் துவைதபாத அத்து வைத தரிசனங்களின்மையின் ஆகலின் அவர்தம்முன் முதல வன் கற்பாந்தரத்தில் வியட்டிதேவதைத் தகைமையையும், மற்றவன் சமட்டிதேவதைத் தகைமையையும் அடைவன். இதரர் பாதியறிந்தவர் சத்தியலோகத்தில் உற்பன்னமாய நற் றரிசனமுடையராய்க் காரியமுடிவிற் பிரமனேடும் பரப்பிரஹ் மபாவத்தைப்பற்றுவர். ஆகலின் இவர்கட்கு முக்கியகை வல்யம் கிடையாமையின் யோகமியாததை முக்கியயோகமன் ருகும் என்றருக்திரித்தருளப்பெற்றது. யாவர்தாம் துவைத பாதவாயிலாக அத்துவித ஆநந்தமடைந்தனரோ அவர்க்கு முழுதும் ஏகரசமேயாம். "எங்ஙனமச்சைந்தவகனமந்தர, மிலவெளிமுழுதுமிரசகனமாம், அங்ஙனந்தானரேயான்மா வி துவும் அந்தரம்பரகியம்அற்றதுமுழுதும், அகலறிவின்கன மாகுமன்றே" வித்யாநிமித்த சர்வகாரியப்பிரளயத்தில் உப் பின்கனமொப்ப உள்வெளியின்றி முழுதும்பிரஞ்ஞானகன மாய ஏகஆன்மாவிலேபெற்றிருக்கும், என மறையோதலின், ஆகலின், அன்னப்பிராண மநவிஞ்ஞானமென்னும் நான்கினு க்கும் அவித்தையாலாய வேற்றுமையிருந்தபோதினும் பர மார்த்ததிருஷ்டியால் ஏகரசமாயிருத்தல் பொருத்தமுடைய தாம் எனச்சூத்திரவிருத்திகட்கு முரணுறலிலதாம். ஆகை யால் அதன்வார்த்திகரூப உத்தரக்கிரந்தம் அவசியம் வியாக்

இயானிக்கத்தக்கதாம் என்பது சித்தம். அற்றேல் இங்ஙனமாயினும் இதன் விஸ்தாரத் தன்மையான், 'அதன் வியாக்கியானத்தானே இஃதடங்கிய பொருளாம்என இவ்வுரைத்தனை யுரைத்தலான்' என்னேபயனெனின்? அற்றன்றும், போத்தியபேதத்தான் நானுசாக்கிய அக்கினிஹோத்திரம்போலும் இதுவும் அவசியம் வியாக்கியானிக்கத் தக்கதாதலின். அதிக அர்த்தத்தன்மையானே பிட்டபடணநியாயமுமிலதாம், ஆகலின் உரைவிரிக்கத்தக்கதேயாமிது. ஆண்டாதியது முழுத்துவைதம் விழுத்தலினுனே சித்திக்கும், இரண்டாவதோ துவைதப்பற்றினுனே என இவற்றின் முரணுண்மையின், யான்ஞானுதிகாரியா? அல்லது கருமாதிகாரியா? எனத் தன்பால் ஐயுற்றவரேண்யன் வினுதல்:—

ஜ்ஞாநநிஷ்டா கர்மநிஷ்டா த்வயம் ப்ரோக்தம் த்வயா விபோ|
த்வயோரேகம் வத மே நிச்சிதம் ச்ரேயஸ்கரம் நு கிம்||

௬. யோகமேயுரைத்தவண்ணம்யுத்தியிற்புரிதியாயின்
ஏகமேயடைதியின்னுமிருவகைகேட்டியென்றுன்
மாகமேல்வெளியிலானமலையுமையமையும்விட்டு
மோகமேயொறுக்கவீரமுனிவரனுகிவந்தோன்.

௧. ஞானம்பயில்வினையேபயினலமேயிவையெனவே
தேனம்புயநிறைநாயகதிருவாய்மலர்ந்தனையால்
யானும்பயிறரவேகமதெதுயாவினுமேலாங்
கானம்புரிதருவாய்கணிகணியாவணிதுணியே.

(வி - ம்.) விபோ - விபவியாபக! வியாபகத்தன்மையானே எல்லாப்பிராணிகளின் உள்ளக்கிடக்கையையுணர்வோய்! ஞானநிஷ்டை கருமநிஷ்டையென த்வயம் - இருநிஷ்டைகள், த்வயா - தேவரீரால், ப்ரோக்தம் - அருளப்பெற்றன, அவ்விரண்டுமே பேர்ற்றத்தக்கனவேயாம், எனி

னும், மே - அடியேனுடைய, அதிகாரத்தை, அவதார்ய- துணிந்தருளி, யானுமேன்மையினும் மேன்மையானதெனத் தேவரீரால் துணிந்தருளப்பெற்றுளதோ யாது அத்தியந்தம் அடியேனுக்கு இதத்திலும் இதமாமோ அதனை யருளிச் செய்வீராக. நிஃபூர்வசிரேய ஃ சப்தம் அச்விருதியந்தம் நிபாதிக்கப்பெறும் ; நிதராம்ஶ்ரேய: நிஃஶ்ரேயஸம் அவதார (5-4-77.) நிபாதிதமாம். மே = மம - அடியேனுக்கு, நு - நிச்சிதம், இம்சப்தம் வினப்பொருளது. யாது நிச்சயித்தருளப்பெற்றது மேன்மையைச்செய்வதெனை அதனைத் துணிந்தருளித் திருவாய்மலர்ந்தருளுவீராக என்பது யோஜனை. (1)

(அ - கை.) இவ்வண்ணம் பிரார்த்திக்கப்பெற்ற ஸ்ரீகஜாநநர் திருவாய்மலர்ந்தருளல் :—

ஶ்ரீகஜாநந உவாச — அஸ்மிந்த்வைவிதா ஜ்ஞாநகர்மநிஷ்டா ப்ரோக்தா மயா ஸாங்க்யாநாம் ஜ்ஞாநயோகேந கர்மயோகேந கர்மிணாம்.

க. இங்குமுன்னரன்பனேயெமாற்சராசரங்களாய்த்
தங்கிரண்டுநேர்மையாதல்சாற்றலாயவேதமேற்
பொங்குசாங்கியம்புணர்க்குப்புந்தியோகசந்தியான்
மங்குகன்மகாண்டிகட்குவைதயோகமாகவே.

(வி - ம்.) அஸ்மிந் = இவ்வுலகத்தின்கண், ஞானகரும அதிகாரிகளாகிய இருவகையினரைக்குறித்து, த்வேஸ்தித் யௌ = அதிகாரபேதத்தான் இருக்கின்றது இதன்கண்என்னும் விற்பத்தியினனே ஸ்திதிசப்தித நிஷ்டாஸ்தானத்தில், ஞானபூமிகருமபூமிரூபத்தில், மயா = வேதகருத்தாவாகியவேத விநாயகரென்னும் எம்மால், புரா = கற்பாதியில், ஜனஹிதப் பொருட்டு ஆத்திதிகள் அருளப்பெற்றனவாம். சராசரங்கள்; தக்கவாறு கருமஸ்திதிசராஜன்னியத் தன்மையானே, கரும

பலம்அநித்தியமாதலின், "பண்ணியதொழிறருபயன்களியா வையு, மண்ணிடைநுகர்ந்திடமாளுமாறுபோற், புண்ணிய வினைதரும்போகமியாவையும், விண்ணிடையிருந்தனுபவித்து மீளுமால்." எனச்சாந்தோக்கிய சுருதியுமருளுகின்றது ஞான ஸ்திதியோ அசராஜன்னியத்தன்மையான், அதன்பயனுய கைவல்யம் அஞ்ஞானமகற்றன்மாத்திரத்தானே சித்தமாத லின், சராத்வங்கூடாமையின் ஸ்தித்யெளஎனப் பூர்வசவர்ண தீர்க்கமாகாதது ஆர்ஷமாதலின், [பிரியஎனவிளித்தருளியதா னே் நீயோ ஞானஸ்திதியோக்கியனுகவிருக்கின்ருய் எனக்கு றிப்பித்தருளியதாம். "இன்னவர்தங்களிலென்னுெடும்வேரு, யுன்னவிலாமையின்ஞானியுயர்ந்தோ, னன்கூவனல்லனெனக் கவனுக்கே, நன்னலம்வைப்பதுநானுநலத்தோய், என்பதாக ஸ்ரீபகவானுலும் அருளப்பெற்றுளதாம். பிற்பாதியான் அவ் விரண்டுஸ்திதிகளும் பகுக்கப்படுகின்றன:—சாங்க்யானும்= எண்ணிக்கை யியற்றப்பெறுகின்றன விடயவிடயிவியாகத் தானே தத்துவங்கள்சிறப்பாய்ச்செய்யப்பெறுகின்றன எவர் களானே அவர்கள் சாங்கியர்கள், பிரகிருதிபுருடவிபாகமறிந் தவர்கள், அவர்கட்கு புத்தி = ஞானயோகே = ஜீவப்பிர ஹ்ம அபேதஞானத்தானே எவ்வியோகம் தாதாத்மியசம்பந் தம், அகம்பிரஹ்மாஸ்மி யென்பதாதிசாஸ்திரசித்தம், அத னுனே நிஷ்டைநிகழ்த்தப்பெற்றது. ஞானமென்னும் பிரத் தியக்குச்சித்துரூபத்தில்இருப்பாம் எப்போதும் யாதுளதாய வழி அது; ஞானமே கைவல்லியசாதனமென்பதுபொருள். அற்றேற்சாங்கியர், குணபுருடாந்தரஞானத்தானே கைவல் யம் எனத் தத்துவபுருட அயற்றைகமையுணர்வே கைவல்ய சாதனமெனவெண்ணிப் பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தைத் தேடமுயலார், ஆகலின் யாங்ஙனம் ஞானயோகத்தானே சாங்கியர்க்குஞானநிஷ்டையெனக் கூறலாகும் எனின்? ஈண்

டியம்புதுங்கேட்டி! பிரபஞ்சத்தில் எத்துணைபரமார்த்தத் வபுத்தியும் புருடபேதபுத்தியும்உளதோ, அத்துணைப்பிரஹ்ம மத்திற்கும் கைவல்யமிலதாம். பிரபஞ்சசத்தியத்வவாசனைக்கு நாசமின்மையின்? இதனுனே, எல்லாநூலாசிரியரும் வாசனைசகிதமித்தியாஞானத்தையே சமுசாரமூலமென இச் சிக்கின்றனர் ஆகலின் அத்வைதநிஷ்டையே ஞானநிஷ்டை. சாங்கியரோ, ஞானப்பிரதிபத்தியுபாயத்தன்மை பதார்த்த சாக்ஷாத்கார உபேயத்தன்மை உபசாரமாக வுரைப்பர் அவ்வித அசராநிஷ்டை வைதயோகே = விதி யினி வைவைதங்கள். இதுஇஷ்டசாதனம் இதுஅநிஷ்டனம் என்பதாக அறியாப்பொருளை யறிவிக்கும் பரமாய சாஸ்திரம்விதி:, அதன்றுதர்வைதர். அரசன் ஆணையைத் தாண்டுவதில் மகத்தானபயத்தைக்காண்பவராய் அரசதாசர் இருப்பர், அதுபோல், விதித்ததைச் செய்யாமையாலும், நிடேதித்ததைச் செய்வதாலும் தமக்கச்சங்காண்பவராய் இருப்பர்வைதர்; அவரதுயோகம் என்பதனுனே அதுவைத யோகமாம் = கருமானுஷ்டானம். அதனுனே கருமிணும் கருமாதிகாரவான்கட்கு, “மைந்தனமைந்தோன் மயிர்கறுப் புள்ளோன், செந்தழலாதானஞ்செய்திடுக” என்னுஞ்சாஸ் திரஅதிகாரிகட்கு வைதயோகத்தானே கருமநிஷ்டை திரு வாய்மலர்ந்தருளப்பெற்றது. சோதிக்கப்பெறுத துவம்ப தார்த்தன் பஞ்சகோசங்களோடொருமித்துஆன்மாவைப்பார் த்தவன் கருமாதிகாரி. சோதிக்கப்பெற்ற துவம்பதார்த்தனே சமஸ்தபேதபாவனைகளும் நீக்கப்பெற்றவனுகிப் பிரஹ்மாத் மைக்கியவிசாரமாகிய வேதாந்தஅருத்தசிரவணமனனநிதித் தியாசனத்தில் அதிகாரியாவன்என்பதாம். இச்சங்கையும் சமாதானமும்: — ஸ்ரீமத்பகவத்கீதையிலும் : நன்றேவினை யின்ஞானமெனவுரைத்தாய்மீளவினைநல்ல, தென்றேயுரையா

னின்றனைநானிவற்றிலெதுநன்றெனவறியேன், குன்றேயனையாயுனையடைந்தேற்குற்றதுயர்நீக்கிடுவதனை, யொன்றேயாகவுரைத்தருளவேண்டுமென்றனவனுரைப்பான். ஆதியிலுலகினையாக்கியன்றநா,ளோதியபொருளிவ்விரண்டுமுண்மையே. நீதியலவாவருஞ்செயலைமாற்றுவனன், மீதியல்வினையுறன்வீடுமேவிடான் என்றருளப்பெற்றது. (2)

(அ - கை.) இங்ஙனமாயின் ஞானநிஷ்டையேசாதிக்கத்தக்கதாம், விதானகருமங்களானே யாகவேண்டியதென்னேவென்னும் வரேண்யனுசங்கையையனுசரித்தருளல்:—

𑌅𑌨𑌾𑌰𑌂𑌭𑌣𑍇𑌨 𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍। 𑌨 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌸𑌂𑌤𑍍𑌯𑌾𑌗𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 [illegible]॥

க. விதியாயினவினையாயினவிளையாமையினானே
மதியாயினன்வினையேயிலமருவானிருவாணம்
மிதியேயிலைமிதமாதொழின்மிகவீடவினானே
கதியேயுறலிலையேநரர்கவிகாவலபுவியே.

(வி - ம்.) வேதாநாம் = விதியினாலேயடைவுற்ற வினைகளின் "கறைசெயைம்புலன்களைக்கரணநான்குடன், றுறைதுறை யடைக்கலுந் தவமுந் தூய்மையும், பொறையொடுகல்வியும்பொருந்து ஞானமும், மறையவர்தொழிலெனவகுக்கப்பட்டதே. என்பதாதிசாஸ்திரத்தானே, வருணாசிரமசம்பந்தி நியதங்களாயகருமங்களின், அநாரம்பேண=தொடங்காமையால், ஆரம்பமாற்றாத நிமித்தநிகழ்ந்தவழி, புருஷ:=மனுடவுடல்படைத்தஜீவன், நிஷ்க்ரிய:=மோக்ஷதன் நபவேத் = ஆகான். பாதஞ்சலரோ, காயவாங்மனங்களின் சருவவிருத்திநிரோதத்தானே கைவல்லியங்காதலிக்

கின்றனர், இதனாலதுகிடைத்தருளப்பெற்றது,, இதனை யேதிட்டப்படுத்தியருளல்: கேவலாத் = பிரஹ்மாத்மைக்கிய ஞானமின்றி, கர்மணாம்=கருமத்தின், சந்த்யாகாத்=துயலிற் போல எவ்வுணர்வும் இன்மையினானே, சித்திம்=முத்தியை, நயாதி = அடையான் ஆகலின் சாஸ்திரஞ்சாற்றியதரும் அநுஷ்டான வாயிலாகவேஞானசித்தியானதுண்டாம் என் பதாம். இதுவும் "சித்தத்தின்றூய்மைதானுஞ்சேறிதரும் பெரிது" என்பதான விருத்திக்கிரந்தத்தில் அருளப்பெற் றது அதனினின்று மேயனுசந்திக்கத்தக்கதாம். ந்ருப=நிரு பன், விளி; நரர்தமைப்பாலிப்பவன் நீயாதலின், நீகருமஞ் செய்யாதொழியின் பின்யாவரே வைதிகராவர்என்பதாம். 3

(அ - கை.) ஆசையற்றுத் தன்றருமம்அனுஷ்டிப்பதன் பலவடிவமாய மனத்தூய்மையிலதாகவே அகிலவாக்காயமநங் களின் விருத்திநிரோதமும் அமையாதாம், என்னுந்திருக் கருத்தால் அருளுகின்றார்:—

கஹாஷிஹகி௱யஃகொவிக்ஷணஂமெநவாவதிஷூெத
கஷ஬தஜாஃவ஬க௱திசஜெஹ-௰௨செணகஂ-௰வகாய-௰செத

க. எப்போதினுமேவனுமேகணமும்
தப்பான்வினைசாருதல்சார்புளனாய்
மைப்பால்வருமவான்குணமூன்றதனான்
முப்போதினுமேவினையேமுயல்வான்.

(வி - ம்.) சோதியாத சித்தத்தையுடையபுருடன், கதா சிதபி = காலத்திரயத்திலும், க்ஷணம் = கணமாத்திரைப் போதேனும், அக்ரியஃ = சகலகாயவாங்மநோவியாபாரங்களி னின்றும் விடுபட்டவனாய், நைவாவதிஷ்டதே = அமர்ந் திருப்பதற்குத்தக்கவனாகான்; ஏனெனிற்கூறியருளுகின்றார்: சுதந்திரமின்றியவனென பிரகிருதி: = முன்முடிந்த அறமற

வாசனை = வடிவசமஸ்காரராசி, ஜ = அவற்றினின்றுமுண்டாய், இப்பிறப்பிலெழுந்துவந்த, குணா = மேற்கீழ்ப்பாவ விடயவிருப்புவெறுப்புமுதலன, தை = அவற்றுனேவயப்படுத்தப்பட்டிருத்தலின், அஸ்வதந்த்ர꞉ = பராதீனனுன, இப்புருடன், முற்பழக்கப்படியே கர்மகார்யதேவினையின் மூழுவன் வகரம் துணிவின்பொருட்டாம். வாசனையால் வந்த பிரவிருத்திவாங்கமுடியாததாம் என்பதுதிருக்கருத்து; எதனுனே குணங்களால், கர்மகார்யதே ஏவ = கருமங்களைச் செய்தேதீர்வன் என்பது யோஜனையாம்.

(அ- கை.) அற்றேல், தன்னதீனமேயாய்த்தன்காயவாக்குள்ளங்களின் வியாபாரவிலக்கம் யாவருக்கும் எளிதின்முடியும்என ஆசங்கைநிகழ அருளுகின்றார்:—

காரயத்யக்ஷக்ராமம் யஸ்தம் நியம்யாஸ்தே ஸ்மரந் புமாந், தத்கோசராந் விமூடாத்மா மித்யாசார ஸ உச்யதே.

க. புன்றொழிற்படுத்தும்வெய்யபுலன்களினிட்டந்தன்னை
யொவன்றடர்த்திருப்பனெண்ணம் விண்குணவிடயமாதி
சென்றிடமந்தபுந்திசீயெனுமொழுக்கனென்றுங்
கன்றினனேவனன்றான்கடையனென்றிகழலாவன்.

(வி - ம்.) மொழிதல் கோடன்முதலிய தொழில்களை, காரயதி, பூர்வவாசனையாற் செய்விக்கின்றதுஎன கர்மகாரீ, அத்தகையது இந்திரியக்கிராமமாய்=புலன்களின் குழுவாம், தம் = அதனை, நியம்ய = எவ்வாறேனு ஒருவாறுக, துள்ளியோடுந் துட்டப்பரியை அடக்கலொப்பஅடக்கி, ஆஸ்தே = இருப்பன், ஏகாந்தத்திலிருந்து தியானஞ்செய்பவன் போல் பவனுய் நிச்சலனுவன். தத்கோசராந் = அவ்விந்திரியங்களின் விடயங்களாகியசப்தாதிகளை, புமாந் = எப்புருடன், மனத்தால், ஸ்மரந் ஆஸ்தே = நினைத்துக்கொண்டிருப்பனே

ஸம்ஞ்சுசித்த: = அச்சடமதியாகிய சித்தநிக்கிரக ஆற்றலற்ற வன், பொய்த்தியான அபிநயத்தால், சற்புருடரால், திகாசார: = சீயெனவிகழும் ஒழுக்கத்தனாகி, பூசையின் சைவப் பூசையன் எனவும் கொக்குநிட்டையிற் குந்தியன் எனவும், பாஷ்யதே = நிந்திக்கப்பெறுவன் என்பது பொருள். கருமங்களானே சோதித்த சித்தமுற்றவனே எத்தியானம் புரிவனே அத்தியானபலத்தை முடியாகவுடையவனுவன். ஆகலின் பொய்த்தியானத்தைப்போக்கி விதிப்படி உள்ளமா சொழியும்பொருட்டு வினைகளே விருப்புடன் வினையத்தக் கனவாம் என்பது திருக்கருத்தாம். மொழிந்தருளிய இரு சுலோகங்களின் திருக்கருத்துப்படி ஸ்ரீபகவற்கீதையிலும்:— "ஒருவரு மொருபொழுதினு மோர்காலமு, மிருவகை வினை செயாதவர்களில்லையா, லருமயலவாவுறான் வினையடக்குவான், பருவரலொடு பொய்யே பாவிப்பானரோ" அருளப் பெற்றுளது. (5)

(அ - ரு.) எவ்வகையானே யியற்றியகருமம் சித்த சோதகமாம் என்றறியும் வேட்கையுறத் திருவருள் செயல்:-

யஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்யாரப⁴தே(அ)ர்ஜுந
கர்மேந்த்ரியை: கர்மயோக³மஸக்த: ஸ விஶிஷ்யதே.

க. இந்தியக்குழுவைநன்றுமியிதயத்தாலடக்கிமுந்திப்
பிந்தியங்தொழிலைப்பேணப்பெருவயிராகமுற்றோர்
இந்தியங்களினுற்கன்மயோகமேயியற்றல்யாதோ
நிந்தையதிலதுமேன்மைமிகுமதுநிருபனேயோ.

(வி - ம்.) தத்க்ராமம் = அக்கருமேந்திரியங்களின் ஞானேந்திரியங்களின், கிராமம் = சமூகம் = கூட்டம், மநஸா = விடயவிருப்பம் விட்ட சித்தத்தானே, ஆதௌ = தொழிலைத்

தொடங்கும் முன்னரே, சம்நியம்ய = நன்றாக நிக்கிரகித்து, வகாரம் ஆநந்தர் யார்த்தம், அதன்பின்னர், கர்ம = அக்கினிஹோத்ராதிகம், சித்தசுத்தியின்பொருட்டு, ஆரபேத் = அனுஷ்டிக்கவேண்டியதாம். வித்ருஷ்ணை: = மூவித ஆவா அற்ற புருடர்களாகிய கருத்தாக்களால், இந்திரியை: = கரணங்களால், யத்கர்மயோகம் = எக்கர்மங்களின் அநுஷ்டானம் உளதோ, ஸபரோ = அதுமிகமேன்மையதாம். ஹேநருப! என விளித்தருளியது, நரர்தமைக் காப்பதனானும் அவர்க்குப் பதியாதலினானும், மேன்மைமிக்கநீ யாதுதான் செய்வாயோ அதனையே அயலாரும் ஆற்றுவர் என்பதைக் காட்டியருளுவதற்காம். வித்ருஷ்ணவென்னும் பாடத்திலும் இதேபொருள்கொள்க. ஆண்டுமூவித பலதிருஷ்ணை:-யான் இவ்வண்ணம் நிஷ்டையானே கருமங்களைச்செய்து உலகத்தில் மான்யன் ஆவேன் என்பது இடாம்பிகனது திருஷ்ணை. அக்கினி ஹோத்திராதிகட்கும் காமியத்தன்மை யுண்மையின்; "குடிகஞ்சி யன்னந் தயிர் நெய் கிராமகாமனன்னாதி காமனிந்திரிய, காமனுந்தேஜஸ் காமனென்பவர்க்கே" என ஆசுவலாயனமுனிவராற் கிராமாதிகாமர்களாய புருடர்கட்கு முறையாக யவாக கூவாதி திரவியங்கள் வாய்ந்தகருமங்கள் ஸ்மரிக்கப்பட்டுள்ளன. அதுவும் இகலோக சம்பந்தத்திலேயே சிலர்க்குத் திருஷ்ணை. அக்கினிஹோத்திரம் வேட்க அமரலோககாமன் என்ப் பரலோக சுகத்தின்பொருட்டும் அக்கினிஹோத்திராதிகள் விதிக்கப்பெற்றிருத்தலின் அவ்விடயகமாய திருஷ்ணை மூன்றாவதாம். இவ்வாறாய மூவித திருஷ்ணை = ஆசையற்றவன், வித்ருஷ்ணனாவன் இக்கருத்தன் கருமங்களின் முக்கியபலமாய சித்தசுத்தியையடைவன். ஆதலின் அவனே மேலவன் மற்றையன் அல்லன் என்பது பொருள். (6)

(அ - கை.) அன்றியும்;

[illegible]

க. ஆங்சமோசியாகலரயயாகமாதியாதமேதா
வீசுமேன்மைமேன்மைமேவும்வீடலாம்வினையினும்
நீசகாயநீடுறுநேரிலாவினையனுக்
காசகாயமீர்தலாகவார்தருனுமாகுமோ.

(வி - ம்.) அகர்மணஃ =எத்தொழிலேயும் விடுவதினும், சிரேஷ்டதமம் = மிக மிகச் சிறந்தது, அநிச்சயா = நானாவித பயன்களேக் காமித்தல் இச்சை, அஃதில்லாமை அநிச்சை, தயா = அதனுல், க்ருதம் = செய்யப்பெற்ற கருமம்=தொழில், யத்து=யாதோ என்னுடைய இத்தருமம் எனக்கின்றியமையாதது; இதனையியற்றுதொழிலின் யான் இடர்ப்படுவேன் என்னும் மதியினுதல், இதனுல் யான் எனது சித்தத்தைச்சோதித்துக்கொள்ளுவேன் என்னும் மதியினுதல், பரமேசுரப் பிரீதியின்பொருட்டுப் பயில்வேன் என்னும் மதியினுதல், என்பதாம் எல்லாவற்றுனும் இடாம்பிகன் இயற்றிய மேன்மையற்றதைநோக்க, இகலோக சம்பந்த பலங் காமியம் மேன்மையுற்றதாம், இகசம்பந்தி பரசம்பந்தியின்பலம், மேன்மையினும் மேன்மையதாம், பரசம்பந்தியின்பலம் மேன்மையினும் அதிமேன்மையதாம். நிட்காமங்களினும் ஆதியது சிறப்பாம், இரண்டாவது சிறப்பினுஞ் சிறப்பாம், மூன்றுவதோ சிறப்பினும் அதிசிறப்பாம்; து=ஓ சப்தம், இச்சை யநிச்சைகளா லியற்றப்பெற்றகருமங்களின் மூற்றினும் விலக்ஷணத்தன்மையின்பொருட்டாம். மேலும், வர்ஷ்மணஃ = தேகத்தினது, ஸ்திதிரபி = நிலைமையும், அஸ்ய = இவ்வதிகாரியாகிய, அகர்மணஃ = எல்லாவாற்றுனும் கரும

ருணியனுக்கு, உண்டாகவே மாட்டாதாம்; தேகக்காப்புந் தேராதாம். சங்காதவியற்கைபடைவாயதொழிலின் முற்று மின்மையான் சங்காதஞ்சாம்புதலேச்சாரும் அதுவும் வாசனை யுடையவனுக்குத் துர்மரணரூபத்தன்மையானே நிரயப்பொருட்டேயாம் என அபி = உம்மைச் சப்தத்தானே யுரைத் தருளியதாம். (7)

(அ - கை.) சிரேஷ்டதமமேயாயபக்ஷத்தை விபக்ஷத்திற் பாதங்காட்டும் வாயிலாக வெளிப்படுத்தியருளல்.

[illegible]
[illegible]

க. செய்யும்வினையெம்வயினீந்திலர்சேர்வர்பந்தம்
நையும்மதனாற்சநநஞ்சநநத்திலுலே
பெய்யும்வினையேதினம்பேணுகபெய்தலெம்மி
னையும்வகைநாட்டறுஞ்சங்கமுநண்ணுறுதால்

(வி - ம்.) யாகாதிகருமம், எம்பால், அசமர்ப்ய = அர்ப்பணஞ் செய்யாமல் நிபத்யந்தே = கட்டுறுவர் "கிருதமதான கீழ்மேற் பலதொழி, லொருதலையாயே யுண்ணுதலுரனே" என்னும் நியாயத்தானே கருமத்தாற் பிறப்புற்று மறித்தும் முன்வாதனையானே வினையே விளைவிப்பர். அவ்வித்தொழிற் பிறவிகளின் வருகைப்பரம்பரை விரைமுளை நியாயத்தானும். ஸ்ரீபகவானாலும் "வீவரெனக்கொடு மெய்தனர்வாயேல், யாவர்பிறப்பவர் யாவர்களேனுஞ், சாவர் பெயர்த்து மவ்வாறு சனிப்பர், காவலிதற்குளதோ கடனேகாண்." என்பதாக அருளிச்செய்யப்பெற்றுளது. அபிசப்தம் = விசேஷப்பொருட்டாம். தேஜநா = அக்கருமத்தாற் சனிப்பர். உம்மை யுணர்த்திய சிறப்பையருளல்:-குர்வீத சததம் கர்ம = தொழிலையே யெப்போதுந் தொடர்ந்துசெய்க, "ஈண்டு கன்மங்க

ளியற்றியேனூரு, மாண்டுவாழ்வுறவே விளைந்தமைந்துய்க." எனமறையு மறைகின்றது. இங்ஙனமாயின் முன்மொழிந்த எல்லையின்றிச் செல்லும் வழக்காமென்னற்க; எக்காரணத் தானே அநாசோ அசங்கோ மதர்ப்பணமாமோ = எனை யெய்தும்பொருட்டாக எக்கருமங்களின் செய்கையுளதோ அது மதர்ப்பணமாம். அவ்வாறே அசங்கமும் = பலத்தி யாகமும். கூறியருளிய இரண்டும் கருமத்தின் அநாசன நிமித்தங்களாம். விதித்தகருமங்கள் யாவுமே பலந்தந்து போன்றும். சங்கம் = யான் இயற்றுகின்றேன் என்னும் அபிமானம், இதனை யிதனால் எய்துறுவேன் என்னும் பலா சை, இவ்விரண்டும் சங்கம், அஃதிலாமலும் எமதர்ப்பிதமும் ஆயகருமம் எமதிலாபத்தை யிபற்றமல் ஒருகாலத்திலும் ஒழிவுறுதாம்.

(அ - கை.) இவ்விரண்டையுமே விளக்கமாக உரைத் தருளல்:—

மதர்த்தம் யாநி கர்மாணி நநிபத்நந்தி கர்ஹிசித்
ஸர்வாஸ நதிஶம் கர்மாணி யத்ர க்வசிதபி தேஶே காலே வா.

க. எத்தொழில்களுஞ்செயினுமெம்பொருட்டவாகப்
பத்தமதுளுற்றிடுதலெங்கணும்படாதா
லித்தொழில்கள்வாதனையொடேய்வுறுதலானே
பத்தமுறவைத்திடுமிப்பொருதனைப்பலத்தால்.

(வி - ம்.) மதர்த்தம் = எமதடைவின் பொருட்டு, யா நிகர்மாணி க்ருதாநி=எக்கருமங்கள் இயற்றப்பெற்றனவோ, தாநி = அவை, க்வசிதபி தேசேகாலேவா = எத்தேயத்தி லேனும் எக்காலத்திலேனும், எம்மையொழிந்த நாத்மபூத மாய பயனைத்தந்து, நநிபத்நந்தி = பந்தப்படுத்தமாட்டா வாம்; ஜன்மமரண தாரையில், வீழ்த்தமாட்டாவாம்; ஆயின்

எவைவீழ்த்தும், எதனைத்தான் வீழ்த்தும் எனக் கடாநிகழ விடையருளல்:—இதம்கர்ம = இதே நித்தியம் நைமித்திகம் காமியமும்ஆய கருமம், ஜாதியபிப்பிராயத்தான் ஏகவசனமாம், வாதனையுடையனவாய; கர்த்திருத்துவ துப்பிமானபல மிக்கவாச்சமஸ்காரம் வாசனையாம், அதோடுகூடியது சவாசநம் கர்ம, பிராஹ்மணன்யான் கருமாதிகாரி யென்றபிமானித்துக்கொண்டிருக்கும் புருடனாகிய, தேகிநம் = தேகியை, பலாதேவ = வலுவினாலேயே, தாநி = அவை, நிபத்நந்தி = நிரந்தரங்கட்டுப்படுத்தும்என முன்போல் இதனானே, மந்திரப் பிராஹ்மணங்களால் வாசனாசகிதமாயும் பரமேசுரார்க்கர்ப்பணஞ்செய்யாமலும் உள்ளகருமம், அந்தமுடைமையானே நிந்திக்கப்பெறுகின்றது:-"இரிவனவாகி யாதினாலிவைகள், இருமுரமற்றவாய் மகத்தின், உருவனவாகி பொன்பதோடொன்பானுரையவரவரமாங்கருமம், கருமமிதுயர்வாய்க் கருதி யெம்மூடர் களித்தொருகரியிலைக் கருதார், சரையொடு மரணந் தம்மையே யவர்தாஞ் சாருவர் மறித்துமே மறித்தும்." இதன்பொருள் 1 அ. 32 சு. வியாக்கியானத்திற் கூறியுள்ளோம். "அக்கரமிதனைக் கார்க்கியறிந்திடாதவனிமீதே, தக்கழற்ஞெழில்கள் வேட்பன்றவஞ்செய்வன்றசநூறாக, மிக்குறுவருடமேனு மிலைந்திடுமுடிபதாயே, புக்குறுமவனுக் கந்தப்பயன்றனைப் பொருத்துமன்றே" அவ்வக்கரப் பிரஹ்மமுளதாம், எதனால் அதனை யறியாமையினானே நியமமாக மேலும் மேலும் சமுசாரபரம்பரையே யுண்டாகிக் கொண்டிருக்குமோ, எவ்வதனை யறிந்தமாத்திரையானே ஒருதிருசிய உபத்திரவமும் காணுமற்போமோ அதனன் மோக்ஷஹேதுவாய ஞானவிஷயத்தன்மையானே அஃதுளதாம். "எதன்ஞானமிலாமையின் முயல்வேதோ அதன் ஞானத்தா லதுநீங்கும்மே" என்பதன்றோ நியாயம். அற்றேல்

வினையித்தானே சமுசாரந்தொலைந்து மோக்ஷசித்தியாகதலின் அதன்ஹேதுவாய ஞானவிஷயத் தன்மையானே அக்கரப்பிரஹ்மம் அங்கீகரிக்க வொண்ணுதாமெனின்? அற்றன்று, ஹேகார்க்கி, யாவன்றான் இவ்வக்கரப் பிரஹ்மத்தையறியாதவனுகி இவ்வுலகில் ஹோமஞ்செய்வன் வேள்வி வேட்பன், தவமிகத்தபிப்பன், வெகுவருட மாயிரமெனினும் அந்தமுடையதே யிவனுக்கதன் பயனும், அதன்பயனை யநுபவித்தபின் னீற்றில் க்ஷீணித்தேபோமன்றே இவன்றனது கருமங்கள். எதனது அஞ்ஞானத்தானே அநேகமுறையநுஷ்டிக்கப்பெற்ற சிறந்தபயன்களையுடையனவே யாயினும் கருமங்கள் யாவும், சமுசாரத்தையே பயக்குமோ; அவ்வறியாத அக்கரப்பிரஹ்மம் இல்லையென்பது இயையாததாம், சமுசாரமின்றென்னும் வழக்காதலின் என்பது கருத்தாம். இவைமுறையே முண்டகப் பிருகதாரண்யங்களாம். ஸ்ரீபரமார்த்ததரிசனத்தே யிப்பொரு ளருட்பரவியவாறு:—புலனவை பொறிவழி போக்குமாற்றியே, பலனறவினைக ளென்பொருட்டுப் பண்ணுவாய், நலனுறுமவ்வினை நாசமின்றியே சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள், எனவருளலாற் காண்க. இத்திருக்கருத்தை ஈசுரகீதையிலும் காணலாம், எத்தொழில்களுஞ் செயினு மென்னருளினு லென், பத்தர்பரமப்பத மடைந்திடுவராலே, தத்துவமும் வைத்தெனிலெனைச் சரணமாக, நித்தமு நிராசையை யடைந்து நினைகிற்பார். (9)

(அ - கை.) மனத்தூய்மையின் பொருட்டோ செயல்கள் இன்றியமையாது செய்யத்தக்கனவாம், என்னுந் திருக்கருத்தானே ஆக்கியாயிகைவாயிலாக வர்ணுன் என்பதாதியாறுசுலோகங்களானே தரிசிப்பித்தருளுகின்றார்:—

வண்டூாநுஷூாட்வஷ ஒூாஹஒஷுயஜூாஒஷூாநுடா ஒஷூ,
யஜெநுஷீயு தாஜெஷகாஜெக்ஷு வூகூவக.

க. அன்பமுன்மகத்தினேடுவன்னமாக்கியேயகம்
பின்புரைத்தனம்பிராமணாதிபேண்மதத்தினல்
இன்பநித்தியெய்துநுங்களுக்குமீதுகாமத
மென்படிக்கிலங்குமேமவேர்விருக்கமென்னவே.

(வி - ம்.) ஹேப்ரிய = ஹேவரேண்ய! அஹம் =
பாதி வடிவயான், புரா = கற்பாதியில், சயஜ்ஞாஞ் =
களோடுங்கூடிய, வர்ணாந் = பிராஹ்மண க்ஷத்திரிய
சூத்திரர்களை, சிருஷ்ட்வா = உண்டாக்கி, து = பி
தாந் = அவ்வர்ணங்களின் பொருட்டு, அவதம் =
செய்தேம். அவ்வாறே:—"பிரஜாபதி பிரஜையைப் பி
தார்; எனவும்; பிரஜாபதி யஞ்ஞங்களைப் பிறப்பித்தா
வும் மறைகள் பிரஜைகட்கும் யஞ்ஞங்கட்கும் பிரஜா
னின்றும் உண்டான தன்மையைத் தரிசிப்பிக்கின்றன.
திருவுபதேசத்தையே யருளல்:—போபிரர்ஹ்மணாதி வ
களே! யஞ்ஞேந = யஞ்ஞத்தானே ருத்யதாம் = ஐ
வான்களாய நும்மனோருக்கு, ஏஷ = இம்மகம், காம
இட்டபலத்தைத் தருவதாம், அதன்கட் டிருட்டாந்
ளல்:—கல்பவிருக்ஷவத் = கற்பகதருப்போலு மென்
முன்முற்றிய யஞ்ஞ அநுட்டானவலுவானே, பொரு
மை, வலுவுடைமை, கல்வியுடைமை, நூன்முறை ஒ
ருமை வடிவினவாய எம்மகர்திகார சம்பத்துளதோ
ரூற் செல்வமுடைய நும்மனோருக்கு, இம்மகமே அநு
தால் இகலோகசம்பந்த பரலோகசம்பந்த சகல காம
மென்பதுபொருள்.

[illegible]
[illegible]

க. இதனாலே தேவரையும்போற்றுமினவ்விமையவரும்
இதமாகநம்மையுமேயின்புசெய்கவிப்பரிசே
புதமாகவொருவருக்கிங்கொருவர்செயும்பூசனையாற்
றிதமாகச்சீர்மிகுந்தபதந்தனையேசேருவீரால்.

(வி - ம்.) தேவதையுத்தேசித்துத் திரவியத்தியாகம் யாகமாம், அதுவும் தேவதைக்குப் பிரீதியைத் தருவதாமாதலின், அநேந = இம்மகத்தால், சுராந் = தேவதைகளை, ப்ரீணாத்வம் = பூசியுங்கள், ப்ரீணயத்வம் என்பது யலோபமாகி யிருக்கின்றது ஆர்ஷமாதலின் அகாரத்தானே நித்தியயாக கரணஜன்னிய பிரத்யவாயத்தினின்றும் தம்மைக் காத்துக் கொள்ளுங்கள் என்பதெய்தும். அதனால் தேசுராஃ = அந்தப்பிரீதி யடைந்த தேவர், வஃ = உங்களை, ப்ரீணயந்து = இஷ்டகாம தானங்களால் திருப்திசெய்விப்பர். அதனினின்றும் சுரர்கள் பிரீதியுறவே, பரமம்ஸ்தானம் = பூலோகத்தைக் குறித்துச் சிறப்பானபதத்தை, லபத்வம் = அடைவுறுவீர்கள். ஸ்தானத்தையே சிறப்பித்தருளல். அன்யோன்ய ப்ரீணனாத்ஸ்திரம் = பரஸ்பரம் திருப்திசெய்து கோடலால் அசைவற்ற பதமென்பதாம், தேவர்களைத் திருத்தி செய்விக்கும் நீங்கள் அழிவில்லாத பதத்தை யடைவீர்கள். "சாதுருமாசிய யாசிகள் சுகிருதம், ஓதுரமாயே யொழிவிலாதுறுவிர்" "மாந்தியே சோமம் மரணமற்றிருப்பேம்" என்பன முதலாயமறைகள் கேட்கப்பெறுதலின் ஆகலின், இதனால் நித்தியகருமங்களின் பிரத்யவாயம் பிறவாமையாம் ஆநுஷங்கிகம், துறக்கவடைவு, சித்தசுத்தி யென்பதாக மூன்றுபயன்களும் திருவாய்மலர்ந்தருளப்பெற்றனவாம்.

(அ - கை.) நித்தியஞ் செய்யாமையின் பிரத்தியவாயமுண்டாமென்றருளல்:—

நீயுயிர்கிரிசைமதிசகசார்க ணீடுயிர்ப்புகளுடம்பிலமாம், தாயநின்பூசையோசை முற்போகந்துய்த்திடறுயில் சமாதிய தாம், கேயசஞ்சாரம்பதங்களின்பிரதக்கிணகதி மொழிலாந் துதியாம், ஆயவெக்கருமம்புரிகு வல்சம்போவுவையெலாநிற் கருச்சனேயே.

என்னும் சுலோகமிரண்டாற் கூறியருளப்பெற்ற பாவனையைச் செய்யாமையானே யிரண்டாவது அசமர்ப்பணமாம்; யஏனே ஆதியபோக்காவென இந்திரியங்களான்மிகர மித்தலால் மூன்றுவது அசப்பணமாம் இம்மூவிதமான சமர்ப்பணஞ் செய்யாமையானே ஒருதலையாக யமதருமராது தண்டமுண்டாமென்க. புண்ணியம் புரிந்தபோதினும், ஏகாகியாய்ப் புசிப்பவன் நசிப்பன். அதனுனே யறமறங்கட்கு ஓப்பிலாமையின் மனுடப்பிறப்பு மன்னுருதாம், மற்றே, சாசுவதமாய நரகத்தையே சார்வன் என்பதாம். (12)

(அ - கை.) அவற்றுள் ஆதியதில் பஞ்சயஞ்ஞாதி பற்றலாற் குணமாம்; அந்தமதில் இந்திரியாராமத்தன்மை யுற்ற வழி தோஷமா மென்பதை முறையாக மொழிந்தருளல்:—

ஹா॰தாவஶிஷுஹொக்ஷாரொா॰க்ஷாஃவு॰ஃ ஸவ்௰ா வா॰தபெகெ, கஃஒதூவெ௰ொஃஹாவாவா௬தூஹெ௰ாஃ ஃவ௰ஷிெ. 13

க. மகத்திலெஞ்சியமாண்பெறவுண்பவர்
இகத்திற்பாவங்களைவயும்போக்குவர்
அகத்திற்றம்பொருட்டாக்குவரேவர்தாம்
மகத்துப்பாவிகண்மாநீதுவர்பாவமே.

(வி - ம்.) ஹா॰தாவசிஷ்டம் = சிரௌத அக்கினியில் யாகசேடமாயு இடாதி, அதன், யோக்தாரஃ = சிரௌத ஸ்மார்த்த யஞ்ஞபரர், சர்வபாதகைஃ = சர்வகில்பிஷைஃ =

அநேக ஜன்மசந்ததி துர்வாசனை வடிவ மலங்களினின்றும், முக்தாஃ ஸ்யுஃ = முக்தராவர் = விடுபட்டு வாழ்வர்; இதனை யாகத்திற்கு மனத்தூய்மைப்படுத்தன் மலர்ந்தருளப் பெற்றதாம். யேஆத்மஹேதோஃ = யாவர்தம்பொருட்டே அடாநிற்பர் = அன்னஞ்சமைப்பர், வைச்சுவதேவாதியின்பொருட்டுச் சமையாரோ, தேமகாபாபாஃ = பெரும்பாவங்களென்னும் மறையவரைக்கோறல் கட்குடித்தன் முதலியவையெவர்க்குளவோ அவர்பெரும்பாவியராவர், அத்தகையர், ஏநஃ = பாவத்தை, அதந்தி = அயல்வர். அதனுல் பாவசொரூபிகளேயாவர் என்பதாம். அங்ஙனமே மறையும் "கேவலம் பாவியாவன் கேவலமுண்ணுவோனே" என அறைகின்றது. கேவலம் = ஏகாகியாக, அதீ = உண்ணுங் கொள்கையுடையவன், பக்குவமாய அன்னத்தை யயலார்க்குப் பகுத்துக்கொடாமல் யாவனுண்பனே அவன், கேவல அகஃ பவதி = பாவமாத்திரத்தை யுண்பவனுவன். என்பது மூலமந்திரப் பொருளாம். உரலிற்குத்தல், திகிரியிலரைத்தல், அடுப்பிலடல், நீர்திரட்டல், இன்மெழுகல், என்பன பஞ்சசூனுக்களாம்; இவை, வேதஅத்யயனுதி இருஷியஞ்ஞம், அக்கினிஹோத்திராதி தேவயஞ்ஞம் வைசுவதேவாதி பூதயஞ்ஞம், அதிதிபூஜை மனுஷயஞ்ஞம், சிராத்த தருப்பணுதி பிதுர்யஞ்ஞம், என்னும் பஞ்சயஞ்ஞங்களாற் றீரும் என்றுணர்க. இந்நான்கு சுலோகங்களின் றிருப்பொருள் ஸ்ரீபாமார்த்ததரிசனத்தும்:—

தேவர்களைமகிழ்விக்குஞ் செயலோடேதெரிந்திந்த, மூவகையவுலகையுமுன்படைத்த முதலவன்மொழிவான், மேவரியசுரர்பூசையிதுநீங்கள்வேண்டியன, யாவுமையுந்தருமின்ன மிதுகேட்பீரெனவிசைப்பான்.

செயல்வகையானீங்களவர் திறம்போற்றுமாங்கவரும், புயல்வகையாலுங்களையேபுரம்போற்றிப்புரந்தருள்வர், இயல்வகையானதுபிழையீரெனிலிரண்டுதிறத்தீரு, முயல்வகையர் லெனையடைவீரென நிலத்தோர்க்குரைத்தனனால்.

மற்றவர்தந்ததுகொண்டுமெறித்தவரைப்பேணாதார், கற்றவர் முன்பழித்துரைத்தகள்வரினுங் கடைப்பட்டார், பெற்றதுகொண்டவர்ப்பேணிப் பிழைத்ததுகொண்டுண்ணாதே, யுற்றது தன் பொருட்டாகவுண்பான்றீதுண்கிறான்.

அருளப்பெற்றுளதாம். (13)

(அ - கை.) அவ்வக்காரண பரம்பரை வாயிலர்கச் சர்வ,, காரணத்தன்மை யாகத்திற் கருளல்:—

அன்னாத்³ ப⁴வந்தி பூ⁴தானி பர்ஜந்யாத³ந்நஸம்ப⁴வ:,
யஜ்ஞாத்³ ப⁴வதி பர்ஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்³ப⁴வ:.

௧. அன்னனின்றமிவ்வாகங்களாகுமவ்
வன்னமும்மழையாதலினுகுமான்
மின்னுமம்மழைமேவன்மகத்தினல்
அன்னதாதலுமாரணவாணையால்.

(வி - ம்.) ஊர்ஜோ = அன்னத்தினின்றும், பூதாநி = ஜராயுஜ அண்டஜாதிகள், பவந்தி = உண்டாகின்றன வளர்கின்றனவுமாம். அவ்வாறே சுருதியும் "அன்னத்தினின்றும் ஆம்பூதங்கள், அன்னத்தானே யாயினவளரும்" என வியம்புகின்றது. தேவாத்=பர்ஜந்யத்தினின்றும், மழையினின்றும்; அந்நஸ்ய=ஊர்க்கெனப் பெயரிய அன்னத்தின், சம்பவ: = உற்பத்தியாம். ஈண்டு ஊர்க்கன்னசப்தங்கள் தனித்தனி ரசத்தோடுகூடிய அன்னத்தின் வாசகங்களாம். மழையாலன்னமும் அன்னத்தாற் பூதங்களும் உண்டாமென்னும் இவ்விரண்டும் லோகப்பிரசித்தமாம். விதேயம் அருளல்:—யஞ்

ஞாத் = மகத்தினுலே, தேவசம்பூதி: = மழையின் உற்பத்தியாம், அங்ஙனமே "அக்கினிதனிலே பெய்த வாகுதியமுதாக, விக்கினமிலது விண்ணின் மணியினை விரவலாகும், புக்கிரவியினினின்றும் புயன்மழையொழியுமக்காற், றக்கன மழையி னன்னந்தனிற் பிரசைகளுமாமே, தது்பத்தி:=பர்ஜன்ய ஹேதுவாய யஞ்ஞத்தின் உற்பத்தியோ, வைதத்: = விதிப்பிரதானங்களாய மந்திராதி கலாயங்களான் ஆம் விதேயமாய யஞ்ஞமோ, மந்திரதிரவிய ருத்துவிக்காதிகளானே சாதிக்கப்பெறும் என்பதாம். (14)

(அ - கை.) அங்ஙனமே:—

ப்ராஹ்மணோ வைதமுத்பந்நம் மத்தோ ப்ரஹ்ம ஸமுத்பவம்,
ததோ யஜ்ஞஶ்ச ஸர்வஸ்மாத் விஶ்வம் வியாபி வை.

க. வேதநின்றும்விதிவினைமேவுமவ்
வேதமெம்மின்வெளிவருயாதலா
மேதுயாகந்தனினுமுலகத்தும்
போதுமெம்மையுணருதிபூபனே.

(வி - ம்.) வைதம் = விதிகலாபாத்மகம் கருமம், அக்கினிஹோத்திர, தரிசபூரணமாச, சாதுர்மாசிய, பசு, சோம வடிவமாயிருப்பது, பிராஹ்மணோ=பிராஹ்மணன்மக வேததேகத்தினின்றும், உத்பந்நம் = உண்டாம். (பிரஹ்மணோ மத்தோ பிராஹ்மணாத்மக தேகத்தினின்றும் உற்பன்னமாம்) அவ்வாறே, மத்தோ = அக்கரசொரூபமாய்ப் பிரணவ அர்த்தபூதமாய எம்மினின்றும், பிரஹ்ம = வேதமானது, சமுத்பவ: = நின்குண்டாயது. "இம்மகத்தாகிய விரைவளினுயிர்த்தது இம்மகத்தாகிய விருக்குவேதம், தம்மையுசுர் வேதம் சாமவேதம்மே" என்பதாதி சுருதியாம். அத: = எதனாலிங்ஙனம் அதனால், யஜ்ஞே=கருமயத்தினும் அதன்

டலப்ூத்திலும், விஸ்வஸ்மிந்=கிரியை காரக பலான்மகத்தி லும், ஸுகாரத்தால் அக்கரான்மக வேதத்திலும், ஸ்திதம்= இரும்பு விளக்கத்திற் ரேகதுவாயிராநின்ற, மாம்=உண்மை வடிவத்தானும் ஒளிவடிவத்தானும் எம்மை, வித்தி=அறிந்து கொள்ளுதி, ஆநந்தரூபத்தானும் அநுஸ்யூதமாயுள்ளேம். ஆகியமூன்றும் பிரமரூபம் அதன்பின் னிரண்டுஞ் சகத்து ரூபம் எனவாம். பூமிபவெனவிளி; பூமிம்=பூமியை, பாசி= ரக்ஷசி=காப்பாற்றுவோய். என்பதாம். எங்ஙனம் பூமயே பீஜசக்திவாயிலாக மூலஅங்குர தரு சாகை யிலை வேர் முத லவற்றின் வடிவமா யிருப்பதாகக் காணப்பெறுகின்றதோ, அங்ஙனம் யாமே மாயை யதன்காரியப் பிரஹ்மாண்டகோடி ரூபமாக நிகழாநிற்பேம், அப்பூமிரூபமாய எம்மை ஆத்மரூப மாக எம்பாலுற்ற நிட்டையினுல் நழுவுறாமற் காத்தியெனக் குறிப்பித்தருளுவார் பூமிபவெனவிளித்தருளினுர் என் றுணர்க.

(அ - கை.) ஆக்கியாயிகைவாயிலாக விரித்தருளிய தரு மப்பிராதான்யத்தின் பயனையருளல்:—

ஸம்வாத-ம் இமம் ஹாரக-கே-நவ்யம் விசக்ஷணெ,
ஸம்ருதாஶ்ருண்வதாமேவ ச ஸஞ்சதி யோகினாம்.

க. பிதுராதியமகவாதியபெருநேமியையறவே
மதியாயினர்விதியாயினர்மருவாதொருவுகவே
அதுமேவினர்மூதமேவினரமைவார்மகிழ்மகிபோய்
அதமாயினரறிநீபொறியவையேவியவவரே.

(வி - ம்.) விசக்ஷணை=சிங்கபலத்தியாக வாயிலாய் எம் பிரீதியின் பொருட்டுக் கருமங்களை யநுஷ்டிப்பதில் அதிகுச லர்களாகிய புருஷ அக்ரகண்ணியர்களால்; இந்த சம்ஸ்ருதி

நாம்=சமுசாரங்களின், மகாசக்ரம்=சக்கிரம்போன்ற சக்கிரம், விரையினின்று முளைமுதலன் மீண்டு மீண்டுமுண்டாகிக் கொண்டேயிருக்கும். அளவிலாமுறை மாறிமாறிவரும் இச்சமுசாரமகா சக்கிரம் பீஜபூத அவித்தையின் றுக்த்தானே, க்ராமிதவ்யம்=கடக்கத்தக்கதாம். யாவன் இதனைச் செய்ய ஆற்றலுற்றவனோ, ஸ=அப்புருடன், முதா=ஆத்மலாபாதிபூத சந்தோஷத்தால், ப்ரீணடே: தன்னுற்றுனைகவே, பிரீதியைப் பெறுவன். அவ்வாறே யருமறையும்:—"ஆன்மக்கிரீடன் ஆன்மரதிதொழில், தான்மருவின னிவன் றக்கோர்போற்றும், மேன்மையன் பிரமவித்துக்களுள்ளே" அறைகின்றது. ஆன்மாவின்கண்ணே கிரீடையை யுடையவன் புத்திரதாராதிகளில் விளையாடாதவன் ஆன்மக்கிரீடனுவன், ஆன்மாவின்கண்ணே ரதிபிரீதியுடையவன் ஆன்மரதியாவன். கிரீடை யாகிய சாதன அபேக்ஷையையுடையது, இரதியோ சாதன நிரபேக்ஷையுடையது பாகியவிடயப் பிரீதிமாத்திரமென்பது விசேடமாம். ஞானத்தியான வைராக்கியாதி கிரியையுடையவன் கிரியாவானுவன். சிலரிதில் அக்கினிஹோத்திராதிகருமப் பிரஹ்மவித்தைகளின் சமுச்சய யார்த்த மிச்சிப்பர் அதுவும் இவன்றக்கோர்போற்றும் மேன்மையன் பிரமவித்துக்களுள்ளே, என்னும் முக்கியார்த்த வசனத்தானே முரண்படும். வெளிவிளையாட்டினனும் ஆன்மரதியும் ஆதல்கூடாதன்றே, எவனேனு மொருவன் வெளிவிவகார விநிவிருத்தனுயின் ஆன்மக்கிரீடனுவன், பாகியக்கிரியை ஆன்மக்கிரீடைகட்கு விரோதமுண்மையின். இருளொளிகட்கு ஒரேகாலத்தில் ஓரிடத்தில் திதியாகாதன்றே. ஆகலின் இவ்வசனத்தானே ஞானகரும சமுச்சயம் பிரதிபாதனம் செய்யலாமென்னுமிது அசற்பிரலபிதமேயாம். "அன்னியவாக்குகள் அறவேயொழிக" "சந்நியாச யோகத்தானே"

என்பதாதி சுருதிகளானும் உணரலாம். ஆகலின் இவனே சண்டுக்கிரியாவானுவன் யாவன் ஞானத்தியானுதி கிரியாவான், அவன் அபின்னார்த்த மரியாதையன் சந்நியாசியாவன், யாவன் இவ்வகைவடிவு அதிவாதியாகாமல் ஆன்மக்கிரீடனுகி ஆன்மரதியாய், கிரியாவான், பிரஹ்மநிட்டன் ஆவனே அவன் எல்லாப்பிரஹ்மவித்துக்களுள்ளும் பிரதானனுவன் என்பது பொருள். "உண்டுஞ் சிரித்தும் ஆடியும் ரமித்தும், பெண்டுகளோடும் வாகனந்தம்மொடும்" எனவு மறை யறைகின்றபடியினுலே, பிரஹ்மவித்திற்குக் கிளம்பியதசையிலும் மகிழ்வுடன் கிரீடை காட்டியதாகும். எங்ஙனம், பூ, தன்னிடத்துண்டாவனவாய விரைமுளைவிருக்க மலர்கனி முதலனவற்றை, அது எப்போதேனும் மாந்தும் உப்புநீர் என்னும் நியாயத்தானே தன்னுைப்பாக்குமோ; அங்ஙனம், நிர்விகற்ப அவத்தையில் சவிடயஞானத்தை நீயும் எமதுதிருவருளானே உட்கொள்ளத் தகுதியனுவாயெனக் குறிப்பித்தருளுவார் பூபவெனச் சம்போதித்தருளினுர். புவம்=பூவை, பிபதி - மாந்தலான், பூபஎன்பது அவயவப்பொருளாம். சமுசாரங்களின் என்னும்பன்மை, மூடர்கள் சமுசாரத்திற்கு அளவின்மையறிவித்தருளுவதாம். இதனுனே அதனைத் தாண்டாவிடில் தோடமுரைத்தருளல்: இந்திரியக்ரீட= யாவன் கேவலம் இந்திரியக்கிரீடையின் பொருட்டே விளையாடுகின்றனனே, அநுஷ்டிக்கத்தக்கதாய அறியத்தக்கதாய தருமப்பிரஹ்மங்களை யுறிந்திலனே, அதன்பொருட்டு முயலுதலும் இலனே, அவன் அதமஃஜனஃ=அதமனுவன். திரியக்குத் தாவராதிபோலும் செய்யத்தக்கது இன்னதெனத் தெரியாமையின் மிகத்தாழ்ந்தவன்என அறியத்தக்கதாம்.

ஸ்ரீபரமார்த்த தரிசனம்:— உளவாமுயிருணவாலுணவுயர் மாரி யினுளவாம், வளவரின் மழையுயர்வானவர் மகிழ்வால்

வருமதுர், விளைவாளரி யனையா யிசைதொழிலால் வருமிந்தமீ, தளவாமறை தருமாமறையறிவா லறிவுறுமால்.

இதனால் வினைகளிலே விளைவனயாவையு மிங்ஙனே,இதனால்வரும் வினையாழி யினெறிசே ரலர்திரிவார், மதனாறிய புலனேமகிழ்விடமாகவு முடையா, ரதனாலவரவமே கழிபவரா மெனவறிநீ. (16)

(அ - கை.) பூர்வஅர்த்தத்திற் புகன்றருளிய சமுசார சக்கிரத்தைக் கடந்த ஜீவன்முக்தனைப் போற்றி யருளுகின்றார்:—

ச. அந்தராத்மநிய:ப்ரீத அந்தராராமோऽவிஶேஷ்யய:
அந்தர்ஜ்யோதிர்நரோய: ஸ்யாத்ஸ்யாயோகேநவிநஶ்யதி.

க. உள்ளான்மனில்யாவன்மெய்யன்பொடுமூன்றிநிற்போன்
பிள்ளான்மனில்ராமனகிலப்பிரியன்யாவன்
றெள்ளான்மனிலெந்நரன்மேவுந்திருத்திதன்னை
தள்ளாவிவன்றற்குப்பயனுளதாவதின்றே.

(வி - ம்.) பாகியஆத்மா பாஞ்சபௌதிகம் சரீரம் மூடர்கட் கதனிடத்தே, மறையவன்யான் மனுடன்யான், இஃதெனது, எனதிம்மகாதிகள் அவசியம் அனுட்டிக்கத்தக்கன, என்பதாக ஆத்மஅபிமான முண்மையின். அதனைக்குறித்து அந்தராத்மநி = உள்ளாத்மாகுறித்தேகம், அதன்மாட்டிருந்து, சவிகற்பசமாதிப்போது யஃப்ரீத = யாவன் ப்ரீதனாவன், என்னால் அறியத்தக்க தறிந்தாயிற்று. அடையத்தக்கது அடைந்தாயிற்று, என்னினும் அன்னியம் எதுவிறிது இலதாம், செய்யத்தக்கது செய்துமுடித்தவனியான்எனத் தன்பாற் பிரீதியை அநுபவிக்கின்றவன் யாவன்,அவன் அந்த

ராத்மாவில் அன்பனெனை வறையப்பெறுவன். அவ்வாறே நிருவிக்றபசமாதியின்கண் முழுவடிவுடைமையையும், முற்றறிவுடைமையையும், முழுவிழைவுடைமையையும், துச்சமாக்கி உளனென்னும் அஸ்மிதையையும், பெரிதுவிடுத்து, அகண்ட ஏகரசஞாதா ஞானஞேயப்பிரதீதி சூனிய ஆன்மாவின்கண்ணே, விசிராந்தி யுற்றிருப்பவன் = ஆத்மாராமனுவன். வேறுவேறாய முழுஉபாதிகுறித்து எல்லாவற்றினும் உண்மையுடைமையின், அகிலப்ரிய: = சகலசனத்துக்கும் பிரியன். இதனானே, இவனைத் தேவரும் அயர்வுறுத்த வல்லரல்லர் அவர்கட்கும் ஆத்மபூதமாயுண்மையின். அவ்வாறே சுருதியும் இயம்புகின்றது:—“அவனுக் கமரரு மயர்வினையாற்ற,விவனுற்றிலர் வலியிவர்தமக்கும்மே, சிவனுற்றன் மாவிவன் சேர்தலினே” பிரஹ்மவித்யா பலப்பிராப்தியிற் றேவர் இடரியுற்றுவர், என்னை, மண்ணவர் விண்ணவர் பொருட்டுக் கடன்பட்டவர், பிரமசரியத்தால் இருடியர்க்கும், யாகத்தா லமரருக்கும், பிரஜையாற்பிதுர்க்கட்கும் கடன்றீர்க்க வேண்டியவர் என்பது மறைமொழி, யாதலின், கடன்கட்டாமற் கடவுளர் விடாரன்றோ; என்றாலும், இடரியற்ற முடியாதாம் தன்னை யுணர்ந்தவன்பால், பிரஹ்மவித்தை சமகாலத்திலேயே பிரஹ்மப்பிராப்தி பலங்கிடைத்துவிடுத்தலின், உலகத்திலும் காண்போனது கண்ணொளியொடு கூடும்போதே ரூபங்தோற்றி விடுகின்றதன்றோ, அங்ஙனம் ஆன்மவிடய விஞ்ஞானம் ஆனபோதே அவ்விடய அஞ்ஞானம் மழியும், அழியவேபிரஹ்மவித்தை பிறக்கும், பிறந்தவழி அவித்தையின் காரிய மல்லயாமையின் இருந்தீபங்கண்ட விருட்காரியம்போலும். எனவே எதனாலெவனுக்குத் தேவர் இடையூறுபடுத்துவர் அவர்க்குமான்மாவாதலின் யாவராலும் நியாணிக்கத்தக்கதாயும் சர்வசாஸ்திரங்களாலும் உண

ரித்தக்கதாயும் உள்ள ஆன்மாவாகிய பிரஹ்மரூப பிரஹ்ம வித்து அத்தேவதைகளின் வடிவமாக விளங்குதலின்; அவி த்தை யகன்ற கணத்திலேயே அனைவர்வடிவமாகவும் அவர் விளங்குதலின். தங்கட்குப் பிரதிகூலத்தைத் தாங்களே தேவர்சமைப்பரோ சமைப்பார்; சத்துவராதலின். கடன்ற டையன்றோவெனின், அன்றும், அஃதவித்யாவிடயமாதலின் அவித்தையனலவோ இருணியாவன் அவனுக்கன்றோ கர்த் துருத்தகைமையாதி. யாண்டு தான் அயற்போலாமோ ஆண் டு அயலான் அயலைக்காணிம் எனல்தகும். ஆன்மாவெனப் பெயரிய் அயலிலாச் சத்வஸ்து அவித்தை தழீஇயவழி அய ற்போலவாம், திமிரமாக்கிய இருமைநிலவுபோலும் யாண்டோ ஆண்டே அவித்தையாக்கிய அநேககாரகாபேக்ஷ தரிசனுதி கரும அதனுலுமற்றபலமும்காட்டலாம், ஆண்டன்னியம் அன்னியத்தைக் காணலாமன்றோ. யாண்டு மீண்டும் வித் தையான துதயமாமோ அவித்தையாலாய அநேகத்வமயல் அழிந்துபோமோ ஆண்டு எதனுலேவன் எதனைக்காணல் எக் கருமமுமிலதன்றோ ஆகலின் அக்கடன் அவித்தையதேயாம், ஆகவே இக்காலிலையென்றுணர்க. எண்பத்துநான்கு இலக் கம் யோநிபேதங்கட்கும் பூபிரதத்தன்மை யுண்மையின் பூமியேமுக்கிய அந்தராத்மாவாவதேபோல இவனுமாவனெ ன்பதாம். நிருபாதிப்பிரேம கோசரத்தன்மைக்குறியானே ஆன்மாவிற்குப்பிரியத்தன்மையோவாம் இதன் கண்டமறையு முளதாம்:—"அவ்வித பிரியமர்மருமைமைந்தனின், தவ்வற ப்பிரியமாந்தன மதாதியின், எவ்வயற்பொருளினுமிது பிரிய மாம், எவ்வயமுயிருள்ளி னேற்றமேயதே" அநாத்மாயாவற் றையும் அநாதரவுசெய்துவிடுத்து ஆன்மதத்துவத்தையே புணரவேண்டு மென்பதென்னையோ! அவ்விவ்வான்மதத்து வம் புத்திரனினும் பிரியதரமாம், புத்திரனே உலகிற் பிரியன்

என்பது பிரசித்தமேயாம் அச்சுதனினும் ஆன்மதத்வம் பிரியதரமென நிரதிசயப் பிரியத்தன்மை காண்க. அவ்வாறே ஹிரணியவரதனசிந்தாமணியாதியினும், அங்ஙனமே யாதுயாது இவ்வுலகங்களில் அன்புடைமையானே பிரசித்தமாமோ அவ்வயல் யாவற்றினும் அதிப்பிரியம் ஆன்மதத்துவமேயாம். அஃதென்னேகொல் ஆன்மதத்துவமே பிரியதரமென்பது, உயிர்ப்பாதியல்லாமற்போனது? நுதலுவாம், பாகியமாய புத்திரவித்தாதிகளினின்றும் பிராணபிண்டசமுதாயம் அந்தரமாய் ஆத்மாவைச் சம்பந்தித்திருப்பதாகும், எவ்வாத்மதத்துவமுளதோ இது அந்தரமாய வதனினும் அந்தரதரமாம் யாது தான் உலகில் நிரதிசயப்பிரியமாயுளதோ அதுசர்வப்பிரயத்நத்தினாலும் அடையத்தக்கதாம். அங்ஙனிவ்வான்மா, சர்வலௌகிகமான பிரியவஸ்துக்களினும் மிகமிகப்பிரியமதாகும் ஆகலின் அதனையடைவதற்கு பெருமுயர்ச்சி செய்யவேண்டுமென்பதாம் புத்திரதாராதியன்னியப் பிரியலாபமுறவேண்டுமென்பதாகப் பெருமுயற்சிசெய்து கொண்டிருந்தபோதினும் அவற்றில் அசுத்தது:க்க அநித்தியதோஷங்கண்டுபேக்ஷித்துத் தன்னையடையவே பெருமுயற்சிசெய்யவேண்டும். துயிற்சம்பந்தமாய நிரதிசய ஆநந்த அநுபவத்தானும் துணியப்பெறும். குறியானும் மறையானும் அநுபவமுறையானும் துணியப்பெறுமென வுணர்க இவ்விடயத்தில் திருமுற்றறிமுனிவர்தெரித்ததைச் சிறிதுதெரிப்பாம்:—

"உள்ளறிவினுக்குத்துயரறுமமுழிவினுயர்சுகசொரூபமாந்தகைமை, கள்ளமில்காட்சிகருதன்மாமொழிகள்காட்டுறும்வாட்டமுமழிவில், தள்ளறுசுகவிக்கிரகபூமியினிற்றடையறநிறையுமிவ்வறிவில், அள்ளுறுந்தோற்றமாத்திரமானவணுவிதுவணுகிலதாமால்"

அற்றேல், எங்ஙனஞ் சாங்கியமதத்தில் பிரகிருதி, புருஷாசிரயத்வ விடயத்வமில்லாமலே, உலகையுண்டாக்குகின்றதோ, அங்ஙனம், அஞ்ஞானமும் ஆகுக, அதற்குப் பிரத்தியக்காசிரயத்வ விடயத்வகற்பனை செய்வதாலென்னே! அஞ்ஞானமும் அதன்காரியமும் அத்தியஸ்தமாமென்பதானே இதற்கு விலக்ஷணத்தன்மை யுளதாமென்னற்க; அதனத்தியாசமே யின்றளவும் துணியப்பெறுமையின் என ஆசங்கித்து, ஆன்மாவின்பாற் பிரபஞ்ச அத்தியாசத்தைத் தரிசிப்பவராய் அதன்பொருட்டு முதலில் அதற்கு ஆண்டு உண்மையாக அசம்பவத்தையும் அதன்பொருட்டும், பிரமாணசித்தமான ஆத்மசொரூபத்தைக் காட்டுகின்றார்:—உள்ளறிவென. காட்சி கருதன்மாமொழிகள் இனிவருவனவெனக் காண்க துயரறும் அழிவில் உயர் சுகசொரூபமாந்தகைமை யென்றது பூமாசைதன்யத்தினது பலக்கணமாம்; மாறுயினே அனுவாதத்தில் அதன்கீர்த்தன மமையாமையின். அதனுலென்னேயெனின் ஆண்டுக்கூறல்:—துயரறுமென்றது துயரற்றதாதிவடிவ இவ்வறிவிருமையற்ற ஆன்மாவில், பொய்ஜடாதிபுனைந்த அற்பரூபம் அணுகுறுதாம் உண்மையாக வெவ்வாற்றானும் இயையாதாமென்பது பொருள் அக்ங்காராதி ஜடப்பிரபஞ்சம் ஆண்டான்மனினும் பிறுண்டுசித்தியாதாம் ஆன்மாவிற்கே அதனுபாதானத்தன்மை அறையப்போதலின் காரியத்திற்குபாதானத்தினும் அயற்பால் இருத்தல் கூடாமையின், அதனிருப்பு விளக்கக்கூடாமையானும், ஆன்மாவினும் அயலாயதும் யாதேனும் சம்பவிக்கும் என்பதுமிலதாம், ஆன்மாவினிடத்திற் சம்பந்தம் பிறிதால் அதனது இருப்புச்சம்பவிக்கலாமெனவு.மேலாதாம். அசங்க அவயவமில்லாத ஆன்மாவிடத் தயற்சம்பந்தஞ் சம்பவியாமையின். தாதான்மியமோ வாஸ்தவம் முரண்பட்டவைகட்குச் சம்பவியாதாம், அதன்விருத்தரூபமும் ஆன்மாவிற்குச் காட்சி

யாதி சித்தமாமென எவ்வாற்றானும் ஆன்மாவிற் பிரபஞ்சத்திற்கு உண்மையாகச் சம்பவமிலதாம்.

அன்பெலாவகைவிடயவெவ்வறிவுகளிலவா,மென்பிராஞ்ஞனிற்சுகமினிதனுபவித்தெழுந்தே, பின்பாமாயகமிவண்டுயின்றனனெனவெண்ணியே, அன்பயாவருமறிகுவரஞரிலின்பதனே.

பதிஞ்ஞைசெய்த பொருளைப் பகர்ந்துகொண்டு முதலிற் காட்சியானே ஆன்மாவிற்கு நிர்த்துக்க நித்தியசுகத்துவத்தைக் காட்டல்.

சுகக்காட்சிமாத்திரம் ஆன்மசொரூபசுகத்தையே விடயீகரிக்கும், என்றாலும் பிறிதோராற்றாற்பெறுஞ் சங்கையில்லாததாக நிர்த்துக்கத்வாதி சித்தியின்பொருட்டும் அயற்சம்பந்தமான காட்சி யுதாரிக்கப்பெற்றதாம். எதன்கண்ணே சுபாவத்தையடைந்தவனுப் துயிலவத்தையிற் சீவன் உபாதிகளங்குமுறுமையின், பெரும்பிரஞ்ஞையுடையவன் ஆவனோ; அதன்கட் பிராஞ்ஞ அபேததசையிலென்பதுபொருள். இனிதனுபவித்து = வெளிப்படையாக அநுபவித்து, அல்லாக்காற்றுயின்பொருட்டு எவனுக்கும் முபலக்கியையாதாம். அற்றேல், அவ்வின்பமும் பிறந்ததேயென ஏனாதோவெனின்? கூறல், எலாவகையென்பது. மிருதிரூபமாகவாதல் அநுபவரூபமாகவாதல் எவ்விடயவுணர்வுளதோ அஃதில்லாத: துயிற்கு எல்லாவிசேஷஞான வுபரமரூபத்தன்மையுண்மையின் விடயஞானமின்றி இன்புண்டாத லேலாமையின், அவ்வடிவத்தில் அயற்சுகமிலதாமென்பது பொருள். இவண் = இவ்விடத்தாதல் இப்போதாதல் இன்பமாகவுறங்கினேன். எண்ணி = ஸ்மரித்து,. அதாவது அதேசுகத்தை நினைந்தென்பது கருத்து. அதன் அநுசந்தானத்தால், சொரூபசைதன்யத்தின் சௌக்கியமாகிய நிர்த்துக்க நித்திய

சுகான்மத்தன்மை சுகமாக யானுறங்கினேன் என்னும்மிருதி, நிர்த்துக்கத் தன்மையையாதல் நித்தியத் தன்மையையாதல் அதற்குவிடயஞ்செய்வதில்லையாம் என அவ்வனுவால் பிராஞ்ஞசுகத்திற்கு நிர்த்துக்கத்வாதி துணியப்பெறுதாம், என்றாலும், துயிலவத்தையில் அநுபவிக்கப்பெற்ற சுகபலத்தான் நிர்த்துக்கத்தன்மை யான்மாவிற்குச் சித்திக்கும்; இதனானே யெழுந்தவனுக்குத் துயரின்றித் தூங்கினேன் என்னும் விவகாரமாம். துயிற்போதிய சுகசாமர்த்தியத்தானே அதற்கு நித்தியத்தன்மையுந் துணியப்பெறும் என்பதாகப் பிராஞ்ஞசுகப் பிரத்தியக்ஷசாமர்த்தியத்தாலாத்மா நிர்த்துக்க நித்திய சுகமாம்.

யாவுமியாதையுற் றிவண்பொருள் யாதுள திறைதான், றுவும்வேறுறறணர்ந்தெதனதுண்மையானே, காவதேதெரிப்பார்சுகஞ்சுகவிலக்கணனார், ஆவியான்மனிலதுசமஞ்சுகதை தற்கதனல்.

இங்ஙனம் கருதலினாலும் ஆன்மாவிற்குச் சுகாத்மத்வ சித்தியாக, அதற்கு நிர்த்துக்கநித்தியத்தன்மையும் சித்திக்குமென்றுகருதி, ஆத்மா, சுகாபின்னம், சுகவிலக்கணமுடைமையின், விடயசம்பந்த சுகம்போலும், யாது எவ்விலக்கணமுடையதாமோ அது அதன்வடிவமாம், கோமுதலியவைபோலும்; என்னுமனுமானத்தைக் கூறுகின்றார்:—யாவுமென மிகுதிக்கருத்தினது. யாதையுற்று = எதன்சம்பந்தித்தன்மையானே பிரீதிவிடயம். அதன்ஏதுவாகவோ ஆகாதாம்; ஆன்மசுகமானது அஜன்னியமாதலின். இவண் = இவ்வுலகில், பொருள்யாதுளது இறைதான், இதுவும் மிகுதிபற்றிய கருத்தேயாம். வேறுறல் = அயற்பிரயுக்த பிரீதிவிடயத்தன்மை எஃதங்கீகரிக்கப்பெறும், தனதுண்மையானே = தற்சொ

ருபத்தானே, சுகமென வருணிப்பர். வியாத்தஹேதுவிற்குப் பக்கதருமதையைக்கூறல் :— ஆவியான்மனிலதுவென்பது. விடயசம்பந்திசுக துல்லியமாயுளதாம் எனவேனும் பொருள்படும் சமமென்றது. சுகதையென்பது நிகமித்தலாம்; அதனால் அறைந்தீ ஏதுவினான், ஈண்டியாது பெறுவதாய்ப் பாரார்த்தியம்பாறும் அல்லது தற்சத்தையானேயாதுபெறுவதாகும் அதுசுகமென இலக்கணமியம்ப இச்சையாம். இதனைச்சாதிக்கும்பொருட்டே யாவுமென்பதாதி கூறியதாம், துக்காதியிலும் சுகசாதனத்திலும் அதிவியாப்தியகற்றும்பொருட்டு இருதளமாம். அற்றேல், புத்திராதிபோலும் சுகமும் எனக்குச் சுகமுண்டாகுகவென ஆத்மார்த்தமாயே காமிக்கப்பெறுவதால் யாங்ஙனம் பரப்பொருட்டாதலைப்பாறும் எனின்? அற்றன்றும்,புத்ராதிகளாற்போல ஆன்மாவிற்குச் சுகத்தானும் இஷ்டஞ்சிறிதுண்டாவதின்றன்றே; எதனாற் சுகம் அதன்பொருட்டாமோ சுகம் ஆத்மசம்பந்தித்தன்மையானே யபிலாஷையிடம் என்னற்க; துக்காதி சாதாரண ஆன்மசம்பந்தித்தன்மைக்குச் சுகப்பிரீதி அப்பிரயோஜகத்தன்மை யுண்மையின். ஆன்மசுகத்தன்மை யாண்டுப் பிரீதி நிமித்தமென வறையற்க; எளிதிற்கோடலானே சுகத்தன்மைமாத்திரத்திற்கே அவ்வாறுந்தன்மையாதலின் சுகமுமேகமேயென அதிப்பிரசங்கமிலதாம். ஆயின் யாங்ஙனம் எனக்குச் சுகமுண்டாகுகவென்னும் அபிலாஷையாதல் என்னற்க; எனக்குப் பிரத்தியக்ஷசுக முண்டாகுகவெனவன்றோ அவ்வாறு அவாவுதல் சுகவியத்திக்கு ஏகத்தன்மையானே விலக்கவேண்டுவதின்மையின், பிரத்தியக்ஷமோ அறியப்பெறாத பிரஹ்மசுகாதி வியவச்சேதகமென, அதேயெனக்கெனச் சிறப்பிக்கப்பெறும், என்பதாகக்கூறிய தோஷமின்றும். அதன் காரசபலமாய மமதையதிகரணத்தினும் கேவலம் சுகமே

ளும்என மதியத்தன்மையும் புலப்படுதல் உளதேயாம், ஆனால், அதன்காமனைப் பிரயோஜகம் ஆகாதென்பது கருத்தாம்.

அசுகாத்மனிற் ப்ரேமையுபாதியி லாவதின்றாஞ், சிசுவும் மஃதுட்டனினித்தியசித்தநேரும், இசையும்பறையன்பென வின்பெனுமானமீதை, யுசிதான்மனினாகருமென்றுமொழுத் திடாரால்.

அன்றியும், ஆன்மா, சுகம், அநௌபாதிகப் பிரேம கோசரத்தன்மையால், எஃதிங்ஙனமிலதோ, அஃதங்கனமல தாம், எங்ஙனந் துக்காதியென அயலனுமானங்கூறல்:— அசுகவென்பது. உபாதியில்=அயலாலாக்கப்பெறாத வென் பதுபொருள். அசுகாத்மனில்=சுகவியதிரிக்த பிரத்தியக் கான்மாவின்கண் நிஷ்க்ருஷ்ட அகங்கார அதன் சாக்ஷிசை தன்யத்தில், சிசுவும்=அற்பப்புழுவும், நோயுற்ற குழவியும் என்பது, துயர்மிகுந்த பிராணிகட்கும் தம்மிடத்துப் பிரே மைகாணப்படுகின்றது என்றால், சிறப்புற்றஆன்மாக்கட்குக் கூறவேண்டுவதென்னேயென விளக்கியதாம். கிருமிகட்கும் தந்துக்கபரிகாரப்பொருட்டுத் தாவனாதிதரிசனத்தானே உள தேயாம் தந்துக்கத்திற் றுவேடம், அதுவும் அக்கால் ஆன் மாவின்பாற் பிரேமை அவற்றிற்குப் பிரேமையிலதாயின், பொருந்துறுதாம்; உதாசீன நரதுக்கத் துவேடங்காணாமை யின் என்பதுகருத்தாம். அற்றேல், கிருமிகளின் பிறவற்றின் ஆத்மாவிற் றுனாதல், யாங்ஙனமஃதாம்? சித்தத்திலஃதேலா னமையின்என ஆசங்கித்து, சர்வாநுபவ சித்தமாய அதுயாங் ஙனம் நிராகரிக்கத்தக்கதாகும்? எனக்கூறல்' நித்தியசித்த மென்பது. எப்போதும் அநுபவசித்தமென்பது பொருள். தனபுத்திராதி சித்தத்திலும், அவராற் சாதிக்கத்தக்க வுப

காரத்தை யெண்ணுத தாய்தந்தையராதிகட்கும் பிரேமை காணப்படுகின்றதன்றோ; இவ்வண்ணம், நிரதிசய சுகரூப ஆன்மாவின்கண்ணும், அதுமுரண்படாதாமென்பதுபொருள். மேலும், அவ்வித் பிரியமருஞ் சுதன்றனினும், செல்விதிப்பிரியந் தனமாதியினும்” என்பதாதி சுருதியினாலும் நித்தியசித்த ஆன்மாவின்கண் அதுசித்தமாம் என்பார், அன்புமறையென்றார். எனஎன்றதற்கு வியாத்தமாய ஹேதுவிற்குப் பக்கதருமத்தன்மை யுண்மையின் என்பதுபொருள். ஊசரும் = நையாயிகரும், உம்மையொலியான், மீமாம்சகாதியருமாம். நையாயிகரோ அநுமானத்திற்கு, வியாப்தியும், பக்கதருமத்தன்மையும் என்னும் இரண்டு அங்கங்கள்கூறுவர் எனத்தாங்கருதிய அங்கமமைந்த ஆன்மாவின்சுகத்வ அநுமானத்தை நிராகரிக்கமாட்டார் என்றால், மறையையே பெரிதும் மருவிய மீமாம்சகாதியரைப் பற்றிப் பகரவேண்டியதென்னே! என்பது கருத்தாம். ஆன்மாவின்கண்ணே துக்கித்தன்மையைக் கவரும் பிரத்தியக்ஷபாத முளதாமென்னற்க; துக்கித்வாதிகட்குபாதித்தருமத்தன்மையானே, திருக்ரூருவ ஆன்மாவில் இன்பத்தன்மை யநுமானத்திற்கு அதனினும் பின்னவிடயத்தன்மை யுண்மையின் என்பார், உசிதான்மனில் என்றார்.

“ஆநந்தவடிவதகன்றதனுரனைத்தும், ஈனந்தனர்பேதமெவையுமிதனியல்பாம், தானுந்தையோதும்விதியனுசாரியோர்கண், மானந்தனின்வேதமுடிகளின்மாந்துவாரால்.”

உள்ளறிவென்னுஞ் செய்யுளினுரைத்த காட்சி கருதல் மாமொழிகள் என்பவற்றுள், காட்சிகருதல்கள்காட்டப்பெற்றன. இஞ்ஞான்று மாமொழிகள் என மலர்ந்தமறையையும் ஆண்டறைதல் :—ஆநந்தமென்பது. வடிவம் = விக்கிரகம், ஆநந்தசொரூப மென்பதுபொருள்.

அகன்றது அனுர் அனைத்துமென்றது, அது, அறிய விரும்பித்தேடும் முமுக்ஷுக்களானே கொள்ளத்தக்கதென அறிவித்ததாம் என்றறிக. அற்றேல், சத்விதீய ஜீவன்பால் அற்பத்தி லின்பம்மருவதின்றும், "என்பதால் ' இன்பநிடேதங் காணப்பெறுதலின், யாங்ஙனம் அதற்கு ஆநந்தரூபத் தன்மை யாதல்எனின்? ஆண்டுக்கூறல்:—இதனியல்பாம்= வஸ்துசுபாவம் என்றது. ஜீவசொரூபம் பிரபஞ்சத்தோடு கூடிப் பிரதீதியாயினும் "யாண்டயலொன்றுங் 'கண்டிலன் கண்ணு, வீண்டொலியெவற்றையுஞ் செவிகொண்டிலனே" என்பதாதி சுருதி சித்தமான அத்வயப்பிரஹ்மமே அதற்கு வாஸ்தவவடிவமென அது அற்பமலவாம். இவ்வாறாகவே சுகநிடேத சுருதிக்கு இது விடயமாகா தென்பது கருத்தாம். அற்றாயினும், சுவர்க்க காமாதிவாக்கியத்தானே சுகமுடைமையே ஆன்மாவிற்குணரலாம் அலது சுகரூபத் தன்மை யிலதாம்எனின் அதன்கட்கூறல்:—ஓதும்விதி= அத்தியயனவிதி என்றது. அத்தியயனவிதியோ சுவாத்தியாயோ அத்தியேதவ்ய என்பதானே சுவாத்தியாய சப்தத்தமைந்த முழுத்தன் சாகைக்கும் அத்தியயனத்தை விதிக்கின்றது, கருமகாண்டமாத்திரத்திற் கென்றிலதாம். இங்ஙன்மாகவே, உபநிடதம் படித்த சாதனசதுட்டய சம்பந்நர், அதனுட் பட்டனவாய", ஒன்றொடுமார்ப்புறுன் உலகதுக்கத்தா, லென்றும்பாகியன் பசிதாகமிலன், பொன்று தன்மோகம் புன்சுரை சோகம், என்றுங்கடந்தோ னென்றறி குதியே. விஞ்ஞானமானந்தம்பிரஹ்மம், இஃதிதற்குப் பரமஆநந்தம். யாதுதான் பூமா அதுசுகமாமே." என்றற்றொடக்கத்தனவாய ஆநந்தாத்மப் பிரதிபாதகப் பிரத்தியக்ஷவாக்கியங்கள் படிப்பர். படிப்பனவாய வேதாந்தவாக்கியங்களான் நிர்த்துக்க நித்தியசுகவிக்கிரகமாய திருக்குருவப் பூமஆன்மாவை யறிவ

ரென்பது பொருள். அல்லது வேதங்களிற் றள்ளத்தக்கவை கள் வேதாந்தங்கள் என்னும் மதத்தானே, அவைகட்கு அருத்த சூனியத்தன்மை யுண்மையின், அதுகொண்டு ஆநந்தாதி அசித்திலையரசங்கித்து, அத்தியப்ன விதிக்குக் கண் கண்ட பயனுண்மை கோடலின், கருமவாக்கிய ங்கடுப்ப அவைகட்கும் பயனுடைமை யகற்றல் முடியாத தாம் என்பார், ஓதும்விதியென்றார். யாது காட்சி கருதல் களானே துணியப்பெற்றதாமோ, அவ்வாநந்த விக்கிரகமா கிய ஆன்மாவை யென்றுணர்க. இஃதியம்பியதாம்: ஆண் டநிருதஜடவிரோதி யென்பதில் ஆன்மாஜட அகங்காரவில க்ஷணசித்துருவமென முன்னேதப்பெற்றது. அற்றேல், சத்தியஞ்சாற்றப் பெற்றது அதுவே யமையாதாம் ஞானம் அநித்தியமாதலின் எனின்? அற்றன்றும், ஞானபதவாச்சிய விருத்திய நித்தியமாயினும், அதனுசிரயசாக்ஷி சைதன்யத் திற்கு அஃதின்மையின். அங்ஙனமன்றே:—உளதாமண்டு தேவதத்தாதிகட்டு சுகதுக்காதி சாக்ஷாத்காரம், அதுவும் கடாதிசாக்ஷாத்காரம் போலும் விழி முதலனவாய யாதா வது ஒரு கரணத்தானே துணியப்பெறுதாம்; அதன்கண்ணா ளவையின்மையின். சுகாதித்தோற்றம், கரணத்தோடு கூடி யது, வினைப்பான்மைமே வலின் எனவதன் காரணம் மனந் துணியப் பெறும் என்னற்க; தற்கிரியாத்தன்மைக்க சித்தியு ண்மையின், சாக்ஷாத் காரத்தன்மையானே அதன்சித்தியா மென்னற்க; அதற்நித்தியத்தன்மையிலுங்கூடலின். மேலும் சுகாதி யுற்பத்தி சமயத்திற்பவிக்கும் அவ்வுணர்விற்கு அஞ் ஞான்று விடயா சக்தமநேரிஜந்யத்வம் பொருந்துறுதாம். இரண்டாவது கணத்திலேயே சுகாதிஞானமென வியம்பற்க; பிரமாணமின்மையின், முதற்கணத்தில் அறியப்பெறுச் சுக இருப்பில், பிரமாணப்பிரயோஜனங்களின் இன்மையானும்;

இரண்டாவது கணத்திலும் சுகாதியையுண்டாக்கும் மனச்சை யோகத்திற்கு வேறோராற்றாற் பெறப்படுதலானே அதனால் அதனுணர்வு அசம்பவமாதலினானும். விடய அசமவாயிகாரணத்திற்கு ஞான அசமவாயிகாரணத் தன்மை எங்கும் கண்டதுமில்லையன்றோ. அயற்சை யோககற்பனையாற்றினே, அசமவாயிகாரண அழிவானே அழிந்த சுகாதியின் அநுபவ அசம்பவத்தானும் என்க. ஆயின்யாங்ஙனம் சுக ஞானம் உண்டாயது ஒழிந்தது என்னும் அநுபவம் உண்டாதலெனின்? ஆண்டுச் சுகாதியிருப்புளதாங்கால் அவ்வுணர்விற்கு உற்பத்திவிநாச அநுபவம் உளதாவதிலதாம், எதனானே புணர்விற்றனியுதயாதி துணியப்பெறலாமோ. சுகாதியுதயாதி தசையில் அதனனுபவத்திற்கு அதனுற்பத்தியாதி விடயத்தன்மையானே பிறிதோராற்றாற் பெறுதலானே அதன் அசாதகத்தன்மை யுண்மையின், ஆகலின் சுகாதியுபலக்ஷித அதன் அநுபவத்திற்குத் துக்காதிசமயத்திலும் திதியாதலின் அதனையுண்டாக்குங் கரணநிரூபணமாகாமையின், சுகாதிவிசிட்ட அதனுற்பத்தியாதிக்கு அந்யதாசித்தத் தன்மையுண்மையின் சுக அநுபவ உற்பத்தியாதியிலதேயாம் இங்ஙனம் அதன்பேத அநுபவத்திற்கும் என்னும் பாதிக்கப்படாத எளிதிற்கோடலானே, சுகதுக்காதிவிடயாநுபவம் ஒன்றே அதே வேறுபுருடனுக்கும் சுகாதிசாதகம் ஆம் என்பதாக, ஜகன்மாத்திர சாதகஞ்சைதன்யம் ஏகம், அதற்கே கடாதிகளினது உம்பிரகாசகத் தன்மையுண்மையின், அதுவும் ஆன்மாவே சுருதிசித்தம், அதன்பேதத்திற்குப் பாதகமில்லாமையின் எனச்சித்துருவ மேயான்மாவாம். இவ்வண்ணமியம்பிய அநுமானத்தானே அதற்கு ஆநந்தத்தன்மை துணியப்பெற்றவழி ஆநந்தத்திற்குத் துக்கவிரோதித்தன்மையானே நிர்த்துக்கத்தன்மை ஆன்மாவிற்கு அநித்தியத்

தன்னுமை அயோகத்தால், நித்தியத்தன்மையுந் துணியப் பெற்றதாம்; ஆகவே நிர்த்துக்க நித்திய சிற்சுக விக்கிரகம் ஆன்மாவாம். இங்ஙனம் எல்லாவுலகிற்கும் திருசியத்தன்மை யுண்மையானும் கூறப்படும் நியாயத்தானும் அநிர்வசனீயத் வசித்தியுளதாக, சஜாதீயாதி பேதசூனிய மமாமெனமொழி ந்த ஆன்மசித்தியாம். இதுவும் வேதாந்தவேத்திய சமஸ்த சொரூப உபலக்ஷணத்தன்மையானே உரையாடப்பெற்ற தாம். ஆண்டியாங்ஙனம் ஜடப்பிரபஞ்சத்திற்கு உண்மையா கச்சம்பவமென்பது? ஆயின் யாங்ஙனம் இதனனுபவம் எனின்? அத்தியாசத்தால், அசம்பாவிதமாய் அநுபவசித்தத் திற்கு அத்தியாச நியமத்தானென்றுணர்க. அவ்வாறே இவனே சமாதியினின்றும் எழுந்தகாலையில் முன்சமஸ்கார த்தால் கருமங்களைச்செய்த போதினும், ஆத்மத்ருப்த:—ஆத் மலாபத்தாற்றிருப்தன், இதனானே இச்சையின்றியதன்மை யானும் அடைபத் தக்கதயலொன்றின் மையானும் என்க. ய:—யாவன், இவ்வண்ணமாயநர: — மகான் மாவோ, தஸ்ய— அவனுக்கு, முன்மொழிந்த விதியானே. சங்காதித்தியாக பூர்வமாய கருமத்தானும், அர்த்த: நைவவித் யதே—பிரயோஜனம் ஒன்றும் உளதாவதில்லை, அவனுக்குக் கிருதார்த்தத்தன்மை யுண்மையின். அவ்வாறேதத்துவத்தை யறிந்தவனுக்குக் கருமங்களில் ஔதாசீனத்தன்மை கேட்கப் பெருகின்றது:—"முன்னுறுமிருடியரறிஞ ராய்மொழிந்தனர் என்னகாரணமாயாம் படித்திடுவேம், என்னகாரணமாயா மகம் வேட்பேம், சொன்னவாக்கதனில் வாக்கினைச் சுருப் பேம், மன்னிடும் பிராணனில்வாக்கினைச் சுருப்பேம், இன் னவண்ணமெழுந்ததே யேயும். துயிலிலாதல் தூஷ்ணீம் பாவத்திலாதல்பிராணனில் வாக்கு இருக்கும், படித்தலிலே னும் பாஷணத்திலேனும் வாக்கிற் பிராணனிருக்கும், அவ்

வாறே "என்பிரஜையாற் செய்வேம்? எந்நமக்கிஃதீரன்மா இதுலோகம்" பிரஜையாகிய சாதனத்தானே என்னசாத்திய பலத்தைச்சாதிப்பேம். பிரஜையோயாகிய லோகசாதனமெ ன்பது தெரிந்தவிடயமே, அந்தப்பிரஜையாகியலோகமும் நமது ஆன்மாவிற்கபலாக விலதாம், எல்லாமேநமது ஆத்மபூத மேயாம், எல்லாவற்றிற்கும் யாம் ஆத்மபூத மாவேம் ஆத்மாவும், ஆன்மத்தன்மையானே எச்சாதனத்தானு மே உத்பாத்யமேனும், ஆப்பியமேனும், விகார்யமேனும், சம்ஸ்கார்யமேனும் ஆகாதாம். ஆன்மயாஜிகட்குச்சமஸ்காரப் பொருட்டுக்கருமமென்பதும் காரியகாரணாத்மதரிசனவிடய மேயாம். இஃதெனது இதனானே அங்கம் சமஸ்கரிக்கப் பெறும், என அங்காங்கித்தன்மை யாதிகேட்கப்படுதலின். விஞ்ஞானகன கரசத்தை யிடைவிடாது காண்பவனுக்கு அங்காங்கி சமஸ்காரங்கோடல் கண்டதின்றன்றே. ஆகலி ன், பிரஜாதிசாதனங்களானே ஒரு சிறிதும் செய்யேம், அறி வற்றவர்க்கன்றே அந்தப்பிரஜாதிசாதனங்களானே செய்யத் தக்கபலமாவது. பேய்த்தேரில் நீருந்தற்பொருட்டு அதனை நீராகக்கண்டோன் முயல்கின்றனென, ஆண்டு ஊஷரமாத் திரம் உதகபாவங்காண்பவனும் முயலுதல் முற்றாதன்றே, இங்ஙனம் பரமார்த்த ஆத்மலோக தரிசிகளாய நமக்கும், அறிவலார்காணும் விடயமாய், கானனீராதி கடுப்பதாயிருக் கும் பிரஜாதிசாதன சாத்தியத்தில், பிரவிருத்தி பொருத்த முடையதாகாதாம் என்பதுகருத்து. அதனாலிது கூறப் பெறும்:—பரமார்த்த தரிசிகளாய எந்நம்மனோர்க்கு,பசிதாகா தியற்று நன்மைதீமைகளான் விகாரம் நாடாத இவ்வான்மவு லகம் பலம்விரும்பத்தக்கதாம். சர்வக்கிரியா உபரமமே ஆத் மலோகசாதனம் முக்கியம் அந்தரங்கம், சாத்திய சாதனாதி சர்வசம்சாரதரும விநிர்முக்தமாய இவ்வான்மாவிற்கு ஏதே

சாத்யம்ஸ்யாத்=சாதிக்கத்தக்கதாக விலதாம். அதன் கட்காரணங்கூறல்: சர்வஜந்துஷு-சர்வதா=எல்லாப் பிராணிகளிடத்தும் எப்போதும் இராநின்றவன் அறிஞனாதலின் என்பதாம். "எவனிவ்வணமறிந்தனனஹம்பிரம, மவனிதுவீரவனாயினனெனவே" முன்மொழிந்த இந்தப்பிரஹ்மவித்தையினாலே எல்லாவற்றனடைவுண்டாகலாம். பெருமை வாய்ந்த தேவாதிகட்கு, வீரிய அதிசயத்தானே; இஞ்ஞான்று கலிகாலவர்த்திகட்கு விசேடமாய் மநுடர்கட்கு முடியாதாம், அற்பவீரியத்தன்மையான் என ஆம் எவனதேனுமதி, அதனையகற்றும் பொருட்டு அறைதல்:—முன்னொடர்பு, ததிதம்=பிரகிருதப் பிரஹ்மம்யாது சர்வபூதாநு ப்ரவிஷ்டம் திருஷ்டிக்கிரியாதி லிங்கம், ஏதர்ஹி அபி=இந்நிகழ் காலத்திலும், எவன்=யாவனேனும் பாகிய உற்சுகமுறுதலைப்பற்றுதவனாய், தன்னையே இவ்வணம் அகம்பிரமமாயினன் எனவே அறிந்தனன், உபாதிஜநிதப்பிராந்திவிஞ்ஞான அத்யாரோபிதவிசேடங்களாகிய சமுசாரதருமங்களையகற்றி, கந்தாதியற்று அந்தரபாகியமற்று விளங்கும் பிரஹ்மமே யானாயிருக்கின்றேன் கேவலமத்விதீய மென்பதாக அறிந்தனன், எனின், அவன் அவித்தையா லாக்கப்பெற்ற அசர்வத்தன்மை நீக்கத்தினால், பிரஹ்மவிஞ்ஞானத்தினால், இவ்யாவுமாவன். மகாவீரியவான்களாய வாமதேவாதிகளுள்ளும், ஹீனவீரியவான்களாய நிகழ்காலத்திய மநுடர்களுள்ளும், பிரஹ்மத்திற்கேனும் அதனது விஞ்ஞானத்திற்கேனும் சிறப்பென்பதின்றன்றோ என மறையுமறைகின்றது, ஆன்மவித்தாகிச் சர்வான்மபாவ மடைவுற்றவனுக்கு அடையவேண்டிய தயவொன்றின்மையின் என்பது கருத்தாம். 18

ஸ்ரீபகவற்கீதை:—கண்ணிற்கருதரு மறிவைக்கருதிய வறிவேமிக வருகளிகூர்வோ, னெண்ணிற்கெழுமிறரு பயனுற்

றிடும் வேகையிசையானுதலிம் விணையாவும், பண்ணிற்பெறுவ தோர் பயனுண்டோவவை பண்ணுதுறுவதோர்பழியுண்டோ, மண்ணிற்பிறரிவனிவையுற்றில னெனமதியாரவைசெய விதி யாரில்.

(அ - கை.) உரைத்தருளி வந்தகருமயோகத்தை யுப சங்கரித்தருளல்:—

தஸ்மாதஸக்த꞉ ஸததம் கார்யம் கர்ம ஸமாசர,
அஸக்தோ ஹ்யாசரந்கர்ம பரமாப்நோதி பூருஷ꞉.

க. பற்றிலாமையாலதா லிப்பாரின்மேயசீவர்தா
முற்றநற்றெழிற் செயல்லுரித்தாகும் பூபனே
பற்றுளார்கள் செல்கையாற் பலப்பதங்கள் பற்றுவார்
பற்றிலார்களெம்மையே தம்மடிவமாக வடைதரால்.

(வி - ம்.) அதோ = எதனுற்கருமமில்லாமலே நைஷ்கர்ம் யசித்தியிலதோ அக்காரணத்தினுல், அசக்ததயா = கர்த் ருத்வ அபிமாநீ, பலாபிலாஷியுமாயவன் சக்தன், அவனினும் மாறுயவன் அசக்தன், அவன்றன்மை அசக்ததா, தயா, அசக்தத்தின்மையானே, ஜந்துபி: = முமுக்ஷுக்களானே, கர்மகர்த்தவ்யம் நித்தியமும், நைமித்திகமும், நிஷித்தகா ம்யவர்ஜனவாயிலா யியற்றத்தக்கதாம். பூபவென விளித் தருளி உலகத்தைச் சிக்ஷிக்கும்பொருட்டு உன்னுலும் கரு மஞ் செய்யத்தக்கதாம் எனக்காட்டியருளினுர்; அன்றுயினே சிக்ஷிகன் இல்லாமையானே கருமசம்பிரதாயங் கழிந்துபோ தலின் பூமி கலங்கிக்கெடுமென்பது திருக்கருத்தாம். கூறிய வடிவசக்த: = பயன்விழைந்தோன், கதிமவாப்நோதி = அவ் வக்கிருமபலபோகப் பொருட்டு அவ்வத்தேசத்தை யடை வான், கமனத்தைக் கதுவுவன் அவ்வாறே கேட்கப்பெறு

கின்றது:—சதமொரு நாடிகளிதய்ஞ் சார்வன, விதவவற்றென்றோ விகிர்கதமேற்சிரம், அதனுன்மேலே யண்டியமுதமாம், பாதவிஷ்வங்மயற்ப பலகதியதாம்,மதமாமுத்கிரமணந் தனின் மருவும்.

நூற்றொருநாடிகள் மாம்சபிண்டமயமாய இருதயத்தினது சம்பந்திகளாய் முக்கியங்களாக இருக்கும்; ஆக நாடிகள் அளவிலவதனுல், அவற்றுள் ஒன்று மூர்த்தாவைக் கடந்துறும், அதனுன் மேற்சென்று அமிருதபாவத்தை யடையும், விஷ்வங்—நாநாகதியன, குறுக்கினுங் கோர்ப்பன, மேலுமேய்வன, ஆகி, அன்னியநாடிகள் இருக்கும், சமுசாரகமன வாயிலாயினவாம், அமிருதத்தன்மையின் பொருட்டலவாம், மற்றோ, உத்கிராந்தியின் பொருட்டே யாவனவாம், நூற்றொன்றனுள் ஒருநாடியால் அமிருதத்வக்கிரம முக்திஸ்தானத்தை யடைவன், மற்றவற்ருல் சென்று மீண்டுந் திரும்புவன் என்பது பொருள்; தாத்ருச:—அசக்தனோ மனத்தூய்மைவாயிலாய்த் தத்துவஞானத்தை யடைந்து பரமென்பதில்லாமலே கதியையீண்டே, மாம்—நிஷ்கள ஆனந்தரூபப்பிரஹ்மமாகிய எம்மை, அவாப்நோதி—அடைந்திடுவன், அவ்வாறே மறையுமறைகின்றது:—“இவ்விதமே காமயமானன் சுழல். செவ்வினியா மகாமயமானன் செயல், எவ்வகாமன் றுனிட்காமன்றுன், எவ்வாப்தகாமனுத் மகாமன், அவ்வறிவோன் றனுருயிரவைகள், தவ்விமேலே தாஞ் செலமாட்டா, அவ்வரும் பிரமமேயாகிய வன்றுன், ஒவ்வரும் பிரமமேயுற்றுவாழ்வன்’’ இவ்வண்ணமே வாஞ்சைமிக்கவன் வருந்தித் திரிவன், எக்காரணத்தான் காமயமானனே இவ்வண்ணம் சம்சரிப்பானோ அதனுல் அகாமயமானன் எங்கும் சம்சரிப்பதில்லை பல ஆசக்தனுக்கே கதிபகரப்பெற்றது, அகாமனுக் கோகிரியை கிட்டாமையின் அவன் விடுபட்டவனே யாவன்.

யாங்ஙனந்தானிவன் அகாமயமானனுவன்? யாவன் அகாமன் ஆவனே அவன் அகாமயமானனுவன், யாங்ஙனம் அகாமதையெனின் நுதலுதும், யாவன் நிட்காமனே=எதனுற் காமங்கள் விடுபட்டவனே, அவ்விவன் நிட்காமன். எங்ஙனங்காமங்கள் விடுபடுகின்றன? யாவன் ஆப்தகாமனுவனே அடையப்பெற்றன காமங்கள்யாவனுல் அவன் ஆப்தகாமன், யாங்ஙனங்காமங்கள் அடைவுறுகின்றன? ஆத்மகாமத்தன்மையானே, எவனுக்கான்மாவே, அயலவாவத்தக்க வஸ்து அந்தரபூதபதார்த்த மிலதாமோ அவனுக்காத்ம காமத்தன்மையமையும், ஆன்மாவே உள்ளற்றது வெளியற்றது முழுதுமுற்றது, பிரஞ்ஞான கனமாயது, ஏகரசமாயது; மேலுமில்லைக் குறுக்கிலு மில்லை கீழுமில்லை ஆன்மாவினுமயலாகக் காமிக்கத்தக்க வேறு வஸ்து யாவனுக்கெல்லாம் ஆன்மாவேயாமோ அவனக்கால் எதனுலெதனைத் தான் காண்பன் கேட்பன் மனனிப்பன் மதிப்பன் இவ்வகை யுணர்ந்து தான் எதனை விழைவன். பதார்த்தம், அயற்றன்மையானே அறியப்பெற்றதாயன்றே காமிக்கத்தக்கதாவது, ஆப்தகாமனுகிய பிரஹ்மவித்துக்கு இஃதயலாகாதாம், ஆத்மகாமத்தன்மையானே ஆப்தகாமன் ஆவன் யாவனே அவனே நிட்காமனுய் அகாமனுய் அகாமயமானனுமாய் இலங்குதலின் விடுபடுவன் எவனுக்கான் மாவேயாவுமாமோ அவனுக்கநான்மா அவாவத்தக்கதாம் என்பதாகவின்றும்; அநான்மாவோ அன்னியமவாவத்தக்கது, சர்வமும் ஆன்மாவேயாயது என்பதுமுரண்படும். சர்வான்ம தரிசிக்குக் காமிக்கத்தக்கதின்மையின் கருமமும் பொருந்தாதாம். யாவர் தாம் பிரத்யவாய பரிகாரப் பொருட்டுக் கருமத்தைப் பிரஹ்மவித்துக்கும் கற்பிப்பரோ, அவர்க்கு ஆன்மாவேயாவு மாகாதாம், ஆன்மாவினும் அன்னியமாய்க் கெடுக்கத்தக்கதாய பிரத்யவாயத்தின்

கருத்திருத்தலின் யாவனுற்றுன் பசியாதிகடந்த நித்தியம் பிரத்யவாய அசம்பத்த ஆத்மாவறியப் பெற்றதோ அவனை யாம் பிரஹ்மவித்தென்பேம், நித்தியமே பசியாதிகடந்த ஆன் மாவைக் காண்பன், எதனினின்றும் தள்ளத்தக்கதாதல், கொள்ளத்தக்கதால், அயலாக யாவன் காண்கிலனோ அவனை வினையகப்படுத்த அருகமாகாதாம் யாவன் அப்பிரஹ்ம வித்தோ அவனுக்குப் பிரத்யவாயபரிகாரப் பொருட்டுக் கரு மமுளதேயா மென்பது முரண்பாடன்றும். ஆகலின் கரம மின்மையின் அகாமயமானன் சனியான் வீடேயடைவன் அவ் வகாமயமானனுக்கோ கருமமின்மையின் கமனகாரணமின் மையின் பிராணன்க ளென்னும் வாக்குமுதலன தேகத்தி னின்றும் மேலேகிளம்பிச் செல்லாவாம் அவ்வறிஞனும் ஆப் தகாம ஆத்மகாமத்தன்மையானே ஈண்டே பிரஹ்மபூதனு வன். யாவன்றுன் சுழுப்த அவத்தையனைப் போல நிர்வி சேஷ அத்வைத குன்றுத சித்துருவ இயற்கைவாய்ந்த ஆன் மாவை யுணர்வனோ அவன தேவாக்காதிகள் கிளம்பாவாம்; மற்றோ, அறிஞனவன் ஈண்டே பிரஹ்மம், உடம்புடையவன் போற் காணப்பெறினும், அவன் பிரஹ்மமே யாகிப் பிரஹ் மமடைவன். காமங்களொன்று மில்லாமையானே ஈண்டே பிரஹ்மமெய்து வனன்றிச் சரீரபாத உத்தரகாலம் என்ப தின்றும். அறிஞனுக்குப் பாவாந்தரப் பிராப்தி யிலதாம் ஆயினோசர்வ உபநிஷத் சுாற்றவிழைந்த அருத்தமாய்மோ க்ஷத்தின் ஆத்மைகத்வப் பெயர்பாதிதமாம். மோக்ஷகரும ஹேதுகமேயாமலது ஞானநிமித்தம் தாகாதாம் அதுவோ அநிஷ்டமாம் அநித்தியத்தன்மையும் மோக்ஷத்திற்கு அடை வுறும். வினையால் விளைந்தபொருள் நித்தியமெனக் கண்ட தில்லை. மோக்ஷத்தையோ நித்தியமென வுடன்பட்டுளோம். ஏஷநித்திய மகிமாவென்னும் மந்திர வர்ணத்தான். என்பு

தாக நிட்காமத்தன்மையானே தத்துவ வித்துக்கட்குக் கிளம்பாண்மையை மறைபறைகின்றது. (19)

(அ-கை.) எதனுலித்தகைய பிரபாவம் கருமமாமோ அதனுற் கிருத கிருத்தியனும் லோக சங்கிரகப்பொருட்டுக் கருமங்களைச் செய்தல்வேண்டுமென வருளல்:—

கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:,
லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்துமர்ஹஸி.

க. முன்னர் மன்னரிருடியோர் முதன்மைவீடடைந்தனர்,
பன்னுலோக மன்னுவோர் தம்பாலனப்பொருட்டுமே
அன்னதன்மை வன்னகன்ம மாவலிற்றொடங்கலாம்
இன்னமோர் பிறப்புளாருமேற்றுளார்செயல்களே.

(வி-ம்.) புரா=கிருதயுகாதியில், பரமாம்சித்திம்=சண்டேகைவல்யத்தை ஜீவிப்பவராயே, ராஜர்ஷப:= அரசர்களும் இருடிகளும், ஜனகவசிட்டாதியர், ஆபந்நா:= அடைந்தனர், அடையத்தக்க தயலொன்றின்றேனும், லோகாநாம்சங்க்ரகாய=எல்லாமேன்மையின் மூலபூதமாய நல்லாசாரத்தில் நிகழும்பொருட்டு, தாத்ருசம்=முன்மொழிந்த வகையில், கர்ம=தொழிலை, ஆரபேத்=அநுட்டித்துவரவேண்டும், ஜடஜனம் பற்றுற்றுக் கருமந்தொடங்குவதேபோலஇவ்வறிஞனும் லோகசிக்ஷையின்பொருட்டுக் கருமந் தொடங்கவே வேண்டுமென்பதுபொருள். மேலும், இருபிறப்பாளரல்லாதவரும் ஆகிய தருமவியாத பதிவிரதை முதலாயினேரும், அலௌகிகதரிசனத்தால் செய்யவேண்டுவதைச் செய்து முடித்தவராயினும், தமக்குசித தருமமாய தாய் தந்தையர் சேவை, நாயகனது சுசுரூஷை, முதலவற்றைச் செய்துகொண்டிருந்தனரேயன்றிக் காஷ்டமௌனத்தால் ஜடபரதாதிபோலும் கருமத்தையுபேக்ஷிக்கவில்லை. இதுவும் மகாபாரதத்தின்கண் ணிப

ம்பப்பெறுகின்றது ஹிசப்தம் இதனையிலக்குகின்றது. அத்விஜா = துவிஜர் அல்லாதவரும், என உத்தரார்த்தத்திலிருக்கும் வகாரம் பூர்வத்தோடு பொருந்தாநிற்கும். ஸ்ரீமத்பகவத்கீதை:*ஆதலானீயும் பலத்தின்மேலவா வற்றடுத்தகாரியஞ் செய்வாயவற்றாற், றீதிலாவீடே சேரலாமுன்னஞ் சேர்ந்தவரனேகர்பின்றெரியிற், காதலாலரசன் சனகனே முதலோர் கருமமோடொழுகியேயன்றோ, போதராயுல கம்புக்க தேமற்றும் புகுந்தவரநேகர்முன்போனார்.

ஜடபரதர் காட்டமவுனம் ஸ்ரீமத்பாகவதத்தில்:—
முற்றுணர்வுடைமையாலே முனிவரர் கிளர்ந்தவாறு
கற்றிலனெழுதாநுண்ணூற் கலைத்திறங்கேட்டிலானற்
பற்றிலன்மனத்தினியாதும் படுமைகைநட்பொன்றில்லான்
பெற்றன வருந்தி யொன்றும் பேசிலனொழுகினானே. (20)

எனக்கூறப் பெற்றுளது.

(அ-கை.) அறிஞர்தம் கருமங்கட்கு லோகசிக்ஷார்த்தத்தன்மையையே வெளிப்படுத்தி யருளல்:—

ஶ்ரேயாந் யத்யத்கரோதி கர்மஸ்தத்ததேவேதரோ ஜந:,
கரோதி ஸ ச யத்கார்யம் ஸதேவாநுகரோதி ஸ:. 21

க. பெரியரெச்செயலைச்செய்வர்பின்புளோர்
உரியதென்றதையேசெய்வருண்மையாய்த்,
தெரியமானமெனத்தெளிவாரெதை
யரியதாயிவரும்மதையாள்வரால்.

(வி-ம்.) சிரேயாந் = இதரஜனங்களைக்குறித்து மேன்மையினும் மேன்மைவாய்ந்த வைதிககருமநிஷ்டை யுடையவன், கர்மயத்குருதே = குருதேவதை யக்கினி பிதுராதி பஜனம் யாது செய்வனோ, தத் = அவ்விதமே, அகில: ஜன: = எல்லாப்பிராணிகளும், கரோதி = செய்வர்; ஸ: = அந்தமேன்மை

மிக்கவன்றனே, யத்பிரமாணம்மனுதே=எதனைப் பிரமாண மென எண்ணுவனே, தத்தேவ=அதனையே, அசௌ=கீழாய ஜனங்களும், அநுசரதி=அநுசரிப்பர், பழிப்பற்ற ஆன்றோ ராற் படுத்திக்காட்டப்பட்ட மார்க்கஅநுசாரிகளாய தேசாசார விசேடங்கள் அவ்வசனங்களால் அநுட்டிப்பனவாய்ப் பிரமாண பூதங்களாமென்பது காணப்பெறுகின்றதன்றே 21

(அ - கை.) அருளியதேயாய இப்பொருளில் தமதாசாரத்தையும் அள்வைத்தன்மையானே காட்டியருளல்:—

விஷ்டெமெஜநவாயெ்்ாஹிகஷிஉமெ-கிாநாாயிலை கூநாலுஷுஷுவு்ேகூ-ேவ-கிகூஜி-கி தயாவ்ுஹு. •

க. விட்டபத்திலெமக்குவிளைவதா
யிட்டவெப்பொருளில்லையெதுவுமே
சிட்டருக்கிறைசேரவரியதாய்ப்
பட்டதாயினும்யாந்தொழிற்பண்ணுவேம்.

(வி - ம்.) அற்றேல், பெரியவர் பயின்றபடியலாற்பயிலார் பின்புளோ ரென்பதன்றாகி, வரியவிவ்வுலக மூன்றினு மெனக்குச் செய்யவேண்டுவது மொன்றுண்டோ வரியவை யென்னுனுறுதவு முறுதற்பாலவு மியாவையிங்கையா, பரிய விவ்வுலக மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற் கென்னையும் பாராய்.” என்னும்ஸ்ரீமத்பகவத்வாக்கியம்பிரமாணம், மாநுஷ நாட்டியம் காண்பித்தருளும் அவருக்குச் சர்வகர்மாசரணம் அடைவுற்றதேயாம், அவ்வாசரணமும் லோகசங்கிரகப்பொருட்டுப் பொருத்தமுடையதேயாம். தேவதைவடிவமாய கணபதிக்கோ மாநுஷநாட்டிய அநுகரணம்பொருந்தாதாம், “அந்தத்தேவரோ அயில்வதுமில்லை, குந்தித்தண்ணீர் குடிப்பதுமில்லை” எனச் சாமானிய தேவதைகட்கும் அசனபானாதி யபாவத்தைப் போதிக்கும் சுருதியால் கருமாபாவம் அறிவிக்கப்பெறுகின்றது, என்றால், மற்றென்னேமலர்வது

சர்வதேவமயமாய ஸ்ரீமகாகணபதிக்கு; கர்மாதிகாரிசரீர இன்றியவருக்கு, வருணஆசிரமங்கட்குத் தக்ககருமமிலதாம் என்பதனுனே "அங்ஙனமாயினும் யாம்கருமம்செய்வேம்" என்றருளிய ஸ்ரீகணபதிதிருமொழி? எங்ஙனம்பொருந்தும் இங்ஙனம் ஆக்ஷேபுதல்வற்பெற்றோன் கிருஷ்ணகேசன் அக்கினியையமைததாதரிக்குகவென்பதாகச் செவியுறுத்தப்பெறும் கருமாதிகாரிச் சிறப்புகட்குச் சம்பவமிலதெனினும், பிரஹ்மவித்துப் பிரஹ்மமேயாகின்றுன்என்றும் ஓதருஞானியென்னுண்மையி னுள்ளேயேதலின் லவனுெனனவேயாம், என்றும் கூறுநின்றசுருதிஸ்மிருதிகளினுல் ஜனகயாஞ்ஞவற்கியாதிபிரஹ்மநிஷ்டரைச் சுவாமித்தன்மையானே காணும் ஸ்ரீஹேரம்பரது திருவாக்கியம் "விஷ்டபேமெ" என்னுமிது. மே=ஜநகயாஞ்ஞவற்கியாதி பிரஹ்மவித்துருவமாய் நிகழும் எமக்கு, விஷ்டபே=முப்புவனத்தில், பிரஹ்மவித்தாகியதன்மையானே சகலகாமத்தையும் அடைந்தவருக்கு இவ்வுலகின்கண், நசாத்யோஸ்திகஸ்ஜித்தர்த்த:=எப்பொருளுமே சாதனத்தாலடையத்தக்கதாக ஆப்தகாமத்தன்மையானே இலதாம். அவ்வாறே வித்யாபலம் கேட்கப்பெறுகின்றது:— "ஓமிங்கறிந்தவன் உண்குவன் எல்லாக், காமங்களையுங்கடிதினிலன்றே" அவன் அறைந்தவாறு பிரஹ்மத்தையறிந்தான் ஆவதென்னே யெனின்? அறிந்தவன் எஞ்சுதலின்றிப் போகங்களெவற்றையும் அயில்வன்; நம்மனேர்போலச் சுதசுவர்க்காதியை பரியாயமாகவேர் வெனின்? அல்லவாம், ஏககாலத்தில் ஏககணமேறியவற்றையே, பிரஹ்மசொரூபமேயாய ஏகஉணர்ச்சியானே யென்க. பிரஹ்மபூதமாய வித்வான் பிரஹ்மசொரூபமாகவே சர்வகாமங்களையும் உடனே யுண்பின். உபாதியாலாக்கப்பெற்ற சொரூபமுடைய பிரதிபிம்பபூத சமுசாரியால் தருமாதி நிமித்தங்களையும் விழிமுதலிய

கரணங்களையும் அவாவிக் காமங்களை உலகம் முறையாக வுண்டதுபோல உண்ணுன். எங்ஙனம் ஒன்றையும் அபேக்ஷியாமல் உண்பதெனின்? சர்வஞ்ஞசொரூப பிரஹ்மரூபத்தாலென்க.

அநாலப்தவ்=ஆலப்த=பூரணமாக அடைதல், அதன் மாருயது அநாலப்தமாம், அவ்வடையப்பெருததும், லப்தவ்ய:—அடையத்தக்கதாக இலதாம். குறைப்பிரஹ்மவித்துக்குத்தான் சிறிது அடையப்பெருததாக எஞ்சும், நிறைப்பிரஹ்மவித்துக்கு அங்ஙனிலதாம். ஈண்டுச் சாஸ்திரத்தில் நிறைந்த பிரஹ்மவித்துக்கள் காசக்ருத்ஸ்நபாதராயுணர்கள், அவருள்ளும் முதலவர் அநீசுரர், மற்றையரோ சர்வேசுரர், "ஊ௵ாவெசுஷநவஷவெதஊரிஊ௵ஂநீஒமொஷிதா" எனச் சதருத்ரீயத்தில், தாரகப் பிரஹ்ம மந்திரங்களால் தரித்ர அந்தஸ்ஸ்மதி சப்தங்களால் கூறப்பெறுகின்றனர். அவ்வாறே நான்குபாதங்களையுடைய பிரஹ்மத்தின் ஒவ்வொருபாதத்தை யுணர்ந்தவராகக் குறைபிரஹ்மவித்துக்கள் நால்வர் உளர். அவர் தம்முள். அன்னமெனப் பெயரியவிராஜின் உபாசகர் ஜைமினி, நீலலோகிதவேறு பெயரையுடையவர், அங்ஙன் பிராணனெனப் பெயரிய சூத்திரத்தின் உபாசகர் ஆஸ்மரத்யர், த்ராபிநாமத்தானும் நவிலப்பெறுவர், அவ்வண்ணம் மனமெனப் பெயரிய ஈசுரரின் உபாசகர்பாதரி, த்ராபிமந்திரத்திற் புருடசப்தத்தானே கூறப்பெறுவர், இங்ஙனம், ஊவ௵விஓாவிதமெஊதவஷ௱ம்யாமெவெஊளஊ௱ா மெதாஹிஊ௵ாவிஜமெநவ௱௱வெநஊவுமெத.

இதுவும் இனிமேல் ஊகத்துடன் விஸ்தாரமாய் விரிக்கப் பெறும், தயாபி=முழுதுணர்ந்தவனுயினும், அகம்=யாம், கருமம்=தொழிலை, குர்வே=லோகத்தை நடாத்தும் பொருட்டுச் செய்வேம், எனமுன் மொழியப்பெற்றதே.

எல்லாக்காமங்களையும் ஏககாலத்தி வயில்வன் என்பது வேதாந்த சூடாமணியிலும் வெளியாம்:—

எல்லாவாழ்வினையுமுறுஞ் சார்வபௌமாதி யிரணிய கர்ப்பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற, நல்லிாநந்தங்களெலாம் பற்றிலா வறிஞனணுகுதலான், ஞாநங்கொண்டறி சிவத்தின்கூறுய்த், தொல்லாநந்தங்களெலாநிற்கையினு லவற்குத் தோமிலகண்டானந்தச் சித்திதோன்றுதலே, பொல்லாத வினைப்பகையைக்கடந்த பெருந்தவர்கள் புகன்றிடுவர் சகல காமாப்தி யெனவன்றே.

உரைத்தருளிய இரண்டு சுலோகங்களின் றிருக்கருத்தை ஸ்ரீபகவனும் அருளல்:—

பெரியவர்பயின்றபடியலாற் பயிலார் பின்புளோரென்பதன்றாகி,ஆரியவிவ்வுலகமூன்றினு மெனக்குச் செய்யவேண்டுவது மொன்றுண்டோ, வரியவையென்றுனு றுதவுமுறுதற்பாலவுமியாவையிங்கையா, பரியவிவ்வுலகமகிழ்வுடன் வினைதான் பண்ணுதற்கென்னையும் பாராய்.

(அ - கை.) விபக்கத்திற் பாதகம் இரண்டாவியம் பியருளல்:—

சு [Grantha śloka text]

[Grantha śloka text]

க. வினைதனையகஞ்செயர்திருந்துவீடினுே
சினைதனின்மனுமுதாசினனுகியே
வனையெனைநினைந்திநல்வருணமாயினுே
ரனைவரும்வினைசெயுாறிவின்மேன்மைபோய்.

(வி - ம்.) அகம்=பரமேசுரராகியத்தையு ஜகத்குருவாகியயாம் யதாகர்மசுர்வே=நித்ய,நைமித்திகத்தையும்,அக்

கினிஹோத்திரஜாத இஷ்டியாதிகளையுஞ் செய்யாமற் போவே மேல்; இதன்கண்ணே தூவையருளல்:—ஸ்வதந்த்ரோலசபா வித = அறியாதே விதிகிங்கரனவன், அதனினும் மாறுபதன் மைப்புண்மையின் அறிந்தோன் சுதந்திரனவன், செய்யாதொ ழியின் தனக்குப் பிரத்திய வாயபாவத்தைக்கண்டு, அலச பாவிதன் என்பதாம், அஞ்ஞன் அலசன் சர்வகாரணவியாபா ரங்களில் அபேதங்களில் அப்பிரவிருத்தி, அதனானே பாவி தன் = அங்கிதன் = உதாசீனன் என்பதுபொருள். சுதந்திர ரும் உதாசீனரும் ஆனயாம் அதனானே ஹானியாதாமாலோ வெனிற் கூறியருளல்: சர்வேவர்ணா = பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள்; இதுவோபிரஹ்மசாரி, வாநப்பிரஸ்தன் கிருஹஸ்தன், பரிவிராஜன் என்பவர்கட்கும் உபலக்ஷணமாம் இவர் யாவரும், மம = வசிஷ்டாதிரூப எமது த்யானம் = சர் வகர்மபரித்யாகத்தால் வாளாவிருத்தல், கரிஷ்யந்தி = செய் வர்; ஜகத்குருவானவர் தூஷ்ணீம்பாவமாக இருந்தபோது, ஜடனும் அற்ப அறிவுமின்றி அதுபோன்றிருத்தன் மாத்தி ரையாகக் காட்டியபிநயித்து. தான் அடையவேண்டியதி னின்றும் பிரட்டனாக ஆவன். நீயோ மகாமதியனாயிருத்த லின், பாலாசாரமாத்திர நிஷ்டனாகாய் அதனால் சுவார்த்தத்தி னின்றும் நழுவாய். ஹேமகாமதே யென்பது விளியாம். 23

(அ - கை.) தமது சுவார்த்தத்தினின்றும் உலகர் நழு வுகவே, எமக்குற்ற ஹானியாதுகொல் என ஆசங்கித்தரு ளல்:—

சு. ஹவிஷ்யந்தி தமெதாமொகாஉ த்ஸநாவஸம்வெ ஊாவிநஃ,
ஊந்நாவஸ்யாஃவஸ்யமொகஸ்ஸவியாதாவஸம்கூாவஸ்யவ.

ரு. ஆகலினறிவிலாதவவரழிந்தவரேயன்றி
யேகியரியர்நீர்மையென்னவும்படுவரன்றே

மோகியரிவரைக்கோறமுயன்றவன்றானுமன்றிச்
சோகமிலறத்தின்சீலந்தொலைத்தவன்றானுமாவேன்.

(வி - ம்.) தத=எமதுதியான அனுகாரணத்தால், லோகா=மூடஜனங்கள், உச்சிந்நாசம்ப்ரதாயிநஃ=அசம்பிரதாயர்களா யழிந்தவர்களாயாவார்கள் தியானசம்பிரதாய சூனியர்களாய், கேவலம் அதுபோலச் சும்மாவிருப்பவர்களாய், தந்தருமத்தியாகத்தாலுளதாய் தோடத்தால், திரியக்குத்தாவரநாரகயோநிகளை யடைந்து துன்புறுபவர்கள் பவிஷ்யநதி= ஆவர்கள். உச்சேதத்தில் சம்பிரதாயமின்மை யேதுவாம். அதனாற்றான் என்னையெனின்? அறைந்தருளல்:—அஸ்ய லோகஸ்ய=மித்தியாதியாயிகளின், ஹந்தா=ஹிம்சகர், அகமேவ=யாமே, ஸ்யாம்=ஆவேம், அவ்வாறே, ஸங்கரஸ்யவ= தரும ஆசாரவிவத்தையின் அபாவம் சங்கரமாம், அதனதுஉம், விதாதா=கருத்தா, யாமேயாவேம், இதுவும் லோகபரியாலனப் பொருட்டும் தரும நன்னிலை பெறுத்தற்பொருட்டும், வெகு அவதாரங்களைக் கொள்ளாநின்ற வெமக்கு அத்தியந்தம் விருத்தமாமென்பது பொருள். 24

(அ - கை.) அற்றேல் இங்ஙனம் அறிஞனுக்கும் அறியானுக்கும் சமமாகவே கருமங்களின் அனுஷ்டானம் பிராப்தமாக அவர் தம்முள் விசேடம் யாதாம் என்னும் ஆகாங்கை யுண்டாகவறைந்தருளல்:—

சு. காமிநோ ஹிஸகாமேந ஜாடா க்ஷ்காமிண: ॥
லோகாநாம்ஸமூஹாமயை தத்விதா க்ஷேயா லோகஸங்க்ரஹீ: ॥

க. காமியர்தாமெக்காலுங்காமியேகருதாநின்றே
ஆமயவறிவிலாமலதற்கடுத்தனவேசெய்வார்
தாமறிவறிந்தமேலோர்சகத்தின்சங்கிரகக்காக
வேமெனவினையேசெய்வாரொன்றினும்பற்றறாரே.

(வி - ம்.) காமிந:—சுவர்க்கபுத்ராதி காமவந்தர்கள், ஹி=பிரசித்தமாக, ஸதா=நித்தியம், காமை:=காமிக்கத்தக்கனவாய திவ்விய அங்கனை மாலை சந்தனவசனாதி விடயங்களாம் நிமித்த பூதங்களால், அவ்வவ்விடய லாபப்பொருட்டு, கர்மகாரிணர்=அவ்வவ்விடயங்களை யடைவிக்கும் கர்மஞ்செய்யுஞ் சிலராய் ஆவர்கள். எதனால் எனில்? அஞ்ஞாநாத்=ஆன்மாவே சர்வகாமமயம், அதன் லாபத்தானேயாவும் அடைந்தனவேயாம் என்னு முணர்வு இன்மையின், அஞ்ஞானிக்குக் கருமத்தைக் கூறியருளி, மெய்ஞ்ஞானிக்கும் அதனையருளல், வித்வாந்ஸ்து=அறிஞனோ, லோகாநாம் சங்க்ரகாய் ஏதத்கர்மகுர்யாத்=உலகர்களைக் காக்கும் பொருட்டு உரியகருமத்தைச் செய்க; வித்வத்பதார்த்தம் அருளல்:—கேவலம் கருமப்பிரயோக சதுரன் வித்வானென வீண்டுக்கூற விழைவிலதாம், மற்றோ, அசக்ததீயாம்=கர்த்ருத்துவ அபிமான பலாசக்திரகித மதியாவனுக்கோ அவன் அத்தகையனாவன்; சக்தத்வ அசக்தத்வங்களானே, மந்தபுத்திகள் கருமங்களி லிருப்பர்கள் வேறுபடுவர்கள் அலது சொரூபபேதத்தால் அல்லவாம். 25

(அ - கை) இங்ஙனம் அறிஞ அஞ்ஞர்கட்குக் கருமபேதமிருந்தபோதிலும் அறியார்களின் மதிபேதத்தை யறிஞன் செய்யலாகாதா மென்றருளல்:—

சு ந புத்திபேதம் ஜநயேதஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம்
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வாந் யுக்த: ஸமாசரந்

க. கருமமே பெரிதாய்க்கொண்டு கடைப்பிடித் தொழுகுவார்தந், திருமமா மதியைப் பேதஞ்செய்திடத் தக்கதன்றாம், கருமமே யொழுகியெல்லாக் கருமமு மெமக்காய்த்

தீர்ந்தே மருமமே யொப்பாய்க்காணு மாண்பினன் மலர்தல் வேண்டும்.

(வி - ம்) அஜ்ஞானாம்=மூடர்களின், கர்மசாரிணாம்= சங்கபூர்வகமாகக் கருமகரணசீலர்களின், விபின்னத்வமதிம்= மூடர்களாகிய உங்களுடைய கருமங்கள் அயல் வகையின, அறிஞர்களாகிய எங்களுடைய கருமங்கள் வேறுவகையின வாம், என்பதாகச் செய்யுந்தொழில்களில் விபின்னத்தன்மைமதியை, ஜஹ்யாத்=ஹாபயேத்=விடுவித்தல் வேண்டும்; இது உழுவார் உழுவிப்பார் என அனுபபத்தி தோன்றிய விடத்து இவ்வாறு பொருள்படுவதனை அந்தர்ப்பாவிதணிச்சு என்பர். அறிஞர் அறியார்களின் பிரயோகபேதத்தை அறிவியாதொழிகவென்பது பொருள். அற்றேற்பற்றி லாதவன் பற்றுற்றவர்பாற் பற்றற்ற பான்மையைப் பகர்ந்தறிவித்து உபகர்த்தாவாக அவர்கட்கு ஆவன் என யாங்ஙனம் விபின்னத்வமதிம்ஜஹ்யாத்தென அருளியது கூடுமெனின்? ஈண்டருளப் பெறுகின்றது:—மூடனானவன் தனக்கு அகர்த்ருத்தகைமையை யறிந்திட மாட்டான்; நிட்களனென்று கருமங்களிற் பிரவிருத்திப்பது மில்லை ஆகலின் சகாமகரும அபேக்ஷையாற் கருமஞ்செய்யா திருத்தலே மேன்மையாம் என வெண்ணி யிரண்டுலகங்களினின்றுமே நழுவிவிடுவன்; அதனினும் உயர்வாயது, சுவர்க்கார்த்த கருமஞ்செய்தபோதினும் அவசியம் பாவியாய மனத்தூய்மை யுண்டாம் என, காமிகளாயினும் போகத்தைப் பங்குரமெனப் பார்ப்பர் சித்தசுத்தியை யனுசரித்து என்பது பொருத்தமாம். அவ்வாறே விபின்னத்தன்மை மதியை விடுவிக்குக வென்பதற்கு அவர் தம்மதி வேற்றுமையை யாற்றொழிக வென்பது பொருளாம். மற்றேன், யோகயுக்தஃ=“சமமேயாகிச் சித்தி யசித்தியிற், சமத்தன்மையோகஞ் சாற்றிடப்படுமே” என்றியம்பி

யருளிய விலக்கணயோகத்தோடு கூடியவனாகி, சர்வகர்மாணி அர்ப்பயேந்மயி=எல்லாக் கருமங்களையும் எம்மிடத்தர்ப்பணஞ்செய்க; கர்மக்ருத்=ஆகலின் தொழிற்றொடங்குபவனே யாகுக, கருமத்தை விடலாகாதென்பது பொருள். ஸ்ரீமத் பகவற்கீதை:—என்னைசயறவிரிலியான் செயாவினைகளியாவநுஞ்செயா ரதனாலே, மன்செய்தகுலங்கண் மயங்கி மாய்ந்திடுவர் மற்றவர் மற்றதற்காகப்; பின்செயலறியாதவா வொடுமுயலும் பேதையைப்போற் பிறர்பொருட்டா, லுன்செயல்களைச் செய்யவை செய்வார்தம்மை யுணர்வு வேறுக்கதுமொழிவாய்.

(அ - கை.) ஆயின் வித்வாம்சர்களும், யாங்ஙனங் கருமஞ்செய்வர்கள், பரிவிராஜப்பான்மையைப் பற்றுவதில்லை யென ஆசங்கித்தருளால்:—

ஈ. அவித்யாகுணஸாமர்த்யாத் வித்வாநப்யக்ஞவத்ஸ்திதஃ
ஸாஹங்காராந்ஸ்வயம் கர்த்தேத்யபிமந்யதே

க. பேதைமை யபிமானந்தான் பெரிதுறுந் தகைமையானே, தீதுறுமயலதின்றிச் செய்குவன்றொழில் கடம்மைக்காதுறுமகங்காரத்தாற் கருத்தன்யா னென்றுகொண்டே, யோதுவன்யாவன் மந்தமதியின னுணர்விலன்றேன்.

(வி - ம்.) உடன் முதலிய அநாத்மாக்களில் ஆத்மபுத்தி, யரின் மனுஷ்யன், கருத்தா, போக்தா, அதிகாரியென எம்மதியுளதோ அது அவித்யா=அவித்தையாம், அதன்; குணம்=போக்த்ருத்வ அபிமானம், அதனது, ஸாமர்த்யாத்=பிரதானத்தன்மையால், ஸ்வரசவாஹியறிஞனும் ரூடமானபடி யபிநிவேசமெனப் புகன்ற இலக்கண அபிநிவேசத்தால், வித்வானும் கர்த்துருத்வ அபிமானத்தைக் ககனக்

கீருமை பிரதிபிம்பாதிமயல் போலும் அகற்றமுடியாமையின் அதந்த்ரிதஃ=அநாதிசமஸ்காரத்தானே சோம்பலின்றி, கர்மாணி=சந்தியா உபாசனுதிகள், குர்வந்=செய்துகொண்டேயிருப்பன், மந்தபுத்திஸ்து அகங்கீராத்=ல்ப்பலோபே கர்மண்யதிகரணேச ல்யபந்தத்திற்கு லோபமாக = அதர்சனமாக,=அப்பிரயோகமாக, பிரகரணுதியானே யுணரத்தக்கதான அதனர்த்தப் பொருட்டுக் கருமத்திலும் அதிகரணத்திலும்; பஞ்சமி சொல்லத்தக்க தென்பதுபொருள். அநாத்மாவான அகங்காரத்தையும் ஆன்மாவைப்போல அத்தியசித்து அகமேவகர்த்தா இதியோ அப்ரவீத்=யானேகருத்தாவென்று யாவன் புகல்வனே, அவிவகூடிதம் காலம், யாவன் புகல்வன் யான் கருத்தன் என அவன் மந்தபுத்தியெனச் சேர்க்க. அறிஞர்கட்கும் கருமம் விலக்கமுடியாதாயின், அவித்தையினல் யாக்கப்பட்டவர்களாய அஞ்ஞர்கள் விடயத்திற் கூறவேண்டிய தென்னென்பது திருக்கருத்தாம். 27

(அ - கை.) இவ்வண்ண மிருந்தபோதினும் அறிஞர்கட்கு விசேடம் விளம்பியருளல்:—

கூ. யஸ்து வேத்தி ஆத்மநஸ் தத்த்வம் விபாகாத் குணகர்மணோஃ
கரணம் விஷயே வ்ருத்திம் மத்வா ந ஸஜ்ஜதே

க. கண்ணியே தனதுமெய் காணுவா னெவன்
பண்ணியே குணந்தொழிற் பகுப்பி னேதுவா,
னண்ணியே பொருள்களிற் கரணநாடுமென்,
றெண்ணியே யிடரினை யியைவ தில்லையால்!

(வி - ம்) யஸ்து=எப்புருடோத்தமனுனவன், ஆத்மநஸ்த்த்துவம்=பிரத்தியக்கின் தத்துவத்தை, யாவற்றையுங் காண்பதும், பஞ்சகோசங்கள் கடந்ததும், சத்தியஞான ஆநந்த ஏகரசமுற்றதும், பொய்துயர் பொருந்தாததும்,

கருத்தா போக்தாவாகாதாதும் ஆம் என்பதாகச்சுருதி யநுப வங்களானே, வேத்தி=அபரோக்ஷமாக அறிவன், அவன், நசஜ்ஜதே=கட்டுறான் என்பது அந்நுவயம் எங்ஙனம் அப ரோக்ஷமாக்குவன் என்னும் அவா வுண்டாக அருளல்:—குணகர்மணோர்விபாகாத்=குண=பத்திந்திரியங்கள் கர்மா ணிஃ=தத்தமது விடயப்பிரகாசனங்கள், அவற்றின் விபா கம்=ஆன்மாவிற்குத் தனித்தன்மை, அவ்வேதுவினால்; ஈண்டோ விழிரூபத்தைக் காண்கின்றது பயனுற முயன்று அதன் அபிமானியாகச் சிதாபாசனே யுறைவன், அவற்றின் பிரகாசக கூடத்த ஆத்மாவோ அன்றும்; அங்ஙனமன்றே:— மாதாமானமேயவிவகாரத்தையும், அதனால் உண்டாவனவாய மகிழ்ச்சிவாட்டங்களெனப் பிரமாதாவி லிருப்பனவற்றையும் பொதுவா யொளிர்வித்துக்கொண்டு, அக்கூட்டத்தினும் அயலாய் சுயஞ்சோதியாத்மா; பிரமாதாப்போலச் சந்தோஷ விஷாதங்களாற் பற்றுறமாட்டாதாம்; மற்றேதனக்கும் இரு மையிலங்குவதில், கரணம்= இந்திரியம் பதினன்குவித மான, விஷயே=தத்தம் அருத்தத்தில், பதினன்கு விதங்க ளில், வ்ருத்தம்=அநுரக்தம்=மக்நம், யானேழும்கேன் அவற்றின் சாக்ஷியென, மத்வா=துணிந்து, பற்றுறுவதில்லை யான் இத்தொழிலே யியற்றுகின்றேன் இதன்பயனுக ஹர்ஷ விஷாதங்களையும் அடைகின்றேன் என்னும்,சங்கம்= அபிமா னம் செய்யான் என்பது நசஜ்ஜதே என்பதன் பொருளாம் அற்றாயினுந்தான், அவித்தையின் அபிமானப் பிரதானத் தன்மையானே, கர்த்துருத்துவாதி யபினிவேசம் அறிஞனி டத்திலும் காணப்பெறுகின்றது, பெறவேயாங்ஙனம் சங்க முறான் எனச் சாற்றப் பெறுகின்றது; தோற்றியபோதினும் ககன நீலத்தகைமையாதிபோலும் துச்சத்தன்மை நிச்சயத் தால் ஏனத்தத்த உத்தரமாமிது. ககனநீல துச்சநிச்சய

உதாகரணம் அத்துவிதாசமஞ்சரி:—தன்னியல்பிற் றற் சுவையாய்ச் சச்சிதானந்தமாய்த் தயங்குமென்பாற், றன் னியமா மோகத்தா லுண்டெனச்சொற்றிடுமிந்தத் தொன்மை ஞால, மன்னியவோரிடத்தினுங், காணப்படா தருவுருவே வடிவமாகு,மன்னியவின்ரோவியமேபோலுமென வையமறம தித்துமியாமே. அருளிய சுலோகங்களின் றிருக்கருத்து ஸ்ரீ பகவற்கீதையிலுங் காணலாம்:—மெய்வகை தனக்கும் புலன் கட்குமுள்ள வேறுபாட்டினை மிகவறிந்தோர, னைவகையியற் கைப் புலன்களே பொறியுற் றழுந்துகின்றனவென வசங்கா, னிவ்வகையறியாதவ னிருவினையுமியானென்செய்தே னெனவி ளைத்தேங்கு, முய்வகையிதுநீ யுணர்ந்துனக்கடுத்தவினை செ யென்றுரைத்து மீண்டுரைப்பான்.

(அ - கை.) அஞ்ஞர் யாங்ஙனம் கட்டுறுவர் என்னு மவாவுற வருளல்:

௫. [illegible]

[illegible]

௧. முனைகு ணங்கண்மூ ன்றின்மிக மோகியர்,
கனிவி ரும்பிக்கரு மங்க ளாற்றுவர்,
மனதி னன்பற மாதனை மாய்ப்பரை,
எனைய றிந்தவ னேசிட லில்லையே.

(வி - ம்) த்ரிபி: மாயாகுணை:—தமோராஜ சத்துவங்க ளால், மோகிதா:—விசேஷமாக மோகம் உண்டாயிருப்ப தேவர்க்கோ அவர் அத்தகையச் சகலம் சபலம் கர்மகுர்வந்தி யென்பது அங்வயமாம். தமத்தினாலே கயிறுபோலும் பிரத் தியக்குத் தத்துவம் மறைபட்டுள்ளது, இராஜசாஞ்சே ஆண்டே யக்ஙகாராதி கடாந்தப் பிரபஞ்சம் சர்ப்பம்போ

னும் விக்ஷேபத்தை யடைகின்றது, அதுவும் மூவிதமாம், அவற்றுள் சொப்பனம் பொய்யே சர்வப்பிராணி பிரத்யக்ஷ பாத மிது நித்தியமே இருதய சம்பந்தமோ சத்தியம் நித்திய மும் இதனானே யோகிகள் இருதயாகாசம் புகுந்தோராய்ச் சங்கற்ப சமகாலத்தெழுந்த, சர்வ அவஸ்தையினும் கிளர்ந்த முக்காலத்தினும் முகிழ்ந்த யாவற்றையும் கரதல ஆமல கம் போலும் காண்பர் என்பது பூர்வஜன சித்தாந்தமாம் அவ் விம்மூவிதமான வுலகம் சத்வாங்கி சத்தானே சத்தியம் என்பதாகவே எண்ணுகின்றனர். இங்ஙனம் மூன்றுகுணங் களானே மோகமுற்றவராய் சபலம் கர்மம் குர்வந்தி—பல சகிதமாக எல்லாத்தொழிலையும் செய்யாநிற்பர். இதனானே காரீரியாதியான கருமத்தால் என்னல் இவ்விருஷ்டி ரூபம் பலம் உண்டாக்கப் பெற்றது, அதனானே சத்திய சம்பத் சுகத்தையும் அடைந்தனன் என்பதாக மந்தர் எண்ணுவர் உபநிஷத் விசுவாசியரோ குணத்திரயங் குயிற்றிய அம்மோ கத்தைச் சிரவணமனன நித்த்தியாசன மும்மையால் தூரத்த கற்றி ஏகரசபூரணவஸ்துவைத் தாமாய்க்காண்பராய்ப் பற்று ருர். அங்ஙனமன்றே:—இரஜஸ்தம மலினசத்துவத்தானே நிச்சயிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் பரமார்த்தத்தன்மை, மாயா மாத்ர மித் துவைதம் இந்திரஜாலம்போலு மிருக்கிறது என் னும் மித்தியா தரிசனத்தால்; ஈண்டற்பமும் நானுவில்லை என்ப தாதியாய்ச் சிரவணித்தலால், நிராகரிக்கப்படும். அவ் வாறே, அகங்காராதிகள் மித்தை, திருசியத்தன்மையானே என்னும் சுருதி யனுக்கிரகித்த அனுமானத்தால் அவ்விக்ஷேப அங்கிசத்திற்கே அந்தத்தன்மையைத் துணிவர் அதன்பின் நிதித்தியாசனத்தானே ஐந்துவகையநாத்மாகாரப்பிரத்யயங்க ளின்=(1) பிரத்யக்ஷாதிப் பிரமாணவிருத்திகள், (2) விபரீத மான மித்யாஞானங்கள், (3) சப்தத்தைக் கேட்டபின்ன

ருண்டாம் வஸ்து சூனிய விகற்ப விருத்திகள், (4) அபாவப் பிரத்ய யாலம்பன நித்திரை விருத்திகள், (5) அநுபவஜன் னிய அநுசந்தானவடிவ ஸ்மிருதி விருத்திகள், என்பவற் றின் திரஸ்கரணத்தால், அவ்வவ்வுபாதி ஆகாரங்களை யகற் றும் வாயிலாய், இரஜ்ஜு தத்துவம் போலும் நிர்விகற்ப சமாதி யப்பியாசத்தால் ஆத்மதத்வத்தைச் சாஸ்திர பலத் தால் நிச்சயிப்பர். யாவர்தாம் சாஸ்திரத்திற் சிரத்தை பக்தி யில்லாதவரோ, அதனுனேயவர், அவிச்வஸ்த=விசுவாசமற் றவர், ஆத்மத்ருஹ:=எண்பத்துநான்குலக்ஷம் யோனிக ளிற்பிறந்து துன்புறுதலானே தமது ஆத்மாவிற்குத் தாமே துரோகம் புரிபவர், இவ்வாறு நம்பிக்கையற்றவரரியும் ஆத் மத் துரோகியராயு மிருக்கும் மூடரை விச்வஸித்=யாவன் தன்னறிவு வடிவமேயென வுணர்ந்தபெரியோர். நைவலங்க யேத்=திரஸ்கரிக்கவேகூடாது, மற்றே, அவர்க் கநுக்கிரகித் தற் பொருட்டு தாமே கருமங்களைச் செய்தல் வேண்டும் அவர்தமையும் செய்வித்தல் வேண்டும்; என்ன முன்னஞ் சொன்னது மறந்துவிடல் கூடாதென்பது திருக்கருத்தாம்.

(அ - கை.) அஞ்ஞானகிய ஜிஞ்ஞாசினுக்கு அவசியம் வினைகளின்கருத்தவ்வியத்தகைமையா யிதனையே காட்டியரு ளல்:—

[illegible]

[illegible]

க. தீதனி லாகுதி தீண்டரா வினை
யாதலி னெம்மிடத் தறிஞனீயுக
மாதனி லகமதி மமதைமாற்றியே
சாதலி லுயர்கதி சாருவா னரோ.

(வி - ம்.) எதனாற் கருமங்கள் விவிதிஷையை நனியுண்டாக்கும் வாயிலாக ஞானத்தை யுண்டாக்குமோ, தஸ்மாத் = அதனால், கர்ம = வினைகளாகிய, நித்யம் = அக்கினிஹோத்திர சந்தியோபாசனாதியையும் நைமித்திகம் = இராகு தீண்டல்ஸ்நான தானாதியையும் புத்திரஜன்மாதியாகஜாதேஷ்டியாதியையும் இயற்றி, மயி = சர்வாந்தர்யாமியாய எம்மிடத்தில், புத: = குசலன், அர்ப்பயேத் = சமர்ப்பணஞ் செய்க. எம்மிடத்திற் சமர்ப்பித்தலும், அஹம் மமதாபுத்திம் த்யக்த்வா = அகந்தாபுத்திம் = யானிதற்குக் கருத்தாவென்னும் கர்த்தருத்வ அபிமானம், மமதாபுத்திம் = யானிக் கருமத்தின் பலனைப் புசிப்பேன் என்னும் ஆண்டுள்ள தன்னதாமபிமானம், என்னுமிவ்விரண்டையும் த்யக்த்வா = விட்டு, கேவலம் பரமேசுரப்பிரீதியின்பொருட்டு அநுஷ்டானமாமதனைச்செய்து, பராம்கதிம் = மோக்ஷத்தை, அவாப்நுயாத் = அடைந்திடுக. எமது திருவருளால் எழுந்தமெய்யுணர்வினாலே யவித்தையையகற்றிக்கூடஸ்தாத்மத்தன்மையானே நிகழுவன் என்பது பொருள்.

(அ - கை.) இதனையே புகழ்ந்தருளல்.

௬. [illegible]
[illegible]

௧. பொறுமையென்ப தின்றியன்பு பூண்டுவாழ்வ ரேவர்தாம்
உறுமையின்றி யாழுரைத்த உண்மையீ துயர்ந்ததை
மறுமலேவர் செய்குவாரிம் மாநிலத்தெ லாருமே
யறுமலேவினைக் குழுக்களாற்பிரிந்த முத்தரே.

(வி - ம்) ஈர்ஷ்யா = வெகுதன வியய ஆயாச சாத்தியயாகாதிகளிலும், பனிகாலத்தில் அதிகாலை ஸ்நானாதிகளிலும் தந்துயர் காரணமாயிருத்தலின், எந்துவேடத்தன்மை

யுண்மையின், மற்றவற்றிலெல்லாம் பொருமையுருமல் நன் ழூர்க்கங்களிலெல்லாம் பொருமையுறுபவராய் வேத நெறி யில் அன்பின்மையின் ஆதரமற்றவராவர். அவரினும் மாறுய வரோ தீயயாவற்றினும் பொருமையுற்று அநீர்ஷ்யந்த:=நல மெலாவற்றினும் நம்பிக்கையாற் பொருமையற்றவராய், பக்தி மந்த:=அன்பு சாலஅடைவுற்றவராய், உள்ள, யே=யாவர், மயா=ஈசுரராகிய எம்மால், உக்தம் இதம் சுபம்=அருளப் பெற்ற இச்சுபத்தையே இயற்றி யெமதர்ப்பணஞ் செய்யா நிற்பரோ; இருவகையேயாங்கரணம் பக்திமான்கட்குமாநசம் யஞ்ஞானுஷ்டானம்,இதரர்கட்கோ கிரியாமயமநுஷ்டானம், அதனேயே=யாவர், அன்புமிக்கவரோ, யாவர்கள் தாங் கிரியாவான்களோ, அன்புமயமாதல், அருவினை மயமாதல், யாகம்,அநுதிஷ்டந்தி=செய்வரோ, தேசாவேபி=அவர் யாவ ருமே, அகிலகர்மபி:=சருவ கருமங்களினின்றும், முக்தா= விடுபட்டவர் ஆவர், அவ்வாறே கேட்கப்பெறுகின்றது, மகர் கட்கு முபாசகர்கட்கும் துல்லியம் கிருது பலம், காணப் பெறுகின்றது பிருகதாரண்யத்தில் "தாண்டுவன் பாவம் தாண்டுவன்மறையோன். மாண்டவன் பாவம் மாமகமதனுல், வேண்டவன்வேட்கும் விளம்பிய வதனைப், பூண்டெவனிவ ணம் புரியுமுபாஸ்தியே" அவ்வாறே மந்திரவர்ணமும் பிரா தாவால் கூபத்தில் தள்ளப்பட்ட திரிதனுக்கு மனோமயம் யஞ்ஞம் காட்டுகின்றது. "திரிதன்கூபத்திற் சேர்க்கையுற்றவ னுய், கருதித் தேவரைக் காங்க்ஷித்தழைத்தான், நரைதவிர் சோமபானுதிகண் மார்த்தம், இதுவிடயம் ஸ்ரீ மகாபாரத வனபர்வத்தில் திரிதகூப உபாக்யானத்தில் விஸ்தரிக்கப்பெற் றுள்ளது.

அங்ஙனந் தொழிலில் தோடமருளல்:—

௩௨. யேத்வேதந்நாநுதிஷ்டந்தி ஸ்ரௌதஹாஹதசேதஸ:
ஈர்ஷ்யமாணா மஹாமோஹா நஷ்டாஸ்தே மந்தசேதஸ:.

க. அறைந்தவகை புரியாரிங் காவரெவர் மங்கலரா
மறந்திறந்த மனத்தினர்தா மாறுப்பொறாமையராய்ச்
சிறந்தமந்த மாமூட சிந்தையராய்ப் பயனைவையுந்
துறந்தவராயெம் முடைய துன்றூரா யவர்த்தெரிநீ.

(வி - ம்.) யேவ=எப்புருடர்தாம்,ஏவம்=கூறிய பிரகாரம், கருமம ஆலசியத்தாலாதல் நாஸ்திக்யத்தாலாதல், நாநுதிஷ்டந்தி = ஆசரியாரோ, எதனால்அசுபரோ, இல்லை சுபம் = கல்யாணகரம் புண்யம் எவர்க்கோ அவர் அசுபர் ஆவர். அவர் ஆலசியத்தாற் கருமங்களிற் பிரவிருத்தியார்,யேவஹத வெதஸ:=யாவர் தாம் பாப அதிசயத்தானே நட்டசித்த ராவரோ அவர் பரலோகமில்லையென்னும் புத்திபால் மறுமையிற் பயன்றரும் கருமத்தை யனுட்டிக்கமாட்டார் என்பது யேவவென்னும் ஏகாரத்தானே குறிப்பிக்கப்பெறும். யேவ = ஸ்ரௌதஹவஹதவெதஸ இதியோஜநா:,எதனால் சுபராவரோ அதனால் ஈர்ஷ்யமாணராவர்,ஈர்ஷ்யாம்=முன் மொழிந்த துவேஷபுத்தியைச் செய்வர், ஈர்ஷ்யமாணர். எதனானே ஹதசித்தத்தரோ அதனானே மகாமந்தர்=மகாமூடர், தாந்= ஈர்ஷ்யமாணாந் மகாமூடாந்=அவ்விருவரையும், நஷ்டாந்-நட்டர் என்று, வித்தி=உணர்தி, நட்டர் எனவறிதலால், திரியக்குத் தாவராதி மூடயோனியடைந்த அவரை நஷ்டம் பெரும் பாலுமடைந்தவராகவே மே=மமசாஸ்திர கருத்தாவாகிய எடிதுசம்பந்தமாய், ரிபூந்=சத்துருக்களாக, வித்தி உணர்தி அவ்வாறே ஸ்மரிக்கப்படுகின்றது:—சுருதியுமிருதியுந் தொட ரெம்மாணையாம், கருதிலனெவனவை கடந்து வாழுவான்

பொருதின்றுணையை யெமதுபோரனுய் எரிதிகழ்நரகினை யெய்துவானரோ ஸ்ரீமத் பகவத்கீதை-என்பாற் பொருமை யினைத் தவிர்த்தென் கருத்தாயுள்ள வினையிதனை, யன்பாற் பயில்வா ரியாவர் சிலர்ரவகள் வினைகளறவிட்டா, ரென்பாற் பொருமையா னுரைத்தவிதனை யிகழ்கிற்பார்களவர், வன் பார்த் தரையிலெழுமரம்போன் மாய்ந்தா ரறிவுமாய்ந்தாரே.

(அ - கை.) அற்றேற் சுதந்திரமாகப் புருடன் கருமங் களைச்செய்தும்செய்யாமலும் குணதோஷங்களைப் பஜிப்பவ னுவன் ஆயின் அந்தர்யாமி பிராஹ்மணம் அநர்த்தகமாம்; அதுவே பிரமாணமாயினோ சுதந்திரமில்லாத புருடன் கரும ஜன்னிய குணதோஷங்களையடையான் என ஆசாங்கித்து அநீசுவரசாங்கியமதம்பற்றிப் பரிகரித்தருளல்:—

ஸு· [illegible] யஜ்ஞாநவாநபி,
[illegible]

க. ஞானவானுயினு மியல்பைநாடியே
தானதாம் வினைபுரி தருவன்மாறிலான்
ஆனதாலதனையே யணைந்துவாழ்வனே
லீனமாமதமதி லிவணமென்பதே.

(வி - ம்) ஞானவானபி = ஞானம் = ஆத்மாநாத்ம விவேகம், தத்வபுருஷ அன்யதாக்கியாதி யென்னும் வேறு நாமத்தையுடையது, அதனையுடையவனுயினும் புருடன், யத் = எக்காரணத்தானே ப்ரக்ருத்யா துல்யமேவகர்ம குருதே = எப்புருடனுக்கு எப்பிரகிருதி = சுபாவம், சாத்விகம், இராஜசம், தாமசமெனும், பூர்வ பூர்வ கர்ம ஜன்னிய சமஸ்காரப் பிரகிருதியோ, அதற்கேற்பத் தொழில்புரிவன், ஆண்டுத்தர்ம வியாதது லாதாராதிகள் ஞானவான்களாயினும் வியாதவாணி ஜாதியுசிதமேயாய கருமமியற்றினர்; இவ்வண்ணம் கற்கடி

யெனப் பெயரிய இராக்ஷசி உணர்வுடையவளாயும் தன்பிறப் பியற்கைபற்றி மநுட மாம்சங்களானே வாழ்ந்துவந்ததாக ஞானவாசிட்டத்திற்கூறப்பெற்றுளது. ஆகலின் இயற்கையே வலிவுடையதாம், ஆண்டெச்சுர இச்சைக்காதல், புருடவிச் சைக்காதல், யாதொருவிடயமுமிலதாம்; ஆலரசாதிவிரை, பொதுப்பட்ட தேயபலங்களால் நிரைவுற்றுப் பிரகிருதிசுபா வத்தால், ஆலங்குரமேயாதல் அரசங்குரமேயாதல், அவ்வவ் விரையாற்றல் வேற்றுமையாலுண்டாக்கும்; அதுபோல, அத ற்கயலாயாக்குவான் சிற்பிசதர்களானும்முடியாதாம் வசப்தம் ஹேதுப்பொருளிலாம், எதனாற்புருடன், தாமேவ=பிரகிருதி யையே, அநுயாதி=சத்தசத் கர்மவிடத்தில் அநுசரிப்பனோ, அதனால், தத்ர=கருமத்தில், க்ரஹ:=இவ்வினையையேயியற் றுவல், இதனை யியற்றேன் என்னும் நிர்ப்பந்தம், மூதாமத:= அஞ்ஞானத்தானே மூடர்களின் சம்மதமாம். என்னுமிப் பொருள் ஸ்ரீமத் பகவத் வசனத்தினும் காணலாம்:—பண்டு நின்ற பழவினையின் பணி, கொண்டு நின்றவை கூடுமவர் கட்குக், கண்டுநின்றவர் கற்பனையென்செயு, முண்டு நன்றி தெனவுறவெண்ணுமோ. 33.

(அ-கை.) அற்றேல் இவ்வண்ணம் புருடர்கட்குப் பிர கிருதி யநுவர்த்தித் தன்மையானே சுதந்திரமின்மையானே, விதிநிடேத சாத்திரம் எள்ளுந்தண்ணீ ரிறைத்துவிட்டதாம் என்று சங்கிப்ப மதாந்தரம் அருளல்:—

ஸ்ரீ காமஶ்சைவ ததா க்ரோத: நாமேஷ ரஜாயதே
தேநதயோர்வஶ்யதாம் யாயாதுஸ்வவிஷ்யம் ஸமேளத:.

க. காமமுமனங்கடியகோபமுந்
தாமெனும்புலன்பொறி தமிலுண்டாகுமா
லேமுறுமிவைவயத் திருத்தலேய்ந்திடா
தாமிவண்மிவனை யாற்றுமாதலால்,

(வி - ம்.) காணும்=இந்திரியங்கட்கு, அர்த்தே=விடயங்களாகிய ஸ்த்ரியன்னபானாதி இந்திரிய கோசரமுற்றவைகளில், காம:=இஃதெனக் குண்டாருகவென்னும் அபிலாஷை, ஜாயதே=உண்டாம், ஸ்வீகாரம:=அக்கிரமமும், யாதாவதொரு நிமித்தத்தாற் றடைப்படுமேலாயின், தயாக்ரோத ஜாயதே=அவ்வாறே சினவடிவமாய்ச் செனியாநிற்கும், ஆகலின் இச்சாத்துவேஷாதி தர்மவானாத்மா கர்த்தா போக்தாவும் ஆம் என அதனையே பரமேசுர ஆணை வடிவங்களாயிராநின்ற விதிநிஷேதங்கள் ஆழத்தும். ஆகலின் புருடன் நல்லதேயாய கருமத்தை நான் செய்வேன்; தீயதொழிலைத் தீர்ப்பேன், என்று ஆக்கிரகம் செய்தலே கூடும். ஏதனாலிங்ஙனம் ஆதனால், புருடன், ஏதயோ=காமக் குரோதங்களின், வஶ்யதாம்=அதீனத் தன்மையை, நயாயாத்=அடைதலாகாது, யத:=ஏதனால், அஸ்ய=இப்புருடனுடைய வித்வம்சகௌ=புருடார்த்தக் கெடுதல் செய்வனவாகக் காமக் குரோதங்கள் ஆமோ, அதனால் அவை வெற்றி கொள்ள வேண்டுவனவேயாம். ஸ்ரீமத் பகவத்கீதை:—அஞ்சுபுலனவை தொடரு மஞ்சு பெறியவையாம், வெஞ்சுரனி னுலறியுயிர் வெம்பி யழிவுறுவோ, ருஞ்சுபுகு நெறிதகைய வொன்றுபகை யுளகே, ளஞ்சுதலிலின்பமிட ரென்பவவை யிகழ் நீ. 34.

(அ - ௩௫.) அதனால் என்னேயெனின் அருளல்:—

௩௫. ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: ஸாங்காத் அந்யஸ்ய யத்நத:, ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ:.

௧. சாங்கமாம்பிறர் தன்ம மதனினும்
பாங்கிலாததன் றன்மமும் பாகமாம்
சாங்கதன்னதிற் சாம்பினு மேம்படும்
ஓங்குமச்சம்ப ரம்பர்த் தொண்ணுமோ.

(ஸீ-ம்.) நிஜ:=தன்னுடைய, அகுண:=குணமில்லதே னும், தர்ம=:தன்மம் ஸ்வநுஷ்டித:=புகழுற்றதாம், அன்யஸ்ய=பிறரது, தர்மத: ஸாங்காத்=கெடாத அங்கத்தோடு கூடிய தன்மத்தினும் சிலர்கிக்கத்தக்கதேயாம்; வைசியவிருத்தி விசேடத்தையுடைய பிராஹ்மணனுக்கு, ராகூபாரகமாகத் திருத்தீர்த்தக் கேத்திரத்திலும் தானங்கோடல் ஜீவனமாத்திர அர்த்திக்கு மேன்மையதேயாம்; தன் தன்மத்தான் தர்மத்தோடுற்றதேனும் வர்ணிஜ்யம் இகழுற்றதாம், பரதன்மத் தன்மையான். இதனையே வலியுறுத்தியருளல்:—

நிஜே=தன்னுடைய, தஸ்மிந்=தன்மத்தில், ம்ருதி=மரணம், ஸ்ரேய:=சுவர்க்காதி மகாபலத்தைக் கொடுப்பதாகும் என்பதாம். பர:=பிறர் தருமம், அபரத்ர=பரலோகத்தில், பயப்ரத:=நரகாதிபயத்தைக் கொடுப்பதாம், பிறர்தருமஆசரணமாகிய அதுவே பிராஹ்மணனுக்குத் துர்மரணத்தைத் தந்து நரகத்தையும் தருவதாம் இவ்வாஞ்ஞை ஸ்ரீ பகவானாலும் இட்டருளப்பெற்றுள்ளது.—தடுத்த தொழில் செய்வது தகாதது தனக்கே, யடுத்த தொழில்செய்து கெடுமேனுமழகையா, விடுத்த கருமம் பெரிது செய்வதனின் மேலோர், தொடுத்தகருமஞ் சிறிது செய்கைதொழிலென்றான்.

(அ - ௩௪.) ஈண்டு, இப்பிராணப்பிரஞ்ஞை யுபாதிகனே மற்றையனல்லன் சரீராதியாத்மத்வ அபிமானியைச் சாஸ்திரவிகித தருமரூப கருமத்தை அயஸ்காந்தம்போலும் ஆகத்தில் ஆவிஷ்டனாகிச் சுயம் வியாபாரமற்றவனாய், அச்சரீர அபிமானியை, விவிதமான வியாபாரங்களைச் செய்விப்பன், கூறிவரும் கூறப்பெரும் பிரசித்த சுவர்க்கார்த்தியை இப்பிரத்தியக்ஷலோகங்களினின்றும், மேலேயடைவிக்க இச்

சிப்பன், கூறியவனே மற்றையனல்லன், சரீராதி யபிமானி யைச் சாஸ்திர நிஷித்தம் பாதக கருமத்தை விழையாவிடி னும் அனுஷ்டிக்குமாறு செய்விப்பன் ஆனந்தத்தை அவா வியவனேனும், அவ்வநர்த்தார்த்திஙிப் பிரசித்தமாய பாத கனை இப்பிரத்தியக்ஷலோகங்களாய மனுஷ்யாதி நிவாசங் களினின்றும் கீழே செலுத்த இச்சிப்பன் (கௌஷீதகீ) அறிவேயிலதாமிந்தச் சீவனு மாற்றலற்றுச், செறிவாந்தன தின்பதுன்பங்களைச் சேருதற்கும், வெறிதே துயர்ப்பாழினை யேனு நல்விண்ணையேனும், பொறியார் புழைக் கையனதா ணையிற்போதுவானே. என்பதாக ஈசுவர வாதத்திலும் பிர கிருதி வாதத்திலும் சுதந்தரமில்லானுக்கு விதிநிஷேதங்கள் அநர்த்தகங்களாம். சுதந்திரவாதத்திலோ அவற்றின் சம்பவ மாம் என வொன்றற்கொன்று முரண்படுதலின் நிர்ணயந் தெரிய விரும்பியவரேண்யன் வேண்டுதல்.

சு வாரோ நந்தாராடெதவாவஸஹிகெநியாஜ்ரெத,
ககாக்ஷய நவிஹொஸைவெநிதவ்வைஊஷிவ.

க. தங்கண்மறமார்க்கஞ் சரிப்பரந் தாழ்வுமிக்கோர்
அங்கண்ணவரார்ப்பவர் யாவரிங் காசையற்றும்
பொங்கண்மையில்வந்து வலதினிற் போதலேதோ
எங்கண்மதி யேவுமேரம்ப வீரசனேயோ!

(வி - ம்.) ஹி = பிரசித்தம், புமான் = புருடன், யத்பா பம் = பிறர்மனைநயத்தல் கள்ளம் கொலைமுதலிய எப்பாவுங் களை, குருதே = செய்கின்றனோ, அதன்கண், கேநநியுஜ்ய தே = யாவரால் சேர்க்கப்படுகின்றனன். ஈசுரபக்ஷத்தில் ஈசு னுக்கு வெறுப்புவிருப்பின் மிக்க்குரூரத் தன்மையின். அடை வாம், இப்ற்கைப்பக்கத்திலோ அன்னியனுக்கன்னியான்மத் தன்மைசம்பவியாமற்போம். ஆலம்விரைக்கு அரசங்குர

மாற்றுந்தன்மை அமைவதில்லையல்லவா! ஆகலின் சிறந்தகாரணந்திருவாய்மலர்ந்தருளத்தக்கதாம். அகாங்க்ஷந்நபி = அநிச்சையுடனிருப்பினும், பிரபலாதிவயிரேரிதஃ = மிகுதியும் வலிமைவாய்ந்த வாயுவாதிகளினால் வீசப்பெற்றுத்துரும்பு சருகாதிகள் கண்டவிடமெல்லாம் ஓடுவதேபோல இவனோடுவதென் இப்புருடன்எவ்வசாதாரணநிமித்தத்தால்ஏவப்பெற்றுமுயல்கின்றனன் என்பதுவினா. ஹேரம்ப! எனச்சம்போதனஞ்செய்து புத்திப்பிரவர்த்தகனேயெனக் குறிப்பித்தனன்; இதனானே யந்தரியாமிபக்கம் மிக்க மேன்மையதாமென்பது தனது கருத்தாம். ஹர்ய = கதிகாந்திகளில் என்னும் இதனினின்றும், உணாதிஹர்யதே: கந்யந்ஹிரச், கந்யந்விகுதி; ஹிரண்யம், இதனால், கந்யந்விகுதி யுளதாயவழி தாதுவிற்கு ஹிராதேசங்கண்டாம்; அதுவே பாகுலகத் தான் அம்பச்விகுதியினும் ஆக்கப்பெறும், ஹர்யதி, அந்தர்பாவிதணியர்த்தத்ததாமிது பொருள் 26 வதன் வியாக்கியானத்தியம்பப்பெற்றது. ஹர்யதி இச்சையை யுண்டாக்குதலின் ஹேரம்ப = புத்திப்பிரவர்த்தக என்பது பொருள். ஸ்ரீமத்பகவத்கீதை:—மாயனிவைநின்றுரைசெய்யவிசயன்மறித்துங்கூறிவான், நீயவினைசெய்யாதவரைத்திகைப்பச்செய்துதிறலாலே, யேயபணிகொள்வாரைப்போ லியற்றுவிப்பான்யாரென்றான், பாயல்பரவையாய்க் கொண்டபழையோனிவ்வாறெனப்பணிப்பான். 36.

(அ - கை.) ஸ்ரீகஜாநநர் இதற்குத்தர மருளல்:—

ஸூ. [illegible]

௧. குணமிரண்டிடுண்டாவனகோபமும்
பணும்விழைவும்பருத்திறும்பாவங்கள்
வணமிவைவரவைரிகளவையத்தை
யெனும்வயஞ்செயுமென்றுளத்தெண்ணுவாய்.

(வி - ம்) காமக்ரோதௌ=ஆசைசினங்கள், லோகம்=உலகத்தினை, பாவத்தில், ஏவுகின்றனவெனப் பூர்வசுலோகத்தினின்றும் மாறுகச் சேர்க்கவேண்டும். குணத்வயசமுத்பவௌ=அவற்றுள் காமம் இரஜோகுணத்துண்டாயது, இஃதெனக்குண்டாகுகவென்னுமிச்சை, அதனால் முயலுவிக்கப் பட்டவன், ஏதாவது நிமித்தத்தானே எச்சித்தத்தின் கலக்கந்தோற்றுமோ, அது அபிஜொலனவடிவமாய் மோகஹேது தமோகுணவிகாரமாம், மகாபாபௌ=அவ்விக்காமக் குரோதங்கள் வெற்றிகொள்ள முடியாதனவாதலின் மிகப்பெரியனவாம்,பரதாரபரத்துரோஹாதிபாவகாரணமாதலின் பாவங்களாம். ஆகலின் முறையாக இரஜோதமகுணங்களாலுளவாயினவாம், அத்தகைய இவை, லோகம்=மநுடபசுவாதிகளை வஸ்யதாம்=தம்மதீனமாக, நயந்தௌ=ஆக்குவனவாம் ஏதௌ=முற்கூறிய இவற்றை, வரௌ=சிரேட்டமான த்வேஷிணௌ=பகைகளாக, வித்தி=அறிதி. புருடனைப் பாவத்தில் ஏவுவனவாய் அக்ஷயத்துக்காரணமா மென்பது பொருள். இதுபாவமாம்:—பர்ஜன்யம்போலும் பரமேசுரர் பொதுக்காரணம் ஆவர் சிறந்த காரணங்களோ அவ்வவ்விரையாற்றல்போலும் புருடன்றொறும் வேறுவேறும், ஆகலின் மேன்மையடைய விரும்பியவன் காமாதிகளைவென்று நற்கருமங்களையாற்றுவன். இவ்வண்ணம் பக்ஷாந்தரத்திலுமாம். (பிரகிருதிவாதத்திலுமாம்) அவ்வாறே பரமமகர்ஷியின் சூத்திரமுமுளதாம்:—"பரத்தினின்றுந்தான் அதுசுருதியினும்"

ஈண்டு "இவனே நற்றொழிலியற்றுவிப்பவன்" என்பதாதி சுருதிகட்கு விதியாதி சாஸ்திரத்தோடும் விரோதம் உளதா? இலதா? வெனவையமுண்டாக, இராகத்துவேஷாதிவயத்தான் தானுகவே தனக்குக் கருத்துருத்தகைமை சம்பவித்திருத்தலின் அதனைப் பிரதிபாதிக்கும் விதியாதிசாஸ்திரத்தானே விரோதம் உளதாமென்பது பூர்வபக்ஷம் சித்தாந்தமோ, சூத்திரத்திலுள்ளதான் என்னும் சப்தம். பூர்வபக்ஷத்தைவிலக்குதற்பொருட்டாம், தானுகவே ஜீவனுக்குக்கருத்துருத்வாதிசித்தியிலேயாம். மற்றோ, பரத்தினின்றும்=பரமாயஈசுரனினின்றும் கருமங்களைக் கண்டுகொண்டு சர்வபூதாதிவாசசாக்ஷியாயியக்குவிக்கும் ஈசுரனினின்றும், அவித்தைத்திமிர அந்தனும், அவித்தையவத்தையில் காரியகரணசங்காத அவிவேகதரிசியும் ஆகிய ஜீவனுக்கு, கருத்துருத்வாதி சமுசாரசித்தியாம். அவனது திருவருளுண்டாயினோ விஞ்ஞானத்தானே மோக்ஷசித்தியானதுண்டாம். யாங்ஙனம்? அது சுருதியினுன்=இவனே நற்றொழிலியற்றுவிப்பன் என்றற்றொடக்கத்தனவாய் கௌஷீதக்யாதிசுருதிகளால் அவ்வீசுரனுக்கு ஹேதுகர்த்துருத்வம் துணியப்பெறு மென்பது பொருள்.

அற்றேல், ஈசுரனுக்கு இயற்றுவிக்குந் தன்மையுடன் பாடேல், விடமபாவமும் அதிகுரூரத்தகைமையும் உளவாம் எனின்? நுதலுதல்:—"ஆற்றியமுயற்சியவாவினுளே, போற்றல்தூற்றல்வினையப்போகா, வேற்றமாதியென்பவற்றுளே" ஒன்றது உரைத்தசங்கை யொழித்தற்பொருட்டாம், ஜீவனல் இயற்றப்பெற்ற எத்தருமாதருமவடிவ முயச்சியுளதோ, அதனைய்வாவியே ஈசுரன் மற்றைப்பிறப்பினும் அறம்ாதியை யாற்றுவிப்பன், அதனையவாவிக்கொண்டே இன்பமுத

ஷயங்களையுமளிப்பன் என்பதாக, தேவர்சிலரை அத்தியந்தமின்பினராக்கும், பசுவாதிசிலவற்றை முற்றினும் துயர்மயமாக்கும், மனுஷ்யாதி சிலரைமத்தியம்போகமுண்பவர் ஆக்கும், விடமபாவமும்; துக்கயோகவிதானத்தானும் சர்வப்பிரஜைகளின் உபசங்காரத்தானும், அதிக்குரூரபாவமும் எய்தாவாம். சமுசாரத்திற்கநாதித் தன்மையுண்மையின் முற்பிறப்பியற்றிய அறமாதியபேக்ஷை பொருத்தமுடையதேயாம். ஜீவனாற்றிய தருமாதருமவைஷம்யத்தை யவாவியே அவ்வப்பயனை விடமமாய்வகுப்பன் நிமித்ததன்மைமாத்திரத்தானே பர்ஜன்யம்போலும் பரமேசுரன் என்றுணர்க. உலகில் அலகிலாவிதம் குச்சகுன்மாதி நெற்கோதுமையாதியவாகச் சிறந்தனவாய தத்தமது பீஜங்களினின்று முண்டானவற்றிற்குப் பொதுநிமித்தம் மழையென்பது கண்கூடேயன்றோ. அவற்றிற்கு மழையிலாது இரதபுட்ப பலபலாசாதிவிடமபாவம் உண்டாவதுகண்டதுமில்லை, தத்தமது பீஜங்கள் இலவாகவும் கண்டதில்லை. குச்சம்=அதிதீர்க்கவல்லிகிரந்தி, பூங்கொத்து. குன்மம்=சிறுகொடி. இவ்வண்ணம் ஜீவகிருதபிரயத்ந அபேக்ஷகனாகிய ஈசுரன் அவற்றின் நன்மைதீமைகளையவர்க்குச் சேர்ப்பிக்கலாம் என்பது பொருந்தும். அற்றேல் கிருதப்பிரயத்ந அபேக்ஷைத்தன்மையே ஜீவன்றன் பராயத்தகர்த்ருத்வத்தில் பொருத்தமின்றாமெனின்? இது தோடமாகாதாம்; கர்த்ருத்வம்பராதீனமாயிருந்த போதினுங்கூட ஜீவன் செய்பவனேயாவன், செய்பவனேயாய ஜீவனை ஈசுரன் செய்விப்பன், மேலும் பூர்வப்பிரயத்நத்தை அபேக்ஷித்து இப்போது செய்விப்பன், பூர்வதரமாய பிரயத்நத்தை யபேக்ஷித்து பூர்வஞ்செய்வித்திருப்பன் இதுவும் சமுசாரத்திற்கநாதித்தன்மையானே என்தாகத்தோடமற்றதேயாம். ஆயினும் யாங்ஙனம் உணர்வது; கிருதப்பிரயத்நத்தை யபேக்ஷி

த்தேயீசுரன் இயற்றுவித்தலென்பது? விகிதப்பிரதிஷித்த
அவையர்த்யாதிகளால் உணரலாம். இன்னணமாயினன்றோ,
"துறக்ககாமன் சோதிட்டோமத்தான் வேட்க" "மறையவன்
கொல்லத் தக்கவனல்லன்" இன்னோரன்ன போற்றல் தூற்
றல்=விதிநிடேதங்கள் வீணாப்போகாவாம்; ஏற்றமாம்,
அன்றாயினோ அவையநர்த்தகமாம். ஈசுரனே விதிநிடேதங்
களில் ஏவலாம் ஜீவனுக்கு முற்றினும் பரதந்திரத்தன்மை
யுண்மையின், இவ்வண்ணமாகவே ஈசுராதீனகர்த்ருத்வப்பிர
திபாதகவிதியாதி சாஸ்திரத்தோடு இவனே யினிபதை யிய
ற்று விப்பன் என்பதாதி சாஸ்திரத்திற்கு முரண்சிறிது முறு
தாமென்பது முடிந்த துணிபாம். விதிநிஷேதசாஸ்திரம்
அநர்த்தகம் ஆகவேண்டாம் எனப்புருடர்கட்குச் சுவாதந்தி
ரயம் இன்றியமையாதொருதலையாய் இயம்பத் தக்கதாம்;
அதனானே அவர்களாற் பூர்வஜன்மத்தில் எப்புண்ணியபாவா
திகள் செய்யப்பெற்றனவோ அதனையபேக்ஷித்து ஈசுரன்
அந்நல்லவற்றையாதல் அத்தீயவற்றையாதல் வினைகளை உரு
சிக்குமாறு செய்வித்து, அவற்றின்கண் முயல்விப்பன். ஸ்ரீ
மகாபாரதத்தினும் இது கூறப்பெற்றுளது:—தடியெடுத்தம
ரர் பசுவின்பாலனம் போற்றுமளித்திலரெவன்றனது, மிடி
கெடுத்தளிக்க விரும்புவரவனை மேலதாமதியினான் மிலைப்
பார், குடிகெடுத்தெவனைப் பொடித்திட நினைப்பர் குறைவுற
வவன் மதிகுலைப்பார், வடிவெடுத்தவனும் தாழ்ந்தவேபுரிந்து
வாழ்வினிற் றாழ்வினைக் காண்பான். இதுவே ஈசுரனது அந்
தர்யாமித்வம், உள்ளேயிருந்து நியமனம் நிகழ்த்தல், நல்ல
கருமங்களிலேனும் அல்லகருமங்களிலேனும் புருடர்க்கு ருசி
யுற்பாதனம். பகுதிக்கும் வேறுறுந்தன்மை புருடர்கட்குச்
ஸ்வாதந்திரயத்தானே பொருந்துறும். கண்டாமன்றோம்
காட்டனற் கரித்தவேத்திர பீஜங்கட்குக் கதலீகாண்ட ரூப

மாகவும் எழுந்தங்குரித்து வருந்தகைமையையுலகில் ! ஆக லின் ஜீவர்கட்கு நுகர்வினைப் போகாதிகளிலேயே பாரதந்தி ரியம், மகமுதலியவற்றே சுவாதந்திரியமெனக்கண்ட தொக் கக்கருதத்தக்கதாம். ஸ்ரீமத் பரமார்த்த தரிசனம்—தீமனக் தனிலே செனனஞ்செயக், காமமென்னும் கைத்தாய் வளர்க் கின்றது, வேமயங்கொள் வெகுளியென்கின்றது, நாமமற்ற தனன்னலமின்னங்கேள்.

எவ்வகைப்பயனுந் தினவல்லதை, யெவ்வகைப் பெரும் பாவமுமீவதை, யெவ்வகைப்பொருட்கும் பகையாவதை, யிவ்வகைத்தெனக்கூறுவ னின்னங்கேள்.

(அ - கை.) காமங்குரோதங்கட்கு எவ்வகையாகப்பாவ காரணத்தன்மை யென்பதை யருளிச்செய்தல்.—

௬. [illegible]
[illegible]

க. மாயையெங்ஙன மறைந்திடு மலர்தலை யுலகை
யாயபாட்பமு மறலினையாவரித்திடுமோ
மாயைபானுவை மழைமுகின்மறைக்கு மங்கதுபோறி
பாயுகாமமுங் கோபமு மெவரையும் படுத்தும்.

வி. செவதனுனேஜகத்தாம்=சேதன அசேதன விசுவ மாம், மாயா=மாயை, ஐந்திரஜாலிகப் பிரயுக்தமாயது எங்ங னம் மறைவுறுத்துமோ, காண்டாமன்றே வுலகத்திலும் ஐந் திரஜாலிகர்மகத்தாயஜல ஆர்ணவத்தில் சதுரங்கசேனையோடு கூடிய மகத்தாயதலத்தைச் சிருஷ்டிக்கின்றனர். இங்ஙனம் பூமியின்மாட்டே, மகா ஊர்மிமாலையாலாகுலமாயதும் வங்க சதசங்குலமாயதும் ஆகிய மகத்தாய சமுத்திரத்தைக் காண் பிப்பர். ஆண்டசேதனத்தின் ஆவரணமும், சேதனத்தின்

இருட்டிபந்தனமும் எங்ஙனம் காணப்பெறுகின்றதோ அங்ஙனம் காமம் அங்கனையாதியர் அநர்த்தஹேதுவாயிருத்தலை மூடிச் சுககரத்தன்மையைக் காட்டலானே அகில ஜந்துக்களையும் மூடுகின்றது. அவ்வாறே பரம இருடிசூத்திரமுமாதாம்.— துக்கஜன்மப் பிரவிருத்தி தோஷமித்தியா ஞானங்களின் உத்தரஉத்தரவொழிவினானே அநந்தர அபாயத்தான் அபவர்க்கமாம், "முத்துயர்பிறவியு முயல்கைதோடமே, மித்தையின்ஞானமென் மேலவாமிவை, உத்தரவுத்தர மொழிந்துபோவதாற், தத்துபின்னதாங்கெடத் தாழ்வினமோக்கமே' மித்தியாஞானந்தானே இராகாதிதோஷ உற்பாதனவாயிலாய் புருடனை அறத்தினுதல் மறத்தினுதல் ஏவும், பின் கருமானுரூபம் ஜன்மத்துக்கபோகாயதனம் கிடைக்கும்.

ஆகலின் மெய்யுணர்வு போன்றவே மாசின்மையின். முயல்வின்மையாம், முயல்விலாதாகவே, பிறப்பிலாதாம், பிறப்பிலதாகவே துயருமிலதாம், அதுவே மோக்ஷமாம். சருவத்தின் மூலமாய மித்தியாஞானமோ தத்துவஞானத்தானே நசிக்குமென்பது சூத்திரப்பொருள். ஆண்டான்மாதி யபவர்க்கபரியந்தப் பிரமேயத்தின் மித்தியாஞானம் அநேகவகையாகவமரும். முதலில் ஆன்மாவின் கண்ணின்றன்பதாம், அனான்மாவில் ஆன்மாவெனவாம் இன்பிற்றுன்பெனவாம், அநித்தியத்தில் நித்தியமெனவாம் அத்திராணத்தில்திராணமெனவாம், சபயத்தில் நிர்ப்பயமெனவாம் ஜுகுப்சிதத்தில் அபிமதமெனவாம், விடத்தக்கவற்றிற் றொடத்தக்கெனவாம், பிரவிருத்தியில் இல்லைகருமம், இல்லைகருமபலம் எனவாம், தோடங்களில் அன்றிது தோடநிமித்தசம்சாரம் எனவாம், மறுபிறப்பில் இன்று ஜந்துஜீவனுதல் சத்வ ஆத்மாவாதல் யாதுபிறந்து மறுபிறவியை யடையாநிற்குமோ

எனவாம், ஜன்மம் அநிமித்தமாம் அநிமித்தம் ஜன்மஉபரமம் மென்பதாதிமாந் மறுபிறவி அநந்தமுமாமென நைமித்திகமாய் கருமநிமித்தமாய மறுபிறவியில்லையெனவாம், தேகேந்திரிய புத்திவேத நாசந்தான உச்சேதப்பிரதி சந்தானங்களானே வடிவற்றதாம் மறுபிறவியெனவாம் அபவர்க்கம் அஞ்சத்தக்க தாம் அவ்விதுஉரனுய்ச்சருவகாரிய உபரம்மாம் சருவவிப்பிர யோக அபவர்க்கமுறவே அநேகங்கவிபாண்முறலன்றோ அழி ந்துபோம் எனவாதலின் யாங்ஙனம் மதிமான் சர்வசுக உச் சேதமாய் அசைதன்யமாயுள்ள இந்த அபவர்க்கத்தைவிரும் புறுவான் எனவாம். இவ்வகையினவாய மித்தியாஞானங்களி னல் அநுகூலங்களில் இராகம் பிரதிகூலங்களில் துவேடம் இராகத்துவேடாதிகாரத்தானே அசூயை ஈர்ஷை, மாயை லோபமுதலானவாய்தோடங்கள் உளவாம். தோடங்களோடு கூடியவன் தேகத்தான் முயல்பவனுகிக் கொலை களவு பிறர் மனை நயத்தலாதி செய்வன் வாக்காற் பொய்ம்மொழி புகலல் பிறர்க்ககிதம் விளைக்கும் அசம்பத்த வசனங்கள் ஆற்றுவன், மனத்தாற் பரதுரோகம் பிறன்பொருள் வாஞ்சை நாத்திகத் தகைமை மனனிப்பன், என்பனவாய இப்பாவவடிவப் பிரவிரு த்தி அதருமப்பொருட்டாம். இனிச்சுபங்களோடு கூடிய வனே சரீரத்தாற்றானம் காத்தல் சேவையாதியையும் வாக் காற் சத்தியம் இதம் பிரியம் ஜப அத்தியயனுதிகளையும் மனத்தால் தயை ஆசையின்மை சிரத்தை முதலவற்றையும் குயிற்றுவன், என்னுமிவை தருமப்பொருட்டாம். ஈண்டுப்பிர விருத்திசாதனங்களாய தரும அதருமங்கள் பிரவிருத்தி சப் தத்தானே கூறப்பெற்றனதாம், அன்னசாதனங்களாய பிரா ணன்கள் "அன்னமேதான்பிராணிகளின் பிராணன்கள்" என் பதுபோலும்: உரைத்தனவாய "இகழ்தக்கனவும் புகழ்தக் கனவும் நிந்தித பூஜித ஜன்மகாரணங்களாம், ஜன்மம் மீண்டும்

சரீரத்இந்திரிய புத்திகளின் நிகாய விசிஷ்ட பிராதுர்ப்பாவும் ஆம்; அஃதுளதாயவழிதுயரமாம், அது மீண்டும் பிரதிகூல வேதநீயம்பாதனை பீடைதாபம் எனவாம், இந்த மித்தியா ஞானாதிகள், துக்காந்தங்கள் ஆயதருமங்கள், இடைவிடாமலே எழுந்து நிகழ்வனவாகிச் சமுசாரமெனவாம். என்ஞான்று தத்துவஞானத்தானே மித்தியாஞானம் அகலா நிற்குமோ, அஞ்ஞான்று மித்தியாஞான மகன்றவழிதோடங்கள் தொலையும், தோடந்தொலையவே பிரவிருத்தி நீங்கும், பிரவிருத்தி நீங்கவே, பிறப்பகலும், பிறப்பகலவே, துயரந்தொலையும், துயரந்தொலையவே ஆத்தியந்திக அபவர்க்க நிச்சிரேயசமாம். தத்துவஞானமோ திண்ணமாக மித்தியாஞான விபரியயமாக வியாக்கியானிக்கப்பெற்றதாம். ஆண்டான்மாவின்கண்ணுள்ளதாமென, ஆன்மாவின்கண் ஆன்மாவென, இங்ஙனம் துக்கத்தில் அநித்தியத்தில் அத்திராணத்தில் சபயத்தில் ஜுகுப்சிதத்தில் தியாகிக்கத்தக்கதிலும் விடப்படியுணரத்தக்கதாம்; பிரவிருத்தியில் உளதாங்கருமம் உளதாங்கருமபலம் என, தோடங்களில் தோடநிமித்த மிச்சம் சாரம் என், மறுபிறப்பில் உராக உளதாம் ஜந்துஜீவன் சத்வம் ஆத்மாவாதல் யாது மறுபிறப்புறுமோ என நிமித்தமுடையது ஜன்மம், நிமித்தவான் ஜன்மோபரமம் என வநாதி மறுபிறப்பு அபவர்க்காந்தமென நைமித்திகமாய் மறுபிறப்பு பிரவிருத்தி நிமித்தமென வடிவுற்றதாகித் தேகேந்திரிய புத்தி வேதனசந்தான உச்சேதப் பிரதிசந்தானங்களாற் பிரவிருத்தித்தலாம் எனவாம்; அபவர்க்கம் சாந்தம் சரதமிது சர்வ்விப்பிரயோகம் சர்வோபரமம் அபவர்க்கம் பகுவும் இருச்சிரம் கோரம் பாபகம் லோபிக்கும் என யாங்ஙனம் மதிமான் சர்வதுக்க உச்சேத சர்வதுக்க அசம்வித் அபவர்க்கத்தை விரும்புறுமவிருப்பன் எனவாம். அஃதெங்ஙனம்

மதுவிடங்கலந்த அன்னம் அநாதேயமெனவாம், இவ்வாறே சுகம் துக்கத்தோடு கூடியதாக அநர்த்தேயமெனவாம்." என்பது முதலிய சூத்திரத்தின் விசேட அருத்தமாம் என்றறிக. பாஷ்ப=ஊஷ்மதாருகை அதன் சாதிருசியத்தான் நீகாரம்= பனி' கிரிநதி சமுத்திராதியாவரகமாம், பாஷ்பபதத்தாற் பகரப்பெறும். ஜனதிருஷ்டியை மூடுமதனால் எங்ஙனம் நதியாதிகள் அறவுமறைக்கப்பெறுமோ எவ்வாறுதான் வர்ஷாமேக= மழையெழிலியால் பானும்=சூரியன், மறைக்கப்பெறுவனோ தத்வத்=அஃதொப்பவே, காம=காமமானது, ஜனதிருஷ்டியை மூடுவதானே யாதொன்றையுந் தெரியவொட்டாமன் முதலின் மூடும், அவ்வாறே ருட்= ரோஷம்=குரோதம் என்பதுமாம், வகாரம் பின்னரென்னும் பொருளில், அச்சினமும் யாவரையும் மறைக்கும் என அவற்றிற்கு முன்பின்னுதல் பொருத்தமாம். இங்ஙனமே ஸ்ரீ பகவானுமிதனைத் திருவாய்மலர்ந்தருளியுள்ளார்:—

நெருப்பைமுற்றிய தூமமு நீடொளித், தருப்பணத்தைமறைத்தனமாசுபோ, லுருப்படைத்தன வுள்ளுணர்வியாவையும், விருப்பமுற்றவெங் காமம்விழுங்குமால்,

இனிவரும் சுலோகக்கருத்து மிதனுள்ளேயாம். 38.

(அ - கை.) காமத்தின் அனர்த்தஹேதுத் தன்மையை விரித்தருளல்.—

௩. வ்ருணோதி ஜ்ஞாநம் ஜ்ஞாநிநாம் ஸதத் ஸதம் த்வேஷிணா,
ஜ்வாலாக்நேத்ரஸாத்யேஷேணேஷ்யணாதப்யதுஷ்பூரேண. 39

க ஞானவானது ஞானமெஞ்ஞான்றுமோ
ரானவானரி யாசையுருவினு
ணவானவை யானுமமைவுறான்
மானுவானன் வலுவினன் மாலுமே

வி. முற்சுலோகத்தினின்றும்விபரிணாமமாகக் காமபதம் தொடர்பாகச் சேர்க்கத்தக்கதாம், பிரதி பத்திமத=சேதனவானபுருடனுடைய, ஞானம்=ஆரோபிதஞான ஏகாகாரசொரூபம், சத்தம்=அநாதிகாலந் தொடங்கி, த்விஷா=காமரூபமாகிய சத்துருவினாலே, சாதிதம்=திரஸ்கரிக்கப்பட்டது இச்சாத்மகேந=இஃதெனக்குண்டாகுக வென்னும் அபிலாஷை இச்சையாம், அவ்வடிவமான, தரசா=வேகவானால் கணத்திற் புருடன்வயம் ஆவன் என்பது பொருள். துஷ்போஷ்யேண=துயரமுற்றும் போஷிக்கமுடியாததாம் அக்காமம் விடயகோடியர்ப்பணத்தானும்திருத்தியுறுத்தமுடியாதென்பதாம் சுஷ்மிணா=வலுமிகுத்ததாம் அக்காமம், விடயார்ஜன வலுவாற் புருடனைப் பிரவிருத்திப்பிப்பதாம், வஎன்பது சிறப்புகளின் சேர்க்கைப்பொருட்டாம். 39,

(அ - கை.) காமமானது ஞானத்தை மறைத்து என்ன செய்கின்றதென்னுமவாவுளதாய வழியுரைத்தருளல்:—

௪. ஆஶ்ரித்ய புத்திமநஸீ இந்த்ரியாணி ஸ திஷ்டதி, தைரேவ ஆச்சாதிதப்ரஜ்ஞோ ஜ்ஞானம் ஸம்மோஹயத்யஸௌ.

க, போககாம சிந்தையீது புந்தியிந்தியங்களை
யாககாரியம்புமொன்றி யங்குமங்கவற்றினை
யேககார சிந்தை யன்பியைந்தெழுந்திடாவணம்
மோககார மாகுமென்று முந்துணர்ந்தவர்க்குமே,

வி. அசௌ=இக்காமமானது, புத்திமனசீ இந்திரியாணி=மதிமனங்களையும் புலன்களையும்; ஆசிரித்ய=பற்றிநின்று. திஷ்டதி=நிலைபெறும், தைரேவ=வெளிமுகங்களாயவ் அம்மதியாதிகளானே, ஆச்சாதிதப்ரஜ்ஞா=மறைவிறுக்கப்பெற்றது தத்துவஞானம் எதனால், அத்தகையதாய்,

ச=அது, இருந்து உணர்வையிரித்து இடர்ப்படுத்தும், ஞானினம்=பரோக்ஷப்பிரஞ்ஞை யுடையவனை, இக்தர்மம், மோஹபதி=விடயத்தில் வீழ்ந்தலமருமாறு செய்விக்கும். எனின், அஞ்ஞானையது என்னதான் செய்விக்கமாட்டாது. மதியாதிகள் உண்முகமாகப்பெரிற்றான் புருடன் தமமகற்றித் தன்வடிவாநந்தத்தைத் தடையற்றனுபவிப்பன். அவை வெளிமுகமாகத் திரியின் பாகியப்பரிசானுபவத்தானே இன்பத்துன்பங்களை யேங்கி யேங்கி யனுபவிப்பன். இதனைச் சாம்பிரதாய ஆசிரியராகியசர்வஞ்ஞமுனிவருமருளியுள்ளார், 'நினதுரூபகமதேநினதுநோய்தருவதாம், வினவிநீயஃதுறாய் வெளிமுகாதரமதீ, வினவதே விழியினாய்விலகியேயுலகைகயே, நினதுரூபகமதே நினதுநேர் மகிழ்வதே" அற்றேல் எனது ரூபத்தையே யறிவனாயின் அஃதெனது திருப்தியின்பொருட்டு ஆமாலாயின் முனபும் தத்துவமாதிவாக்கியாதி சிரவண சம்பவத்தான் யாங்ஙனம் இதன்முன்னர் ஏன்றனக்குத் திருப்தியுளதாகவில்லை யெனக்கடாவ மனத்தூய்மை பெறுமை யானே மாயிகஐசுவரியாதியில் நினது மனதின் அபிநிவேசாதியால் அதிகார மிலாதாக முன்றத்துவ சாக்ஷாத்கார முதயமாகாமையின், என்னுங் கருத்தால் விடையிறுத்தியருளல்:—நினது ரூபகமதேயென்பது. வெளிமுக ஆதரமதீயென்றதானே வைராக்கியசமதமாதிய பாவம் குறிப்பித்தருளியதாம். இஞ்ஞான்றோ நினக்கு விவேகாதியதிகார சம்பத்தியினானே தத்துவ சாக்ஷாத்கார சம்பவத்தாற் பரிதிருப்தப்பான்மை சித்திக்கின்றது என்னுங் கருத்தால் அருளல்:—நினது ரூபகமதே யென்பது. உலகையென்றது அஞ்ஞானகாரிய அவிவேகாகாதி யென்றதாம். 40

சூ. தஸ்மாந்நியஶ்சாநஸௌஶநாவேநராஜ யெநு, ஜ்ஞாநவிஜ்ஞாநயொ: ஸாத்திகாஸ்வாஸ்வஸமெநாஸவ,

க° அதனுன்மனந்தன்னொடு மாதியிலாங் கவற்றை
விதமாக முயன்றவன் வெற்றியையுற்றுவாழ்க
சிதஞான விஞ்ஞானங் கடம்மையுச் சேதமாக்கும்
அதிபாவ் மனோபவக்காமமதென்பதாமே.°

வி. எதனுன் மதிமுதலியவற்றானே முன்னர், காமம் புருடனை மோகிப்பிக்குமோ தஸ்மாத் = அதனுல் எல்லா அநர்த்தங்கட்கும் மூலங்கள் அம்மதியாதிகள், தாநி = அவற்றை, ஆதௌ = மரணத்தின் முன்னரே, நியம்ய = தத்தம் விடயங்களினின்றும் விலக்கி, இயமநியம ஆசனப் பிராணுயாம பூர்வகமாகப் பிரத்தியாகாரஞ்செய்து என்பதாம். பிறவற்றினின்றுங் கவரப்பெற்றனவாயினும் புலன்கள், யோகியானவன் மனத்தானே எல்லாவிடயங்களையும் எண்ணி வெளிமுகனுக ஆகவேண்டாம் என, சமநாம்சி = மனத்தோடுகூட அவற்றை வெற்றிபெறவேண்டுமென் றருளப்பெற்றது. ஆண்டு மதியாதிகட்குத் தத்தம் விடயவிமுகத் தகைமை பிரத்தியாகாரமாம், வஸ்துவின்கண் அவத்தாபனம் வெற்றியெனவேறுபாடாம். அதனுனே மனோபவம் = மனதினின்றுந் தோற்றிய காமமும் மனோஜயத்தானே ஜயிக்கற்பாலதாம் எனக்கூட்டுக. எத்தகையது அக்காமம் எனின்? ஞானவிஞ்ஞானயோ: சாந்திகரம், ஞானம் என்பது சாஸ்திர ஆசார்ய உபதேச ஜன்னியப் பிரஞ்ஞையாம். விஞ்ஞானமென்பது நன்கறியப்பெற்ற பொருளின் அனுபவமாம், அவற்றின் சாந்திபோலுஞ்சாந்தி அதாவது முற்றினும் உபரமம் உச்சேதம் என்பது, இரண்டபொருள் அதனது கருத்தாவைச் சாந்திகரமென்றதாம். இதனுனே பாபம் = சர்வ அநர்த்த மூலத்தன்மையானே தாண்டமுடியாத கெடாத நரகாதியையடைவிப்பதாம். நர: = அதிகாரி.

நுதலியருளிய இரண்டுசுலோகங்களின் றிருக் கருத்தை ஸ்ரீபகவானுமருளல்:-காதலாற்றவிக் கிரமம்புலன்களே, வாயிலாப்புகுந்துள்ள மயக்குவ, தாதலாற்புல னைந்துமடக்கியே, ேயதிலாங்கடுங் காமமிறுக்குவாய்.

(அ - கை.) சர்வ அநர்த்தநிதர்னமாய காமத்தையே வெற்றிகொண்டு கிருதகிருத்தியனாகின்றான் என்னுந் திருக் கருத்தானே அருளல்:—

௬. யதஸ்தாநீந்த்ரியாண்யாஹுஸ்தேப்யஶ்ச பரமம் மந꞉
ததோ(அ)பி ஹி பரா புத்திராத்மா புத்தே꞉ பரோ மத꞉.

௧. நொந்தவிந்த நந்திலந்த நோன்மையிந்தியங்களாம்
இந்தியங்கடம்மினு மிதந்தைசிந்தை யேறுமாம்
புந்தியவ்வகந்தையிவ் விகந்தைபொங்கினும்பரம்
புந்திமுந்தினும்பரஞ் சிவம்புகழ்ந்துபோதுமே.

வி. யத꞉=ஏதிசெல்கின்றது நசிக்கின்றது எனயந், அநித்தியம் புத்திரதார வித்தாதியர்த்தகணம் அதனின், தாநி=இந்திரியங்கள், பராணி ஆஹு꞉=சூக்குமங்கள் என்பர் மகன்மனைதனதிபொருட்குழூநியமனத்தைக்குறித்துப்புலன் களை பயக்கல்வெகுகட்டமானகாரியமென்பதாம். தேப்ய꞉ச=புலன்களினும் பரமம்மந꞉=சூக்குமம்மனமாம் ஈண்டு இதம் அர்த்த ஆகார அந்தக்கரண விருத்திமனமெனப்படும், ததோபி=மனத்தினும் ஹி=பிரசித்தம், புத்தி꞉=அகமாகார அந்தக்கரணவிருத்தி, பரா=சிரேட்டமாம், இதங்காரார்த்த லோகத்தைக்குறித்து அகங்காரார்த்தத்தியாகம் மிகமிகவும் கட்டமென்பது பொருள் ஆத்மா=சோதிக்கப் பெற்ற தத்துவம் பதார்த்தம், புத்தே꞉=அகங்காரத்தினும் பர꞉=சூக்குமதமமென்து மத꞉=சம்மதமாம் அகங்காரத் தியாகத்தைக் குறித்து நிருவிகற்பத்தானே நிரஸ்தம ஸ்மி

தையென்னும் பிரத்தியயத்தானே சிதேகரசவடிவமாக அவஸ்தானமாதல் அத்தியந்த துர்லபமென்பது பொருள். ஸ்ரீ பீகவத்கீதை:—

" ஆற்றுமிவ்வுடம்பிற் பரமைம்புலன், மாற்றுமைம்புலனிற் பரமாமனம், போற்றும்புத்திபதிற் பரம்புத்தியிற், றேற்றுகின்றது காண்பது தொல்பரம். 42.

(அ - கை.) அதனுற்றான் என்னெனக்கடாவ விடையருளல்:—

சு. [Grantha text]

[Grantha text]

க. இந்தவாறறிந்துதன்னையிதயத்தான் மனத்தைவென்று
புந்தியிற் காமரூபப் பகையினைப் பொன்றக்கொன்றே
யந்தமா வறிவானந்த பரபதமடைதியென்றான்
சிந்துரானனியீவீர சேகரச் செல்வன்றானே.

வி. ஏவம்=இயம்பிய முறைமையானே, ஆத்மநா=அந்தக் காரணத்தால் ஆத்மானம்=சிதேகரசத்தை, புத்வா=தானுக அநுபவித்து, எங்ஙனமுணர்ந்தென வினவவருள=—ஸம்ஸ்தப்ய ஆத்மானம் ஆத்மநாவென்பது, ஆத்மநா: புத்தியானே, ஆத்மானம்=மனத்தை சம்ஸ்தப்ய=நியமித்து, புத்தியினுனே மனோவிருத்தியை தன்வயமதாகவாக்கி இதமர்த்தத்தியாகத்தானே அஸ்மிதைமாத்திரரூபத்தானேநிலைபெற்று அதுவும் உப்பபிற்கரைந்தொடுங்கும்நியாயம்பற்றித்தன்பாற் பிரலீனமாய வழி காமமூலங்களாய விடயவாசனைகளின் உச்சேதமானது, நிர்விகற்ப சமாதியப்பியாச தாட்டியத்தானே யுண்டாகியவழி அதனைமூலமாகவுடைய காமத்தின் உச்சேதம் உண்டாம் என்பதாகக் கருதியருளல்:—ஹத்வாசத்ரும்

காமரூபம் பரம்பதம் அவாப்நுயாத்தென்பது, காமவடி
பகையைக்காதி மேலான பதத்தையடைய வேண்டும்
பதாம்: அவ்வுறேமறையு மறைகின்றது:—இவன்றனை
யத்திருந்த காமங்கள், சிவன்றனதருளினி லெவையும்
மையாய், அவன்றிகழ் காலையிலமுதமாகுவான், சிவன்
யனுபவித்திடுவனீண்டரோ, எக்காற் சமஸ்ததிருஷ்
களின் வேறுபாடுகள் விடுபடா நிற்குமோ, ஆன்மகாமம
பிரஹ்மவித்திற்கு மூலத்தோடு கெட்டோடுமோ, என
இகாமுத்திரார்த்தங்களாய் வெளியாமோ, புத்திர வித்
லோக ஏஷணைவடிவமாமோ, இப்பிரசித்தமாய புருடன
மதியின் மாட்டு முன்னர் பொதிந்தருந்தனவாமோ, அ
கெட்டுவிட்டவக்கால்; அவன் மூலத்தோடு கூடிய காம
யோகத்தானே அமிருதனுவன்; அநாத்மவிடயங்களா
காமங்கள் அவித்தை யிலக்கணங்கள் மிருத்தியுக்கள் என
படும்; படவே மிருத்தியுவியோக முறவேவித்வான் ஜீவிக்கு
போதே அமிருதமாவன், இத்தேகத்திலேயே வர்த்தமானம
கிய பிரஹ்மத்தை யனுபவிப்பன், அதாவது பிரஹ்மபாவ
மோக்ஷத்தை யடைவன் என்பதாம். இதனானே மோ
க்ஷம் தேசாந்தரகமனதியை யபேக்ஷிப்பதின்றும், இலதா
வின் வித்வானுடைய பிராணன்கள் வெளிக்கிளம்புவதி
வாம், இருந்தபடியிருந்தே தங்காரண புருடனிடத்தி
நன்கு லயமாகின்றனவாம்; நாம மாத்திரம் எஞ்சாநிற்கு
என்பதாம். இப்பொருள் பரமார்த்ததரிசனத்தும் பகர
தருளப்பெற்றுளது:—மேலாயுள்ள விப்பொருளை மெய்ய
யறிந்து பொய்மாய, மாலாய் மயங்கு மனத்தினையுமடக்கி
யந்த மன்கலக்குங், காலாயுள்ள காமத்தைக் காப்பா
யென்று கட்டுரைத்தான், சேலாயுலகமுறுபுணலோர் செக
வின் புரையே செலுத்தினேன். ஆசை பகைபாய் நிற்றல்

ஞானவாசிட்டத்தும் காணலாம்:—மனமிறந்திடலமுதமாய், நிறைந்திடும்வையங், தனது தாட்செருப்புலகெலாந் தோன் முச்சுந்தரம் போற், கனமிராசையானிறையு நெஞ்சாசையிற் கவிழ்ந்தினமு மாசையானிறை மனக்குறை யென்றுந்திரா. அகத்தியன் கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கு, மிகுத்த மாவிலாமனமென நிறைமதி விளங்காப், பகுத்தபாற்கடனிறைவுறுப் பரிமளக்கோக, னகத்திறையவி திருமுக நலம்பெறத்தோன்று.

மதியை மேகம்போல் வெண்டலச் சுதையினைமைபோ, லதிக நன்னெஞ்சையாசையாம் பேயழகழிக்கும், பொதியுமாலெலா நீக்கிவன் பவிப்பயம்போக்கி, முதிர்மனத்தின் மால் பிணிப்பறின் முத்தி வேறுளதோ. வாசுதேவசதகம்:—இல்லையிருலகிலின்ப மெனமனத் தெழுந்தபோதே தொல்லை மூவுலகும் விட்டார் சோறுகன்றதுவுறப்போ, னல்லவாங் காமபோக நஞ்செனர் வெறுத்து நீத்தா, சொல்லொடுமன மிறந்த சுத்தரூபத்தை யுன்னி. அநந்தபோதம்:—கள்ளக் கோலக் கருங்குழன் மாதர்பான், முள்ளித்தேனை முனிந்துயர் முத்தியாம், வெள்ளத்தேனை விரும்பும் விடாயினன், என்னிற்போது மிராதுடனேகினன். (அரசன்) அஞ்ஞவதைப்பரணி:—நெய்விட்டகருங்குழலார் தம்பால் வைத்த நெஞ்சொழிந் தாரைம்புலன் சேரின்பநோக், கைவிட்டா ரொழிய வாநந்தபோகக் காமுகராய் முடிந்தபடிகாண்மின்காண்மின். இணைப்பரிய பேரின்பந்தன்னின் மூழ்கி இன்புறப்பட்டெவ்விடத்து மெக்காலத்துங், கணப்பொழுது மின்பமிலாவுடம்ப ரின்பங் கைவிட்டனீத்தமை காட்டல்காண்மின் காண்மின்.

பிறப்பொடு மிறைப்பையகற்று கம்பீரப்பெருமருஞ் பொருள் பெரிதுங், திறப்புறக்காட்டுங் கணபதி கருத்த் தீபிகையெனுங் கணேச்சுரன்றன், சிறப்புஞசாதுர்தரன புரிந்த திவ்விய கீதையினுறைபி, மறப்பறுமிரண்டதா மத யாயப் மாமுகன்றிருவடி மகிழ்வே. ஸ்ரீமத்பதவாக்கி பிரமாணமர் யாதாதுரந்தரசாதுர் தரவம் சாவதம்ச கே ந்த சூரிசூனு ஸ்ரீநீலகண்ட பண்டிதராற்றிய ஸ்ரீகணே தாத்பர்யார்த்த தீபிகை என்னும் ஸ்ரீகணேச கீதைடீகைய இது இரண்டாவது அத்தியாயமாம்.

சுந்தரிமைந்தனுகித் தோன்றிவான் றவத்தினுர்க்காய
சிந்துரன் சான்றேன்றுண்டி சிந்தைமாமணியனுகி,
மைந்துறு மகோற்கடன்றுனென நின்றமாசில் சீரோ
வந்திலனுகிற் காண்பார் மாமறைப் பொருளேயாரே.

ஓம் தத் சத்திதி உபநிடதார்த்த கருப்பம் வாய் ஸ்ரீமத் கணேச கீதையென்னும் யோகாமிருத அர்த்தசா திரத்தில் ஸ்ரீமதாதி கணேச புராணத்திலுள்ள ஸ்ரீகஜான வரேண்ய சம்வாதத்திற் கருமயோக மென்னும் இரண்ட வது அத்தியாயம் முற்றிற்று.



## மூன்றுவது பிரஹ்மார்ப்பனயோக அத்தியாய



இன்பதுன்ப மிடைத்துப் புடைத்துமே
லன்பரானவ ராருயி ராயினுன்
மன்புரா தனமான மகிமையை
முன்பன் கேட்ப மொழிந்தருள் வானரோ.

(அ - கை) யதஸ்தானிபராண்யாஹு: என்னும் இரண்டு-சுலோகங்களானே எவ்வியோகம் தொகுத்தருளப் பெற்றதோ அதிற்சிரத்தை யுண்டாக்கியருளற் பொருட்டு அதற்கு வேதமூலத் தன்மையானே அநாதிபரம்பரைப் பிராப்தத் தன்மையை விவரணித்து ஸ்ரீகஜாநநர் அருளல்:—

சு. வ்யாமாஸவஷ்ரீதிலஸம்யெமெ த்ரமாண்யம் திரதநீ மாஹம், நிஶீரயமெவை தவேஷம் விஷ்ணவெயா மமாத்தம்

க. முன்னர்ச் சருக்காதிப போதினின் முக்குணஞ்சா
ரென்னத்திரி தேகருகந்திக மேற்றவானே,
முன்னிப்பின ருத்தமமாக மொழிந்தயோகந் தன்னைத்
திருவிண்டுவினுக் கருள் சாற்றினே மால்.

வி. ஸ்ரீதான்யத்வ வாதிகளின் பௌதிக சிருஷ்டியின் முன்மையாக வேண்டாம் என்னும், ஆகா சாதிசிருஷ்டிவாதிகளின் அச்சிருஷ்டியின் முன்மையாக வேண்டாம் என்னும். இதன் பொருட்டாகப் புரா என்பது சர்க்காதிசமயே யென்பதுமாம். இரண்டு காலத்தினும் முன்பு, முன்னர்சிருஷ்டியின் முதற்போதில், த்ரைகுண்யம் நிர்மாய=முக்குணசமூகரூப அவ்யக்தத்தின் நிர்மாணத்தைச் செய்து, என்னும் இதனைற் சிருஷ்டி உற்பத்தியருளப் பெற்றது. இதுவே பரமேவியோம சப்தத்தானும் அவ்யக்தாதி சப்தங்களானும் கூறப்பெறுவதாம்.

ஆண்டு, அக்கிரமதனி னின்றவ்வியத்தந்தான் முக்குணமாயெழுமுனிவர மறையோய் ஏனவும், நிட்காயுருடனின்னிகழ்ந்த வவ்வியத்தம் மட்கலம் போலமட்டிந்திடுமறைபோய், எனவும், அதனது உற்பத்திப் பிரஸயங்கள் ஸ்மரிக்கப்பெறுகின்றன, இன்னண்ணம், யாதொருவியோமம் அபரமாயின்,

பூதபௌதிக சிருஷ்டியின்முன் பரவியோமமெனப் பெயரிய அதன் அபாவசிரவணத்தானே உற்பத்திப்பிரளய சேவை யாதனுணரப் பெறலாம். த்ரைகுண்யம் சிறப்பிக்கப் பெறு கின்றது த்ரிதநூருஹமென்பதால், த்ரீணி=மூன்று, தநூரு கவத்=கேசம்போலும், பிரகாசப் பிரவிருத்தி நியமமெனப் பெயரிய காரியங்கள், எதற்கோ அது த்ரிதநூருகமாம். ஆகாசாதிகவத்துக்கள் யாவுமே சத்துவாங்கி சத்தானே யொளிர்கின்றன, இரஜோங்கிசத்தானே வாயுவென்ன வியங் குகின்றன, தமோங்கிசத்தானே கிதியாதிகடுப்பச் சடப் படுகின்றன. ஆகிலின், காரியத்திற் பிரகாசப்பிரவிருத்தி நிய மங்கள் காணப்பெறுகின்றமையின் காரணமும்வெளிப் படா தசத்து வரஜஸ்தமோ மயமெனத்துணியப்பெறும். நுதலியவ கையே அச்சவிலாச பந்தகாரண அஞ்ஞானத்தையுண்டாக்கி அதன் நிவிருத்தியுபாயமேயாய பூர்வத்திற்குப் பூர்வத்திற்குப் பரத்தின் மாட்டுப்பரத்தின் மாட்டுப்பிரவிலாபன ரூபமான முன்குறிப்பிட்ட, அஎதம்யோகம் உத்தமம்=இந்த உத்தம மான யோகத்தையும், விஷ்ணவே=ஆதிகுருவின் பொருட்டு, அவதம்=வேதவாயிலாகத் திருவாய்மலர்ந்தருளினேன். அவ் வாறேசுருதியுமாம்:—பொருந்து ஞானமாமதியினன் மனத் தனை பூட்டியைம்புலப்பாய்மா, பரந்தெழாவகை தன்வச மாக்கினன் பரம்பதமடைகின்றான், திருந்துமாலுடைப் பித மதுவதுயரஞ் சிவனெனுந் திருநாமத், திருந்தவாறு தானிருந் தவாறன்றி வேறிணையிலாவிறையாவான். நிச்சயரூபமாம மாத்மாநாத்ம விவேகபுத்தி விஞ்ஞானமாம், சங்கற்பவிகற்ப ஆத்மகம் மனம், இங்ஙனமாகவே விஞ்ஞானரூப சாரதியி ன்னே செலுத்தப் பெற்றவனும் அடக்கியமனத்தனும், அவ் வழினன் சமுசாரகதியின் அந்தத்தையடைவன், ஸ்வஸ்ம

ரூப உண்மையுணர்வானேல் சமுசாரபந்தத்தி னின்றும் விடு படுவன் என்பதாம்; அப்பாரமும், விஷ்ணுவென்னும் வியா பன சீலமாய பரமாத்மாவின் வாசுதேவப் பெயரிய மேன்மை யினும் மேன்மைவாய்ந்த அடையத்தக்கதாய சச்சிதானந்த ஏகரச சொரூபமாம். திரிபுடியீனமாய எவ்வத்விதீயபல முளதோ அத்தத்துவம், தேவமனுடாதி யகிலதேகிகட்கும் நிரதிசய ஆனந்தரூபமாக யாவரானும் விரும்பத்தக்கதாத லின் பரமசிவபதமாம். இவ்வண்ணம் வைஷ்ணவ பரமபதத் தின் அறிதற்கருமையை யறைந்தருளி, அதையறிதற் பொருட்டு யோகமருளல்:—வாக்கது மனத்திடை வைக்குமம் மனம், போக்கிடும் புந்தியுட் புந்திமானிலே, யாக்கிடு மந்த மானின்வையனைத்திலுந், தாக்களுஞ் சாந்தமாந்தன்னிற் சாந்த மாம்

விவேகியானவன் வாக்குச் சப்த உபலக்ஷித எல்லாப்பா கிய விடயங்களையும் இந்திரிய ஜாதத்தையும் மனத்தின் மாட்டு உபசங்காரஞ் செய்க, உபசங்கரிக்கப் பெற்றபாகிய கரணத்தோடு கூடிய அந்தமனத்தையும், பிரகாச சொரூப புத்தி யெனப் பெயரிய ஆத்மாவில்=மனாதிகரணங்கள் அடைகின்றபடியினாலே யாத்மாவென்னும் அவற்றின் பிரத் தியக்கில், உபசங்காரம்புரிக, நிச்சய ஞானரூபமாய அப்புத்தி யாத்மாவையும், மகத்தாத்மாவில்=அதன் சமஷ்டிபூதமாய சூக்குமதாஹிரணிய கருப்ப உபாதியில் உபசங்கரிக்குக, பிரதமஜன் போலும் சுவச்ச சுபாவகம் தன்விஞ்ஞானம் சம் பாதிக்குக வென்பதாம்: மகத்தாத்மா வெனப்பெயரிய ஹிரண்யகர்ப்ப சம்பந்தி புத்திசத்வத்தைச் சர்வவிசேடங் களும் ஒழிந்து சாந்தமாய், விகாரமற்றதாய்ச் சர்வாந்தரமாய், சர்வபுத்திப் பிரத்யயசாக்ஷியான சின்மாத்திர ரூபமாயிலகும்

முக்கிய ஆன்மாவாய தன்னிடத்தில் உபசங்காரம் செய்க. இவ்வண்ணம் இந்திரியாதி காரணபரியந்தம் விலாபனஞ் செய்து பரிபூர்ண ஸ்வப்பிரகாச சிதாத்மானு சந்தானபரனாக நிலைபெறுதல் வேண்டுமென்பதாம். வாக்காதிவாகியேந்திரிய வியாபாரத்தை விட்டொழித்து மனோமாத்திரமாக மன்னுக விடயவிகற்ப அபிமுகமாய மனத்தையும் விடயதோடங்காட்டும் வாயிலாக ஞானசப்தோதித அத்திபவசாய சுபாவபுத்தியின் கண்ணே தாரணஞ் செய்க, அப்புத்தியையும் மகத்தாத்மாவாய்ப் போக்தாவாய் அஸ்மிதை மாத்திரமாகத் தோற்றுவதில் அடக்குக, அப்போக்தாவையும், பரமசாந்தமாய்ப் பிரம அகரணவத்தாய் ஞாதாஞேய விபாகசூனியமாயுள்ள பரமகாஷ்டையில் தாரணஞ்செய்க, வெனவருளப் பெற்றதாம்.

(அ - கை) இப்பிரஹ்மவித்தையின் வங்கிச் மருளல்:—

௬. ஜயாமணேஷோஸ்ரவீத்தாவிஷ்ணவேநிஜஸூநவே, ததஃபரம்பராயாதம்விதுஃராஜர்ஷயஃ

௧. இதமுறவரியுமற்றிர விக்கோதினன்,
சுதனிச மனுவினுக்கவனுமே சொனன்,
அதனினற் பரம்பரையாகி யேவரும்,
இதுதனை யிருடியரினிது தேர்வரால்.

வி. சோபி=ஸ்ரீமகாவிஷ்ணுவும், அர்யம்ணே=சூரியன் பொருட்டு, அப்ரவீத்=கூறினர், இந்த யோகத்தையெனு வெல்லாவிடத்தும் கொண்டு கூட்டுக. சோபி=சூரியனும், மநவே=இந்நாமமுற்றவராய நிஜசூநவே=தன்மைந்தன் பொருட்டு யோகத்தைக்கூறினர், ததஃ=மநுவின் சம்பந்தமாக, பரம்பராயாதம்=சிஷ்ய ஆசார்யபாரம்பரையாக வந்த

ஏதம்=இந்த=யோகத்தை, மகர்ஹய:=வசிஷ்டாதியர், விது: அறிந்துகொண்டனர். ஸ்ரீகஜானனபகவான் அருளியவண்ணமே ஸ்ரீகிருஷ்ணபகவானும் அருளல்காணலாம்:—எவமற முன்பியானிரவிக் கோதினே, னவன்மனு வரசனுக் கறியக் கூறினு; னுவனையோட்வனிக்கு வாகுக்கோதினன் றவமுய லரசரீதறியுந்தன்மையோர். (2)

ஈ. காலெநவெஹ-நாவாயம நஷூ:ஸ்யாஜ்ஜவைய-ஏ-ஐ, அஸ்ரஷேயாஹ்விஸ்வெஸ்யாவிநீதவ்யஸூஹெஜிவ.

க. காலநீள நீளக் கலியீற்றினிற்
சாலநாசமிதுமன்ன சாருமால்
வாலமார்சிரத்தை விசுவாசங்கள்
ஏலவேயற்றிகழ்தலு மேயுமே.

வி. அதன்பின்னர் காலேநபகுநா வு=திரேதாது வாபர கலிகளில், போது நீடிக்க நீடிக்க, தருமத்தின் ஏக ஏக சரணம் ஹீனமாம், அதன் பின்னர் தருமஉச்சேதமாகவே, அபயம்=இந்தயோகமெனப் பெயரிய பரமதருமம் கெடும், சர்மேயுகே=கலியுகத்தின் கடையிலோ எல்லாவாற்றானுமே நஷ்ட:=உச்சின்னம், ஸ்யாத்=ஆம். நாசத்தில் ஏதுவையருளல்:—அசிரத்தேய:=குருவேதவாக்கியாதிகளில் பலம் அவசியம் பலிக்கும் என்னும் நிச்சயம் சிரத்தையாம், அதனோடு நிகழ்வது சிரத்தேயமாம், அதனினும் மாறுயது அசிரத்தேயமாம். சம்பிரதாயப்பிரவர்த்தக குருவிருந்தபோதினும் சீடர்தம் சிரத்தையின்மையே இன்னணமுச்சேதமாதற்குக் காரணமாம். கண்கண்ட பயன்றரும் காரியாதிகளினும் (மழையின்பொருட்டுச் செய்யப்பட்ட யாகவிசேடம்) எவனேனுமொருவன் சிரத்தையோடும் முயல்வானுயினும் பலமானது

இச்சன்மத்தில் அவசியம் பலிக்குமென்னும் துணிபின் மையின் அபிஸ்வாஸ:=விசுவாச அருகமிலதாம், விகீதவ்யஹ=கொக்கொக்கவாளாவே பாவஞ்சனப் பொருட்டுத் தியானிப்பதனை விகீதவ்யமாம்=நிந்தியமாம் இது, ஹி= இவ்வேதுவினால் வ=உண்மை, ஹேப்ரிய=சம்போதனம், இவ்விளி, பூப்பிரஜைகளை நீ நன்றாய்க் காப்பதொப்ப இந்த மகாயோகத்தையும் இனிது காப்பாயெனக் குறிக்கும். நன்மையானது நாட்குநாட் குறைந்து கலிக்கடையில் முற்றினும் அற்றுவிடும் என்றருளியதை நியாயஆசிரியராய ஸ்ரீமத் உதனாசிரியரும் தமது நியாய குசுமாஞ்சலியிற் பொறித்திருத்தல் காண்க:—

சன்மசற் சமக்கார சத்வித்தைமுற் கன்மமுங்கனமோதலுமாதலும், வன்மமாகக் குறைந்து வருதலான், இன்மையாஞ் சம்ப்ரதாயமென் றெண்ணலாம். முன்னரோமானசிரியராகவே பிரஜைகள் உதயமானார்கள், அசிரத்தை மலகளங்கிதமாய், காமக்குரோதாதிகண்ட கசதஜர்ஜ்ஜரமாய், அநுதினம் அழிந்தேவரும் வீரியத்துடன் இங்குமங்கும் தடுமாறி விழுமாறுபோலக் காணப்பெறுகின்றது. (3)

(அ. கை) இங்ஙனம் போகநாசத்தில் காரணத்திரயத்தைக்கழறியருளி அதன் பிரவிருத்தியின் கண்ணேயாமே காரணமென வருளல்:—

சு. வாதம் வாராஹவம் யோமம் ஸ்ரூதவா நவிஸ்ந்வாஸ:,
ஹஹ்யாஹ்யஹ்ய தஜம் வெதாஹவஸ்யம் வாஜம் ஸம்.

க. அகமுற்ற விதுமக யோகம நாதிபாகும்
முகமுற்றெழு மெம்மொழிநின் செவிமொண்டு கொண்டாய்
குகியத்தினுங் குகியமிது மிகக் குகியமாகும்
பகுமொத்தின் மறைவுபரமஞ்சுபமதாமே.

வி. ஏதம் யோகம்முன்னர் அருளியயோகத்தைபுரா பவம்=வேதபோதி தத்தன்மையானே யநாதியாயுள்ளதை, மன்முகாத்=எமது திருவாக்கினின்றும், சுருதவானசி=சிரவணித்தவனாயினாய்; இதனையேபூர்வம் துயருற்றமறையவரானே அதிதிகள் மன்னப்பெறாவாரானார்கள்; பின் க்ஷத்திரிய அதிதிகளும் நிகழ்வார்களாயினார்கள், பின் வைசிய அதிதிகளாகவும் வந்துசேர்ந்தார்கள், இப்போது சூத்திரான்ன போஜிகளுமாயினார்கள். பூர்வம் அமிருதபுஜர்கள்=பகசேடபுஜர்கள் பின் விகசபுஜர்கள்=அதிதிசேடபுஜர்கள் பின் அன்னபுஜர்கள்=பிருத்திய சேடபுஜர்கள், இப்போதோ அகபுஜர்களே=சுவார்த்தசாதித புஜர்களேயாயினார்கள். பூர்வந் தருமம், தவம் ஞானம் யாகந்தானமென்னும் என்னும் நான்கு பாதங்களோடிருந்தது, பின் குறைந்து வந்து தவம் முப்பாதமுற்றது, பின்மலினம் ஞானமென்ன இருபாதமியைந்தது, இப்போது யஞ்ஞஞ்சீரணயாகத்தான ஏகபாதமாயது, அப்பாதமும், துவ்ஷ்டவுபாயமாய சூது முதலியவற்றானே வருவதாதிய வாயவிபாதிகைப்பாதரோகசதசங்குலங்களானே நிலைபெறமுடியாததாய், அதன்பின் அபத்திய ஏகப்பிரயோஜன மைதுன சம்பவர்கள் அதன்பின் காம அவர்ஜநீய சந்நிதிஜன்மானர்கள் இஞ்ஞான்று தேசகாலாதி அவ்வியவத்தையானே பசுதருமத்தானே பிறப்போர் மிகுந்தோர் முன்னர்ச் சரு முதலியவற்றிற் சமக்காரங்கள் நன்கு கொள்ளுவாராயிருந்தனர், பின் கேத்திரப்பிரபிருதிகளில், பின் கருப்பாதியினின்றும், இஞ்ஞான்றே ஜாதங்களில் இலௌகிகவிபவகாரம் பற்றியாம். முன்னராயிரஞ் சாகைவேதம் அத்தியயனமாயது, பின்வியத்தம் பின்ஷடங்கவேகம் இப்போழ்தோ எங்கோவேக சாகைபெயனவாயிது. பூர்வம் ருதமாம் உஞ்சசிலவிருத்தியராய் மறையோர் மகிழ்ந்து வாழ்ந்தனர், பின்னமிருதமம் அயாசித விருத்தியராய், இப்போது பிரசிருதமாம் கருஷணசத்தியா

நிருதமாம் வாணிஜ்ய, குசீதமாம், கலாந்தர பசுபாலியமாம் கோரக்ஷாதி, ஸேவவிருத்தியாஞ் சேவைவிருத்தியராய் வாழ் வாராளவிலர். தோத்தரித்தருளல்:-குஹ்யாத் குஹ்யதமமென் பது. ஐஹிகம்ஹிதம் குஹ்யம், ஆமுஷ்மிகம் குஹ்யதரம், ஆத்தியந்திகம் ஹிதம் குஹ்யதமம். இகபரமிரண்டினும் இர கசியமாதலின் இரகசியத்தினும் இரகசியத்தினும் இரகசிய மென்றதாம்இதனானேவேதரஹசியம்=வேதத்தின்இரகசியம் திவ்யஞானஞாதிகள் இரகசியங்களாயிருந்தபோதினும் அற்ப பலமாம்ஆகலின்,பரமம்=சர்வோற்கிருட்டம்,அதற்கும் அழி வுறும்பான்மையானே அசுபத்தகைமையுளதாமென்பதனுல் அருளல்:—சுபமென்பது. ஆத்தியந்திக கலியாணமென்பது பொருள். ஸ்ரீ பகவற்கீதை:—கருதரும்வகை நிகழ்காலஞ் சேறலான், மருவரும் வகையதாய் மறைந்தவாய்மையை, யிருவினைகெடவருமியோக நீர்மையை, பொருவருமறிவரிதாய வுண்மையை, நல்லகாதல்செய் நண்பனுமாயினை, யல்லதி யாவுமறியலையாதலாற் சொல்லன், மேயினனென்றனன்றாய வன், மெல்லவேறுவிசயன் விளம்புவான்.

அதிவேத இரகசியத்தை யருளினேன் எனல் மெய்ஞ் ஞான விளக்கத்திலும் காணலாம்:—வேதமோடாகமங்கள் விரிஞ்சன் மாலாதியெல்லா, மீதெனவுணர் தற்கெட்டாவெல்லை யிலாவானந்தத்தை, யேதுதான் மொழிவதின்றத் திலக்கண மெனக்குன்றன்மேற், காதலான் மொழியலுற்றேனதனை நீ கருதுமைந்தா. அநந்தபோதம்:—துரியங்கொள் வடிவன்று துரியம்பின் விடாநின்ற, பிரிவன்று பெயர்வன்று பெயர்வற்ற விடமன்ற, தரியன்ற தயனன்ற தானென்றவவனன்று செறி வன்ற தகல்வன்று சிவமன்றியுளதன்று. பெருந்திரட்டு:— போக்கற்றது வரவற்றது புரையற்றது வரையற்றது, வாக் கற்றது மனமற்றது வடிவற்றது படியற்றது, நோக்கற்றது

நுணுகப்படுபொருண் மற்றொருபொருளின், றுக்கற்றது தனையற்றது வெறுமெய்ப்பொருளது தற்பரம்.

(அ - கை.) ஸ்ரீகணபதி விக்கிரகத்திற்குச் சூரியனைப் போற் தரிசனா தரிசனங்கள் உளவாதலே உதய அஸ்தமயங்கள் என்றறியாமல் வரேணியன் வினாதல்:—

க. ஸாம்ப்ரதஞ்சாவதீர்ணோஸி கர்ப்பதஸ்த்வம் கஜாநந
ப்ரோக்தவாந் கதமேதம் த்வம் விஷ்ணவே யோகமுத்தமம்.

க. சிவனுமிஞ்ஞான்றுதானே கஜமுகதேவனேநீ
யவதரித்தருளிவந்தா யம்மையார் கருவி னின்றும்
உவணகேதனற்கு யோகமுத்தம மிதனைநீதான்
அவணருள் செய்ததென்ற தெங்ஙனமமையுமாறே.

வி. ஹேகஜானன! யாவும் விழுந்து எழுந்து வரக்காரணமாய பொருட்குக்காரணமாய தேவதேவ! த்வம்=தேவரீர், சாம்ப்ரதஞ்ச=இப்போதுதானே, கர்ப்பதஃ=மாதாவின் கருப்பாசயத்தினின்றும், அவதீர்ணோஸி=ஆவிர்ப்பவித்தருளியுள்ளீர், இங்ஙனமாகவே, கற்பாதியில் ஆவிர்ப்பூத ஆதித்தியனினும் முன்னரே சித்தமாயவிஷ்ணவே=ஸ்ரீமகாவிஷ்ணுவின்பொருட்டு, ஏதம்=இந்த, உத்தமம்=கைவல்ய காரணத்தன்மையானே மேன்மையினும் மேன்மைவாய்ந்த, யோகம்=மகத்பிரஹ்மவித்தையை, த்வம்=தேவரீர், ப்ரோக்தவானஸி இதி=திருவாய்மலர்ந்தருளினீர் என்று, கதம்=யாங்ஙனம் சிரத்தைசெய்தல் கூடும்? ஸ்ரீபகவற்கீதை:—ஞானமாமிது நல்லவர்கேட்டிடப், போனகாலமும் யான் புகன்றேனென்று யானதாகிலுமவ்வுடம்பன்றிது, தானதாம் வகை நீ பறிதக்க தோ.

(அ - கை.) தமது விக்கிரகத்திற்கு அநாதியநந்தத் தன்மையைத் தரிசிப்பித்தருளிக்கொண்டு ஸ்ரீகஜாநனர் அருளல்:—

௬ அநேகாநி ச தே ஜந்மாந்யதீதாநி மமாபி ச, ஸம்ஸ்
ம்ருதிஸ்தாநி ஸர்வாணி ந ஸ்ம்ருதிஸ்தவ வர்த்ததே.

௧. ஏகமற்றதேகமா மெமக்குனக்குமேய்ந்தன
வாகமுற்றயாமறிந்துமாதியாதல் போதிலேஞ்
சோகமற்றசிந்தை நிற்குதிப்பதின்று சோர்விஞல்
ஏக முற்றமாண்பையின்னுங்கேளெஞ வியம்புவான்.

வி. ஹேவரேண்ய! தே = உனக்கும், மமச = எமக்கும் அநேகாநிஜன்மாணி = அளவற்ற சரீரக்கிரகணங்கள், அதீதாநி = ஆயினவாம், தாணிசர்வாணி = அவையாவற்றையும், அலுப்ததிருக் சக்திமயா மிருகீநர்த்தகராகியயாம், சம்ஸ்மரே = நன்குஸ்மரிப்பேம், தவது = கர்மஜ தேகங்களானே முன்பவித்த ஞானஹீனனை நினக்கோ, ஸ்மிருதி நவர்த்ததே = நினைவானது இருப்பதில்லை, இதனனே, கஞ்சுகத்தினின்றும் கஞ்சுகாந்தரம்போலும் அகலாத அறிவுடைய தமக்கே சரீராந்தரப்பிரவேசமெனவும், தேகத்திற்றாதாத்மிய அத்தியாசம் எமக்கில்லையெனவும் அபிப்பிராயங் காட்டியருளப்பெற்றது. இதுவிடயத்தே ஞானவாசிட்டத்திற் கூறியவாறு:—மிக நாகதஞ்சென்றதுங்கற்பநி மேடந்தானுந்,தொகுதூரம தூரமுந்தோய்வதுந் தூலமோடும், புதுமாவனுவாவதும் பொன்றலில் சித்திஞடே, தகவேய்வனவேயெனக் காணுதிசாலமாயை.

இதனனே, சர்வாவத்தைகளும் அவற்றிலுள்ள சர்வமும் சர்வகாலமும் எக்கான் மாயையிற் காணப்பெறுகின்ற

தோ அக்கான் மாயையைப் பிரயோகிக்கும் விக்கிரகத்திற்கு நித்தியத்வம் கைமுதிக நியாயசித்தமாம். இதனுனேயே ஸ்ரீமார்க்கண்டேய புராணத்திலும் இது கூறப்பெற்றது:—

தேவர்தங்காரியங்கள் சித்திப்பான்றேவிதாமே, மூவரும் போற்றவாவிர்ப்பவனமேமுந்துங்காலே, யாவரு முதயமாகு ளென்றுயாமளையைப் பல்கால், தாவினித்திய கல்யாணித்தா யெனுஞ் சாற்றுவாரே. எமக்குச் சூர்யன்போலும் ஆவிர்ப் பாவதிரோபாவங்களாம், உனக்கோ கடாதிகடுப்பவாமென் நம்மிருவருள் விசேடமாம்.

ஸ்ரீமத்பகவற்கீதை:—சொல்லார் விசயனிது மொழியத் துளபமுடியோன் சொல்லுவான், பல்லாயிரங்காணுடம்பெ னக்குமுனக்கு நடுவுபரிந்தொழிந்த, தெல்லாவறிவன்யானீய தேதுமறியாயிதுவன்றே, வில்லார்தோளாய்நமக்குள்ள வேறுபாடு விளம்புங்கால். (6)

ஸூ. மத்தஸ்ஸர்வே ஸமுத்ஜாதா விஷ்ண்வாதயஸ்ஸுரா:
மாயயா சோபாதிஸம்யுக்தா: ...

க. விண்டுமுந்தற்றேவரெலாம் விளப்பரியபெருந்தோளாய், புண்டுளவெம்மிடத்திருந்தே படைத்திடப்பட்டவராவர் கண்டவில்லெம்மிடந்தானே லயந்தனையுஞ் சார்ந்திடுவார் உண்டுபணும் பிரளயத்தேயுகந்தோறு முகந்தோறும்.

வி. இதனுனே எமக்கு விஷ்ணுவாதிகளினின்றும் பூர்வ சித்தத்தன்மையுண்மையின் மத்த:=ஏவமாயா சிருஷ்டா வாகிய அநாதிவிக்கிரகத்தினின்றுமே விஷ்ண்வாதய: ஸுரா: ஜாதா:=மாயயா ச உபாதியையுடையதேவதைகள் உண்டானார்கள், அங்ஙனமன்றே:—எமது மாயை சத்துவாம்சித் தானே பாலனவலவனாகிய விஷ்ணுவைச் சிருஷ்டிக்கின்றது,

இரஜோம்சத்தானே, சிருஷ்டிசெய்யும் பிரஹ்மாவைச் சிருஷ்டிக்கின்றது, தமோம்சத்தானே சங்காரகருத்தாவாவாகிய உருத்திரனையும் சிருஷ்டிக்கின்றது; மூன்றுகளினுடையவும் சமஸ்த அம்சங்களானே துரீய மூர்த்தியையும் சிருஷ்டிக்கின்றது, அதனையே சைவர் சிவன் எனவும், வைஷ்ணவர் விஷ்ணுவெனவும் காணேசர் கணபதியெனவும், சாக்தர் சக்தியெனவும், சௌரர் சூரியன் எனவும், துணிந்துரைப்பர். அவ்வாறே, மய்யேவ=மாயைச் சங்கரிக்கும் எம்மிடத்திலேயே, லயம்யாந்தி ஜ்ஞப்ரலயே—யுகேயுகே = பிரளய காலங்களில் மாயையின் பிரளயத்தால் பிரளயத்தையும் அடைகின்றார்கள் யுகந்தோறும். யுகசப்தத்தானேயீண்டு வியதாதி பிராரப்தபிரளயாந்தராலகாலம் உரைக்கப்பெறும். யுகசப்தத்தானே கிருதத்ரேதாத்வாபரகலிகள் கூறப்படுவதாயினும் அக்காற்புருடனே யுகசப்தவாச்சியனாவன், அவ்வாறேகேட்கவும்பெறுகின்றது:—கலி: ஶயாநோ ப⁴வதி ஸஞ்ஜிஹாநஸ்து த்³வாபர:। உத்திஷ்ட²ம்ஸ்த்ரேதா ப⁴வதி க்ருதம் ஸம்பத்³யதே சரந்॥

(இதன்பொருள்) காரியா காரிய விவேகசூனியமோகாந்தகாரமக்கின சாயனன்=தூங்கும் புருடன் கலியெனப்படுவன். சஞ்ஜிஹாநோ=ஜாக்ரத்கிஞ்சித் விவேகதரிசிதுவாபரன், உத்திஷ்டன்=கர்த்தவ்ய அகர்த்தவ்ய விசாரபூர்வகம் யாவன்யத்நம்புரிவனே அவன் திரேதாவாவன், அவனே, சரந்=அவ்வவ் விஞ்ஞானபூர்வகம் கருமயோகம் தியானயோகம் ஆதல் பயின்றுநின்ற புருடனே கிருதமெனப் பெயரியவனாவன். இவ்வாறாகவே சர்வயுகங்களினுமே நான்கு வகையாயபுருடர்கள் சம்பவிப்பார்கள். ஆகலின் எல்லாயுகங்களினுமே ஞானமார்க்கம் உளதேயாம், ஆகவே யோகத்

திற்கு ஆத்தியந்திக உச்சேதம் ஒருகாலத்திலும் உண்டாவ தேயில்லை. அவழுபுருடாபிப் பிராயத்தாலேயோ எப்போது மேயுளதேயாம், இவ்வாப்பிராயத்தாலே கடையுகத்தில் யோகம் நஷ்டம் ஏன்னுமிது வியாக்கியானிக்கத்தக்கது. ஹேமஹாபாஹோ! என்பது சம்போதனம், பெருந்தோளாற் புரந்தாளல்போல், இப்பெரிய விடயத்தையும் புரந்திடுதி யென்று விளித்தருளியதாம். (7)

(அ - கை.) ஸ்ரீவிஷ்ணுவாதிகட்கு ஸ்வப்ரமவத்தானே ஸ்வ அபின்னத் தன்மையையேயருளல்:—

அ. அஹமேவ பரோ ப்ரஹ்மா மஹாருத்ரஸ்த்வஹமேவ ச
அஹமேவ ஜகத்ஸர்வம் ஸ்தாவரம் ஜங்கமஞ்ச யத்.

க. யானேய பரம்பிரமா வெனவாகுவேனும்
யானேமகத்தாகிய ருத்திரனாகுவேனும்
வானே முதலாகியதாவர சங்கமங்கள்
யானேசகமியாவையுமென்றுள நன்று தேர்வாய்.

வி. அகமேவ = யாமே, அபரோப்ரஹ்மா = அபரச் சதுர்முகனினும் மேன்மைமிக்குளேம், ஈண்டுப் பிரஹ்மா ஹிரண்ய கருப்பராம். மகாருத்ரோ = மகாப்பிரளயமடை விக்கும் அவ்யாகிருதமாம் "ஆயினவ்வியாகிருதமமர்ந்தது" என்பதாதி சுருதிப்பிரசித்தமாய அது, அகிவேவச = யாமே யாம்; சமஷ்டியானந்தமயமெனப் பெயரியது. ஸ்தாவரஜங்க மஞ்சயத்ஜகத்சர்வம் = ஸ்தாவர ஜங்கமரூபமாகிய எல்லாவுல கமும், அகமேவ = யாமேயாம். (8)

(அ - கை.) இங்ஙனந் தமக்குப் பொதுவாகச் சர்வான் மத்தகைமையைக் கூறியருளி மத்சியகூர்மாதிகளாய தமது விசேட அவதாரங்களையும் அருளல்:—

ஸ. அஜோऽவ்யயோऽஹம் பூதாத்மாऽநாதிரீச்வர ஏவ ச ஆஸ்தாய த்ரிகுணாம் மாயாம் பவாமி பஹுயோநிஷு.

க ஆதலற்றதும்போதலுமற்றதாம்நியற்றது நேதியிற்றற்றது; பூதவத்து வேனும்படிநின்றது பூன்றவீச்சுரனென்றிடு நன்றியா, மோதுமுக்குணமாயையை யொன்றியே யுண்மை போலெவரும் தொழுவேகிளர், நீதிமச்சியமாகு பல்யோனியாயினேருவேமெனநீ நினைமன்னனே.

வி. அஜ=உற்பத்திரகிதமும், அவ்யய:=அபக்ஷயசூனியமும், நித்தியசத்திய சித்தசொரூபத்தானே பூதாத்மா முன்னமே உள்ளவடிவுற்றதும், அநாதி=காரணமில்லாததும், காரணசூனியத்தன்மையானே அஜமெனப்படுவதும், மாறாயினே அதற்கு அதற்கு அயல் அயற்காரணமென அநவஸ்தையாம், ஈஸ்வர:=அந்தர் யாமியும், ஆகிய, அகம்=யாம், த்ரிகுணாம்=சத்வரஜஸ்தமோ குணமயீயாய, மாயாம்=அவித்யாசக்தியை, ஆஸ்தாய=இனிதுபற்றி, பஹுயோநிஷு=மத்சிய கூர்மாதிகளில், பவாமி=ஆவிர்ப்பவிப்பேம். ஏவ, ச, என்பன பாதபூரணங்கள். (9)

(அ - கை.) எக்கால் ஆவிர்ப்பாவித்தருளுவீர் என்னுமபேக்ஷையிற் கூறியருளல்:—

ஸ. யதா யதாऽதர்மவ்ருத்திர்தர்மஹ்ராஸஸ்ச த்ருச்யதே ஸாதூன் ஸம்ரக்ஷிதும் துஷ்டான் தாடிதும் ஸம்பவாம்யஹம்.

க. தருமந்தலைசாய்ந்திடத் தீமைதழைந்தெழுங்கால்
மருமந்தெரிமாந்தரைக்காத்தூ மகிழ்பெறுத்த
வருமந்தரையந்தரை வாட்டவும் வந்து வந்து
கருமந்திகழுந் தரையிற்பவங் காட்டுவேமால்.

வி. அதர்ம உபசயః=பாவவிருத்தி, தர்ம அபசயః= அறங்குறுகல், ஹி=உம்மை, அவ்விரண்டும், யதாபவேத்= எப்போதாமோ, அப்போது, அகம்=யாம், சாதூந்=தரும அநுஷ்டானமுடையவரை, சம்ரக்ஷிதும்=நன்கு காத்தற் பொருட்டும், அவ்வாறே, துஷ்டாந்தாந்=அதர்மரதர்களாய அவர்களை, அத்தும்=விழுங்கும்பொருட்டும், சம்பவாமி= அவதாரங்களைக் கவர்வேம். அதர்மஉச்சேதமும் தருமஸ்தா பனமும் எமதவதாரப்பிரயோஜனமென்பது பொருள். துஷ்டாந்ததா என்றும் பாடம்.

ஸ்ரீ பகவற்கீதை.—சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநானுவாவிவ்வுலகுபடு மழிதுயர்தீர்ப்பதற்காக, மேவா து நின்றேயென் மாயையினுன் மெய்யேபோ, லோவாது பிறந்திடுவே னுகந்தோறுமுகந்தோறும், 10

(அ - கை.) நுதலியருளியதையே வெளிப்படுத்தியரு ளல்:—

ரு. உச்சித்யாய மிவயம் ஸமூலம் ஹானயாமிவ, ஹரி ஊஷ்டாம் ஸம்பெருத்யாம் ஸ்நா நாமீ லாகரோஹ.

க. கட்டவினைக்குழுக்கமழுங் கடியவரை மிகக்கடிந்து
மிட்டிமுதலறந்தலைக்கொ ளினியவரையினிதிருத்தி
துட்டரையுந் தயித்தியராந் தூர்த்தரையுந்தொலைத்
[தோட்டி
யிட்டமுடன் பலலீலையியற்றிடுவன் மகிழ்வானே.

வி. அதர்ம=பரதார, பரதிரவிய, பரத்துரோக, ஆதி ரூபம் அதருமம், செய்யாநின்ற கீழ்மக்களின், நிசயம்=சமூ கத்தை, உச்சித்ய=மிகமிகவும்கெடுத்து, அதாவது மூலத் தோடும் வெட்டியெறிந்து, தர்மம்=யாகதானுதியனுஷ்டான

மார்க்கத்தைச் சமதமாதியோடுங்கூட நன்றாக இனிது நிலை பெறுத்தாநிற்பேம். சகாரம், சமுச்சயம், தர்மப்பிரதிஷ்டை யேதுவதாகக்கலர்களின் உச்சேதம் பூர்வம் அனுஷ்டிக்கத் தக்கதாமென்றருளல்:— ஹந்மிஎன்பதாதி: துஷ்டாஃ=நற் குலத்திற்பிறந்தும் அதர்மம் புரிபவர், தைத்யா=மிலேச்ச பாஷண்டாதி வேதமாத்துவேடியர் இன்னோரன்னயாவரை யுமே. ஹன்மி=கொல்வேம், அதன் பின், நாநாலீலாகரஃ= தர்ம மார்க்க ரோசகங்களாயச்ரிதங்கள் குருதேவதா அக் கினிபஜனங்கள், என்பவற்றின் கருத்தா, முதா=மகிழ்வா னேயாவேம். எங்ஙனம், சிபி தம்பாற்சரணாகதமா யடை வுற்ற கபோதத்தைக் காப்பான் சேனத்தின்பொருட்டுத் தன் மாமிசங்களை அறுத்தெடுத்தகமகிழ்வுடன் அளித்தனனோ, கிலேசத்தோடுமல்லவோ, அங்ஙன மென்றறிக. சிபி பெரு மையை ஸ்ரீ இராமாயணங் கூறுமாறு:—இன்னுயிர்க்கு மின் னுயிரா யிருநிலங்காத் தாரென்று, பொன்னுயிர்க்குங் கழல வரை யாம்போலும் புகழ்கிற்பாம், மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்கருத் தன்னுயிரை மாறாக வழங்கினனால். புறவொன்றின் பொருட்டாகத்திலை புக்க பெருந்தகை.

(அ - கை.) அவதாரப் பிரயோஜனத்தை யருத்தத் தால் உபசங்கரித்தருளி, அதன் ஞானப் பிரயோஜனத்தை யும் அருத்தத்தோடு கூடிய தானேயருளல்:—

சு. வண-lாஸ்ரூோந்நீந்நாயடுந்நாஉயெஷஹாரடு வயூரக்ஷ, ஸாவம்யோவெத்திஸிம்ஹடுதீஜூஜீவ்யாயமெஜ யமெஜ. (12)

தத்தக்ஜூவஹீய-lம்வஜோடுவம்ஸிோஸதஃ, தூக்ஷ ஹம்ஜதாஷாஜிம்நவாநஹ-lடுஃஸஜாயதே (13)

௯. வருணவாச்சிர மங்களை மாமுனிக், கருணையாளரை வாளரைக்காப்பஞன், தருண மிக்கதி ரூபமுந் தாங்குவல், தெருணிறைந்தவென் றிவ்வியமாகியே.

உகமுகந் தொறுந் தோற்றுமென் னுவகைலீ லையையும், தருமத னதன் வினையொடு வீரியந் தமையும், தொகு நெறி யினிலி னணமென் னுருவையுந் தொடர்வான், அகமம தைவிட் டவன்பிறப் பிணையினி யடையான்.

வி. வர்ணாந்=பிராஹ்மண க்ஷத்ரிய வைசிய சூத்ரர்களை வர்ண வென்பது பிறவற்றிற்கும் உபலக்ஷணம். ஆஶ்ரமாந்=பிரஹ்மசாரி கிருஹஸ்த வாநப்பிரஸ்த யதிகளை, முநீந்=முனிகளை, என்றது, "யாவன் வேதாந்தங்களாலறிவன் அவனதிவருண சிரமியாவன்" என்னுஞ் சாஸ்திரப் பிரசித்த வருணாசிரம அதீதர்களாகிய ஜடபாதாதி போன்றவர்களை, சாதூந்=வர்ணாதிகளிலேயே பரகாரிய சாதகர்களை உபகார்த்தைக் கருதாமற் பரோபகாரபரர்களை, பாலயே=காப்பேன், பகுரூபத்ருத்=இருஷபதத்தாத்திரேய சநகவசிஷ்டாதிரூபதரன், ஏவம்=இங்ஙனம்=லீலாப் பிரயோஜன உபசங்காரம், சம்பூதி:=அவதாரங்களை, மமதிவ்யாயுகே யுகே=யுகந்தோறுந் தோற்றும் எமது திவ்யமான இவற்றை,யோ ஏவம் வேத்தி=யாவன் இவ்வண்ணம் உணர்வனே, தத்தத்கர்மசவீர்யஞ்ச மமரூபம் சமாசத:=அவ்வக் கருமத்தையும் சாமர்த்தியத்தையும் சுருக்கமாக எமது உருவத்தையும், யாவன் இன்னணம் உணர்வனே, அதாவது கூறிய முறையே அலௌகிகமாய் எமது நழுவாத ஞானைசுவரியாதி சக்தியுடையதாகி அதிவிசுத்த சத்துவமய ஸ்வமாயாவிலசித திவ்யமங்கள சரீரக் கிரகணத்தையும் துஷ்டசிக்ஷண சாது ரக்ஷணரூப திவ்ய கருமத்தையும், தருமசம் ஸ்தாபன ரூபப் பிரயோஜனத்தையும், யாவன் உண்மையா யுணர்

வனோ,த்யக்த்வா அகம் மமதா புத்திம் கபுநர்பூஸஜாயதே: அவன் அகந்தை மமதை மதியாதியைவிட்டு மறுபிறப்பை அடையான், நிரகங்காரத் தன்மையர்னே ஈண்டே முக்தனு வன், புனர் ஜன்மத்தை அடையான், என்பது பொருள். அவன் வர்த்தமான தேகத்தை வீழ்த்தி மறுபிறப்பை மருவான், மற்றோ எம்மையே அடைவன்; எமது திவ்ய ஜன்ம கர்மங்களின் உண்மையுணர்ச்சியினுனே சமஸ்த பாவங்களும் போக்கப்பெற்று, இப்பிறப்பிலேயே எம்மைப் பற்றி எமது அனுக்கிரகத்தானே யடையப்பெற்ற தத்துவ விஞ்ஞானத்தை யுடையவன் பரமேசுரராகிய எம்மையே யடைவன் என்பது கருத்தாம். ஜடபாதர் அதிவர்ணு சிரமியாயிருந்தார் என்பது ஸ்ரீமத் பாகவதத்திற் பிரசித்தமாம்:—

வினை விளைவின்றி நின்றோன் வேதியர் பணித்தவண்ண
நனை விளை டொங்கர் வேலி நளிபுனற் பழனங்காத்துட
பனைவளைத்தடக்கை வேழம்படர் வரையருவிச் சாரற்
றினைவிளை புனங்கள் காத்துத் தெள்ளிதி னொழுகுநாளில்

அழற்கதிர் பகுதிவெம்மை யரசுவீற் றிருக்கும்பாலைக் கிழத்திகொள் பலிக்குவந்து கிடைத்தன னிவனென்றெண் ணித், தழைத்தெழு மூவகையாலோர் வேட்டுவத் தலைவன் பற்றி, வழித்தனன் குருதிச்சாந்த மலர்த்தொடை சூட்டி னனே.

இன்னமுதொழுகுமாலை யிளம்பிறைக்கண்ணி சூடுங் கன்னிமுன் னெய்தக் கன்னி கட்கடைகனல நோக்கி, யன் னவன் றன்னைக்கொல்வா னமைந்தவர் சென்னிசிந்த, மின் னுமிழ்ந்திலங்கும் வாளால் வெய்தினிற் றுணித்து வீழ்த்தான்.

நிறைந்தபே ரொளியை நெஞ்சி னினைத்துணர் தூயோன் றன்னை, யெறிந்திட வுற்றுரொள்வா ளேறுபட் டிறந்துளாரே

லறந்தலை மணந்து நின்ற வறிவினர்க் கிறுதி யெண்ணு, மறந் தலை மணந்தார் வாழ்தலுண்டு கொன்மதிக்குங் காலே.

ஊரனுடை யொருவனிவ்வா றுருழுகுநா ளொலி நீர் வேலி, யிருநிலவலயங் காக்குமாருக (ரகுகண) னென்னும் வேந்தன், மருளறுஞான மெய்தமாமணிச் சிவிகையூர்ந்து, கருணைபாய் கமலச்செங்கட் கபிலர திருக்கை செல்வான்.

முனிவொடு விழைவிலானை முழுவலிமாக்கள் பற்றிப் புனைமணிச் சிவிகையாங்குப் பொறுக்கெனப் பொறுத்த லோடு, மினிதினிற் பொறுத்தியென்னே யிளைத்திருந்தாய் கொலென்னக், கனியிதழ் விண்டுகூறுக் கட்டுரை கூறலுற் ருன்.

இளைத்தலும் பருத்தலு மியாக்கையின் குணமற் றன்றே, கிளத்திடி லுயிர்க்கு முண்டோ வென்னலுங்கேட்ட வேந்த, னுளத்தினிலடுக்க மெய்தியூர்தி நின் றிழிந்துவல்லே, யளித்திட வேண்டுமென்று வமலனைத் தொழுது சொல் வான்.

என்பனவாதியா லறியலாம்;

இருடபாதியவதாரங்கள் ஸ்ரீமத் பாகவதத்திற்காண்க.

(அ - கை.) மறுபிறப்பை யவனடையான் என்றருளப் பெற்றது. ஆண்டு எவ்விதத்தினர் பிறப்பை யெய்தார் என ஆசங்கிப்ப அருளல்:—

௬. நிர்மாநமோஹா ஜிதஸங்கதோஷா அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா:, த்வந்த்வைர்விமுக்தா: ஸுகது:கஸம்ஜ்ஞைர்கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத்.

௬. ஈகையுற்றுச் சமிற்றுச் சினமிற்றிங், கோகையுற்றெம் பரனைமை யொன்றினர், சோகமற்றுணர் வின்றவத்தூயவ, ரேகமற்றவ ரெய்தின ரெம்மையே.

வி. ஈஹா=சேஷ்டை=கருமேந்திரிய வியாபாரம், அஃ தற்றவர் நிரீஹாராவர், அதன்கண்ஹேது:—நிர்ப்பயா ரோஷா என்பது, யாவன்றான் ரோஷத்தானே அயலானை இம்சிக்கின்றனனோ அவன் அவசியம் அச்சத்தையடையா நிற்பன். இத னையே எதிர்மறை வாயிலாகத் தந்தைபொருட்டு ஸ்ரீ பிரஹ்லாதர் கூறியுள்ளார்.—"எவன் பிறற்கெண்ணி லன்றனக் கெனுமறம், பவமுறு காரண பாவமாதலின், உவமையிலை நீயுவந்து கேட்டியா, லவனைப்பா பாகம மணுகலில்லையே" அரோகூத்தன்மைதான் யாஙனமா மெனின்? மத்பரா வெனவாம்=காமாக் கிராந்தனன்றோ காமவிகிதகுரோதத் தானே ஆகுலமாற்றுவன், எம்பரமாயினனோகாமாதிகளானே மறைபட மாட்டான் என்பது பொருள். சிலரோ ஸ்திரி யாதிபரராய் இராஜாதி வ்ய பாசிரய பரராயும் ஆவர், இவ ரோ, எமது பரராய் எமதேகவ்ய பாசிரயராயும் ஆவர் இத னானே விஞ்ஞான தபஸா சுத்தா:=விஞ்ஞானம்=நன்றான ஆத்ம தத்துவப் பார்வை, அதுவே தவமாம், "எவற்கு ஞானமயம் தவமென" முண்டக சுருதி மொழிதலான், அதனானே தூயோர், சர்வோபாதிப் பிரஹாணத் தானே நீருமலர், இவ்வகையினர், அநேகே=வெகுபேர், மாம் உபாகதா=எம்மை யடைந்துளார், தன் மாத்திரமாகிய சோதித தற்பதார்த்தத்தை அஞ்ஞான அபகம மாத்திரந் தானே உபாகதராய் எம்மோடு ஐக்கியமடைந்துளார், கிரா மப் ப்ராப்தி போலும் தற்சம்பந்த ரூபமல்லவாம், "பிரஹ்ம பூதோ அதிகச்சதி" என்னும் ஸ்மிருதியும், "பிரஹ்மமே யாயப் பிரஹ்ம மேய்வன்" என்னும் சுருதியும், இருத்தலின் "பெற்றிடும் வேற்றுமைப் பெற்றிஞானந்தான், முற்றினு மிற் றது மோசமான பின், வெற்றி செய்சிவத்தொடு முயிர்க்கு வேற்றுமை, யற்றதைப் புரிபவர் யாவர் தாங்கொலோ" என ஸ்ரீ விஷ்ணு புராணமும் விளம்புகின்றது. (14)

(அ - கை.) யாவர் தாம் அநஷ்ட அஞ்ஞானரோ அவர்க்கும் அகமேக்தி யென்றருளல்.

ஸ்ரீ. யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் | மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ: ||

க. எந்த வெந்நீநற் பாவத்தி னிலைமை,வந்தனைபுரி வார் நரவாரியர், சிந்தனைப்படி யேபயன் சேர்ப்பமாங், கந்தவர்க் கெனி னும்புட மார்ப்புணோம்.

வி. யேநயேநஹி பாவேநசம்சேவந்தே நரோத்தமா:= எவ்வுத்தமபுருடர், எச்சாத்விக பாவத்தானே துறக்க வேட்கையராகி மக முதலியவற்றானே யெம்மைப் போற்று கின்றனரோ, இராஜசத்தானே இகலோக போகார்த்திக ளாய்க் காமிய கருமத்தானெ யெம்மைப் பஜிக்கின்றனரோ, தாமசத்தானே சத்துரு வதாதியை விரும்பினராகி ஆபிசா ரிககருமத்தானே யெம்மை வந்திக்கின்றனரோ; ததாததா= அவ்வாறு அவ்வாறே அவ்வப் பாவாநுரூபமாய, பலம்= பிரயோஜனத்தை, தேப்ய:=அவ்வதிகாரிகள் பொருட்டு, ப்ரயச்சாமி=அடைவிப்பேம். அவ்யய:=அவிக்கிரிய, உயர்வு தாழ்வான கருமங்களை யாற்றும் அவர்களிடத்தில் இராகத் துவேஷ சூனியமாய் மேகம் போலச் சர்வ பாவாநுக்ராக கித்தன்மையானே யென்பதாம். எனவே, யாம் விகாரமற் றுளே மென்பது லோகப்பிரசித்தமே. இக்கருத்து ஞான வாசிட்டத்தும்:——ஒருவருக்கு நாமொன்று நல்கல முணர் வின் வண்ணமே உயிர்களெய்துமாற், கருதி முந்தி நீகதி விரும்பினுய் காதலித்த சிற்கண்ணளித்தனம். பெருகு காத லாலிந்த வண்ணமிப் பேதை வேண்டவிப்பேறு நல்கின, ஹிரு தயத்திலே நினைந்த தெய்திடு மெமதுபார்வையா லியார்க்கு மென்றனள். என்பதாகக் காணலாம். இதனாலும் மேற் சுலோகங்களினாலும் திருக்கருத்தை ஸ்ரீ பகவானும் இங்கு

ளருளுவர்;—இவ்வகை யென் செயலதனை யறிந்திந்த விடும் பையினின், றுயவகைய நெறிபெற்றுங் குயர்ந்தாரை யுரைப் பரிதால். மெய்வகைய திறுவென்ன வேண்டியவர் வேண்டி யன, அவ்வகைய தெய்வமுமா யளிப்பேனும்யானேகாண். ()

(அ - கை.) இங்ஙனம் சம்சாரிகளின் முக்குண முண் மையை மொழிந்தருளி, நிஸ்த்ரை குண்ய நெறியையரு ளல்:—

சு. ஜநாஸ்ஸ்யுர்ம்மதீயமார்க்கம் ராஜந்நிதரே காமவிவர்ஜிதாஸ்ததா யஸ்வேஷ் வ்யவஹாரம் தே குர்வந்தி த்வேஷிணாம் நாத்ர ஸம்ஶய:

க. ஆசையற்றவ ரரசகேளருநெறி யொழுகிக், காசினிக் கணெங் கழல்வழி கடைப்பிடித் திருப்பர், ஆசதின்றிய வழி யையே யன்பருக் கருள்வர், மாசதொன்றிய மற்றவர் தமை மதித் திலரே.

வி. ஹேராஜன்=வரேண்ணியனே! இதரே=திரிவித காமனை ரகிதராகிய, ஜநா=உலகர், மம=நிஸ்த்ரைகுண்ய மாய எமது, மார்க்கம்=சமதமாதியநுஷ்டானரூப நெறியை அநுயாயிந:=குறியாக் கொண்டு செல்வர், ஸ்யு:—ஆவர்; ததைவ=நிவிருத்தியநுரூபமாகவே,ஸ்வேஷ்ட=அன்புடைய வரிடத்தில், வ்யவஹாரம்:=தத்துவ உபதேசாதிகளை,தேகுர் வதே=அவர்செய்வர், அந்யேஷு = அன்பிலாதவரிடத்தி லோ, உபேக்ஷாதிகளையும் ஆற்றுவர்.

(அ - கை) மீண்டும் காமிகளின் மதத்தை அநுவதித் தருளுகின்றார்:—

சு. காமினைவ தாஸ்யம் திவாசம் ஸம்ஸார்ணாம் ஹம், ப்ராப்நுவந்தி ஸதா ஸர்வம் ஸம்ஸாரிகார ஜாம்.

க. தேவதைக் கன்பினைச் செறியவாற்றுவார, ராவவல்
வினைப்பயனசை யீர்குவார், மேவுவரவரிவண் விரைவினல்
வருஷ,காவருங் கருமங்கள் காணுமாலையே.

வி. குர்வந்தி தேவ்தாப்ரீதிம்=தேவதைக்கன்பைச்செய்
துவாழ்வர், வாஞ்சந்தகர்மணாம்பலம்=வினைகளின் பயனை
யே விரும்பியரும்புவர், ப்ராப்நுவந்தி இஹதலோகேசீக்ரம்=
அவரிவ்வுலகினிலடைகுவர் விரைவில், சித்திம்ஹிகர்மஜாம்=
அவமுறுகருமஜமாஞ்சித்தியையே. தியானஜன்னியமான சித்
தியானது சிரகாலங்கொண்டு சாதிக்கத்தக்கதெனக்கருதி
அதனையுபேக்ஷித்து, விரைவிற்பயன் விளையும் கருமஜன்னிய
சித்தியைக் காமிகள் காமுறுவர் என்பது திருக்கருத்தாம்.

(அ - கை) ஆயின் என் முமுக்ஷுவானே கருமம் தியா
கிக்கத்தக்கதேயா? வென ஆசங்கிப்பவிடையருளல்:—

சு.வ_ர்_ணாஸ்ரோஹியோவண-ஷாமுஜ:ேஹ_கயெஹாமவஹு_கஃ,
கூஉ-ஷாமஸ்_குஸரூ மெவஸுகூ_ாஷ்ரு-க்_ஷுெமாகெஃயா_ரூஷ.

க. வருணங்கணான்குமெம்மால் வயங்குசத்துவமேமுன்
னுப்ப, பொருணிகழ்குணங்களாலும் புரிவினைத்தொடர்பினா
லும், தெருணனிதரவேயாக்கத் திகழுவே பெற்றவாகும்,
அருணிறைநிருபவிந்தவகிலத்திலெம்மினானே.

வி. ஹேந்ருப=ஹேவரேண்ய, ஹி=பிரசித்தம், சத்வா
ரோவர்ணா=பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள்,
இரஜ: சத்துவ தமோங்கிசத்தானும், கருமாங்கிசத்தானும்
சம்ஸ்ருஷ்டா=நன்றாக எம்மாற் சிருஷ்டிக்கப்பெற்றார்கள்.
அம்சத:=அங்கிசத்தான். கர்மாம்சத என்பதனானே முற்ப
வித்தாய அவ்வவ்வர்ணத்துள்ள கர்மபீஜாநுசாரத்தானே
யும், அவ்வவ்வர்ணகதகுணஸ்வாபாவ அனுசாரத்தானேயும்,
சிருஷ்டிக்கப்பெற்றனவெனவாம். அங்ஙனமன்றே:—பிராஹ்

மணர் சத்துவப்பிரதானர் சமம் தமம் தபம் சௌசம் என்பதாதியான இயற்கையானகருமத்தோடுகூடியவர் சிருஷ்டிக்கப்பெற்றனர், அவ்வாறே க்ஷத்திரியர் சத்துவங்குறைந்த ரஜோகுணப்பிரதானர் சௌர்யம் தேஜஸ் திருதி தாக்ஷ்யம் என்பதாதியான இயற்கையானகருமத்தோடுகூடியவர்சிருஷ்டிக்கப்பெற்றனர், அவ்வாறே ரஜப்பிரதானத்தாற்றமக்குறைவாற் சத்துவமில்லாமையால்வைசியர் கிருஷிகோரக்ஷணம் வாணிஜ்யாதியான இயற்கையான கருமத்தோடுகூடியவர் சிருஷ்டிக்கப்பெற்றனர், ஆகலின் அவர் தம் உற்பத்தி சிஷ்டம் கருமம் தியாகிப்பான் முடியாத காரியமாம், என்பது கருத்து. மிருத்யுலோகே=மண்ணுலகில் என்பது அர்த்தப் பிராப்தமாம், மீளவும், மயா=எம்மால் என்னும் வசனம் அந்தர்யாமித்வ சர்வேசுவரத்வ அவ்வுருவபேதஞாபனப்பொருட்டாம். அங்ஙனமன்றோ:—"இவன் சர்வேசுரன் இவன் சருவஞ்ஞன் இவனந்தரியாமி யிவன்யோனி, இவனேயெவைக்கும் பூதங்கட்குமே, பிரபவ அப்யயங்களெனப்படுவன்."

(பொருள்) பிராஞ்ஞனுக்குஆதிதைவிகமாய அந்தரியாமியோடு அபேதங்கவர்ந்து விசேஷஞாந்தரம் காட்டல்:—இச்சொரூபாவஸ்தனே சர்வேசுவரன், சாதிதைவிகபேதஜாதமெவைக்கும் ஈசிதாவாவன், சொரூபாவஸ்தத்வம் உபாதிப்பிராதான்யமகற்றிச் சைதன்யப்பிராதான்யமாம், அன்றுயின்றேசுவாதந்திரியங்கூடாமையின். நையாயிகாதியரோ தடஸ்தத்தகைமை ஈசுரர்க்குத் தாபிப்பர், அஃதொவ்வாதாம், ஈசுரனுக்கசாமஞ்சசியத்தான் என்னும் வையாசிகநியாயமுரண்பாட்டான், கூறியமுறைகொண்டு ஜாத்யந்தரபூதமிலதாம் அயலார்கட்கேபோலும். சுருதிவிரோதத்தானும் ஈசுரனுக்குத்தாடஸ்தியம்=கேவலநிமித்தத்வம், நிலைபெறுத்தல்கூடாதாம், ப்ராணபந்தனம்ஹிசொம்யமந: என்பது சுருதி=பரப்பிரமபந்தனம் பகர்தருமுயிரே, உண்மையிற்பேதமுயிர்க்

கிலேயுரக்கும், பிராஞ்ஞனுக்கே விசேஷணாந்தரம் கூறல்:—
இவனேயன்றோ சுருவத்தின் சருவபேதாவஸ்தன் ஞாதா
வெனு இவன் சருவஞ்ஞன், அவதாரணம் பொருந்தாதாம்
ஸ்ரீவியாசபராசராதி மற்றையர்க்கும் சருவஞ்ஞத்வப்பிர
சித்தியிருத்தலின் என்னுங் கடாவை விலக்கச் சருவ என்ப
தாம். அந்தரியாமித்வவிசேஷணாந்தரத்தைத் தெளிவித்தல்:-
இவன் அந்தரியாமி, உள்ளே புகுந்து சர்வபூதங்களின் நியந்
தாவுமிவனே அன்னியன் எவனுக்குமே உள்ளே அநுப்பிரவே
சித்தலினும் நியமனஞ்செய்தலினும் ஆற்றலின்மையின் அவ
தாரணமாம். முதலியவிசேஷணத் திரயத்தை ஹேதுவா
கக்கொண்டு பிரகிருதஞகிய பிராஞ்ஞனுக்குச் சர்வஜகத்கார
ணத்தன்மைவிசேஷணாந்தரம் விளம்பல்:—இதனனே இயம்
பியபடியாய பேதசகிதஜகத்தை யீனுதலின் இவன்யோனி
யெவைக்கும், இயம்பியபடியாய=ஸ்வப்நஜாகரித ஸ்தானத்
வயப்ரவிபக்தமாய, பேதசகித= அத்தியாத்ம அதிதைவ அதி
பூதபேதசகித; நிமித்தகாரணத்வநியமத்தினும் பிராசீனங்க
ளாயவிசேஷணங்கள் நிர்வகிக்கப்பெறலாம் எனஆசங்கிப்ப
"பிரகிருதியும்(உபாதானமும்)பிரதிஞ்ஞாதிருஷ்டாந்த அநுப
ரோதத்தான்" என்னும் நியாயத்தானே நிமித்த உபாதானங்
கட்குலகில் வேற்றுமையிலதாம் என்பதாகவே நியமமாகச்
சித்தமாம் ஆகலின் விசேஷணாந்தரம்என விடைதரல்:—எத
ஞலிங்ஙனம் பிரபவாப்பியயங்களும் பூதங்கட்கிவனேயாவன்
பிறத்தற்கேதுவாய்ப் பிரபவமாகும், அடைதற்கிடனுயப்
பியமாகும், இவை பூதங்கட்கு ஓரிடத்தில் உபாதானமில்
லாது சம்பவிக்கத்தக்கனவரிகாவாம். என்னுமிச்சுருதியில்
சர்வேசுவரத்வசர்வாந்தர்யாமித்வங்கள் தனித்தனியே கேட்
கப்பெறுதலின், பெறவே, அந்தர்யாமித்வ அங்கிசத்தானே
அவ்வப்பிராணிகத கர்மபீஜாநுசாரத்தாற் பர்ஜன்யமென்
னக் காரியஞ்சிருஷ்டிப்பேன், சருவேசுரத்வரூபத்தானே

அவ்வக்குணும்சாநுசாரி த்வாங்கிசத்தானே நிக்கிரக அநுக்கிரகங்களுஞ் செய்யாநிற்பேன் என்பதுபொருள். அவ்வாறே:—"எவனெலாப்பூதங்களுள்ளேயியக்குவன்" "இவனிற்பயந்துகாற் றியங்காநிற்கும்" என்பனவான மறைகளுமுளவாம். நிருபசப்தசம்போதனன் வருணாசிரமதருமமுறையிற் பிரஜைகளைப்பாலித்தல் சுவதர்ம சூசகார்த்தம்போலும்.(18)

(அ - கை.) இத்தருமத்துவயமும் எமதுமாயிகமேயாம் சுவாபாவிகமாகாதாம், என்றருளல்:—

சு. கர்த்தாரமபி மாம் தேஷாம் கர்த்தாரம் விதுர் புதா:, அநாதிமந்தோ ஜீவாஸ்ச கர்மபந்தேந ஜந்மந:.

க. அவைக்கெனைக்கருத்தனாகவறியினுமறிஞர்மெய்யோ யுவக்குறு மகர்த்தனாக வுணருவ ராதியில்லேன், பவக்கடல் கடத்துமீசன் பகரழிவில்லனேயான், சுவைக்கருமஜமேயான குணங்களாற் றொடர்பொன்றில்லேன்.

வி. எங்ஙனம் அயக்காந்தமானது, அபிநவசக்தியினானே லோகபந்தனத்தின் கர்த்தாவாயிருந்தபோதினும், வியாபாரமில்லாத் தன்மையானே அகர்த்தாவேபோலும், ஆமோ; அங்ஙனம், மாம்=எம்மை, தேஷாம்=அவ்வருணாதிகட்கு, கர்த்தாரமபி=பிரயோஜககருத்தாவாயினும், சொரூபமாய் அகர்த்தாரம்= அகருத்தாவாகவே, புதா:=பண்டிதர், விதுர்= அறிவர். இதன்கண்ணே ஹேதுக்களையருளல்:—அநாதிமென்பதாதி. ஆதிமந்தரேயாய ஜீவர் முன்னுளவாய கருமபத்தத் தன்மையானே அநீசுரராய் மரணதருமியராய் மிருதரர்யும், செய்தவினைக்கீடாய் இயம்புவதென்னே சுவர்க்கத்துக்கேனும் நரகத்துக்கேனும் சென்று மழைவாயிலாக அன்னன்மத்தன்மையையடைந்து மீளவும் சுக்கிலசோணித யோகத்தானே ஜன்மமடைவர், மீளவும் கருமம்புரிவர்என இச்சம்சார சக்கிரம் அல்லும்பகலும் சுழலாநிற்கும். யாமோ, அதி

னினும் விபரீதமாதலின் சமுசாரியாகேம் என்றருளல்:— அநாதிம்=ஜன்மஹீனமாவேம், இதனுனே, ஈஶ்வரம்=அநிருத்திரம்வைபவத்தோடுகூடியுள்ளேம், நித்தியம்=நாசமற்றுளேம், இதன்கண்ணேது:—கர்மஜைர்குணைர்லிப்தம்என்பதாம் = கர்மஜமான ஐசுவரியத்தானன்றோஜந்துபந்தமுறுகின்றது, ஈசுவாருக்கோ அகர்மஜமாயமாயிக ஐச்வரியமாகலின் பந்தஹேதுவாகாதாம்; கர்பஜகுணங்களானே பற்றுறமாட்டேம்' இது வார்த்திகத்தே முக்தனைப்பிரகிருதித்து இயம்பப்பெற்றுளது:— சிவத்தகைமையதனுனே சீவனுக்குமயலாலஞ்சீவப்பான்மை,விவத்தையறுதலினுலே வசித்தகைமைமுதலியவாம்விபுதன்மங்க, ளவத்தை யுறுவனவாகுமாதலினலிவ னீசுவரனேயாவன், நிவர்த்தியுறுதலிற் சீவதருமங்களெவன்றனக்கு நிகழ்ந்திடாவே.

அநிவிருத்தமாய சிவதருமங்க ளசர்மவர வாதலானே, பொதுவிலுறை யீசனுக்கும் புத்தருக்குந் தம்மதியாற்பொலியாநிற்கும், விதவவைகளதனுனே யீசனுக்கிங்குளவாக வியப்பொன்றின்றும், திதியுறவே திகழ்ந்திடினுமீசனுறு தருமங்கடெளிவதரயே.

மாயிகத் தன்மை மருவலிற் றன்மங்க ளீசன்
போயதன் மங்களென்னவே போத்தியனுமன்
சேயதன்மையில் வீட்டினைச் சேருதற் பொருட்டு
ஆயவீட்டி னின்மிகமிக வவாவுறு பவரால்.

இவ்விருசுலோகப்பொருளை ஸ்ரீகண்ணபிரானும் கரைந்தருளியுள்ளார்:—செயலானுங் குணத்தானுஞ்செலநானுகுலமாகி, வியலான்முன்படைத்தேனு னிப்பொழுதுங் காப்பேனுன்,மயலாயவினைப்பயனின்மனம்வையேன்மற்றதனு, லயலாயேயிருக்குமெனக்கமைவயறிவாரெனையனையார்.நானுகுலமென்

றது உபலக்ஷணமாம், சாதுர்வர்ணயப்பிரமுகமாய அகிலப் பிரஹ்மாதிஸ்தம்பபரியந்த ஜகத்தையும் ஈசுரரே சிருஷ்டித்தார் என்பதாம். விடமவியற்கைவாய்ந்த விசுவத்திற்கு விவகாரதிருஷ்டியினுனே கருத்தாவாயினும், பரமார்த்ததிருஷ்டியினுனே பரமேசுரர் அகருத்தரோவர், ஆகலின் வைஷம்மிய நைர்க்ருண்யதோடங்க ளடைவுறுவாம், விடமஜகத்ஸ்ருஷ்டருத்வத்திற்குப்பரமேசுரரிடத்தில் வாஸ்தவத்வமுளதாயின் அன்றோ அதனுலாக்கப்பெற்ற அத்தோடங்களடைவுறும், அதுவே மித்தையாமென அதனுலாக்கப்பெற்ற அத்தோடசங்கை யாண்டையதென்க. அல்லாமலும் சிருஷ்டிக்கப்பெற்ற ஜகத்தின் வைஷம்யம் பரமேசுரரால் ஆக்கப்பெற்றதன்றும், மற்றோ, பிராசீனவதனது குணகர்மவிபாகப் பிரயுக்தமாம், "வைஷம்யநைர்க்குண்யங்கள் இலையாமாபேக்ஷயுண்மையின் அங்ஙனமே காட்டும்" என்னும் நியாயத்தான்; ஆகவே விவகாரதிருஷ்டியினுனும் பரம்பொருளிடத்தில் அத்தோடங்களணுகாவாம், ஈண்டுக்கருத்தாவாயினும் அகருத்தாவெனவறிவர் என்பதாக ஸ்ரீகணேசப்பெருந்தகையானே, ஜகத்கர்த்ருத்வத்திற்குப் பிரதிபந்த உபாதியின்கண் அபாவப்பிரதியோகித்வரூப மித்யாத்வத்தின் கண்டரவத்தாற் கழறியருளப்பெற்றமையின் ஜகத்கர்த்ருத்வசமான யோகக்ஷேமங்கள்வாய்ந்த ஜகதுபாதனத்வ ஜகதீசுரத்வஜகதந்தர்யாமித்வமுதலனவாய பிறபிரமதருமங்கட்கும், மித்யாத்வத்தில் இதுவே இலிங்கம் என நிர்விசேஷப்பிரஹ்மவாதஜய துந்துபியாமிச் சுலோகம். (19)

(அ - கை.) இதன் ஞானபலத்தை யியம்பியருளல்:—

சு நிர்ஹம்யோஹிஜாநாதி கர்மபிர்ந தேவஹந்யதே,
ஜந்மபந்தவிநிர்முக்த: ஸ யாதி பதமவ்யயம்.

கீ. ஆசைவற வென்னையுள்ளத் தறிருவனெவனன்னானைப், பசையுறுகருமபந்தப் படுத்திடாதாயேநிற்கு, மிசைவுறுமிவணமோர்ந்திங்கின்ப வீடடைதலான, நசையுறுபெரியர்முன்முன்னடத்தினர் கருமந்தாமே.

வி. யः=யாவன், நிரீஹம்மாம்=அபரிஸ்பந்தமுக்தரூபமாயபரமேசுரராகிய எம்மை யாவற்றினாலும்பிரத்யக்குப்பூதமாக, அபிஜாநாதி=சாக்ஷாத்கரிப்பனோ; அவன் கருமங்களானே கட்டுப்படான், கர்ம=சுக்கிலம் கிருஷ்ணம் மிசிரமுமென மூவகையாகிய கருமம், தம்=அவனை, நைவபத்நாதி=பந்திக்க மாட்டாதாம், கர்மத்வாதிமதந்தக்கரணத்திற்கு விவிக்தத்தன்மையுண்மையின்; ஏவம்=இவ்வண்ணம், ஞானபலத்தை, புத்த்வா=உணர்ந்து, முமுக்ஷவः=மோக்ஷார்த்திகள், மனத்தூய்மை வாயிலாக உணர்வைப் பெறுதற்பொருட்டு, கர்மாணி=நித்தியநைமித்திகங்களை, சக்ருःபூர்வம்பூர்வம்=அநாதிவேதபோதிதமென்றெண்ணி முமுக்ஷுத்தகைமையுண்டாவதற்குமுன்பு செய்யாநிற்பர். முமுக்ஷுமுளைத்தபின்போ சிரவணாதிகளை செய்யாநிற்பர் என்று மேலாகத் தெரிந்துகொள்க. அகங்காரம் ஆசைகளின்மையினானே நிர்லேயமாயும் அகர்த்தாவாயும் இருக்கு மெம்மையறிந்துதானும் அகங்காராதி சைதில்யத்தைப் பெற்றுத் தத்துவம் பதார்த்த ஐக்கிய ஞானத்தானே விடுபடுவன் என்பது கருத்து. (20)

(அ - கை) முமுக்ஷுக்கள் கருமங்களை யெங்ஙனம் செய்தனர் என்னும் அபேக்ஷையில் அவற்றின் விபாகத்தை விளம்பியருளும் வேட்கையுடையவராய் வெகுருசிப்பொருட்டு விபாகபலத்தை யாதியிலருளுகின்றார்:—

சு. வாஸநாஸஹிதாதாத்யாத்ஸம்ஸாரகாரணாத்த்ரு
டாத், அஜ்ஞாநபந்தநாஜ்ஜந்துர்யம்புத்த்வா முச்யதே'கி
லாத்.

க. வாசனைசகிதமாகிவயங்கனுதியுமேயாகி, யேசுசம்சார காரணமதெனவிலங்கலாகி, நாசமில்லாதவஞ்ஞானபந்தனமுழு தினின்றும், பேசெனதையுணர்ந்துசந்துபிரிதலையடைதலாமோ.

வி. யம் = கர்மாகர்மவிகர்மங்களின் எவ்விபாகத்தை, புத்த்வா = நன்குணர்ந்து, ஜந்து: = அதிகாரி, அஞ்ஞானபந்தநாத் = மூலாஞ்ஞானமே பந்தனம் அதனினின்றும், அகிலாத் = நிரவசேஷமாக, முச்யதே = விடுபடுவனே; அவனைக் கூறுவேம் என உத்திரத்தோடு அந்நுவயமாம். அஞ்ஞானத்தையே சிறப்பித்தருளல்:—வாசனைசகிதாத் = வாசனையோடு கூடியதாய், "பந்தமென்பதோ வாசனைப்பந்தமே மோக்ஷம், அந்த வாசனை யழிதலேபாமென மொழிவர்" ஆத்யாத் = அநாதியாய், சம்சாரகாரணாத் = ஜன்மமரணதாரை ரூபமாய சமுசாரத்தின்காரணமாய், த்ருடாத் = கெடுக்கமுடியாததாய், இலக்குமெனக்கூட்டுக. (21)

சு. தத்கர்மாகர்மவிகர்மாக்யம் வதாமி தவ, யத்ர முஹ்யந்தி மஹாந்தோ'பி ஸூக்ஷ்மயோகவிசாரிண:.

க. ஆகலினகர்மமுங்கருமமானதூஉம் மோகமிலுனக் கின்றுமொழிதுங்கேட்டியான், மோகமுற்றதிமதிமுதிர்ந்த மோதரும், மூகமுற்றனர்மொழிமொழியுமீதிலே

வி. எதனுற்கருமவிபாக முணர்தவன் விடுபடுவனே, தத் = அவ்வேதுவினால், அகர்ம = விதித்ததைச்செய்யாமை, அகாரத்தானே விலக்கியதைச்செய்தல் வடிவவிகர்மம், கர்மச = தன்றன்ம அநுட்டானரூபம், அபியென்பதற்கும்மை பொருள்; தவ = அதிகாரியாய உன்பொருட்டு, அதுநா =

இப்போது, கதயாமி=மேன்மொழிந்த மூன்றையும் வெளிப்படுத்தியருள்வோம், இந்த விபாகமானது மிகவும் ஆழ்ந்ததென்றருளல்:—யத்ர = எவ்விபாகத்தில், புத்திசாலிநஃருஷயஃ=மதிமான்களாகிய மகாமுனிவரும், மோஹாத்=அஞ்ஞானத்தால், மௌநம்கதாஃ = மூகீபாவத்தை யடைந்துளாரோ.

(22)

சு. தத்வம் முமுக்ஷுணா ஜ்ஞேயம் கர்மாகர்மவிகர்மணாம் த்ரிவியாநீஹ கர்மாணி ச்ருணு வக்ஷ்யாமி தே ப்ரிய.

க. செங்கையிற்செய்கைசெய்யாமையினெடுத்தியசெய்கை, தங்குமெய்முமுக்ஷுவானே யறியவேதக்கதாகும், இங்குமூவகையாஞ்செய்கையிசைப்பநீ யன்பகேட்டி, பங்குறுமிவற்றைப்போதல்பாரகாரியமேயாகும்.

வி. விவாக்கியூரதரூப கர்ம அகர்மவிகர்மங்களின் தத்துவம்=உண்மை, முமுக்ஷுணா ஜ்ஞேயம்=முமுக்ஷுவாலறியத்தக்கதாம்; விபாகஞாநம் இனறியமையாததும் ஆழ்ந்ததும் ஆமென்றருளல்:—இஹ = உலகில், கர்மாணி=கர்ம அகர்மவிகர்மங்கள், தனித்தனியாக, த்ரிவிதாநி=மூவகையான, கருமங்களாம், விகர்ம அகர்மங்கள் கருமத்திலும், கர்மாகர்மங்கள் விகர்மத்திலும், கர்மங்களும் காணப்பெறுதலின் மூவகையாம்; ஆகலின். ஏஷாமகதிஃ = இவற்றின் உணர்ச்சி, மிகமிகவும் ஆழ்ந்ததாம் அத்தியந்தமகம்பீரமாம் ஶ்ருணு=கேட்டி, ப்ரியவெனவிளித்தது, எமதன்புடைமையாமேன் உன்னுலும் உன்போன்றவராலுமே இஃதுணரவலுயதாமெனக்குறிப்புத்தருளியதாம், ப்ரிய=அன்ப.

நுதலியபொருள் யாவும் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவும் அருளியுள்ளார்:—உய்யும்படிமுன்னுணர்ந்தவர்களுணர்ந்தவிணைமேலொருப்படுநீ, செய்யுங்கருமஞ்செய்யாமை தீயகருமமென்றிவற்றின், மெய்யும்பொய்யு மறிவருமை யறியவேண்

டும்பொருளுமிவை, யொய்யுஞ் சிலைக்கையுரவோயிங்கிவற்றின்செயலை யியம்பக்கேள். (23)

(அ - கை) அதேதத்துவத்தைத்தரிசிப்பித்தருளல்:—

சு. க்ரியாயாமக்ரியாஜ்ஞாநமக்ரியாயாம் க்ரியாமதி: யஸ்ய ஸ்யாத்ஸ ஹி முக்த: ஸ்யாத்ஸம்யக்ஜ்ஞாநீ ஸ ஏவ ஹி ॥ ௨௩ ॥

க. கிரியையிலாகுமக்கிரியைஞானமக், கிரியையிலாகுமக்கிரியையாமதி, யுரியவனெவனிந்தஉலகின்மாநுடன், அரியமுத்தனுமவனகிலந்தேருவான்.

வி. க்ரியாயாம்=யாகதான ஜபாதிரூபக் கிரியையின்கண், அக்ரியாஞானம் = அக்கிரியையுணர்ச்சி, அக்கிரியையென்பது விதித்ததைச்செய்யாமையும், நூல்விலக்கியதைச்செய்தலுமாம், அவற்றின் உணர்ச்சி அக்கிரியையுணர்ச்சியாம். அவ்வாறே "அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத், அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ.

பொருள்:—ஹேபார்த்த! யாது அசிரத்தையோடும்தீயிலீயப்பெற்றதோ, எத்தானஞ்செய்யப்பெற்றதோ, எத்தவம் அநுட்டிக்கப்பெற்றதோ மற்றைய கருமந்தான் யாதுசெய்யப்பெற்றதோ, அவையாவுமே அசிரத்தையாற் செய்யப்பெற்றவாய், அசத் = அசாதுவெனவறையப்பெறும், ஆகலின் ஓம்தத்சத்தென்னும் நிர்த்தேசத்தானே யதனைச்சாதுபாவஞ்செய்விக்கமுடியாதாம், பாறையின்மூளைவிளைவுக்கேபோல எல்லாவாற்றானும் அதற்கயோக்கியத்தன்மையுண்மையின், ஆகலின் அசிரத்தையினாலே ஆற்றப்பெற்றது பரலோகத்திற்பலந்தராதாம், விகுணத்தன்மையானே அபூர்வத்தையாக்காமையின், இகலோகத்தினும் பயனைப்பயவாதாம்,

சாதுக்களானே நிந்திக்கப்படுதலின், ஆகையினாலே சாத்விக மான சிரத்தையினாலே சாத்விகமான மகமுதலியவற்றைச் செய்தல்வேண்டும், அதற்கேதெய்வத்தால்வைகுண்யசங்கை யுண்டாயவழி பிரஹ்மநாமநிர்த்தேசத்தானே சாத்குண்ய முண்டாம் என சாத்விகசிரத்தா முக்கியஹேது என்பதாம். அசிரத்தையாற்றீயிலீயவனமும் மறையர்கேபொன்றுதான மும், காயாதிமூவகைத்தவமும், மற்றையதுதியாதியாவுமே அசாதுவேயாம், ஆகலின் அவற்றிற்கு ஓமாதியாற் சாது பாவம்பவியாதாம், சிலையிலங்குரஉற்பத்தி யோக்கியதையே யில்லையன்றோ அதுபோலச்சிரத்தையற்ற அவற்றின்சாது பாவயோக்யதையாண்டையதென்க; எவ்வேதுவினால் அசத் தெனின்? அசிரத்தையாலாற்றியது இடையூறுடையதாத லின் தருமமுண்டாக்காமையின் பரலோகம் பயவாதாம், சிட்டர் துதியாமையின் இகலோகப் புகழ்ச்சியு மிலதாம், ஆகையாற் சாத்விக சிரத்தைகொண்டு சாத்விககாரியமே தலைப்படுக இடையூறில் ஓமாதியுச்சரிக்குக வென்பது திரண்டபொருள். என்பதான ஸ்ரீ பகவத்திருமொழியால் அசிரத்தையாற்செய்தது செய்யாததையே யொக்கும், அவ் வாறே நால்வகைக்கருமங்கள் அபயங்கரங்களாம். மாறாகச் செய்வன பயந்தருவனவாம், மாநாக்நிஹோத்ரமல்லதுமான மௌநம், மானத்தாலதீதமல்லதுமானயஞ்ஞம், என்பதாக அபயங்கரமாய அக்நிஹோத்ராதிகட்கும், விலக்கியதை யொழுகலானே பயங்கரத்தகைமை ஸ்மரிக்கப்பெறுகின்றது; பெறுதலின் இவ்விரண்டும் நற்றொழிலின்கண்ணும்நண்ணும் என்றறிந்து யாவன் பரிகரித்துத் தொழில்தொடங்குவன், அவன், அகிலார்த்தக்குருத் = முழுக்கருமமும்செய்தவனா வன், அவ்வாறே, அக்ரியாயாம் = விதித்ததைச்செய்யாமையி னும்விருத்தமானதைச்செய்வதிலும், யஸ்ய = யாவனுக்கு, க்ரி யாமதிஃ = நற்றொழின்மதி, அவனும் அகிலகிருத்தாவன், அங்

ஞனமன்றோ:—உண்மையேயுரைக்குக, பொய்யுரையாடற்க, வென வுண்மை வசனம் விதிக்கப்பெற்றுளது; அதுவும், சோரர்கள்பொருட்டு மார்மஞ்ஞமார்க்கத்தை யுபதேசிக்கும் சத்தியவாக்கு மார்மஞ்ஞஹிம்சை நிமித்தபூதமாக நரக வீழ்ச்சி ஸம்பவிக்கப்பெறுகின்றது? இங்ஙனம், பொய்சுயமா கவே தோஷகரமெனவிஷித்தமாம், பிராணிகளின் திராணப் பொருட்டு, மாறாகச்சுவர்க்ககரமாம். இங்ஙனம் ஔதாசீன் யம்யாண்டுமே ஹிதகரமாயினும் கோப்பிராஹ்மணரக்ஷணப் பொருட்டும் சஸதிரத்தைத்தாங்காத க்ஷத்திரியனுக்கு மகத் தான நரகப்பொருட்டாம். இங்ஙனம் திருடன்விடுபடின் அரசனால் எவனும்சுருதியான் சோரன்வதஞ்செய்யத்தக்க வனாயிருந்தும்மோசனம்ஆதல்அரசனுக்குப்பாவப்பொருட்டு ஆம் என அகர்த்தவ்யமாயஹிம்சையும் கர்த்தவ்யத்தன்மை யானே விதிக்கப்பெறுகின்றது. ஆகலினிங்ஙனம் பலத் தானே பலாபலந்துணிந்து, யாவன் கருமங்கள் அகருமங் கள் விகருமங்களாதல் சிரேயச்சாதனங்களேயாக ஒழுகு வானோ, அவனொழுகும் அவ்விதுவே அக்கிரியையின்கண் ணேகிரியாமதியாம், முன்மொழிந்த கிரியையின்கண்ணே அக்கிரியமதியும், யஸ்யமர்த்யஸ்யஸ்யாத் = எம்மனுடனுக் காமோ, ஹி=பிரசித்தம், அஸ்மிந்லோகே = இவ்வுலகில், ஸமர்த்ய:=அம்மநுடன், முக்த:=விடுபட்டவனுவன், அகி லார்த்தக்ருத்=சம்பூர்ண புருஷார்த்த சதுஷ்டய சாதகன் ஆவனென்பதாம். நதியாதிகளில் ஓடமேறிச்செல்பவனுக்கு, உண்மையாய்க் கமனரகிததீரதருக்களில் நௌகாகமனோபா திகம் கமனம்பிரதீதியாவதேபோல, அந்தக்கரணம் கருமம் ஆற்றியவழி அதனையுபாதியாக்கொண்ட ஆன்மாவின்பா லக்கருமம் பிரதீதியாம் யான்செய்கின்றேனென்று, ஆன்ம கருமமாகப்புலப்படும் அக்கருமவிடயத்தில் கருமாபாவம் காணவேண்டும், உண்மையாகக்கரும அபாவமுடையதன்

மாட்டே இக்கருமம் பிரதீதியாகின்றதென்று காண்க; காணவே ஆத்மதருமமாகச் சர்வலோகப் பிரசித்தமாய கருமத்திற்கு விருக்ஷகமனத்திற்கேபோலும் பிரதிபந்தஉபாதியின்கண்ணபாவமே தத்துவமாமென வருளியதாம். வண்டின்றிருட்டியானே விண்டலம் சுழல்வதொப்பச் சுழலும் மனம் ஆன்மாவைச்சுழல்வதாய்பகாணும், "தியாயதீவலீலாயதீவ" என்னும் சுருதியும், "கர்த்தாகமிதிமந்யதே" என்னும் மிருதியும் இதனையுணர்த்தும். விகிதம்போலும் நிஷித்தமும் ஆன்மாவிலின்மையின் அக்கருமாபாவம் காணலாம். விழியால் தூரத்தில்நோக்கும் புருடரிடத்தில் நடவாமை, நடந்தபோதினும் புலப்படுமாறு, திரிகுணன்மசமாயாபரிணாமத்தன்மையானே எஞ்ஞான்றும், வியாபாரத்தோடேகூடியிருக்கும், தேஹேந்திரியாதிகளிடத்தேயும், யான் வியாபாரமற்றவன் சும்மாவிருக்கின்றேன்என வியாபார அபாவரூபமாய அகருமங்காணப்பெறும், அவ்வகருமவிடயத்தில் கருமங்காணவேண்டும், கருமமுடையதன்கண்ணே இவ்வகருமத்தோற்றமென வறிக. சும்மாவிருக்கின்றேன் என்னும் அபிமானத்திற்கே முடிவாகக் கருமத்தன்மை யுண்மையின், உளதாகவே தனதத்தியந்தாபாவ அதிகரணத்திலேயே பிரதீயமான அகருமத்திற்குப்பூர்வம்போலப் பிரதிபந்த உபாதியில் அபாவமே தத்துவமாம். இங்ஙனம் யாவன் கருமவிகருமஅகருமங்களின் தத்துவத்தையறிவனோ, அவன்மநுடராகிய கருமஅதிகாரிகளுக்குள் மதிமானவன்; விகருமஅகருமங்களைவிட்டுக் கர்த்ருத்வஅபிமான பல அபிசந்திஹானத்தால் கருமாநுஷ்டாத்ருத்தன்மையுண்மையின். அவனே கருமயோகியாவன், முழுக்கருமமும் செய்தவனுவன். என்று ஸ்ரீமத் பகவத்கீதையின் பைசாசபாடியத்தில் தேகே யாதிவியாபார வடிவ கருமத்தில் அகருமம் ... நி ... ஆத்மரூபம் ...திஷ்டானத் தன்மையானே ய

பனே, அகருமமாகிய ஆத்மசொரூபத்திலும் கருமாத்தியஸ்தத்தை யாவன்காண்பனே, அவன்புத்திமான் பரமார்த்த தரிசியென வியாக்யானிக்கப்பெற்றுளது அஃதிஷ்டமேயாம், நமது ஆசாரியசுவாமிகளாகிய ஸ்ரீமத் சங்கரபகவத்பாத பாஷ்ய அநுசாரித்தன்மையுண்மையின். இப்பொருள்களை ஸ்ரீபகவானும் திருவாய்மலர்ந்தருளியுள்ளார்:—ஓடுகின்றபுனலாற்றினேடத்துடனேயோடுவான், மாடுநின்றமரமோடத்தானின்றுற்போல்வரச்செய்தே, நீடுநின்றமரங்களிவை நிற்குமியற்கைத் தன்மைத்தில், கோடுகின்றேன் யானேயென்றுணர்வுமிக்கோனுணர்ந்தாற்போல்.

செயன்மேனின்றவறிவிடையே செயலின்மையுமச்செயல்செய்யா, வியன்மேனின்றபுலன்களிலே யெல்லாவினையுமியல்வதுவு, மயன்மேலின்றியறிந்தானியா ரவனேயெல்லாமறிந்தோனு, முயன்மேனின்றயோகியுநல் வினைகளெல்லாமொழிந்தோனும். (24)

(அ - கை) இவ்வண்ணம் இயற்றுவோனுக்குப் பலிதத்தையருளல்:—

சு. காமாங்குரவிஹீநாநி யஸ்ய கர்மாணி ஸந்தி ஹி, தத்த்வஜ்ஞநிர்தக்தகர்மாணம் ப்ராஹுஸ்தம் பண்டிதம் புதா:.

க. காமவங்குரங்களைந்தெவன்கருமமே தொடங்குந், தாமவந்நரன்றத்துவதரிசனந்தகித்த, தோமநற்றொழிலுடையவனவனையே துறவோர், வாமபண்டிதனெனவனுதினம்வழங்குவரால்.

வி. கர்மாணி = கூறியவகையாயவினைகள், விவேகவானுக்கு மேன்மைச்சாதனங்களானும் கர்மஅகர்மவிகர்மங்கள் சகாமமுஞ்செய்யப்பெற்றனவாமேல் அவைகளேசம்சாரவிருக்ஷத்தின் அங்குரங்களாம், காமாங்குரம் காமமுளை, ஆக

வின்; அதனை வியோகேந=விடுத்தலோடும், யஃநரஃ=எப் புருடன், கர்மாணி = கருமங்களை, ஆரபேத் = செய்வனோ, அப்புருடனை, தத்வதர்சனநிர்தக்தக்ரியம்=மூவிதகர்மதத் துவதரிசனத்தாலும் காமராகித்தியத்தாலும், நிர்தக்தா= பீஜமற்றனவாகச் சர்வகிரியைகளையும் செய்த ஆத்தகைய புருடனை, புதாஃ=பண்டிதர், புதம்ஆஹுஃ=பண்டிதன் என் பர். கர்மாகர்மதத்துவவித்தாகிய யாவன்ஆரம்பித்தகருமங் கள்யாவும் பலேச்சையற்றிருக்குமோ அவனை, அறிஞனென் பர்; அவன்றன்னாரம்பங்களினால் உண்டான ஞானக்கினி யால் வினைகளையெரித்தவனாதலின். இது ஆருருக்ஷு விடய மாம். ஆரூடவிடயத்திலோ:—பரமார்த்ததரிசிக்கு, எல்லா லௌகிகவைதிகசமாரம்பங்களும் பலேச்சையாலும் சங்கற் பத்தாலும் வர்ஜிதங்களாம், இதன்பொருட்டுயானிதைச் செய்கின்றேன் பலேச்சைப்பிரயுக்தமாய மனோவிருத்திவிசே டத்தால் வர்ஜிதங்களாம், விருத்தசேஷ்டாமாத்திர ரூபங்க ளாம். ஞானிகள் பிரவிருத்தர்களேல்லோகசங்கிரகப்பொ ருட்டும் நிவிருத்தர்களேல் ஜீவனப்பொருட்டும் சேட்டிப்ப ரென் றுணர்க. ஸ்ரீ பகவற்கீதையின்கண்ணும் இதுகாண லாம்:— ஆவதென்பது மாசையுமற்றவண, மேவஞானவெந் தீயிடை வெந்தன, யாவர் தந்தொழிலவ்வகையோர்களே, சாவதும்பிறப்புந்தவிர்ந்தார்கடாம். (25)

(அ - கை) காமாங்குர்வியோகத்தையே ஐந்துசுலோ கங்களால் ஸ்தோத்தரித்தருளுவல்:—

சு. த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரயஃ, கர்மண்யபிப்ரவ்ருத்தோ(அ)பி நைவ கிஞ்சித்கரோதி ஸஃ,

க. பயன்விழைதலையொரீஇப்பகரெப்போதுமே, யியைன் மகிழ்வினனொருபொருளுமேற்றிலான், முயலினும்வினையினை முற்றுமாறுதான், செயலினைச்சிறிதுமேசெய்திலானவன்.

வி. யஃபலத்ருஷ்ணாம்விஹாயநித்யத்ருப்தஃஸ்யாத் — பயன்விழைவைவிடுத்து எப்போதும் மகிழ்வினன் எவனோ வனேவெனயோஜனை. திருஷ்ணைத்தியாகமே திருப்திசாதனம் போகம் அன்றுமென்பதுபொருள் கூறவும்பெற்றுளதாம்:—காமவின்பமுலகினிற்காண்பதுஞ், சேமதேவர் மகத்தின்பஞ்சேர்வதும், நாமவாசையினாசைசுகத்தின, தோமசோடசத்தோர்கலையில்லையால்.

இரமாமருத்தத்தி னன்மைந்தராலுந் தீராதவற்றின்றி யாகத்தினாலே, யுரமானவேதாந்த மாவாக்கியத்தாலுற்பன்ன மாம் விச்சையாநிச்சயத்தாற், பரமானவஞ்ஞானவந்தத் திலே யப்படி ஞானவுபதேசமொன்றாலுமேயிப், புரமாமுடம்புக்குளேயந்த முத்திப்பொருள்கண்டு வீடெய்துவாரிப் புவிக்கே.

எதனால் நித்தியதிருப்தன் = எப்போதும் மகிழ்வினன், சதா = எப்போதும், அதனால், விசாதனஃ = மாலைசந்தனமங்கையராதிபோகசாதனவிஹீனன்; ஸஃ = இத்தகையனானவன், நூலடைவித்த நித்தியநைமித்திக, க்ரியாம் = வினையை, கர்த்தும் = செய்யும்பொருட்டு, உத்யுக்தஃ அபி = முயன்ற போதினும், கிஞ்சிந்நைவகரோதி = சிறிதேனும் செய்வதேயில்லை, கருமலேபமின்மையின்என்பது கருத்து. ஸ்ரீ கோபால உத்தரதாபநீயவுபநிடதத்தில் உபாக்கியானிக்கப்பெறுகின்றது:—

எமுனையக்கரையிலிருந்த துர்வாசரெனு முனிக்கினிதுணவருத்தக், கடமுமின்னுணவு நிறைகலங் கரங்கொள் தண்ணன்பொற் காரிகைமார்கள், எமுனைபைக் கடத்தற்கரி

யதை, யாங்களெங்ஙனமேவருங்கடப்பேம், கமனியவெண வக்கருங்கணுர்சேட்டக்கண்ணனு பெய்மையேகரைவான்.

கண்டிதமகன்றபிரமவாசாரன்கண்ணனென்றிடிற் கடந்திடுவீர், உண்டபின் முனியையவர்களும்வினவவுயர்முனியரிவையர்க் குரைப்பான், கண்டிலனுணவு சவின்முனியாயிற் சடந்திடவழிவிடென்றுரைமின், எண்டிசைபரவு முனிவனைப்பணிந்தகன்றனர்பாவையரினிதே.

இவ்வுபமையானே நித்தியதிருப்தனுக்கு அபோக்திருத்தகைமை யுணரத்தக்கதாம்.

இச்சரிதை ஸ்ரீ கோபால உத்தரதாபநீயத்திலிவ்வாறுளதாம்:—ஞானிகட்கு அகர்த்ருத்தகைமையும் அபோக்திருத்தகைமையும், அறிவித்தற்பொருட்டு ஸ்ரீ கிருஷ்ண கோபீசம்வாதரூபமான ஆக்கியாயிகையையமைத்தல்; ஓம் ஒருபோது நிச்சிதமாகக் காமக்கிரீடா சக்தராய விரஜமடந்தையர் ஸ்ரீகிருஷ்ணபகவானோடு விலாசித்திருந்தனர், இரவு முழுவதும் காமக்கிரீடாசக்தராக ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யிருந்ததையு மிருகண்ணுற்றனர் கௌதுகத்தையு மினிதனுபவித்தனர், பின்னர், யாவருக்கும் ஈசுரராயிருந்தும், அநந்தங் கோடி பிரஹ்மாண்ட அதீசுரராயிருந்தும், பசுபாலகத் தன்மைவடிவ் ஹீனதசையைப்பற்றி நின்ற தியானிப்பவரது கருமமூலத்தைக் காதுபவராய ஸ்ரீகிருஷ்ணபகவானை நோக்கி இட்டப்படி துணிந்திதை யியம்புவராயினர். அவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாகிய மனுப்போன்ற தருமஉபதேசகரைப்பார்த்துக் கூறியபோது பகவானும் பதிலாகப் பகர்ந்தனர், ஸ்ரீ கிருஷ்ணசுவாமிக்கும் கோபிகாஸ்திரீகட்கும் சம்பாஷணை நடந்தது என்றபடி: எம்மறையவர் பொருட்டுப் பிக்ஷாசமூகம் ஈயத்தக்கது எனக் கோபியர் கேட்ப, எத்தானத்தானே கிருதார்த்தர் ஆவேமோ

அதைக் கூறுதிர் என்பது வினவாம், ஸ்ரீ துர்வாச முனிவர்பொருட்டு ஈமின் என்றனர் ஸ்ரீ பகவான் கோபியர் கூறல்:—யாங்ஙனம் யமுனையின் நீரை கடவாமற் செல்வேம்=யமுனையில் அகாதமானஜலம் மத்தியில் உளதே, அதுவும் சகல அலங்காரங்களோடு கூடியிருக்கும் மங்கையர்களாகியஎங்களால் கடத்தற்குமுடியாததாம் யாதுவது உபாயமுளதா? எதனுனே அந்நீரைத் தீண்டாமலே தாண்டி ஸ்ரீ துர்வாசமுனிவரையடைதல் கூடுமோ தாங்கள் அதுலமதிபராக்கிரமம் உடையவர்களாகலின் தங்களைப் பிரார்த்தித்துக் கேட்கின்றேம். போகாமலே யிருந்துவிடுங்கள் என்று தாங்கள் கூறுதல் கூடாது, சிரேயசுண்டாமாதலின், சிரேயசில் எங்கட்குக் குரதார இச்சையிருக்கின்றதாகலின்,அச்சிரேயசும் அதிதிரூபய திபைசூதானமிலாதுண்டாகாதாம், ஆகலின் யமுனுஜலஸ்பரிசமின்றி அதிற்செல்லுமுபாயத்தைத் தாங்கள் கூறியருளல் வேண்டும் எனக் கோபியர் வேண்டினர்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறல்:—ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாகிய இவர் பிரஹ்மசாரிக் கிருஷ்ணர் என்று உறுதியாக இம்மெய்ம்மொழியைச் சபதரூபமா யுரைத்துச் செல்வீராயின் சத்தியவாதிகளாகிய உங்கட்கு இச்சத்தியவாதத்தால் மார்க்கங்கொடுக்கும் பிரஹ்மசாரியாகிய என்னை நினைந்தே நீங்களுந் தண்ணீரைத் தீண்டாமலே தாண்டிவிடலாம், என்றருளி மேலும் பகூராந்தரமருளுகின்றார். பிரஹ்மசாரியாகிய என்னை நினைந்தால் அகாதம் காதமாம் = உங்களுக்கு மார்க்கதான இச்சையாயின் மார்க்கங்கொடுக்கும் அல்லது ஆழமின்மையிச்சையேலாயின் ஆழமின்றியதாம் இஃதென்ன அற்பகாரியம் முயனுற்ற முடியாதகாரியமேனும் எனது நினைவு மாத்திரை

வாசமென்னும் அபானவிருத்தியைவிடுவர், அதாவது ரே மென்னும் பிராணுயாமத்தைச்செய்வர்; அபானவிரு யிற் பிராணவிருத்தியையிடுவர், அதாவது பூரகப்பிர யாமஞ்செய்வர்; பிராண அபான உபயவிருத்தி நிரோ ரூபக்கும்பகமெனப் பெயரிய மூன்ருவது பிராணுய தைச்செய்வர். நான்காவதாகப், பூரகத்திற்பிராணச சுவாசத்தின்றடை, ரேசகத்தில் அபானகதிநிசுவாச றடை, கும்பகத்தில் உபயகதித்தடை, என்னும்மூன மூன்றன்கண்ணும்பிராண அபானகதிகளைத்தடுத்து, யுட்கும்பகப்பயிற்சியினிக்கிரகிக்கப்பெற்ற பிராணன் ஞானேந்திரியகருமேந்திரியரூபப் பிராணன்களை வெ புரிவர். எல்லா இந்திரியங்களுமே பிராண அதீனங்க பிராணசப்தவாச்சியங்களாம் என்பது சுருதிப் பிரசி ஆகவே, சாரதிநிக்கிரகித்த கயறுகளானே தேர்க்கு கட்டேபோலும், கும்பகம் நிக்கிரகித்தபிராணன்கள அவற்றினதீன சேட்டைகள் வாய்ந்தசர்வ இந்திரி ருமே நிக்கிரகமுண்டாம், அவ்விந்நிக்கிரக மீண்டு அ பெற்றதென உய்த்துணர்.

(அ-கை.) எஞ்சியபொருளாலுந்தவத்தாலும் தன்கண் ணுரைத்தருளிய திரவியயாகத்தின் பய ளல்:—

சு. [illegible]

[illegible]

[illegible]

க. மகத்திலெஞ்சியவமுதத்தை மாந்தியபமான சுகத்தினித்தியப்பிரமத்தை முறையினிற்சேர்ப்வா தை முற்றிலர் சிறியரிம்மாநுடவுலகு, விகத்தை றெனிற்பரமெங்ஙனே யுறுவார்,

வி. ஏதே=ஜநகஜ்ஜாநசுருதியாதியோர், யஜ்ஞஶேஷாம்ரு தாபுஜ:=பொருளாற்சாதிப்பதாய அன்னதானதிநிறைந்தயா கத்தின் எச்சேடமுளதோ அதுவே அமிருதசாதனத்தன்மை யானே அமிருதமாம், அதனை எவர்கள் அயில்வர்களோ அவர் கள், சிறப்புற்றகுருதேவதைகளின் அனுக்கிரகமுறையானே; நித்யம்ப்ரஹ்மப்ரயாந்தி = தூயஅறிவான்மாவை யடைவர் யாவர்தாம். இதனையனுட்டியாரோ அவர் இரண்டுலகங்களை யும் இழந்தவர்ஆவர், என்றருளுகின்றார்:-அயஜ்ஞகாரிணே:= மகமியற்றாதவர்கட்கு, அயம்லோகோந = இவ்வுலகமேகிடை யாதென்றால், அந்ய: குதோபவேத்=மற்றதுதான் எங்கே கிடைத்திடும். யாகமியற்றுபவர் கேவலம்பாவமற்றவர்மாத்திர மல்லர், மற்றோ, யாகங்களைமுடித்து அவற்றின்மீந்த அமுத மெனப்பெயரிய அன்னத்தை அயிலுபவராய்மனத்தூய்மைமா ஞானவாயிலாகச் சநாதனமானபிரஹ்மத்தையடைவர்; பந்தத் தினின்றும்விடுபடுவர். எவருக்குத்தான் பின் இவ்வியாகங்களுள் ஒருயாகமேனுமிலதாமோ அவ்வியாகமிலாதவர்க்குச் சருவப் பிராணிகட்கும்பொதுவாய மிகச்சொற்பசுகத்தைத்தரும் இம் மநுடவுலகமும், கிடைக்காதாம், ஆன்றோர் கைவிட்டிருத்த லின். என்றால், அநேக சாதனங்களானேசாதிக்கப்பெற்ற மற் றைய பரலோகம்யாண்டையதென்க. ஆதலின் அவசியம் மகங் கள் இயற்றத்தக்கனவேயாமென்றுணர்க.

ஸ்ரீபகவற்கீதையின்கண்ணும் "இன்னவர்களியாவர்களு மியாகமறிவாரே, யன்னவர்களேயறனி றீமையினகன்றோர் சொன்னபரிசாலிவைதொடங்கமுடியாதார்க், கென்னபரிசாலு மிகமில்லைபரமுண்டோ" என்றருளப்பெற்றுளது. 37

(அ - கை.) இனி அத்தியாத்மிகமாயமூன்றுயாகங்களை யும் மோக்ஷசாதனமெனவருளல்:—

சு: 𑌕𑌾𑌯𑌿𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌰𑌿𑌧𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍍𑌵𑍇𑌦𑍇𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌨𑍍; 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌤𑌾𑌨𑌖𑌿𑌲𑌾𑌨𑍍𑌭𑍂𑌪𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌖𑌿𑌲𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌤𑍍.

க. காயிகாதியின்மூவகைகண்டன, வாயயாகங்களாரண மோதுப, நீமன்னவையாவையுநேர்ந்துதான், றாயறுதிதொ ஸேத்தெத்துயருமே.

வி. காயிக:யஜ்ஞ:=தீர்த்தாடநசூரியநமஸ்காராதி கேவலம்சொற்பமாம், அதுவேமந்திரபாடசகிதமாகிமத்தியமமாம், அதுவே அருத்த அநுசந்தான பூர்வகமாயமந்திரபாடசகிதமாகி உத்தமமாம். வாசிகம்=சரீரஆயாசரகிதமாகி மந்திரஉச்சாரணமாத்திரரூபம்அற்பமாம், அர்த்தாநுசந்தானசகிதமாகி மந்திரஉச்சாரணமாத்திரரூபம்மத்தியமமாம், அதுவே உபாம்சுவர்ண உச்சாரணத்தோடுகூடின்உத்தமமாம். இங்ஙனம்மாநசமும் சப்தஅநுஸ்மிருதிவாயிலாகத் தேவதையின்சிந்தனம் அற்பமாம், சப்தவிஸ்மிருதிபூர்வகமாகமத்தியமம், காயவாக்குவிஸ்மிருதிபூர்வகமாக மநோமாத்திரத்தானே தேவதைமயத்தன்மையுத்தமமாம். அவ்விதம்மூன்றுயாகங்களும்தனித்தனிமூவிதரூபங்கள் காயிகாதிபதத்தானே கூறப்பெறுகின்றன. காயிகாதித்ரிதாபூதாந் = காயிகாதிபேதத்தானே மூவகைப்பூதங்கள் என மத்தியமபக்ஷலோபீசமாசமாம், இவ்வகையினவாயயஜ்ஞாந் = யாகங்களை, வேதேப்ரதிஷ்டிதாந் = வேதகருத்தாவாய எம்மாலேயேஅறிவிக்கப்பெற்றவைகளை, தாந்அகிலாந்ஜ்ஞாத்வா = அவ்வியாவற்றையும்உணர்ந்து, ஒவ்வொன்றன்மூவகைகளையும், முன்னவையிரண்டும் சித்திரங்களோடுகூடியவையாம், ஈற்றதோ தனித்தனியாவற்றையும், எனமுறையாகவுணர்ந்து; ஹேபூப=ஹே பூமிரக்ஷகனே! இப்பூமிகளையுங்காப்பாற்றிஞான உற்பத்தியாதிமுறையில், அகிலபந்தநாத்=அவித்தையென்

னும் மூலசகிதகாரியவர்க்கங்களினின்றும், மோக்ஷயசே=முக்தனுவாய், இந்தயாகத்தில் ஸ்திரீசூத்திராதியரும் வைதிகஜபம் விட்டு அதிகாரிகளாவர். ஸ்ரீபகவற்கீதை:—இப்படியுரைத்த விந்தயாகங்களியாவுமுன்னன்ஞ், செப்பியபிரமத்தின்கட்சனித தனசெய்யுங்காலே, யொப்பரிதாயபுத்திகருமத்தினுகாதுள்ளத், தப்படியறிந்துநீயும்பாவத்தினகலநிற்பாய்.

கூறியமுறையே அநேகவகையாய யாகங்கள் வேதத்தின் முகத்தில் நேரே விஸ்தரிக்கப்பெற்றனவாம். எம்முகத்தினின்றும் வேதமுண்டாயதோ அம்முகத்திலிருந்தே இவ்வியாகங்கள்விரிந்தனவாதலின் வேதமென்னவே இவையும்விசுவசிக்கத்தக்கனவாம் என்றபடி. அவ்வெல்லாமகங்களுமே காயிகவாசிக மாநசிககருமஜங்களேயாம், ஆன்மஜங்களல்லவாம், அஃதசங்க உதாசீனமாயிருத்தலின். "அசங்கன்றனேயாவனிப்புருடன், அசங்கனேபற்றினையடைந்திடமாட்டான்'' என்பது சுருதியாம். இவ்வண்ணம் ஆன்மாவை அகர்த்தாவாகவெண்ணிக் கருமபந்தத்தினின்றும் விமுக்தனுவாய் என்பதாம். ஜபம் ஒன்றினுக்கொன்றுமேல்என்பதற்குப்பிரமாணம் ஈசுரகீதை'' வாசிகமுபாஞ்சுமானதமென்றுமடதிலொரொவ்வொன் றினுக்கொன்று, தேசுடைத்தென்றுசெப்பினர் பிறர்க்குத்தெரியவே செபித்திடுஞ்செபந்தான், வாசிகமுபாஞ்சுவாயிதழ்டித்தன்மாத்திரமானதமடங்கி, யாசறச்சிந்தைசெய்தலொன்றினுக்கொன்றுயிரமட்டுங்கு நல்லனவாம். 38

(அ - கை) சருவயாகசேஷீபூதமாய ஞானயாகத்தை யருளல்:—

சு. ஸ்ரேயாந்த்ரவ்யமயாத்யஜ்ஞாஜ்ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே. ௩௩.

க. மன்னயாகங்கள்யாவினுமாறில்லாச், சொன்னஞான மகம்பரந் தொன்மதம், ஞன்னின்விடன் சாதனஞானத்தி, லென்னகன்மமுமிஞ்சுறுமென்பரால்.

வி. ஞானயஜ்ஞ: = செபமனந்தேகமென்னுந் திரிவித முயல்கைமுற்று, முபரமவடிவமாயவுயர்பிரமத்தினிட்டை, தப முளன்விரவி த்தந்தியினருளைக்கொண்டே, யுபநிடதங்களானே யுறுவனிங்குண்மைதானே'' என்றுகூறியபடியிலக்கணம்வாய்ந், ததத்துவமசியாதிவாக்கியஜன்னியப்பிரமநிஷ்டையாம். அது சர்வேஷாம்யஜ்ஞாநாம் = எல்லாயாகங்களுக்குள்ளும், பூப= அரசனே, பர: = சிறந்ததென்பது, மத:=நிச்சிதமாம். இதர யாகங்கட்குஅதன்மாத்திரப்பொருட்டாந்தன்மையுண்மையின், அகிலம்=முன்மொழிந்தருளியமூவகையாய; கர்ம=காயத்தா லாதல், வாக்காலாதல், மனத்தாலாதல் ஏதனுலேனும்செய் யப்பட்டவினையானது, மோக்ஷஸ்யசாதநேஞாநே=முத்தியின் சாதனமாயஞானத்தில், மிருகதோயம்போலும், லீயதே=மூல சகிதமாகக்கெட்டொழியும். ஸ்ரீபகவற்கீதை:—தொன்மையாக முன்சொதுறைக்கெலா, நன்மையாமிகப்பாலது, ஞானமே, பின்மயாலறுத்தாங்கதுபேணிடுந், தன்மையாதெனிலாங்கதுஞ் சாற்றுவாம். கருமயாகத்தைக்குறித்துஞானயாகம் மிகப்புகழத் தக்கதாம், அக்கினிஹோத்திரதரிசபூரணமாசாதிகளாயசிரௌ தங்கள், எஞ்சாத ஔபாசனதிகளாயஸ்மார்த்தங்கள், அல்லது கருமகாண்டங்கழறிய எஞ்சலில்லா அக்கினிஹோத்திராதிகள், உபாசனைகாண்டமுரைத்தஎஞ்சலில்லாவுபாசனைகள், என்பன யாவும், பிரஹ்மாத்மஐக்கியசாக்ஷாத்காரத்தில், ஞானத்தினுல பேக்ஷிக்கப்பெற்ற மனத்தூய்மையைச் சம்பாதிக்கும்வாயிலாக உள்ளடங்காநிற்கும். "நிராமயவிதனைமறையுரை நிகழ்வாற், பிராமணரறியப்பெரிதுவிரும்புவார்'' என்பது சுருதியாகலின் முக்கியத்தன்மையானே ஞானயாகமே மேன்மையானதாம். 39

(அ - கை.) "தெருள்செய்சிவஞானம்வருவதிறைதாள்கள்செறியவருசேவைவழியினால்" சிறப்பாக அதனை அறிந்துகொள்ளும்பொருட்டு வைராக்கியமுற்றமறையவன் சமதமாதிசம்பன்னஆசாரியனையேயுடைக, நாலுணர்ந்தவனையினுஞ்சுத்தநிட்டைகப்பிரஹ்மஞானமாயற்க, குருவேகதி; என்றுசுருதி கூறுதலின் ஆசிரியரைச் சரணாகதியடையும்வாயிலாகவே ஞானலாபமானதுண்டாமென்றருளல்:—

௬. தஜ்ஜ்ஞேயம் ஸதாம் சுச்ரூஷயா நத்யா ப்ரச்நைச்ச ஸத்க்ருதை:
புருஷவ்யாக்ர, ஸம்ஸேவிதா வதிஷ்யந்தி ஸந்தஸ் தத்த்வவிசாரதா:.

௧. அதனையறிந்திடுதிகல்லரியமன்னவனே, சதவதானரின்சதுர்விதசேவைதம்மாலும், விதமதாகியவணங்கலின்வினவினாலும், முதமெய்ஞ்ஞானியர்முற்றுணர் பெரியவர்மொழிவார்.

வி. தத்து = அந்தஞானமோ, சதாம் = சத்துக்களின், சுச்ரூஷயா = ஆத்த அங்கதானசம்பாவசேவைகளினாலும், நதி:= சாஷ்டாங்க பஞ்சாங்க அஷ்டாங்க நமஸ்காரங்களினாலும் ப்ரச்நை = ஐயங்களையும்அறியாதவற்றையும் வினாதலினாலும், "ஹே பகவன் அடியேனுக்குபதேசிப்பீராக" என்னுஞ் சாஸ்திரமொழிக்க ப்ரார்த்தனையினாலே, ஹேபுருஷவ்யாக்ர = ஹேபுருஷோத்தம! ஜ்ஞேயம் = அறியத்தக்கதாம்; எங்ஙனம்? சேவிக்கப்பெற்றவராய, சந்த: = சாதுக்கள், வதிஷ்யந்தி = உபதேசிப்பார்கள்; யாவர்கள்? தத்துவவிசாரதா: = வஸ்துவின் உண்மை விடயத்தில், விகதமாயினள் சாரதையென்னும்சாகவதி எவர்களினின்றும் அவர்கள் விசாரதர்கள், இரக்கமற்றவர்கள், அநுபவிகள் என்பது பொருள். தத்வேதத்வியுற்பாதனத்தில் நிபுணர்கள் தத்வவிசாரதர்களும் எனத்துவந்துவவககேஷசமாசமாம். "ஞானிநஸ்தத்வதர்சிந:" ஸமித்பாணி:

ஶ்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம்" என்னும் மிருதியிலும், சுருதியிலும் இருசிறப்பானே இவ்வண்ணம் கற்பிக்கப்பெற்றதாம். சமித்பாணி = சமித்துப்பாரத்தைக்கவர்ந்த, கரத்தின். சுரோத்ரியம் = அத்தியயனசுருதார்த்தசம்பன்னம். ப்ரஹ்மநிஷ்டம் = எல்லாத்தொழில்களையும்விட்டுக் கேவல அத்வயப்பிரஹ்மத்தின்கண்ணிஷ்டையுடையவன். இத்தகையனைப் பணிவிடைகளாற்சந்தோஷிப்பித்து சமயம்நோக்கித் தன்குறைகளைத்தெரிவித்து அநுக்கிரகம்பெறவேண்டுமென்பதாம்.

ஸ்ரீ பகவற்கீதை:—விழியாமென வறிவாலறிவுறுவார்விழிவசமே, வழிபாடுசெய்தவர்சேவடிமலர்சூடிடவவரே, மொழியாதெவர்களுமியாவையுமொருநீயெனதிடையென், றழியாவகையதுவாவதொரறிவேயருளுவரால்.

சர்வகர்மபலபூதமாயஞானமானது, ஆசிரியரையடைந்து அவர்க்குத் தண்டம்போலத் தீர்க்கநமஸ்காரஞ்செய்து; அவரது திருவருளைநோக்கிச் சமயங்கண்டு ,எங்ஙனம்பந்தம், எங்ஙனம் மோக்ஷம், வித்தையாது, அவித்தையாது என வினவி, அநேக விதமான பணிவிடைகளினாலே மகிழ்வித்துக்கிடைக்கப்பெற்ற வுபதேசத்தினாலே அடையப்பெறும் என்றுணர்தி. சாஸ்திர நிபுணரும் அபரோக்ஷ அநுபவசம்பன்னரும் ஆகிய ஆசிரியரே யுனக்குபதேசிப்பரென்பதாம். அநுபவநிஷ்டரானே யுபதேசிக்கப்பெற்ற ஞானமேசவிலாச மகாமோகத்தையகற்றும், நூன்மாத்திரமுணர்ந்தோரானே யுபதேசிக்கப்பெற்ற தங்ஙனமாகாதாம். அவர் அருளுவர் என்றபன்மை பூஜையிலாம், ஆசிரியப்பன்மைக்கருத்தாலன்றாம்.

சேவையின்சிறப்பு, *குறுந்திரட்டு:—ஆவதாவதிலதற்றவன்னர்தம், பாவம்யாருமறியப்படாதவர்க், கேவல்செய்துதிலேவரெய்துவார், மூவர்தேவர்மொழிந்தருண்முத்தியே.

ஞாலமுண்டவன்றலைமிசைசுமப்பன் மெய்ஞ்ஞானிவேண்டுவவெல்லாம், ஆலமுண்டவனவன்பினே திரிகுவனவனடித்துகட்கன்றே, சீலமன்னருமற்றுளதேவருந்திசை திசைபணிந்தேத்தக், காலிரண்டையுந்தலைமிசைவையெனக்கழறுவன்கமலத்தோன்.

சிவஞானநிலையம்:—பஞ்சபாதகமுன்னாய பரமபாதகங்களெல்லா, மஞ்சிடா தியற்றிமூர்க்கனச்சசிவன்னனன்றனும், மிஞ்சுவேதனையாலான்மவேதிதாட்கேவல்செய்தே, யெஞ்சிடாவீடுபெற்றானேவலின்பெருமைபாராய்.

துளக்கமில்பாதகந்தான்செய்தவச்சுபகையுற்ற; வளப்பரும்வருத்தந்தன்னாலாங்கொரு ஞானிதன்னை, யுளத்தினால் வணங்கியேவல்செய்துறவீடுபெற்றாள், விளக்கமாஞானியேவல்வேதியாதேதுமுண்டோ.

சேவையின்மகிமையும்வினைதலின் முறைமையும்சசிவன்னபோதம்:—இடனேமுதலாகவுவந்திறையோ,னேவும்பணிசெய்திவனுஞ்சில,நாளுடனேய் வனே திருமேனிதனக், குரியானெனவுற்றனனும்பனொடே.

நன்றாய்முனிதாள்வழிபாடதனு, றுறுவிதமானபிறப்பிணைவிட், டொன்றாகியவீடுணருத்தமர்கட், குளசாதனநான்குமுதித்தனவே.

முனிவன்றிருமுன்புளதன்குறைதான், மொழிவன்சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப், பணிவந்திருகண்கள்பதங்களிலே: பலகால்வலம்வந்துபணிந்தனனே..

அருளே வடிவாகிய மாமுனிதான் அறியாதவர்போலவழுங்கலுறும், பொருளே தெனமைந்தனடுங்கினனிப், பொல்லாத பவப்புணரிக்கெனவே என்பவாம்.

தீர்க்கதண்ட நமஸ்காரம் சிவதருமோத்தரம்:—வலஞ்செய்து நீண்ட தணைமானவிதிமுறை தழுவத், தலந்

தன்னிற் பணிந்தெழுகதலைகரமற்றிருகன்னங், துலங்குமுக வாய் புயங்களெனுமெட்டுந் தோயமயி, ரிலங்குசிரங்கர முழுந்தாளெனு மைந்துமிலங்குறவே.

இந்தஞானம்பெறுமுறை வைராக்கிய தீபத்திலும் காணலாம்:—பாரினட்டாங்காதிகளொடக் குரவற் பலதரம் வலம் வந்து பணிந்து, சீரியதுதிசெய் தனுதினம்வற்றாற் றிருவுளத் தடைக்கவும் பட்டுத், தூரமோட்டணிமையற விறை கருணை சுரக்கு நாளளவுநின்றேவ, லாரிவன்றனக் கொப்பெனச் செய்தொண் சரண்பெற்றறியவேண்டுவ முழு தறிந்தான்.

ஞானாசிரியரையடைந்துகொண்டால் அவற்குயாதுமரி திலை எளிதாம் எனச் சமயாசாரமுஞ் சாற்றுகின்றபடி:— பெருந்தவ மில்லான்றன்னைப் பேணிய மடந்தையுள்ளத், திருந்தவை முடிந்ததென்றுலிகபரந்தெரிந்தஞானப், பெருந் தவக்குருவைத் தெய்வமென்று மெய்பேணவல்லார்க், கரும் பொருளியாதுமில்லை யிருமையுமகலிடத்தே.

சொரூபானந்த சித்தியினும் சகலவேதமுணர்ந்தவர்க் கும் ஆசிரியரடைவு இன்றியமையாமை காட்டப்பெற்றது:- வருபிறப்பறவேவேண்டி ஞன்மறையீறெண்ணு மம்புயத்தினை மலர்த்தற், கிரவியாய் நெஞ்சிற்கியைந்த நற்குருவை யா தொருவழியினுமிறைஞ்சி, யருள்சுரந்திடுதற்காவதே செய் வானருமறை முடிவெலாமறையும், பொருளினேராக வுமக் கெனக்கிசன்புகன்றவப்படியிலே புகன்றேன்.

ஆசிரியரே சகலமுமென்றது அரிய மெய்ம்மொழி:— பிலன்கள்வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத்துவ ஞானி, நலங்கொளுமமா மந்திரஞ்செபித்திட பார்ந்தவனீ ராடுஞ், சலங்கொடீர்த்தமாமவன் றிருமேனியே சகலதெய்வ முஞ்செவ்வாய், மலர்ந்தவாசக மறுபிறப்பெனவருமயற்பிணி

மருந்தாகும். சீடன் நடந்துகொள்ளும்விதம் பெருந்திரட்டுச்சீடசாரத்துட் காண்க. 40

அ-ஷை. குரு உபசதனத்தையே மூன்றுசுலோகங்களாற் பெரிது கொண்டாடிய நூல்:—

௬. நாநாஸங்காஞ்ஜந: குர்வந்நைகம் ஸாதுஸமாகமம், கரோதி தேந ஸம்ஸாரபந்தநம் ஸமுபைதி ஸ:

௬. பதனமேவினர்பல்வகைப்பற்றினைப்பரவாச், சுதைய தாமெனுமனமொழி சொலவிலொன்றுன, விதனமேகியசாது சமாகமம்விரவார், அதனினூற்சமுசார பந்தனத்தைமிக்கடைவார்.

வி. அயம்ஜந: = இம்மநுடர், நாநாஸங்காந் = நானுவகையான புத்திரதாரதனுதி விடயங்களாகிய பற்றுக்களை, குர்வந் = செய்துகொண்டு, தேந = அதேகாரணங்கொண்டு, ஏகம் ஸாதுசமாகமம்=ஒரு ஒப்பற்ற சாது சங்கத்தை, நகரோதி=செய்வதில்லை, ஆகலின், ஸ:=அச்சனம், சம்சாரே பந்தனம்சமுபைதி=குடும்பத்திற்கட்டைமிகவும் அடையும்.

"காகவுள்ளத்தின் மோகச்சங்கங்களை, மூகரெத்துணை மூடி முயங்குறும், ஆகவிங்கிவருள்ளத்திலத்துணை, சோகச்சங்கங்க டுன்பந்துளைக்குமால்." எனமகாபாரதத்தே மலரப் பெற்றுளதாம்.

தீயோர் சங்கம் பந்தவேதுவாதலின் தீர்க்கத்தக்கது முற்றினும் என்றருளப்பெற்றது. அசத்சங்கத்தை வெறுத்தற்குதாகரணம்:—அதிக்கிருதாமிருதம், என்று மஞ்சுவனிணையடி சூட்டிடப்பெற்றுப், பின்றும் பேதையர்போல் வயிறதுவளர்த்திடுத, லொன்றுந்தான்பொருளாகவே யுழன்றிறைகழற்கே, நன்றன்பின்றிய கண்ணிலாக்கூழை நாய்களுக்கே.

வொடு மடியென்னுஞ், செயலறுத்திடுஞ் சிவமது திகழ்த் திடுந் திகழ்தரு தெளிவாகி, யயலறுத்திடு மகமிதமுதல்வரு மனைடயவுமொருநாமா, மியலிசைத்திடு மிறைவன தடியவ ரெழின் மிகுதிரடானே.

ஆலமார்தரும் பிறவியையறுத்திடு மன்பொடுபகையில் லாச், சீலமேதருஞ்சினமுதல்களைதருஞ் சென்றடைபவர்க் கெல்லா, மூலமாகியவொருபொருண் முழுத்திடு முனிவிலா வருளாய, கோலமார்தரு குருபரனடியவர்குலவிய திரடானே.

ஓது நான்மறைப் பொருண்முடி வினையொரு மொழி யினிலுரை செய்யுங், காதும்வாத நற்கவலையெலாங்கெடக் கருணையே மிகநல்கும், பேதமாமயற்பேரிருள்கழி தரப்பே ரொழி பெரிதோங்கும், நாதனுறுய வந்த நற்சொருபனல் லடியவர் திரடானே. 42

(அ - கை.) அருளியபொருளேயே சுருக்கியருளல்:—

சு. உதாரதாவு ஸஂஸாரஜநதஂவொ மாநஷதீவஉவுடுஹஃ, யஜாகவுாநவுநவுநேதிஜயஂதகவுதஃ.

க. மற்றவைவெளியவை மன்னனேமகா, நெற்றவை யரிதினு மரிதென்றோர்திநீ, பெற்றறிவறிவதன் பிறந்துமே பிறப், புற்றவமுறுவதின் றதனினலரோ.

வி. உணர்ந்துகொள்வதன் சௌகரியப்பொருட்டு, இதரத் சுலபம் ராஜந்சங்கே அதீவதுர்லப: என்றருளப்பெற் றது. ஹேராஜந்! ஹே அரசனே! இதரத்சுலபம் = பிற வெல்லாம் எளிதாம், சத்சங்க = சாதுக்கள்கூட்டம், அதீவ துர்லப:=மிகவுமே அரிதினும் அரிதாம். சத்சங்கமோ, மநுடயோனியின்கண்ணும் ஜந்துக்கட்கு அத்தியந்தவைராக் கிய தரிசனத்தானே சிலவருக்கேயாம். அநேக ஜன்மங்க ளானே யாக்கப்பெற்றசுகிருதபலத் தன்மையானே மிக மிக வுமே அரிதினும் அரிதாம் சற்சங்கம். யத்=எக்காரணத்

திரனே, தத:=சற்சங்கத்தால், ஜ்ஞேயம்=அறியத்தக்க ஆன்மாவை, ஜ்ஞாத்வா = உணர்ந்து, புநர்பந்தம்=மீண்டுங்கட்டை, நஏதி=அடையமாட்டானே, தத:=அக்காரணத்தானே, சற்சங்கஞ்செய்யத்தக்கதாம். நியமமாகச்சற்சங்கஞ் செய்யவேண்டியதவசியமேயாமென் றருளியபடிச் சற்சங்கம் அதிவதுர்லபம் என்றதற்குதாகரணம் ஞானவாசிட்டம் தசரதர்வாக்கியம்:— நினைவற வெளிதின் வந்த நின்னுயர் காட்சியாலே, வினைபெலாந்தவிர்ந்து வெய்யோன் மேவியகமலமொத்தேன், இனையதோரின்பமென்றுமிமைபந்திலேன்மழையிலாநாணை தருமழையுமந்தனண்ணியகண்ணுமொத்த.

உடலொடுவின் சென்மார்க்க முற்றெனவொழிந்தவாவிக் கடமுறவந்ததென்னக்கணைகடலமுதகும்ப, மிடமுறவெப்திற் றென்னவெந்தைநீ வந்தவின்பஞ், சடமெலாங்குளிர்ப்ப நின்றென்றனர்வெலாமகற்றிற்றன்றே.

காதலும்பயமுமன்புங்கதமும்வன்பிணியுமில்லா, மாதவசிவணீவந்தவரவிதுபுதுமைத்தாகும், யாதுநீகருதிற்றன்ன தியன்றனனுணர்த்துகென்றான், மேதகுமுனிவன்கேட்டு மெய்புளகெறிந்துசொல்வான்.

ஸ்ரீ இராகவர் திருவாக்கியம்:—பெரியவர்நண்பதிதூரஞ் செல்கதிகிட்டாதுண்மைபெறற்கொணுதாங், கரியமனமோகிஞ் குமுண்மகிழ்ச்சிதூரமதாங்கருணைதோன்று, விரியுமிழி வதிதூரத்தினுமணுகுநிலைமையேயாய்வேரும்வீழ்வோர், திரியவுடனெழுவர்சிறியவர்கூட்டமெளிதரிதுதெளிந்தோர்கூட்டம்,

புசுண்டர்வாக்கியம்:— இருக்கவென்னவாசனந்தந்திருந்தபின்னரினிமையுட, னருக்கியத்தைமுதலனைத்துமளித்தன்பானநல்லுரைகள், பெருக்கவோதிப்பெரியோய் நின்காட்சியமுதப்பெருமழையால், வருக்கமுடனெங்கள் குளிர்ந்தேதன் அறிவிந்துடலம்வருந்தினமே.

அன்றுதொட்டேநான்புரிந்தவறங்களெல்லாநின்வடிவீர, யின்றுபலித்ததுயரறிஞரிணக்கமென்னுநிறைநிலவு, மன்றல முழுமபமாக மாறாச் சுகமியார்க்களியாது, நன்றிதென்று முயிர்க்குறுதி நல்லோரருளிற்பிறிதுண்டோ.

பரமமுணர்ந்தேனென்னினு நின்பார்வையா லென்பாவமெலாம், விரைவிலருந்தலால்விந்தப்பிறப்பேமிக்கபயனுடைத்தால், வரதனேயென்றெனை மீண்டும்பூசைதான்மற்றவனை, யுரவிதாயுன்னுடன்பிறந்தோரொழிந்தவாறென்னுரையென்றேன்.

போற்ற வணங்கப் பூசிக்கப் புகழவருந்திப்போய்க்காண, வாற்றவரியோனெவனவன்பிறவியறுப்போர்க்கனவரதஞ், சாற்றுமகத்தாற்றீர்த்தத்தாற் றானத்தாற்கிட்டா, ஆற்றவறிவாற் பிறவியறுத்துயர்ந்தோன்பத்திதரும்பயனே.

நிகரறுசந்தோடவமுதமையப்பெற்றா னெடும்போகஞ்சாமந்நிறைசந்தோட, மகனுறவாசையில்விழுநெஞ்சறிவைநோக்கி லழுக்குறுகண்ணுடியிலநம்போற்றோன்று, மகிழ்குணமெ, தியபுருட மகிமையோனைமாதவருநராதிபரு வணங்காநிற்பர் சகமெனுமாயையைவெல்லத்தக்கோர்க் கெல்லாந்தப்பாதசகாய மாஞ்சாதுசங்கம்.

அறக்குறைவை நிறைவாக்குஞ் சம்பத்தாக்குமாபத்தைச் சுபமாக்குமசுபந்தன்னைச், சிறக்குமுயர்ந்தவர்கூட்டமென்னுங் கங்கைச்சீதநீராடினார்க்குச்செந்தீவேள்வி, யிறக்கரியதவந்தானந்தீர்த்தம் வேண்டாமிடர் பந்தமறுத்தெவர்க்கு மினியோராகிப், பிறப்பெனும்வேலைப்புணையாமுணர்வுசான்றபெரியோரை யெவ்வகையும் பேணல்வேண்டும்.

எவ்வகையுமென்றமையானே எவற்றைவிட்டும் ஏவல் செய்யவேண்டுமென்றதாயிற்று, இதனானே. அதிக்கிருதாமிருதமும்:—தருமமோடுதவம்பலவேள்விசெய், கருமமோடுறு

பல்கலைக்கல்வியும், வருமொர்மாத்திரைவள ளுக்கேவல்செய், பரமர்வேண்டுவரோவிந்தப்பாழ்களே.

காலவஞ்சகமுங்காயசித்தியுஞ், சாலுஞ்சத்திமையுந்தீது விச்சையு, மேலவந்தெனையாண்டவனேவல்செய், பாலர்வேண்டுவரோவிந்தப்பாழ்களே.

சவலைவாதமுஞ்சாற்றியதர்க்கமுங், கவலைநூல்களுங்கற்பிதவேடமு, மவலஞானமுமாண்டவனேவல்சேய், பவரும் வேண்டுவரோவிந்தப்பாழ்களே. இங்ஙனியம்பும்,

அநுபவசாரமும்:—ஏவலால்வரும் எண்வகைச்சித்தியும், ஓவில்செல்வமுமொன்றுமெய்க்கல்வியுந், தாவில்வீடதுந்தானெனையாண்டவ, னேவலாலிதற்கொப்பிலையில்லையே. என்று ஏவலுக்கொப்பிலையென்னும்.

அநுபூதிநிலைமையும்:—இறைவனுக்குறுமேவலனுலொரு சிறுவணுத்திகழ்மேருவதாயிடு, மறைசண்மற்றரி தென்பவற்றுள்ளெலா, மறைமேலரும்பொருளென்னுமால். என்று அருமைப்படுத்தும். 43.

பூரணப்பிரகாசமும்:-- இருகையுமெடுத்துநின்றங்கெழின் மறையிசைத்ததொன்றே, பொருவிலாகமபுராணமுதலெலாம் புகன்றதொன்றே, யரியயனமரரெல்லாமறுதிசெய்தற்றதொன்றே, யருபரனேவுறன்மேலரும்பொருளில்லையென்றே. என்று புகலாநிற்கும் என்றுணர்க.

(அ - கை.) ஞானத்திற்கும் பலத்தையருளல்:—

சு. தத்ஸவஜ்ராணிஹரு காநிஷ்வாதமெ ந்ருவாஹிவஸ்ரு திகுதிவாவாபெதாஜந்தூஹஸ ஷஸஸாகுவருஜஷ்யதெ.

க. அதுகொடிங்குயிரயாவையுந்தம்மது, சிதுவுருத்தனிலேசிவங்காணுமால், அதிகவன்பவமாற்றியிருந்தினம், அதனினின்றதனுன்மிக்ககலுமே.

வி. தத:=சற்புருடரானேஅருளப்பெற்றஞானத்தானே குருவருளிய உபதேசத்தானே, பிரத்தியக்கான்மாவைக் கவரும் ஆற்றல்வாய்ந்தவனாய், சர்வாணி=சென்றரும்நிகழ்வுகளாகிய, பூதாநி=ஜராயுஜாதிகளை, ஸ்வாத்மநிஏவ=தன்னுடைய இருதய தருப்பணத்திலேயே, அபிபச்யதி = நாற் புறமும் மேலும் கீழும் சிறிதுங் குறையாது காண்பன்; தடையற்ற முற்றறிவுண்மையை அடைந்திருப்பன். அவ்வாறாகவே ஆன்ம விஞ்ஞானத்தால் எல்லாவுணர்வும் உண்டாம் என்பது திண்ணமாயிற்று. அவ்வான்மவுணர்வினனே, அதிபாபரதோபி ஜந்து=மிகுந்த பாவங்களில் தற்பரமாய்த்திரியும் பிராணியும் விடுபடும் "யாவனொருவன் றன்னுடம்பை யானென் றிருக்கு மியல்பொழிந்தான், யாவனொருவன் றன் கரணம் யாதொன்றோடும் விழைதலிலான், அவனவனிவ்வுலகத்தை யடையக்கொன்றா னாயினுமோர், பாவமில்லையவன் கொன்றபழியு மில்லைபார்மன்னா." என்றகீதாவசனப்படி, தத:=பாவத்தினின்றும், தஸ்மாத் = ஞானத்தானே, ப்ரமுச்யதே = முற்றிலும் விடுபடும் "இல்லார் தூலமெரியினில் விழுமுன்னெரிந்து சாம்பராமென்பதுபோல, எல்லா வடிவமுமாகிய விவன்றன் எல்லையில்லாச் சஞ்சிதமெவ்வையும், நல்லார் ஞானகாலத்திலுதித்தவும் நாசமா நாட்டிய வினைதனை யொழிந்தே. என்னும் சாந்தோக்கியம் ஞானத்திற்குப் பாவதாகத்தன்மையைக்கூறுதலின். 44

(அ-கை:) இதனையே திருஷ்டாந்தத்துடன் அருளிச் செய்தல்:—

சு யதைதாம்ஸி ஸமித்தோऽக்நிர் பஸ்மஸாத் குருதேऽர்ஜுந,
ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா.

க. இருவகை வினையையும் ஞானமாமெரி, யெரிதரப் புரிதரு மிமைப்பிலே யிவண், டருவருமெரி மிகச்சருவகாட்டமும், ஒருநொடி பொடி படுத்தோங்கன் மானுமே.

வி. ப்ரசித்த: அக்நி:=உலகிலுள்ள தீயானது, சர்வம் := யாவற்றையும், க்ஷணாத்=ஒருநொடிப் போதில், பஸ்மதாம் நயதி = சாம்பராம்படி செய்வதே, யதா = போல, ஞானாக்நி=பிரஹ்மஞான அக்கினியானது, த்விவிதாந்யபி கர்மாணி=இருவகையாய கருமங்களையும், க்ஷணாத்தகதி= ஒருகணகாலத்தில் எரித்துவிடும். இருவகை = அறமறங்கள். வித்வான் புண்யபாவங்களை விசிறியெறியும், அவர் அறமறங்களை யகற்றியழிக்கும், அபுண்ணிய புண்ணியவுபரமமாக, என்றற்றொடக்கத் தனவாய சுருதி மிருதிகளினால், பாவமென்னும் புண்ணிய விநாசத்திற்கும் முக்தனிடத்தே இஷ்டத்தன்மை யுண்மையின் இருவகையாய என்றருளப்பெற்றது. ஸ்ரீபகவானும் இதனை "எறியாவெரி வருகானிடை பெரியாதனவெவைதா, மறியாவறி வுடையோர்களு மறிவாராது விதுபோற், குறியால் வருஞானா மெய்யனலே கொளவிடுமேற், பொறியால் வருவினையானவை பொடியாமிதோர் பொருளே." இங்ஙனமியம்பி யருளியுள்ளார். காய்ந்த ஈரக்காட்டங்கள் யாவற்றையும் பாய்ந்தெரியுந் தீ பரஸ்மீபாவஞ்செய்தலேய்ப்ப, ஞானரூப அக்கினியானது பாவபுண்ணிய சருவ கருமங்களையும் அவற்றின் காரணமாய அஞ்ஞானத்தை யழிக்கும் வாயிலாக வரையின்றிக் கெடுத்துச் சாம்பராக்கும். "அதனை யறிந்திடப் பின்முன்னைகங்களின், இதமிலைபற்றல் இரிவது மெய்தும், விதமது மறையின் விதானமாதலின்" ஈண்டுப்பூர்வபக்கத்தில், பிரஹ்மவித்திற்கும் சஞ்சித பாவபலபோகத்தின் பின்னரே முத்தியென்பதாம், சித்தாந்தத்திலோவித்தையுற்பத்தியின்பின்னரே பாவநாசத்தாற்சீவன்முக்தியாமென்பது பலவேற்றுமையாம். பிரஹ்மவித்துக்குப்பின்முற்பாவங்கள் பற்றாமல் விநாசங்களாமா? அல்லவீர? என ஐயுற்றவழி, கருமமுண்ணுமற் கழியமாட்டாது என்னும் மிருதியினனே அல்லவா மென்பது பூர்வபக்கமாம்; சித்தாந்தமோ,

அதனையறிந்திட=பிரஹ்மசாக்ஷாத்கார மெய்திய போது பின் முன்னகங்களின்=ஞானத்தின் பின் தேகேந்திரியாதி வயத்தாற் சம்பவிக்கப்பட்ட பாவம் பின்னகமாம், ஞானத்தின் முன் இப்பிறப்பிலேனும் முற்பிறப்பிலேனும் சஞ்சிதமாய பாவம் முன்னகமாம், அவற்றின் பற்றின்மை நாசங்கள் பலிப்பனவேயாம். எங்ஙனெனின் விதமது மறையின் விதானமாதலின்=அஃதுபதேசிக்கப் பெற்றிருத்தலின்:—தாமரையிலையை நீர் நனையாபோல், ஆமறிஞனையும் தீவினையணவா. இல்லார் தூலம் × யொழிந்தே." என்னுஞ் சுருதிகளானே, அவ்வுத்தர பூர்வ அகங்களின் பற்றின்மை விநாசங்கள் பிரஹ்ம வித்திடத்தியம்பப் பெற்றிருத்தலின். இவ்வண்ணமே, "பராபரமாம் அப்பொருளை வயங்கக்கண்டாற் கருமமறும்" என்பதாதி சுருதியானே நிர்க்குணப் பிரஹ்மவித்தினிடத்திலும் உத்தரபூர்வ அகங்களின் பற்றின்மை விநாசங்களின் வியபதேசத்தால். மிருதியோ அஞ்ஞன் விடயம் ஆமென்பது கருத்தாம்.

பூர்வம் பிரஹ்மவித்திற்குப் பாவத்தின் பற்றின்மைவிநாசங்கள் கூறப்பட்டன, அவ்வாறி புண்ணியத்திற்கும் அவையாகாவாம், அதற்குச் சுருதி போதிதத்தன்மை யுண்மையானே, மறையறைந்த பிரஹ்மஞானத்தோடு முரணின்மையின் எனின், கூறப்பெறுகின்றது:—"இதரத்திற்குமிங்ஙன் பற்றில வீழ்ந்திடினே" பலமிதில் முன்போலும். புண்ணியத்திற்கும் பற்றின்மை விநாசங்கள் பலிக்கின்றனவா? இல்லையா? எனவையமாயவழி இல்லையென்பது பூர்வபக்கம், சித்தாந்தமோ, அகர்த்தா ஆத்மபோத சாமர்த்தியத்தானே இதரமாய உத்தர பூர்வ புண்ணியத்திற்கும் இயம்பியவண்ணம் பாவம்போலும் பற்றின்மையும் விநாசமும் பலிக்கும், "அறிஞனிவ்விரண்டையு மகன்று தாண்டுவன்" என்பதாதி சுருதிகளானே அது கூறப்பெற்றிருத்தலின்.

இன்னணம் புருடதௌரேயனுப் பிரஹ்மவித்திற்குப் பந்த ஹேதுக்களாய புண்ணியபாவங்களின்மையின் தேகம்வீழவே முக்தியவசியம் பலிக்கவேசெய்யும் என்றதிகரண மிரண்டன் பலம் கூறியவாறும்.

பூர்வம் ஞானத்தானே கரும க்ஷயம் பொதுவகையிற் புகலப்பெற்றது, அதற்கீண்டு நுகர்வினையயல்விடயத் தன்மையானே சிறப்புறுத்தல்:—மற்றநாரப்தகாரியமே முன், பெற்றது பாதத்தவதியாதலின். இதன்கண்ணே பூர்வபக்கத்திற் சீவன் முக்திய சித்தியமாம், சித்தாந்தில் அதன்சித்தியாம் என்பது பலபேதமாம். ஈண்டுத் தொடங்காவினைபோலும் தொடங்கிய அறமறங்களும் ஞானத்தால் நசிக்கின்றனவா அல்லவில்லையாவென ஐயப்பாடுண்டாக, "இவனதுவினைகளிரிந்தேகும்" என்று சிறப்பின்றிச் சிரவணமாதலின் நசிப்பனவாமென்பது பூர்வபக்கமாம்; சித்தாந்தமோ, தொடங்கிய அறமறங்கள் நசியாவாம், விட்ட அம்புபோலும் முயன்றபலத்தன்மை யுண்மையின்; மற்றேறு, அநாரப்த காரியமே முன்—அப்பிரவிருத்தபலம்வாய்ந்து, அநாதிப்பரம்பரையில் ஞான உற்பத்தி பரியந்தமுள்ள சஞ்சித புண்ணியபாவங்கள் யாவை யுளவோ அவையே ஞானத்தான் நசிக்கும்; என்னை, பெற்றது பாதத்தவதியாதலின்—"அவனுக் கவ்வளவேதாமதமாம், சவமுற்றுடலமெத்துணை சாம்பா, சிவ முற்றிடுவன் பின்னர்த்தர்னே" என்று தேகவீழ்ச்சியவதியின் சிரவணமாதலின் என்பதாம். இவ்வண்ணமாகவே சிறந்த சுருதியை யனுசரித்துப் பொது மறையை பொருத்திக்கொள்ளவேண்டும் என்பது கருத்து. என்பதாதி பிரஹ்மமீமாம்சை நியாயங்களாலும் அவற்றிற்கனு குணமாய்த்தந்தசுருதிகளாலும், ஞான உற்பாதக தேக ஆரம்பகமாய பிராரப்தபலகருமத்திற்குப் போகத்தானே அத்தேகாந்தத்தில் அழிவாம்;

சஞ்சித ஆகாமிகட்கோ ஞானத்தானே விநாசமாம் என்று நிண்ணயிக்கப்பெற்று இருப்பினும், உத்தரபூர்வ அகங்கட்கேபோலும் பிராரப்த கருமத்திற்கும், மூலாஞ்ஞான நாசத்தானே நிர்ப்பீஜமாயிருந்தே "அவனுக்கவ்வளவே" என்னுஞ் சுருதியின் வேறோராற்றாற் பெறப்படாமைகொண்டு தக்தபட நியாயத்தாற் போகத்தைக் கொடுக்குந்தன்மையுளதாம் என ஆண்டுப் பிரதிபாதித் திருத்தலின், சருவகருமங்கட்கும் நிர்ப்பீஜத்தன்மைச் சம்பாதனரூபமாய பஸ்மீகரணம்முரண் படாதாம் என்றெண்ணுக. 45.

(அ - கை.) இதுவுமது:—

சு நஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹ வித்யதே, தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி.

க. இதரமாய்ப் புனிதமாமென்பதேமன்று, சதநமே யுணர்வொடுஞ் சமதை சார்தரா, கதிதயோகத்தினாற் காலபாகத்தா, லிதனிலே யடைகுவரினிய யோகியர்.

வி. ஏதனால் ஞானமானது புண்ணிய பாவங்களைப் பொடிப்படுத்துமோ, அதனால், ஹேநிருப=ஹேராஜனே, இதரத்பவித்ரம் = அக்கினிபவித்திரம் அம்புலி பவித்திரம் அப்புப்பவித்திரம் என்பதேயாதி சுருதிப்பிரசித்தம், ஞானேந சமதாம் ந ஏதி=ஞானத்தோடு சமத்தன்மையை அடைய மாட்டாது.

சருவ கருமக்ஷயம் உடனே ஞானத்தால் ஆதல்போல அக்கினியாதிகளால் ஆகாதாம். அந்த ஞானத்தை, யோகத்=யோகாப் பயிற்சியானே, காலேந=காலநீண்டு செய்யப்பெற்ற யோகபரிபாகத்தானே, யோகிந:=யோகப்பயிற்சி மிக்கவர், ஆத்மநீயேவ = இத்தேகத்தின்கண்ணே, அவகச்சந்தி = அவ்வவ்வுபாதி யாகாரத்தன்மை நிஷேதத்தானே

அடையா நிற்பர். "இதநியமம் பரி சங்கையேனுமே, விதி யினர்த்தமெனப் பெறவேயதால், அதவனுன்மவி னேக்கத ஞனேயே, புதமெனும்பரமான்மனைப் போற்றுவாம்." என் காரணத்தானே ஞானமானது கரும்மூல பூத அஞ்ஞான விநாசனத்தானே நிர்ப்பீஜத்தன்மை ரூப கரும பஸ்மீபாவத் தைச் சம்பாதியா நிற்குமோ, கருமம்போல மேலா மினுக் காகப் பாவத்தைப் போக்காதோ, அக்காரணத்தானே சமூல பாவ நிவர்த்தகமாய ஞானத்தோடு ஒப்பிடத்தக்க பவித்திர பாவசோதகம், கருமங்களின் இடையே கிடையாதாம் என் பது கருத்து.

ஞானமே யுயர்ந்தது என்பதற் குதாகரணம்;—நிரு மலப்பிரகாசம்:—அருவமா யகண்ட மாம் பிரம மென்பது, சுருதியின் முடிவெலாந் தொகுத்துச் சொல்லவும், உருவ மாஞ்சடத்திலே யுண்மைவைத்துழல், பிரமரைப்பிரமம்வெம் பிறப்பில் வீழ்த்துமால்.

சித்ததே சிவன்றிருமேனி யென்பது, மெய்த்த வேதாக மம் விளம்பக்கேட்டுநற், சித்தினைச்சடத்திலே வைத்துநம்பு மிப், பித்தரைப் பிறப்பிலே பிரமந் தள்ளுமால்.

சமாதி:—ஏற்றியதீப மெண்ணிற் சிறியதே யெனினு மெங்குந், தோற்றரு மிருளை யெல்லாந் துவக்கறப் போக்குமா போற், போற்றருஞான மற்பமாயினும் பொருந்த நோக்கிற், பாற்றிடும் பெரியபாவப் பற்றினையெல்லாந்தானே.

சொரூபானந்த சித்தி:-விழுமிதாமயமேதங்கள் பண்ணி னும், பழிமிகும் பஞ்சபாதகம் பண்ணினு, மொழிவுறுமு மொன்றே யென்றுணருவா, னழிவிலானந்த நன்மையுந் தீமையும்.

சமாதி:--பெருநெருப்புலர்தலீரமென்று பாராதுபேணி, யெரியின்மே லிட்ட தெல்லாஞ் சுடுமதனிபல்பு போல

விரியுநற் சுபாசுபங்களென்னு மிவ்வியற்கை யெல்லாந், தெரி யினன் ஞானவன்னி சுடுமது திண்ணமேகாண்.

மெய்ம்மொழி:—செஞ்சுடர்த்தீயுட்புக்குச் சிலர்கண்மந் திரமருந்தாற், பஞ்சிழை யதற்குஞ் சேதப்படாது போந் தேறுமாபோ, னெஞ்சகமுழுது மின்ப நிறைந்த மெய்ஞ் ஞானயோகி, வஞ்சமாமாயாக்கூட்ட மயக்கினுமயக்குறானே.

போதரத் நாகரம்:—ஏறியகோடி மாமறையோரை யீறு செய்பாவமா மதனோடு, கூறிய நூற தாயிரகோடி கோவதை யாகும் பாதகமோடு, வேறுளதாகும் பாதககோடி மேவினு மேவுமோர்கணப்போதி, னீறதுவாகு நீடிய ஞான நீள்வலி யாலதா ரறிவார்கள்.

ஞானவாசிட்டம்:—ஞானமிக நன்றென்றேயபன் முதலா நல்லோர் கணவிலாநிற்க, நீயவாதிருந்தனை யென்பானுரிவ் வுலகெங்ஙனேர்ந்த தெங்ஙன், ஞானமுறவிறக்கு மென நினை கிலை யென்பேதையர் போற்றளர்கின்றாயென், ஆனகுரவனை யிறைஞ்சிப் பந்தம் வீடெப்படி யென்றறிகிலாயென்.

ஞானமடைந்த பொழுதிலாவனல் வீடுற்றேன்மனமிறந் தோ, னீனமானவகம்பாவப் பிராந்தியன்றோ விடர்பந்த, மான் வீடாவது மடமையந்த காரங்கெடலன்றோ, மானமிகு ந்த விவனெய்தின் மனிதர்பூசை செயவேண்டும். என்பன வாதியாகக் காண்க.

(அ-கை:) இதுவுமது.

சு. ஸக்திரோ நிதிய ஜயீ தத்வரோ ஜ்ஞாநநாவ்யாஸ், ஸர்வ தத்ரோடிமோக்ஷம் ஸ்வகாமோ நயாத்யௌ.

க. அன்பையுற்றவன்புலன்களை வென்றவனரிய யோ கத்தானே, னின்பமெய்யுணர்வெய்து வனெய்தியே யினிய

தாமது தன்னை, துன்பமின்றிய பரமமா முக்தியைத்தொட இடுஞ்சிலபோதிற், றன்பரங்கருணையி லருள்புரிதருந் தின்மா நிதிதானே.

வி. யோகத்திலும் பிரவிருத்தி பக்தியாதிமா யநுட்டிக்கத் தக்கதென்னும் ஞானம், இதுவும் குரு வாக்கியாதிகளில், பலம் அவசியம்பலிக்கு மென்னும் நி ரூபமாய சிரத்தைக்கும் உபலக்ஷணமாம் அம்சிரத்தை உடையவன் பக்திமானவன், இந்திரியஜயீ=ஜிதேந்திரிய தத்பர:=யோகதற்பரன், ஞானம்=தத்துவமசியாதி ஜன்னியமாகியபோதத்தை, ஆப்நுயாத்=அடைவன். ஞானத்தை, இகலோகத்தில், லப்த்வா=அடைந்து, போது பிராரப்த கருமத்தானே நிலைபெறுத்தப்பட்ட திரிய சங்காதத்தில் வாழ்ந்துகொண்டே முக்தரா போதினும், பரமம் மோக்ஷம் = விதேக கைவல்ய ஸ்வல் பகாலேந=பிராரப்த கருமபோக அந்தத்தில், அசௌ=இந்த யோகியானவன் அடையாநிற்பன். "... ணர் தக்கதேயாகுந் தற்பரம், மானுணரின்பங்கு மாரி யால், ஆனுணர்வில்லனே யோகியாகிலான் ஈனு கண் வன் குடத்தையேய்ப்பனே" எனவது கூறப்பெற்றுள மூயலும் யோகத்தினனே ஞானத்தைமுற்று நிற்பன் னும் தக்ஷஸ்மிருதி.

ஸ்ரீ பகவற்கீதை:—நீதற்பாலாம் வினைபுரிவோருக் நானி, லேதற்பால மறிவறி தக்கோரியரென்னி, பாலார் பாலுமிவ்வுண்மைப் பொருட்பாலுங், காதற் லரம்புலன் வென்றோரிவர் கண்டாய். அந்த ஞான முன்னர் மொழிந்த கருமயோகத்தானே தகுதியுற்ற யானவன், பரபக்குவகாலத்தில் தானே 'அநாயாசமாய் பாலடைவன், கருமயோகமின்றி முடியாதென்பது தகருக்

கருமயோகமிருந்தபோதினும் சிரத்தை முதலியவை இன்றி யவனுக்கு ஞானமில்தாம், சிரத்தைஞான அந்தரங்க சாதன மாதலின், அஃதவசியம் வேண்டற்பாலதாம். ஆசிரிய ருபு தேசித்த அருத்தத்தில் இஃதிவ்வாறே யாம் என்னும் ஆஸ் திக்கிய புத்தி சிரத்தையாம், அதனையுடையவன்சிரத்தாலு வனப்பெறுவன். இத்தகையனுக்கும் ஆலசிய முளதாயின் வாளா போஞ்சிரத்தை, ஆகலின் அதேநிட்டையன் ஆக வேண்டும்; சிரத்தையுடையவனும் தற்பரனுமிருப்பினும் பிராமாதிகத்தானே இந்திரிய பரவசப்பட்டு "ஊறியகடலு ளொடு கலத்தினையுடன் செல்காற்றே, வேறுகெய்தறைந்து மாய்த்து வீழ்த்துமா போலவேயாம்" என்றருளியபடி ஞா னத்தினின்றும் நழுவுதலும்கூடுமன்றோ என்றருளப்பெற்றது இந்திரியம் வென்றோன் என்றது; அத்தகையன் ஞானமடை மதில் ஐயப்பாடுமுண்டுகொலோ! ஞானசாதனகருமஅனுஷ் டானத்தின் பின் ஞானத்திற்கேபோலும், மோக்ஷசாதன ஞானவீயத்தின் பின் மோக்ஷத்திற்கும் விலம்ப முளதோ வெனின்? இலதாம், ஞானத்தையடைந்து பரம சாந்திரூப அவித்தையுதன் காரிய விருத்தியான முக்தியைத் தடை யொன்றுமின்றியே அடைவன்; தீபோதயத்தின் பின்னந்த கார நீக்கத்திற்றடையாது மின்றன்றோ.

பக்திமான் என்றதற்குதாகரணம்;போதரத் நாகரம்:— சித்தனே யுனையென்று பிரப்பஞன் றேசிகா வுனையென்று பிரப்புஞ, னித்தனேயுனையென்று மிரப்பஞ னின்மலாவுனை யென்று மிரப்பஞன், சுத்தனே யுனையென்று மிரப்பஞன் சொரூபனே யுனையென்றுமிரப்பஞ, னெத்திறனுமெப்போது மிரப்பஞ னெம்பிரான் கழற்கெல்லையி லன்பதே.

அருணெறிவிளக்கம்:—அன்பிநல்லற மன்பினன்பொரு, ளன்பிலின்ப மருந்தவமன்பிஞ, லன்பினஞானமு முத்தியு மன்பலால், வன்பதா மறந்தாலுமங்காருமோ.

அன்பினாற் கருமந்தவம் யோகமு, மன்பினாற்செயுங்கொடை வகை வேள்வியு, மன்பினான்முழுதாவது முத்தியு, மன்பினா லென்றறைந்திட வேண்டுமோ.

அனுபவசாரம்:—அன்பிலாத நல்லறங்களனைத்தக வேள்வியும் பிணமேயா, மன்பில் வாய்மையுந்தானமு மொழுக்கமும் விரதமும் பிணமேயாந், தன்பின் ஞானமுந்துகளிலெச்சமயமுஞ் சொல்லிடிற் பிணமேயா, மன்பிலாதிய லறம்பொருளின்பம் வீடவற்றினுக் குயிரன்றோ.

அனுபூதிநிலைமை:—அன்பு பத்தி நல்லாதரமார்வமுங் கருத்தியோடுறநேய, மின்பமார் விருப்புடனெழிற் காதலு மிராகமோ டலையில்லாத், தன்பிலாசையு மெனவினைவ யீசனற்றுணைக்கழ லுறுபத்திக், கென்பதாம்பரியாய நற்பெயரென விசைத்தனர் பெரியோரே.

அனுபவாமிர்தம்:—பத்திதன் வடிவேவெளிற் பரம்பரன்படியிலா வடிவத்தை மெய்த்தவன்பர்கண் டனுபவிப்பதுவலால் விளம்பிடவிரகில்லை, யத்தன்மைத் தெனவடிய வருளத்தெழு மனுபவ வுருவத்தை, யித்தன்மைத் தென வியம்புத லரிதென வியம்பின மறையெல்லாம்.

அநுபூதிநிலயம்:—மறைகளீறு வாசாம கோசரமென மாலயன் மயலெய்த, வறியுமாறொருவரும் விரகற நிகழ்பரம னவனன்பிற், செறியுமாசறவுள்ளிருள் கடியுறத் திகழொளி குடிகொண்டே, யுறையுமாதலி னன்பினன் பெருமையை யுணர்பவ ரெவரந்தோ.

மெய்ஞ்ஞானநிலயம்:—முழுதுந் தன்னையே தழுவிட நழுவிடுமலமா மிறைவந்து, பழுதொன்றின்றிய பத்திதன் வலையினிற் படுமெனுமதுகண்டா, லெழுந்தாங்கல்வியுமெங்கு நற்றவங்களும் யோகஞானமுமெங்கே, யழிவொன்றின்றிய வன்பினன் பெருமையை யறையவு முடியாதே.

சிவானந்தநிலயம்:—பத்தியாகுமெய்க் கூடலிடை யெழு
தருமமுது நற்பரமென்று, மெய்த்தபத்தி நன்பாலிடை
யெழுதரும் வெண்ணெயாமவனென்று, முய்த்தபத்தி நல்
லுளத்தினர்க் கடியர்போலுழிதரு மிறையென்றுஞ், சுத்த
ஞானி கண்மொழிவர்கடுக்களறச் சுருதியுஞ் சொலுந்தானே.

பேரொளிவிளக்கம்:-சித்தத்திருவைச் சிவயோகினியைத்
திகிரிப்படையாளைத், திகழ்நாமகளைத் தெரிவார்தெளிவைத்
திசைசூழ்நிலமாதைக்; சத்திச்சமைவைத்தவமானவளைச் சம
யங்களின்வேரைத், தனிநாயகியைச் சயமாமகளைச் சகதண்
டத்தாயைச் சுத்திச்சுடரைச் சுருதிக்குயிலைத் தொழுவார்
பெருவாழ்வைத் துறவித்துணையைப் பிறவிப் பகையைத்
தொலையாவமுதத்தைப்; பத்திப்பயனைப்பரபத்தியை யெப்ப
தமுந் தருவாளைப் பரவுந்தொழிலார் படிறென்றறியார் பவ
முங்குறுகாரே.

சொரூபானந்தநிலயம்:—அன்பிதொன்று மற்றருஞ் சிவ
மொன்றுமென்றறிபவரறிவில்லா, ரன்பதேசிவமாயிருந்தமை
யறிபவரிறையருள்பெற்றார், துன்பவனபவந்துகளில்வீடென
விடைசொல்லிடுமவையெல்லா, மன்பதாமமுதினைமுழுந்திட்
வுணுவயலவருரைதானே.

ஈசுரகீதை:— பொய்யில்பத்தியாற் றுறவாற் போதம்
பொருந்தும்புந்தியினாற், செய்யும்பூசையேபூசைசெய்யுந்தொ
ழில்களெல்லாம்விட், டய்யம்பண்ணியுண்டொன்றுமாசைப்
படாதாரெனையடையு, முய்யும்பரிசுமறைந்தபொருளுங்கட்
கிரங்கியுரைத்தனனால்,

பத்தியையென்பாலுடையா னெவ்வுயிர்க்கும்பரிவுடை
யா, னொத்தநலந்தீங்கடையா னொடுங்கிய வுள்ளமதுடை
யான், புத்திமனமென்பாலேபொருந்திய பாவனையுடையா,
னெத்தனையும்பொறையுடையானியாவரினுமெனக்கினியான்

தல் கண்டுமட்டொழுகுந், ததைமலர்க்குழலார் தன்கிரிதழு விற்றண்பரிதாய் மதன்வசமாய், விதலையின் மனமாய்மயக், குறுமென்னவிடுத்தனன் புணர்ச்சி மற்றன்றே.

ஒளிகொளும் விளக்கினழலுருக் கண்டு துணவுகொ லெனவதிற் சுழன்று, விளிவுறும்பசிய பதங்கமுன் கண்டு வெய்யதீத் தொழிலெனக்கருதித், தெளிவுகொண் முனிவ ராயினுங் காணிற் சிந்தைகொண்டனுதினம் வருந்திக், களி கொளுங் கருங்கண் மடந்தையருருவங் கருத்தொடுங்காண் கிலனம்மா.

வஞ்ச நெஞ்சினராய்த் தூண்டிலின் வளைந்தவன்சுவை யூண்பெறவடைந்து, தஞ்சுதலடைந்தமீன் குழுக்கண்டு துன்னுமை வகையெனும்வாயுப், பஞ்சரமென்றற் றுட லுறைவதற்காய்ப் பசிக்கனறவிர்ப் பதற்கன்றி, யஞ்சுவை யிவையென்றுசையினலம் வந்தருந்துதலொழிந்தனனடிசில்

ஒருமரைமலரே யுவந்துமென் முருகுண்டுறை தரு மொரு சுரும்பிரவில், விரியிதழ்க்குவியு மலரகப்பட்டுவிளிந் தது கண்டொருநாளுங், கருநியசகரி லொருமலையுறைந்து கவின்பெறு முணவுவந்தருந்தேன், மருவலர் மகுடகோடிக ளிடறுமலர் புரைதருபத யுகத்தோய்.

முந்தவே யொலியாதியி லொருகுண முன்னிப், பந்த மோடிடருற்றிறந்தன பலவென்று, லைந்துசேர் குணங்களு மொருங்காசையி னடைந்தோ, ருய்ந்துபோ நெறியுண்டு கொலோ மதித்துரைக்கின்.

பம்பிரும்பொறிவழி மனம் பரந்துறு தடக்கி, யம்பு செய்த தன்கோணறத்திருத்தின னவன்போல், வெம்புமைம் புலன்வழி மனம்விரும்புதல் வெறுத்துக், கம்பமில்லறிவாம் பொருளறிந்தனன் கருத்தால் என்பன போன்றன காண லாம்.

ரறிவேயாய்க், கனமாயுள்ளும் புறம்பினுநிட்களமாயுண்டா மாத்திரமாய்ச், சநந மரணமிலா வென்னைத் தயங்கக் கண்டேன் சத்தியமே.

அனவரத முரைத்தல்விடல் பற்றலிமைப்புறல் விழித்தலனைத்துஞ் செய்து, மனனமறு சுகவானாய்ச் சற்சின்மாத்திரபரனாய் வாழ்தி மைந்தா, கனமலமாங் காண்பவை தீர்ந்துள்ளத்தின் மல மறுத்துக்காதற்பாச, மெனவுயர் கோரையை யறுத்து நின்னறிவிற்றற்பரனா யிருத்தியன்றே.

நலனிழிவாஞ் சங்கேதத்தாசையெனும் விடுசிகையை நண்ணாயாகிச், சலனமுறு விருப்பு வெறுப்பற வுணர்வின் சார பரந்தானாய் வாழ்வாய், அலகற நானிவனவனீதது வெனதாம் வாதனைகளறுத்தொன்றென்றே,நிலவியநிட்டையிலாறிச் சற்சின்மாத்திரபரனாய் நின்றுவாழ்வாய்.

எனது பிறரது வென்னு மெண்ணமறச்சக நிலையிலீரண்டற்றொன்றாய்க், கனவயிரத்தம்பமென வுணர்வுருவைப்பற்றி நிலைகண்டு நிற்பாய், அனகமுடனமலமாயகண்டமாந்தன்னறிவிலமை வென்றுண்டாஞ், சனனமயக்கத்துக்குக்காரணமாம் பிரிவன்று தவிர்ந்துபோமே.

யானாரிச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங்ஙன மென்றேயிதயத்துள்ளே, யானாமலிப்படியே யாராயின் மகத்துவமேயடைதி சாலத், தானானசுபாவனா யிருந்துள நின் விசாரத்தாற்றனே நெஞ்ச, நீநாடும்படி தோன்றித் தன்னுருவிட்டிளைப்பாறித் துன்ப நீங்கும்.

எத்தனை யெத்தனை நீத்தாயகிலத்தைப் பரஞ்சுடரா யெறிக்குஞ்சோதி யத்தனை யத்தனைதோன்று மெந்நாண் மட்டனைத்தும் விடாயந்நாண்மட்டுந், தத்துவமாம் பொருளெய்தாச் சகலமும்போனாற் சேடந்தானாஞ் சித்தந், தொத்தற வேற்றுமையெல்லாம் போகாதேற் சமமான சோதி தோன்றா.

பேதமுறு பொருளொருமை தோன்றுதேற் றன்னைத் தான்பெறுவதெங்கே, யாதலினூற் றனைப் பெறுதற்பொருட் டாகவனைத்தினையு மகற்றல்வேண்டு, மேதமறவனைத்தையும் விட்டாயென்னிற் சேடித்ததிறவா வீடா, மேதகைய பத மதுவாஞ் சாருவெனும்பெயர் கீர்த்திவேடர் வேந்தே.

கெடாத சிற்கண்ணனீ தான் கிளர்மேலவர்களுடனே தான், விடாதிவ்வுலகே தியாமாரென் றுரைக்க மெல்லவிசா ரிப்பாய், தடாதுட்பொருடோர் வித்தைக்குவிசாரந்தானே தனி ஞானங், கடாவியறியத்தக்க ததிற்காணும்பாலின்மது ரம்போல்.

அறிஞர்க்குலகா னந்தமயமறியாதவருக் கிடர்மய மாஞ், செறிந்தவிருளாமந் தகர்க்குச் செங்கணுள்ளோர்க் கொளி யாகும், பிறிவில் பிரமமனைத்துமென னாடிற் பிரமமவனேயா, னறியவமுதுண்டவ னமுதமபத்தை நண்ணுதிரானன்றே.

அலர்கசக்கு முன்னிமைக்கு முனகங்கர மகற்றுத லெளிதாகும், பலவுரைப்பதென்னேகமா யனந்தமாய்ப் பரம சித்தேயாகிக், குலவு சுத்தமாய் விண்ணினு நுண்ணிதாங் குறைவிலாப் பொருணிற்குஞ், சலனமற்றதைப் பாவனை செய்துப சாந்தனுயிடர்தீர்வாய்.

சுத்தமித்தையே யாதலிலகங்கரந் தொலைந்துபோமெய் யான, தத்துவந்தனை நினைதலாற் சித்திலே சாற்றகங்கர மெங்கே, மெத்துநீரிலே புழுதியுங்கனலிலே மேவுதோயமு முண்டோ, நித்தரூபத்தை நினைந்திவனுனெனு நிச்சயமற நிற்பாய்.

திக்குங்காலமு முதலிபவசத்துறு சிறுவடிவறத்துன் பந், தொக்கவன்னவற்றுன் மறையாமலே சூக்கமாய் நொய் தாகி, மிக்கசோதியாயனைத்துமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந், தக்கவிந்நிலை நில்லெனவுரைத்தனன் றலை மையா முபதேசம்.

பொய்யதா முயற்கொம்பினைப் பற்றவும் போக்கவு நினைப்பாரா, ரையனைபரபோத பூரணத்திலே யயலொன்று வருமாறென். பொய்யதாகிய வநேகபாவனையினைப் பொருந் தல் புன் பிறப்பாகு, மையமின்றியவேக பாவனையினிலழுந் துதல் பவந்தீர்தல்

எல்லாநீக்கி மகாமவுனத்திருப்பாய் நிருவாணத்தின னாய்ப், பொல்லாமனம்போய்ச் சித்தம்போய்ப் புந்திபோய்த் தானென்பதுபோய்ச், சொல்லா வூமை குருடு செவிடொத் துத் தூயவான்மாவி, னில்லாயுள்ளே முகமாகி நித்த னொய் தாய் நிறைமதியாய்.

எனக்கீதென்னுமுணர்வுடைமையிடர்விட் டகலாது ணர்வின்மை, யனர்த்தமில்லாவீடளிக்குமாசையேதிங்கது செய்வாய், சனிப்பில்சிவமெங்கணுமுளது சாந்தஞ்சுகஞ்சித் துருவென்னுங், கனைத்தவந்தவொரு நினைவேகருமத்தியாக மிராகவனே. இன்னோரன்னபலகொள்க.

பாகவதம்:—சாற்றியகுணமு மாக்கையுமனமுந் தானல வென்பதையறிந்தாற் போற்றியவாக்கையுடனிருப்பதுவும் போவதுமறிந் திடாராகி, யேற்றதம்புயமேற்றுகில்கழிவதுவு மிருப்பதும்வெண்ணறைபருகி, மாற்றருமதத்தினறிந்திடா தொழுகுமாக்களைப்போலுவர்மாதோ.

ஈசரகீதை:— என்னையுறநினைப்பவரிலெங்கேனுமொரு வனவன், றன்மதியைக்கடந்தருளாற்றன்னிதயக்குகைதன் னிற், பொன்மயனைப் புராணமாம் புருடனைப்பொருந்து மெனி, லன்னியமதறவறிவானவன் பரமத்திடையடைவான்.

ஈனஞ்செய்யுமஞ்ஞானவிருளைக்கடந்துமேலான, பானந் தனக்கேயுளதானபரமவொளியாம் பரம்பரனை, ஞானந்தன் னால்வேறறவேநானென்றறிந்தநல்லோனவ், வானந்தமதாம் பிரமமயமாகி வீடேயடைகின்றான்.

செங்கதிரோன்வெங்கதிராலெதிர்நிகழும்பேய்த்தேரைத்
தீரத்தீர்ந்து, கங்கையினற்குளிர்புனலைப்புனிதமுறுமதிமான்
கள்கைக்கொண்டாங்கு, மங்குலகைவெறும்பொய்பசையில
தெனத்தூரத்தகற்றிமர்தீரத்தாற், பொங்கினியவொருசுவை
யை முனிவரர்களநுபவிப்பர்பொலியுள்ளத்தே.

தோற்றரவுமாத்திரமிங்குருவான சகவிகற்பத்தொகுதி
யெல்லா, மூற்றமுறுசங்கமெலாமொருவியசின்மயவென்னை
யொட்டாதன்றே, மாற்றருமாரோபிதமாமலினாதிவிசித்திர
தன்மங்களெல்லாந், தேற்றமிகுநிருமலமாய்வெளியுருவாம்,
வியோமத்தைத்தீண்டுங்கொல்லோ.

பரிபுரணமாகிநிறைந்திருக்குமொருகரியானபரமாமென்
பால், விரிவுறுசாக்கிரத்தினொடுசொப்பனமே சுழுத்தியென
விளம்பப்பட்ட, திரிவிதமாமவத்தைகளு நாடோறும்பிறப்
பிறப்புச்செறிந்தவாகி, வரியமருமூரகபதிவபுவினிற்கஞ்சுகங்
கள்போல்வயங்குமன்றே.

புறப்பொருளின்வருவிசனசம்பந்தத் தாலிளைப்புப்பொ
ருந்துறுதாய்ப், பறப்பறவிந்தியவழிச்செல்லாதடங்கிச்சகவி
கற்பப்பற்றொன்றின்றிச், சிறப்பமர்தன்னாநந்தமாத்திரமாய்த்
தனித்திருக்குஞ்சித்தம்பெற்றோ, ருறப்படுசாக்கிரத்தினுநற்
சுழுத்தியநுபவத்தினிலைத்துவகைகூர்வார்.

மித்தையதாய்த்தோன்றுறுமேற் றோன்றுறுகவிவ்வுலக
விசித்திரந்தா, னத்துணையாற்றத்துவவித்தாகிநிகழெனக்கு
வருமானியேதோ, சுத்தமயக்காங்கனவிற்பயந்தருகைப்பக
டாதிநிகழுமேனு, மொத்தவிதுசொப்பனமேயென்றனுசந்
திப்பவனுக்குறுமோபீதி.

பொருத்தமுறுமாதாவாற்கவளங்கவளந்தோறும்புலனுற்
றாலும், பெருத்ததுயிலாற்சிசுதான்வேறொன்றுந்தெரியாத
பெற்றிபோலப், பருத்தவிழியதனாலிவ்வுலகெனுமிந்திரசாலம்

வெய்யதினகரனிடத்திற்சீத மிகவுற்றிடினுஞ்விமல் மாணை, செய்யவிமகரனிடத்திற்றபமிக உற்றிடினுஞ்சிகியின் மாட்டு, டையமறக்கிளைக்கலுற்றிடினுமாயிக மென்றறிந் தோனாகி: மையலறுஞ்சீவன்முக்தன் விஸ்மயத்தைமருவாது மலருவானே.

தனைதுசுகந்தனைப்பருகுபரவசனாபோ ரொருவன்றனிவீ டெய்தித், தனது மனஞ்சென்றவணஞ் சிலவிடத்திற்றியா னமேசரிப்போனாகி, யுனவரியசிலவிடத்திற்கானமிகப்புரிபவ னாமொருவனாகி, நனியிலாமுஞ் சிலவிடத்தி னடனமதைத் தடையதறநவிற்றுவானே.

தன்னுடையவானந்தவமுதமதைத் தெளித்தலினாற்றன துண்மேவி, யின்னறருஞ்சந்தாபசந்ததியை யிறையளவுமில் லாதோட்டி, மின்னுமுயர்யோகியெனுமம்புதஞ்சஞ்சலமில் லாவிருத்தியோடு; மென்னவிசித்திரமன்னோ சிதம்பரத்தி லென்றுமேயிலங்குமாமே,

அஞ்ஞானமெனுமரியமிருகவரனேற வொண்ணாவமல மான், விஞ்ஞானவுத்துங்க சிருங்கசிகரம்பொலியும்வியன்றே யத்தே, சுஞ்ஞானசலிலமதிற்சீதளமாமங்கமொடுந் துறவி யான, செஞ்ஞானமதம்மொழியுங்கலபமதுசஞ்சரித்துத்திக ழுமேமோரே,

நாசியின்றன்னுனியதனிலவரதந்திருட்டியினைநாட்டி னோனா, ரேசலுறுநாமமுதலிவையினின்றும் விருத்திகளையி ழுத்திட்டோனாய்த், தேசதுறுந்தியினருங்கரைகளினிற்றத் துவத்தைத்தியானிப்போனா, யாசதறும்பெருந்துறவியெங் கேனுமோரொருவனமர்கின்றானே.

மன்னுதிசையுந்தனைநணியம்பரமாய் மருவிமகாமவுனி யாகித், தன்னுளெழுமாசையின்மைநன்னிலையலங்கிருத சாந்தனாகிப், பன்னுகரதலர்பயிக்ஷபாத்திரமாய்ப்பற்றியொரு

நிகிலகரணங்களையுநிக்கிரகமிகப்புரிந்தநெறியனாகி, யகிலவிடயங்களின்றஞ்சைதமையறுத்தெறிந்தவமலனாகிச், சகலநலத்துத்தமமாமெல்லையெனுந் திருத்தியினைச்சார்ந்தோனாய், புகலுபுகழெதிவரியனே ரொருவன்சஞ்சரித்துப்பொலிவானன்றே.

இன்பநிறைவுறுமரியஞானமெனும் பெருநனவதென்னலான, துன்பமறுநல்விமலவேதோமன் பதவியினைத்தொடர்ந்துமேலா, மன்புநிறைதுறவிறைவனேரொருவன்பந்தமொழித்தகன்றோனாகித், தன்புனிதவிச்சைவசந்தனியனாய்ச்சஞ்சரித்துச்சமைவானன்றே.

பெருங்குரவன்கருணை பொழிதிருட்டியினா னன்றாகப்பெற்றதான, வொருங்குமுடிவறும்பெரியசேதனத்தினாகாரமுற்றோனாகி நெருங்குமலச்சகவிகற்பபேதமெலாமிகமிகவுநெரித்தோனான, விருங்கருணைப்பரமம்சனேரொருவனரிதாகவிலங்குவானே.

சொரூபசாரம்:—என்னை நான்கண்டபடி யிப்புவியிலெல்லோருந், தன்னையேகாணத்தகுங்காணுஞ்—சொன்னேனினிநாட்டமோடுமனமுண்ணாட்டம்பெற்று, வெளிநாட்டமறகாவிடின்.

சிறிதுகாலத்தெய்துவன்பரமமுக்தியென்பதற்குதாகரணம்;—ஞானவாசிட்டம்:— காலமேகாரணமாய்க் குடும்பவாழ்விற்காதலொழித்தறச்செறிந்தகாயந்தன்னைச், சாலமிகுதொழிற்பறவைக்கிடமாங்கூட்டைச் சானவியின் கரைவரையிற்றானேகீர்ந்தான், கோலியொருசுமைசுமப்பான்குறித்தவெல்லைக்கொண்டுபோய்ப் போடுவதுபோற் குரம்பைபோட்டு, மாலுறுபற்றொன்றின்றிப்பூவினாற்றம்வானுறல்போற்பரமபதவாழ்வுபெற்றான்.

சாஸ்திரப்பயிற்சியின்மையினனே ஆத்மஞானமில்லா தவனும், குருஉபதேசித்த அருத்தத்தில் இஃதிவ்வாறு ஆகா தென்னும்விபரீதரூபநாஸ்திக்யமதியுடையவனும், இஃதிவ் வாறுமா ஆகாதாவென்னும் ஐயப்பாட்டையாண்டுமுடைய வனும், ஆகிய இம்மூவரும் புருடார்த்தங்கெட்டவராதலின் கெட்டேபோவர். ஐயப்பாடுடையவனே மிகவுங்கெட்டே போவன், என்னை, சமுசயாத்மாவிற்கு இவ்வுலகமுமில்லை அவ்வுலகமில்லையாகலின், ஒரு சிறிதுஞ்சுகமேகிடையாதாம். அறியாமைபசிரத்தையுள்ளவர்கட்கோ பரலோக சுகமாத்தி ரம் கிடையாதாம் இகலோகந்தோ, போஜனதிசுகத்திற் குத் தடையின்றாகலிற்கிடைக்கும். சமுசயாத்மாவிற்கோ உபயமுமேகிடையாதாம். சமுசயத்திற்குப்பாஸ்பரவிருத்த கோடியிரண்டன்பற்றுக்கோ டுண்மையானே, எக்காற் சமு சாரசுகப்பொருட்டுமுயல்கையாமோ அக்கான்மோக்ஷமார்க் கப்பிரவிருத்தியானது அதனைத்தடைப்படுத்தும், முத்தி யின்பொருட்டு முயல்கையுண்டாம் போதோ குடும்பமுயல் கையதனைத்தடுக்கும் என்பதாம். இன்னணம் பிறண்டுமாம், ஆகலின் ஐயமுற்றவன் எங்கும் எப்போதும் எவ்வகையி னும் பெரும்பாவியேயாவன். இதனுனேயன்றே, சுரகு வும் மாண்டவ்யமுனிவரைநோக்கி "தருமமுழுதையுமுணர் ந்த பகவனீ நெடுங்காலந்தளர்வுதீர்ந்தா, யருவினையேனை யப்பாடறுத்தியாலையம்போ லரந்தையுண்டோ" என்றிவ் வாறு கூறினர். 48

(அ - கை.) ஞானமடைந்தவனுக்குச் சமுசயாதிகள் நசித்துவிடு மென்றருளல்.—

சு. ஆஜ்ஞஶ்சாஶ்ரத்ததாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி। நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மந:॥

க. மெய்யாமறிவிற்பாராகி மினிர்ந்தஞான, மைமயா வையும் போக்கிடவாக்கினராக்கவேபாற், பொய்யாம்வினை யாவுமெய்யாமெனப்பொன்றநின்ற, துப்போனையுமாங்கவை மன்னவதோயவற்றோ.

வி. ஆத்ம ஞானரதம் = ஆத்மஞானத்தில் அதனு பாயமாயயோகத்தில் நிஷ்டாவந்தன அவைபந்தியாவாம். ஞானநாசித அகிலசம்சயம் = அந்நிஷ்டையிலேகிடைக் கப்பெற்ற ஞானத்திலே அதாவது ஆத்ம தத்துவ சாக்ஷாத்காரத்திலே கெடுக்கப்பெற்றன அகிலசமுசயங் கள் எவனல் அத்தகையனே அவைபந்தியாவாம். அகில சமுசயமாவன:—ஆத்மா தேகாதி சங்காதமா அதினும் அயலா, அதினும் அயலாயினும், கருத்தாவா அகருத் தாவா, அகருத்தா வாயினும் போகத்தாவா அபோக் தாவா, அபோக்தாவாயினும் அணுவாவிபுவா, விபுவெனி னும், துக்கியா சுகியா என்னும் இவை முதலியவாம். முதலியவென்றதனே தேகத்தினும் அயலாக ஆத்மா வில்லையென்னும் குதர்க்கமுங் கோடற்பாற்றும்; அஃதா மாறும் அதன் நிராகரணமும் இன்னணமாம்:—தேக அதி ரிக்த ஆத்மா உளதென்பதே அசித்தமாம், அளவையின்மை யின்; ஆகத்தினும் அயலாய ஆத்மாவில் காட்சியளவை யாகாதாம், வெள்ளையன்யான் இளைத்தவன்யான் செல்கின் றேன் என்றற்றொடக்கத்துக்காக்ஷியானே ஆகத்திற்கே அக மர்த்த ஆத்மரூபத்தன்மையானே அநுபவம் ஆகலின், அக னின் அயலாய ஆன்மாவிற்குக் காட்சித்தன்மைகூடாமை யின்; இக்காட்சியானது தேகாத்மைக்கிய அத்தியாச நிபந் தனமெனல் பொருந்தாதாம், அத்தியாசத்தன்மைக் கற் பனைக்குத்தேகத்தினும் அயலாய ஆத்மசித்தி அதீனத்தன் மையானே அன்னியோன்னிய ஆசிரயமாதலின், என

தூடம்பு வெள்ளை என்று தேகாத்மபேதப் பிரத்யக்ஷ தரி சனத்தானே வெள்ளையன்யான் என்பதற்குக் கௌணாத்ம அபேத விஷயத்தன்மையாம் எனல்பொருந்தாதாம்; தேக பின்னமாகயானென்பதின் பொருள்தோற்றுமையானும்,எத் தகைய நினைதெனக்கடாவின், இளைத்தவெனதுதேகம் வெள்ளையென்பதாகயான் என்பதன்பொருளின் விவரண தரி சனத்தானும், எனதுடம்பென்பதற்கே எனதாத்மா என் பதேபோலக் கௌணபேத விஷயத்தன்மையுசிதமாதலின். எவ்வியான்பாலியத்திற்றாய் தந்தையரை யநுபவித்தேனோ, அவ்வியான் வார்த்தகத்தில், மகன்றன்பேரரை யநுபவிக் கின்றேன், என்றுபால விருத்த தேகபேதமீதிலும், ஆன் மைக்கிய அநுசந்தானரூபப் பிரத்தியக்ஷம் தேகாத் மபே தத்தில் அளவையாம் என்பதும் அடாதாம்; பாலியசரைத் தலத்தில் அவ்வவ்வுவத்தை வேற்றுமைமாத்திரங்கோடலே யன்றித் தேகபேதங்கோடல் இன்மையானும் எவ்வியான் பாலியத்திற்புட்டனாய்த் தாய்தந்தையரையநுபவித்தேனோ, அவ்வியான் வார்த்தகத்திலிளைத்தவனாய் மகன்றன்பேரரை யநுபவிக்கின்றேன் என்று, புட்டத்தன்மை கிருசத்தன்மை தருமியின் கண்ணிருப்பதாகவே தாய் தந்தையர் பேரர் அநுபவிப்பவன் விடய அபேதப்பிரத்தியபிஞான தரிசனத் தானும், கூறிய ஊகங்கொண்டும் தேகாத்மபேதங் கோடக் கூடாமையின். எவ்வியான் கனவிற்புலியுடம்பனோ, அவ் வியான் இஞ்ஞான்று மநுடவுடம்பன் எனவியாக்கிரநரதேக வேற்றுமை யநுசந்தான வாயிலாக அவனேயான் என்னும் பிரத்திய பிஞ்ஞைப் பிரத்தியக்ஷம்தேகாத்மபேதத்தில் அள வையாம் என்னற்க; எவ்வியான் கனவிற் சுகவடிவனாகிவிடு பட்டிருந்தேனோ அவ்வியான் இக்காற் றேவதத்தனாகிக் கட்டுற்றிருக்கின்றேன் என்னும் பந்தமோக்ஷாங்வயி சொரூபபேத அநுசந்தான வாயிலாக அவ்வியான் என்னும்

பிரத்திய பிஞ்ஞையால் பத்தமுக்த சொரூபத்தினும் அயலேயாம் அகமர்த்தம் என வழக்காதலின். உள தாகுக இஷ்டாபத்தி, சித்தாந்தத்தில் அகம் பொருட்கு ஆத்ம அதிரிக்தத்தன்மை யுண்மையின் எனின், இங்ஙன மாயின், எவ்வியின் புலியுடம்பன் என்னும் பிரத்திய பிஞ் ஞையினாலும் தேக அகமர்த்தபேதமே சித்தமாம் எனவத னானே தேகாத்மபேத அசித்திவழக்காம். சமானசத்தையை யுடைய பதார்த்தங்களின் விலக்கநுசந்தானத்தலத்தில் எதன் அநுவிருத்திப் பிரத்தியபிஞ்ஞையோ, அதற்கு அவற்றினின்றும் வேற்றுமை அதனானேசித்திக்கும், சொப் பன அநுபூதமாய சுகாத்மாவோ தேவதத்தாத்ம சமான சத்தையையுடையதன்றும் என அதன்பேதம் அகமர்த் தத்திற்காகாதாம் எனக்கூறுவதாயின்; அக்கால், கனவிற் கண்ட புலித்தேகமும் மநுடதேக சமானசத்தையுடைய தன்றும் என அவற்றானும் அகமர்த்தபேதம் ஆகாதாம்என் பது துல்லியமேயாம் யோகியாற் செய்யப்பெற்றகாயவி யூகத்தலத்திற் றேகபேத அநுசந்தானவாயிலாக அவனே யானென்றும் அவனதுகாக்ஷியானது தேகாத்மபேதத்தில் அளவையாம், என்பதுந்தகாதாம்; ஐந்திரஜாலிகனுப ஒரு வனுக்கே, கரிபரிரதபதாதிகாயவியூகத்தானே, போரெதிர்ப் போரிடத்தில், போராளி எதிர்ப்போராளிவடிவபேத அநு சந்தானவாயிலாக அவனேயான் எனவுண்டாம் அவனது காக்ஷிக்கேபோலும் இதற்கும், லீலைமாத்திரவிடயகத் தன் மையானேவத்து தத்துவவியவத்தாபகத்துவ மின்மையின், அன்றியினே ஆண்டும்விலக்ஷணமான ஞான இச்சை பிர யத்நமுடைய போராளி எதிர்ப்போராளி வடிவத்தான் ஐந் திரஜாலிக அகமர்த்தத்திற்குப் பேதப் பிரசங்கம் வருத லின். ஆண்டு ஒரேயகமர்த்தத்திற்கு இந்திரஜாலமகிமை யானே விருத்த சொரூபப் பிரதரிசனமாத்திரம் எனின்,

யோகித்தலத்திலும் ஒரேயோகி சரீரரூப ஆன்மாவிற்கே யோக மகிமையானே காயவியூகப்பிர தரிசனமாத்திரம் என வுளதாகலாம், ஆகலின் காக்ஷி தேகாத்மபேதத்திற் பிரமாண மாகாதாம்.

தேகம் அநாத்மா வெளியிந்திரியத்திற்கு விடய மாகலானேனும், ஜடமாகலானேனும், குடம்போலும் என்னும் அநுபமானமும் அளவையாகாதாம், அகமர்த் தம் அநாத்மா உள்ளிந்திரியத்திற்கு விடய மாகலின், துக்கம் போலும்; என்னும் அநுமானமேபோலும் முத லது அப்பிரயோஜகமாதலின், வெள்ளையன் யான் அறி கின்றேன் எனத்தேகத்திற்கே அறிபவனுந்தன்மை யநு பவத்தானே இரண்டாவதற்கசித்தியாதலின். “உயிரில தேய முடம்புமரிக்கும் உயிரோதான் மரியாதாம்” என்ப தாதி சுருதிகள் அதன் பேதத்தில் அளவையாம் என்பதுந் தகாதாம். “மறையவன் கொல்லத்தக்கவன் அல்லன்? எனப்பிரஹ்மகத்தி நிடேதத்தானும், அசுவமே தாதிரூப அதன்பிராயச்சித்த விதானத்தானும், சுருதியே ஆத்ம நாசத்தையினிது காட்டியிருத்தலின், உயிரநாசச்சுருதி ஆத்ம வித்யாப்பிரசம்சார்த்தவாத மாத்திரரூபமாதலின். ஆன்ம நாசமிலதாயினே கொல்லத்தக்கவன் அல்லன் என் னும் அந்நிடேதமாதல், ஹநநநிமித்தகமாய பிராயச்சித்தவி யாதல் பொருந்துறுதாம், அடைவுறுததன் நிடேதத்திற் கும் நிமித்தமற்ற தன் பிராய்ச் சித்தத்திற்கும் பொருத்த மின்மையின், கொல்லத்தக்கவன் அல்லன் என்னுஞ்சுருதி தேகாத்மைக்கிய அத்தியாசத்தானே சம்பாதிக்கப்பெற்ற ஆத்மநாச நிஷேதபரமெனத் தோஷமாகாதாமெனச்சொல் லற்க; இன்றளவும் தேக அதிரிக்த ஆத்ம அசித்தியாதலின் அந்நியோந்நியா. சிரயம் வருமன்றோ? இவ்வண்ணம்

எதனினின்றுந்தானிப்பூதங்கள்" என்பதாதி சுருதி பூத சப்தவாச்சிய ஜீவக்குழுக்கண்ணுள்ள ஜன்மஸ்திதி நாசத்தைப் பிரஹ்ம இலக்கணமாகக் கூறுவதாய் ஜீவர்களின் நாசத்தையே அறிவிக்கின்றது. பூதசப்தமோ ஈண்டு ஜீவவாசியாம் "உண்டானவை யெதனால் வாழ்வுறுமோ" என்னும் வாக்கியசேடத்தாலும், "எல்லாப்பூதங்களையு மிம்சை செய்யாதொழிக" என்பதாதிகாணப் பெறுதலாலும் என்க. இவ்வண்ணம் "புத்திரனுதிக்கின் வைசுவானரமாம் பத்திரண்டாகுங் கபாலம் பயிலுக" என்பதாதிகமாய ஜீவோற்பத்தி சுருதிவாக்கியமும் உதாகரிக்கத்தக்கதாம். ஜீவன்றன் உற்பத்திவிநாசங்கள் உடன்பாடாயின் செய்வதற்கின்றிச் செயாததற்கொன்றும் என்னும் வழக்காம் எனக்கிளத்தற்க; சித்தாந்தத்திலும், பிராஹ்மணத்தன்மை க்ஷத்திரியத்தன்மை முதலியவற்றிற்குத் தேகதன்மத் தன்மையங்கீகாரத்தால், "பிராஹ்மணன் பிருகஸ்பதி சவத்தானே, ராஜாராஜசூயத்தால் வேட்க"

என்பதாதிகளிற் பிராஹ்மண்யாதியாசிரய பூதங்களாய ஜந்மவிநாசியாந் தேகங்கட்கே கர்த்துருத் தன்மையடைவால், இயற்றியதிற்கின்றி யியற்றுததற்கொன்றும் என்னும் வழக்கிற்கு விலக்கமுடியாமையுண்மையின். ஆண்டுத்தேக தருமமாய பிராஹ்மண்யாதிகட்கும் ஆன்மாவின் கண்ணுரோபத்தானே கருத்துருபோக்துரு வேற்றுமையால் உரைத்ததோஷம் ஒண்ணுதாமெனின்? இன்னணமாயின் தேகாத்மவாதத்திலும் அயற்பாலுள்ள கருத்துருத்தகைமைக்கு அயலிடத்தேயாரோப சம்பவத்தால் அறைந்த தோடமாகாதாமெனச் சரிப்படுத்திக்கோடாத தென்னை கொல்! ஆத்மாவிற்கு ஜன்ம நாசமுடன்படிற் பிறந்த மாத்திரத்திற்கு முலையுண்கை முதலியவற்றில் முயல்கை முற்று

தாம், அக்காரணத்தானே, இத்தனபானம், இஷ்டசாதனம் தனபானத்தன்மையால், முன்பவித்ததனபானம் போலும், என்னும் அநுமிதிக்கு முற்பிறப்பினுற்ற தனபானத்துள்ள இஷ்ட சாதனத்தன்மை வியாத்திஸ்மரண அதீனத்தன்மை யானே பூர்வதேக சம்பந்தமாக ஆன்மாவின் நிலைபேறின்றி அமைதேலாமையின் என வியம்பற்க; இங்ஙனமாயினும், பக்கத்தன்மையானே யபிமதமாய ஸ்தன்யபான உபஸ்திதி, அசிந்திய அத்புதபரமேசுவர சங்கற்பசக்தி மகிமையானே யெனவொருதலையா யுரைக்கவேண்டியிருத்தலின் பிறந்த மாத்திரப் பிரவிருத்திக்கும் அதனானேயே பொருத்தமுண்மையின், இஷ்டசாதனத்தன்மை யனுமிதிக்கு அநபேக்ஷிதத்தன்மையானே அதன் ஹேது வியாத்தி ஸ்மரணப் பொருட்டு ஆன்மாவின் நிலைபேறு அசித்தியாதலின். ஆண்டு அதிட்டமகிமையானே பக்க உபஸ்திதியெனின்? அதனானேயே முயல்கைக்கும் துணிவுபேறுதலின் கருதல் வீணாதல் ஆங்கே நிலைபெறுதலாம். அதிட்ட ஆதாரத் தன்மையானே முற்பிறப்புற்ற ஆத்மசித்தியென்னற்க; அதிட்டகாரணத்தன்மை வாதியானும் பரமேசுவரசம்பந்த சக்திகாரணத்தன்மை கோடபெறுதலால், அதனானே முயல்கையாகிய வழிதேக அதிரித்தநித்திய ஆத்மசித்தியதீனமாய அதிட்டத்திற்குக் கோடல்கூடாமையின். ஆகலின் தேகாத்மபேதத்திற் பிரமாணமிலதாம். தேகாத்மவாதத்திலோ வெள்ளையன்யான் என்பதாதிக்காட்சியும், பிரஹ்மகத்தி நிடேத அதன்பிராயச்சித்த சாஸ்திரமும். எதனினின்றாங்கா னிப்பூதங்கள் என்பதாதியாக முன்னுதாகரிக்கப்பெற்ற வாக்கியக்குழுக்களும், பிரமாணங்களாம். என்னுங் குதர்க்கத்தைக் கடவல்லியே விலக்கியுளது:—யாவன் இவ்வான்மாவை ஹநநக்கிரியையின்கருத்தாவெனவறிவனோ, யாவனுன் இவ்வான்மாவை ஹநநகரும

பூதமாக வெண்ணுவனே, அவ்விருவருமே தேகாதிருக்த ஆத்மதத்துவத்தை அறியாதவராவர்;" இதுகொல்லாது கொலையையுமுறாது ஆதலின். இவ்வண்ணம் ஆத்மாவின் கண்ணே கொல்வது கொல்லப்படுவது ஆந்தன்மை யபிமானத்திற்குத் தேகவிவிக்த ஆத்ம சொரூப அஞ்ஞான மூலகத்தன்மை வருணனத்தானே தேகாத்ம வாதத்திற் சுருதிப்பிரமாணம் யாதோதப் பெற்றதோ அது அகற்றப்பெற்றதாம். "மறையவன் கொல்லத்தக்கவ னல்லன்" என்பதாதிஹத்யா நிஷேதசாஸ்திரத்திற்கும், அசுவமேதாதியதன் பிராயச்சித்த சாஸ்திரத்திற்கும், தேகாத்மைக்கிய அத்தியாச நிபந்தனத்தானே பொருத்தமிருத்தலின், அதனாற்றேகாத்மவாத அசித்தியாதலின். கொல்லத்தக்கவனல்லன் என்னுஞ்சாஸ்திரம் ஆத்மாவின் ஹந்தவ்யத்தன்மையைப் பிரதிபாதிக்கின்றதில்லை, அவ்வாறாயினே, ஹந்தவ்யன் நஹந்தவ்யன் என்னும் ஆவிருத்திலக்ஷண வாக்கிய பேதப்பிரசங்கம் வருதலின்; மற்றோ, தேக ஐக்கிய அத்தியாசத்தாலாய ஆன்மாவின் ஹந்தவ்யத்தன்மையை நிடேதிக்கின்றது. பிராயச்சித்த சாஸ்திரமும் அவ்விருவருமறியார் எனமொழிந்த முறையானே தேகாதியதிரிக்த அகர்த்ரு ஆத்மசொரூப அஞ்ஞானத்தானே ஆத்மாவைக்கொல்பவன் என்றெண்ணுகின்றவனுக்குச் செய்பத்தக்க சிறப்பையுபதேசிக்கின்ற தன்றித்தன்னானுபதேசிக்கப் பெற்ற பிராயச்சித்த நிமித்தபூத ஹநநத்திற்கு ஆத்மாவின் கண்ணே தாத்விகத்தன்மையையும் போதிக்கின்றதென்றின்றாம். புலப்படாமையினானும், மொழிந்தமுறையானேவாக்கியபேதப் பிரசங்கத்தானும், வேறோராற்றாற் பெறப்படாத சுருதிசதவிரோதத்தானும். இவ்வண்ணம், எதினினின்றுந்தான் இப்பூதங்கள் என்னுஞ் சுருதியும் உலகப்பிரசித்தமாய பிராணிகளின் ஜன்மஸ்திதி நாசத்தைப் பிரஹ்ம லக்ஷணத்

தன்மையானே யுபதேசிக்கின்றது. ஜாதேஷ்டி வாக்கியமும் புத்திர ஜநநத்தை யெண்ணுபவனுக்கு அதன் நிமித்தமாய் இஷ்டியை விதிக்கின்றது. எல்லாவிதிநிஷேத சாஸ்திரங்கட்கும் அதத்துவவித்து விஷயத்தன்மையுண்மையின். அகம்பிரீதி அத்தியாசத்தன்மைக் கற்பனைக்குத்தேகாதியதிரிக்த ஆத்ம சித்தியதீனத் தன்மையுண்மையின் அன்னியோன்னியாசிரயமாம் என்பதுங்கூடாதாம்; அவரிருவருமறியார், உடலஞ்சிதையினுஞ் சிதையாதது என்னுஞ் சுருதியினானே தேகாதி யத்தியாசத்திற்கும் அதனினும் அயலாய ஆன்மாவிற்கும் உபதேசிக்கப் பெற்றிருக்குந் தன்மையான் நம்மனோரானே அத்தியாசத்திற்கு அகற்பிதத் தன்மை யுண்மையின். சுருதியொன்றனாலேயே நன்கு தெரிந்து கொள்ளத்தக்க வஸ்துவின்பால் சுருதிப்படியே விடைவிடுக்க வேண்டுமன்றோ. சுருதிக்குக்காக்ஷி விரோதம் சங்கிக்கத்தகாதாம், செவியினானே தெரியவருவதாய ஓசையின்பொருட்டுச் சாதகமில்லாத விழியைப்போல மறையொன்றினாலேயே கவரப்பெறும் ஆன்மாவின்பொருட்டுச் சாதகமாகாக் காட்சிக்கு அதன்பாதகமாதலுங்கூடாமையின். ஆதலின், ஆன்மஜன்ம விநாசப்பிரதிபாதகமாக யாதொரு சுருதியுமிலதாம் எனவதனால் ஆகான்மத்தன்மைச் சித்தியிலதாமென்பது கருத்து என்பதுசுருக்கம். யோக அஸ்த அகிலகர்மாணாம்=யோகத்தானே அஸ்தங்களாயின சகல கருமங்களும் எவனால் அவனை, ஞானியோபிராரப்தத்தினும் வேறாயகருமத்தை யழிப்பன், யோகியோ சமாதியப்பியாச வலுவாலே பிராரப்தத்தையும் கெடுப்பன் என்றருளுவார் யோகாஸ்தாகில கர்மாணாம் என்றருளினார். ஹேநிருப! தாரிநீ=பக்திஹீனத்தன்மைமுதலிய கருமங்கள் ஆதல் கட்டிப்படுத்தலாம். இப்பொருளை ஸ்ரீபகானும் "தொல்லறிவிலைலையயுறவற்றோர் துறவற்றோர் என்றருளினார். ஈசுர

ஆராதனார்த்த கருமானுஷ்டான லக்ஷணயோகத்தானே ஸ்ரீ பகவானிடத்தில் சமர்ப்பிதமாங் கருமங்கள் எவனால் அவனே யெனப்பொருள்கோடலுமுண்டு. அதற்கேற்ப, தத்துவம் பதார்த்த ஐக்கியவிஷயகமாய்க் கருமயோகபல பூதமாய ஞானத்தானே மிகச்சின்னங்களாயின சமுசயங்கள் "சிதை படுகின்றன ஐயங்கள்எவையும்" என்பதாதி சுருதிப் பிர சித்தியானே, எவனால் அவனேயென அமைத்துக்கோட லாம். இதனானே, ஆன்மலாபத்தினுமயலிலாபம்மிலை" என்ப தாதி சுருதிப்பிரசித்த பரமபுருடார்த்தலாப முடைமை யின் ஆன்மாவை யறிந்தடைந்த முத்தனைக் கருமங்கள் கட்டாவாம்.

யோகாஸ்தாகிலகர்மாணம் என்றருளியதற்குதாகர ணம்;—ஞானவாசிட்டம்:—சீவனாயிருந்துகாணுஞ் சிற்பர தத்துவத்தே, மேவிய நனவையுற்றோர் வெம்பவமோகமார்க் கத், தோவவில் சுழுத்தியுற்றோரோர் முதிர் நிராசையாலே, பாவனை நலனிற்றீங்கிற்பயிலும் வாதனையை மாய்த்தோர்.

சுத்தமான தற்பரத்தினைத் தழுவியே தொடர்ந்தவுன் மத்தியாலே, யொத்து நிற்பவர்தம்மை யெப்போகம்வந்து றா பிணிசெயவற்று, மெத்துயோகத்தை முதலியபகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம், புத்தியைச் சிறிதசைத்திடாவசந் தனாற் பொருப்புசைவது முண்டோ.

அலங்கன்மாதரிங்கிதங்களேச்சைசவத்தறிகிலானென ச் சற்றுங், கலங்கலாதகெம்பீரமாமதியினன் கடவுள்வான்பேற் றெண்ணம், விலங்கியன்னதன்னுநந்தவீட்டிலேமேவினன் மதியாறு, துலங்கியோங்கியவுத்தராயணத்திலேசுடர்விடுகதி ரென்ன.

மூவராகியுமுதல்வருமமரருளமாய்த்தசித்தரும்வாழுஞ், சீவன்முத்தியாம் பதமடைந்தருந்தவன் செறியுமாநந்தத்தி,

னேவலின்றிய நிலைவிளைவாநந்தமுதிர்ச்சியாம் பதமுற்று, னவதானபோதாநந்தமதுவிலவ்வறிவினாற்றிகழ்வுற்றான்.

ஒருகணஞ்செறிவ்ருட நூறென்னினு முயர்ந்தவப்பத முற்றோர், வருபவந்தருமேதுவாய்க் காண்பனமறுவுமிவ்விழி மேவார், பெருமையானவிப்பதத்தினுந்தாலகன்பிறைகளோ ராறுலே, யருதுறுவகைசித்தி பூமியைக்கடந்தமைந் திருந் துணர்வுற்றான்.

பரந்தவுள்ளத்தினொருமையின் செறிவினைப்பழகலாற் பெருஞ்சித்து, நிரந்தரித்தெங்குஞ்சமமதாயினன்புவி நிறை வுறும்வெயிலென்னத், திரந்தருஞ்சித்தினொருமையை நெடும் பகற்செறிபரிசயஞ்செய்ய, வரந்தைதீர்ந்தசற்பாவசாமானிய மடைந்தனனதனாலே.

தெரிவதாமிவற்றுதயமந்தமுறான்சித்திராவிபோலப் பெரியதாய்ச்சமவின்பமாம் பதவியின்பேற்றினாலுபசாந்தி, புரியுநெஞ்சினன் பிறவியுமையமும்போய்ச் சாற்ககனம் போல், விரியுநின்மலசாந்தமெய்யொளி நிறைவேதனவடிவா னான்.

குறுந்திரட்டு:—சுத்தமாகவுள்ளதன்சொரூபமேதெளிந் தவன், முத்தனாகும் முத்தனும்மலனிவன் மொழிந்திடிற், சத்துஞானவின்பமானதற்சொரூபமன்றியோர், வத்துவின் மையிற்பிணிக்கமாயைதானுமில்லையே.

இவைபோன்றவை யுய்த்துரைத்துக்கொள்க. பிரஹ்ம நிஷ்டையிலழுந்த அழுந்தயாவுஞ் சின்மயமாகவே தோற்ற லின் நுகர்வினையும் அணுகாதாமென்பது ஜீவன்முக்திவிவே கம், ஸ்ரீசதாசிவப்பிரஹ்மேந்திரசரிதமும் இதையுணர்த்தும், இவ்வநுபவத்தைச் சுவாநுபவத்திருவாக்கினுங்காணலாம்:— சுவருறையுமோவியங்கள் சுவரேயென்றல் சுபாவமதிபோற்

ப்ரத்திற்றேன்றுநின்ற, பவமுதலாஞ்சங்கற்ப விகற்பமெல்லாம் பரவடிவாய்க்கண்டு பரவடிவமான, தனுருரையுங்கழனி நகர்க்கொற்ற நாதன்றனதருளாற் பேதமதிராயினேற்கிங், கிவனவனனதுவென்னும் பேதமின்றி யெவ்வுருவுஞ்சின்மயமாயிருந்தவாறே. 49

(அ - கை.) ஞானத்தினும் யோகத்திற்கு பிரஹ்மார்ப்பணயோகத்திற்குக் காட்டியருளிப் பிரஹ்மார்ப்பணயோகத்தையுப சங்கரித்தருளுகின்றார்:—

ஸூ. ஜ்ஞாநவஸ்வஹாரணே ஸம்ஹ்ருதஜ்ஞாநவைராக்ய ஸிவாத்நீஸம்ஸயம் தஸ்மாத்ஜ்ஞாநாஸிநா சிந்தி ஸம்வேதநம்.

க. ஆனதான்மனத்தின் மேவுமஞ்ஞானதைப்பலத்தினு, ஞானவானவையமென் னரங்கையென்ப யாவையும், ஞானவாளைவீசி நாசநண்ணுமாநயந்துமேன், மோனஞானியோக முற்றுமுத்திபெற்று வாழ்கவே.

அகஜானனபத்மவருக்கனொனுஞ், சுகஜானனபத்மபதந் தொழுவாஞ், சகஜாமலதன்பரதாமமதின், மிகஜ்ஞாகரநித்திரைமேவுறவே.

ஓம்தத்சத்திதி உபநிடதார்த்த கருப்பம்வாய்ந்த ஸ்ரீமத் கணேசகீதையென்னும் யோகாமிருத அர்த்தசாஸ்திரத்தில் ஸ்ரீமதாதி கணேசபுராணத்திலுள்ள ஸ்ரீகஜானனவரேண்ய சம்வாதத்தில் பிரஹ்மார்ப்பண யோகமென்னும்.

மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

வி. எக்காரணத்தால் ஐயப்பாடுற்றவன் இருவகையாய உலகசுகங்களினின்றும் பிரட்டனுவான் என அருளப்பெற்றதோ, தஸ்மாத் = அக்காரணத்தானே, அந்த: சம்ஶயம் = இருதயத்தின் கண்ணெழும்மொழிந்த விதமாய

ஐயத்தை, ஞானகட்கப்ரஹாரேண=மெய்யுணர்வு வாளால் வீசி, சித்வா=வெட்டிப் பெறிந்து, யோகயுக்தோப வேத்நர:= பிரஹ்மநிஷ்டையையேயுடையவனாக அதிகாரியாகவேண்டும். எவ்விதமாயது சம்சயமென்னில், அஞ்ஞாநாபலாத் சம்பூதம் = அறியாமையின் வலுவினாலே ஆக்கமுற்றெழுந்ததாம் என்க.

ஸ்ரீ பகவற்கீதை.—அறியாமையிலே பிறந்துன்றனகத் தேவளர்ந்தவையுறவை, நெறிபாலுன்றன் ஞானமெனும் வாளால்வெட்டி யறநீக்கிக், குறிபாலுன்றன் வினைவிளைத்துக் கொள்வாயென்றாகூறினை, னுறியார்வெண்ணெய்தொட்டுண்டிவ் வுலகமுண்ட திருவாயான்.

மெய்ம்மொழியுடையாருமிது கூறுவார்:—வருந்திய சரியைதீர்த்த மந்திரஞ்செபங்கள் பூசை, பொருந்தியதியான யோகம் போதத்திற்கேதுவாகுந், திருந்தியஞானமுற்றுற் சிற்சொரூபத்தைநோக்கி, யிருந்திடுநிலையின்பாரா ளின்பமுமியோகியன்றே.

பிறப்பொடு மிறப்பைக்கற்று கம்பீரப்பெருமருஞ் சற்பொருள்பெரிதாந், திறப்புறக்காட்டுங் கணபதிகருத்தின்றீபிகையெனுங் கணேச்சுரன்றன், சிறப்புறுசாதுர் தரனணி புரிந்ததிவ்விய கீதையினுரையின், மறப்பறுமூன்றதா மத்தியாயம் மாமுகன்றிருவடிமகிழ்வே.

ஸ்ரீமத் பதவாக்கியப்பிரமாணமர்யாதா துரந்தரசாதுர்தரவம்சாவதம்ச கோவிந்தசூரி சூனு ஸ்ரீ நீலகண்டபண்டிதராற்றிய ஸ்ரீகணேசகீதை டீகையில் இது பிரஹ்மார்ப்பண யோகமென்னும்.

மூன்றாதவத்தியாயம்

முற்றிற்று.

கணபதி துணை.

நான்காவது

# த்வைதசந்யாசயோக அத்தியாயம்.

(அ - கை.) முன்னத்தியாயத்தில் சம்யமாக்கினியில் என்பதாதியால் காயிகவாசிகமாநசிகங்களாய சுருவகருமங் களின் உபரதிரூபசந்யஸ்தி=சந்யாசம், அருளப்பெற்றது, காமாங்குரமென்பதாதியானே நிஷ்காமமாய அவைகட்கே அநுஷ்டான யோகம் அருளப்பெற்றது, பரஸ்பரம்விரோதி களாய அவ்விருபக்கங்களுள் அடியேனுக்கெப்பக்கம் மேன் மையானது என்பதையுணர அவாவியவரேண்யன்கூறல்:—

ஸம்ந்யஸ்திஶ்சைவ யோகஶ்ச கர்மணாம் வர்ண்யதே த்வயா, உபயோர் நிஶ்சிதம் த்வேகம் ஶ்ரேயோ யத் ப்ரூஹி மே ப்ரபோ,

வினைகொலோநலம்வீடலதோநல, மனையனுயருளென் றனுமன்றுளான், றனயனுமொருதந்தனுமந்திரத், தினையமா நெறியீதெனவோதுவான்.

க. கருமங்களின்வீடுகையேகவினைற், றருமங்களைநாடு கைதாந்தவமேல், இருமண்பொருண்மேன்மையதேகமெதோ, பெருமிங்கடியேனுயவேபிறங்காய்.

வி. கர்மணாம்சந்யஸ்தி: ச=வினைகளின் முற்றினுமே விடுகையும், யோக: ச=நிட்காமமாக அவற்றின்தேயாய அநுஷ்டானமும், த்வயா=தேவரீரால், செய்யத்தக்கனவாக, வர்ண்யதே=வருணிக்கப்பெற்றன; சகாரமிரண்டும் பரஸ் பர சமுச்சயப்பொருட்டாம். ஏவகாரம் கருமங்களின் விலக் கால் சந்யாசத்திற்கே பூஜ்யதையை யுணர்த்தற்பொருட்

டாம். உபயோ: = இவ்விரண்டனதிடையில், யாது நிச்சி தம்சிரேய: = துணிபாகமேன்மைமிக்கதெதன, ஏகம் = இரண் டில் ஒன்றுளதோ, அதனை, மே = அடியேன்பொருட்டு, வத = வெளிப்படையாக் திருவருள்செய்யவேண்டும்; துஜப் தம் துவைத உபமர்திதுவைத உபஜீவிகளாய அவற்றின் அத் தியந்தவைலக்ஷண்யப் பொருட்டாம் ஹேப்ரபோ! = ஹே ஞ்ஞாசமர்த்தரே!

ஸ்ரீபகவற்கீதை.—கரும நன்றெனவுமெதிர் கழறுகின் றனைதுறவை, யருமருந்தெனமொழிதிபவையிரண்டினும மல, வொருமையென்றுயரகலவுரைசெய்கென்றனன்விசய, விருமையின் பரிசுமிதுவென விபம்பிடுமிறைவன்.

உபதேசித்தருளப்பெற்ற கருமசந்யாச கருமயோகங் கள், ஏகபுருஷ அநுஷ்டேயங்களா? பின்னபுருஷ அநுஷ் டேயங்களா? ஆதிபதாகாதாம், கருமவதன்றியாகங்கட்குத் திதிகதிபோலும் பரஸ்பரம் முரண்பாடின்மையானே ஒரு காலத்ததுட்டித்தால் ஒல்லாமையின். காலவேற்றுமையா னேயதுகைக்கூடும் அறிஞன் அறியான் அவத்தைவேற்றுமை யாலாதல், விரக்தி அவிரக்தி அவத்தைவேற்றுமையாலாதல், சந்யாச கருமயோகங்கட்கு ஓரிடத்திருத்தல் முரணுமை யின் என்னற்க; வித்வத் சந்யாசத்திற்கு வித்தையின் உத்தரகாலிகத்தன்மை யுண்மையானே ஞானங்கத்தன்மை யின்மையின், "அகன்றவனுனேயஃதறிதக்கதாம்" என்ப தாதி சுருதிகூறிய ஞானார்த்த சந்யாசத்திற்கே ஈண்டு ஆரா யும் பான்மையுண்மையின். விரக்தனுக்கே கருமயோகத்தி னும் அதிகாரித்தன்மையானே சந்யாச கருமயோகங்களில் விரக்திபவிரக்தியவத்தை வேற்றுமைவிவத்தையும் கூடா மையின். ஆகலின் ஏகபுருஷ அநுஷ்டேயத்தன்மைப் பக் கத்தில் யுகபத்காலபேதத்தானுதல் அவற்றின் அநுஷ்டான

அசம்பவத்தானே பொருளால் இரண்டிலொன்று செய்யத் தக்கதாகச்சேர்வுற்றழியாது மேன்மைபதோ அதுவேயாற் றத்தக்கதாம், தகவே அவ்வொன்றைபே அடியேற்கு அருள வேண்டும், இரண்டையுமேலாதாம். இதனானே யிரண்டா வதுமாகாதாம், கருமசந்யாசங்கள் பின்னபுருஷ அநுஷ்டே யங்களாயின் அந்யதர அநுஷ்டானப்பொருட்டு அடியேற்கு ஒன்றே யுபதேசித்தருளவேண்டியதாகும்; ஆகவேபக்க மிரண்டிலும் கருமசந்யாசங்களிடையில் மேன்மைமிக்கது இதுவே நீ யநுஷ்டிக்கவேண்டியது எனத்துணிந்தருளி யுரைத்தருளவேண்டும். ஒன்றைத்துணிந்திது மேன்மைய தாமெனில் நன்றெனக்கொண்டு நான் நன்மையதடைவேன் என்னும் வினாவிற்கு. அ. 2; சு. 19. அ. 3; சு. 20. என்பதாதியானே கருமமே மேன்மையது அநுஷ்டிக்கத்தக் கது என்றருளியதே போதியதாமெனினும், மறித்து மறித் தும் கருமசந்யாசப் புகழ்ச்சியானே, கருமயோகமே ஏன் முதலில் அநுஷ்டிக்கவேண்டும், சந்யாசமே யேன்முதலில் அநுஷ்டிக்கக்கூடாது என்றடியேற்குத் தோற்றுகின்றது. அ 2. சு 3 வதில், வினைபயிலா மனத்தூய்மையில்லாதவ னுக்கு வைராக்கியம் சம்பவியாமையின் முதலிற் சந்யாசந் தூடிக்கப்பெற்றுளதே யென்னற்க; விரக்தனுக்கே கரும யோகத்தில் அதிகாரித்தன்மையானே, வைராக்கியம் எய் தாதவழிமுதலிற் கருமயோகமும் எய்தாமையின், அதன் பொருட்டாகவாதியில் ஒருதலைபாய் வைராக்கியம் அடைய வேண்டலின் கருமயோகம்போலுங் கரும சந்யாசத்திற்கும் முதலின் முரணின்மையின் ஆகலின் முன்னையவுபதேசத் தானே அடியேனுக்கு அத்தியவசாயம் நன்குதிக்கவில்லை, அதன்பொருட்டிப்போது அநுட்டிக்கத்தக்கது இதுவொன் றேமேன்மைய தென்றருளிச்செய்யவேண்டும் என்பதாம். நிச்சித்மென்ற ததற்கேயாம் வர்ண்யதே யென்றதனானே

முதற்பக்ஷத்தின் முரண்காட்டப்பெற்றது; ஏகம்வத என்றமையானே இரண்டாவது பக்ஷத்தில் அடியேற்குத் தனித் தேயருளவேண்டும் எனப்பெற்றது. உபயோ: யத்ச்ரேய: என்றதனானேயோ பக்கமிரண்டினும் பலித்ததாம் வினைப் பொருள் காட்டப்பெற்றது என்றறிக. 1

(அ - கை.) இதனது உத்தரத்தை ஸ்ரீ கஜானனர் அருளல்:—

சு. க்ரியாயோகோ வியோகஶ்சாப்யுபௌ மோக்ஷஸ்ய ஸாதநே, தயோர்மத்யே க்ரியாயோகஸ்த்யாகாத்தஸ்ய விஶிஷ்யதே

ச. வினையின்யோகம் வியோகமுமாமிவை, இனிய வீட்டினுக்கேதுவென்றோதுப; இனையவற்றுள்ளெறி வதினும்வினை, யனையனுக்குச்செயல் சிறப்பாகுமால்.

வி. க்ரியாயோக:=நிஷ்காமமரும அநுஷ்டானமும், வியோகஶ்ச=காயிகவாசிகமாநசிகக்கிரியைகளின்றியாகமும், உபௌமோக்ஷஸ்யசாதநே = ஆகிய அவ்விரண்டும் முறையாகசித்த சோதகத்தன்மையானும், தத்துவஞானஹேதுத் தன்மையானும், முக்தியின் சாதனங்களாம். தயோ: மத்யே = அவற்றின் மத்தியில், த்யாகாத் = தியாகத்தைக் குறித்து, க்ரியாயோக: = கருமயோகமானது, தஸ்ய = அவனுக்கு, விசிஷ்யதே = சிறந்ததாம். அவிரக்தனாலேசெய்யப் பெற்றதியாகமானது ஏறிவிழுதற்காம், கருமியோபமித்தவன் இடேபதனமாகான் என்னும்நியாயத்தானே, பதனமாகான் என்பது பாவமாம். 2

(அ - கை.) எத்தகைய கருமயோகம் தியாகத்தினுஞ் சிறந்தது என்றாசங்கிப்ப அருளல்:—

ஸு. த்வந்த்வஸஹோ த்வேஷ்டா யோ நகாங்க்ஷதி கிஞ்சந । முச்யதே பந்தநாத் ஸத்யோ நித்யம் ஸந்ந்யாஸவாந் ஸுகம் ॥

க. துவந்துவங்களென்பவுந்துந்பதுந்துதைந்திலா, ரவந்துவங்கவெம்பிலாரதொன்றினுந்தமன்பிலார், உவந்து வந்துடன்பலந்துளந்துலங்கியென்றுமே, பவந்துவந்துறந் திருந்துபந்தமுந்துசிந்துவார்.

வி. த்வந்த்வதுக்கசஹ꞉ = சீத உஷ்ணமான அபமான லாப அலாபஜயபராஜயமுதலியவை. துவந்துவங்களாம், அவற்றாலாந்துக்கங்களைச்சகிப்பவன், அவற்றால் அநாத்விக் னன் என்பதுபொருள். இதனாலே, அத்வேஷ்டா = பகைவ ரது அழிவையும் அவாவாதவன், யோநகாங்க்ஷதி கிஞ்சந = சுகப்பிராப்தியையேனும் துக்கநிவிருத்தியை யேனும்பாவன். அவாவிலனே, உதாசீனன்போலுமிருப்பன் என்பதாம், இத் தகைய அவன் கருமங்களினாலே, பந்தனாத் = யான் என தென்னும் அபிமானரூபபாசத்தினின்றும், மனத்தூய்மை வனுவானே, நித்யம் சந்யாசவாந் = எப்போதுஞ் சந்யாச முடையவனாகவே யிருந்துகொண்டு, சுகம் = ஆயாசமில்லா மல், வாக்கியசிரவணமாத்திரத்தானே யுற்பன்னமாகிய தத் துவஞான முற்றவனாய் சத்யோமுச்யதே = உடனேவிடு படு கின்றான்.

ஸ்ரீ பகவற்கீதை:— துறவுநன் றருவினைசெய்தொழிலு நன்றவைதுணியி, லறவுநன் றருவினைகள் விடலிலங்கவை மூயல்கை, பெறலிலின்பமுமிழவிலிடருமொன்றிலர்பெரிது, துறவுநின்றவர்பிறர்க டெரினின்றிடுதொழிலர்.

சந்யாசத்தைக்குறித்து அநாயாசமாகப் பந்தமோசகத்
தன்மையானே அதனினுஞ் சிறப்பென்றருளப் பெற்றது,
மேலும் கருமயோகத்திற் சந்யாசத்திற்குள்ளடங்குந்தன்மை
யுண்மையானும் அதனினும் அதற்குச்சிறப்பாம். அவன்
பரமேசுர அர்ப்பணபுத்தியினானே அநுஷ்டிக்குங்கருமத்தை
யிட்டபலத்வசங்கையினானே வெறுக்கான், துறக்காதிகளையும்
விரும்பான், இராகத்துவேஷ சூனியனாகலின்; அத்தகை
யன்வினைகளின் முயலினும் நித்தியம் செய்யப்பெற்றசந்யாச
முடையவனேயாவன். எதனாலிங்ஙனமோவெனின், சுலபமாக
மோசகத்தன்மை யுண்மையினானும், உட்கருவுற்றசந்யாசத்
தன்மை யுண்மையினானும், கருமயோகம் சிறப்பித்தருளப்
பெற்றதாம். 3

(அ - கை.) இதுவுமது.

௪. ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்விந்ததே பலம் ॥

க. வீடல்கோடலென்றுகன்மம் வேறுவேறுபேறதா,
பாடுவார்கண்மூடரற்ப வாய்விலார்தம் வாய்மைபோற், கோ
டல்வீடலென்றிரண்டிலொன்று நன்றுகொண்டுதான், றேட
லோடல்செய்துபுந்தி தேர்ந்ததீரர்சேர்வரே.

வி. எக்காரணத்தாலிங்ஙனமாமோ அக்காரணத்தால்,
கூறியருளிய விதமாய கருமயோகமானது சந்யாசத்தினும்
சிறப்பாதலின். இதனையறியாத, மூடால்பஞ்ஞா: = மூட
ரும் அற்ப அறிவினரும் ஆயவர், கர்மண: தியாக சங்கிர
கௌ = வினையை வீடல்கோடல்களை, பின்னபலகௌ =
வேறு வேறு பிரயோசனமுடையனவாக, வதந்தி = கூறு
வர், ஆன்மாவை யுணரும் வேட்கைப்பலமுடையன கருமங்
கள், ஆன்மஞானபலமுடையது சந்யாசம் என்னவுரைப்பர்

அம்ஸதசத்தாம். அருளியவிதமாய கருமநிஷ்டையில் சந்யாச த்திற்கு உள்ளடக்கமுண்மையின். விசக்ஷணா:=விரக்தனுயி தனையுணர்ந்தவனே, தயோ: = கருமயோகமிரண்டனுள், ஏகம்=இரண்டனுள் ஒன்றை சம்யுக்ஜீத=நன்கு முயல்க செய்யப்பெறுதகருமமுடையவனும்சம்யமபலத்தினலேயே மனத்தூய்மை ஞானம் என்னும் இரண்டையுமே சம்பாதிப் பன், இங்ஙனம் கருமதற்பரனும் மொழிந்தமுறையாகவே சித்திபெறுவன் என அவற்றுள் ஒன்றையேநன்றாகப்பயின் றுகைவரின் மற்றதுந்தானுகவே சித்தியாநிற்கும் என்பது பொருளாம். அஞ்ஞர்களாகிய பாலர், நன்றாக ஆத்மபுத்தி யை வகிக்கின்றதென்னும் சாங்கியமாஞ் சந்நியாசம், கரும யோகம், என்பவற்றிற்குத் தனித்தனி முரணுற்றபலன்களை அறையாநிற்பர்; ஞானிகளறையார். முடிபுதான் யாது கொலோவெனின்? கருமசந்யாசங்களுள்,தன்னதிகாரத்திற் குத்தக்கபடி ஏதாவதொன்றைச் சாஸ்திரவிதிப்படி அனுஷ் டிப்பானுயின், இரண்டன்பயனுகிய ஞானவாயிலாம் மோ க்ஷத்தையடையவன் என்பதாம். 4

(அ - கை.) கருமயோகங்கள் என்னும் இரண்டனுள் ஒன்றை நன்றாக அநுஷ்டிக்கவேண்டும் என்றுகருதியருளிக் கருமத்தின்கண்யோக உள்ளடக்கம்கூறியருளப்பெற்றது, இப்போது யோகத்திற் கருமவுள்ளடக்கம் விளம்பியருள விழைந்து அவற்றிற்குப் பலத்தாற்பேதமில்லையென அரு ளிச் செய்தல்:—

ரு. யதேவ ப்ராப்யதே ஸ்தாநம் ஸாங்க்யைஸ்ததேவ யோகிபி:। ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பச்யதி ஸ பச்யதி॥

க. கோடல் வீடல்கொண்டு கோடல்கோளிலாமை யாவையோ, தேடலாயயோகினுக் தேடலாவையீவையே,

ஆடல்பேறையூடுமேவு யோகமாகுமாதிபை, நாடலானயோக ரான்ம ஞானமேவிவாழ்வரே.

வி. யதேவபலம்=எப்பயன்றுன், த்யாகாத் = மூவித கருமசந்யாசத்தால், ப்ராப்யதே=அடையப்படுமோ, ததேவ யோகத:=அதேபலத்தைத்வந்த்வ என்னும் சுலோகத்தி லருளிய கருமயோகத்தானும் அடையலாம். இங்ஙனமாத லின், கர்மணா சங்கரகம்யோகம்=கருமத்தைச் சங்கிரகஞ் செய்வதுயோகமாம், சங்கிரகிக்கப்பெறுகின்றது=தன்னுள் ளடக்கமாகக் கருமத்தின்பயன் செய்யப்பெறுகின்றது இதனாலெனச்சங்கிரகம்யோகமாம்; இத்தகையயோகத்தை, யோவிந்ததி சவிந்ததி=யாவனறிவனோ அவன் ஆன்மாவை யறிந்தடைந்தவன் என்பதாம்.

"யோகமே யோகுவார்மோகமே யோகமா, யாகுமா சோகமே யேகமேயாகிலோ, ஏகுமாயோகமே யேகமேயாகு மா, மாகுமோவேறதாமாறதாமாறதே" என ஆஃதறைய வும்பெற்றுளது. இம்மிருதியினானே யோகத்திற்கே சர்வ பாவகூடிய ஹேதுத்தன்மையுண்மையின், ஆசிரமத்திரய கருமத்தையனுட்டியாதவனாயினும், நல்லாசிரியரது திரு வருளானே கிடைக்கப்பெற்ற ஊகத்தால் யோகத்தையே பயின்று முழுத்தடைவிடுத்தல் வாயிலாக ஆன்மாவையறிந் தடைவன் என்பது பொருள்.

ஸ்ரீபகவற்கீதை :—பெருமையொன்றியதுறவு கரும மென்றிருமையினு, மருமையொன்றினையடைஞரவையிரண் டையுமுடைய, இருமையொன்றியமவரிவையறிந்திலரியல்பி, னொருமையொன்றாணருமவரிவையுணர்ந்தவருணரில். ஞா நிஷ்டர்களாகிய சந்யாசிகளானே எம்மோக்ஷஸ்தானம் நேரே அடையப்பெறுமோ அதுவேயோகியரானும் சந்யாச விடைவுவாயிலாக அடையம்பெறும்; ஆகலின், இரண்டிம்

யுண்டாயின் உண்மையினும் அயலாயதொழில் உருசிக்காதாம், உண்மையிலுந் தடைதாமதம் சகிக்க முடியாதாம்; அதுபோல, சமுசாரத்தில் வைராக்கியம் அதிதீவிரமாக உண்டாயின் சந்யாசமல்லாத மற்றொன்று விரும்ப வராதாம், சந்யாசத்திலும் தடைதாமதம் சகிக்கலாகாதாம். இத்தகையதாய தீவிரதர வைராக்கியத்திற் சந்யாசமாம், இஃதிலதாய வழி கருமயோகமாம், என்னும் விவத்தை சம்பவித்தலின் யாதொருகோது மோதாதாம்;

(அ-கை.) அதனானே முறையையருளல்:

௬. நிர்மலோ யதசித்தாத்மா ஜிதவ்யாமோஹதந்த்ரக:,
த்யக்தஸ்நேஹஸ்ஸங்கஹீநோ யோகீ ஸம்யுஜ்யதே.

௧. மலமிலனாகி மனந்தனைச்சினந்து மாற்றியதொழிற் புலன் மருவாச், சலமிலனாகிப் புலனிலவொழித்துச் சந்தத யோகநற்பரனாய், இலனலனாகி யெங்குமிற்றெவற்றாமிடையற நிறைந்துளவிறையை, நலனலனாகிக் கண்டுகொண்டிருக்கு நாயகனயந்து நண்ணிலனே.

வி. நிர்மல:- நிட்காமதருமஅநுஷ்டானத்தானே மனத்தூய்மையுண்டாகியவழி இராகத்துவேடாதி மலரகிதன் ஆவன், யதசித்தாத்மா-அதன்பின் பிரவர்த்தகங்களாய இராகத்துவேடங்கள் இல்லாமையின் இஃதெனக்குண்டாகுக, இஃதெனக்குண்டாகாதொழிக, என்னும் இச்சை இன்மையினானே, யதம்-உபரதமாய, சித்தம் எவனுக்கோ அந்தகைய யதசித்தனாவன், யதசித்தத்தன்மையானே, யதாத்மா-கர்மேந்திரிய வியாபார ஹீனனாவன், ஜிதக:- இவ்வாறாய அவ்வுண்முகன்.

ஈசுரனிடத்திற் றிருஷ்டியை வைத்தவனாய்த் தத்தம் விடங்களினின்றும் திருப்பப்பெற்ற எல்லாக்கரணங்களையுமுடையவனாய்ச் சிறிதுபோதிற்றானே ஜிதேந்திரியனாவன்,

அதன்பின், யோகதத்பர :—யோகம்—சித்தவிருத்தி நிரோ
தம், தத்பர :—அதுவே மேலான காரியம் எவனுக்கோ அத்
தகையவன் ஆவன்; பாகியவிடயங்களையெல்லாம் விட்டவ
னாகிய யோகி தனது ஹிருதயத்தின்கண் மனோமாத்திரமாயி
ருப்பவனாய், எல்லா முப்போதிய துவைதங்களையும், தனது
சங்கற்பமாத்திர அத்தியஸ்தத் தன்மையனே பிரத்தியக்
கான்மாவினும் அயலன்றென்று, ஊகத்தாலும் இவ்வியா
வும் எவ்விவ்வான்மாவென்னுஞ் சாத்திரத்தாலும், காண்பன்
என்பது கருத்து. அதனையே பகருகின்றார் :—சர்வபூதஸ்
தம் ஆத்மானம்—சங்கற்பமாத்திரத்தானே சடம் அசடம்
யாவும் எழுந்தனவாதலின் இரஜ்ஜு உரகசமானமான அச்
சடபூதங்களில் அநுகதமாய அதிஷ்டான சத்தைமாத்திர
ரூப ஆத்மாவை, பஸ்யந்குர்வந்நலிப்யதே—யாவன் காண்
பனோ அச்சடாசட விவேக தரிசியானவன், அறங்களையும்
மறங்களையும் ஆற்றியபோதினும், அவற்றின் பலன்களாய
சுகதுக்கங்களாலாதல், சுவர்க்க நரகரூபங்களாலாதல், பற்
றினையடையான். அவ்வாறே சுருதியும் யோகிக்கு புண்
ணியபாவப்பற்றின்மையைப் புகலாநிற்கும்:—" பதுமபலா
சத்துதகம்பற்று, திதுபோலினியருள் பிரமமதிங்ஙன், மதி
யிலறிதருமாபுருடன்பால், விதவிதவினலாம் வினைவரவா
தே" பாவமென்றது புண்ணியத்திற்கும் உபலக்ஷணமாம்.
அற்றேலிங்ஙனம், கருமங்கழியாதநுயவியாமற் கற்பங்
கோடி சதங்களினாலும் என்னும் மிருதியினானே யோகியாற்
செய்யப்பெற்ற புண்ணியபாவங்கட்கும் சிறிதுபோது தடை
யுறினும், காலாந்தரத்திலோ போகம் அவசியமுண்டாம்
என்னும் வழக்காம் எனின்? ஆகாதாம், அவனது மைந்
தரைசுவரியமடைவர், சர்வ சுகிருத்துக்கள் சாதுகிருத்தி
யத்தை, துவேஷியர் பாவகிருத்தியந்துதைவர் என யோகி
யினது மித்திரர் அமித்திரர்களிடத்திலேயே அப்பலம்ப

தமராம் பந்தம்புந்தியுன்றப்பற்றி, விண்டவுடற்றுட்புறம்பார்மு லனைத்தீ பற்றுதலும் விடலும் வேண்டா.

பராபரங்கண்டோரனைத்தும் பின்செல்வ ருலகியல்பு பற்றார் நீங்கார், சுராலயநந்தனவனத்தும் பற்றார்கள் சூனி யத்துந் துயரமெய்தார், விராவுநியதியுந்தள்ளார் வெய்யவன் போலனுசரிப்பர் மேன்மைசான்றோ, ரிராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்டமுனி யியம்பலோடும்.

வானே குகதிரிரவினாளியற்றும் வாறென்னவந்துவந்து, தானே தோன்றிய தொழிலைப்பற்றின்றிச் செய்துமெனச் சனகனெண்ணித், தீனேயவருகாலஞ் செல்கால மிமையள வுஞ் சிந்தைசெய்யா, ஞானேறு நிகழ்காலத்தோரிமைப் பின கைதலோடிலாவனுற்றான்.

மிகவருகாமாதிகளாம் விகாரமடைந்தும் விண்போன் மிக நொய்தானோ, ரகமெனலின்றிச் செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலு மழுந்தமற்றோர், சகநெறிகள்செய்திடினு மன் னியர்போற் கண்டு குளிர்தன்மை சான்றோர், திகழ்மனமு நினைவுமிருந்துஞ் சிறிதுமில்லாதோர் சீவன்முக்தர்.

காயத்தின் வேறாகத் தன்னைக்கண்டோன் காயமீறினு மறியான் கன்னற்கட்டி, தீயற்காயினுமரிந்தபோது மின்பந் தீராதவாறு போற்றெளிந்த ஞானி, மாயத்தின் மோகத்தாற் பேதமாகான் மணந்த பரபுருடன் மேன்மனஞ்சேர் மங்கை, நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யுமாப்போ னிகழ்தொ ழிற்செய்யினும் பரத்தினிலைமை நீங்கான்.

அபாவமே பற்றலபாவம் பாவித்தலாய்த் தூண்மைப் பொருள் காண்டான் மனமாய்வென்பர், சுபாவமாமனத்தை யுமுள்ளகற்றிச் சிதச்சுதைபோலு மிவ்வியூய நடக்குமென் னிற், றவாததொழிலுற்றாலு மந்தச் சித்தந் தன்வடிவிலாத தனைச் சாற்றுங்கண்டாய்; குவான் மறுசன்மந் தருவாதனை

துன்னுதோர் குலால வட்டம்போற்றிரிவர் குறைவின்முத்தர். என்பனபோன்ற செய்யுள்களை மேண்டுதாகரித்துக் கொள்க. 7

(அ - கை.) ஆன்ம உண்மையை யபரோக்ஷஞ்செய்தவனே கேவலம் கருமங்களானே கட்டுப்படான் என்பதாக இன்றும், மற்றோ, பரோக்ஷ ஞானவானும் சங்கபலத்தியாகத்தானே கருமபலங்களாற் கட்டுப்படான் என்று முன்னருளியதையே நினைப்பூட்டி யருளுகின்றார்:—

அ. தக்ஷவித்யோமயுக்தாத்மா கரோமீதி நமந்யதே
ஏகாதசேந்திரியாணி கர்வந்தி கர்மஸம்கயா.

கூ. விரிவதாகிய தத்துவவித்தெனும் யோக, மருவுமான்மனும் வனைருவனென மனமலரான், ஒருபதேகமாமிந்திரியப் பந்திகளொழுங்காய்க், கருமசங்கையாற் குயிற்றிடுமெனக் கருதுவனே.

வி. தத்வவித் :—பரோக்ஷமாகவே ஆத்மதத்துவத்தை யுணர்ந்து அதன் லாபப்பொருட்டு, யோகயுக்தாத்மா= கருமயோகத்தோடுகூடிய தேக இந்திரியாதி சங்காதமுடையவனும், கரோமி இதிநமந்யதே=யான் இதைச் செய்கின்றேன் என்று ஆத்மாவிற் கருத்துருத்தகைமையை யெண்ணுவதில்லை, ஆயின் யார்செய்கின்றார் என்றுசங்கிப்ப அருளல் :—ஏகாதசேந்திரியாணி=பதினொன்றெண்ணுடையன, ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கருமேந்திரியங்கள் பதினொன்றாவது மனமும் சேர்ந்ததாம் ; இவைகளே, விகாரித்தன்மையானே கருமங்களை, குர்வந்தி=செய்கின்றன ; கர்மசங்கயா=கருமமெனத்தமக்கு வகுக்கப்பட்ட முறை பற்றியென்பதாம். நிர்விகார ஆத்மாவோ செய்வதில்லை, துயிலும் புருடனுடைய பிராணாதிகள் அன்னபசனாதி செய்வனவாயே உளவாம், ஆண்டுப்புருடன் யான் செய்கின்றே

னென்று எண்ணுவதைப்போலக் காணேனும், இங்ஙனம் விழித்திருப்பினும் கர்த்திருத்துவ அபிமான சூனியத்தானே இயற்றிய்போதினும் அவற்றால் லேபமுறுவதில்லை. யாரெவ்வென்பதனால் ஸ்ரீ பகவானுமிதை யினியருளுவர்.

ஸ்ரீ பகவத்கீதை :—காணுங்கேட்குமுறு மோக்குங்காலானடக்குங் கண்வளரும், பேணுந்துறக்கு மூச்சுவிடும்பேசும் விழிக்குஞ் சிம்பிளிக்கும், பூணுமின்னும் பலவெளினும் புலன்சேர்பொறியின் புணர்ப்பென்றே, நானுங்கிரியுமை யொன்றுந் தானங்கான் விளங்குந் துணிவுடையோன்.

சமாகிதனாகிய தத்துவவித்துச் சிறிதுஞ் செய்திலேன் எனவே சிந்தியாநிற்பன் ஆகலின் பற்றையடையான்; அவன் சிந்தை யிவ்வாறாயின், அத்தத்துவவித்து யாதொன்றையும் காண்பதில்லையா கேட்பதில்லையாவெனின்? கேட்டி! விழி முதலிய ஞானேந்திரியங்களாலும் வாக்கு முதலிய கருமேந்திரியங்களாலும் பிராணாதி வாயுபேதங்களாலும் அந்தக்கரண நான்காலும் செய்யப்பெற்ற கருமங்களில் இந்திரியங்களே இந்திரிய அருத்தங்களிற் றத்தமக்குரியவற்றிற் செல்லுகின்றன, யான் முயல்வதில்லையெனத் திடங்கொண்டு யாதொன்றும் யான் செய்வதேயில்லையென எண்ணுகிற்பன் எனக்கொள்க. தரிசனசிரவணபரிசனகிராணை அசனங்கள், சக்ஷுஸ்ரோத்திர துவக்கு கிராணாசன வியாபாரங்களாம், கதியாதிகள் கருமேந்திரியங்களாம், சுவாசாதிகள் பிராணாதிகட்காம், மூடல் விழித்தல் முதலியவை நாகாதிகட்காம், நினைத்தல் முதலியன உட்கரணங்கட்காம்; வெளிப்படையாதலின் விரித்திலம். 8

(அ - கை.) இதனையே வெளிப்படுத்தியருளால் :—

௮. [illegible]

க. உய்வதற்கெவன் வினைதனை யுருற்றுவனவன்முன், செய்வவென்பவை யாவையுஞ்சேர்க்குக சிவத்தே, கைவரு மறமறங்களாற் களங்கமுறுகதுவான், றைவரு மிரவியின் கதிர் சகத்திலெத்தகைத்தே.

வி. ய: = யாவன், சங்கத்தைவிட்டு, கர்மகரோதி = வினைமுயல்வனோ, அவன், ஸர்வம் அபிதத்கர்மபிரஹ்மணி அர்ப்பயேத் = அவ்வினைகள் யாவற்றையுமே பிரஹ்மத்தின் கண்ணே சமர்ப்பணஞ்செய்தல்வேண்டும் அவன், புண்ய பாபை: = பரமேசுரரிடத்திலர்ப்பித்த அச்சுகதுக்கபலன்க ளாலே, நலிப்பதே = பற்றையடையான். ஆண்டுத்திருஷ்டாந் தம்:—பானோ: பானு: யதார்த்தக: = சூரியனுடையரஸ்மியா னதுமேத்திய அமேத்தியங்களைத்தீண்டுவதாயினும், மேத்தி யத்தன்மையையேனும் அமேத்தியத்தன்மையை யேனும் சுயம்தீண்டுவதில்லை அதுபோல இதுவுமாம் என்பதாம்.

ஸ்ரீபகவற்கீதை:—யாரெவ்வினையு மென்பொருட்டாலி யற்றிப்பயனையிகழ்வரவர், சேருமவினைகளவற்றோடுஞ் சேரா ரெய்துந்திறமுரைக்கிற், சாரவுடனே பிறந்திருந்தாந்தண்டா மரையின்றகையிலையு, நீருமெனலாயிருப்பரதி னின்றோர்க் கொன்றுமிகழாதால்.

பரமேசுரரிடத்தில், சுவாமியின்பொருட்டுப் பிருத்தி யனைப்போல யான்பரமேசுரர்பொருட்டுக் கருமத்தைச்செய் கின்றேன் என்னும்புத்தியாலே சமர்ப்பித்து மோக்ஷபலத் திலும் அபிலாஷையையொழித்துயாவன் கருமத்தைச்செய் கின்றனனோ அவன் பாவபுண்ணியவடிவமாய கருமத்தால் லேபப்படான்; பதுமபத்திரம் மேலேவிட்ட நீராலே நனை யாததே போலும்.

(அ - கை.) பலிதத்தைபருளல்:—

௧௧. காயிகம் வாசிகம் பௌத்தம் ஐந்த்ரியம் மாநஸம் ததா;
த்யக்த்வாऽऽஸாம் [illegible] யோகஜ்ஞாஶ் சித்தஶுத்தயே.

க. காயிகங்களிவாசிகம்பவுத்தனமந்திரியம்
ஆயிகங்கனிமாநசமாகுமவ்வாறே
நோயகங்களமாயவாசையைமிகநூக்கித்
தாயகங்கருமங்களிற்றங்கும்யோகியரே

வி. யோகஜ்ஞா: = கர்த்ருத்துவ அபிமானத்தியாக வாயிலாகக்கரும அநுஷ்டானம்யோகமாம், அதனைநன்கறிந்தவர், ஆசாம்த்யக்த்வா=பல ஆசையையொழித்து, சித்தசுத்தயே = மனத்தூய்மையின்பொருட்டு, கர்மகுர்வந்தி= நித்தியநைமித்திக கருமங்களைச்செய்வர்; கருமத்தைச்சிறப்பித்தருளல்:—காயிகம்=தீர்த்தஸ்நாநகுரு தேவதாநமஸ்காராதி; வாசிகம்=ஸ்தோத்திரஜபாதி, பௌத்தம்=புத்தியாற் செய்யப்பெற்ற தேவதாத்தியாநாதி, ஐந்திரியம் = இருதுகாலத்திற்பார்யோபகமநாதி, மாநசம் = விருப்புவெறுப்புகளில்லாமல் ஜகத்கல்யாணசிந்தனம், ததா=அவ்வாறேயென்பது ஒவ்வொருகருமத்திடையினும் ஒட்டுக. ஈண்டுமனத்தூய்மையின்பொருட்டு என்றருளினமையின், நிஷித்தகாமியங்களைச்சங்கபலத்தியாக பூர்வகமாக அநுட்டித்தபோதினும் அவை சித்தசுத்தியின்பொருட்டு ஆகாவாம் என்றருளியதாயிற்று; ஆகலின், எவற்றால் அப்பயனுமோ அக்கருமங்களையே ஈண்டு அநுட்டிக்கவேண்டுமென்று விதித்தருளியதுமாயது. மாநசம்பௌத்தம் ஐந்திரியம் என்பவற்றிற்கு முறையே தியானம், தத்துவநிச்சயம், சிரவணகீர்த்தனாதிகள் எனவுங்கோடலாம். பரமேசுரப்பொருட்டே இக்கருமத்தைப்பண்ணுநின்றேன் என்பலப்பொருட்டோ அன்றும், என்பதன் வடிவமரியமமதையற்ற பான்மையே யுளதாதல் வேண்டுமென்பதாம்.

(அ - கை.) விபக்கத்திற்பாதகத்தைபகருளல்:—

௬. யோ ஹீநோ (அ)ஹங்க்ருதேர் யோகாத் கர்ம பலேஹயாலங்கரோதி
பத்யதே கர்மபீஜைஸ் ஸ ததோ துக்கம் ஸமச்நுதே

௬. ஈனனுனயோகமானவன்றெழிற்பலேச்சையா
லானவானவற்றுவானளந்திடாவவன்றெழி
லீனுவானவாக்களாலிறுக்கியேயொறக்குற
வானியானதாலறதுக்கமிக்கயில்வனே.

வி. யோக: = கருத்துருத்துவ அபிமானத்தியா ஹீந: = அஃதில்லாதநரன், தேக அபிமானியானவன், கர் இலௌகிகவைதிகவினைகளை, பலஈஹயா = பயனடை சையால், அலம் = மிகவும் அத்யர்த்தம், கரோதி = செய் இஃதென்னல்நன்றாக இயற்றப்பெற்றது என்றுதான்கெ டாடுவன், யாவன், ஸ = அவன், கர்மபீஜை: = கருமட விருத்திஹேதுக்களாய வாசனைகளானே, பத்யதே = தே தைவிட்டவனுயினும் வாசனைப்பாசவலுவானும் தேகக் தானேகட்டுப்படுவன். தத: = அதனானே பிறப்படை வனுகி அடையத்தக்ககரும அநுசாரத்தானே, துக்கம்ச நுதே = துயரத்தைநன்றாக அயின்றுகொண்டிருப்பன். மம் அதன்வாசனைத்தாரையும் ஒருபோதினும் இடைய நிக்குமென்றறிக. முற்சுலோகத்திற்குங்கூட்டி.

ஸ்ரீபகவற்கீதை:—உடனாய புலனொடு மனனொடு புத பானு, நடமாகுமென மூபல்வார் நாடோறு முயன்ற விடமாகு மவ்வினையே வீடாகும் வினைப்பயனைக், கட மெனமுயல் வாரதனாலே கட்டுண்பார்.

கருத்துருத்துவ அபிமான சாமியமாயினும் ஓரே த்தானே சிலர் கட்டறலும் சிலர் கட்டுறலும் என் என அவ்வைஷம்மியத்திற்கு ஹேதுவிதுவார்:—ஈசுரப்பொ டே இவ்வினை என்பொருட்டன்று என்னும் வகையிற்

கித்தனாகிக்கருமபலத்தைவிடுத்துக் கருமம்புரிந்து ஞானவாயி லாய்ப்பெருஞ் சாந்திவடிவமாய் மோக்ஷத்தையேயடைவன் யுக்தன். அயுக்தனோ பலப்பற்றுற்றுக் காமப்பிரயுக்தகரும அநுஷ்டானத்தானே கட்டுப்படுவன் என்பதாம். 11

(அ - கை.) யாங்ஙனமாயினாங்கதனுச்சேதமெனின்? ஆமாறருளல்.

௧௩. 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑌁𑌖𑌂 𑌵𑌶𑍀;
𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍.

க. ஆழுகன்மம்யாவுமே யகத்தினாலகற்றியே, வாழு மின்பமாகயோகி யொன்றுமேவினந்திலான், சூழுமன்பனா கியே செய்வித்திலான்சுகித்துமே, யாழிதன்னிலேனுநல்ல யத்தனத்திலேனுமே.

வி. யோகீ = இயம, நியம, ஆசன, பிராணயாம, பிரத் தியாகார, தாரணை தியான, சமாதிரூப அஷ்டாங்கங்களோடு கூடியயோகமுற்றவன் அதனானே, மநஸா ஸகலம் கர்ம = மனத்தினாலெல்லாக்கருமங்களையும் யான்பிரமமென்னும் வாக்கியார்த்த அநுசந்தானத்தையும், த்யக்த்வா = விட்டு, நிர்ப்பீஜ சமாதியிலிருப்பவனாகி, சுகம்வசேத் = அகண்டா னந்தத்தை யநுபவித்துக்கொண்டுவாழ்க அதனானே, நிர் விகற்பத்தன்மையானே நகுர்வந் = செய்யாதவனுமாவன், காரயன்வாபி = செய்வியாதவனுமாவன், ஆகலின் ஸ்வப்ரே = மகத்தானகாராகாரரூப வர்த்தத்திலாதல், சுபத்தனே = நல்லராஜதானியில் ராஜ்யபாலனஞ்செய்து கொண்டாதல், மனமற்றொழுகும் மாண்பினானே, நந்தன் = சொரூபானந்த ரூபமாயிருந்துவாழ்க. நிருவிகற்பமாயயோகிக்குப் பாகியப் பரிசதுக்கம் இலதாம் எனச்சுருதியும் புகல்கின்றது:— “இந்தப்புரு டன்றானென வேதன்னையுணர்ந்தா, லெந்தப் பொருளிச்சித் தெவனின்புக்குடல்வேவாம்” சகல்ராணி

னின் எண்ணங்களையும் உணர்ந்துகொண்டு இருந்தபத்திருப்பதும் அசாரயாதிதருட அதீதமாயதும், ஆகியதன்னைக் கோடியிலொருவன் உணர்வனேல், ஏல் என்றது ஆத்மவித்தையின் துர்லபத்தன்மையைக்காட்டியதாம். எங்ஙனம்:— இந்தப்பரமாத்மா சர்வப்பிராணிப் பிரத்தியயசாக்ஷி நேதி நேதியென்பதாதியாய்நிகழ்த்தப்பெற்றது, இதனினயலாய்க் காண்போன் கேட்போன் இனிது கருதுவனறிபவனில்லை, சமன் சர்வபூதத்திருப்பவன், நித்திய சுத்தபுத்த முக்தசுபாவன்யானேயேன் என்றுணர்ந்த அவன் அச்சொரூபத்தினும் அயலாய மற்றொருருபலபூத எவ்வஸ்துவை இச்சைசெய்து தான் சரீரத்துன்பெய்துவன்; தன்னினும் அன்னியனுய எவனுக்காகத்தான் எப்பயனுக்காகத்தான் தேகதாபத்தைச்சேர்வன்; தனக்காகவேண்டியபல மொன்றையுமோகாணேம், தனக்கன்னியமாகவு மொருவனையுங்காணேம், அயலொருவனிருப்பினன்றே அவனுக்காகப் பாடுபடலாம், யாவுமேதன் வடிவமாகவன்றே விருக்கின்றது, ஆகலின்; எந்தப்பொருளிச்சித்தெவனின்புக்குடல்வேவாம், சரீர உபாதியாலாக்கப்பெற்ற துக்கத்தைப் பின்பற்றியேன்றக்கிப்பன், சரீரதாபத்தையேன் றனக்காக்கிக்கொள்வன்; தன்னினும் அயலாய வஸ்து ஒன்று உண்டென்றும் அதனையடையவேண்டும் என்றும் நினைவும் விழைவும் உடைய அநாத்மதரிசிக்கன்றே, எனக்கிதுவேண்டும், மைந்தனுக்கிது மனைவிக்கிதுவென அவாநிகழ்ந்துகொண்டேயிருப்பது, இருக்குமிவனுக்கேமறித்து மறித்தும் ஜனனமரணப்பிரபந்தரூட மாயசரீரரோகம் விருத்தியாம் மேலுமேலும், சருவான்மதரிசிகட்கோ அஃதசம்பவமாமெனவறிகவென்பதுபொருள்.

ஸ்ரீமத்பகவற்கீதை:— அன்பவினையாருயன்விட்டமையியாலே, யென்பதுபொய்வாசல மையூரதனினுள்ளேயின் பவுருவாயினி திருப்பனியல்பாலே, முன்பயில்வுதாம் வினை

செயற்முயல்வியாலுல் சித்தத்தைச்செயித்தோன், நித்திய நைமித்திககாமியப்பிரதிஷித்தகருமாதிகளாகிய கருமங்களையும். மனத்தானே "கருமத்திலகருமம்யாவன் காண்குவன்" என முன்னாருளிய அகர்த்திரு ஆன்மதரிசனத்தானே பரித்தியாகித்துச்சீவன் முக்திரூபசுகத்தை யனுபவித்துக்கொண்டு வாழ்வன்; வித்வத் சந்யாசம் ஜீவன்முக்தி காரணமாதலின். அற்றேல், யாவருமே ஞானகருப்புலன்களானே அவ்வவ்வினைகளை எப்போதும் இயற்றிக்கொண்டேயிருப்பர், ஆகமோ இயற்கையானே சேஷ்டைக்கு ஆச்ரயமாம், அங்ஙனமாக எங்ஙனம் நித்தியஞ்செய்து கொண்டிருக்கும் வடிவிற்குச் சர்வகர்ம சந்யாசம்கூடும், ஒருவருமொருபொழுதினுமோர் காலமுமிருவகை வினைசெய்யாதவர்களில்லையால், என்பதனையாகலின் எனின்: உண்மையே, நேத்திரநாசி கர்ணமுகபாயு உபஸ்தங்களென்னும் ஒன்பதுவாயில்களமைந்த புரம் போன்றபுரத்தில் அதாவது சுருதிப் பிரசித்த பிரஹ்மபுர தேகத்தில், பாபிகளுக்கும் பிரவாசிபோலும், அதன்பூஜை பரிபவாதிகளானே மகிழாமலும் வாடாமலும் அகங்காரமமகார சூனியனாய்ச் சுயஞ்செய்யாமலுமே செய்வியாமலுமே வாழ்வன். அகங்காரவிமூடாத்மாகர்த்தாகமென வெண்ணுவன் என அருளுதலின் தேக இந்திரியாதிகள் கருமங்கள் செய்யும்போது அக்காலத்திய அத்தியாசமுடைய அகங்காரத்தானே யகமேயாற்றுகின்றேன் என அஞ்ஞன் எண்ணுவன். அஞ்ஞான்று புத்திராதியாதிகளிடத்தில் மமகாரத்தானே அவர்கள் ஆற்றும்போது யான் இவர்களைக்கொண்டு செய்விக்கின்றேன் என்று முடன் உணர்வன். ஞானியோ அகங்காரமமகாரமற்றமையானே அவ்வாறுணரமாட்டான், மற்றோ, இந்திரியங்கள் இந்திரிய அருத்தங்களில் என்றருளியபடி, நிட்கிரிய ஆத்மரூபனாகவேயிருப்பன். இங்ஙனமாகவே நிட்கிரிய ஆத்மாவின்மாட்டு அவித்தையானே அத்தியா

சிதங்களாய தேகேந்திரியாதி வியாபாரங்கட்கு விக்கியாற் பாதமே சருவகருமசந்யாச மென்பதாம் எனயாதொரு கோதுமிலதாம். தேகேந்திரியாதியதிரிக்த ஆன்மதரிசியே யிவ்வாறிருப்பன், அன்னியனே தேக ஐக்கிய அத்தியாசத் தால் தேகமேயாவன் தேகியாகான் என்றுணர்க. அகங் கேகியென்பதுபோன்றே யகந்தேகியென்பதாகவே யாவருக் கும் பிரதீதியாகின்றது, தேகோகமென்பதாகவோவிலதாம், எனினுமென்னையன்யான் இளைத்தவன்யான், பருத்தவன் யான்செல்கின்றேன் என்பதாதி வெகு வெகு புலப்பாட் டையநுசரித்தும், "முன்ன முன்ன மயலினின் மூண்டுதான் மன்னியின்னல் செய்வாதனை மாண்பினு, லன்ன மின்னவை யாதிசங்காதத்திற், றுன்னியுன்னு மகம்புந்தி தோன்றுமால்" என்பதாதி மிருதியையநுசரித்தும், தேக ஐக்கிய அத்தி யாசந்துணி பாகியவழிதேகியென்னும் பிரதீதி பிரதிமாயா தேகம் என்பதுபோன்றுபசாரமாம்எனவிரித்தது சாலுமென அமைவாம்.

ஞானவாசிட்டத்தும் இந்நிர்மனஸ்கனைக் காணலாம்:—

ஈதனைத்துஞ்சொரூபமேயாணிங்கெத்தை யிச்சிப்பேனைதை யிகேழ்வனெனல்பற்றின்மை, மாதுயர்தீரிது சீவன்முத்தர் மெய்யின் மன்னுமாலியானில்லைப் பிறருமில்லை, மேதகுமின் பங்களெலா மேவின்மேவ மேவாதேன்மேவா தாயிடுகவென் றே, யோதியலாறுள்ளே பற்றின்மையுண்டேனுயர் வீட்டுக் கிதுநெறியென் றுணர்தியன்றே.

செப்பியவத்திறநின் றுப்பற்றொன்றிச்சீவத்தன்மையைச் சேராச்சீவன்முத்த, ரிப்புவியிற்றொழிலெல்லாஞ்செய்கதிர் கவின்பவுணர்வன்செய்கையியற்றினுலுங், தப்பறவேவிட்டா லுந்தொழில்கடன்னுற்றருபயன்களொரு சிறிதுந்தாக்கமாட் டார், மைப்புயல்கள்பலவிதமாயெழுந்தபோதும்வானகத்திற் பற்றுதவகையேபோல.

காயத்தில்வேறாகத் தன்னைக்கண்டோன் காயமீரிந்து
மறியான் கன்னற்கட்டி, தீயிற்காயினு மரிந்தபோது மின்பந்
தீர்தவாறுபோற் றெளிந்தஞானி, மாயத்தின் மோகத்தாற்
பேதமாகான் மணந்தபரபுருடன்மேன் மனஞ்சேர்மங்கை,
நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யுமாப்போனிகழ் தொ
ழிற்செய்யினும் பரத்தினிலைமைநீங்கான்.

விருப்புறத்தானே வந்தவெறுக்கையை வெறுக்கைநன்
றன், றொருப்படல் வேண்டுமென்றே யுள்ளன்பால் வேண்
டக்கண்டு, திருப்பொலி மார்பன்சென்று திண்புவிசேரவா
ண்டா, னிருப்புழி மௌனஞ்சாந்தி சமமெய்தி யிராக
மின்றி.

மச்சரமின்றி வந்தொழிலொன்றின் வழியினின்று,
மெச்சியவியப்பிலா தோன்மிருந்த பல்லாண்டு நோற்றுத்,
துச்சமிறவத்தாற் கங்கைகொணர்ந்துதொல்பிதாக்களுய்ய,
விச்சகமிசையே கீர்த்தியீறற நிறுத்தினனே.

கேட்டகிராதன் றனையந்தக்கேடின் முனியார்த்தினி
போனே, காட்டடிவுறைவோர் சமநிலைமைக் கண்ணுமுனி
வர்களைநாங்க, ணைட்டுவிகொரம் புரியுநவையாங் காரமாகில
ராங், கூட்டுபொறியின் றொழிலெல்லாங் கொள்ளுமனஞ்
செய்குவதன்றே.

அதனாலகங்காரத் துருவாமந்தமனை நிச்சயமாகத், திக
மாய்நழுவி நெடுநாளாஞ்செறி சாக்கிரசொப்பன சுழுத்திப்,
பதமாமவையொன் றையுமறியோம் பரமதுரியநிலையானேம்,
விதமாய்க் காணப்படுபொருள்கள் விமலதுரியத்தில தென்
றான்.

நிர்ப்பீஜ சமாதிக்குச் சாதனங்களாகிய அஷ்டாங்கங்
களிவையாம்:—யமநியமாசன பிராணாயாமப்ரத்யாஹாரதார
ணைத்யான சமாதிகளென்பவையெட்டங்கங்களாமே. அவற்

றுள் இயமங்கள் யாவையென விரும்பியவழி விளம்புதல்:—அஹிம்சைசத்திய அஸ்தேயம்பிரமசரிய=பரிக்கிரகங்கள் இயமங்களாம் தருக்கிலாத பிரமசரியமெய், யுரைக்கைகள்ளா மொழிக்கையின்மை செய்யாதிருக்கை யாதொன்றும்பெறாமை யென்றிவை, சுருக்கமாகயம மென்றுசொல்வரால். இம்சை முதலிய நிஷித்தகருமங்களினின்றும் யோகியைத்தடுக்கின் றன வாதலின் இயமங்கள் எனப்பெற்றன. அவற்றுள், காயவாக்கு மனங்களானே எக்காலும் எப்பிராணிகளின் இம்சையுஞ் செய்யாமையே அகிம்சையாம். ஈசுரகீதை "மனத்தால் வாக்காற்காயத்தால் வாதையாவதியாதேனு, மனைத்தாருயிர்க்குஞ் செய்யாத தகிஞ்சையாக வறிகவிது, தனிற்றன்பரமாந் தருமமில்லைசாருமின்பந்தானுமில்லை, யெனைத் தாம் விதியினுயிர்க்கின்னா செயினுமதுவு மினிதேயாம். குறள். தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி தின்னுயிர் நீக்கும்வினை.

எப்போதும் பொய்பேசாமை சத்தியம் ஆம். ஈசுர கீதை:—"உளவாறுரைசெய லுணுரைசெயுமா றொழுகுத லுன், வளவாய்மையதென நாடினர்மதியான் மிகுமுதியார், அளவாரகிலமும் வாய்மையினுளதாதலினதுதா, னுளவாசக வினையானுடையவனி யாவையுமுடையான்.

நாயனார்:—பொய்யாமை பொய்யாமையாற்றி னறம்பிற, செய்யாமை செய்யாமைநன்று.

பிறர்பொருளை அபகரியாதிருத்தல் கள்ளாமை யென்னும் அஸ்தேயமாம். ஈசுரகீதை:—மறைவினிலாகினும், வெளியினிலாகினும் பிறர்பொருள் வவ்வுதல் பெரியகள்ளமாம். திருவள்ளுவர்:—உள்ளத்தாலுள்ளலுந் தீதே பிறன்பொருளைக், கள்ளத்தாற்கள்வே மெனல்.

பட்டர்தவம்வேதநூல் பயிறல்பத்தியாற், கடவுளைவழிபட ; கருதிநெஞ்சினோ, டேழுறு தூய்மை சந்தோடமோங்கிய சீடர்மிகு நியமமாய்ச் சுருங்கச்சொல்வரால். ஈசுரகீதை. ஜன்மஹேதுக்களாய காமியதருமங்களையகற்றி மோக்ஷ ஹேதுவாய நிட்காமதருமத்தில், நியமிக்கின்றன = பிரேரிக் கின்றனவென நியமங்களாம்.

சௌசம்:—மண்ணீர்களாற்பாகிய மலநீக்கம், மைத் திரியாதிபாவனையானேயுள்ளசூயாதிமலநீக்கம். ஈசுரகீதை:- ஆடுறு தூய்மைதானகம்புறம்புள, தோடமதிரண்டையுந் துடைத்தலென்பரால். தோயமு மண்ணுமாக்கொண்டு சுத்தமாக், காயமேவியமலங்கழுவப்பட்டதாம், வாய்மை யமுதலதாமணத்தினுற்செயுந், தூய்மையையுள்ள நற்றூய் மையென்பரால். திருக்குறள்:—புறந்தூய்மை நீரானமையு மகந்தூய்மை வாய்மையாற் காணப்படும். தூய்மையென்ப தவா வின்மைமற்றது வாஅய்மை வேண்டவரும்.

சந்தோஷம்:—கிடைத்தது கொண்டினிது மகிழ்தல். ஈசுரகீதை: கூடினகொண்டகம் பாவங்கூடல், சந்தோட மென்றறிஞராற் சொல்லப்பட்டதால். திருவள்ளுவர்:— வேண்டாமையன்னவிழுச் செல்வமீண்டில்லை, யாண்டுமஃ தொப்பதில்.

தபம்:—வூபுவினை வாட்டல். ஈசுரகீதை:— பவமார் நோவுகெட நோன்புபலவாலாக்கைமெலிவிக்கை, தவமாகு வது. யோகயாஞ்ஞவற்கியம்:—சோபித விதியினாற்றெரு குத்தமார்க்கமாய்ச், சாபிக்கிருச்சிராசாந்திராயணை, பாவ நில்லத்தியாலாகசோஷணம், தாபதருந்தமந்தாமென்பரு வார்.

நாயனர்:—அழுக்காறவா வெகுளியின்னாச் சொன்னான்கு, மிழுக்காவியன்றதறம்.

ஸ்வாத்தியாயம்:—காயத்திரி முதலிய மந்திரங்களின் அத்தியயனம் ஆம், முதலிய என்றதனானே ஓங்காரபஞ்சாக்ஷரஷடாக்ஷர அஷ்டாக்ஷர முதலவற்றைக்கொள்க. அம்மந்திரங்களும், வைதிகங்களெனவும் தாந்திரிகங்களெனவும் இருவிதங்களாம்; வைதிகங்களும், பிரகீத அப்பிரகீத பேதத்தானே இருவிதங்களாம்; தாந்திரிகங்களும், ஸ்திரீபும் நபும்சகபேதத்தானே மூவிதங்களாம்; மந்திரசபவுத்தோஷமுனூற்கறியதுசாலும். ஈசுரகீதை:—வேதாந்தஞ்சதருத்திரியந்தாரகமாஞ் சிவமாகிய மந்திரம் பலவின்செபமத்தியானஞ்சிறந்துள்ள, வவமானதிலாவதன்பேத மறிவாரறையும்படி கேண்மோ.

வாசிகமுபாஞ்சுமானதமென்று மதிலொரொவ்வொன்றினுக்கொன்று, தேசுடைத்தென்று செப்பினர்பிறர்க்குத் தெரியவே செபித்திடுஞ்செபந்தான், வாசிகமுபாஞ்சுவாயிதழடித்தன் மாத்திரமானதமடங்கி, யாசறச்சிந்தைசெய்தலொன்றினுக்கொன்றுயிர மடங்குநல்லனவாம்.

ஈசுரப்பிரணிதானம்:—அபிகிதங்கள் அநபிகிதங்கள் என்பனவாய சருவகிரியைகளையும் பரமேசுரரிடத்தில் பலனைவிரும்பாமல் சமர்ப்பணஞ்செய்தல்ஆம். பெரியோராற்கூறவும்பெற்றுளது:—ஆசையின்றியுமாசையதொன்றியும், மாசுபம்மசுபமெனுமாறுசெய், வீசுமிங்கெவையும் நினின்விந்யசித், தேசினிற்பிர யுக்தமியற்றுவேன். பலாபிசந்தியின் உபகாரகத்தகைமை அபிகிதமாம், பெரியோராற் பேசவும் பெற்றுளது:—முயல்வினைவிவண்முற்றுறுமாயினு, மயல்விளைந்துவருந்து மருந்தவம், செயலிலீசனுக்கின் மகிழ்செய்திடா, பயினுநாய் சுவைபாயசமென்னவே.

ஈசுரகீதை:—கந்தநன்மலர்கொடுகாயபூசனை, வந்தனை செயல்புகழ்வாக்கின்பூசனை, பந்தனையறமனம் பத்தியாற்

செயுஞ், சிந்தனைபி தமுஞ்சிவன்றன்பூசையே, காயுற
தற்றதனுல பயனின்கொள்ள லறிவனேற்றுவிடா மு
னின்.

இச்சௌசமுதலியவை ஐந்துநியமங்களாம்.

அற்றேல்விரோதி விழித்திருக்கும்போது யமநிய
யமாதி சித்தியாதல் எனின்கூறுகின்றார்:—விதர்க்கபா
மேற்பிரதிபக்ஷபாவனமாம் = இவ்வியமநியமாதிகட்கு, வி
க்கை = இம்சாதிசங்கற்பங்களால், = இதனைக் கொல்வே
பொய்மொழிவேன், பிறர்சொத்தைப் பிடுங்கிடுவேன், 
பதாதிகளானே பாதனமடைவுறுங்கால், யமாதிபர
யோகி, "அக்கினிக்குடும்பினிலகந்தபித்துமேற், புக்க
சரணெனப்புகழ்யமாதிகம், விக்கினவிமிசைகள் விடுத்
கோடுதல், குக்கனுங்கக்கினகுளத்தைப்போலுமால்," எ
னும்வகையானே விதர்க்கப்பிரதி பக்ஷங்களைப்பாவிக்
வென்பதாம்.

இப்போது விதர்க்கங்கட்குச்சொரூபப் பிரகாரகார
உட்பேதபலங்களை ஐந்துபதங்களானே முறையேமெ
ந்து பிரதிபக்ஷபாவனத்தைப் புடஞ்செய்தல்:—விதர்க்
ஹிம்ஸாதய: கிருதகாரித அநுமோதிதாலோப குரோ
மோகபூர்வகா மிருதுமத்யாதி மாத்ராதுக்க அஞ்ஞான 
ந்தபலாஎனப்பிரதிபக்ஷபாவனம் = விதர்க்கா = இம்சாதி
என்பதுசொரூப நிர்த்தேசமாம் அவற்றுள் இம்சை 
மேசெய்தல், செய்யெனச்செய்வித்தல், நல்லது நல்
என்று அநுமோதித்தல் எனமூவகையாம். அவற்றுள் 
வொன்றும் காரணபேதத்தானே மூவகைமறித்தும் த
லோபத்தானும் அபகரிக்கப்பட்டது இவனால் என்
வெஞ்சினத்தானும் தருமமுண்டாமென்னும் மயக்கத்
னும் ஆம். இவ்விதம் ஒன்பது வகையாய்து இம்

லோபக்குரோதமோகங்கள் மிருது மத்திய அத்திமாத்தி ரத்தன்மையாதியானே தனித்தனி மூவகையாகலும். அதன் வாயிலாய ஹிம்சை முதலனவும் மிருது தன்மையாதியானே மூவிதமாம். அவ்வாறே கிருதகாரித அநுமோதிதங்களும் தனித்தனிமூவிதமாகலினுமென ஹிம்சைக்கு இருபத்தேழு வேற்றுமைகளாம். மிருதுமத்திய அதிமாத்திரையும் தனித் தனிமூவிதமாம்:—மிருதுமிருது மத்தியமிருது தீவிரமிருது மிருதுமத்தியம் மத்தியமத்தியம் தீவிரமத்தியம் மிருதுதீவி ரம் மத்தியதீவிரம் தீவிரதீவிரமென. இங்ஙனம்லோபத்தை விதம், அங்ஙனம்குரோதமோகங்கள் என அதன்பூர்வகிருத ஹிம்சை இருபத்தேழுவேற்றுமையுடையதாம், அங்ஙன் காரிதை அநுமோதிதைகளும் ஆம் என்பதாக எண்பத் தொருவித பேதமாயிம்மையாம். இவ்வாறேபொய் முத லியவற்றினும் பொருந்திக்கொள்க. இவ்வகைத்தாய விதர்க் கங்கள், துக்கம்=நரகாதிகளையும், அஞ்ஞாணம் = ஸ்தாவ ராதிபாவத்தையும் பிராந்திசம்சய ரூபத்தையும் போன்ற அனந்தபலன்களை யடைவியாநிற்கும்; என, பிரதிபக்ஷ ஹம்=விதர்க்க சத்துருக்களை, பாவனம்=பாவிக்கவேண்டு மென்பதாம். இப்பாவனையானே அஹிம்ஸாதியுற்றவழி நிர் விக்கினமாகயமாதிகள் சித்திக்கும், அவைசித்திக்கவேமனத் தூய்மையாயினாகக் கைவல்யம் சித்திக்குமென்பது கபிப் பிராயம்.

இப்போது யமாதிகட்குச் சித்திசூசகமாய அசாத்ர பலத்தை முறையாகக் காட்டுகின்றார்:—அஹிம்சைப் பிர திஷ்டையில் அதன்சந்நிதியில் வைரத்தியாகமாம்=அஹிம் சையின்பிரபாவம் உண்டாகியவழி அவ்வஹிம்சகனுடைய யோகிதொரேயனது சந்நிதியில் இயற்கைவிரோதம் வாய் ந்தகோவியாக்கிராதிகட்கும் வைரத்தியாகமுண்டாம் என் பதுபொருள். இதனையேகருதிக்கூறப்பெற்றது வாசிட்

டத்தில்:—நல்லவருந் தீயவருமன்னைபோல நம்புதற்காயமுதுண்ண நண்ணினு, மல்லன்மலர்மகட் புணர்ந்தபோது மொவ்வாமகிழ்ச்சிதருஞ் சாந்தியுளோர் மரணஞ்செல்வங், கொல்லமரெய்தினுமசையார் புலனைந்தாலுங்குற்றமு நன்மையுநுகர்ந்து குளிரார்வாடார்; தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர்மெய்ம்பர்தூய வரியாரினும் விளங்குந் தூய்மையோரே. நாயனார்:—கொல்லான்புலாலை மறுத்தானைக் கைகூப்பி யெல்லாவுயிருந்தொழும்.

சத்தியப்பிரதிஷ்டையில் கிரியாபலாசிரயத்தன்மை = கிரியை = தருமாதருமரூபம், அதனதுபலஞ் சுவர்க்காதிகள் அவற்றின் ஆசிரயம், சொன்மாத்திரத்தானேதாதா, அதனதுபாவம், தாத்ருத்தன்மையென்பதாம். யோகிக்குச்சுவர்க்காதிபல தாதருத்தகைமைவாங் மாத்திரத்தானே சித்திக்கின்றதென்பதுபொருள். திருக்குறள்:—உள்ளத்தாற் பொய்யாதொழுகி னுலகத்தா ருள்ளத்து ளெல்லாமுளன். அஸ்தேயப்ரதிஷ்டையில் ஸர்வரத்னோபஸ்தானம் = திவ்வியங்களாய இரத்தினங்கள். [illegible] யோகியினது சந்நிதியில் இருப்பனவாக வாகின்றன.

பிரஹ்மசர்யப் பிரதிஷ்டையில் வீர்யலாபம் = வீரிய நிரோதமே பிரமசரியமாம், அதுசித்தியாகவே நிரதிசயமான சாமர்த்தியம் உண்டாம். நிரதிசயசாமர்த்திய சாலியாகிய யோகியாற் செய்யப்பட்ட சீடர்களிடத்துபதேசம் உடனே பலத்தையுண்டாக்கு மென்பது கருத்து.

அபரிக்கிரகஸ்தைரியமாக ஜன்மகதந்தைச் சம்போதமாம் = எங்ஙனமென்பதன்பாவம் கதந்தையாம், ஜன்மத்தின்மாட்டுக்கதந்தை, அதனதுசம்போதம் = சாக்ஷாத்கார மாம்; முற்பிறப்பில்யான் யார் எத்தகையனாக இருந்தேன்

என்ன காரியஞ்செய்தேன் என அறியும் வேட்கையுண்டாயின் யாவுமே இவ்வியோகியானே நன்கறியப்பெறும்.

இவ்வண்ணம் இயமசித்தியை இசைத்து இப்போது நியமசித்தியை முறையாக அறைகின்றார்:—சௌசத்தானே தன்னங்கஜுகுப்ஸை பிறரோடசம்சர்க்கம் = சௌசத்தொழுகும் யோகிக்குந் தன்றேகத்திற் றூய்மையைப்பாராது அருவருப்புண்டாம்; அசுசியியற்கையது இக்காயம், ஆகலின் அதன்கண்ணுள்ள ஒன்பதுவாயாலும் இடைவிடாமல் ஊத்தையொழுகிக்கொண்டிருப்ப, எண்ணிக்கையற்ற ரோமகூபங்களினின்றும் வேர்வையூறிவடிந்து கொண்டிருப்ப நாறித்துயருறுந்தும் காத்திரத்தையாவன்றான் சலியாமற் றுயரமற்றாக் கழுவிக்கொண்டேயிருக்கக்கூடியவன்? பெரியோர்கூறியுள்ளார் "உடலொன்பது வாயிலையுற்றது, கழிவைகையென்னக்கழிந்து பிழிந்தது, சடலம்பாகிய தூய்மையைச் சார்ந்திடா, தடவந்தாந் தூயதுமாகுமோ" இவ்வண்ணந் தன்காயத்தில் அருவருப்படைந்தவனுக்கு, பிறர்காயங்களும் இத்தகையனவே யெனத்தோடங் காண்பவனுக்கு, அவர்தம்மோடுசம்பந்தம் ஒருக்காலும் உண்டாகவேமாட்டாது. வைராக்கியதீபம்:—எங்குளபுனல் மற்றிதுகழீஇ யிடுதற்கென்றுகாவிடைப்படுமசுத்தக், கங்குடல்குலையுமொரு மகன்மலைப்புக்காடவு நாடுமேயதுபோற், பொங்குபுன்மலவூற்பொதியிதென் றொழிப்பமலைவருவருத் துடல்பொறுக்குந், துங்கமாதவற்கு மெங்ஙனமடவார்த் தோயவு நேயமுட்டோன்றாம்.

எவனேனுந் தன்னுடம்பின்றீ நாற்றத்தானே அருவருப்பு அடையமாட்டானெனின் இத்தகையனுக்கு வைராக்கியகாரணம் ஏன்னதாகைப் போகின்றது. "தன்னுடம்பினை சிக்கத்திறைன், மன்னெவன்வாரிரங்குருவிலான் கன்ன

சந்தோஷத்தானே அநுத்தமசுகலாபம் = சந்துஷ்டனாகியயோகிக்குச் சத்துவமேன்மையாலே உள்ளே நிரதிசயமான ஆநந்தம் ஆவிர்ப்பவிக்கும்; கேவலமிங்ஙனமாவதில்லை. மாறாகவோ விஷயசம்பந்தி சுகம் விஷம்போலும் பிரதிகூலமாம். ஞானவாசிட்டம்:—வருபொருளின்பமறத் துய்த்துவா ராவனபொருளிற் றுன்பமிலா மகிழ்ச்சிவடிவமாய, நிகரறுசந்தோட வமுதமையப்பெற்றால் நெடும்போக நஞ்சாமந்நிறைசந்தோட, மகலுவறவாசையில் விழுநெஞ்சறிவைநோக்கிலழுக்குறு கண்ணாடியிலாநகம்போற்றோன்று மகிழ்ச்சுவையெய்திய புருடமகிமையோனமாதவரு நராதிபருள்வணங்காநிற்பர், சகமெனுமாவையை வெல்லத்தக்கோர் கெல்லாங்குப்பாது சுகாயமாஞ் சாது சங்கம்.

காயேந்திரியசித்தியசுத்திக்ஷயாத்தாற்றபத்தால் = சுவதருமங்களுக்கிராதியானே கிலேசபாவக்ஷயத்தாற் காயத்திற்கு அணிமாதிசித்தியாம். இந்திரியங்கட்கும் சூக்குமதையுற்ற தூரத்துற்றவற்றின்கவர்ச்சிச் சித்தியுண்டாம். தவத்தின்பெருமைஞானவாசிட்டம்:—தீயமனத்தொடு பாமமவேமே பலசீவனருந்தினமா, லேயதுவிட்டனமென்றிம் வானிடையெய்தரிதானதவ, மேயினனொன்றுநினைப்பிலன் சஞ்சலம்விட்டுவைவற்றெருமிக், காயிரமாவருடங்கள் செலுத்தலுமற்றுவல்வினையே.

பாவமகன்று மனந்தெளியப் பரபாவனை தன்வயமே மேவலுமிவ்வுலகத்தையிகழ்ந்து விருப்புவெறுப் பில்லாம், மாவருடங்களொராயிர நின்றபின்மன்னுளைர் வுற்றதெனக், கேவலம்வந்திங்குக் கொருவாய்மை கிளத்தினன்மாமலரோன்.

ஸ்வாத்தியாயாத்தாமே இஷ்டதேவதை சம்பிரயோகம் = இஷ்டமானமந்திரஜபத்தாலே தனதிஷ்டதேவதையின் சம்பாஷணைதிகள் சித்தியாகிறதும்.

சமாதிசித்தி ஈசுவரப்பிரணிதானத்தால் = ஈசுரரிடத்தில் விழைவின்றிச்சகல கருமசமர்ப்பணத்தாலே சமாதிசித்தியாம். சமாதிசித்தத்தின் சமாதானமாம் பிரசாதமாம் என்றபடி. குறள்:—தனக்குவமை யில்லாதான்றாள் சேர்ந்தார்க்கல்லான் மனக்கவலை மாற்றலரிது. இவ்வண்ணம் அவாந்தரபலசகித யம நியமங்களை நிரூபித்துமுறையிலடைவுற்ற ஆசனத்தையும் அதன்சாதனத்தையும் அதன் பலத்தையும் கூறத்தொடங்கி:—ஸ்திரசுகமாசனம் = பத்மசுவஸ்திகாதியாலே எத்துணைய தேகஸ்தாபனத்தால் எப்புருடனுக்கு அவயவத்துயர் உண்டாகா வடிவச்சுகமும் தேகசலனமில்லா வடிவத்திரத்தன்மையும், உண்டாமோ அதுவேமுக்கியமான ஆசனமாம். பதுமாசனநிலைசொரூபமோ யாஞ்ஞவற்கியராலேபகரப் பெற்றனதாம்:—ஊருவினுபரியினைப்பொறுவளாய், சேருவதாயடித்தலங்கள் சேர்த்திலே, நேருமங்குட்டங்கள் கரங்கள்நேர்வதாஞ், சீரியபதுமமாகனஞ்சென்மாறிலே. ஈசுரகீதை:—விவத்திதம்பெற் றிருக்கைவிரைந்தெழுங், கவற்றிதீர்வுறக் கற்பித்தவாதனா, மவை நற்றினெல்லையறை வரிதந்தநற், சுவத்திகம்பத்மமியாதினுந் துய்யவாம்.

இருதுடைமேலே யிரடியேறும், பாமவிருப்பது பதுமமதாகு; மொருபதமேமேல்யொருபதம்வைக்க, மருவவிருப்பது மத்தியமாகும்.

திடித்தவூருசானுக்களின்சந்துற, மடித்தவங்ரத்துள் ளோமறையவைத், கடித்தலங்கள்செவ்வேசெலாங்குறத், தொடுத்திருத்தல்சுவத்திகமாவதே.

குறுத்திரட்டு:—திடித்தவூருவிரண்டின்மேற்சாரலைத், தடித்தலங்களிரண்டிந்தன்கையினாற், பிடித்தாக்காலிற்பொரு விரல்பின்புபோய்ப், படுத்துவைத்தல்பதுமாசனமிதே.

திருந்திடப்பதம்வலைப், பொருந்தொடைக் கண்வைத்
துநா, லருந்தவர்க்கறஞ்சொன்ன், விரும்பிருப்புவீரமே.

ஆதனம்பயிலற்கதிபாதவற், கியாதொராதனத்தின்ப
மூந்தீரமுஞ், சாகமாமதுநன்னைப்பயிலுதக, லேதமற்றசுகா
தனமென்பதே.

பிறவெருந்திரட்டாதியிற்கண்டுகொள்க.

பிரயத்நசைதில்ய அநந்தசமாபத்திகளால் = அதற்கும்
பிரயத்நசைதில்யம் லௌகிக உபாயமாம்; கமனம் கிருக
கிருத்தியம் தீர்த்த ஸ்நாநம்முதலியவிஷயமாய எப்பிரயத்ந
மாநச உற்சாகமுளதோ அதனதுசிதிலபாவமாம்; அன்றியி
னே உற்சாதமானதுவலுவிற்றேகத்தைக்கிளப்பிஎங்கேனும்
போமாறு ஏவிவிடும். ஆயிரம்பணமகுடங்களால் தரணி
யைத்தாங்கி திரபரிவத்தோடும் அமர்ந்திருக்கும் எவ்விவ்வ
நந்தபகவான் உளரோ அவரேயானுயிருக்கின்றேன் என்
னுந்தியானம் சித்தத்திற்கு அநந்தபகவானிடத்திற் சமா
பத்தியாம்; அந்நிலைமை கூறியபடியாய ஆசனசம்பாதகமாய
அதிர்ஷ்டமுண்டாம் ஆகலின் அவற்றினை யாசனஞ்
சித்திக்கும் என்பதாம்.

அதனாற்றுவந்துவ அநபிகாதமாம் = ஆசனம் சித்தியா
கியவழி சீதஉஷ்ண சுகதுக்கமான அபமானுதிதுவந்துவங்க
ளானே முன்போல உபத்திரவப்பட மாட்டான்.

இனியாசன அநந்தரம் பலிக்கத்தக்கதாய பிராண
யாமத்தைக்கூறல்: — அஃதுளதாம்வழிசுவாசப் பிரசுவாசங்
களின் கதிவிச்சேதப்பிராணயாமமாம் = அவ்வாசனமானது
திரமாகியவழி பிராணயாமம் நிலைபெற்றுநிற்கும், அதுவும்
சுவாசப் பிரசுவாசங்களின் கதிவிச்சேதரூபமாம்; அவற்
றுள் சுவாசம் என்பது வெளியிலிருக்கும் வாயு உள்ளே
வருதலாம், பிரசுவாசம் என்பது மீண்டும் உள்ளேயிருக்

கும் வாயு வெளியேவருதலாம், அவ்விரண்டினதூஉம் சஞ்சரணமின்மை பிராணாயாமமாம். அற்றேல் இது பிராணாயாமசாமானிய இலக்கணமன்றும், அதன்விசேஷங்களாய ரேசகபூரக கும்பகப்பிரகாரங்களில் அதனனுகதி கூட்டாமையின் எனின்? இதுகோதாகாதாம், யாண்டுமே சுவாசப்பிரசுவாசங்களின்கதி விச்சேதஞ்சம்பவித்தலின். அங்ஙனமன்றே:—மடுத்தவுள் வாயுவைவிடுத்து நிற்றல் ரேசகமாம் அதுவேபிரசுவாசரூபமாம், வெளிவாயுவை உள்ளே நிரித்தல்பூரகமாம் அதுவேசுவாசரூபமாம், உட்டம்பவிருத்தி கும்பகமாம். எதன்கண்ணே நீர்போலுங் கும்பத்தில் நிச்சலமாகப்பிராணனெனப் பெயரிய வாயு நிலை நிறுவப்பெறுமோ. ஆண்டியாண்டுமே சுவாசப்பிரசுவாசங்களின் கதி விச்சேதம் உளதேயாமெனச் சங்கைக்கவகாசமிலதாம், அற்றேல், கும்பகத்திற்கதியிலதேனும் ரேசகபூரகங்களில் உசுவாசநிசுவாசகதிகள் உளவேயாம் எனின்? இதுதோஷமாகாதாம். அதிகமாத்திரையப்பியாசத்தானே இயற்கையாகச்சித்தித்திருந்த சமப்பிராணகதியின் விச்சேதசம்பவந்தான்.

அப்பயிற்சியைப் பறைதல்:—பாகிய அப்பியந்தரஸ்தம்பவிருத்தி தேசகால சங்கியைகளானே பரிதிருஷ்ட நீர்க்கசூக்குமம். = ரேசகம்=பாகியவிருத்தி, பூரகம்=அப்யந்தரவிருத்தி, கும்பகம்=ஸ்தம்பவிருத்தி, அவற்றுள் ஒவ்வொன்றும் தேசாதிகளானே பரீக்ஷிக்கத்தக்கதாம். அஃதெங்ஙனமெனின்:—சுபாவசித்தமாய ரேசகமாகும்போது இருதயத்திலிருந்து வெளிப்போந்து நாசிகைக்கெதிரில் பன்னிரண்டங்குல பரியந்தம் சுவாசஞ்செல்கின்றது, பயிற்சியின் முதிர்ச்சியானே முறையாக நாபியினின்றேனும் ஆதாரத்தினின்றேனும் வெளிப்போந்து இருபத்துநான்கு அங்குலபரியந்தத்திலேனும், முப்பத்தாறு அங்குலபரியந்

தத்திலேனும், முடிவுபேறடையும். ஆண்டும் ரேசகப்பிர யத்ந அதிசயமுளதாயுவழி நாபியாதி பிரதேசக்ஷோபத்தா னே, அது துணிதல்கூடும். வெளியிலோ, சூக்குமமான பஞ்சைவைத்து அதன் அசைவால்துணிந்துகோடல்வேண் டும், அவ்விதுதேசபரீக்ஷையாம். ரேசககாலத்தில் பிரா ணன்றன் ஆவிருத்திகள் 10, 20, 30, என்பதாதிகளானே காலபரீக்ஷையாம்; இம்மாதத்தினிற்றினந்தினம் 10 ரேசகங் கள்வரும்மாதத்தில் '20, உத்தரமாதத்தில் 30,என்பதாதிக ளானே சங்கியையின்பரீக்ஷையாம். இவ்வண்ணம்பூரகத் தின் கண்ணும்பொருத்திக்கொள்க. கும்பகத்திற்றேசவி யாப் திவிசேஷம் அறியமுடியாதாமாயினும், காலசங்கியா வியாப்தி அறியவேகூடும். கனவடிவபஞ்சின்பிண்டம் பர வப்பரவநீட்சியையும் விரலத்தகைமையானே சூக்குமத்தை யும் அடையும், அதுபோன்றே பிராணனும் தேசகாலசங்கி யைகளானே பயிற்சிமிக்குத்தீர்க்கமாயுங் குறிக்கப்பெறுத தாகிச் சூக்குமமாயும் விரியும்.

இனிரேசகாதி மூன்றினும் அன்னியப்பிரகார மறை தல்:—பாகிய அப்யந்தரவிஷய அபேக்ஷயற்றதுநான்காவ தாம் = முடிந்தவரைவாயுவை விரேசித்துப் பின்செய்வது வெளிக்கும்பகம், முடிந்தவரைவாயுவைப் பூரித்துப் பின் செய்வதுவுட்கும்பகம் ரேசகபூரகங்களை யாதரவுசெய்யா மலேகேவலகும்பகத்தைப் பயிலாநிற்கும் அது முன்மூன் றைக்குறித்து நான்காவதாம். நித்திரையாலசியாதிதோஷத் தோடுகூடியவர்க்கு ரேசகாதிமூன்றும், அத்தோஷமற்றவர் க்கு நான்காவதாம் என்பதுவிவேகம்.

இனிப்பிராணயாம பலத்தைக்கூறல்:—அதனாலழியும் பிரகாச ஆவரணம் = பிரகாசஸ்ய = சத்துவத்தினது, ஆவர ணம் = தமம் = இருள், நித்திரையாலசியாதிஹேது, அதனது க்ஷயம் உண்டாம்.

பலாந்தரம்பகரல்:—தாரணைத்தகுதிமனத்தினுக்காம்= ஆதாரநாபிசக்கிர இருதயபுருவமத்திய பிரஹ்மரந்திராதி தேசவிசேஷத்திற் சித்தத்தின்நிலைபேறுதாரணையாம், அதன் கண்ணே, பிராணயாமத்தால் இரசோகுண காரியமாய சஞ் சலவியற்கையினின்றும் தமோகுணகாரியமாய ஆலசியாதி களினின்றும் அகற்றப்பெற்ற மனம்தகுதியதாகின்ற தென் பதாம்.

ஈசுரகீதை:—புராதனரோதியவியம நியமங்கள் புகன் றனமேற், பிராணனதின்யாமமது பேசுபிராணாயாமம், விரா வியுடனுறும் வாயுவிளம்புவர்கள் பிராணனெனை, நிரோத னமே செயலதனைநித்தனு மாயாமந்தான்.

மந்தமுத்தமமத்திமமென்றுமிங், கந்தநற்பிராணாயாம மறிபவர், சந்தமுற்றசகற்பவகற்பமாய்ச், சிந்தையுற்றிரண் டாகவுஞ்செப்பினர்.

மந்தமாறிருமாத்திரை மத்திமோத்தமங்க, ளந்தவெல் லிரட்டியிரண்டுடன் மாத்திரையடக்கல், கந்தவேர்ப்புறுங்கம் பனங்கிளம்புகையிவையா, னந்தமாச்செயுமொன்றி னுக் கொன்றுநன்மையதாம்.

அகற்பமல்லதாமந்திர யகத்திலேயானவாயாமந்தான், சகற்பமாமவ்வியா கிருதியோங்காரஞ் சாவித்திரிதனைமுக் கால், வகிக்குமெல்லையாமிடம் வலம்வழங்கியவாயுவை வலி யுறவலத்தான், முகக்கவென் றறிந்தவரியோகத்திலே முயன் றிடமொழிந்தாரால்.

ஏசதுறுமவிடத்தில்வழங்குகை, மாசதுறுமல்வலத்தி னில்வாங்குகை, யாசதறத்திதியாகவடக்குகை, ரேசகபூரக கும்பகமென்றார்.

இனிக்கிரமப்பிராப்தமாயபிரத்தியாகாரத்தைக்கூறல்:— தன் தன்விடய அசம்பிரயோகமாகச் சித்தசொரூப அநு

காரம்போல இந்திரியங்களின் பிரத்தியாகாரமாம்=சத்தப் பரிசரூபரசகந்தாதி விடயங்களினின்றும் நீக்கப்பெற்றன வாய்ச்சுரோத்திராதிகள் சித்தசொரூபத்தை யநுசரித்துச் செல்வனபோல நிகழ்ந்து நிற்கும் தம்விடய சம்பிரயோக மிலாதபோது சித்தசொரூப அநுகாரம்போலவே யெனச் சித்தந் தகையப்பெறவே சித்தமொத்து நிருத்தங்களா மிந் திரியங்கள், இதர இந்திரியஜயம்போன்று உபாயமயலொன் றை அவாவாதனவாம்; மதுகரராஜன்வீழ்வுறின் மதுமக்ஷி கள் வீழ்வுறும், புகின்பின்புகும், அதுபோலவே இந்திரியங் கள் சித்தநிரோதமாகியவழி நிரோதங்களாம், என்னுமிது பிரஷத்தியாகாரமென்றறிக.

பிரத்தியாகாரபலத்தைக்கூறல்:—அதனாற்பரமவசியத் தகைமையிந்திரியுங்கட்காம் = அதிசஞ்சலங்கள் வாய்ந்த இந்திரியங்களின் மேன்மையானவயமாந்தன்மை=நிச்சபலத் தகைமை=விடயங்களில் முற்றினுமேபரவுதலின்மையாம். ஈசுரகீதை:—இந்திரியமீட்சிதானே யிசைந்திடும் பிரத்தி யாகாரம். குறுந்திரட்டு:—உரத்தினால்விடயந்தோறுமுழையு மைம்புலனைமீட்கை, பிரத்தியாகாரமென்னப் பேசுவர் பிரம நிட்டர், தரித்ததேகாதிதம்மிற் றனெனுங்கருத்தைமீட்டுப், பரத்தையேதானாய்க்காணும் பான்மையைப்பகர்வரன்றே.

மெய்ம்மொழி:—சினத்தெழும் பொறிகள்சென்றுசேர் ந்துதத்தம்புலன்க, ளனைத்தையும்பற்றிக்கொண்டே யவாவி னைப்பண்ணுவண்ண, நினைத்தெழுமவற்றையெல்லா நிரோ திக்கையாகுமத்தை, மனத்தினுட்பிரத்தியாகார மென்று கொண்மதித்துநீயே.

தாரணைகூறிப்பெறுகின்றது:—தேசபந்தஞ்சித்தத்தின் றாரணை = ஆதாராதிதேசங்கள் முன்மொழியப் பெற்றன, ஆண்டேனும் ஆத்மாவிலேனும் சித்தத்தின்பந்தம்=ஸ்தாப

னம், தாரணையெனப்பெறும். அதுயோகயாஞ்ஞவற்கியத் திற்கூறவும் பெற்றுளது:—இயமமாதி குணமியையின்மன, மயலிலா துதிதிதனதான்மனில், இயலலாவதைத்தாரணை யென்பரால், பயமிலாதுநல்யோகம்பயிலுவார். என்பதாம்.

ஈசுரகீதை:—கந்தரமிதயநெற்றி கபாலநாபிகளிலொன் றிற், சந்ததஞ் சிந்தைவைக்கத்தாரணை.

மெய்ம்மொழி:—ஆதாரஞ்சுவாதிட்டானமணிபூரமணி பூரம்பின், மீதாருமனாகதந்தான் வெய்யவனிடம்விசுத்தி, சாதாரவணமாமாஞ்சை சந்திரமண்டலத்து, மேதானுமிவற் றுட் சித்தமிருத்தருரணையாமன்றே.

அதனைச்சாதிக்கத்தக்க தியானத்தைக் கூறுகின்றார்:— ஆண்டுப்பிரத்தியய ஏகதானதைதியானமாம் = ஆண்டு= முற்கூறியபடியாய தேசத்தில், பிரத்தியயத்தின் ஏகதான தை=விருத்தியின் ஏகவிஷயப்பிரவாகம், அதுவும் இடை விட்டு இடைவிட்டுண்டாவ தாகித்தியானமாம். அதுகூற வும்பெற்றுளது:—பகுதியின் வந்தபடியினின்மாறாய், விகுதி யனைத்தைவிலாபனஞ்செய்தே, தகுதியதாய்ப் பரிசிட்டசன் மாத்ரச், சிகிதிகழின்பினைச் சிந்தனைசெய்யே.

ஈசுரகீதை:—தரித்ததேகசிந்தனை யொழுங்கொன்றோ டே சேர்ந்தது தியானமாமே.

மெய்ம்மொழி:—இலயமற்றிவற்றைக்கும்பித் திலங்கு முக்கோணத்துள்ளே, விலையமுற்றுறங்குஞ் சத்திமயக்கற வெழுப்பிமேன்மேற், கலைகளிற்சுவாலையாக்கிக் நின்றகட்ட விழ்த்தமிழ்தேயுண்ணச், சிலைமைப்புறச்சித்தந்தானேக்கு தறியானமாமே.

தியானமுதிர்ச்சியானே சந்ததம் ஏகவிஷயப்பிரவாகம் சமாதியாம் அதனைநிரூபித்தல்:—அதுவே அர்த்தமாத்தி நிர்ப்பாசமாகிச் சொரூப சூனியம்போலச் சமாதியாம்

அதுவே = தியானமே, தியேய ஏககோசரமாக இனிதிலங்கித்தியான சொரூபசூனியம் போன்றிருப்பது சமாதியாகும். "பெரும்பிரமாகரம்பிறங்குமாமனத், திரும்பிரவாகமதகந்தையின்றியே, யரும்பிரஞாதசமாதியாகுமாற், பரம்பரத்யான மெய்ப்பயிற்சிமேன்மையால்." என்றஃதறையப் பெற்றுளது. ஈண்டங்க அங்கிகட்கு அத்தியந்தம் அபேதமுளதாமெனச் சங்கியாதொழிக; சிறிது வேற்றுமையிருத்தலின். அங்ஙனமன்றேல்:—கருத்தாகரண அநுசந்தான வாயிலாகவுண்டாம் பிரத்தியயம் தியானமாம். அதன்முதிர்ச்சியானே கருத்துருகரண அநுசந்தானமின்றியே தியேய மாத்திரகோசரமதாக நிரந்தரித்துநிகழ்வது சமாதியாம். அதுவே அபரவைராக்கிய வாயிலாக ஆதரவுடன் இடைவிடாமல் நீள்காலம் இனிது சேவிக்கப்பெற்று, இரஜதமங்களையகற்றி, லேசசுகப்பிரகாசமய சத்துவமேன்மையாற் குற்றமற்றதெளிவை விளக்கும் வடிவமாகச் சிரதரந்தொடர்ந்து நிகழ்வது சம்பிரஞ்ஞாத சமாதியாம். பரவைராக்கிய வாயிலாக நிரோதப்பிரயத்தினத்தானே அதுவும் நிரோதமாகியவழி சருவவிருத்தி நிரோதத்தால்நிர்ப்பீஜசமாதியாம். "விருத்திசூனியம்மாகவே விளங்குறுமனக்குக், கருத்ததாய்த்திதி பிரமவாகாரமதாக, விருத்தவேயது சமபிரஞாதமாமெனவே, யருத்தமாகு சமாதியென்றறைகுவர் பெரியோர்." என்றஃதறையவும் பெற்றுளதாம். எனவிதன்பகுப்பைக் கண்டுகொள்க.

ஈசுரகீதை:—ஓதுமாலம்பனமொன்றுமின்றியே, போதமும் போதகப்பொருளுமென்றுணர், பேதமதன்றியே யிருந்தபெற்றிநற், சாதனமாகிய சமாதியென்பரால். தாரணையாயாமத்திற்றகுதி பன்னிருமடங்காந், தாரணை தன்னிற்றியானந் தானுமப்படியேநன்றாந், தாரணிதன்னின் ஞான

சாதனமாஞ் சமாதியேரணி தியானந்தன்னி லேற்,
சேயென்பர்.

அசம்பிரஞ்ஞாத சமாதிக்கே இவ்வெட்டும்
மென்றபடியை ஈசுரகீதையின் கண்ணும் காணலாம்:-
ஊையுமாறரிய தத்துவமியாதொான், ஞானிகழ்வதாகு
மெனுமியோகம், வானியலதாகியொரு வத்துவுமி
சூனியமதாகவறிகின்றனர் கடுயோர். மயலிலாயா
மலமிலாதான சுகவடிவதா மாகிலொளியா, மயலி
வெனையயலெனு தேகமெனவறிகைமாயோகமதுவா,
மாறுகையென முடிவிலா நூல்கள் பலமொழியுமியோ
யெலா, மியலுறுதா மரிய விதனிலோர் சோடசியுமி
நாகுமியல்பால்.

சுத்தமாயென்னைக் கண்டெந்தோற்றமுந்
தான, வுத்தமயோகமெல்லா யோகினும்பரமயோக,
மின்றியென்னை யாயிரங்கோடிகாலஞ், சிந்தமெ
நாளுஞ் சிந்தையிற்றிகழக்காணுர்.

அயர்வறுயோகலா தறிகையாதன, மயல்றவிந்
சல்வாயுவின், சயமிருதியான தாரணைசமாதியு, மிய
மமுமெட்டு மங்கமாம்.

உன்னருமியோகொருப்படுவன்முன்னரே,மெ
பெற்ற யோகீசர்தம்மையுஞ், சென்னியால் விநாய
யுந்தேசிகன், றன்னையுமென்னையும் வணங்கிச்சாரு

மெய்ம்மொழி:—ஓதிய தியானந்தன்னு னுற்ற
யுள்ளமேவுதமில்சமாதி சொல்லினெய்திய வமிர்தந்
மீதுறு மின்பந்தானுய்மிகல் குறைவின்றியுள்ள,
தராகினுமொத் திருப்பதென்றறிகநீயே.

(அ - கை.) அற்றேல் ஆத்மாநிர்விகற்பமொன்
யின் பிரமாத்ருத்தகைமைமுதலிய விகற்பங்களைக்
கொம்புகின்றது என்றுசங்கிப்ப உத்தரமருளல்:—

௬. நக்ரியா நசகர்த்ருத்வம் கஸ்யசித் ஸ்ருஜ்யதே மயா;
தத்க்ரியாபீஜஸம்பர்க: ஶக்த்யா தத்க்ரியதே(அ)கிலம்.

௧. வினையையேனும்விளைப்பதையேனுமே
வினையின்பீஜசவிரவலையேனுமே
இனையவர்க்கிங்கியற்றுவதில்லையாம்
அனையயாவையுமாற்றலதாற்றுமால்.

**வி.** மயா = நிர்விகற்பமாகிய எம்மால், கிரியா = பிர விருத்தி, கர்த்ருத்வம்=செய்கின்றேன் என்னும் அபிமா னம், கஸ்யசித்=எச்சந்துவிற்கும், நஸ்ருஜ்யதே=உண்டாக் கப்படுவதில்லை; அவ்வாறே,கிரியாபீஜசம்பர்க:=கிரியாபீஜ பூதங்கள் = பலக்கிரியையில் ஏவுவனவாயபலப் பிராப்தி வாசனைகள், அவற்றோடுசம்பந்தமும், ந=எம்மாற்சிருஷ்டிக் கப்பெறுவதில்லை; மற்றோ, அகிலம் = கிரியைகருத்துருத்த கைமை, அதன்வாசனை என்பதாதியகிலம் கிரியாகாரகம்பல மியாவும், சக்த்யா = “தன்குணங்களாற் கூடதேவான்ம சக்தியினை” என்னும்சுருதிப்பிரசித்தமாய், பிரமாணகோச ரத்தன்மையரினேனிகூடமாய், குணங்களால் இக்காரியங்க ளால் இரஜ்ஜு உரகப்பிரமாதிகளால் தமரஜசத்வகாரியங்க ளால் மூல அஞ்ஞானத்தினனே லோக அயக்காந்தநியாயத் தானே, சக்தியினனே செய்யப்பெறுகின்றனவாம். அச் சுருதிவாய்ந்த பிரஹ்மகீதை:—வித்தக வேதப்பொருளதாய் ஞானவிழியினல் விளங்கிடும்பொருட்கோர், புத்தியினனு முள்ளவாறறியப் போயிடாதாயிருந்துள்ள, சத்தியுண்டந் தச்சத்தியோடென்றுந்தான் பிறிவின்றியத்துவித, சத்திய ஞானவனந்தவானந்த தத்துவமாகியேயிருக்கும்.

முன்மொழிந்நவத் துவாரபுரச்சுவாமியாத்மா, தேகா திகளின் கருத்துருத்தகைமையைச் சிருட்டிப்பதில்லை, நீ செய்யென்னுஞ் செய்விப்பவனும் ஆவதில்லை, கடாதிகளைச்

செய்யாமையின் கருத்தாவுமாவதில்லை, கருமமியற்றுவார்க்கு அப்பலசம்பந்தத்தையும் செய்வதில்லை. அவ்வாறு சுருதியும் உளது "தியானிப்பதுபோலும் விளையாடுவதுபோலும்" ஆத்மாத்தான் சிறிதும் செய்விப்பதுமில்லை செய்வதுமில்லையெனின், பின்னையார்தான் செய்வித்துஞ் செய்தும் பிரவிருத்திப்பது எனின்? மாயா அவித்யா பிரகிருதி ரூப சுபாவமே பிரவிருத்திக்கின்றதென்றுணர்தி. 13

(அ - கை.) ஆகலின் அகர்த்ருத்வாதி சங்காதத்தினின்றும் வேறுபட்டிருக்கும் சர்வப்பிராணிகளின் பிரத்தியக்காத்மாவாயயாம் சங்காதங்கள்செய்த புண்ணியபாவங்களைத் தீண்டேம் என்றருளல்:—

ரு. கஸ்யசித் புண்யபாபாநி நஸ்ப்ருசாமி விபுர் ந்ருப
ஜ்ஞாநமூடா விமுஹ்யந்தே மோஹேநாவ்ருதபுத்தய:

க. தேராதுசெயும்வினையாவையுந்தீண்டமாட்டேம்
பேராதுநிறைந்துறைந்தேம்பெரும்பார்புரப்போ
யோராதவிமோகமதார்வருணர்வின்மூடர்
தீராதமயக்கதனுன்மறைதீயரன்றே.

வி. கஸ்யசித் = எச்சந்துவினதூஉம் கருத்துருத்துவ அபிமானியினதூஉம், புண்யபாபாநி = அறமறங்களையும், நஸ்ப்ருசாமி = தீண்டவேமாட்டேம், விபு = யாம்வியாபகமாய் ஆகாசம்போலும் அசங்கமாயிருத்தலின், ஹேந்ருப = ஹே நரபாலனே! எனவிளித்தருளினமையின் எம்மைச்சாக்ஷாத்கரித்துக்கொள்ளின் எம்போன்றேவிபுவாய் அசங்கமாய் வீற்றிருந்தரசுசெய்யினும் பிரஜைகடம் லாபநஷ்டமேனும் புண்யபாவங்களேனும் பிறவேனும்பற்றுவாமென் றருளியதாயிற்று. இவ்வண்ணமாதலின், ஞானமூடா = ஞானமயமாய பிரஹ்மவிடயத்தில் யாவர் மூடராய் அசங்கமாய ஆன்மாவையறியவதில்லையோ, அவர்கருத்துருத்துவ அபிமானத்

தானே, விமுஹ்யந்தி = விசேஷமாகப் போக்குவரத்துடைய வராகி நரகதுக்காதியானே மிகவும் மோகிப்பர். ஞானமூடத்தன்மையே தானவர்க்கியாங்ஙனங்கூடுமெனக் கடாவவிடையருளல்:—மோஹேந ஆவ்ருதபுத்தய:=மோகத்தானே மூடப்பெற்ற மதியினையுடையவர். ஆத்மதரிசனத்திற் சாஸ்திர ஆசாரிய உபதேச சமதமாதிகளானே சமஸ்கரிக்கப்பெற்ற மதிகாரணமாகும், அதுவே யெக்கால் மோகத்தானே மறைவுற்றதாகுமோ அக்கால், ஆத்மதரிசனமில்லாமையான் அநாத்ம சுகவாஞ்சையினர் மோகத்தையடைந்திடுவர் என்பதாம்.

நிகழ்ந்த இரண்டு சுலோகங்கட்கும் ஸ்ரீ பகவத்வாக்கியம் வருமாறு:—இவ்வகையவாய செயலியாவு மியல்பேசா, வவ்வகைய மாயையதனாலறிவுறாதே, செய்வகையன்யானெனது செய்கையிதுவென்றே, பொய்வகையினாலழிவதே புலனிலாதார்.

விபுவாயும் பிரபுவாயும் இலங்கு ஆத்மா எக்காயத்தினதூஉம் ஏவ்வாக்கினதூஉம் எம்மனத்தினதூஉம் கருமபூதமாய பாவத்தையும் பரமார்த்தமாகக் கவர்வதேயில்லை, எதனது சுகிருதத்தையும் கவர்வதே கிடையாது; ஆயின் யாங்ஙனம் புண்ணியஞ்செய்தவனிவன் பாவஞ்செய்தவனிவன் என்னும் லோகவிவகாரம் கூடுமெனின்? நித்தசுத்த புத்தமுத்த இயற்கைத்தாய பரப்ரஹ்மரூப அத்விதீயபிரத்தியக்காத்ம சைதன்னியமானது, நீகாரமாயா பிரகிருதி அவித்யா என்னும் அபாபரியாயம் வாய்ந்த அஞ்ஞானத்தானே மறைபட்டது; அம்மறைப்பாற்சனனசீல சமுசாரிகள் அஃதல்லாதஅன்கண் அஃதிலங்கும் வடிவமோகத்தையடைந்துளார்கள்; ஆதலின் அதன் மூலமாகவே விளைந்த விவகாரமெனவறிக; அதனையநுவதிப்பனவேயாய சுரு!

மிருதிகள், பாரமார்த்திக அத்வைத வாக்கிய சேடபூதங்க ளாமென்பது கருத்து.

(அ-கை.) ஞானத்தாலே அஞ்ஞான நாசமாய்விட்டோரே மோகத்தையடையமாட்டார்கள் என்கிறது:—

சு. 𑌵𑌿𑌵𑍇𑌕𑍇𑌨𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑌾𑌶𑌿𑌤
𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌿𑌕𑌾𑌸𑌮𑌾𑌯𑌾𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑌰𑌂.

க. சோதித்தவிவேகத்தாலே ஆமாசெயுந் தனதஞ்ஞானஞ், சேதித்து ஞானத்தாலே திகழும் தேசிகர்கட்கெல்லாம் ஆதித்தன்போல வேதானவிர்த்திமேலதாக, சோதித்த ஞான மெய்யாய் நிகழ்ந்தொளிர்ந்திலங்குமென்றே.

வி. விவேகேந=சமாதியப்பியாச சாமர்த்தியத்தாலே ஜடாஜடங்களைத் தனிப்படுத்தலால், ஆத்மநோ அஞ்ஞானம் =ஆன்மாவின் சம்பந்தியாய=ஆத்மாவிஷயமாய அஞ்ஞானம், யேஷாம்=எவ்வதிகாரிகட்கு, ஆத்மநா =புத்தியால்=அகம் பிரஹ்மாஸ்மியென்னும் வாக்கிய ஜன்னிய புத்திவிருத்தியாலே, நாசிதம்=நாசப்படுத்தப்பட்டதோ, தேஷாம்=அவ்வதிகாரிகட்கு, ஞானம் =உணர்வு, ஆதித்யவத்=சூரியனைப்போலப் பிரகாசமாய், பரம்விகாசம் ஆயாதி=மேலான விளக்கத்தையடைகிறது. பொருளிதுவாம்:—பிருகதாரண்யக உபநிடதத்தில், "ஹே மைத்திரேயி! வெளியே யாமுலகில், பர்த்தாவினது பிரயோஜனப்பொருட்டு ஜாயைக்குப்பதி பிரியமாவதில்லை, மற்றே, தனதுபிரயோஜனப்பொருட்டே பாரிக்குப் பதிப்பிரியமாம், என்று சம்சாரியாய ஆன்மாவைப் பிரகிருதத்திற் புகழ்ந்து, ஆகலின் ஆன்மாவே யுரனைச் சாக்ஷாத்கரிக்கத் தக்கதாகும். அதன்பொருட்டு முன் ஞானாசிரியராலும் ஞான சாஸ்திரங்களாலும் கேள்வி முயலவேண்டும், பின்றா ருக்கத்தாலே மனனிக்கவேண்டும், அதன்பின் நிச்சய

தியானிக்க வேண்டும், அதன்பின் ரூன் நன்ரூக ரவைத் தரிசிக்கலாம், ஆன்மாவைத் தரிசிக்கிறோயா தரிசித்தவாகும்;" என்பதாக ஆன்மாவிற்கே காணத் ராந் தகைமைஞ்யக்கழுறி ஹேமைத்திரேயி! ஆன்மா திரமான தரிசனத்திலே யென்பதாதியாக இவ்வியா அறியப்பெற்றவாம் என்பதீரூக ஆத்மவிஞ்ஞானத் ர சர்வவிஞ்ஞானமாகிய பலங்கூறப்பெற்றது, அது ஆன்மாவினது சர்வான்யமில்லாமல் ஒல்லாதெனை, து, இவ்வியாவும் எவ்விவ்வான்மா=ஆன்மாவினின்று டாகின்றன, ஆன்மாவின்கண்ணே இலயமாகின்றன, மையமேயாந் திகாலத்தில், ஆன்மவிய திரேகமாகக் பெருமையின், ஆகலின் யாவும் ஆன்மாவே; என்ப சர்வான்மியம் சமர்ப்பிதமாம். ஆகலின் பொருத்த வ ய நுளப்பெற்றது ஞானிகட்கு ஞானமாதித்யவத்வி மாயாதியென்பது. அத்தத்துவ தரிசனம் ஞானவாசிட் தயுமினிது காணலாம்:--ஆதியந்தமிரூற்றமே தன்வடி ப பரமிங்குச், சோதியாய் நின்றதென்னு மிவ்வுறுதியே று மெய்ஞ்ஞானம், பேதியாநின்ற கடபடவடிவமாம் ம்பொருட்பலசத்தி, தீதிறப்பரம் வேறிலதென்றுணர் மையே நற்காட்சி.

செகங்கண்மூன்றினு முண்மையாம் பொருளறிதிற வெனச் செப்பில், செகங்களியாவையுந் தற்பொருள் வனத் திறமுறு நிறைவாகுஞ், செகங்களியாவையுஞ் நபூமே யிதிற் றிகழுபாவபாவனையெங்கே, செகங்களிற் பெத்த முத்திகளெனத் தியங்கு வேறறுமையெங்கே.

பிறிதுகாண்பனவில்லையெஞ் சில்லைமெய்ப் பிரமமே யாகிச், செறியுமாலிவை யாவுமொன்றாகிப சிற்பரவி ரகு, நெறிகொள்பந்தம்வீ டெங்குள விதுவென் நிகழ்

வெருவடிவாகிக், குறியறும் பெரும் பிரமமே நின்றது குறைந் திறந்தது நெஞ்சே.

ஒருமையாகவே யுணர்விணு னுணர்தியா லுருவைந்நன் குறநோக்கிற், றருவுங்கறக்களும் படங்களு முதலிய சற்றும் வேற்றுமையில்லை, மருவு சங்கற்ப மெங்குள சீவனும் வையகப்பொருளியாவு, மருகலின்றிய சாந்தரூபம் பெறு மடி முடிவுறநோக்கில்.

கசனுயர் சமாதிநீங்கி யொருபகற்களிக்குநெஞ்சன், வசமறத்தழுதழுத்த வசனத்தன்யாது செய்கேன், றிசையுற வெங்குசெல்கேன் றீர்ப்பதென் கொள்வதென்னு, மிசையுயர் கற்பநீர்போன் மேதினியெங்குநானே.

மேனியிற்புறத்தினுள்ளின் மேலொடு கீழிற்றிக்கில், வானில் வையகத்திலெங்கு நானன்றி மற்றொன்றில்லை, யா னிலாவிடமுமில்லை யென திடத்திலர்துமில்லைத், தானிகழ் பொருள் வேறில்லைச் சச்சிதானந்தமென்றான்.

என்னுவெள்ளி யேகியபின் னெல்லாமறிவாமுலகினைப் பார்த், தன்னுவொக்குமொக்குமெனக் குசனுவுரைத்ததுண் மையதே, முன்னுமவனி சித்துலகு மூன்றுஞ் சித்து நான் சித்து, நன்னுலான திசைசித்து நாட்டுகின்ற தெலாஞ் சித்தே.

எனலுநின்னருளாற் பங்கிற் றெய்வத்தாலெலாம்விட் டப்பான், மனநிலைநின்றேன் மாயைக் கரை கண்டேன் வரு பேறெல்லாங், கனமுறப்பெற்றேன் கேட்கக் காணவேண்டு வதொன்றில்லை, யனவரதமு நிறைந்தே னயர்வற்றேன் பிற வியற்றேன்.

பயமற்றேன் மோகமற்றேன் பற்றற்றேன் சமமாய்நின் றே, துயர்வுற்றே னெல்லாமானே னொருசெயலற்றேன்

விண்ணு, ளியலொத்ததெளிவாய்ச் சாந்தமெய்தினேனென்றுன் மோகச்,செயன் முற்றுங்கடந்த சிந்தைச் சிகித்துவசப் பேர்தன்னனன்.

**தத்து**வாமிர்**தம்**:—முப்பதங்களின் மொழிந்துற முடிந்த பொருளா, மிப்பரம்பதமிருந்தபடி யென்றரையுமா, றப்பவொன்றும் விர கின்றிய தகோவதிசய, முய்த்திருந்து விட லன்றியினியொன்றுமறியேன்.

முடிந்ததின்று முழுதுந் திகழுமோனமதிலே,படிந்தரும் பொருளிருந்தது விருந்தபடியே, விடிந்ததெங்கும் வெளியாகியது மாயவிரவு, முடிந்ததிங்கிறைவ வென்பல மொழிந்திடுகுவேன்.

அனுபவசாரம்:—செப்பொணு தென்னுலத்தைச் சிரசாதி பாதமந்தங்,கப்பெலாம் விட்டுரோமங் கம்பித்து விதிர்விதிர்த்துள் ,ளப்படி யளிசீதத்தா யக்கங்களனைத்து நெக்கே, யொப்பில்பே ரின்பமாமுன் ஞென்கழ விருந்தவாறே.

அநுபவசித்தி:—ஊனெங்கே யுயிரெங்கே யுணர்வெங்கேதானுயர் வெங்கே யிழிவெங்கே யூர்பேரெங்கே, நானெங்கே யெனதெங்கே நாநாவெங்கே நலந்தீங்கா மவையெங்கே நாசமெங்கே, வானெங்கே வளிதீநீர் மண்ணதெங்கே மாசெங்கே தேசெங்கே வராதே வந்து, தானிங்கே யளித்தமலர்த்தாளேயாகிச் சமைந்திருந்த தல்லதுமற்றறியோமொன்றும். ஆன்மாவை யாசிரயித்திருந்த அஞ்ஞானமானது, ஆசிரியரருளிய வேதாந்த மகாவாக்கியத்தாலுளதாய அத்விதீய ஆத்மவிஷயகமாய ஞானத்தானே அழிவுபெறவே. மெய்ஞ்ஞானிகட்குச் சத்தியஞான ஆநந்த அத்விதீய வடிவப்பிரஹ்மாத்மதத்துவரூப நிரதிசய வஸ்து ஆதித்யன்போல அவிர்ந்தொளிரும், சூரியனிருளை அகற்றி எல்லாப்பொருள்களையும்

மிலக்கலேபோனும். "அதனுன்மோக முறுவர். ஞானத் தானே நாசிதமாயது" என்பதனுனே, பிரமஉபாதானத்தன் மையும் ஞானநிவர்த்தியத்தன்மையும் அஞ்ஞானத்திற்கிலக் கணமென வருளியவாறுமிற்று: ஆதியதிற் பரிணுமியுபா தானத்தன்மை பகரும் வேட்கையுண்மையின் பிரஹ்மத் தின் கண்ணதிவியாப்தியின்றும்; இரண்டாவதிலோ ஞான த்தன்மையானே சாக்ஷாத் ஞானநிவர்த்தியத்தன்மையை விளம்பும் வேட்கை யுண்மையின் ஞானமுன்னின்மையினும், அஞ்ஞானநிவிருத்தி வாயிலாக ஞானநிவிர்த்தியப் பிரபஞ் சத்தினும் அதிவியாப்தியிலதாம், இதன் விஸ்தரம் அத் வைத வஜ்ஜிரபஞ்சரத்துட்காண்க. (15)

(அ - கை.) இவ்விஞ்ஞானத்திற்கே பலத்தையருளல்:—

கசு. மந்நிஷ்டா ஹ்யத்யந்தமத்தியோ தத்த்வதர்சிந:, ...
...ஜாயாந்தி விஜ்ஞாநாந்நாசமேத்தத்பவம்;

க. மூண்டநிட்டை யெமின்மதி முற்றெமிற். றூண்டு சித்தரெமி லேமிற்றற்பரர், மாண்டுமீண்டும் பிறந்திடுமாறிலர், பூண்டமெய்யுணர்வான் மறம் போக்கினர்.

வி. மந்நிஷ்டா = பரமாத்மாவாய எம்பால் நிஷ்டையு டையவர், அத்தகைபனுயினும் பரதன் மானிற்பற்றுடைய மதியனுகி மான்றன்மையை மருவினுன், ஆகலின் அருள்ப் பெற்றது:—அத்யந்தம் மத்திய: = முற்றினும் எம்பால் வைத்த மதியையுடையவர், எமது நிஷ்டனுயினும் எமது மதியனுயினும் சௌபரி மகரிஷி கணமாத்திரைப்போது குடும்பியாய மத்சியத்தினது லீலையைக்கண்டு ஆண்டுத்தந்த சிந்தையனுகி ஐம்பதுமாந்தாதாவின் கன்னிமார்களோடு காய வியூகத்தால் ஐம்பது களைகளாகி மாடமாளிகை கூடகோபுர உத்தியானவன பரிவாரங்களை யோகபலத்தாற் சிருஷ்டித்து ஆங்கேரமித்தனன்; அதன்பின் புண்ணியம் க்ஷீணமாகி யோ

கப்பிரதிஷ்டனுயினன்; ஆகலின் அருளப்பெற்றது:—மச் சிதா=எமதறிவு மருவிய சித்தமுடையவர், இவ்வண்ணம் இராவணன் மூவகையினும் தவநிஷ்டனுயினும் ஐசுவரிய பரனுயினன், பரமார்த்தபரனுகவில்லை; ஆகலின் அருளப் பெற்றது:—தத்பரா:=அதன்பரர் ஆனவர். இன்னணமாய விசேஷண நான்கையுமுடையவர்களாகிய யோகிகள் ஆன்மா வைப்பார்ப்பார்கள். விஞ்ஞானத்=அதன்பின்னவ்வாத்ம விஞ்ஞானத்தானே, நாசிதஏநஸ:=புண்ணிய பாவங்களைப் பஸ்மஞ்செய்தவராகி, அபுநர்பவம்=புநர்ஜன்ம அபாவவடிவ கைவல்யத்தை, ஆயாந்தி=முற்றினுமே யடையாநிற்பர்.

ஸ்ரீ பகவற்கீதை:—அறிவினலறிகிலா தவை யெலாமழி யவே, செறிவினுறறிவுவா னிரவியோ றிகழுமா, னெறியினு லதனிலே நிலையுமா யதனிலோர், பிறிதிலா வகையினர் பிற வியானதுவிலார்.

ஆன்மாவினையே யடையத்தக்க வகையில் எல்லாவற்றி லும் விரக்தராகிச் சதுர்வகருமசந்யாசபூர்வகமாகச் சிரவண மனனபரிபாகமுடையவராகி, பின் விஜாதீயப் பிரத்தியயமி டைப்படாத சஜாதீயப் பிரத்தியயப் பிரவாஹரூப நிதித்தி யாசனத்தமுந்திய மனத்தராகி, அவ்வான்மாவைச் சாக்ஷாத் கரித்தபெரியோர் மீண்டும் தேகசம்பந்த அபாவரூபமாய முக்தியையடையாநிற்பர்; எக்காரணத்தாலெனின்? மீண்டுந் தேககாரண கல்மஷமாய புண்யபாவவடிவ கருமத்தை ஞானத்தானே சமூலமுன் மூலிதஞ்செய்தவராகலின் என் றுணர்க. (16)

அ-கை. சர்வபூதங்களினும் சமத்வதரிசனம் விஞ்ஞா னத்திற்கும் பலமென அருளல்:—

௧௮. வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஶிந:

௯. ஞானவிஞ்ஞானந் தன்மை நண்ணிரு பிறப்போர்பாலும், ஆனொடு மானையாதியவற்றினுமழிநாய் தின்னு, மீனர் தம்மிடத்து ஞாளியிடத்தினுமேக நோக்காய்த், தானறியறி ஞரெம்மைத் தாமறி பெரியராவர்.

வி. ஞானம்=சாஸ்திர ஆசார்ய உபதேச ஜன்யபோதம், விஞ்ஞானம்=யோகத்தானே அதனனுபவம், சம்பந்நே=அவற்றோடுற்ற, த்விஜே=மூன்று வருணத்தாரிடத்தும், அவரினும் கீழாய, கவிகஜாதிஷு=பசுக்களாய கோக்களிடத்தும் யானைகளிடத்தும், அவற்றினுந் தாழ்ந்தவாய, ஶ்வபசேசுநி=சண்டாளரிடத்துஞ் சாரமேயத்தினிடத்தும்,பண்டிதா:=விற்பன்னசித்தர், சமேக்ஷா:=சமமாய பிரஹ்மமாமதனைக் கண்டுகொண்டிருப்பர், யாண்டுமே பிரஹ்மபுத்தியுடையவர் என்பதாம். இதுதான் என்னவிதங்கொண்டாயது எனின் அருளல்:—மகாத்மாந:—மகாநாய முப்பரிச்சேத சூனிய ஆத்மா எவர் தமக்கோ அவர் மகாத்மாநர் ஆன்மாவின் சர்வான்மியத்தைச் சாக்ஷாத்காரஞ் செய்தவர், யாவற்றையும் ஆன்மத்தன்மையானே கண்டவர், யாண்டுமே தாரதம்மியம்பாராதவர் என்பது பொருள்.

ஸ்ரீ பகவற்கீதை:—நன்றே ஞானவருமறையோனன்று யந்நாயிறைச்சிதனைத், தின்றேயுழனுமவனியானை யாவென்றிந்தத்திறத்தெல்லா, மன்றேயென்று தாமென்றுதறிவாய் நின்றவெனை யெங்கு, மொன்றேயாகக் காண்பானிவ்வுடம் போடிருந்தே யுடம்பறுப்பான்.

வித்தை விநயாதிகளோடு கூடிய பிராஹ்மணனிடத்தும் நாய்க்கறிப்போன் பாலும் கருமவைஷம்மியம், கோவத் திருக்கனிடத்திலோ ஜாதிவைஷம்மியம், இவ்வகையாய விடயங்களிலும் சம ஏகரூப நிர்விகாரப் பிரஹ்மத்தையே காண்பவர் பண்டிதராவர் என்பதாம், கங்கோதகத்தும் தடா

கத்தும் கள்ளிலும் மூத்திரத்தும் பிரதிபிம்பிதமாய் சூரியபக வானுக்கு அதன் குணதோஷ சம்பந்தமில்லாததே போலச் சருவகதமாய பரப்பிரம்மத்திற்கும் உபாதிகுணதோஷ சம் பந்தமிலதாம் என்றநுசந்தானஞ்செய்பவர் யாண்டுஞ் சமதி ருஷ்டியினனே இராகத்திவேடமற்று பரமானந்தவிளக்கத்து டன் ஜீவன் முக்தியை யநுபவித்துக்கொண்டிருப்பர்.

சமநோக்கிற் குதாகரணம் ஞானவாசிட்டம்:—நன்று ஞானச் சமநோக்காலும்பொருட்குச் சமந்தானே, யொன் றுத்தரித்தோன் றீனமுறுவுள்ளமஞ்சான் விவசமுறு, னன் றுஞ் சுத்தமபத்தியநஞ்சடுத்த தேனுமவனருந்தி, யின்று யிமைப்பிலிறு நொந்ததிறந்த தனக்கண்டதுபோலாம்.

காளகாளமொப்பனபாற் கருப்பஞ்சாறு தனநுகரில், விரவுபுந்தி பற்றுமன் மெய்ம்மையுணர்ந்தோர் சமமாவார், சிரமங்கரிந்தோர் சிரந்தந்தோர் செறுனரொன்றுறுறவென்று முரவுஞானத்தொரு நோக்காலொக்கக் காண்பருட்குளிர்ந்து,

(அ-கை.) இத்தகைய சமதரிசனம் நாம்பிகனுக்கும் கூடும்மென. அதனை யகற்றுதற்பொருட்டு ஞானத்திற்குக் காட்சிப் பயனைக் கூறியருளல் :—

சு. வஶ்யஸெ ம-ாஜஹெ-தஷாஂஜீவ-ா—காஸெக ணாஂ, யெ-தாஸ்ெஷாஷஂஸ்ஹ ஸெஂ-தஸ்ா-ெதவிஷயீ கூ-தஂ,

க. வல்லவர் தமக்கு வானுமவனியும் வயமதாகும், நல் வர் சீவன் முத்தர் நாடலுஞ் சமமதாகும், பொல்லதுகழிந்த சித்தெப்போதுமே யேகமாகும், மெல்லதினவருமேன்மை யான் மனமிலைவதாவார்.

வி. தேஷாம்=யோகிகளாய அந்தப் பிரஹ்மதரிசிகட்கு ஸ்வர்க்க:=துறக்கத்துற்ற தேவதைக்கணங்களும், வஸ்ய: அதீனர்களாவர்கள். அங்ஙனமே காணவும் பெற்றதன்றோ:-

திருதராஷ்டிரர்க்குணர்த்தற்பொருட்டு விதுரரானே பிரஹ்மலோகத்திருப்பவராயினுஞ் சனற்குமாரர் அழைக்கப்பெற்றுப் பொருத்தப்பட்டனர். அவ்வாறே, ஜகத் = பூத பௌதிகவடிவமாய வுலகமும் அவரது வசியமாய்விடும். அளவிறந்தயோஜனை நீட்சி விரிவோடுற்ற கடலானது கும்பத்தினின்றும் வெளிப்போந்த குறுமுனிவரானே ஒட்டையளவுமாத்திரமேயாய தம்முதிரத்திற்புகுத்தப்பெற்றதென ஸ்மரிக்கவும் பெறுகின்றதன்றே. ஜீவன் முத்தா = ஜீவந்த: பிராணன்களைத் தரிப்பவராகியே நிருவிகற்பசமாதியின்கண்ணே எல்லாவுபாதிகளினின்றும் விடுபட்டவர். அதனானே எழுந்தபோதினும் மரீசாவயவம் மகாமடுரூபமா கமலர்வதேமானும்பிரஹ்மமேபிரபஞ்சரூபமாகக்கசிகின்றது என்னும், சமேக்ஷணு: = சமமாய ஈக்ஷணம் = தரிசனம் எவர்கட்கோ அத்தகையர் பிரஹ்மமே யிவ்யாவும்ஆத்மாவேயிவ்வியாவும் யானேயிவ்வியாவும் எனக்கண்டுகொண்டிருப்பவர் யதோ = எக்காரணத்தானே, அதோஷம் = மாயா சம்சர்க்க சூனியமான, பிரஹ்மசமம் = பிரஹ்மமான்து எப்போது மேகரூபமாமோ; தஸ்மாத் அக்காரணத்தானே, தை: = அந்நூலுணர்ந்தோரால் அந்தப்பிரஹ்மமானது, விஷயீகிருதம் = சாக்ஷாத்கரிக்கப்பெற்றதாம். அவ்வாறே யோகசூத்திரமுமறைகின்றது:—சத்துவபுருஷ அந்யதாக்கியாதிமாத்திரத்திற்குச் சர்வஞாத்ருத்தன்மையும் சர்வபாவ அதிஷ்டாத்ருத்தன்மையுமாம். இதன்பொருள் அ 1, சு 47 - வதிற்காண்க. சித்தசித்துவிவேக புலத்தைத் தரிசிப்பித்ததாம் வாழுங்காலத்திலேயே அவர்கள் உலகைக் கடந்தவர்கள் என்னின், உடல்வீழ்ச்சியின்பின் கடந்திடுவரெனக் கழறவும்வேண்டுமோ. அவர் தம்மனமானது விடமமாகிய சருவபூதங்களிடத்தும் நிகழும் பிரஹ்மத்தினது சமபாவத்தில் எப்போது நிச்சலமாக நிலைத்தேயிருக்கும், பிரஹ்மமானது

சமமாயும் ஏகமாயும் தோஷமற்றதாயும் இருப்பதாற் சமதரிசிகள் பிரஹ்மத்தின்கண்ணே திரமாயிருப்பார்கள், துஷ்டத்தன்மையோ இருவகையாம், அதுஷ்டத்திற்கும் துஷ்டசம்பந்தத்தாற் றுஷ்டத்தன்மையாதியதாம், கங்கோதகத்திற்கு மூத்திரசம்பந்தத்தாற் போலும்; தானேவே துஷ்டத்தன்மைமற்றதாம், மூத்திராதிக்கேபோலும். அவ்விரண்டனுள் முதலதாகாதாம், நாய்க்கறிப்போர் முதலியவரிடத்துப் பிரஹ்மம், அத்தோடத்தானே தோடமுடையதாமென மூடரானே கருதப்பெறினும், சருவதோஷசம்பந்தமில்லாததேயாம் ஆகாசம்போலும் அசங்கமாதலின், "அசங்கனேயன்றோ யறிவாமிவன்றான்" என்பதாதி மறையுமறைதலின். இதனானே யிறதும்பாறாம், ஆகலின் நிர்த்தோஷப்பிரஹ்மரூபயதிகளாகிய ஜீவன் முக்தர்கள் தோடசந்தத்தானும் தொடப்படமாட்டார்கள். அற்றேல், விடயங்களிற் சமதரிசனம் தருமசாஸ்திர நிஷித்தமாம், அதனையாற்றுபவர் யாங்ஙனம் பண்டிதராவர், "சமனாகிய பூச்சியனுக்கு விடமவகையிற் பூசைபுரியினும், விடமனாகிய அபூச்சியனுக்குச் சமவகையிற் பூசைபுரியினும் அப்பூசகன் இகபரவுலகங்களினின்றும் பிரட்டனாவன் என்று கொதமஸ்மிருதி கூறுகின்றது. எனக்கடாநிகழில், அந்தக் கௌதமஸ்மிருதி அஞ்ஞானிகளாகிய இல்லறத்தார் விடயந்ததாமெனவிடையிறுக்கலாம்; அம்மிருதியில் அவனது அன்னம் அபோச்சியமாகும் என்றுபக்கிரமத்திருத்தலினாலும், பூசித்தலானேயென விடையிலியம்பலாலும், தருமத்தினின்றும் தவறுவன் என்று பசங்கரித்திருத்தலினானும் என்றுணர்ந்துகொள்க;

அறிஞர்க்கு யாவும் வசியமாம் என்பதற்குதாகரணம்: ஆரக்கிலெனுமியர் முதலாயுயர்ந்தோரை யாதரிக்குமன்புகண்டா, பிறக்குமுறப் பொன்போல யாவரோ விரும்பாதாரி-

தலோகத்திற், புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோரைக் குளிர்விப்பர் புணராதோரே, பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற்பயன் பெற்றோரே.

சராசரமா முலகனைத்து மனுருப்பத்தாற் றான்செய்யும் விளையாட்டாஞ் சகமாய்நின்றும், புராதனமாமொருமையி னிற் பிரிபாதாகும் பூரணசின்மாத்திரமாம் பொருளே சொன்னாய், நிராசையுளத்தவரறியும் பரமீதென்று நிருப னுரைத்திட நிருதிநெஞ்சுட்கொண்டு, விராவமுத மழை சொரியக் குளிர்ந்தவரபோன் மிகக் குளிர்ந்தாள் சாந்தமுற விளம்பலுற்றாள்.

இயல்விஞ்ஞான மாத்திரத்தினிடையே யுலக மிருக்கு மென, வுயர் மன்னவனோதலுங்கேளா வுளத்தேதன்னை யுணர்வுற்று, மயலில் விசாரத்தாற் சாந்த மனவேதாளந் தனியிடம்போய்த், துயர்கொள்பசியை மறந்தசையாத்தூ யதியானத்தினிருந்ததுவே,

அரக்கியும் வேதாளமும் அறிஞர் வயப்படுமாயின் மற்றவர் வயப்படற்கு என்னே யியம்பல் வேண்டும். கொல் லான் புலாலை மறுத்தானையே யெல்லாவுயிருந்தொழுமென் னின் எல்லாம் உடைய அறிஞனை யெவ்வுயிர்தான் வணங் காது. இந்த மிக்க பேருலகினிற்றறபதத்திருக்குமம் முனி யைக்கண், டந்தரஞ்செறிசித்தர் விண்ணவர் குழுவற்புதப் பலபேரும், வந்து சுற்றினராம் மையர் நிரம்பினர் வாசவன் றனிமூதூர், தந்தளிப்பவனங் கவையனைத்தையுந் தள்ளி னன் விருப்பின்றி.

குறுந்திரட்டு:— யாவனிங்குமெய் யுணர்ந்தவனவனை யே யிமயப், பாவைதன்னையோர் பாகம்வைத்தவன பரவு வது, நாவின் மங்கையை நயந்தவன் விழ்வது மவனைப், பூவின் மங்கையைப் புணர்ந்தவன் புகழ்வதுமவனை.

(அ - கை.) தற்சம் வேத்தியமும் ஞானபலமென வருளல்:—

௬. ப்ரியாப்ரியே ப்ராப்ய ஹர்ஷோத்வேகௌ யே ப்ராப்நுவந்தி ந, ப்ரஹ்மாஸ்ரிதா அஸம்மூடா ப்ரஹ்மஜ்ஞா: ஸமபுத்தய:.

க. துன்பினை யின்பினைத் துறைந்துமே வெறாப், பன்பினை யடைந்திலர் சிவத்தை யார்ந்தவர், பின்பினைப் பயன் றெரிபிரமந் தேர்ந்தவர், மன்பினைக் கலங்கலின் மதிவலார் களே.

வி. யேப்ரியம் ப்ராப்யஹர்ஷம் நப்ராப்நுவந்தி=யாவர் இஷ்டவஸ்துவையடைந்தும் மகிழ்ச்சியை யடையமாட்டாரோ, அப்ரியம் ப்ராப்யத்வேஷம் நப்ராப்நுவந்தி=யாவர் இஷ்டமில்லாததை யடைந்தும் வாட்டமடையமாட்டாரோ, ஆண்டேதுக்களை யருளல்:—ப்ரஹ்மாஸ்ரிதா=பிரஹ்மஞானக் கப்பலானே பிரமசமுசார ஆர்ணவத்தைக் தாண்டுவேம் என்னும் புத்தியானே பிரஹ்மத்தையே பற்றியுள்ளவர்களென்பதாம். இதனானே அசம்மூடா:=தமது ஹிதஉபாயத்தைக் கண்டவர்கள், ப்ரஹ்மஜ்ஞா:=பரோக்ஷமாக ஆத்மதத்துவத்தை யறிந்தவர்கள், அதனானே, சமபுத்தய:=விபரீதமில்லாத புத்தியையுடையவர்கள், அவ்வாறாய அறிஞர்களாயுள்ளவர்கள் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரிப்பர்கள் ஆவர்கள் என முன்னேறும் கூட்டுக. இஷ்டத்தையடைந்து மகிழாமையும் அநிஷ்டத்தை யடைந்து வாடாமையுந் ஜீவன்முக்தனுக்கு இயற்கையாய சரிதமாம், முமுக்ஷுவிற்குப் பிரயத்தினவாயிலாக அநுஷ்டிக்கத்தக்கதாம். இவ்வாறுண்டாதற்கு யாதுகொலோ காரணமெனின், நிர்த்தோஷமாய்ச் சமமாயுள்ள அத்விதீய ஆத்மரூபப் பிரஹ்மத்தின் கண்ணே நிலைபெற்றிருத்தலேயாம்,

அயலிடத்தமராமையின் அவர்க்குத் துவைதத் தோற்ற மில்லையாம், இலதாகவே பிரியாப்பிரிய அடைவில்லையாம், இலதாகவே அவற்றை நிமித்தமாகக்கொண்டு வரும் சந்தோஷ விஷாதங்களுமிலவாம். இவ்வாறு பிரஹ்மத்தின் கட்டிதி பெறுதலும், கேள்வியும், அதனுலாம் அசம்பாவனை விபரீதபாவனையெனப் பெயரிய சம்மோக நிவர்த்தகமான நிதித்யாசனமும், அதனுலாம் ஆத்மதத்வ சாக்ஷாத்கார மும், உளதாகலின் ஆமெனவுணர்க ஞானவாசிட்டத்தும் மகிழ்ச்சிவாட்டமற்ற இச்சீவன் முத்திப்பதத்தை மிகுதி யாகக்காணலாம்:—துக்க சுகங்களிலமிழ்ந்தி மிதவாத புந் திநிலை சுபாவமானோர், புக்கசுழுத்தியினனவாய் நனவின்றி வாதனைதீர் போதமுற்றோர், மிக்க சமமாயுலகால் வெருளா மலுலகினையும் வெருட்டாமேலோர், சிக்கறநன்னினைவிரு ந்து நினைவிலாத வறிவரே சீவன்முத்தர்.

மற்றுநாளேழும் வேறோரிடத்துறவைத்த பின்னர்ப் பொற்றிரளழகா ரந்தப்புரத்திடைநாளேழ் வைத்துச், சிற் றிடைமகளிர் போகஞ்சிறந்த வூணளிப்பத்துய்த்தான், குற் றமுங் குணமுநாடான் குளிர்நிறைமதியமொத்தான்.

மன்னவன் சனகன் றந்த போகத்தின் மகிழ்ச்சியாவு, மன்னவன் முன்னஞ் செய்தவவமதித் துன்பமியாவு, மின் னவன் மனதைச் சற்று மிழுத்தில விளமென்றென்றல், பொன்னசலத்தின் மிக்க பொருப்பினை யிழுக்கவற்றோ,

அற்புதங்களனைத்துமிலா விவனுக்கந்த வருஞ்சீவன் முத்திபதமடைவின் முற்றுஞ் சொற்புலனுக்கதீதனுயுலகர் போலத்தோன்றிடுவோன் புந்தியிலோர் தொழில்பற்றுதோ, னற்பயன் பொல்லாப்பயனுற் சுகஞ்சேர்வில்லோ னண்ணி யது புசித்தினிதி னன்றுய் நிற்போன், பொற்புறு நல்லா சார விரோதமான போகங்கடமிற் சிறிதும் பொருந்திடா தோன்:

நெறியிடை வந்தோர் கூட்டநெறி செல்வோர் காணு நேர்போற், செறிதரு போகமெல்லாஞ் சேதனர்காண்ப ரன்றே யறிவினுன் மனதை வென்றோரற்பமே பெரிதாய்க் காண்பர். பிறகது துய்ராமென்றே பெரியனபோகம்வேண்டார்.

அனைத்தையுமறிந்தோர் தம்மை யறிவென வறிவாற் கண்டோர் வினைத்தொடரிலாதோரொன்றின் விரும்பமும் வெறுப்பு மில்லோர், நினைத்துள நிகழ்காலத்திலெய்தியநிலையினிற்போர், தினைத்துணையெனினுமைய மிலாதவர்தெளிவுசான்றோர்.

பன்மையாம்விசாரத்தாலேபடரகங்காரமற்றோர், சன்மமேமரணமேயென்றஞ்சுறு சலிப்பிலாதோர், நின்மலரெளிதின்வந்த பொருள்கொள்வோர்நிகழ்ந்தவெல்லாந், தொன்மையாநவமாங்கண்ணுற்றுகளறச் சமமாய்க்காண்போர்.

ஆனதிறத்தாற்குடும்பபாரவியாபாரத்திலணுகும்போது' போனபொருட்கிரங்காமற்பொருந்து பொருண்மாத்திரமே புசித்துவாழ்வாய், தினமுறவருபொருளைச் சிந்தியார்வந்த பொருட்டிதென்றெண்ணார், ஞானபரரானோர்க்குச் சுபாவமாங்குணமிதுவேநளினக்மண்ணாய்.

பெறற்கொணுதசத்துவகுணப்பிறப்பினர்புவிமே, னிறத்துவாழ்வதுவான்றிகழ்நிறைமதிநிகராம், வறக்குந்துன்பத்தில் வாடலரிரவுதான்வரினுஞ், சிறக்கும்பொற்கமலத்தலர்குவியுமேநசிறிதும்.

பகுதமன்றியேமற்றுளதொழில்களிற்பற்றார், தகுதியாகியமேலவர்நெறியிலேசரிப்பர், மிகுதியானிறைந்தசைவறுமுளத்தினுன்மிகுவார், தொகுதியானநட்பருண்முதற்குணங்களாற்சுடர்வார்.

இயற்கையாகியகுணத்தினரிழிவுயர்விரண்டு, நபக்கலாத வர் சமமுளோர்நன்னெறிநடப்போர், வியக்குமாறுவன்கரை கடாவேலையையொப்போர், மயக்கிலாதவரிரவிபோனியதி யைவழந்தோர்.

சூழுறுமின்பதுன்பந்தொடர்வுறிலொருகாலத்து, மா ழுதன்மிதத்தலில்லாவவர்களேசீவன்முத்தர், கேழுயர்மகிழ்ச் சிபச்சஞ்சினமின்மைபொறுமைநேத, மூழுறுமிவற்றைநோக் காவுளத்தினர்சீவன்முத்தர்

சுழுத்திபோலாறிநின்றபாவனைத்தொழிலினாலே, பழு த்தநெஞ்சதனனீங்காச்சாக்கிரம்பயில்வோர்நாளும், விழுத் தருகலைகள்சூழ்ந்த மதியெனமேலொர்மேவ. முழுத்தமும் பிரிவிலோரேமுத்தரென்றுரைக்கத்தக்கோர்.

யாதினுமுபர்ந்துமானாப்பதம்பற்றியிதயமென்றுஞ், சீத மாயின்பத்துன்பஞ்சேர்கிலார்பிறப்பிற்சேரார், சாதுகொள் பகைகொளொத்தல்தஞ்சம்வல்லபங்களுள்ளோ, ரோதியநெ றியிற்செல்லுமுத்தமர்பிறப்பிற்சேரார்.

இழிவுயர்விரண்டுமெண்ணாிச்சைகோபங்க ளெய்தார், தொழிறுழிலிலாமைவிட்டோர் துன்னியபிறப்பிற்சேரா, ரெழில்பெறவிளங்கி யார்க்குமினியனவினிதிற் சொல்வோ, ரழிபொருளனைத்தின்சால்பையறிக்துளோர்பிறப்பிற்சேரார்

இன்றிறவுவந்தாலுங்கற்பாந்தத் தெய்துகினுமிலங்குமி லங்குஞானி, கன்றியசேற்றுறு பொன்போற்களங்கமுறு னெல்லாமாய்க்கண்ணயாறிப், பொன்றலடிமுடிவின்றியொ ன்றுயின்பத்தளவாய்ப்பொலிதேசாகித், துன்றியகாட்சிக ளில்லாக்குறியுடைத்தாமெனச்சுருதிசொல்லுமன்றே.

அன்னன்சமமாமழிவில்லா வான்மாவாய் நின்றின்ப முறு, மென்னுகினுமொன்றுடுப்பவனுயென்னுகினுமொன் றுண்பவனு, யுன்னுதெங்காகினுமொருபா லுறங்குவோனு

யாங்கவனே, பொன்னூர்பூமிமுழுதாளும் பூபாலனைப்போற்
பொலிவுறுமால்.

இவைபோன்றனசுயமூகித்துரைத்துக்கொள்க

(அ - கை) ஞானத்திற்கும்பலம்சர்வஞ்ஞத்தன்மையி
னும் அதிகம் அருளப்பெற்றது, இங்ஙனமே யோகத்திற்
கும் அதுவேபலமெனவருளப்பெற்றது, அவ்விருநெறிகளுள்
யாதுமேன்மையது என்பதையறியும் விருப்புடையவரேண
யன் விஞதல்:—

சு. கிம்ஸு—வம்த்ரிஷு ரௌகேஷு தேவ மம்யுவ
யொகிஷு, ஸமவநுவயா தெநவ விஜாவிமாரத.

க. மூவகைப்புவனத்திடை முற்றினுந், தேவகந்தர்வர்
சேருவதென்சுகம், பாவகத்தறகளியாலதைப்பகர், மேவவித்
தைமிகபகமேவினோய்.

வி. சுகம்=சுகஞ்செய்தலிஞலேசுகம்சுகசாதனம், த்ரி
ஷு லோகேஷு தேவகந்தர்வயோஙிஷு = மூவுலகத்தின்கண்
ணுமுள்ள தேவகந்தருவாதிஜாதிகளில், கிம்=யாதாம், உல
கத்தின்கண் என்பதாதிபதினன்கு புவனங்கட்கும் உபலக்
கணமாம். முழுப்பிரமாண்டகோளகத்திலும் மிரதிசயசுகசா
தனம் ஞானமாயோகமா? தத்=என்பதை, மே=அடியேற்
கு, க்ருபயா=கருணையினலே, ஹேபகவந்!=ஹேபூரணஞான
ஐசுவரியரே! ஹேவித்யாவிசாரத! = சகலவித்தைகளையும்
உலகிற்றெளியப்பரவச்செய்பவரே. வத=உபதேசித்தருள
வேண்டும் என்பதாம். வித்யாவிசாரதவென்சசம்போதித்
துக்கொண்டு வித்தியாசம்பிரதாயப்பிரவர்த்தகத் தன்மை
யானே தேவரீரே இதனையருளத்தகுதியுடையவர் என்ப
தைக்குறிப்பித்தனன்.

(அ - கை) கூறியருளியநெறியில் மனத்தோடுகூடிய
புலன்களின் ஒருமை முற்றினும்முடியாததாமென வரேண்ய-

முன்னவனது அநதிகாரத்தைக்கருதியருளி யோகமார்க்கத்தையே யுபதேசித்தருளுமவாமிக்க ஸ்ரீகஜானனப்பெருமான் அருளல்:—

சு. ஆநந்தமஶ்நுதே ஸக்தஸ்வாத்மாராமோ நிஜாத்மநி அவிநாஶ்யம் ஸுகம் தத்தி நஸுகம் விஷயாதிஷு.

க. இத்தனுவிலிருந்திடினுமினிய தனிலேரமியா, சத்தினவனானந்தஞ் சார்ந்திருப்பனது தானும், நித்தமெனப்பெறு சுகமாநிகழுகின்றவொலிமுதலாய்ப், பொத்துடலிற்பொருந் துவனவின்பெனவும்பொலிவுறுமோ.

வி. அசக்த:=கோசத்தூலசூக்குமகாரணசரீரங்களில் யானெனதென்னும் அபிமானமற்றவன், அவற்றினின்றும் அயற்பெறுத்தியதன்னை சாஸ்திரத்தாலுணர்ந்தவன் என்பதாம்; நிஜாத்மநி = இத்தேகத்திலேயே, ஸ்வாத்மாராம: தன்னதாத்மாவிற்றானே மிகரமிப்பவன், அவ்வக்கோச ஆன்மத்தன்மையைவிடுத்து உபாதியற்ற ஆன்மாவின்மாட்டு இனிதிரமிப்போன் என்பதான்; இத்தகையனானவன், ஆநந்தம்=ஐங்கோசங்கட்கதீதமாயவஸ்துவை, அஶ்நுதே=வியாபிப்பன் அநுபவிப்பன் தன்மாத்திரமேயாவன் என்றபடி. இதனையேபுகழ்ந்து மற்றதை யிகழ்ந்தருளல்:—தத்ஹிசுகம் அவிநாஶ்யம்=அவ்வின்பமோஅழியாததேயாம், நசுகம்விஷயாதிஷு=விடயமுதலியவற்றிலோ ஆநந்தங்கிடையாதாம். அனுன்மதருமாங்களாகலிற்பாகியங்களாய சப்தாதிகளிற் பற்றற்றவனாய் விழைவிழந்து உளத்தூடே வெளிவிடயம் வினவாது உபசமசுகத்தைச்சத்துவவிருத்தியானேசார்வன்; இஃதேயலாது அகண்ட பிரஹ்மாநந்தத்தையுமார்வன், ஆசையற்ற அவ்வறிஞன் தற்பதார்த்த அபேத அநுபவரூப மாப பிரமயோகத்தோடு கூடி பொருமையுற்ற வுளத்தனாய் அநந்த சுகத்தை யநுபவிப்பன் என்பதாம். அகண்ட நிஜா

ம சுகநிஷ்டத்தன்மை ஜீவன் முக்தனுக்கிலக்கண மென ம், அதைக் காதலிக்குஞ் சாதகனுக்குப் பாகிய விடயப் ரீதி பரித்தியாகமே சாதனமெனவும் இதனுனேயறியக் டந்தது.

இது பற்றியன்றே ஸ்ரீ வசிஷ்ட பகவானும் :—பேரா ந்தத்தின்ப நிலையினியல்பினை நோக்காய் பின்னை நிற்கும், ராத நல்லமுதம் வந்தானுமுயிர் தொலைக்கவரு நஞ்சொக் ஞ், சோராமெய்யுணர்வுடைமை தூரிதாமனந் தடித்துத் ன்றமாகிற், காரானமுகில்சூழ மறைத்தாலுண்டோ மதி ங்கண்ணின் காட்சி, என்றருளினர்.

ஸ்ரீ பர்த்ருஹரி:— மலையுறு குகைக்கண் வசித்துய ராளிமை மனந்தனி னினைந்த தன்னியரின், பொலிவுறு கக்கட் புனற்கணமடி மேற்புட்குலமே மறமாந்து, மலமுறு னமாளிகை வாபிமலர்த்தட மாடல் காக்களினூ, டலை தினினிமை யமுந்துறு நமக்கோ வாயுளே யறவழிந்திடு ால்.

வெம்மையை யுணராதொருபெரும் விளக்கில் விட்டில் முகதவக்கபலு, மம்மயில்வுறுக முட்பெறு பிசிதம்றி லாமையினறிந்தேயு, மெம்மனோ ரெவருமி வணனுர்க்கு வேயினையந்துறுங் காமமா மிவற்றை, யம்மவோ விடலில யன் மகிமையாழ்ந்ததேயா மதிசயமே.

உன்னத வீடோடுணர்வினர் புகழுமுயர் சுதர் சங்கை ய யொழிந்து, மன்னிதி தயிதை மங்கல வயதும்வள நவ மன மதியிழந்தோ, ருன்னியிவ் வுலகையுளதெனக் குடும்ப வாரு காரக்கிரகமே புகுவர், தன்னியரோவவ்வகிலமுங் ண்த்திற் றரூ மென்றுணர்ந்தொழிப்பர்களால்.

யோகமுங் குலமும் பொருளொடு மானம்பொலிவுறு ரலொடு குணமு, மாக மென்னிவற்றிற் பிணியழிவரசா

லரியதீனதை சரையரியான், மோக வாதியராற் றீயரான மனுன்முற்று றபயம்புவி நரர்க்கானு, சோகவெவ்வியாவும் பயத்தொடுவிரவுஞ் சொல்பபமில் வைராகமதே.

சனனமோ மரணபீடித மதிக சீதுர யெவ்வனஞ்சரை யாலே, யினிமகிழ்வருத்தனைசையினுற் சமவின் பிளையவங் கனை மயல்களினு, னனிகுணந்தமோ மற்சரவுலகானவ வனப்புவிகள் பாம்பவற்றுன், மனவன்றார்ச் சனரானிதி யழிவதனுன் மருவுறுதெது வெதனுனே.

ஆயுளுமலையி லழியு மெவ்வனச்சீ ராஞ்சில தினமனும் பொருள்க, டேயுள நினைவையுறமுமின் மழையிற்றிகழ் மினலெனற்றிரள் போகம், மாய மங்கையராற் கணமுறத் தழுவ மகிழ்வது நொடிபவப்பயனீ, ரேயரிப் பாரங்கடந் திடப் பிரமத்தியைந் திடுமதிய ராயிருமின்.

துன்புற மலநடு நியமித தனுக்களாற் றுன்னுறுங் கரு பீதி, லன்பினன் பிறிதரவுறு துயர் விஷமமாமரிய வெவ்வ னயோக, மின்பெழில் விழியர்களி கணைகைக்கிலங்கிழ மென்னல நரரேரே, வன்பவமதுதனி லணுவுங்கிஞ் சிலுஞ் சுகம் வருமெனி னறைவீரே.

புலிப்பேடென்னச் சரைவெருவைப் புகட்டிப் பொலி யுமாமயங்கண், மலப்போரிதனையருத்தமரு மருவார் பொரு வனுமாயுட், கலைப்பாயில்லிக்குட நீர்போற்கழிந்தே யொழி தல் கண்ணுறினு, மலுப்பாமகிதந்தனைத் தினமுமகிலம் புரி யற்புதமென்னே.

பிரமனொடு மிந்திரனை முதலனவானவராம் பெருங் கணங்கடமைத்திரணகணமென வெங்கிருந்தே, திரமெனு மோ வெதன் சுவையாற்றிரிலோக வரசா தியவிபவம் விரச மதாய்த் திகழ்வுறு மோயாதோ, பரமவனவரதமிளி ரொன் றதுவே யாகப்பினுபோகமிலங்கலுறு மையவருந்தவரே,யுரி

மறவே யொருகணபங்குரமானவ தின்வேறுளபோகங்களிற்
களிப்பை யுறுதிருமினிருமின்.

நரருறுமாயுணுறளவாகு நழுவுறுந்துயிலிலே பாதி
பரவினவ்வரையினைய லொருபாதிபாலதைகிழமையிற்கழியு,
மொருவியவழிவுபிணியிட்ரோடு முறுபலசேவையா லொழி
யுங், கருவரியலையி றுழறருவாழ்விற் காணலெவ்வணஞ் சுக
முயிர்க்கே.

பாணியினைப் பயிக் ககலம் பயின்ற வராயியல்பாற்பரி
சுத்தபயிக்ட மதாற்பற்றிய நன்முதராப்பு, வேணுமென்ற
விடந்தனிலே வீற்றருளுபவராய் விசுவமதைத் துரும்பென
வே யடிக்கடி காண்பவராய், நாணுடல வீடலராயினு
மகண்ட பரமாநந்தவனு பவமதனைப் புரியுமவராகிப், பூணு
மகாயோகி யருக்குமை கொழுநனருளாற் பொலிசுலப
யாதோவோர் நெறிபெற வுற்றதுவே.

கோவணநூறு கூறுபுற் பீறற்கொளுரகந்தைமற்று
மத்தகைத்தே, யாவலில் பயிக்கவுண வெணமிதா மருந்
துயில் வனமயானத்தே, தாவிறன் வயனுப்த் தடையறத்
திரிதல் சந்ததஞ் சிந்தைதண்மையதா, மூவுறில் யோக
மகோற்சவத்திறமை மூவுலகாளலாலென்னே. 21

(அ - கை.) விடயாதிகளிலின்பமில்லை யென்பதையே
விளக்கியருளல்:—

சு. விஷயொத்தாநிஸஎவ்யாமிஓ-ஃவாநாºதாநிஹெ
தவ:,உத்ததிநாமய்ாக்காநிக்தாவஓக்காநதகவிஃ.

க. சுவையெனவிடயநின்றுந் தோன்றின யாவுமென்
றுங், கவையெனத் துயரஞ்செய்யுங் காரணமாகுமென்ப,
நவைதரு மிறப்பினோடு மிறப்பினை நண்ணுநிற்கும், அவை
தமிலாசை மிக்கோ னறிவனை யறியானன்றே.

வி. விஷய உத்தாநி சௌக்யாநி = விடயங்களினின் றும் எழுந்தன சௌக்கியங்கள், தாநி = அவைகள், துக்கா நாம் ஹேதவ: = துயரங்களின் காரணங்கள் ஆம், உத்பத்தி நாசயுக்தாநி = பிறப்பு இறப்பு உடையனவாம், தத்ர = அவற்றில், ஆசக்த: = பற்றுடையவன், ந தத்வவித் = தத் துவமுணர்ந்தவனாகான். விடயத்திலெழுந்த சுகமோ சமஸ்காரரூபமாக ஆன்மாவின்கண்ணேயிருந்து காலாந்த ரத்தில் ஆண்டிச்சையை யுண்டாக்கும், இச்சையுடையவ னே அதனை யடையு முபாயத்தில் முயல்வன், முயன்றவ னும் யாதாவது ஒரு நிமித்தத்தானே தடைப்பட்டவனா கிக் குரோதத்தானே தடைகளைக் கெடுப்பன். அதனானே அவற்றால் பந்தப்படுவன் என அவற்றிற்குத் துக்கஹேதுத் தன்மையாம், ஆகலின் வரவுபோக்குடைய விடயசுகத்தில் யாவன்பற்றுடையவனாவனோ அவன் உண்மையுணர்ந்தவ னாகான். இவணருளிப்போந்த சுலோகங்களின் திருக்கருத் தமைந்த ஸ்ரீபகவற்கீதை :— இகமே நிகழும்புலன் விளைந்த வின்பமெல்லாமறவிகந்துள், ஏகமேவிளையும் பேரின்பம டைந்தார்க்கென்று மழியாதாற், புகமேய்கின்ற புலன்பொ றிகள் புணர்ந்தவின்பம் போமென்றுந், தகமேவிடராமெ னவு மவை தக்கோரென்றுஞ் சாராரால். விஷய இந்திரிய சம்பந்தத்தானே யுண்டாம் இகபரபோகங்கள் துச்சசுக அநுபவங்கள் யாவுமே ஆதியந்தமுடையனவாம், ஆதிவி டயேந்திரியசம்பந்தம், அந்தம் அதன் வியோகமாம், முன்னும் பின்னும் இல்லாதனவாயிடையிலேக்கணவி ருத்தி மாத்திரங்களாமிவைகள் என்றறிக; அக்கணத்தி லும் துக்கத்தையே கொடுப்பவைகளாம், விருப்பு வெறுப் போடு கூடித் தொடுப்பவைகளாகலின், அவற்றில் விவேகி யானவன் இரமியான் ஆநந்தமின்மையின். ஆநந்தமென்

பது விஷயவிஷயி சம்பந்த சனிதமாம் அல்லது சுவாபாவி கமாம்; முன்னது துக்கத்தோடுகூடிய விடயாநந்தம், பின்னது இயற்கையாய் கேவல சொரூபாநந்தம். பதினொரு வகையாகக் கருமவயத்தானே முன்னதநுபவிக்க வருமாறு: 1-வது இளமையிற் பிணியற்றொருகுடைநிழற் கீழிருநிலம் முழுவதும் புரக்கும் வளமை பெற்றுடையமகனதாம், நல்ல நவயவ்வனமும், சகலவேதசாஸ்திரசம்பத்தும், சகலதிசைகளிலும் விஜயம்செய்து புகழ்ப்பரப்பும், புத்திபலமும் அரோகதிடகாத்திரபலமும், சகலவித ஐசுவரியத்தோடு கூடிய சகல பிருதுவிகளையும் ஒரு வெண்கொற்றக்குடைக் கீழ் அரசுபுரியும் பாக்கியமும், பிறவும் உடையபோது சார்வபௌமசக்கரவர்த்தி யநுபவிப்பதாம்; இதுவே மநுடாநந்தம் இம்மநுடாநந்தங்கள் நூறுகொண்டவை ஒரு மநுடாகந்தருவாநந்தம், இது மநுடாநந்தத்தினும் நூறுமடங்கதிகமாய 2-வதாம். மநுடராயிருந்து கருமவித்யாவிசேடத்தானே கந்தருவத் தகைமையையடைந்தவர் மநுடகந்தருவராவர். அவர் மறைதலாதி மாயை யுடையவர் சூக்குமகாரியகரணர், ஆகலின் இடையூறு அதிகம் அவர்க்கிலதாம், ஏதேனு முறினும் மாற்றிக்கோடற்கு மாற்றலுளராம். சித்தப்பிரசாதமுமுண்டு, அச்சிறப்பானே சுகச்சிறப்பின் வெளிப்பாடுமாம்- இவ்வண்ணம், முன்முன் பூமிகளைக்குறித்துப் பின்பின்பூமிகளில் பிரசாத விசேடத்தானே நூறுபங்கு ஆனந்தமேன்மை பொருந்தாநிற்கும். 3-வது தேவகந்தருவர் ஜாதியிலேயே வந்தவர்; இவர் தஞ்சுகம். முன்னையதினும் நூறுமடங்கதிகமாம். 4-வது சிரகாலஸ்தாயியாய லோகத்தையுடைய பிதுர்க்கள் தம்மானந்தம் அதனினும் நூறுமடங் கதிமாம். 5-வது ஸ்மார்த்தகரும விசேடத்தானே தேவஸ்தானங்களிலுண்டாய ஆஜாநஜதேவதைகள் தம்மாநந்தம், அதனினும் நூறு

மடங்கதிகமாம். 6-வது கேவலம் அக்கினிஹோத்திராதி வைதிக கருமத்தானே தேவதைகளை மகிழ்வித்தவர்களாகிய கருமதேவதைகளுடைய வின்பம் அதனினும் நூறுமடங்கதிகமாம். 7-வது அவியுணர்வினர்களாகிய முப்பத்து மூவர்களாந் தேவர்கள், 8-வது அவர்கட்குச் சுவாமியாகிய இந்திரன், 9-வது அவனது ஆசிரியராகிய பிருகஸ்பதி, 10-வது விராட்டென்னும் பிரஜாபதி, 11-வது இரணியகருப்பர் என்னும் பிரஹ்மா ஆகிய இவர்கடம்மானந்தம் ஒன்றினுக்கொன்று நூறுமடங்கதிகமாகும். இவையாவுமேயிடர்விரவியவாம். இதனைக் கைவல்யநவநீதத்தில் மநுடன் என்னுஞ் செய்யுளானுமறியலாம். பின்னதாய பரமானந்தமோ அறிஞனது வடிவமேயாம், அதன் மாத்திரையையேயன்னிய ஆநந்திகள் அநுபவித்தலின் அதுவேமகத்தாம் அளவற்றதாம், அறிஞன் பிறவற்றிலாசையற்றவனாகலின் சகல காமாப்தியையுமடைவன். இதனை எல்லா வாழ்வினையுறும் என்னும் வேதாந்த சூடாமணியினுமுணரலாம்.

(அ - கை.) இங்ஙனம் பயிற்சியில் அன்புண்டாதற்பொருட்டு ஞானப்புகழ்ச்சியும், தீவிரவைராக்கியமுண்டாதற்பொருட்டு விடயபோக இகழ்ச்சியும் செய்தருளப்பெற்றன, இஞ்ஞான்று காமக்குரோதங்களின் வெற்றியையே அவசியஞ் செய்யத்தக்கதென வருளல்.

சு. காமகெண்வ திகாஸேஷ்ய லெறாயஷ்ஹலாஸ தேவயஃ
தொ ஜெதஃஹவஷ்ஷாவிஸஹா தவஹஃவிஸமூஹஹ தெ.

காமகாரணபூரணமாயுறக் காதல்யாவன் கடந்திடக்காதுமோ, பீமமாசின மாசுபிறங்கவே யேதமேதுமிலாததைமோதுமோ, நேமமாயுடலம் விடுகாறுமே நேர்கிலாதவனேமறைபோதுமே, பூமமாசுகமாசுகளோந்தனு போகமாகப் புசிப்பனேப்போதுமே.

வி. காமஸ்ய=காமத்தின், காரணேசதி=காரணமாகிய திவ்வியமங்கையராதிலாபமுறவே, அக்காமத்தை,ஜேதும்=வெற்றிகொள்ள, வைராக்கிய வனுவானே,ய:=யாவன், துச்சஞ்செய்ய, சஹதே=க்ஷயவனோ,இங்ஙனம், க்ரோதஸ்யாபி=சினத்தினதூஉம்,காரணேசதி=காரணமாகிய அபமானுதிகளைக் கீழ்மக்கள் செய்துற்றபோது, யாவன் அக்கோபத்தைச் செயஞ்செய்பக்கூடியவனோ, வர்ஷ்மவிரஹாத்=இச்சகனமும் தேகவியோகம் வரையும் செய்பத்தக்கதாம், வர்ஷ்ம என்பதன்முன் ஆகாரங்காணத்தக்கதாம், ஆசரீர விமோக்ஷணாத்தென்னும் ஸ்ரீ பகவானது திருவாக்கான். அல்லது வர்ஷ்மவிரஹாத் தென்பதற்கு வர்ஷ்மவிரகத்தை யபிவியாப்பியவெனல் யப்லோபமுறத்தான் ஐந்தாம் வேற்றுமையாய்தென்று கோடலாம். யாவன் சகிப்பனோ, ஸஸுகம்சிரம் அச்நுதே=அவன் ஆனந்தத்தை நீண்டகால மநுபவிப்பன் என்று கூட்டுக

ஸ்ரீபகவற்கீதை :— உடம்புடனே யுளுகியிருந்தே, விடம்புரைகாம வெகுளியின் வேகாச்,சடம் பொறையாமை தவிர்த்தவனேநல், விடம்புகுஞானியு மின்புறுவானும்.

நதியினது வேகமானது, மாரிப்போதில் அதிகப் பிரபலமாகித் தன்னைச் சம்பித்தவை விழையாவிடினும் மடுவில் வீழ்த்தி யாழ்த்தித்தாழ்த்தும் ; அதுபோலக் காமக்குரோதங்களின் வேகமும் மநோநேத்திராதிகளின் கலக்கவடிவமாய், வருஷாகால ஸ்தானீயமாய விஷயாபித்தியானத்தானே அதிப்பிரபலமுற்றுத் தற்சம்பந்திகளை விழையாவிடினும் விடயக்குழியி லிழியச்செய்து சமுசார ஆழியிலழுத்திக் கீழாய நரகத்தையடைவிக்கும். இத்தகைய காமக்குரோத வேகத்தையீண்டே வெளிப்புலன்களின் வியாபாரரூபக் குழி வீழலின்முன்பே யணையானே ஆற்றின் வேகம்மாற்ற லேப்ப விடயதோட தரிசன் அப்பியா

சுத்தாலுண்டாய வைராக்கியத்தானே யாவன் சகிக்கக்கூடும் அதாவது தன்னநுரூப காரிய அஜநகத்தன்மையானே உடல்வீழும்வரையும் அநர்த்தகஞ்செய்யக்கூடியவனாவனோ அவனே யோகியும் சுகியுமாவன் அவனொருவன் புருடோத்தமனெனப் பெறுவன். மற்றையரோ, ஆகாரநித்திரைபயமைதுனாதி பசுதருமமாத்திர நிரதத்தன்மையானே மநுடாகாரம்வாய்ந்த பசுக்களேயாவர். மரணத்தின் பின்னர் அழுது கொண்டுதழுவி வீழும் தருணிகளானே ஆலிங்கனமுறப்பெறினும், மைந்தராதியானே தகிக்கப்படினும் உயிரின்மையினானே காமக்குரோதவேகத்தைச் சகிப்பதேபோல, மரணத்தின் முன்னரும் வாழ்ந்து கொண்டேயாவன் சகிப்பனோ அவனே யோகியுஞ்சுகியும் ஆவன் எனினுமாம்.

இவற்றிற்கு முறையேஉதாகரணம் ஞானவாசிட்டம்:— அறுதிமரத்துக் கீரரிவாளாக்கைவல்லிக்கெரிபுழுவா, மறுகுகின்ற மனத்துன்பமருவாதவரையமனணுகா, னிறுதியுடலாமரத்தினைச் சூழ்ந் திரங்கு மனத்திற்றலைவைத்து, முறுகுமாசைப்பாம்படரா முதன்மையோரையமனணுகான்.

இராகவெகுளி விடம்பெருகவிதயப்புற்றிற் லோபமெனு, மராவந்தணுகி விழுங்காதவரினர் தம்மை யமனணுகான், விராவிவேகநீர்சுவறி மெய்யாங்கடலில் வடவனலாய்ப், பராமல்வெகுளி வேரறுத்த பண்பினோரை யமனணுகான்.

கடினமான வெந்திரத்திற் கலந்ததிலம் பொன்றுவதென்னக், கொடியமதனூற்றேய்தலுறுக் கொள்கையோரை யமனணுகான், முடிவிலாத நின்மலமாமுத்திப் பதத்தேசித்தத்தி, நெடியதுயர் தீர்ந்திளைப்பாறு நிலைபெற்றோரை யமனணுகான்.

அடையவேண்டியதடைந்து மேற்றுயரமற்றின்பமளவிலாதீரய்க், கிடையதாந் தருவிலங்கு பறவைகள் போல்

வினைகள் கழியாதாகித், தடையிலா மனனத்தால் வாழ்வதே யுயர்வாணுள் சுநநந்தீர்ந்தோ, ருடைய பிறப்புயர்ந்த தாங்கிழவேசரிப் பிறப்பாமொழிந்தவெல்லாம்.

மாளாதகாதலெனும் வற்சநாபிக்கொடியின் வனத்தைச்சுட்டு, நீளாசை யனைத்து மறுத்தவர்க் கன்றே விப்பயன் றுனேராநிற்கும், கோளான பொருளனைத்தின் முன்பொடு பின்பினிமையிலாக் குற்றங்கண்டு, மீளாதபாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறென்றன்றால்.

எவனுடைய மனப்புற்றிலிராக முனிவெனும் பணிகளி யக்கமில்லை, யவனெனுங் கற்பகதருவாலனுகாததொன்றுண்டோ வறிவின் மிக்கோய், கவனமற மறிவினன் மதத்தோராய்ப் பலகலை நூல் கல்வி மிக்குத், தவமறுகாமம் வெகுளி நிறைந்தோரே வேசரிபோற் றள்ளத்தக்கோர்.

உயிரினைத்துறந்த பின்னுடலமானது, துயரையுஞ் சுகத்தையுந் தொடர்கிலாதவா, றுயிரினைத்துறக்கு முன்னுடையதாகுமே, லுயர்வற முத்தியிலமருகிற்குமே இவைபோன்றன காணலாம். இதுபற்றியே ஸ்ரீமத்பாகவதத்தும் கார்முகில் வண்ணனைக் கருதிலார்களை, யோரிருகாற்பசு வென்னவோதுவார் எனப்பெற்றது. 23

(அ - கை.) காமக்குரோகங்களை வென்றவன் என்னடைவன் என வாசங்கிப்பவருளல்:— .

சு. சுந்நிஷ்டாக்ஷ்ஷாஸாவே நாரதிஹ்மஹாஸ, ஸஸம்ஹிஷ்டாக்ஷ்யம் ஹஸவஹ்ஹ தஷிதாய்க்ஷுஷ.

க. கண்ணிட்டையனந்தரத்துட் பிரகாசனுமே, னண்ணின் பினனந்தரத்துள் விளையாடலானே, னெண்ணையமதற்றழிவற்ற விறைவனுவான், கண்ணும் முயிரியூவினுக்கும் மித காரியாமே.

வி. காமக்குரோதங்களை வெற்றி கொண்டவனும் வெளிமுகத் தன்மையானது தானகவே விலகிவிடுதலி... அந்தர்நிஷ்ட: = ஆசிரியர் அருளிய ஊகத்தா... இருதய புண்டரீக விடத்தில் நிட்டையுடையவனை... அதனுனே, அந்த:பிரகாஶ: = இருதயஆகாசத்துள்ள ... வபாவங்களையும் ஆதித்தன் போலப் பிரகாசிப்பன், அ... னுனே, அந்த: சுக: =கிருதகிருத்தியனுயினேன் என ... ளேயே இன்பத்தை யெய்துவன், எதனுனுட்சுகமுறுவ... அதனுல் அந்தாரதி: =உள்ளிலேயே எல்லாஜயங்களும் ... பட்டவனுகிப்பிரீதியுடையவனுகியவன் ஆவன், ரோரி ... பதனுனே ரேபம் லோபமானபின் ட்ரலோபேபூர்வஸ்ய ... கோண: என்பதனுனேபூர்வத்திற்குத்தீர்க்கமாம், புநர ... என்றியல் ரேபத்திற்கு ரேபம்பரமாகி ரேபம்லோபமான... நகாரஉத்தரவிருத்தியாய குறில் அகாரம்-நெடிலாகுல்... ரமதே யெனவுறுதல் போல, அந்தர்ரதியெனவிருந்... கூறிய இருவிதிகளானும் அந்தாரதியென்ருயது. இ... கையன் அக்ஷயம் பிரஹ்மலபேத்=அழியாத சிவத்தை... யடையாநிற்பன், அதன்பின் மீண்டு ஐயப்பாடற்றவனு... யாவன் இவ்வகை பிரஹ்மத்தை யடைவன் எனின் அ... ளல்:—சர்வபூத ஹிதார்த்தக்ருத்=சகலபிராணிகளின் ... ருத்தாகிய சந்யாசி யென்பவன் அடைவன் என்பதாம்.

ஸ்ரீமத் பரமார்த்ததரிசனம்:—மெய்யறிவே விளையபி... மதாக, மெய்யறிவே விளையாடிடமாக, மெய்யறிவே யொ... யாகவுமேயோர், மெய்யறிவே பெறுமின்பம் விடாதார்.

இந்த ஜீவன்முக்தன் உட் டன்மாட்டே யின்பமு... வனலது விடயங்களிலுருன், அதனுனே உட்கிரீடையு... யவனேயாவன்; சருவசங்கத்தியாகிக்கும் விரும்பாது ... துற்ற, கீதைக்கவர ஓதும் கோகிலாதி மதுரசப்த ... ணம், மந்தமந்தமாகவருந் தென்றற்றழுவல், பூரண சந்தி...

கையின் நேத்தரோற்சவம், தாழம்பூவின் நறுமணமுகர்தல், அதிமதுரசீதள கங்கோதகபானம், என்பவாதி பாகியத்திலும் இரமித்தல் சம்பவித்தலின் யாங்ஙனம் உள்ளாராமத் தன்மையெனின்;: உட்டன்மாட்டே திருட்டிவைத்திருப்பனலது வெளியில் வைபான் என்றுணர்க. சமாதிகாலத்தில் ஒலியாதிகளின் றோற்றமின்மையின், எழுந்த காலத்திலும் அவை தோன்றுறினும், மித்தியாத்வநிச்சயமுடைய அவனுக்கு, "ஊகமின் மூகர்க்கெல்லா மூழிவெங் கடலாஞ்சென்ம, மோகமிலூகத்தோர்க்கு முன்னுறுகோவின்றுளாஞ், சோகமின்ஞானி நெஞ்சிற் றொடர்ந்த சிற்றின் பம்பற்றுப், போகமில் சிற்றார்ப்புன் பெண்பொலிநகர்விடலைக் கென்னும்" என்று ஸ்ரீ வசிஷ்டபகவா னருளியமுறையே இரதிகரத்தன்மை யின்மையின் அந்தராராமத்தன்மை விரோதமின்று மென்றறிக. இவ்வகையாய அவ்வியோகியானவன் பிரஹ்மரூபமாய மோக்ஷத்தையேயடைவன், ஆனலது தேவதத்தன் கிராமமடைவதுபோல அல்லவாம், மற்றே, சுயம்பிரஹ்மரூபமாயிருந்தே அஞ்ஞான வசத்தால் அடையப்படாதததுபோலிருந்த பிரஹ்மத்தையே ஆசிரியர் திருவருளால் அடைகின்றனன். "பிரஹ்மமாயிருந்தே பிரஹ்மத்தையடைவன் "என்பதாதிசுருதியினுனும்; அவஸ்திதேரிதிகாசக்ருத்ஸ்ந : என்னும் பிரஹ்மமீமாம்சை நியாயத்தானும் எனவறிக. சூத்திரப்பொருள்:—இப்பரமான்மாவிற்கே இவ்விஞ்ஞான ஆன்மபாவத்தானும் அவத்தானத்தானே பொருத்தமாமிந்த அபேதத்தானே யுபக்கிரமணம் என்று காசக்ருத்ஸ்ந ஆசிரியர் எண்ணுகிற்பர். அவ்வாறே பிராஹ்மணம் :— " இச்சீவவடிவமாய் இதனுட்புகுந்து, மெச்சுபெயருருவுங்கள் மிளிர்தரப்புரிவன் " இவ்வகையாய ஜாதியையுடையது. பரமான்மாவிற்கே ஜீவபாவத்தானே அவஸ்தானத்தைக் காட்டாநிற்கும். "எல்லாவுருவமுமியற்

றித்திரன் இயற்பெயர் புனைந்தே யியம்பி வாழுவன்" என்பது போன்ற மந்திர வர்ணமும் உளதாம். தேயுமுதலிய வற்றின் சிருட்டியுள் ஜீவனுக்குத் தனிச் சிருஷ்டியோ கேட்கப்பெறவில்லை. எதனானே பரமாத்மாவினின்றும் அன்னியமாய் அதன்விகாரம் ஜீவன் ஆவனோ. காசக்கிருத்ஸ்ந ஆசிரியருக்கு நிருவிகார பரமேசுரன் ஜீவன், பிறிதல்லன் என்பது கருத்தாம். சில ஆசிரியரோ காரியகாரணம் போன்றும் பேதாபேதமாகவும் அங்கீகரிக்கின்றனர், எனினும் முன்னாசிரியர்கருத்தேசுருதியை யனுசரித்துளது. தத்துவமசி யென்பதாதியும், அரும்பவிரும்பியதுமஃதே. எனவே அவ்வுணர்வால் அமிருதத்தன்மை யமைக்கலாம், ஜீவனுக்குவிகாரான்மகத்தன்மையையுடன்படினோவிகாரத்திற்குப்ரபிகிருதி சம்பந்தமுற்றவழி பிரளயவழக்காதலின் அவ்வுணர்வானே யமிருதத்தன்மை யமைத்தற்கடாதாம். இதனானே தனதாசிரய நாமரூபத்தின் அசம்பவத்தானே உபாதியாசிரயமாய நாமரூபம் ஜீவனிடத்தில் உபசரிக்கப்பெறும், இதனானே ஜீவனுக்குச் சிலபால் அக்கினிவிஸ்புலிங்க உதாகரணாத்தானே கேட்கப்பெறுவதாய உற்பத்தியும் உபாதியாசிரயமேயென வுணரத்தக்கதாம். கூடத்தநித்தியமேயாய இவ் விஞ்ஞானகன ஆத்மாவிற்கு உச்சேத வழக்கே கிடையாதாம், அவித்தையாலாக்கப்பெற்ற பூதேந்திரியவடிவங்கள் வாய்ந்த மாத்திரைகளோடு இதற்கு அசம் சர்க்கம் வித்தையாலாம், சம்சர்க்க அபாவமாகவே அவற்றாலாக்கப்பெற்ற விசேஷவிஞ்ஞான அபாவமாம். "யாண்டுதானிருமைபடுதெனவேயாகும், ஆண்டயலயலைக் காண்குவனன்றே" என்றாதொடங்கி அவித்தை விஷயத்தில் அவனுக்கே தரிசனாதிவடிவ விசேஷவிஞ்ஞானத்தைவிரித்து "யாண்டிவற்கெல்லாமான்மாவேயாம், காண்டலங் கெதனாலைதை யிவன்வேறுய்" என்பதாதியானே வித்தைவிஷயத்தில் அவனுக்கே

தரிசனுதி வடிவமாய விசேஷவிஞ்ஞானத்தின் அபாவத்தை மறையறைகின்றது. விஞ்ஞாநாத்ம பரமாத்மாகட்கு அவித்தையாலாக்கப்பெற்ற நாமரூபரசித தேகாதியுபாதி நிமித்தபேதமாமலது பாரமார்த்திகமாயிலதாமென்னும் இப்பொருள் எல்லா வேதாந்த வாதிகளானும் அங்கீகரிகத் தக்கதேயாம். "இவையெலாமுண்டா முன்னர்ச்சத்தே எவமறச் சௌமிய விருந்ததென் றுணர்தி, ஒன்றேயத்விதீயம், ஆன்மாவே யிவ்வியாவும், பிரஹ்மமேயிவ்வியாவும் இவ்வியாவும் எவ்விவ்வான்மா, இதனினுமயலாய்க் காண்போனில்லை" என்பனபோன்ற சுருதி சதங்களானும்; "வாசுதேவன் சர்வம்; எல்லா க்ஷேத்திர மிவைதமிலென்னை, நல்ல க்ஷேத்திரஞ்ஞனாய் நாடுதிபாரத, பூதமெவற்றினுஞ் சமமாய்ப்பொலிவுறும் நாதனும்பரம வீசுரனென்ப, என்பனபோன்ற மிருதிசதக்களானும் அபேதம் அங்கீகரிக்கத்தக்கதேயாம். "அன்னியனிவனனன்னியனெனவேயறிந்தான் அறிந்தவ்னலன்பசுவாவான், யாவன் நானுவாகக்காண்பன் ஆவவனககாலாச் சனிமரியடைவன், என்பதர்தி மறைகள் வேற்றுமையையும் மாற்றுகின்றன. "அவ்விது மகத்தாமஜமாமான்மா அஜரம் அமரம் அமிருதம் அபயம், பிரஹ்மம்,, என்பதாலே ஆன்மாவின்கண்ணே சருவவிக்கிரியையின் நீக்கமும் ஆக்கப்பெறுகின்றது; மாறாயினே முமுக்ஷுகட்கு நிரபவாதவிஞ்ஞானங் கூடாமையும், சுநிச்சிதார்தத்தன்மை பொருந்தாமையும் உளவாம், நிரபவாதமாய விஞ்ஞானமோ சருவ ஆகாங்க்ஷாநிவர்த்தகம் ஆத்மவிஷயம் என்றுடன்பாடாம். "வேதாந்த விஞ்ஞான சுநிச்சிதார்த்தா: ஒருமையைக்காணுமுன்மைபனுக்கென், வருமோகந்தன்வளர் சோகந்தான், என்பனவாயசுருதிகளும் திடப்பிரஞ்ஞலக்ஷண மிருதியுமுள்ளனவாம். க்ஷேத்திரஞ்ஞபரமாத்ம ஏகத்வவிஷய நற்காட்சியில் நிலைபெறவே

க்ஷேத்ரஞ்ஞன் பரமாத்மா என்னும் பெயர் மாத்திர பேதத்தானே இந்த க்ஷேத்திரஞ்ஞன் பரமான்மாவினும் பின்னன் இப்பரமான்மா க்ஷேத்திரஞ்ஞனினும் பின்னம் என்மதுபோன்ற ஆத்மபேதவிஷய இருநிர்ப்பந்தம் நிரர்த்தகமாம். ஒரேயிவ்வான்மாத்தானே நாமமாத்திர பேதத்தானே வெகுவகையாக விளம்பப்பெறும், குகையிலிருப்பதாகக் கூறியதும் பிரஹ்மத்தினும் அயலல்லவாம். அது சிருஷ்டித்து அதுவே புகுந்தது என்னுந் திருமறையும் சிருஷ்டாவிற்கே பிரவேசங் கூறுகின்றமையின். யாவர் நிர்ப்பந்தம் செய்கின்றனரோ அவர் வேதாந்த அர்த்தத்தைப் பாதிப்பவராய் மோக்ஷவாயிலாய நற்றரிசனத்தையே பாதிக்கின்றனர், செயற்கையதாகவும் அழிவுடையதாகவும் மோக்ஷத்தைக் கற்பிக்கின்றனர், நியாயத்திற் கிதுபொருத்தமாகவில்லை.

அற்றேல் எங்கும் எப்போதுமிருக்கும் பொருள் புகுந்ததென்பது எங்ஙனங்கூடும், புகாததேசமானது அளவினாற் புகுதப்பெற்றதெனல் கூடும், மனுடனுற் கிரமாதிபோலும்; ஆகாயத்தாற் சிறிதுங்காணும் எப்போதும் புகுந்திருக்குந் தன்மையுண்மையின் எனின்? ஆகாயத்திற்குக் கடதாத்மியமேபோலும் பரமாத்மாவிற்கு அந்தக்கரணாதி தாதாத்மியமே பிரவேசமாம் என்க, நீரிரவியாதிப் பிரதிபிம்பம்போலும் ஆத்மப்பிரவேசமும், பிரதிபிம்பம்போலும் வெளிப்படுத்திய காரியத்தில் புலம்பாடுடைத்தாதலாம். உற்பத்திக்கு முன்றோற்றாத ஆன்மா, பின்காரியமெனச் சிருஷ்டித்துப் பகுத்த புத்தியுட்டோற்றுவதாகி நீராதியிற் சூரியாதிப் பிரதிபிம்பம்போலும், காரியஞ் சிருட்டித்துப் புகுந்ததேபோலும் பொலியும்.

சிருட்டித்தவன் அவ்வடிவத்தானே புகுந்தனா அல்லது அயல்வடிவத்தானேயா? து விகுதி கேட்கப்பெறுத

லின் யாவன் சிருஷ்டித்தனனே அவனே புகுந்தனன் என வாம். அற்றேல், மண்மானப் பிரஹ்மம் காரணமாயிற் பொருந்தாதாம், அதன் வடிவத் தன்மையுண்மையிற் காரியத்திற்கு, காரணமேயன்றோ காரியவடிவமாகப் பரிணமிக்கின்றது, ஆகலின் காரியஉற்பத்திக்குமேல் தனித்துப் புகாததேயாய காரணத்திற்கு மீண்டும் புகுதலென்பது பொருந்தாதாம், கடபரிணாம வியதிரேகமாக மண்ணிற்குக் கடத்திற் புகுதலிலையாம், கடத்திற்சூரணவடிவமாக மண்ணின் பிரவேசம்போலும்; இங்ஙனம் இவ்வடிவமாக நாமரூபகாரியத்தில் அநுப்பிரவேசம் ஆன்மாவிற்கெனின் இச்சீவவடிவமாயிதனுட் புகுந்தென்னும் வேறுமறையானும் இங்ஙனமேலதாம், பிரஹ்மத்திற்கு ஒருமையுண்மையின், மண்ணுருவினுக்குப் பன்மையுண்மையானும் சினையுடைமையானும் பொருத்தமாங்கடத்தில் மண்பொடி வடிவமாகப் புகுதல் மட்சூரணத்திற்குப் புகாத்தேசத்தன்மை பொருந்தலானும் ஆன்மாவிற்கு ஒருமையோடு அவயவத்தன்மையின்மையானும்புகாதவிடமின்மையானும் புகுதல் பொருந்தாதாம்,ஆயினெங்ஙனம் பிரவேசமாதல்? புகுதலோபொருத்தமுமாம், அதுவே புகுந்ததெனக் கேட்கப்பெறுதலின், ஆயின் சாவயவமேயாகுக சாவயவத்தன்மையானே வாயிற்கை நுழைதன்மானும் நாமரூபகாரியத்தில் ஜீவவடிவமாக அநுப்பிரவேசம் பொருத்தமேயாமெனின்? கூடாதாம், இல்லாத இடமின்மையின், காரியவடிவமாகப் பரிணதமானதற்கு நாமரூபகாரிய தேசவியதி ரேகமாக ஆன்மசூனியப்பிரதேசமிலதேயாகும், எதைக்குறித்துச் சீவவடிவமாய்ப் புகுதலாமோ, காரணமேயாயிற்புகுதலாம், ஜீவான்மத்தன்மையைத் தியாகிக்கவேண்டும், மட்பிரவேசமாகக் கடம் கடத்தன்மையை விடுதலேபோலும்; அதுவே புகுந்ததென்னுஞ் சுருதிக்கு காரணாநுப்பிரவேசம் பொருத்தமின்றாம், காரியாந்தரமே

யாமெனின் ?=அதுவே யனுப்பிரவேசஞ்செய்தது என ஜீவாத்மரூபங் காரியம் நாமரூப பரிணதமாய்க் காரியாந்தர மாகவே யடைவுறும் எனின், கூடாதாம் விரோதமாதலின், கடங்கடாந்தரமாவதில்லை வியதிரேகசுருதி விரோதத்தா னும். ஜீவனுக்கு நாமரூபகாரிய வ்யதிரேகத்தை யநுவா திக்கும் சுருதிகள் மூராணுநிற்கும், அஃதடைவுறவேமோக்ஷ அசம்பவமாதலினுனும், எதனினின்றும் விடுபட்டானே அவன் அதனையே யடைவதென்பதாக இல்லையல்லவா, கட் டுற்ற கள்வர் முதலியவர்க்குச் சங்கிலியடைவுமற்றுண்டு கொல், வெளியுள் வேற்றுமையானே பரிணதமெனின்= ஆதே காரணப்பிரஹ்மம் சரீராதியாதாரத் தன்மையானே அதனுள் ஜீவவடிவமாக ஆதேயத்தன்மையானேயும் பரிண தமாயது எனின், ஆகாதாம், வெளியிலிருப்பவனுக்குப் பிர வேசம் பொருந்துகின்றமையின், யாவன் எதனது உள்ளி ருப்பனே அவனே அதிற் புகுந்தவன் எனப் புகலமுடியா தன்றே, வெளியிலிருப்பவனுக்கு அநுப்பிரவேசங்கூடும், பிரவேசசப்தார்த்தம் அங்ஙனம் காணப்பெறுதலின், வீட் டைக் கட்டிக் குடிபுகுந்தான் என்பதுபோலும், ஜலசூரிய காதிப்பிரதிபிம்பம்போலும் பிரவேசம் ஆமெனின், ஆகா தாம், அபரிச்சின்னத்தன்மை யுண்மையினுனும், அமூர்த் தத் தன்மை யுண்மையினுனும், பரிச்சிந்ந மூர்த்தமாய பிறிதிற்குப் பிறுண்டு தெளிந்த வியற்கைவாய்ந்த நீரா திகளில் சூரியகாதிப் பிரதிபிம்ப உதயமாம், ஆன்மாவிற்கோ ஆகாதாம், அமூர்த்தத்தன்மையின் ஆகாசாதி காரணமாய ஆன்மாவிற்கு வியாபகத் தன்மை யுண்மையின், அதினுஞ் சேய்மைத்தேயம் பிரதிபிம்ப ஆதார வஸ்து அயல் இன் மையானும் பிரதிபிம்பமென்னப் பிரவேசம் பொருந்தாதாம். இங்ஙனமாயின் பிரவேசமேயில்லையெனலாம், கதியொன்று வேறைக் கண்டிலேம், அதுவே புகுந்தது என்பது சுருதி

யாதலின், சுருதியும் நம்மனோருக்கு அதீந்திரிய விடயவிஞ் ஞான உதயத்தில் நிமத்தமாம், இவ்வாக்கியத்தினின்றும் வருந்திமுயன்றவர்க்கும் விஞ்ஞானமுதயமாவதில்லை, அந் தோ ஆயின் அநர்த்தகத்தன்மையானே இவ்வாக்கியம் அக ற்றத்தக்கதாம், அது சிருட்டித்து அதுவே புகுந்தது என் பது, அடாதாம், அன்னியார்த்தத்தன்மை யுண்மையின், யாதின்பொருட்டோ இடமலாவிடத்தேசர்ச்சை, பிரகி ருதமோ அன்னியமறைப அவாவியதாக இதற்கு வாக்கி யார்த்தமுளதாம், அது ஸ்மரிக்கத்தக்கது :—பிரமத்தை யறிந்தான் பரத்தைப்பெறுவன், சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம், குகையிலிருப்பதை யுணர்ந்தவனியாவன். அவ் விஞ்ஞானமே அறைய அவாவியதாம், பிரகிருதமாயதுமது, பிரஹ்மசொரூப ஞானப்பொருட்டே ஆகாசாதி பன்னம யாந்தங்காரியம் காட்டப்பெற்றது, தொடங்கிய பிரஹ்ம ஞானமே, ஆண்டு அன்னமய ஆன்மாவினும் அயலாய் உள் ளாயிருக்குமாத்மா பிராணமயம், அதனுள்ளே மனோமயம் விஞ்ஞானமய மௌனவிஞ்ஞான குகையிற்பிரவேசித்ததாம், ஆண்டும் ஆனந்தமய விசிஷ்டாத்மா காட்டப்பட்டது, ஆக லின் பரமானந்த மயலிங்கவுணர்வின் வாயிலாக ஆனந்த விசேஷ விருத்திமுடிவு ஆன்மாவாம், பிரஹ்மபுச்சம் பிரதிட்டை சர்வவிகற்ப ஆஸ்பதம் நிருவிகற்பமாய அது இக்குகையின் கண்ணேயுணரத்தக்கது என்பதாக அதன் பிரவேசமினிதுகற்பிக்கப் பெறும், பிறுண்டோ அந் தப் பிரஹ்மம் புலப்படாதாம், நிர்விசேஷத்தன்மையான் விசேஷ சம்பந்தமே புலப்பாட்டின் காரணமாகக்கண் டோம், இராகுவின்சந்திர அருக்க விசேஷ சம்பந்தம் போலும், இவ்வாறே யந்தக்கரணகுகான்ம சம்பந்தம் பிரஹ்மத்தின் புலப்பாட்டின் காரணமாம்! சந்நிகர்ஷமாத லின் அந்தக்கரணத்தின் அவபாச ஆன்மகத் தன்மையா

னும், ஆலோகவிசிஷ்டகடாதி தோற்றுதல் போலுமாம், இங்ஙனம் புத்திப் பிரத்தியய ஆலோகவிசிஷ்ட ஆன்மாவின் தோற்றமாம், ஆகலின் புலப்பாட்டின் காரணமாய குகையிலிருப்பதென்பது பிரகிருதமேயாம், அதன் விருத்திஸ்தானீயத்திலேயே ஈண்டு மீண்டும் அதுசிருட்டித்து அதுவேபுகுந்தது என அறையப்பெருகின்றது. அதுவேஇவ்வாசாசாதி காரணம் காரியம் படைத்து அது புகுந்தது போல உட்குகையாயமதியிற் காண்போன் கேட்போன் நினைப்போன் அறிவோன் என்றிவ்வண்ணஞ் சிறப்பாகத் தோற்றுநிற்கும், அதுவேயதன் புகுதலாகும், அதனுளதாம் அதன்காரணம் பிரஹ்மம், ஆகலின் உண்மையானேயுளதேயா மெனவேயுணரத்தக்கதாமது. பிரசங்கத்தால் விரித்தது சாலும். தத்துவதரிசிகள்பிரஹ்மநிர்வாணத்தையடைவார்கள் அவர்கள் கல்மஷங்கழன்றவர்கள், சமுசயமற்றவர்கள், புலன் வென்றவர்கள், அஹிம்சையைமுக்கியமாகவுடையவர்கள், ஆவர்கள். 24

(அ - கை.) கேவலசந்நியாசத்தானே இது பவியாதாம் என்றருளல்:—

௲. ஜேதாரஃஷட்ரிபூணாம்யேஶமிநோநாஶிநஸ்தயா,
தேஷாம்ஸமந்ததோவ்ருத்தாஜாநாம்விஹாத்ரஹோ.

க. அறுபகைக் குறும்பையோட்டியகம்புல னதனை வீட்டிப், பொறிபுகும் புலன்கண்மீட்டபுண்ணியரவர்க்கிங் கம்ம, நெறிவகை தமது மெய்ம்மைநிகமமாய்க் காண்டலானே,மறைமிகும் பிரமமெங்கும்மருவினு மலருமன்றே.

வி. ஷடரீணும் = ஷட்ரிபூணும்=காமக்குரோதலோப மோகமதமத்சரங்கள் எனவுள்ளிருப்பனவாய சத்துருக்களின், ஜேதார:=வெற்றியுற்றவர், சமிந := மநோநிக்கிரக முற்றவர், ததா=அவ்வாறே, தமிந := வெளிப்புலன்களை

வென்றவர், ஆக, யே=யாவருளரோ, ஸ்வாத்மஞ்ஞானும்= தம்வடிவத்தை புணர்ந்த, தேஷாம்=அவர்க்கு, இவ்வியாவும் எவ்விவ்வான்மாவென ஆன்மாவின்கண்ணே எல்லாவடிவுண்டமையைச் சமாதியின் மாட்டு நன்குக அறிந்தவர்க்கு, ப்ரஹ்ம சமந்தத: விபாதி=விக்ஷேப அவஸ்தையிலும் யாண்டுமே பிரஹ்மமே விளங்காநிற்கும், அஹோ=ஆச்சரியம்! அவ்வாறே சுருதிஅகம் அன்னம் என்பதாதி முன்னமே யுதாகரித்தேம், வேறுமுண்டக சுருதியுங்காட்டுவாம்:—"அமிர்தமென்னுமிப்பிரமமேயகத்தினும் புரத்தும், திமிர்தல் பின்னினுந் தென்வடதிசையினுந் திவத்தும், அமர்தல் தன்னினுமகன்றது விரிந்தறிவாகி, நிமிர்தரும் வரதமமிதேநிகிலமாய்நிகழும், "பொருள்:—சோதிகட்கெல்லாஞ் சோதியாக யாதொருபிரமமுளதோ அதுவேசத்தியம், யாவும் அதன் விகாரம், வாசாரம்பணம் விகாரோ நாமதேய மாத்ரம் அந்ருதம் இதம் என்னுமிப்பொருள் விஸ்தாரமாக ஹேதுக்களுடன் பிரதிபாதிக்கப் பெற்றது, நிகமனஸ்தானீயமாய இம்மந்திரங் கொண்டு மீண்டுபசங்கரிக்கப் பெறுகின்றது:—நாதமிய இலக்கணம் வாய்ந்த பிரஹ்மமே, அறியாமைப் பார்வைவாய்ந்தவர்க்குமுன்பேபிரஹ்மமல்லாதது போலத் தோற்று நிற்கும், பின்னும் தெற்கும் வடக்கும் கீழும் மேலும் பிறயாண்டும் யாவற்றுனும் அன்னியமபோற் காரியாகாரமாக அகன்றடைந்து பெயருருப்பற்றித் தோற்றும், அதிகமாக வறைந்தென்! இவ்வுலகமுழுவதுமே பிரஹ்மமேயாம் மேன்மையினும் மேன்மைமிக்கதாம், இரஜ்ஜுவின் கண்ணேசர்ப்பப் பிரத்தியயமேய்ப்ப வுப் பிரஹ்மப் பிரத்தியய மியாவுமே அவித்தை மாத்திரத்ததாம். பிரஹ்மம் ஒன்றே பரமார்த்த சத்தியமாம் என்பது வேதாநுசாசனம். இச்சுலோகத்தில், நிட்காமகருமயோகமும் அதன் பயனுய அந்தக்கரணசுத்தியும், அதன்

பயனுடைய சந்நியாசமும் அதன் பயனுடைய ஞானமும், அதன் பயனுடைய ஜீவன் முக்தியும் குறிப்பித்தருளியவாறு உணர்ந்துக் கொள்க. காட்டியருளிய தத்துவதரிசனத்திற்கு உதாகரணம். ஞானவாசிட்டம் :—ஆதியஞ் சமிதேற்றமே என்பதாதி நான்கு செய்யுளும் முன் காட்டியவாறே யுணர்தற் பாலனவாம்.

சிவமகிம்நஸ்தோத்திரம்:—தரணிநீ மதியநீ பவனநீ தழலுநீ தண்ணீருநீ ககனநீ, தரணிநீ புருடனீ யெனவுமிவ் விதமுநின் றன்னிலே தருமை மதியா, குறையாத குறையதா முறாகவெத்தத்துவம் முலகிலேயா மறிகிலேம், கரையிலா வருளுலாம் வரதனே யெதுவலாய் கருதுதற் கரியநீயே.

அகோ என்றதற்குதாகரணம் ஞானவாசிட்டம்:—அந் தோவந்தோவிது தெரிவரிதிக்கேணி ன்றறிவற்ற, சங்கேதா டத்தையெஞ்சொல்லேன் சகலவிகாரமுஞ் சாதித்தாரி, ஞாந் தோரின் பதுன்பந்தாறே மாதிருந்ததாமிதுவே, பரங்கேதா குறையும் பதமிதுவே யுபசாந்தத்தியமிதுவே.

ஆவாவிப்போதுள்ளபடி யறியுநெறியிலென் மதிக்கே, ஞேயா விகற்பமற்றறிவன்மொழியாஞ் சிவமாகிவிட்டேனோ, தாவா தெங்குமுளதாகுந் தத்துவத்திற் சகமெல்லாம், மேவா நின்ற விராவிழுதுநற் கடலிற்றோன்றியதால்.

அபயவசாரம்:—போக்கெல்லைலாமதின்றிப் பூரணப்பூரணமதாகி, யாக்கமுமழிவுமின்றி யகரிகாமறிவைத்து, நீக்கமி லறிவானந்த நிகரிலாவெள்ளமுள்ளம், தேக்கியபாராமேன் மேற்றித்தியாமிருப்பந்தே.

சொரூபானந்த தரிசனம் :—வெளியிலுக்கொளியதாகி யுவண்மையற்றொழிவதின்றி, யளியிலுக்களியதாகி யமலபூர்ற்

றுளவிறந்து, தெளிதரத்திகழுமின்பத் தேறலைப்பருகிமேன் மேற், கனியதுற்றிடினு மாராக்காதன் மீதூருமந்தோ.

நித்யானந்த தரிசனம்:—திரையொடு கரையிறந்து திகழுநற்சொரூபமாய, வுரையறுமின்பவெள்ளத் தொடிவறமுழுந்தியார்ந்து, வரையறத்திளைத்துமாரேன் மகிழும்போதைக்கப்போதும், புரையறப் புதிதாயின்பம் பொற்புமிக் கிடுமிதென்னே.

அருணெறி விளக்கம்:—முடிவொடு முதலுமின்றி முழுதுமாய் மூலமாகி, பொடிவறு மின்பவெள்ளத் தொப்பிலாவமுதமாய, கடலினுட்டிளைத்தும் வாரிப்பருகியுங்களித்துமாரா, தொடிவிலா தாமேன்மேலு மோங்கிடா நிற்குமன்றே.

தத்துவ சரிதை:—முழுதருண்மதுரவாரி மோனமாமொழியினாலே, பெழுதருமின்பவெள்ளத் தெலையிலாவமுதந்தன்னைக், கழிவறமுகந்துகொண்டு களித்திடா நின்றுமாரே னொழிவறுமார்வமேன்மே லோங்கியே தழைக்குமன்றே.

போதார்த்நாகரம்:—ஒப்பின் மெய்ஞ்ஞானவின்பப் பிரமமாமுத்தியென்னுஞ், செப்பருமமுதமாய தெளிவினுட்டிளைத்து மூழ்கி யெப்பொழுதினு மெக்காலு மிடையறாமுகந்துகொண்டு, மப்பொழுதைக்கப்போது மாராமலினியவாறே.

போதசித்தி:—அந்தமோடாதியில்லாவமல நற்சிவமதாய, நந்தலினுணர்வதாகு நலமிகு மமுதைமாந்திப், புந்தியூன்மயிர்க்காலெங்கும் பொழுந்துதேக்கிட நின்றாலு, மென்றனக்காராதார்வ மெலையறமிருக்குமன்றே.

சுவானுபவசித்தி:—கலைகளுக்கிதூரமதாய் மிருகறைமாறத்தெளிவா யெனுணுண்மேவிய, நிலைதனைத்தெளியார் மன

ப்ருக்ராணமத்தியில் திருஷ்டியை = பார்வையை நிறுத்தி, அதன்பின்னர், ப்ராணுபாமபராயண :—பிராணன்களின், ஆயாமத்தில் = நிக்கிரகத்தில், பராயணன் = தன் மாத்திர பாணுயுள்ளவன், ஆஸ்தே = இருப்பன் நன்குரானுற ஆசனத்திலுட்கார்ந்து ப்ருக்கிராணமத்தியில் திருஷ்டியை நிறுவிப்பிராணுயாமத்தைப் பயிலவேண்டுமென்பதாம்.

இதனையே ஸ்ரீ பகவானிவ்வாறருளுவர் :—காவல்செய்தைந்து புலன்கணிரண்டு, மேவவிரும்புருவத்திடைவிட்டிட், டாவகை நின்றவ பானபிராண, னேவலினின்றி யியக்க மறுத்தே.

அஞ்சபொறித்திறனுசையடக்கா, நெஞ்சுபயத்தொடு கோபமும் நீக்கா, வெஞ்சுதிறத்தலில் யோகிகள் காணு, முஞ்சுபுறப்பிடர்யாவு முதிர்ப்பார்.

சப்தாதிகள், இராகவயத்தானே சுரோத்திராதி வாயிலாக அவ்வவ்வாகார விருத்திகளானே உள்ளே புகுகின்றன அவற்றை வைராக்கியத்தானே வெளிப்படுத்தவேண்டும், இதனுனே யோகத்திற்கு முதற்காரணம் வைராக்கியம் என்றறியவேண்டும், இவ்வாறு வெளிப்படுத்தியபின் யோகியானவன் தனக்குத்தக்க ஆசனத்தில் நிமிர்ந்து செவ்வேயுடலுஞ் சிரமுங் கழுத்துமுற அமர்ந்து, விழிகளைப் புருவத்திடையில்விட்டு, முற்றினும் நேத்திரங்களை மூடிக்கொண்டால் நித்திரையானே மனம் லீனமாம், திறந்துவிட்டால் வெளிப்போதலானே விக்ஷேபமுண்டாம், அவ்விருதோடங்களின் பரிகாரப்பொருட்டு அறைத்திறப்பாய் நாசாக்கிரபாகத்தில் திருஷ்டியைவைத்து, உசுவாச நிசுவாசரூபமாக நாசியுட்சரிக்கும் பிராண அபானன்களைக் கும்பகத்தானே மேற்கீழ்க்கதிகளைத்தடுத்துச் சமப்படுத்தி; அல்லது பிராணன் வெளிப்போகாதபடியும், அபானன் உட்போகாதபடியும்,

புண்டரீகவாதனத்திற் புத்தன்போலுத் தரமுகனு, யண்டமிரண்டு மிருகுதிமேலாக்கிப் பிரமாஞ்சலிபண்ணி, மண்டுகின்றவாதனையின் மருளு மனத்தை மீள்வித்துத், தண்டலில்லா நிருவிகற்பசமாதிப்பொருட்டிவ்வகை நினைந் தான். (26)

(அ - கை) பிராணாயாம இலக்கணமருளல் :—

சு. ப்ராணாயாமஸந்தோஷம்ப்ராணாபாநஸமுத்பவம், ஸம்ரோதம் ப்ராணாயாமம் விபஶ்சித:

க. உற்ற பிராணவபானனுதித்த, நற்றடையே வுயிரிற்றடையாகும், முற்றதும் மூவகையாக மொழிந்தார், பற்றிலமாமுனி பண்டிதரன்றே.

வி. பிராணாயாமந்து = பிராணாயாமமென்பதோ; பிராணபாந சமுத்பவம் = பிராண அபானன்களினின்றும் உற்பத்தியையுடையதாகிய,சம்ரோதம்=பிராண அபானன் களின் ஐக்கியமாம்;ஐக்கியஞ்சமபாதித்து எச்சம்ரோதமுள தாமோ அது பிராணாயாமம் என்பது பொருள். பிராண அபானன்கட்கோ நாபிதேசத்திற் கிரந்தியுளதாம், அதி னின்றும் மேனுடியால் முகநாசிகைவாயிலாக வெளிச்செல் லும் வாயு பிராணனும், அந்நாபிதேசத்தினின்றே கீழ்நாடி மார்க்கங்களாற் கீழே நோக்கி வாயுமார்க்கத்தானே வெளிப் போம் வாயு அபானனும். ஆண்டுப் பாயுத்துவாரத்தைக் குதியானடைத்து அபானனை மேன்முகப்படுத்தி, பிராண னையும் பூரகத்தானே வெளிவாயுவை யிழுத்து அதோ நயனகதி ரோதத்தான், இரண்டையும் பரஸ்பரம் சம்முகப் படுத்தி, ஒன்று படுத்திய அவற்றின் நிரோதமியாதோ அது சம்ரோதமென்பது கருத்தாம். தஞ்ச = இவ்வகை யாம் பிராணாயாமமான அதனையே, காலப்பிரமாண பேதத் தானே, விபச்சித:=பண்டிதர், முநய: = பிராணாயாம

சம்பேரோதத்திற் பன்னிரு முறை பிரணவ உச்சாரணம் எக்காலமோ அது லகுப்பிராணாயாமமாம். ப்ரமாணபேதத: = அளவையின் வேற்றுமையானே, லகும் மத்யமம் உத்தமம் வித்தி = லகு மத்திமம் உத்தமம் என வுணர்தி, தசபி: த்வி அதிகை: வர்ணை: = பன்னிரண்டு வர்ணங்களானே; பிராணாயாம: லகு: ஸ்ம்ருத: = பிராணாயாமமானது லகு வென்றெண்ணப்பெறும், 28

ச. சதுர்விம்ஶத்யக்ஷரோ மத்யமோ ஜ்யாயான் ஸமாக்ஷர:
ஷட்த்ரிம்ஶத்வர்ணகைருத்தம: ஸோऽபிஹிதஸ்ததா.

க, பத்தினொடிருபத்து நான்கக்கரம், மத்திமமென மாதவரோதுவர், பத்தினொடிருபத்தாறனுடனெழுத், துத்தமமென வோதினர் வேதனர்.

வி, அதனினும் இருமடங்கு காலம், சதுர்விம்சதி அக்ஷரா: யா: = இருபத்துநான்கு முறை பிரணவ உச்சாரண வரைவது யாதோ, அது, மத்யம: சமுதாஹ்ருத: = மத்திமம்மென மலரப்பெறும். ஷட்த்ரிம் சத்லகுவர்ண: யா = முப்பத்தாறு லகுவர்ணமியாதோ, உத்தம: ஸ: அபிஹிதே = அது உத்தமமென வோதப்பெறும். இங்ஙனம் லகுப்பிராணாயாமத்தில் எத்தனைக் காலங்கள் பிரணவங்கள் உச்சரிக்கப்பெற்றனவோ அத்தனைக் காலங்களால் முப்பத்தாறு பிரணவங்களானே உத்தமப்பிராணாயாமமாம், ஆண்டெச்சந்தர்கட்கு இரண்டு மூன்று மாத்திரைப்பிரணவங்களானே சருவப்பிராணாயாமங்களும் ஆம். சத்த சந்தர சந்ததமர்கட்கு, தார தாரதர தாரதமங்களானே அவ்வயாம் இதுவும், லகுவர்ணமென்பதனானே குறிப்பிக்கநாப்பெற்றது. அதலியருளியவற்றின் பயிற்சியின் முதிர்ச்சியை உத்தாலகரிடத்தே காணலாம் :— தேங்கீது தன்வசமாய் விரிந்த புந்திச்செயலாலே யிவ்வாறு

இனிது சாதித்தல் வேண்டும். சார்த்துலகம் துஷ்டவியாக்கிரம், பிராண அபானன்களை மிருதுவாக்கி நன்கு சாதிக்குக பிராஞ்ஞன் என்பதாம். (30)

(அ - கை.) பிராணன் வெற்றியாகக் குணங்களை யருளல்:—

சு. [illegible]
[illegible].

க. மன்ன வின்னல வர்வனவாசிகட், குன்னவின்னலுலகவயத்தினர், அன்னவண்ண மறஞ்சுடுமாசுகந், தன்னவன்றனுவைச் செயதம்பனம்.

வி. தே=பிராணனை வெற்றி கொண்டவர்கள், சர்வபூதங்களிலும் ஒரேபிராண தேவதையை யெண்ணித்தம்மைப்போன்றே, ம்ருகாந்= ஆரண்யத்துள்ள மிருகங்களையும், நபிடயந்தி=முற்றிலுமே பிராணஹிம்சையைச் செய்யமாட்டார்கள். "தேவகாரியம் பிதுர்கார்யம் ஹவ்யகவ்யங்களிற் புகழ்பெறுவன, ஆதிபாடீநஆயிரம்பல்மீன்செங்கயல் ரோகிதங்களையாவன "என்னும் சாஸ்திரத்தானே சிராத்தாதிநிமித்தமாகப் பிராணிவதஞ் செய்யத்தக்கதென வேற்பட்டபோதிலும், செய்யமாட்டார்கள். அஹிம்சையையே அதனிலும் அத்தியந்தம் அதிகமாக எண்ணியிருப்பார்கள். அவ்வாறே பிராணவித்தையின் வலுவானே, லோகாந்= இந்த்ரியாதி போக்கியப் பொருள்களை, வஶ்யங்கதாந்= சுவாதீனத் தன்மையைச் செய்தவர்களா யிருந்தபோதினும் ஹேந்ருப=ஹேநரரக்ஷகனே! பீடைசெய்யவேமாட்டார்கள். "ஆதங்கமற்றவைக் காற்றுதொழியின் பூதங்கள் போகம் பொருந்துறுமென்ப" என்னும் நியாயத்தானே, அப்போகத்திலும் ஹிம்சைக்தோஷம் காண்பவர்களாகி வெறுமலடைவர்கள், அதன்கண்ணே துவையருளல்:— தக்தி வாs:

ததாவாயு:—"பாவத்தின் பலனேபலவிழைபான்மை" என்னும் மிருதியினுனே, எல்லா ஆசைகளுமே பாவத்தின்பயனேயாம். அத்தைகய ஏனமென்னும் பாவத்தை, வாயு—வானது, பிராணவாயுவை யோகியர் நன் காராதித்திருக் கின்றபடியினாலே, அவ்வாறு தகிக்கும் எவ்வாறு அதனது ஆசைப் பான்மை யெப்போது மேயெழாதோ, ஆகலின், "பிராணுயாமங்களினாலே பெரிதுதகிக்குகபாவத்தை" என்னுஞ் சாஸ்திரத்தானே பாவங்கள் பஸ்மாக்கப்பெற்ற பிராணிகட்கு பேர்க இச்சை யுண்டாகமாட்டாதென்பதாம். அற்றேல், யோகிகட்கு ஸ்மிருதிலோபாதி தோடங்களும் ஸ்மரிக்கப்பெறுகின்றனவாகலின் யாங்ஙனம் பிராணுயாமத்திற்குத் தீவிர வைராக்கியகாரித்தன்மை வருணித்தல் கூடுமெனக்கடாவ அருளல் :—ஸம்ஸ்தப்தாஙசதத்தநும்=அந்தப்பிராணுயாமபரனுடைய, தநும்=தேகத்தை மனத்தோடுகூட ஸம்ஸ்தப்தாவாகாதாம் வாயு, 'நன்றாகயோகியானே பூசிக்கப் பெற்ற பிராணனுனது யோகியினுடைய சித்தத்தையாதல் சரீரத்தையாதல் ஸ்தம்பனஞ்செய்யமாட்டாதாம். ஸம்ஸ்தப்தா என்பது வருங்காலத்தை யுணர்த்தும் லுட்டந்தத்தின் படர்க்கையொருமைவடிவமாம். ஸ்மிருதிலோபாதிகளோ பிரமத்தயோகிக்கே பீடைசெய்யும், முற்றினுமொருமையுற்றுனையொன்றுமே செய்யாதாம்.

இத்திருவருளின் கருத்தேபோலும் புசுண்டர் அனுட்டானமும் காணப்பெறுகின்றது :—

எனது மனம் பிராண சமாதியினுற் சொன்ன விவ்வொழுங்கானின்மல தத்துவத்தே யென்றுங், தனியிடர் தீர்நெறியிதுவா மிந்தநோக்கங் தனைப்பற்றிச்சென்றதுமேல் வருவதெண்ணே, எனிநிகழ்காலத்தியல்பினண்ணுகின்றே றுனிதுபெற்றேன் பெறுவதிதுவென்றெண்ணேன், முனி

வரனை யதனாலே நோயொன்றின்றி முடிவறுநீடுயிர் பெற்றேன் மோகமற்றேன்.

சுகமுற்றோர்பாலிருக்கிற்சுகமேசேர்வன் றுயருற்றோர்பாலிருக்கிற்றுயரேசேர்வன், சுகமுற்றநட்பாவேனாதலாலே தவறுறுநோயற்றுவிதனைமுழத்துவாழ்ந்தே, னுகவுற்றவாபத்திலனைசயேன்சற்றுமுயர்சம்பத் திற்சுகத்தோர்க் குறுநட்பாவே, னகமற்றவதனாலேநோயொன்றில்லாவாருயிர்பெற்றிருக்கின்றேனையவென்றான். 31.

(அ - கை.) இன்னணம் பிராணாயாமத்தின் அவாந்தர பலத்தையருளித் திருட்டாந்தத்துடன் அதன் விருத்தியை விதித்தருளல் :—

ஈ. யதா யதா நர꞉ கச்சித் ஸோபானாவலிமாக்ரமேத்,
ததா ததா வசீகுர்யாத் ப்ராணாபானௌ ஹி யோகவித்.

க. எந்நெறித்திறத்தேறுவனோர்நரன், பன்னெறிப்படிமாலையிற் பாரினி, லந்நெறிக்கட்பிராணவபானனை, நன்னெறிப்படுத்தும் யோகநாதனே.

வி. கச்சித்நர꞉ = ஒருமநுடனானவன், யதாயதாசோபாநாவலிம்ஆக்ரமேத் = எங்ஙனமெங்ஙனம் படிமாலையைக்கடப்பனோ, ப்ராணாபானௌஹியோகவித் = பிராண அபானன்களின்தத்துவங்களைத் தெரிந்தயோகஞானியானவன், ததாததாவசீகுர்யாத் = அங்ஙனம் அங்ஙனம் அவ்விரண்டையும் வயஞ்செய்க. படியேறுவதுபோலப் பிராணஜயகக்ஷியானும் உத்தரஉத்தர முறையானேயே விருத்தியாகுக. விருத்திமுறையை உண்மையாக வுணர்ந்தவன் இவ்வாறே புரியவேண்டுமென்பதாம். கீழ்ப்பந்தியிலிருக்கும்பிராணாயாமியானவன் அகஸ்மாத்தாக உத்தரபந்தியையேற அருகனாகான்,

அதனுரோகப்பொருட்டு முயல்பவனே அவசியம் வியாதி யாதியானே பாதிக்கப்பெறுவன் என்பதுபொருள். 32.

(அ - கை.) இதற்கே விசேடத்தையும் அதன் பயனை யும் கூறியருளல் :—

சு. ததஃ பூரகம் கும்பகம் ரேசகம் ச ஏவ அப்யஸேத், அதீதாநாகதஜ்ஞாநீ ததோ லோகே பவேத் ஸ்வயம்.

க. கூறுபூரகங்கும்பகம்ரேசக, மேறவேபுரிவானினி யேய்வன, மாறிலாமன்மறைந்தனவையயமீ, தாறதாயெவை யும்மறிவானரோ.

வி. ததஃ = அதன்பின், பூரகம்கும்பகம்ரேசகஞ்சஏவ அப்யஸேத் = பூரகத்தையும்கும்பகத்தையும்ரேசகத்தையுமே பயிலுக. ததஃ = அதன்பின், அதீதஅநாகதஜ்ஞானீ = சென் றனவருவனவற்றையுணரும் மகானுக, ஜகதிதலேஸ்யாத் = இவ்வுலகிலாவன். பூரகம் = நாசிப்புடத்தால் வெளிவாயுவின் ஆசமனமாம், முதலிற் செய்யவேண்டிய திதுவே, "இடை யாற்குடியெட்டிரண்டாற்பவனம்" என வுரைத்திருத்தலின். கும்பகம் = மாந்தியவாயுவையுள்ளேமன்னவைத்தலாம், ஷடு பத்தொடு நான்கதனுல் வெளியாம், ரேசகம், விடுபிங்கலை யின் மெதுவாப்பதினே, டுடுபத்தொடுபத்தொடிரண்டிரு கால். இவ்வண்ணம் பயின்றவனுக்குப் பலத்தை யருளல்:— அதீதமென்பதாதி. 33.

(அ - கை.) இதற்கே விருத்திக்கிரமத்தையருளல்:—

சு. ப்ராணாயாமோ ப்ராணாயாமோ த்ரிவிதஃ ஸ ப்ரகீர்த்திதஃ, யோ மந்தமத்யோத்தமதா ஸ்வரஜ்ஞாநீ ஸ்யாத்ஸ்ஸ வை ஸதா ஸஹ ஸஃ.

க. உத்தமவுயிர்த்தடையொன்றிபத்தொன்றிஞன், மெத்தமின்றுரணமதமெய்யோகமோ, வைத்திருதாரணை வரயோகிசனே, அத்தைநித்தியம்பயிலருமையாளனே.

வி. உத்தமை: = முப்பத்தாறுபிரணவமுடையவற்றுனே, த்வாதசபி: ப்ராணுயாமை:=பன்னிரண்டுபிராணுயாமங்களால், தாரணுமதா=ஒரித்தாரணைவாயுவிற்குச்சம்மதமாம். இத்துணையானே பிராணுயாம அப்பியாசத்தானே யோகி மூலாதாராதிஸ்தானங்களில் யாண்டியாண்டு வாயுவைத் தரிக்கச்செய்ய விச்சிக்கின்றுனே ஆண்டேயதனைத் தரிக்கக்கூடியவனுவன், யோகஸ்துதாரணேத்வேஸ்யாத்= யோகமோதாரணையிரண்டுறில்ஆம், இதுவே இருமடங்கப் பசிக்கப்பெறின் அத்யந்தம் சுதந்தரமாய யோகியாவன், அதன்பின்போ பக்ஷம்மாசம்அதிகமாயேனும் சகலவாயுவை நிறுத்துவதற்கு முடிந்தவனுவன். அதனைச் சந்ததம் பயில்பவன் யோகீசனுவனுகலின் எப்போதுமதனையே பயிலுக.

(அ - கை.) இதன் பலத்தை யருளல்:—

சு. ஏவம்யஃகுரு தே ராஜந்ஸத்ரிகாலஜ்ஞஃஸஜாயதே,
அநாயாஸேந தஸ்யஸ்யாத்வஸ்யம்லோகத்ரயம்ந்ருப.

க. இன்னணமெவன்செயுமவனெக்காலமு, மன்னவவறிகுவனவனுக்கேவயம், இன்னலொன்றின்றியிவ்வுலகமியாவையும், நன்னயம்பெறவருநரர்தம்பாலனே.

வி. ஹேராஜந் ஹேநருப!=ஹே, எங்கும் கீர்த்தியோடிலங்கும் நரபாலனே! ஏவம்=இங்ஙனம், ய:=யாவன், குருதே=செய்வனே, ஸ=அவன், த்ரிகாலஜ்ஞ:=முக்காலத்தையும் உணர்பவனுக, ஜாயதே=ஆவன், தஸ்ய=அவனுக்கு, லோகத்ரயம்=மூவுலகமும், அநாயாசேந=ஆயாசமியாதொன்றும் இல்லாமலே, வஶ்யம்ஸ்யாத் வசியமாகும். அற்றேல், கேவலம்பிராணஜயத்தினுற்றுனுதல், தாரணைகளாற்றுனுதல், மூன்றுகாலத்தையுமுணருந் தன்மையேனும் சகல பிராணி வசியத்தன்மையேனும், உண்டாகாதாம். பிராணுயாமங்களினுற் பாவஞ்சுடுகை, தாரணைகளினுற் குற்றங்

ஸந்ந்யாஸிநோ ஜகத்ஸர்வம் பஶ்யந்தி ஸ்வாந்தராத்மநி,
ஏவம் யோகஶ்ச ஸந்ந்யாஸ: ஸமாநபலதாயிநௌ.

க. தன்னிதயக்குகைதன்னிற்றுஞகவிருந்தொளிரின், பென்னுசிவமலதெவையுமிலதெனவேகாணுவர்மற், றின்னவகையோகமதுஞ்சந்யாசமென்பதுவும், பன்னுசமபயனளிக்கும்பண்புடையவெனவறிநீ.

வி. சந்யாசிகளோ, ஸ்வாந்தராத்மநி = தமது அந்தராத்மாவின்கண் = இருதயபுண்டரீகத்தினுள்ளே, இருதயாகாசமெனப்பெயரிய பிரஹ்மத்தில், பிரஹ்மரூபம் = பிரத்தியக்கநன்னியசொரூபமாக, ஜகத்சர்வம் = எல்லாவுலகையும், பஶ்யந்தி = காண்பர். இங்ஙனமிதுஞானபலமெனவருளலாயது. இவ்வாறு இயம்பியருளிய யோகஞானபலன்களின் ஒருமைபற்றியே அவைகட்கும் ஒருமையாம் என்றருளுகின்றார்:—ஏவம் = இவ்வாறு, யோகஶ்சசந்யாச: = யோகமும் சந்நியாசமும், சமானபலதாயிநௌ = ஒப்பான பலனையே உண்டாக்குவனவாம். ஈண்டுச் சந்யாசசப்தத்தானே உபசாரமாக ஞானமுரைத்தருளப்பெறுகின்றது, "விடுபவரிந்தவுலகையேவிரும்பிவிட்டொழித்திடுவர்"என விவிதிஷா சந்யாசத்திற்கு ஆத்மஞானப்பொருட்டாந்தன்மையுண்மையின்; "அவ்விவ்வான்மனையறிந்தேயந்தணர், செவ்வியசுதனவாசெல்வவாவிட்டுப், பவ்வியமெனவே பயிக்கமேற்றயில்வர்"என வித்வத் சந்நியாசத்திற்கும் பிரஹ்மஞானபரிபாகப்பொருட்டாந்தன்மையுண்மையின்; இரண்டினுக்கும் சந்யாசத்தாலினிது கவரப்பெறுந்தன்மையேய்தலின், சந்யாசபதத்தால் ஞானஞ்சாற்றியருளப்பெற்றது; பெறவே, யோகம் ஞானம் என்னுமிருபமும் சமானபலமுடையனவென்றருளலாயதென்றுணர்க.

௯. எவ்வுயிர்தமக்குமெத்தவிதமதே புரியாநிற்பேம், எவ்வினைதமக்குமோவ்வும் பயன்றனையீயாநிற்பேம், செவ்விதேவெம்மைக்கண்டு வீட்டினைச்சேர்கவென்றான், பவ்விய வுலகமூன்றும்படைத்தளித்தழிக்கும்பாலன்.

இருக்கினிலிருக்குமருக்கமழ் பொருள்களியாவையுமி யாவருமுணர்வான், றிருக்கமழிறைவன்றனக்குமென்றனக் குந்திருமருமார்பனார்தமக்கு, முருக்கமுள்கீதையருளியே பொருளையுரையென விரிக்குமாறுரைத்தான், றிருக்களரி றையுமிறைவியுந்தவத்திற்றிகழ்தரப்புகழ்தருந்தேவே.

ஓம்தத்சத் திதிஉபநிடதார்த்த கருப்பம்வாய்ந்த
ஸ்ரீமத் கணேசகீதையென்னும் யோகாமிருத அர்த்த
சாஸ்திரத்தில், ஸ்ரீமதாதி கணேசபுராணத்தினுள்ள
ஸ்ரீகஜாநந வரேண்யசம்வாதத்தில் த்வைத சந்யாச
யோகமென்னும் நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

வி. தற்போது பாவங்கெடுக்கும் தீர்த்தாதிகளின் சிருஷ்டிகருத்தாவோ தேவரீரெனின்? அல்லவாம், மற்றே, ஜந்தூனும்ஹிதகர்த்தாரம் = எல்லாப்பிராணிகளின் இத கருத்தாயாம், கர்மணாம்பலதாயிநம் = மகமுதலனவற்றின் பலதானசீலமுடையேம்யாம், கேவலம்ஜடமாயகருமத்தானே பல உற்பத்திசம்பவியாதாம், மற்றே, அதனானே மகிழ் வுறுத்தப்பெற்ற எம்மானேயுண்டாம், இத்தகைய, மாம் = ஸ்ரீகணேசராகிய எம்மை, ஞாத்வா = நன்குணர்ந்து, முத்திம் = சருவ அநர்த்தநிவிருத்திபரமானந்தப்பிராப்திவடிவ மோக்ஷத்தை, ஆப்நோதி = அதிகாரியடைவன். எத்தகைய எம்மையெனின் அருளல்:— த்ரைலோக்யஸ்ய ஈஶ்வரம் விபும் = மூவுலகங்களின் நியந்தாவாயும், விபுவாயும், அந்

தர்பாமித்தன்மையானும் அரசன்போல்வியக்குந்தன்மை யானும், இலங்குமெம்மை யென்பதாம்,

ஜடம்பலந்தராதென்பதுசிவமகிமையினும் வெளியாம்:— யாகங்களுநறங்கிளு நீபலனையாகர்க் கருள்வான்கொலுறங்கு கிலா, யேகன்றனையாதரியாதழியுமேலுங்கருமம்பயவியான்ற டுதரும், பாகுன்றனையாகபலந்தரவே பாடுங்குறியாயுனி வேதமதி, லாகும்பெருநேயமடைந்துலகேயாம்பாவைறத் தொழிலிற்செயுமே. கடவுளே பலதாதாவென்பதுபெற்றாம்.

ஆண்டே கடவுளை யநாதரவு செய்யப் பாதகம் வந்த மையும் வெளியாம்:—கிரியையில்வலவன்பிரசைகட்கதிபன் கிருதுவின்பதிதக்கனவையோர், சாரிருடியருமகம்புரிபவ ராய்த்துலங்கியுங்கிருதுவின்பயனைத், தருவதில்விசனவெறு முனின்மகத்தைத்தவிர்ந்தனர்சரணமேகருவோய், அருவ நிற்சிரத்தை யிலதுசெய்மகமுந் துயரையேயதருந் தடங்கரு வர்க்கே.

இரண்டனுள் ஒருநெறியானே தத்துவஞானமா மென் பதற்குதாகரணம் ஞானவாசிட்டம்:—கருதும்பிராவித்தமா றறுக்கயோகப்பெயராமியூகந்தா, னிருமையுண்டாமெய்ஞ் ஞானமேகமுயிரின்றடையேகம், வருமிவ்விரண்டினியோகப் பேர்மருவுமெனினு முயிர்க்கடைக்கே, பெருகவுரித்தாமி யோகப்பேர்பிறைகபாணியுரைத்ததுவே.

யோகமொருவற்கரிதாகுமொருவற்குண்மையறிவரிதா, மாகவிவற்றின்மெய்ஞ்ஞானமறும்பேதன் யோகவடையினி க்கே, ஞகவமுதங்கருமொருசரிதையுமாக்கேறுநெறுதகான், மேகவூர்தியவையத்தேவின் மேனார்முனிவருடனிருந்தேகள்.

சித்தநாசத்தினெறியிரண்டு யோகமுந்தெளிந்துநாவமு மாகு, மொத்தயோகந்தன்மனத்துறவொழிவினொரு வழிப்படுமாற்றல், சுத்தஞானந்தானலம்பெறக்காண்பதாங்

தொடர்மனமேதென்னின், மெத்துமாகமபூடணருணைத்தது விசையுயிரசைவாகும்.

சுருதியுமுளதாம்:—எத்துணையிருதயத்திரிந்துசாம்புமோ, வத்துணைமனந்தனையடக்கவேண்டுமால், இத்துணை ஞானமுந்தியானமென்பதூஉம், வித்தாரம்நூலதன்விளம்பும் வேறதே. என்னுமிவ்வமிருதபிந்துஉபநிடதத்தில் ஞானத்தானுதல் தியானத்தானுதல், சித்தக்ஷயத்திற்கே பரமபுருடார்த்தத்தன்மைக் கூற்றிருத்தலின்பொருத்தமே யுரைத்தருளப்பெற்றது. ஸ்ரீவசிஷ்டபகவானால் சித்தநாசத்தின் நெறியிரண்டென்பது.

இதனானே சித்தநாசமே மோக்ஷ முக்கியசாதனமென வறியலாம்; இதுவும் ஞானவாசிட்டத்தே வெளியாம்:—சங்கற்பசாலந்தவிர்ந்தானுபசாந்தமாகித், துங்கப்புவியாவையுமாகியசோதி தோன்றும், இங்கற்பமுங் காண்பனவில்லை வெறும்பொய்யென்று, லங்கப்பொழுதவ்வறிவாலதுசேர்தலாகும்.

இரும்பாலிரும்பு திருந்துவபோ லியற்றுமனத்தான் மனந்திருந்துந், திரும்பாநிராசைவடிவாகிச்செறியுந்தன்று லியற்றுவதாய், விரும்பாநின்றோர்க்கெளிதானவெய்யமனத் தினுபசாந்தி, பெரும்பாரந்தீர்நற்கதியாம் பிறிதோர்கதியு நன்றுகா.

வாவுமனத்தையசங்கற்பவாளாலறுக்கினிறைந்தெங்கு, மியாவுமதுவாம் பொருடோன்று மிந்தவழிநின்றறிவாலே, மேவுமனத்தைவிழுங்கியதின்மேலாமாயாவிகற்பமெலா, மோவுமியாலறிவுகட்டுந்துளத்தைவிழுங்கும்பொருளுணர்வாய்.

வருந்திமுயன்றுமனந்தன்னைமறுற்றியில்லையுண்டென்று, திருந்தபதத்திலிருந்திடுவாயிடர்தீர்செல்வமிடரின்றிப், பொ

ருந்தவேண்டுமெனவென்றாற் புவனமூன்றுங் காரும்பாருந், திருந்தவினி தென்றனவெல்லாந் தீதாய்த்தோன்றின்மனமாளும்.

சித்தவிண்ணிற்றிகழறிவாந் தியானத்தாலேயறிவென்று, மொத்தபடையாலேயமறவுளத்தை யடர்ப்பாயறுத்ததற்பின், மெத்துதுயர்போமவனிவனைமேவுமென்னுமத்துவித்து வாய், வைத்தவிவையேமனமிதனை மறப்பாய்வாளாலறுத்திடுவாய்.

பெருகத்திரண்டமுகிலெல்லாம் பெருங்காற்றாலே பொருவுதல்போல், வருகற்பனைநாசத்தாலே மனம்பாய் வீழ்ந்தறு மனமிறந்தாற், பொருகற்பாந்தமாருதமும் பொங்குகடலும் புவியனைத்து, முருகச்சுடுமென் மிருகதிருவொருகாலமிறு மிடருண்டோ.

அலையுமந்த மனமூலகாமலைவுபோகின்மனமகெடின், நிலையேதவமுநூற்கருத்துநிலைவினைத்துமலியொருநாங், காலை விலைவேமனமாயைதொடர்வாதனையுந்தன்பெயராம், மலையுமனமுமதுவதனைமாறுவிசாரத்தான்மாய்ப்பாய்.

உள்ளினும்புறத்துமெழுங் கற்பனைகளுடனொருப்படினவா, யெள்ளருந்தவங்கள் கற்பகோடிகளியற்றினும்பாதலம்பூமி, தள்ளருந்தாங்கமேவினுமுழவாக்குச்சாற்றுசங்கற்பமாய்வல்லாற், றெள்ளியபரமபதத்தினைமேவத் தியக்கமிலுபாயம்வேறில்லை.

துயர்களும்விகாரங்களுமிலாப் பிரமசுகஞ்செய்சங்கற்ப நாசத்தை, முயலுதிசனிசங்கற்பமாங் கயிற்றின் முடிவுறு பாவனையெல்லா, மியல்புறக்கோவையா லெழுமக்கயிற்றின் றினையெள்ளினிலறுத்தான், மயல்கொள் பாவனைகளெங்ஙனே தூளாய்மடியுமோவறிகிலைமைந்தா.

துனிசெய்சங்கற்பமின்றி முன்வந்துதோன்றியதொழில் வழிநிற்பாய், பனிசெய்சங்கற்பமாண்டிடி லறிவுபார்வைக ளனைத்தினும்பற்றுத், தனியுயர்பிரமபதமடைந்தகிலவிகற்ப மாந்தனையெலாந்தள்ளி. யினியனுயோகத்துவத்திலேசுழுத்தி யிதயமுற்றின்பமேபெறுவாய்.

அறிவெனும்விதைசங்கற்பமாமுளையா மனையசங்கற்ப மாந்தன்னைப், பிறிவுறத்தானே செய்துதான்பிறக்கும்பெரி துறவளர்ந்திடுந்தானே, செறிதுயரொழியவின்பமொன்றில் லையாதலாற்செப்புசங்கற்ப, நெறியுறநினையேனிற்புறுநிலை யினிமிடமும்பாவனைநினையேல்.

இவ்வளவானபாவனையாலேயின்பமா மினையசங்கற்பந். தவ்வுறப்பெரியமுயற்சிகள்வேண்டாந்தாக்குபாவனையெலா மொழித்த, வவ்வகையாலேயிறந்துபோந்தன்னெஞ்சலர்வுறு பூவினைக்கசக்கிற், கைவருவருத்தமொன்றுளதாகுங்கழறிய விதற்கதுவேண்டா.

எழுந்தசங்கற்பபாவனைவிட்டா லிறந்துபோமிதனையிங் கிதனு, மெழுந்துறமாய்த்துமனத்தினுன் மனத்தையறுத்து நின்னறிவினிநிற்பா, யுழுந்துருள்பொழுதின் முடியுமீதரி தோவுலகமும் வானமுமொக்கு, முழுந்திய பொய்யாய்ப் போம் விகற்பத்தான் முளைத்தவையன்றி முன்னிலதால், இவைபோன்றவை யூகித்துரைத்துக்கொள்க.

இப்போது நுதலிப்போந்தருளிய யோகார்த்தங்களின் றெளிவின்பொருட்டு அமிருதநாதாதிகளி லிருந்து சிறிது எடுத்துதாகரிப்பாம்:—பிரஹ்மசரியாதி தருமங்கள்வாய்ந்த ஒரு அதிகாரி ஏகாந்ததேசத்தே நன்காசனம்புரிந்து பது மாதிமுறையிலிருந்து அக்கரணதோடமும் புறக்கரண தோடமும் அகலும்பொருட்டு ரேசகபூரககும்பக அனுஷ்ட டானஞ்செய்க. அதுவும் பிரணவாதி மந்திரங்களுடன்செய்

தல்வேண்டும். பிராணவாயுவை ஆதாரசக்கிரத்தினின்
குண்டலினீமார்க்கமாய் மேலே செலுத்தி நாசிகை
லாய் வெளியாக்கித் தேகவெளி யாகாசத்தே இலயம்
தல் ரேசமாம். கமலத்தண்டின்வாயிலாக நீரையிழுப்ப
நிகர்ப்பத் தேகபாகியத்திருக்கும் வாயுவை நாசிகை
லாய்த் தேகத்துள்ளேயிழுத்தல் பூரகமாம். காய்ந்த கன்
பட்ட நீர்த்துளி இலயமடைவதேபோலப் பிராணவாயு
உட்கதியையும் வெளிக்கதியையுந்தடுத்துத் தேகத்துள்
யே இலயப்படுத்தல் கும்பகமாம். சப்தாதியைச் சுரோ
ராதியில் ஏவும் சஞ்சலமனத்தை ஆன்மவிசாரத்தாற்
துச்சுரோத்ராதியைத் தடைப்படுத்தல் பிரத்தியாகாரம்
எல்லாம் ஆன்மரூபமெனக் கண்டு இந்திரியங்களை வ
டுத்தலாம். யாஞ்ஞவற்கியமுனிவரும் இங்ஙனியம்பி
னார்:—திகழ்தருயோகி யெவ்வெத்திருசியந் தம்மை
னும், புகழ்தர அவைகடம்மைப்பூரண சிவமெனன்
நிகழ்தரக்காணும்யோகநெறியினின்றமேலோர், இகழ்
பிரத்பாகாரமென்றிதையியம்பினரால். வேதத்தினின்
பாகியமதத்தைவிட்டுச் சர்வவேததாற்பரியத்தை விட
படுத்தி அந்தர ஆன்மவஸ்துவைச் சிந்தித்தல் தருக்கம
ஆராய்ந்து மனத்தை அந்தர ஆனந்த ஆன்மாவில் நி
அசைவறுத்தல் தாரணையாம். தாரணைசெய்ததன்
விஜாதீயவிருத்தியின்றிச் சஜாதீயவிருத்திப் பிரவா
தைத் தைலதாரைபோலச்செய்தல் தியானமாம். ஆன
னந்தத்தின் மூழ்கித் தியாதாதியானம் தியேயம் என்
துவைதத்தின் அநாதரவாம் அவஸ்தையே சமாதியா
இவையாறும் யோகத்தின் அந்தரங்கசாதனங்களாம். யோ
யானவன் அச்சஞ் சினம் ஆலசியம் அவசியம்விடவேண்டு
நியமித்து ஆக்கிரமித்திரைகொள்க. பிராணாயாமஞ்செய்யுமு
பெரியோர்கள் கூறுவது இதுவாம்:—முதலில் தனதுவல

நாசியை விரலாற்றடைப்படுத்தி இடதுநாசிவாயிலாகப் பாகியவாயுவை யிழுத்து உட்டரிக்குக, மீண்டும், அவ்வாயுவை வலதுநாசிவாயிலாகப் பையப்பைய வெளியேவிடுக. இவ்வாறே இடதையடைத்து வலதுவாயிலாய் வாயுவை யிழுத்துத் தரிக்குக, அதனை யிடதுவாயிலாய் மெதுவாய் விடுக, இம்மூன்றையு பிரணவங்கொண்டே செய்க, எண்ணிக்கைமாத்திரையானே துணியலாம். முதலில் ஏகமாத்திரை பூரகஞ்செய்க. இருமாத்திரை ரேசகஞ்செய்க, நான்கு மாத்திரை கும்பகஞ்செய்க, இவ்வாறே 2, 3, 4, 5-மாத்திரை முதற்கொண்டு மேன்மேற் பூரகாதிகளை பையப்பையப்பெருக்குக. யாண்டும் பூரகத்தினும் இருமடங்கு ரேசகமும் அதினினும் இருமடங்கு கும்பகமும் செய்க. மாத்திரை = 12-முறை இமைகொட்டுங்காலம், 12-முறை தாலியடிக்குங்காலம், 12-முறை இலகு அக்ஷர முச்சரிக்குங் காலம். பூரகாதிப் பிராணாயாமங்களில் 16-முதலிய முறை பிரணவமந்திரத்தை ஆவிருத்திசெய்தல் மாத்திரை. தடையற மும்மூன்றுநொடி- மாத்திரை மும்முறை முழந்தாள் மீது கரம்பிறட்டல் மும்முறை தாலியடித்தல் செய்யுங் காலம் மாத்திரை. மாண்டூக்கியபிரசினஉபநிடதத்தும், பிரணவத்தின் அகார உகார மகார அர்த்தமாத்திரையென்னும் 4-அவயவங்கட்கே மாத்திரைக்கூற்றும். நாதபிந்துபநிடதத்தோ அகாராதி 4-மாத்திரையுள் ஒவ்வொருமாத்திரையின் உதாத்த அநுதாத்த சுவரிதமென மும்மூன்று அவயவங்கள் கற்பனைசெய்து 3-மாத்திரைகட்கும் 12-பேதங்கூறப்பெற்றுளது. இவ்வாறு பற்பலவிதமாயினும் ஈண்டுத்தடையற மும்முறை தாலியடித்தலிலேகுங் காலமே மாத்திரையென்றுணர்க. பிராணாயாமத்தை 1, 2, 3, 4, 5 முறையாயனுட்டிக்கும்யோகிகள் முறையே ஆகாச வாயு தேயு ஜலபிருதிவி தத்துவ அதிபதித்தன்மைகளை

யடைவர்கள். இதுவே பஞ்சபூதஜயமாம். பிரணவமாத்திரைகளில் முறைப்படி சப்தாதிபஞ்சதன் மாத்திரைகளை ஆரோபித்துச் சிந்தனஞ்செய்யின் யோகிக்கு நிர்விசேஷப் பிரஹ்மரூபமாகச் சிந்திக்க யோக்கியமாய அர்த்தமாத்திரை வடிவப்பிரணவத்தின் அப்பியாச முடைவாம். பிருதிவி தத்துவதாரணத்தில் பார்த்திவப்பொருளை யடைவுற்ற பிரணவத்தைச் சப்தாதிபஞ்சதன்மாத்திரை ரூபத்தானே தியானஞ்செய்க, ஜலதத்துவதாரணைத்தில் வாருணமப்பிரணவத்தை 4-தன்மாத்திரைரூபத்தானே தியானஞ்செய்க. அக்கினிதத்துவதாரணத்தில் ஆக்நேயப்பெயரிய பிரணவத்தை 3-தன்மாத்திரைரூபத்தானே தியானஞ்செய்க. வாயுதத்துவதாரணத்தில் மாருதப்பெயரிய பிரணவத்தை 2-தன்மாத்திரை ரூபத்தானே தியானஞ்செய்க. ஆகாசதத்துவதாரணத்தில் ஆகாசப்பெயரிய பிரணவத்தை, 1-தன்மாத்திரைரூபத்தானே தியானஞ்செய்க. இவ்வாறு பயின்ற யோகியின் மனம் சஞ்சலமற்றுத் திடமாங்கால் அர்த்தமாத்திரைரூபப்பிரணவத்தைப் பிரஹ்மரூபத்தாலே சிந்தனஞ்செய்க. யோகி தனது மனத்தை நிச்சலமாக்கும் பொருட்டுப் பிராணாயாமகாலத்தே தத்தம் வியாபாரத்தோடு பிராண அபானாதிகளைத் தியானஞ்செய்க. சரீரத்தே யநேக நாடிகளிருப்பினும் 1036 பிரதானமாம், அவற்றுள்ளே சஞ்சரிக்கும் பஞ்சப்பிராணன்கட்கும் ஹம்சமந்திரரூப ஒரே வியாபாரமாம், ஹம்ஸ: என்னும்மந்திரம் ஹகாரம் மகாரம் அகாரம் சகாரம் விசர்க்கம் என்னும் 5-அவயவங்களுடையதாம், பிறவிடத்தே அம்மந்திர எண்ணிக்கை 21600 என்றிருப்பினும், உபாதியாலாக்கப்பெற்ற பேதத்தையுடன்பட்டு அதன் எண்ணிக்கை 118180 எனலாம். என்னை, பஞ்சப்பிராணன்களுள் ஒவ்வொரு பிராணனுக்கும் 21600 ஹம்சமந்திர வியாபாரமாம், அத்தாய்ப்பெருக்கவே 108000 எண்ணிக்

கையாம், 1036 நாடிகளில் சஞ்சரிக்கும் பஞ்சப்பிராணன்களின் எண்ணிக்கை. நாடிகளின் எண்ணிக்கையால் ஐந்தாய்ப்பெருக்கவே 5180 எண்ணிக்கையாம், இருவகை எண்ணிக்கையையும் ஒன்றுகூட்டி யெண்ணவே 113180 எண்ணிக்கை சித்தமாம். இத்துணை ஹம்ஸமந்திரம் பிராணாதிகளின் சாதாரண வியாபாரமாம், குதமுதல்களம்வரையிருக்கும் உள்துவாரம் 30 அங்குலமாம், அதிலிருந்து 5 வாயு ஹம்சமந்திர உச்சாரணஞ்செய்யுமாதலின், ஹம்சமந்திரரூப காரிய ஆரம்பகத்தன்மைக்கு 30 அங்குல அளவுடைத்துளேயே பிரயோஜகமாமாதலின் அந்த ஹம்சமந்திரம்அவற்றின் சாதாரண வியாபாரமாம். அவற்றுள்ளும் முககாசிகையிகண்ணே சஞ்சரிக்கும் வாயுஹம்சமந்திரரூப வியாபாரத்தில் முக்கிய காரணமாம், இதனுனே பிராணனெனப்பெறும். பிறகெல்லாகாரணமாகலின் அபானுதியாலழைக்கப்பெறும். பிராணனிருதயத்திலும், அபானன்குதத்திலும், சமானன்நாபியிலும், உதானன்கண்டத்திலும், வியானன்தேகமெங்கும் இருக்கும். பிராணன் செம்மணிபோற்சிவந்தும், அதனதீனஅபானன் இந்திரகோபம்போல் அத்தியந்தஞ்சிவந்தும், அதனதீனசமானன்பால் வெண்படிகமணிபோல் வெளுத்தும், அதனதீனஉதானன் அற்பப்பாண்டுவாகியும், அதனதீனவியானன் அக்கினிச்சிகைபோலுற்றும் இருக்கும். உண்மையில் வர்ணம் இன்மைப்தாயினும் ஆரோபித்துத்தியானஞ்செய்க. மனமும்பிராணனும் மருவியேயிருக்கும், ஒன்றுயேபோம். இத்தேகத்தில் மூலாதாரத்தின்மேல் நாபிசக்கிரம்மேல்இருதயகமலம் அது சுழும்னைநாடிரூப மார்க்கத்தோடும் சம்பந்தித்திருக்கும் அதனுற்பிரஹ்மலோகத்திற்குவாயிலாம்; அந்நாடி அவ்யோகியின்பிராண மனமார்க்கரூபமாம். அந்நெறிபத்தாவது வாயிலையடையும்; சூரியமண்டலத்தினுச்சியிலுள்ள சந்திரமண்ட

ஷத்திருக்கும் பாஷியசித்திரத்தோடு 10-வது துவாரம் அபேதமாம். தீவிரவைராக்கியமற்ற யோகியும் சுழும்னைவாயிலாய்ப் பிரஹ்மலோகமுற்று வைராக்கியமடைந்து மோக்ஷத்தையடைவன், தீவிரவைராக்கிய யோகியோ அந்நெறியினின்றும் வெளியாம்போதே விதேகமுத்தியுறுவன். ஹம்சமந்திர ரூபவியாபாரத்தோடு கூடிய பிராணத்தியானத்திற்கும் அந்நாடிநெறிபுகுந்து பிரஹ்மலோகத்தையேனும் விதேகமுத்தியையேனும் அடைதலே பலமாம். பிரணவமந்திரத்தானே பிராணாயாமஞ்செய்யும்போது அதன் அகார உகார மகார அர்த்தமாத்திரையென்னும் நான்குமாத்திரைகளையும் அவற்றின் முறைப்பொருளாய வைசுவாநர இரணியகருப்ப ஈசுர துரியமென்பவற்றையும் சிந்தனைசெய்க. பிரணவமந்திரத்தைத் தேர்வடிவமாயும் ஸ்ரீமகாவிக்நேசனைச் சாரதியாகவும், சகுணப்பிரஹ்மத்தையும் நிர்க்குணப்பிரஹ்மத்தையும் அடையத்தக்க ஸ்தானமாயும் தியானஞ் செய்க. இடர்நீக்கும்பொருட்டு உருத்திரபகவானை யாவனாத்தியானிக்குக. பாத அங்குஷ்ட அக்கிரபாகத்திருந்து பிராணனை மேலே யிழுத்தல் பிக்கடிவமாமாதலின் அங்குசக்குக்குமமென்றும், மூலாதாரத்தினின்றும் பிராணனை மேலேயிழுத்தல் சுகமாமாதலின் அதைச் சூலமென்றும், நாபிச்சக்கிரத்தினின்றும் மேலேயிழுத்தல் அத்தியந்தம் சுகமாமாதலின் அதை அதிசூலமென்றும், அழைப்பர். முன்மொழிந்தமுறையே யோகம்பயில்பவனுக்கு, 3 மாதத்தின்பின் தூரதிவ்யவிடயங்களின் ஞானமாம்; 4 மாதங்கழிந்து இந்திராதிகளைக் காண்பதினும் ஆற்றலுண்டாம்; 5 மாதங்கழிந்தபின் எல்லாவிடய சுகங்களையும் துச்சமெனவுணர்ந்து வைராக்கியமுண்டாம்; ஆறுமாதமாயினோ அதன் மகிமையானே தூய்மைத்தினைநிச் சருவகருமங்களையும் தியாகித்து ஆன்மசாக்ஷாத்காரப் பொருட்டுச் சரோத்திரியப்

பிரஹ்மநிஷ்ட குருசமீபத்தையடைந்து அவர்வாயிலாயொரு முறை மகாவாக்கியத்தைச் சிரவணித்துச் சம்சயவிபரீத மற்ற ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைவன்; அடைந்து ஜீவிததசையிலேயே முத்தியையடைவன். இது அமிருதநாத உபநிடதச்சுருக்கமாம். இனி யம்சஉபநிடதச்சுருக்கமிதுவாம்:—இத்தேகத்திற் பாயுஸ்தானமுதலாகப் புருவவிடையிட மீருக ஆதாரசக்கிரம் சுவாதிஷ்டானசக்கிரம் மணிபூரகச்சக்கிரம் அநாகதசக்கிரம்விசுத்தசக்கிரம் ஆஞ்ஞாசக்கிரம் என ஆறுசக்கிரங்கள் உள்ளன. அவற்றுள் ஆதாரசக்கிரம்:—பாயுஸ்தானத்திலிருந்து இரண்டங்குலமேலிருப்பதாம், இதுவே தேகமத்தியதேயமாம், இது நான்கு தளமுடையது, செவ்வரக்கின் இரதசமான வர்ணமுடையது, அந்நான்கு தளத்திற் பிரதக்ஷிணக்கிரமத்தானே யிருக்கும், வம், ശം, ഷം, സം, என்னும் நான்கு அக்ஷரங்களாற் சோபாயமானமாம். குண்டலினீ ரூபசர்ப்பிணியின் வாலோடு கூடியதாம், பெருச்சாளியை வாகனமாகவுடைய ஸ்ரீகணபதியென்னுந்தேவதையோடு கூடியதுஆம், சுவாதிஷ்டானசக்கிரம்:—ஆதாரசக்கிரத்தின்மேல் உபஸ்தத்தின் மூலதேயத்தேயிருக்கும், அது ஆறுதளமுடையதாம், பொன்போன்ற மஞ்சள்நிறமுடையதாம், அத்தியந்தம் தேஜசுடையதாம், ஆறுதளத்திற் பிரதக்ஷிணக்கிரமத்தானே யிருக்கும், ബം, ഭം, മം, യം, രം, ലം, என்னும் ஆறு அக்ஷரங்களாற் சோபாயமானமாம், பிரஜாபதித் தேவதையோடு கூடியதாம். மணிபூரகம்:—சுவாதிஷ்டான சக்கிரத்தினும் மேல் நாபிஸ்தானத்திருக்கும், அது பத்துத்தளத்தையுடையதாம், இந்திரநீலமணியொப்பான வர்ணமுடையதாம், சூரிய சந்திர சமான தேஜசையுடையதாம், பத்துத்தளத்திற் பிரதக்ஷிணகிரமத்தானேயிருக்கும், ഡം, ഢം, ണം, തം, ഥം, ദം, ധം, നം, പം, ഫം, என்னும் பத்தக்ஷரங்களாற்

சோபாயமானமாம். ஸ்ரீ விஷ்ணுதேவதையோடுகூடியதாம். அநாகதசக்கிரம்:—மணிபூரகசக்கிரத்திலும் மேல் இருதய தேயத்திருக்கும், அது கோவின்பாற்போல் வெண்மைய தாம், மனநேத்திரங்கட்கு ஆநந்தத்தை யடைவிப்பதாம், பன்னிரண்டு தளத்திற் பிரதக்ஷிணக்கிரமத்தானே யிருக்கும், கං, ఖం, ගං, ఘం, ఙం, చం, ఛం, జం, ఝం, ఞం, టం, ఠం, என்னும் பன்னிரண்டக்ஷரங்களாற் சோபாய மானமாம், ஸ்ரீ உருத்திரதேவதையோடு கூடியதாம். விசுத்த சக்கிரம்:—அநாகதசக்கிரத்தின் மேல்கண்ட தேசத்திருக்கும், அது விசித்திரவர்ணமுடையதாம், 16 தளமுடைய தாம், பதினாறின்கண் பிரதக்ஷிணக்கிரமத்தானே யிருக்கும், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ఋ, ౠ, ఌ, ౡ, ஏ, ஐ, ஓ, ஔ, அம், அஃ, என்னும் பதினாறு சுரங்களாற் சோபாயமா னமாம், ஜீவான்மாவிருக்குமிடமாம். ஆஞ்ஞாச்சக்கிரம்:— விசுத்தசக்கரத்தின்மேல் இருபுருவத்திடை யிருக்கும், அது சிறிதுசிவம்பாம், இருதளமுடையதாம், சூரியசந்திர சமான, ஹம், க்ஷம், என்னுமிரண்டு அக்ஷரங்களையும், இரு தளங்களிலும் உடையதாம், பரமான்மாவிருப்பதற்கிருப் பிடமாம். மத்தகத்தில் ஆயிரம் தளமுடைய பதுமமிருக் கும், அது அமிருதத்தைப்பொழியும் சந்திரனைக் கற்பத்தி லுடைத்தாயது, அதன் கர்ணிகை பத்தாவது துவாரத்தை யடைந்துளது, அதனமிருதத்தானே செய்யப்பெற்ற திருப் தி ஆறுசக்கிரங்களிலிருக்கும், ஜீவான்மா அப்பதுமத்தின் அம்சமாம்.

அம்சரூபத்தன்மை யாமாறு:—சப்தம் உரைப்பதன் அநுசாரமாயே பறவைகட்குப் பெயருண்டாம், காகா வெனக்கரையும்பறவை காகமெனப்படலேபோல, ஜீவான் மாவும் இருதயகமலத்தேயும் ஆதாரசக்கிராதிகளிலேயும்

பிராணனோடிருந்துகொண்டு இரவும்பகலும் 21600 சுவாசப்பிரசுவாசங்களால் ஹம்ஸ: என்னும் மந்திர உச்சாரணஞ் செய்யும் ஹகாரத்தானே பிராணன் முகநாசிகைவாயிலாய்த் தேகத்தினின்றும் வெளியேவரும், சகாரத்தாலே உள்ளே போம், இவ்வுச்சாரணத்தானேயிது ஹம்சவெனப்பெறும், இது ஹம்சப்பக்ஷிபோல போக்தாரூப அக்கினியையும் போக்யரூபசோமத்தையும் இருபக்ஷங்களாகவும், பிரணவத்தைச் சிரமாகவும், மூலசக்தியின் கிரியாசக்தியையுடைய பரிணாமபிந்துவை இருதயமாகவும் உடைத்தாயிருக்கும், ஸ்ரீமகாதேவரது திருமுகம் சூரியன் அக்கினி சோமன் என்னும் திரிநேத்திரங்களோடு கூடியிருத்தல்போல இதுவுமுடைத்தாயிருக்கும். ஒருகால் ருத்திரரூபமாம் மற்றொருகால் ருத்திராணிரூபமாம், இத்துவம்பதார்த்த ஜீவரூப ஹம்சமே தற்பதார்த்தப்பரப்பிரஹ்மரூபமாம். நிருபாதிக திருஷ்டியாலே ஜீவஹம்சம் நிர்க்குணப்பிரஹ்மரூபமாம், சோபாதிகதிருஷ்டியாலே சகுணப்பிரஹமரூபமாம். இதுவும் வாமபாகத்தே அக்கினிரூபமாம்; தக்ஷிணபாகத்தே சோமரூபமாம். கோடிசூரியனுக்கொப்பாய தேஜசையுடையதாம், நகமுதற்சிகைவரை சர்வசரீரத்தும் வியாபித்துநிற்கும், நிற்பினும் இருதயகமலத்தே சிறப்பாயிருக்கும், ஆண்டும் அஷ்டதளபேதத்தானே எண்வகையிருப்பாம், அம்மகிமையானே நுணுக்கனுக்களில் புண்ணியபூத்திமுதலிய காரியங்களினுற்பத்தியாம். கிழக்கு முதலிய எட்டுத்திசைகளின்பக்கமாய் முறையே அஷ்டதளங்களிருக்கும். ஆண்டு மனத்தோடுகூடிய ஜீவாம்சம் கிழக்குத்தளத்தின் மீதிருக்கும்போது அறமியற்றுமதியாம், அக்கினிகோணத்தளத்தின்மீ திருக்கும்போது நித்திரையாலசியாதிவிகாரமுண்டாம், தெற்குத்தளத்தின்மீ திருக்கும்போது குரோதாதி விகாரமுண்டாம், நிருதிகோணத்தளத்தின்மீ திருக்

கும்போது மறமாற்றுமதியாம் மேற்குத்தளத்தின்மீதிருக்கும்போது நானுவகை வியவகாரத்திற்பிரீதியாம், வாயுகோணத்தளத்தின்மீ திருக்கும்போது ஓரிடஞ்செல்ல வேட்கையாம், வடதளத்தின்மீ திருக்கும்போது மங்கையர்போக அவாவாம், ஈசானகோணத்தளத்த திருக்கும்போதுதானப்பிரியமாம், மத்தியதேயத்திருக்கும்போது சத்திய அசத்தியப்பகுப்பானே சர்வ விடயவைராக்கியம் வரும், கேசரத்திருப்பின் நனவைநண்ணும், கர்ணிகையின்கண்ணிருப்பிற் கனவைக்கதுவும், கர்ணிகைமத்தியிற் சிவப்பு உதிரபிண்ட விசேடத்திருக்கும்போது துயிலைத்துதையும். யான் பிரஹ்மரூபனுயிருக்கின்றேன் என்னும் பூரணதிருஷ்டியானே பரிச்சின்ன இருதயகமல அபிமானபரித்தியாகஞ் செய்யும்போது மூன்றவஸ்தைகளைக்குறித்துத் துரியமென்னும் அவஸ்தையையடையும், அத்துரியத்தில் ஆன்மாவாகிய ஞேயம்ஞாதாவினின்றும் பின்னமாகத்தோற்றும், இது சவிகற்பமாம், இத்திரிபுடி தோற்றுவிடின் துரியாதீதமாய நிருவிகற்பமாம். ஓங்காரத்தின்கண் அகாரம் உகாரம் மகாரம் பிந்து நாதம் என்னும் பஞ்ச அவயவ மிருக்கும், அகாராதிமூன்றவயவமோ முறையே விசுவதைஜசப் பிராஞ்ஞர்களின் வாசகமாம், அர்த்தமாத்திரைரூபப் பிந்துநாதங்கள் பிரஹ்ம வாசகங்களாம், பிந்துவோ சகுணப் பிரஹ்ம வாசகமாம், நாதமோ நிர்க்குணவாசகமாம், யோகி ஆறுசக்கிரத்தோடு ஜீவ ஹம்சத்தையறிந்து தன்சொரூப சிந்தனஞ்செய்து, பின்னத்விதீயப் பிரஹ்மரூபநாதத்தைச் சிந்திக்குக. ஆதாரசக்கிர முதற் தசமத்துவாரபரியந்தம் வியாபகரூபத்தானும் அத்தியந்தம் சுவேத ரூபத்தானும் அத்விதீயப் பிரஹ்மத்தைச் சிந்திக்குக. இவ்வாறு அதன்கண்ணே மனத்தையொருமைப்படுத்திந் தீன்பாயுவையும் உபஸ்தத்தையும் சுருக்கிப்பாத அங்குஷ்ட அக்கிரபாகமுதல் பிராணவாயுவை மேலே

யிழுத்து முதலில் ஆதாரசக்கிரத்தில் ஸ்தாபனஞ்செய்க. பின் ப்யைப்பையச் சுவாதிஷ்டானத்துள் வைத்து அதன் நாற்புறத்திலும் பிராணவாயுவை மூவலஞ்செய்விக்க, பின் மணிபூரகத்தும், பின்னனாகத்தும், பின் விசுத்தத்தும், பின் ஆஞ்ஞையின்கண்ணும், பின் பத்தாந் துவாரத்தும் ஸ்தாபனஞ்செய்க. பயிற்சியின் முதிர்ச்சியால் வாயுவை மேலேசெலுத்திச் சிவரூப ஹம்சத்தைத் தியாதாரூபமாய்ச் சிந்திக்குக, பிரஹ்மரூபநாதத்தைத் தியேயரூபமாய்ச் சிந்திக்குக, இருஷிசந்ததேவதைகளோடுகூடிய ஹம்சமந்திரத்தை ஒருகோடி ஜபிக்குக. ஜபிக்கவே யோகியின் சரீரத்துள் யோகபலசித்தியின்மாட்டு விசுவாசமுண்டாக்கும், சிணிநாதம், சிணிசிணிநாதம், கண்டாநாதம், சங்கநாதம், தந்திரீநாதம், தாலநாதம், வேணுநாதம், பேரிநாதம், மிருதங்கநாதம், மேகநாதம் என்னும் பத்து வகைநாதமுண்டாம். மேகநாதத்தைப்படிக்கப்பயின்றவனுக்கு வைராக்கியஞானதிசயுண்டாமாகலின் ஒன்பதையும்விடுத்துமேகநாதத்தையே நிரந்தரம்பயிலுக. பயிலப்பயில மனமிலயமாம், ஆகவே ஆறம்பாவும் சங்கற்ப விகற்பம் முதலிய மனோதருமங்கள் இலயமாம், ஆகவே ஆனந்தான்மாச்சுயமிலங்கும்; இது ஹம்சஉபநிடதச் சுருக்கமாம். க்ஷுரிகாஉபநிடத சாரமிதுவாம்:—க்ஷுரிகா = சஸ்திரம், அதுபோலிதுசமுசாரத்தைக் கெடுக்கும். அஹிம்சையாதியமம்பயின்று; சௌசாதிநியமம் பயின்று ஏகாந்தவிடத்திலியற்றிய ஆசனத்தில் நற்பதுமாதியிலமர்ந்து கூர்மம்போல மனதியைஅடக்கிவிடலாம் பிரத்தியாகாரம்பயிலுக. 12 மாத்திரையோடுற்ற பிரணவத்தானே பையப்பையப் பாகிய வாயுவாற் றன்றேகத்தைப் பூரணஞ்செய்க. இது பூரகம். பின் முகநாசிகைமுதலிய சர்வ துவாரங்களையும் தடைப்படுத்தி இருதயம் முகம் இடை கழுத்துமுதலிய சர்வஅங்கங்களையும் நேராய் நிறுத்தி இருதயத்

தைச் சற்றுமேலேவைத்து அதில் வாயுவைத் தரிக்குக, இதுவே கும்பகமாம். பின் நாசிகாதிவாயிலாய் வெளியே வாயுவைச்செலுத்துக, இது ரேசகம். பூரகாதி சாபேக்ஷம் நிரபேக்ஷமெனக் கும்பகமிருவகைத்தாம். பூரகாதிகளின் றியே தியானபலத்தாற் பிராணவாயுவை முதலிற் பாதாங் குஷ்டத்தில் நிலைபெறுத்திப் பிரணவமந்திரரூபமாத்திரை களைச் சபஞ்செய்து இவ்வகைத் தாரணைகளைச் செய்தல் வேண்டும். வாமதக்ஷிணபாதங்களுக்களில் அதை ஸ்தாப னஞ்செய்யின் இரண்டிரண்டு மாத்திரைகளைச் ஜபிக்குக, இருகணைக்கால்களில் அதை நிலைநிறுத்துவதில் மூன்று மூன்றுமாத்திரை ஜபிக்குக, இரண்டு முழந்தாள்களில் துடைகளில் அதை நிறுவுவதில் இரண்டிரண்டுமாத்திரை ஜபிக்குக, குதம் இலிங்கம் என்னுமிரண்டில் அதை நிறுத்து வதில் மூன்றுமூன்றுமாத்திரை ஜபிக்குக. அவ்விரண்டி னிடையில் அஃதிருப்பதற்கு ஒருநாகமிருக்கின்றது அது நாபியோடு சம்பந்தமுடையதாம். எல்லாருடைய பிற்பாகத் திருக்கும் தீர்க்க என்பாகிய நெறிவாயிலாய்ச் சுழும்னை நாடி தசமத்துவாரத்தையடையுமோ அதைச் சமீபித்திருக் கும் அக்கந்தத்தில் யோகி பிராணரூபமாயடைவன். அதில் பத்துநாடிகளான் மூடப்பட்ட ஒரு சுழும்னை நாடி யிருக்கும், மஞ்சள் சிவப்புக் கறுப்புத் தாமிரநீலவர்ண முடையனவும் மிகச் சூக்குமமும் மிக லகுவும் ஆகிய அநேக நாடிகளிருக்கும். அவ்வியாவற்றையும்விட்டு யோகி சுக்கில வர்ணமுடைய சுழும்னை நாடியையே ஆசிரயம்செய்து அதி லேயே பிராணனைச் செலுத்துக. பின் செம்புவர்ண தகர புண்டரீக இருதயமெய்துக, கண்டத்துள்ள விசுத்தஞ் சேர்க, பின் ஆஞ்ஞையை யடைக, பின் உச்சியிலுள்ள ஆயிரந்தளம்வாய்ந்த பதுமம்பற்றுக. உச்சியிலிருந்துகொண் டே ஆதாரமுதற் பதுமபரியந்தம் அந்நாடியை விஸ்தரம்

தியானிக்குக. இவ்வாறு ஆறுசக்கிரங்களின் பேதனத்தானே மனரூபகட்டகத்தால் தேகாபிமானிகளைப் பந்திக்கும் மர்மத்தைச்சேதிக்குக, அக்கட்கம் பிராணரூப இரும்புமய சரீரத்தையுடையதாம், பிரஹ்மவித்தைரூபச்சாணையிற் றீட்டப்பெற்றதாம், நிர்மலமாம். நிர்மலமனமாகிய கூர்மையாய முனையையுடைய வயமாய பிராணவாயு வடிவவாளானே யோகி தனது பாத தலத்திற்குமேலிருக்கும் அங்குஷ்டம் கணுமுதலிய மர்மங்களைச்சேதிக்குக, கணைக்கால் இடையிலுள்ள மர்மங்களையும் எப்போதும் பயிலும் யோகத்தாற் சேதிக்குக, இவ்வாறே குதாதிமர்மங்களையும் சேதித்து நாடிகளையுஞ் சேதிக்குக, தேகத்தே 101 நாடிகள் முக்கியமாம், ஒவ்வொன்றிற்கும் சாகையாக 72000 நாடிகளிருக்கும், யாவற்றினும் சுழும்னையே முக்கியமாம், அது பத்தாவது வாயிலையடைந்தவுடன் தன் பிராணனை அதிற் செலுத்தி வேறு எல்லா நாடிகளையும் சேதிக்குக, யான் இம்மர்மங்களிலும் நாடிகளிலும் இருப்பவனல்லேன் என்னும் பாத நிச்சயமே அவற்றின் சேதனமாம். இத்தகையன் வைராக்கியமுற்று மெதுவாக மோக்ஷத்தையடைவன். இது ஆசாரிகாவுபநிடதசாரமாம். விரிவைப் பிறவிடங்களிற் கண்டு தெளிந்துகொள்க.

ஸ்ரீமத் பகவற்கீதை:— சாதிபுரியுந் தொழில்களுக்குந் தக்கோர் செய்யுந் தவங்களுக்குந், தீதிலுலகமேழினுக்குஞ் சேருமிடமாயுள்ளவெனை, யோதிமுடியும்பரிசே மெய்யுணர்ந்தார் பிறவாரெனவுரைத்தா, ஞதி முடிவொன்றின்றி யேயபையத்தானேயாய் நின்றான்.

பிறப்பொடு மிறப்பையகற்று கம்பீரப் பெருமருஞ்சற்பொருள்பெரிதுந், திறப்புறக்காட்டுங்கணபதிகருத்தின்றீபிகையெனுங்கணேச்சுரன்றன், சிறப்புறுசாதுர்தரணிபுரிந்த

இவ்வியகீதையினுரையின், மறப்பறு நான்காமத்தியாயம்
மாமுகன் திருவடிமகிழ்வே.

ஸ்ரீமத் பதவாக்கியப் பிரமாணபாராதுராந்தர சாதுர்தரவம்சாவதம்ச கோவிந்த சூரிசூநு ஸ்ரீநீலகண்டபண்டிதராற்றிய கணபதிபாவதீபிகையென்னும் ஸ்ரீகணேசகீதைடீகையில் இது நான்காவதத்தியாயம்.

---

## ஐந்தாவது யோககதன அத்தியாயம்.

---

(அ-கை.) யோகஞானங்கட்குச் சமபலத்தன்மை யருளப்பெற்றதெனினும், யோகத்தாற் மாசகன்ற சித்தத்தின்கண் ஞானமுண்டாகும் என யோகத்திற்கே முதன்மையுண்மையின் அதன் ஆரோகணமார்க்கத்தை விளைவ இச்சித்தவரேண்யனையுபலக்ஷித்தருளித்தாமே முன்னாருளிய யோகசகிதம் யோகம் அருள இச்சித்த ஸ்ரீகஜானனர் திருவாய்மலர்ந்தருளல்:—

க. [illegible]
[illegible]

க. யோகியர்பெருமையும் யோகசீர்மையும், ஊனகமுமிடர்வரக்கெடுமோதுவான், யோகியபலங்களிலென்னையாண்டவன், சேகரனெனும்பெயர்த்தேசிகோத்தமன்.

சிரவுதச்செயலினுஞ்செயலின்மார்த்தத்தும், ஒருவியெப்பயனையுமொழுகும்யோகிதான், திருவிசையுறுமாசேசங்கிராதொழியின், மருவறுமவனினும்யோகவானிலும்.

வி. தியானயோகத்திற்றிட அதிகாரசித்திப்பொருட்டது கருமயோகம் தியானயோகத்தினுக் காதிக்கப்பெறா

கின்றது:—யோகமசிரித்தாத்தென்பது. யோகமாஸ்ரித்ாத் அக்ரியாத்=யோகாப்பியாசத்திற் பிரவிருத்தித்துக்கருமத்தைவிடுத்த சந்யாசியினும், சயோகி = கருமயோகியானவன், ஹேராஜேந்த்ர=ஹேமன்னவர்மன்ன! ஶஸ்த:=புகழுப்பெறுபவன், அவன் யாவன் எனின் அருளல்:—யாவன் ஶ்ரௌதஸ்மார்த்தாநி = சிரௌதாநி=மூன்றக்கினிகளாகிய தக்ஷிணாக்கினியாதிகளாற்சாதிக்கப்பெறும் அக்கினிஹோத்திராதிகள், ஸ்மார்த்தாநி = கிருகியாக்கினிசாத்தியங்களாய ஔபாசனாதிகள்; கர்மாணி=அவற்றினும் அன்னியங்களாய ஜபதபாதிகள், பலம்நேச்சந் = அவற்றின்பலமாய சுவர்க்கப்பிரதிஷ்டையாதிகளாய பரலோக இகலோக சம்பந்திகளை இச்சியாமல், நைகதா என்பதுபோலும் நசப்தசமாசம் நேச்சந் என்பதாம். சமாசரேத்=நன்றாக அனுஷ்டிப்பானே, இதனை யான் பவித்திரனாவேன் என்னும் சிரத்தையுடன் செய்க, செய்யுமவன் புகழத்தக்கவன் என்பதாம்.

ஸ்ரீபரமார்த்ததரிசனம்:—செய்த வினைப்பயன் விட்டிவைதீரா, தெய்தவியற்றியிருப்பவனேகா, னுய்யநினைத்திடு யோகிநன்ஞானி, வெய்யதழற்பொலிவேள்விசெய்வாரில்.

மேவினயாவையும்வீடுதலில்லார், யாவர்களேனுநல்யோகிகளாகா, ராவர்களாகிலவாவறலேகா, ஞேவலிலாதநல் யோகமுமையா.

கருமங்களின்பயனை விரும்பாதவனாகிச் செய்யத்தக்கனவெனச்சாஸ்திரவிதித அக்கினிஹோத்திராதிகளை யாவன் செய்வனோ அவனே சந்யாசியும்யோகியும் ஆவன். சந்யாசம் என்பதோ தியாகமாம், சித்தவிக்ஷேப அபாவமோ யோகமாம்; அவ்விரண்டுமே யிவனுக்கிருக்கின்றனவாம், பலத்தியாகத்தாலும் பலஆசைவடிவச் சித்தவிக்ஷேப அபாவத்தாலுமென்றறிக. அனலற்றவனும் வினையற்றவனும் சந்

யாசியும் யோகியுமாகான் என்று துணிக. அனல்=கருமங்கள், வினை=சித்தவிருத்தியென்பதாம்.

அற்றேல், நிரக்கினிக்கும் அக்கிரியனுக்குமே சுருதி மிருதியோகசாஸ்திரங்களில் சந்யாசித்தன்மையும் யோகித்தன்மையும் வெளியாம், அவ்வாறாக எவ்வாறு சுண்டுச் சாக்கினிக்கும் சக்கிரியனுக்கும் சந்யாசித்தன்மையும் யோகித்தன்மையும் கூறுதல்கூடும், எவ்வாறுதான் நிரக்கினிக்கும் அக்கிரியனுக்கும் அவ்விருதன்மைகள் நிட்டித்தல்கூடும் எனின்? எதனைச்சந்யாசம்=விடுதல்என்பரோ, அது நிட்காமகரும அநுட்டானமெனப்பெயரிய யோகமேயாம் என்றறிதி, என்னை, பயன்விழைதலைப்பற்றாதவன் எவனேனும் யோகியாகான், மற்றோ எவ்வியோகியுமே இட்டசங்கற்பம்விட்டவரேயாவர், அதனானே, பலத்தியாக சாமியங் கொண்டும், ஆசைவடிவச் சித்தவிருத்தி நிரோதசாமியங் கொண்டும், கௌணீவிருத்தியினானே கருமியே சந்யாசியெனவும் யோகியெனவும் துதிக்கப்பெறுவன்.

என்னையாண்டவன் சேகரன்என்றது, * வீரசேகரன் என்றதாம், வீரமிலதாயின், கல்வெருமையமென்மனத்தைக் கரைத்தல் யாங்ஙனமேலுங்கொல்! ஆண்டவன் ஆற்றிய காரியங்கள் பலவற்றுள்ளும் அடியேனையாண்டதேயருமையாம் அதுபற்றியே பெரியோரும் ஆட்சியருமைகாட்டுவர்:— போதாமிர்தம்.

அன்றைய னமரர்கோனுக் கருளிட வறிவொருமை
சென்றிடத் திசைகடோறுஞ்செய் தவமென்னைச்செய்து,
வொன்றுமங் குணரவொண்ணு வுண்மையை யொழிவிலீர,
னின்றெனக்கருளியாண்டவியல்பினையறியதுண்டோ.

உபசாமத்தினீறுஞ் சலிப்பின்றி யொன்பதின்காற்,
றீதறவுபதேசித்துந் தெரிந்திட வொண்ணுதொன்றைக்,

காதலாலடியேன்காணக் கரத்தினாமலகமாக்கி, யாதனேன் றன்னையாண்டவதுதனினரியதுண்டோ.

தெரித்தரிவிஜயற்கன்றுதேரிலீரொன்பதின்காற், கருத்துறவுபதேசித்துங் காணுமாறரியவொன்றைத், திரித்தொருமொழியினாலே சிறியனேற்குணரக்காட்டி, யருத்திசெய்திறையின்றென்னையாண்டதினரியதுண்டோ.

நான்முகனமரர்க்கந்நாண்ஞானமங்குபதேசிக்க, வானவர்க்கையமாக மழுவேந்தத்தேறுமென்றுங், கானவாறரியவொன்றையங்கையினெல்லிபோல, நானெனுணரவாண்டநலத்தினுமரியதுண்டோ.

போதரத்னாகரம்.—அன்றரன்முனிவர்க் காலநீழலிலே யறிவினையளிக்கவென்றிருந்து, மொன்றியவவரினால்வருக் குரைத்தல்லாதவர்க்குரைக்கொணாவொன்றை, யின்றிகபரத் துக்காளலேனையு மென்போலும்பாதகரையு மிறைபார்த், தன்றினப்பொழுதினக்கணத் துணரவாண்ட விவ்வருமை யோதரிதே.

கரையறுமறையைக்கரைசெய் தீரொன்பான் கருதரு புராணகர்த்தாவாய், விரிதருகால மூன்றையுமுணர்ந்த வியாதன் மெய்யறிவுறான் மயங்கிப், பிரசையாஞ்சுகனைப் பின்செலவவனெப்பவத்தினிற்பிதாவெனவியம்ப, வுரியதாம் பொருளென்னுளங்கையிற் கனிபோலுணர்த்திய வருமை யோதரிதே.

திருநூற்றந்தாதி:—அருளோடெழுமற வாழியப்பா பிறவாழியிப்பா, விருளோவியகலரயேறவுய்ப்பாயிந்தியங் களினு, மருளோடுழலுமனத்தேனை யாட்கொண்டமற்றுனக்குப், பொருளோபுவனங்கண் மூன்றையுமாட்கொள்கை புண்ணியனே.

அதிக்கிருதாமிர்தம்:—மாமேரு வில்லா வளைப்பதுஞ் செய்யலாம் வஞ்சர் திரிபுரமாளவும் பண்ணலா, மரிமேகரி பரியாயிடப்பண்ணவுமரியது நீயென்னையாண்டதேயல்லவோ.

பாலகனுக்கன்றுபாற் கடலீயலாம் பத்தர்க்காவென்பு பூம்பாவையுமாக்கலா, மாலமிடற்றணியாகவருந்தலாமரியது நீயென்னையாண்டதேயல்லவோ.

கறுத்தமழுவுண்புரத்தன்பரைக்காக்கலாங் கரிங்கொண் மகவைக்கரையிற்கொடுக்கலா, மறுத்திட்டபாலனை யன் றழையென்னலா மரியது நீயென்னையாண்டதேயல்லவோ.

காலதனாலன்று காலனைக்காயலாங் காமனைக்கண்ணழ லுண்ணவும்பண்ணலா, மாலிலையானயற்கன்றழலாகலாமரிய து நீயென்னையாண்டதேயல்லவோ.

இகலுமரவினெழிற்பணத் தாடலாமென்னை யிருண் மனப்பேய்முலையுண்ணலா, மகிலமுண்டாலிலை மேற்றுயில் கொள்ளலாமரியது நீயென்னையாண்டதேயல்லவோ.

மருதாமசுரரைமாளவூரலாம் வன்பாரை பெண்ணாக வந்தடிவைக்கலா, மரிதோவரையெடுத்தானிரைகாக்கவுமரி யது நீயென்னையாண்டதேயல்லவோ.

தத்துவதேசிகம்:—வடமால்வரைவில்லும் வளைத்தலு மாம், விடமாறலுமாம்விடவாளரவி, னடமாடலுமாநயமாக வெனுஞ்சினமாவெனையாண்டதிறைக்கரிதே. 2.

(அ - கை.) நிட்காமகருமஅவதிஷ்யயருளல்:—

ரு. யொமவுாஜெிஷ்யூஹொவாஜெஹாஷெஹதாகெ ஜெடிவெஷதம், ஷிஷயொமஷ்யஸம்ஷிஜெிஷ்ஹொதா ஶஹஜெளஜெதள.

க. வினையேமனவோர்மை விளைப்பதுவாங், கனமா
தடந்தோளகருத்தடங்கின், தனைநேர்தரு காரணந்தாஞ்
சமமா. மெனலோதமமெம்மது சம்மதமே.

வி. யோகப்பிராப்த்யை = மனத்தின் ஒருமையாய
யோகத்தின் இலாபப்பொருட்டு, ஹே மகாபாகோ! = ஹே
பெருந்தடந்தோளாய்! ஹேது: = காரணம், கர்மைவ = சிர
வதாதிகருமங்களே என்பது, மேமதம் = சர்வஞ்ஞராகிய
எமது அபிமதமாம், ஆசிரியர் அருளிய ஊகத்தால் இரு
தயத்திற்புகுத்தப்பெற்றமனமானது ஒருமையையடையும்
வரை கருமங்கள் இயற்றத்தக்கனவேயாம். சித்தயோகஸ்ய
= சித்த ஏகாக்கிரம் அடையப்பெற்றவன் யாவனோ அவன்
கருமபலத்தைபடைந்த யோகியாவன் அவனது, சம்சித்
யை = முக்கியசமாதிலாபப்பொருட்டு, ஹேதூ = காரத்தன்
மையனவாக, சமதமௌமதௌ = சமதமங்கள் சம்மதிக்கப்
பெற்றனவாம் எமக்கு. திருக்கருத்திதுவாம்:—யாது தான்
ஏகாக்கிரசித்தத்தில் சத்பூதமாயஅருத்தத்தை ப்ரத்யோதம்
செய்யுமோ, கிலேசங்களைக்களையுமோ, கருமபந்தனங்களைச்
சிதலப்படுத்துமோ, நிரோதத்தை யபிமுகப்படுத்துமோ,
அது சம்பிரஞ்ஞாதயோகமெனக் கூறப்பெறும். அதுவும்
விதர்க்கானுகதமெனவும் விசாரஅநுகதமெனவும் ஆநந்த
அநுகதமெனவும், அஸ்மிதையநுகதமெனவும் இனி யுணர்த்
தப்பெறும், சருவவிருத்திநிரோதமாயவழியே அசம்பிரஞ்
ஞாதசமாதியாம் இதுயோகபாடியகருத்தராகிய ஸ்ரீவாத
ராயணபகவான்கூறியபாடியவாக்கியமாம். வாசஸ்பத்யம்:—
விக்ஷேபஉபசர்ஜநீபூத (முக்யமாகாதவடிவம்) சமாதியோக
மன்றெனின், ஆயின் யாதெனக்கடாவி விடைநரல்:—யாது
தான் ஏகாக்கிரசித்தத்திலன்பது பூதமென்றது சமாரோ
பிதஅர்த்தத்தை நீக்குகின்றது, நித்திரைவிருத்தியும் தன.

தாலம்பனதமபூதத்தில் ஒருமையையடைகின்றது என்ப தாற்கூறப்பெற்றது சத்தென்பது. அத்தியந்தம் வெளியாய சத்வமே சோபனமாம், தமம்வெளியாதலோ அசோபன மாம், அதற்குக்கிலேசஹேதுத்தன்மையுண்மையின். த்யோ தனமோ தத்வஞானமாம், அது ஆகமத்தானுதல் அநுமானத் தானுதல் உண்டாகியபோதினும் பரோக்ஷரூபமாதலினுனே சாக்ஷாத்காரவதியாய அவித்தையைக்கெடுக்காதாம், இருக்ஷந் திரதிசைமோகங்களில் கெடுக்காத்தன்மையுண்மையின், ஆக லின் உரைக்கப்பெறுகின்றதுப்ரஎன்கின்றது. ப்ரஎன்னும் சப்தமோ மேன்மையைமிளிர்வித்துக்கொண்டு சாக்ஷாத்கா ரத்தைக்குறிப்பிடுகின்றது. நம்மனோர துகிலேசங்கட்கு அவித் தைமூலத்தன்மையுண்மையின், வித்தைக்கும் அவித்தையை யழிக்கும்பான்மையுண்மையின். வித்தைவிளைந்ததும் அவித் தைக்கிலேசப் பெரிதழிவு விரோதித்தன்மையானும் காரண வினைசத்தன்மையானும் ஆமென்பார் கிலேசங்களைக் களையு மென்றுர். அதனுனே கருமரூபங்களாய பந்தனங்களைக் கெடுக்கின்றது, கருமமும் ஈண்டு அபூர்வம் அங்கீகாரமாம். காரியத்திற்காரணஉபசாரத்தாற் கெடுக்கின்றது, அதன்காரி யத்தாலழிக்கின்றது. மூலமிருப்பின் அதன் விபாகம் என விளிவியம்பவும்பெறும். மேலும் நிரோதத்தையபிமுகமாக் கும். அச்சம்பிரஞ்ஞாதமும் நால்வகை யென்கின்றது அதுவுமென்றது: அசம்பிரஞ்ஞாதத்தை யறையலுற்றது சருவ என்பது. இராஜஸ்தமோம்யமாய பிரமாணுதிவிருத்தி களோ சாத்விகீவிருத்தியை நன்குகொண்டு சவிகற்பத்தில் நிறுத்தப்பெற்றனவாம், நிர்விகற்பத்திலோ எல்லாவிருத்தி களுமேநிறுத்தப்பெறுவனவாம். ஆதலினீண்டு இரண்டுபூமி யில்முடிபாம் எம்மதுமதியாதிகளயபூமிகளுளவோ அவை யாவுமாம், அவற்றிலறியப்பெறுவன் சார்வபௌமன்எனத் துணியப்பெறும்.

"சம்பிரஞ்ஞாத யோகபலபூதங்களாய சித்திகளிற்பற்றற்றயோகிபதிதனேயாவானாகலின் ஆண்டுச் சமமென்னும் மனோநிக்கிரகம் அபேக்ஷிதமாம். நிக்கிரகித்தமனத்திற்குத் தத்துவஞானத் தகுதிதமமாம் அவ்விரண்டும் அசம்பிரஞ்ஞாதசமாதிலாபப்பொருட்டு அவசியம்ஆசிரயிக்கத்தக்கனவாம். ஈண்டுச்சமதமசப்தங்களானே விதிப்படி கருமத்தியாகரூபமான பாரிவிராஜ்யமெனப்பெயரிய உபரதியும் கவரப்பாலதாம்."

ஸ்ரீபரமார்த்ததரிசனம்:—உய்வகையோக மொருப்படுவார்க்குக், கைவருமாசெயல்காரணமேகாண், மெய்வகை யோகம்விளைந்தபின்மெய்யே, செய்வனவானவை தீமையவேயாம்.

தியானயோகத்தையடையஇச்சித்தமுனிவனுக்கு, நிட்காமமாக ஈசுரார்ப்பணபுத்தியானே அனுட்டிக்கப்பெற்றகருமம் மனத்தூய்மைவாயிலாக யோகஆரோகணத்திற்காரணமாம். முன்கருமியாயிருந்த அந்தயோகாரூடனுக்கே, சமமென்னுஞ்சருவகரும சந்யாசமானது சித்தசுத்திவைராக்கிய அதிசயத்தானுளதாவதாய ஞானஉதயத்தில் ஹேதுவெனப்பெறும்.

சமதமங்கள் நிருவிகற்பசமாதிக்கு இன்றியமையாத சாதனங்கள் எனறருளியதுகொண்டேமகர்ன்களும் அதனையடைய அவற்றைக்கொண்டார்கள்என்பது ஞானவாசிட்டத்தும் வெளியாம்:—நிருவிகற்ப சமாதிப்பொருட்டிவ்வகைவிளைந்தான்:—வாராய்மூடமனமே நின்மாயவாழ்க்கைகளிற்பபனென், நீராவிடரேமுடிவில்வருஞ்செயலிற்பெரியோர்சேருவரோ, வாராவமுதாஞ் சாந்தியைவிட்டழியும் போகமாதரிப்போ, ரோரார்மலர்க்கற்பகக்கான்விட்டெரிகூர்விடவெங்கானுறுவார்

அயனுடற்ருய்பாதலத்தி லணுகினுயாகினுஞ் சார்ந்தி; வியனுமுறைதையொழிந்தந்தமிக்கநிருவாணம்பயிலாய், "பயனு யதுபோல் விசித்திரமாய்ப்பாவாபாவமய வடிவே, யியல்பா மிந்தச்செயல்கள்பெரிதிடராமென்றுமினிதாகா.

சத்தாதிகளாமித்தொழில்கடம்மான்மண்டூகம்போலப், பித்தாய்மூர்க்கமனமே யேன்பிரமிக்கின்ருய் விடாதவமே, யெத்தாற்சிறிதுதனையடைந்தாயெதிலேயின்பமுறுகின்ருய், நித்தாரமுதாய்ச் சமமாகுமதினீநிலே சேராநெறியென் என்பனவாதியாகக்காணலாம். அன்றியும். நிருவிகற்பமாஞ் சமாதியின்பொருட்டு முன்னிகழ்கிரியைகளெல்லா,மொருவி விட்டனன்பன்னசாலையி னிடையுற்றனன் கலேத்தோன் மேன், மருவுபொத்தபங்கேருகாசனத்தனன் வருகுதிமிசை வைத்த, விருகரத்திரள்விரலினனிவ்வகையிருந்தனனெருப் பட்டு.

பரந்துதிக்குறுமனத்தினைப் பையப்பையப்பாாத்துமீட் டனனுள்ளே, நிரந்தரித்தனன்புறத்துள பரிசங்கணீத்தன ஞெழுங்காலே, துறந்தசித்தத்தின்றிரநிலே விரும்பினன் றுகளறுமனத்தாலே, புரந்தநற்றவ வீதகவ்வியமுனிபுலப் படநினைவுற்ருன்.

வியப்புடைத்திதுமீளுவித்திருக்கவு மிவைசயுயிரசை வுற்றுத், தியக்குநெஞ்சகந்திரநிலையன்றியே சிறுசருகென வோடும், பயக்குமின்பமில்கடனின்றுபடமுறும்படநின்று கடமெய்து, மயக்கமேவுபல்பொருள்களிற்போய்விழுமாங் களிற்குாங்கேபோல்.

விழிமுதற்பொறியாய்மனத்துவாரமாய் மேமைதயிந்திய மென்றிற, யொழிவிலாவபிமானஞ்செ யைம்பொறியுணர்ந்து காண்புறுநானே, கழியுமிந்தியங்காளவமாகவே கலங்குமே

னந்தோரீ, ரழிவில்சின்மயப்பகவனைச் சகலசான்றாகிநின்றனனே.

எனவொருப்பட்டுவாதனைதீர்முனி யிந்திரியமலைவின்றி மனனைவன்பிராணிறுத்தினன்விறகினைமாய்த்த தீச்சிகையுள்ளே, நனியடங்கல்போலிவனுயிரொழுங்கிலே நன்கொங்கினமூக்கி, ஞானிநுண்பார்வையாற்சிறிதலர்கமலமேநோக்கங் கணிகரான்.

சிரங்கழுத்துடறானங்கள் சமமுறச்சிலையிலே வகுத்தென்ன, நிரந்தசித்திரமென்னமுன் னூறியாண்டிருந்தனனிமிடம்போற், பரந்தகாருநாள்வெள்ளத்தினெக்கரிற்படிந்ததிங்கிவன்மேனி, யுரங்கொண்மாமுனி யுணர்ந்தனன்மண்ணினுருடலசைந்திலதென்றே. என்பவற்றானுமறியலாம். 2.

(அ. - ௯௧.) ஈண்டுச் சமதமங்களிலவாகவே தோடமருளல்:—

௬. [illegible]

௧. கவ்வும்வெம்பொறிதம்மையுங்கருதியேகலுழ்ந்து, வவ்வுமிங்கவன்றனக்கும் வெம்பகையெனவருவான், இவ்வியாவையுமிச்சைசெய்திலனெவனேயு, மவ்வொருமையை யோகியின்யுறுபதமடைவான்.

வி. இருதய ஆகாசம் புகுந்த யோகியைத் தொடங்கி "அவன்பிதுர்லோககாமனாவனேல், அவற்குப்பிதுரர்சங்கற்பத்தானே, அவனிநினெழுந்தேயவிருவரதனால், அவன் பிதுருலகையடைந்துமகத்தாம்" இதன்பொருள், அ. 3.

௬. 33-வதுரையிற்காண்க. என்பதாதி சுருதியினுற் சங்கற்பமாத்திரத்தானே அவ்விடயங்களாற் புட்கலபோகத்தை யோகி செய்கின்றுனென்று தெரிகின்றது. அவ்விதனையே யருளுகின்றுர்:—இந்திரியார்த்தாந்ச சங்கல்ப்யகுர்வந் = இந்திரியவிடயங்களேயே சங்கற்பித்துச் செய்துகொண்டு, சங்கற்பவாயிலாக விடயங்களை நிர்மித்து இந்திரியசாத்தியங்களாய இந்திரியார்த்தங்களென்னும் போகரூப அர்த்தங்களையுண்டாக்கிக்கொண்டு, ஸ்வஸ்யரிபு:பவேத் = யோகசித்தியினுலுண்டாய சுகத்தையே புருடார்த்தத்தன்மையானேயுணர்ந்து, சகாரத்தால், அதன்பரிகாரத்தாற் பிராப்யபதத்தை அறியாமற்குயோகியானவன் தானே தனக்குச்சத்ருவாவன்; தன்னைத் தமோஜாலத் தாழ்த்துவன் என்றபடி. ஏதாந் = சங்கற்பஜன்னியங்களாய இந்திரிய அர்த்தங்களை, அநிச்சந்=இச்சியாமல், ய:=யாவன், சித்திம்=சமாதிசித்தியை, குர்வந் = சம்பாதித்துக்கொள்ளுகின்றனனே, ஹேதுவின்கண் சத்ருவிகுதியாம். சயோகிசித்யதி=அவ்வியோகிசம்பாதனத்தானே விடுபடுகின்றுன், சம்பிரஞ்ஞாத ஜன்னியசித்திகளைத் துச்சமாக்கி அசம்பிரஞ்ஞாதத்தைச்சாதிக்கவேண்டு மென்பதாம், ஆண்டும் சமதமங்கள் அபேக்ஷிதங்களேயாம்.

ஸ்ரீமத் பகவத்கீதை :—புன்மையவானபொறித்திறனேடும், பன்மையவானவினைப்பயனேடும், அன்மையனுனவனப் பொழுதையா, தன்மையின்யோகமதிற்றலைநின்றுன்.

சப்தாதிகளிலும், லௌகிகவைதிகங்களாய அவற்றின் சாதனங்களிலும், கர்த்தவ்யத்தன்மை யனுபீந்தஞ்செய்யாதபோது, சகலகாமங்களேயும் அவற்றுலாம் இதனை யான் செய்வேன் என்பதாதி சித்தவிருத்திவிசேடங்களாய சங்

கற்பங்களையும், விடுத்துத்திடவைராக்கியமடைந்தஞான்று அவன்யோகாரூடனெனப்பெறுவன் என்பதாம்.

ஞானவாசிட்டத்தும்:—தங்கள் சங்கற்பத்தாலறிவில்லோர்சாலமோகிப்பர் நல்லறிஞர், பொங்குநல் விசாரமதியினன்மயங்கார்புந்தியாற்பொய்மையையொழித்துத், துங்கமெய்யுணர்வாய் பந்தமற்றிருந்துந் தொடர்புறுபந்தமுண்டென்று, பங்கமுற்றயரேலமலமாயழியாப்பரம்பொருள்பந்தமுற்றிடுமோ. இதுபோற்பலகாணலாம். 3.

(அ - கை.) இதனையே மூன்றுற் பிரபஞ்சஞ் செய்தருளல்:—

சு. ஸுஹ்ரு௩ெக்ஷவரிவ௱௵௫ெக்ஷவ௨௯ாரொ௵௫ெசுவஷ௰ யஹெந, ஶுத்தஹெநவாக்ஷஹெநாஹாரூதாக்ஷநாதாஷவதி கஸுந.

க. ஆன்றநல்லவரல்லவராவதி, லேன்றெடுத்திலிலே யிடர்யாத்திலில், வான்றனக்கும் வயங்குந்தன்றேலயே, தான்றனக்கயல்யாவுஞ்சமைக்குமால்.

வி. ஆத்மந:=ஜீவவடிவமாயதனக்கு, ஆத்மநாஏவ= தன்வடிவத்தானே, சுஹ்ருத்வேசரிபுத்வேசபவதி = சத்துருத்தன்மையினும் மித்துருத்தன்மையினுமாம்; பொருளிதுவாம்:—பாலன்றன் மனத்தாற் கற்பித்த இயக்கனல், மின்னியதீபாதிகளிற் றிருசியமாய் மிளிர்தருந் தன்மேனிச்சாயைதன்னினை வேறென்றெண்ணி மாமோகத்தினின் மூழ்குந்தனிச்சேயென்றபடி மநோமாத்திரத்தானேயயத்தையடைவன், அதுபோன்றே சருவஜந்துக்களும் தம்மனத்தாற் கற்பிக்கப்பெற்ற சத்துருவானும் மித்துருவானுஞ்சுகத்தையும்

துக்கத்தையும் அடைவர். தாமேதமக்குச் சுற்றமுந் தாமே தமக்குப்பகையுறவும் ஆமன்றே. இங்ஙனம் தனது, உத்தாரேசஏவ = உத்தாரஞ்செய்வதிலேயும், மனமே குருவாதிரூபமாகவுதவும்; இன்னணம் பந்தனத்தில் மனமே காந்தையாதிவடிவத்தானே சேர்க்கும், அம்மனமும் ஜீவனது அநாத்மா = ஆன்மாவின்விரோதி அநாத்மா, ஹிஆத்மா பவதிகச்சந=தன்னையும் சுகதுக்கஹேதுக்களாய விடயங்களையும் சத்துருமித்திராதிகளையும் உண்டாக்கிச் சம்சாரத்தையுண்டாக்குகின்றது. ஆகலின் மனோநாசஞ்செய்யத் தக்கது என்பது திருக்கருத்தாம்.

ஸ்ரீமத்பகவத்கீதை :—தானலதியாவர் தன்மேன்மை செய்தக்கார், தானலதியாவர்தன்கீழ்மைசமைப்பார், தானதியாவர்தன்மெய்ப்பகையாவார், தானலுதியாவர்தனக்குறவாவார்.

சம்சாரசாகரத்தேவீழ்ந்த ஆன்மாவைக் கீழேகீழே வீழ்த்தலானே கெடுத்துவிடலாகாது. ஆயின் ஆண்டு மனம் என்செய்யுமெனின்? மனமே தான் ஜீவனுக்கு ஹிதஞ்செய்வதாயபந்துவாம், அயலொரு பந்துவும் சம்சாரமுக்தியின் பொருட்டு ளாதாவதில்லை, உலகசம்பந்தமான பந்துவும் நேயமிகக்கூட்டலானே பந்தவேதுவேயாமாதலின், மனமே ஜீவனுக்கு யோகாரூடத்தன்மைச்சம்பாதனத்தானே தாரகமென்பது கருத்தாம். அற்றேல் இங்ஙனமாயின் தாரகமாகியமன் யாவருக்குமே உளதேயாமென யாவருமே சமுசாரத்தினின்றும் உத்தரிக்கப்பெறவில்லையென்? எனின்? உண்மையேஆயினும், எல்லாமனமுமே யாவருக்கும் மித்திரமாகாவாம், மற்றே, எவனுக்கேனுஞ் சிறிதுமித்திரம் எவனுக்கேனுஞ் சிறிதுஅமித்திரமாம், ஆகலின் யாவருக்குமே உத்தரணமதுவாகாதாம். பாகியரிபுவும் ஆன்மப்பிரயுக்

தமேயாகலின் ஆன்மாவே ரிபுவெனத்தேற்றமாம், வென்ற மனத்தினனுக்கு வெளிப்பகையடைவின்மையின் எனக் கருதுக. ஆயின் எத்தகையமனம் ஆன்மாவிற்கு மித்திரம் எத்தகையமனம் அமித்திரமெனின்? எவனால் எம்மனமானது விடயங்களோநாடவிடாமற் றடுக்கப்பெற்றுத் தன்வயப்படுத்தப்பெற்றதோ, அவனுக்கு அம்மனமே பந்துவாம்; வெற்றிகொள்ளாமனத்தினனுக்கு அம்மனமே பாகிய லௌகிக சத்துருவைப்போலவே தானும் சத்துருபாவத்தில் நிகழும்.

இதற்குதாரணம் ஞானவாசிட்டம் :—மனமேபுருடன் மற்றில்லை மனத்தின்செயலேசெயலாகும், கனஜீவனத்தாற் சீவனுமாங்கவர்நிச்சயத்தால்புந்தியுமாஞ், சினவுமபிமானத்தாலே தீயவகங்காரமுமாகுந், தனது விகற்பசாலத்தாற் றானே சகமாந்தனிமனமே.

ஆயமனத்தின்செயல்செயலாமதனு லொழிந்தொழிந்துளதா, மேயமனத்தினலொழித்தோர் மிகவுநல்லதியானத்தோர், தூயமனமாயிடில்வெற்பாற்சுழலாக்கடல்போற் பிறப்பிறப்பூா, மாயைமயக்கங்கெடுமென்னுவசிட்டன் மீண்டு முறைசெய்வான்.

பந்தநிதானஞ் சங்கற்பமன்றோ வதுநீபற்றறுப்பாய், முந்துசங்கற்பந் தவிர்ந்தான் முத்தியதுவா மதுதன்னைப், புந்தியதனுற்பரிசியிப்பாய்பொருளும் பொருள்கொள்பவனுமுறின், மைந்தமெள்ளவெப்போது மறவாதொழிப்பாய் சங்கற்பம்.

என்பனவாதியாகக் கண்டுகொள்க.

மந்திரியெனலாமுண்மைமருவுறும்விசாரத்தாலே, யிந்திரியங்களென்னுமிடர்ப்பகையறுத்தலாலே, தந்திரியெனலாமிட்டஞ்சமைத்தலாலேவலாளா, நொந்திரிகிலாதவுள்ளநோக்கியவிவேகத்தோர்க்கே.

ஆலிக்குமின்பத்தாலேயன்புறுமனேவியாகும், பூலிக்குமியல்பினுலே பாவனதந்தையாகுஞ், சிலிக்குமுறுதியாலே தேடருநட்புமாகுந், தூலிக்கும்வினைகளில்லாத் தூய்மனம் விவேகத்தோர்க்கே.

இன்னேரன்னபல நன்மனஞ்சுகஞ்செய்தற் குதாகரணமாக வுணர்ந்துகொள்க. 4.

(அ - கை.) மனோநாசஉபாயத்தையருளல்:—

௬. 𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌮𑌾𑌨𑍇 𑌸𑍁𑌖𑍇 𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑍁𑌹𑍃𑌦𑌿
𑌸𑌾𑌧𑍁𑌷𑍁, 𑌮𑌿𑌤𑍍𑌰𑍇𑌽𑌮𑌿𑌤𑍍𑌰𑍇𑌽𑌪𑍍𑌯𑍁𑌦𑌾𑌸𑍀𑌨𑍇 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍇
𑌲𑍋𑌷𑍍𑌟𑍇 𑌚 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑍇.

௧. போற்றினு மிகழ்ந்துதூற்றினுந் துயரப்போதினுமின்புறுபோதும், மாற்றியவிலதுபுரிபவரிடத்துமன்னியநன்னயர்மாட்டு, மேற்றியநேயரல்லவர்வயினு மெண்ணிலர்நண்ணிலரிடத்தும், சாற்றியலோட்டமதனினும்பொனினுஞ்சமமெனும்யோகியுத்தமனே.

வி. மாந: = பூசையடைவு, அபமாந: = நிந்தையடைவு, சுகதுக்கே = இன்பத்துன்பங்கள், இவற்றில், சுஹ்ருதி = உபகாரத்தை விரும்பாமல் உபகரிப்பவன்பால், சாதுஷு = எல்லாப் பிராணிகளுக்குந் திருவருள் செய்பவரிடத்தில், மித்ரே = உபகாரத்தைவிரும்பி ஹிதஞ்செய்பவனிடத்தில், அமித்ரே = மித்திரத்துவேஷியினிடத்தில், உதாசீனே = உபேக்ஷையுள்ளவன்மாட்டு, த்வேஷ்யே = துவேட்விடயத்தில் அபகாரியின்பால், லோஷ்டே = மட்பிண்டத்தில், காஞ்சனே = சுவர்ணத்தில், இப்பன்னிரண்டினிடத்தும், சம: = வைஷம்மியரகிதனுக எப்போதாவனே அப்போது யுக்ததமன் ஆவன்எனப் பின்னேடன்னுவயம். 5.

சு. ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய:। யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஸ்மகாஞ்சந:॥

க. சமமுளனாகிப்புலனொடுமனத்தைச் சயித்தவிஞ்ஞானியேயாகி, புமைகலைஞானியிந்திய மெவையுமடக்கிட வல்லவனாகி. யிமையளவெனினுமிடைவிடானாகியெண்ணிய யோகமேபயில்வான், கமைமிகுமகத்தாம்யோகியாமெனவே கருதிடப்பெறுவனென்குவரால்.

வி. ஜிதாம்மா = ஆத்மா = சுபாவம், இந்திரியத்தோடு கூடியமனதிற்குவெளிமுகத்தன்மை, அதுவெற்றிகொள்ளப் பெற்றது எவனால் பிரத்தியக்கு ஆத்மானுசந்தானபலத்தினாலே நீக்கப்பெற்றதோ அவன்ஜிதாத்மாவாம், பிரத்தியக்காத்மானுசந்தான்பலபலம் விஞ்ஞானமாம் = ஆத்மானுபவம் அஃதுடையவன் விஞ்ஞானி, அதுவுமெங்ஙனமுண்டாம் எனின், ஞானீ = கிரந்தாப்பியாசீ, வேதாந்தசிரவணஞ்செய்தவன் என்பதுபொருள், இந்திரியஜயாவஹ: = சிரவணத்திலும் ஜிதேந்திரியனே அதிகாரியாவன் என்பதுபொருள்; இந்திரியஜயசீலன். இவ்வண்ணம்சமமுடையவனாகித்தத்துவஞானப்பொருட்டு, சதா = எப்போதும், யோகம் = யோகரூபசமாதியை, ய: அப்யசேத் = யாவன்பயில்வனோ, சபுருஷ: = அப்புருடன், ஹி = பிரசித்தமாக, யுக்தம: = மகாயோகீ, என்பது, சதாம் = சாதுக்கட்குச்சம்மதமென்றது எஞ்சிநின்றது.

உதாரணம் ஞானவாசிட்டம்:—உளத்தினி லனைத்துமாற்றியுலகிலோர்பற்றதின்றித், துளக்கிலாநிலையினின்றோர் துகளறு மூத்தராவா, ரளக்கருமீசராவாரவர்களைசமாதிதானுங், குளத்தகுகருமந்தானுங்கூடினும்விடினுமுத்தர்;

இவனவனுனீததுவெனதென்றே யிடரின்மூழ்குவரறி வில்லா, ரவனியாமுழுதுநாமெனுமுண்மையறிந்தவரழுங்கி நின்றயரார், பவனமார்பொருளிற்பகிர்வுறுமனத்தாற்பாவனை புந்தியிற்பொருந்திக், கவருறுரதனிலிவர்கண்மோகத்திற் கவல்வுறார்தத்துவங்கண்டோர்.

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க ளுய்ப்போனுயுந், தள்ளுசுகதுக்கவசஞ் சாராதோனன வரதஞ்சமாதியுற்றோ, னுள்ளுகின்றதனைப்போ லெவ்வுயிரு மெனப் பிறர்பொருகளோடேயென்ன, வெள்ளுபயத்தா லன்றியியல்பாலே கண்டானே யெல்லாங்கண்டோன்.

வேகந்தேயு முலோபகுணமெலியுங் காமவினையடங்கு, மோகம்போயெங்சொளித்திடுமோமுடுகிக்கிளராதைம்பொறி கள், சோகந்தாவியடராது சுகமுமேலிட் டெழுமாட்டா, தாகந்தீரக்குளிர்ந்துள்ளேசமந்தோன்றிடுமா லெவ்விடத்தும்.

ஒன்றிலனுமேகனுன்சரை பற்றுள்ள மமதையகங்கார, மென்றவொன்றுமிலனென்றேயெண்ணித்தீரனிடரணுகான், றுன்றுகுணமின்றிலன் சரைசாவிலனுன் சுத்தன்றாயறிஞ, னின்றசாந்தன்சமரசனுனென்றுநினைத்தோன்றுயரணுகான்.

திரணறனிகள் விசும்பிரவி தேவருரகர் நரரிடத்தில், விரியுமறிவேநானென்றுவிளங்குந்தீரன்மெலிவணுகான், புரி யுங்குறுக்குமேல்கீழென் போதப்பெருமை யுலாவியதென், றரிதினனந்தவிசாரஞ்செய்ததனை யறிந்தோனழிவில்லோன்.

இவைபோன்றபல வுய்த்துணர்க.

ஸ்ரீமத்பகவற்கீதை :—இர்வாவகை தன்னுள்ளத்தை யடக்குமவனே தனக்கென்று, முறவாயுள்ளா னல்லாதார் தமக்கேபகையாயொழுகுவார், துறவாதொழுகுந்துவந்து

வங்க டுறந்தொன்றினையே தொடர்ந்துவர்பான், மறவா தெழுந்த மெய்யறிவிம்மாயை மறைக்கமறையாதால்.

பாடும்பனுவல் பலவோதி யவற்றாலறியும் பயனுணர்ந்து, நீடும்புலன்களவை வென்று நிலையிற் கலக்கற்கரியானு, யோடும் பொன்னு மொருபொருள்போ லொக்கப்பார்க்கு மவனேயிங், காடும் பெரியமாயக்கூத் தாடாததுகண்டமர்ந் திருப்பான்.

கைம்மாறில்லாதன செய்வான் காதற்றோழன் கடும்பகை ஞன், விம்மாதெவர்க்கு மொத்திருப்பான் வேண்டப்படுவான் வேண்டாதா, னம்மாமறைநூ னெறிபுரிவர் ஞாதன வாக்கி டுவானென், றிம்மானுடவ ரனைவருக்கு மொப்பான்யோகி யெனப்படுவான்.

சீதோஷ்ண சுகதுக்கங்களிலும் புகழ்ச்சி யிகழ்ச்சிகளி லும், மனம் வென்றவன், அதனுனே பிரசாந்தன் இராகாதி யின்மையானே நிர்விகாரன், இத்தகையனுக்கே கேவலமான்மா யோகாரூடமாம், இவனது சமாதிவிடயமாகப் பரமேசுரிலங் குவ ரென்பதாம். யோகாரூடனது இலக்கணமிதுவாம்:— ஔபதேசிகமாய ஞானம், அபரோக்ஷானுபவமாய விஞ்ஞா னம், என்னுமவற்றால் திருப்த, போதுமென்னு முணர்ச்சி யுற்ற மனத்தையுடையவன், விடயசந்நிதியிலும் விகாரமில் லாதவன், அதனுனே இராகத்துவேஷ பூர்வகமாக விடயக் கிரகணத்தினின்று விலக்கி இந்திரியங்களை வெற்றிகொண்ட வன் அதனுனே ஹேயவுபாதேயபுத்தி சூனியத்தன்மை யானே, மட்கண்டபாடாண சுவர்ணாதிகளை யொப்பாய்ப்பார்ப் பவன், யோகாரூடனெனப் பெறுவன். மறு உபகாரத்தை விரும்பாமல் நேயசம்பந்தமு மில்லாமலே உபகர்த்தாவாகிய

சுகிருத்து, நேயத்தாலுபகாரியாய மித்திரன், நிட்காரணமாக அபகாரஞ் செய்யுமரி, விவாதம்புரியு மிருவரையும் உபேக்ஷிக்கும் உதாசினன், இருவர்பாலு மிதம்விரும்பும் மத்தியஸ்தன், உபகாரியிடத்தும் அபகாரம்புரியும் துவேடியன், சரீர சம்பந்தியாய பந்து, தருமசீலர்களாய சாதுக்கள், பாவசீலர்களாய பாவிகள், என்னும் இவ்வியாவரிடத்தும் பிறரிடத்தும் ஒரே விதமான விகாரமில்லாத மதியையுடையவனே யோகாரூடன் இவனே யோகியர் யாவரினும் சிறந்துமிகவிளங்குமவன். 10

(அ - கை) மனோநாசப் பிரதிகூலங்களாய அவஸ்தை காலதேசாதிகளைத் திருவாய் மலர்ந்தருளல்:—

சு. தத்ர ஶ்ராந்தோ வ்யாகுலோ வா க்ஷுதிதோ வா வ்ய
க்ரசித்தகஃ காலே ऽதிஶீதே ऽத்யுஷ்ணே வாऽநிலாக்ந்யம்
பு ஸமாகுலே ॥ ஸத்வநாவதிஜீர்ணே கோஃஸ்தாநே ஸாக்நௌ
ஜலாந்திகே, கூபகூலே ஶ்மஶாநே ச நத்யாம் பித்தௌ ச மர்ம
ரே ॥ சைத்யே ஸவல்மீகே தேஶே பிஶாசாதிஸமாவ்ரு
தே, நாப்யஸேத்யோகவித்யோகம் யோகத்யாநபராயணஃ

க. தத்தனிலேத்தோன்றுகலத்தோற்றுகம்பசித்தோன் கவலைநிறை, சித்தனாகிய நிசீதமைமிகுத்தபோதத்தனில், தத்துமநிலமனலமற்றுவுமிட்டத்திற் சத்தமத்தில், மெத்தச்சிதிலக் கோவிடத்தின்மீறுந்தியினீர்த்துறையில்.

சோககூபகூலத்திற்சுடலையதனிற்சுழலாற்றில், யெகுஞ் சுவற்றின்மாமரத்திற் புற்றினிடத்திற் சயித்தியத்தில், வேகப் பேயாதியவிடத்தில் விளங்கயோகந்தனைப்புணர்ந்தோன், யோகம்பயிலாதொழிந்திடுக யோகமதனிலொருமுகனே.

வி. தப்த:—உஷ்ணதியானே வெந்தவன், சிராந்த:—வழிநடையாதியானே அலுத்தவன்; வ்யாகுல:—சோகமோகாதிகளாலே கவலையற்றவன, வா—அல்லது, க்ஷுதித:—பசித்தவன் தாகவேட்கையுன் என்பதும் அறியத்தக்கது, வ்யக்ரசித்தக:—தீவிர ரோகாதிவேதனையால் வியாகுலசித்தன், ஆகி, காலே அதிசீதே அத்யுஷ்ணே—மிகக்குளிர்ந்தபோதும் மிக வெம்பியபோதும், என்னும் இதனுனே மனப்பிரதிகூலத்வ மாத்திரம் குறிப்பித்தருளப் பெற்றது குளிர்காலத்திலேனும் வெய்யிற்காலத்திலேனும் யோகாப்பியாசம் நிட்டைதித்து அருளப்பெற விலலையாம், பிரதிகூலதேசத்தை யருளல்; வா—அல்லது அநில அக்னி அம்பு சமாகுலே—காற்றுத்தீநீர்களினலே கவலை மிகுத்த இடத்தில், மிக்க குளிராதிகளுமே சித்தவிக்ஷேபஞ் செய்தலின் யோகப்பிரதிகூலங்கள் என்பது பிரசித்தமேயாம். அவ்வாறே சுவேதாசுவதரம் கூறுகின்றது:—

சமமாய்ச் சுசியாய்ச் சர்க்கரை தீசலிவாலுகங்கள் சத்தங்கள், இமமார்ஜலவாசிரயாதி யிடரேயிலதாயினிமனமாய், இமையார்விழிகட்கிடரிலதா யெழிலார்குகையா யிலதாய்க் கால், அமைவாரிடமாமதுதனிலே யரிதாமியோகமது பயில்வான்.

பொருள் ஆசனப் பொருட்டுத் தேசவிசேடங்கூறல்:—

சமமாய்—ஏற்றத் தாழ்விலதாய், யோகசாதன உசித தேசமானது சமமாக இருக்கவேண்டும் விடமமாயின், விழ்ச்சிகூடலின்—ஆனகயினல் யோகானுஷ்டான யோக்கிய தேசமானது நிம்ன உன்னதப்பிரகார ரசிதமாயிருக்கவேண்டும் என்பதாம்; சுசியாய்—கேச அஸ்தியாதி அதூஷிதமாய்,

தூய்தாய், அசுசியாயின் மனோநைர்மல்யங் கூடாமையி
மேத்தியமாயிருக்கவேண்டு மென்பதாம்; சாக்கரை = சி
கற்கள் = சூக்குமபாஷாணங்களில்லாதவிடத்தில், அஃதிருக்
மிடத்தில், தேகத்திற் காயங்கூடலின், காயத்திற்காய
பயவாவிடமாயிருக்கவேண்டு மென்பதாம், தீ = தாகப
கரந் தேயு = வன்னி, வன்னிமதிதேசத்தில்வீழ்ச்சிச் சங்
யுண்டாதலின், தீயிலாவிடமா யிருக்கவேண்டு மென்பதா
வாலுகங்கள் = மணல்கள் = சூக்குமதூளிகள் அஃதுள்
விடத்தில்—வாயுவசத்தால் வாலுகங்களாலே சரீராச்சாத
சம்பவத்தால், அவற்றோடு கூடாதவிடமா யிருக்கவேண்
மென்பதாம். சத்தங்கள் = தொனிவிசேடங்கள், வர்ண
மகங்கள் = கலாதித்தொனிகள் சப்தமிருக்குமிடத்திற் குழ
பமுண்டாதலின் பிராணிவாத்திய வாயுவாதி நிமித்தகோஷ
களோடு கூடாமலிருக்கவேண்டும்; ஜலவாசிரயம் = ஆதிசி
லப் பிரதேசம், ஜலம் = சர்வப்பிராணியுபபோக்கியம், ஆ
ரயம் = மண்டபம், ஜலசந்நிதியேலாண்டுவீழ்ச்சிச் சம்ப
முண்டாதலின், நீர் நெருங்கியவிடம் கூடாதென்பதா
ஆதிசப்தத்தினாலே சிங்க சர்ப்பாதிகளினாலே சப்தமில்லா
விடமா யிருக்கவேண்டும், ஜலாசிரயாதி யென்றதனா
முதலியாதிகளையும் கொள்ளலாம்; இனி மனமாய் = ப
னுகூலமாய், மனத்திற் கனுராக முண்டாக்குவதாய், ம
ரம்மியமாய் என்றபடி, மனப்பிரீதி செய்வதாய் முக்கி
விசேடமாகிய மனத்திற்கு ஆனுகூல்ய வடிவ விளைந்தபய
சித்திக்கத்தக்கதா யிருக்கவேண்டும், விழிகட் கிடரிலதா
என்றதனானே பார்க்க யோக்கியமாயிருப்பதுடன் மனத்தி
குச் சௌஸ்தமாயிருக்கவும் வேண்டும் இதுவோ கண்கண்
பயனும் இவ்வாறின்றேல் அஷ்டாங்கயோகம் அனுஷ்டிக்க

கூடாமையின், மனோனுகூலமுமின்மையின் பிரதிவாதிகள் இல்லாதவிடமா யிருக்கவேண்டும், சக்ஷுர் பீடையிருந்தால் யோகம் செய்பக்கூடா தென்பதாம்; குகையிலதாய்க் கால் இடமாமது தனில் யோகமது பயில்வான்=மலைப்பொந்து காற்றற்றவேறிடம், அத்தகைய சருவபாதையு மற்றவிடத்தில் வசித்துக்கொண்டு நன்றாக யோகம் ,செய்யவேண்டும் சம்யக்காசிரியப் பிராப்தியனந்தரம் அஷ்டாங்கயோகம் செய்யவேண்டுமென்பதாம்; காற்றிலா வேகாந்தக் குகையிற்சென்று சித்தத்தைப் பரமான்மாவின் கண்ணே செலுத்துக. இவைகளுக்குள்ளே மனோனுகூல மென்பது முக்கியவிசேடணமாம்.

சத்வரெள=தொனியுள்ள இடத்தில், அதிஜீர்ணே=மிகவும் சிதிலமானவிடத்தில், வீழ்ச்சிப்பயத்தாற் சித்தம் ஒருமைப்பட மாட்டாது அல்லது அதிஜீர்ணேகோஸ்தானே=மிகவுங் கிலமான கோசாலையில், கொசுகு முதலிய பாதை பெரும்பாலும் உளதாமென வதனை நிஷேதித்தாம், சாக்நெள=தீயுள்ளவிடத்தில், ஜலாந்திகே=நீர் நெருங்கியபிரதேசத்தில், கூபகூலே=கிணற்றுக்கரையில், அல்லது குற்சிதமாய உபகூலத்தில், கூலம்விழுந்து விடுமென்னும் பயத்தால், ஸ்மசாநேச=சுடுகாடு-டுகாட்டிலும், நத்யாம்=ஆற்றங்கரையில், பித்தெளச=கெட்டுப்போன குட்டிச் சுவற்றின் ஓரத்திலும், வீழ்ந்துவிடுமென்னும் பயத்தால், மர்மரே=காய்ந்த சருகு தொனிக்குமிடத்தில், சைத்யே=யாகாக்கினியை வைத்துக்காப்பாற்றி யெடுத்தவிடத்தில் பௌத்த தேவதை ஸ்தானத்திலாதல், அத்தேசத்திற் கபவித்திரமுண்மையின், சவல்மிகேதேசே=புற்றுள்ளவிடத்தில், பிசாசாதி சமாவ்ருதே=பேய்முதலியவை யுள்ளவிடத்தில், ஆதிபதத்தால் யக்ஷ

ராக்ஷச வேதாளாதிகள் கவாத்தக்கனவாம், யோகவித்=யோக சாஸ்திரமரியாதையைத் தெரிந்தவன், யோகத்யான பாராயண:=சாஸ்திரங்கூறிய மார்க்கத்தினாலே தியான நிஷ்டாவான், இயம்பிய இத்தானங்களில், யோகம் ந அப்யசேத்= யோகத்தைப் பயிலக்கூடாது.

யோகம்பயிலத் தகாவிடங்களையும் பயிலத்தக்கவிடங்களையும் பரமேசுர கீதையினுங் காணலாம்:—நீரினுற் செழும்பதான வவ்விடங்கனெருப்பினால் வெந்த வவ்விடங்க, ளெரு செந்துக்கடுற்சனர்துராலருநிர்ந்திடுசருகுபுற்றிடங்கள், கோரமாம் பயங்களுள்ளிடமிடிந்த கோயினுற் சந்திகண்மயான, மாரவாரங்களுள்ளிட மசுத்தமலக்கனு மனத்தினுக்கதனால்.

வருத்தமாயுடலம் வாதையைப்பற்று மனமது நடுநடுங்கிட்டுப், பொருப்பினிற்குகைகள் புண்ணியதேசங் கோயில்கணதிகளின்கரைக, ளிருப்பறுமனை தானூர்வது கடிப்பதின்றி யேகாந்தமாயுள்ள, வொருத்தரு மறியாவிடத்திலே யென்னை யுன்னுவான் மனநெருப்படுவான்.

ஸ்ரீபகவற்கீதையின்கண்ணும் இதனைக் குறிப்பித்தருளியவாறு காணலாம்:—தலையா மிந்தயோகத்தைத் தலைநின்றெழுகுந் தன்மைசேக, ளலைபா வாசையறமாற்றி யொன்றுந் தனக்கென் றெழுகாதே, மலையார் முழைஞ்சே முதலாக யோகங்களுக்கு வகுத்துரைத்த, நிலையாவையினு மொன்றினில் வந்தியாது நலியாவிடத்ததிலே.

ஒக்கும் வகையாற் குசைபரப்பியதன் மேலுழையின் றோல்படுத்துத், தக்கதுகிலை யதன்மேலே விரித்துத் தானங்கதிலிருந்து, மிக்கமனனை யறவொருக்கி வேறுசெய்யும் வினை

களுடன் ஞெருக்கபுலன்கள்வையடக்கி யுணர்வு தூய்தாவதன் பொருட்டால்.

தலையுங் கழுத்து முடம்பு மிவை செவ்வேதளராதேயி ருக்கு, நிலையிலிருந்து கண்களைத் தன் மூக்கினுநிமேலே நிறுத்தி, யலையுங்கடல்போற் காமமு மெய்ப்பயமுந் தன்னை விட்டகல, வுலையுமனமுள்ளடங்க வெனையுணர்ந்தே யிருக்கு மது யோகம். ஈண்டு யோகவித்யோகம் யோகத்தியான பரா யணன் என்றருளிய தன்விரிந்தபொருள்:—யோகாங்கங்களி வையாம்:—இரகசியமாக ஏகாந்த கிரிகுகாதிகளி லிருபபவ னாய், ஆண்டும் மற்றொருவனுடனிருத்தல் கூடாதாம்; மற்றொ ஏகாகியாய், ஸ்மரிக்கவும் பெறுகின்றது:—ஒருவன் பயிக்க னெனப் பெறுவனிருவருளரேன் மிதுனமதாம், ஒருவனிரு வர் கிராமமதாம் ஊர்த்தநகரமாயிடுமே, தருவநகரந்தானே னுங்கிராமமிதுனந் தானேனும், ஒருவ னொருவர்க் கொருவ ரிறை யுரையும் பயிக்க வுரையாமால்,

ஒருவனுயிருந்த போதினும் அடக்கமின்றிய சித் தனுக்கு மனோவிக்ஷேபத்தினுல் நகரமேயாம், ஆகையினுல் யோகப்பிரதிபந்தக வியாபார சூனிய சித்ததேகங்களுடை யவனு யிருக்கவேண்டும், அதன் கண்ணோது ஆசையின் மையேயாம், இதனுனே சாஸ்திர நிஷித்தயோக விரோதி பரிக்கிரகமற்றவனு யிருக்கவேண்டும் இவ்வித யோகி யாகிய யோகாரூடன் எப்போதுஞ் சித்தத்தை யொருமைப் படுத்தவேண்டும், ஈண்டிது யோகசாஸ்திரப் பிரக்கிரியை யாம், முதலிலாண்டுணரத்தக்கதாம்:—யோகமென்பது சித் தவிருத்தியின் நிரோதமாம், இயமநியம ஆசனப் பிராணு யாமப் பிரத்தியாகார தாரணை தியான சமாதிபேதத்தால்

அதற்கு எட்டு அங்கங்கள் உள்ளனவாம், ஆண்டு கொல்லாமை பொய்யாமை கள்ளாமை பெண்ணையவாமை ஏராமை நேர்மை பொறுமை தீரதை அளவுணவு தூய்மை என்பனவை இயமங்களாம், தவஞ் சந்தோடம் ஆஸ்திக்கியம், தானம் கடவுள் பூசை சித்தாந்த சிரவணம் மதிநாணம் ஜபவிரதங்கள் என்பன நியமங்களாம், சுவஸ்திக பத்மாசனுதிகள் ஆசனங்களாம், பிராணவிருத்தி நிரோதம் பிராணுயாமமாம், தத்தம் விடயங்களினின்றும் புலன்களைத் திருப்புதல் பிரத்தியாகாரமாம், பாகியேந்திரியத்தோடுகூடிய மனத்தை யோரிடத்தில் நெடும்போது நிறுத்துதல் தாரணையாம், இடையிடையே அயலாகார உணர்வினுலே தடைப்பட்டநியேய ஆகாரவிருத்திப் பிரவாகம் தியானமாம், எல்லா வகையானும் விஜாதீய விருத்திகளின் இடையீடின்றிச் சஜாதீயவிருத்திப்பிரவாகம் சமாதியாம், அதுவும் சித்தபூமி பேதத்தானே சம்பிரஞ்ஞாதம் அசம்பிரஞ்ஞாதம் என இருவகையாம், சித்தத்திற்கோ ஐந்து பூமிகளுளவாம்:— அவை க்ஷிப்தம் மூடம் விக்ஷிப்தம் ஏகாக்ரம் நிருத்தம் என்பனவாம், அவற்றுள் விஷயாசக்தமான சித்தம் க்ஷிப்தமாம், துயிற்சோம்பலோடுகூடியது மூடமாம், எப்போதும் விடயாசக்தமாயினும் ஒருபோது தியான நிஷ்டமாயது க்ஷிப்தவிசிஷ்டமாதலினுலே விக்ஷிப்தமாம், அவற்றுள் க்ஷிப்தமூடங்கட்குச் சமாதிசங்கையேயிலதாம். விக்ஷிப்த சித்தத்திலோ ஒருபோது சமாதியுண்டாயபோதினும், விக்ஷேப மிகுதியானே வேகவாயுவினுலே விக்ஷிப்த விளக்கேபோலும், தானே நசித்துவிடும்; ஏகாக்கிரமோ, ஓரேவிடயத்தையுடைய, தாரையைப்போல் வசிக்கும் விருத்தி சமர்த்தமாம், சத்துவத்தின் மிகுதியானே தமோகுணத்தாலாக்கப்பெற்ற

நித்திரையா லசியாதிரூபலயாபாவத்தானும் இரஜோகுணத்தாலாக்கப்பெற்ற சாஞ்சல்ய ரூப விக்ஷேப அபவாதத்தானும், ஏகவிஷயக தாராவாகிகவிருத்தியாமெனச் சுத்தசத்துவத்திற் சித்தம் ஏகாக்கிரமாம், இப்பூமியின் மாட்டுச் சம்பிரஞ்ஞாத சமாதியாம், ஆண்டுத்தியேயாகார விருத்தியும் தோற்றும், அதற்கும் நிரோதம் உளதாகவே நிருத்தம் சித்தம் அசம்பிரஞ்ஞாத சமாதிபூமியாம், இதுவேயாவும் விடுத்த வைராக்கியயோகிக்குச் சமாதிபலமுமாம் சுகத்தை வாஞ்சியாதவனுக்குத் திடபூமி யான்மதத்துவ சாக்ஷாத்கார ஹேதுவாம் இதுவே யீண்டருளப்பெறும்; ஆண்டு முதலில்,

எண்டிகழும் யோகத்தை யிப்பரிசே யெப்பொழுதுங், கொண்டுபயில்வார் கடைக்காலென்னையே கூடுவரா, லுண்டியினின்மிகுவ ருண்டுறப்பார் மிக்குறங்கிடுவார், கண்டுயிலை யறத்துறப்பா ரவர்க்கிது கைவாராதால்.

துயிலுமுணவுஞ் செய்தொழிலு மிகாமே குறைந்து தோன்றாமே, பயிலுமவனே யோகத்தைத் தன்பாற்படுக்கும் பான்மையா, னயிலும் பொறிவிட் டவ்வறிவுதன்பாலடங்குமப்பொழுது, குயிலுமியோகந் தலைநின்றானென்றுங்கவனைக் கூறலாம்.

என்றருளிய தானே பத்துவதைகயமாந்தர்க்கதமாய மிதாஹாரித்தன்மையுடன்பா டெதிர்மறைகளானே யருளப்பெற்றதாம், இதனைப்பின்றுமே ஸ்ரீ கணேசப்பெருமானும் திருவாய்மலர்ந்தருளுவர்.

நிறைவு செயலாதானிகழுண்பதனு, லுறைமூன்றுவது முதகத்தானே, பொறைவாயுவின் சஞ்சரணப் பொருட்டோ, வறைநான்காவதையமரவைத்திடுநீ.

என்பதாதி யோகசாஸ்திரமுரைத்த அளவினின்றும மிகவாதல் குறைபவாதல் அயில்பவனுக்கு யோகம் அடைவுறுவதில்லை; அதன் கண்ணேது என்னெனில், மிக் குண்பானுக்கோ மிருதுயிலாம், மிகவுண்ணானுக்கோ மிக விழிப்பாம, அவ்விரண்டுமே யோகத்தடையாம்; ஆகையாற் சாவதானமாயிருக்கவேண்டுமென்பது திருக்கருத்தாம். இவ் வண்ணம் எதிர்மறைவாயிலாக ஆகாரநியமத்திற்கு யோகாங் கத்தகைமையைபருளி உடன்பாட்டுவாயிலானும் ஸ்ரீகணே சப்பெருமான் அருளுவதையே அருளல்: துயிலுமென்பது நியதபரிமாண வுணவு நடை யுடையவனுக்கே, அதனானே நியத துயில்விழிப்புடையவனுக்கே, அவ்வாறே யன்னிய விகித தபசுவாத்தியாய விரதஜபாதி கருமங்களிலும் நியத கால விவகாரவானுக்கே பிரஹ்மவித்தை வாயிலாகச் சருவ துக்க நிவிருத்திஹேது யோகமுண்டாம். ஈண்டாகாரத்தன் மையின் நியதத்தன்மையானது நிறைவு என்பதனானே முன் னமே மொழியப்பெற்றது. நித்திரைவிழிப்புகளோ, இர வைப்பாகமூன்றதாயிபற்றி, இரவின் முதற்கடை விழித்தே யிருப்போன், இரவினிடையாம் பாகமே துபில்வோன், தரு மாயோகந் தலைநின்றவனே. என்பதாதி ஸ்மிருதிப் பிரசித்தங் களேயாம். நடையோ யோஜனைக்குமே னடக்கக்கூடா தென்பதாதியாற்காண்க, தபசுவாத்தியாயாதிகளோ—மெது வாய் வித்தை மெதுவாய்த் தவமாம் என்பதாதியாற்காண்க. இவ்வண்ணம் பிரஹ்மசரியம் முதலனவும் சாஸ்திரீய நிச்சய தாட்டியத்தானே பயமின்மையும், ஆஸ்திக்யமும் ஆகிய இவையெல்லாம் யோகவித்துக்குள்ளிருப்பனவாம், ஊகித்துத் கண்டுகொள்க. இனி இவ்வியமநியமங்கட் கடுத்தபடியாய ஆசனமிதுவாம்: இயற்கையாயேனும் செயற்கையாயேனும்

இடம் சுசியமாயிருக்கவேண்டும், மிக மேலாகவேனும் மிகக் கீழாகவேனும் இருக்கலாகாது, குசையின்மேற் புலித்தோலதன்மேல் வஸ்திரம்பரப்பி யிருந்துகொள்ளல் வேண்டும், இவ்வாறாய ஸ்திர அசல ஆசனத்தைத் தானேசெய்துகொள்ளல்வேண்டும் தன்னதாகவேயிருக்கவும் வேண்டும், அன்னியாசனத்திருக்கலாகாது,

ஆசனம் சயனம் வத்திரம்சாயை, பேசுறுமகனே கமண்டலம் பேணிவை, ஆசறத்தனதேசுசியாமல்லவை, கூசொருபோதும் கொள்ளவேயாகா,

என ஸ்மரித்தலின் இவற்றின் விரிவறிய விரும்பின் எமது ஸ்ரீகூடார்த்ததீபிகையுட் கண்டுகொள்க. ஈண்டு விரிவஞ்சிச் சுருக்கினும்.

ஆசனத்தின்பின் அநுஷ்டிக்கத் தக்கவை பிராணாயாமப் பிரத்தியாகார தாரணைகளாம்:—ஈண்டுப் பதும சுவத்திகாதி விசேடத்தை யாதரியாமல், கேவலம் இருந்து என்னும் பொது மொழியால்,

எவ்வகையானே யின்பதீரங்கள், அவ்விது சுகபாமாசனமென்டா, என்னுஞ் சாத்திரத்தின்மொழிந்த சுகாசனமே விளம்ப விழைந்ததாம் எனவுணரலாம், ஒருவருமில்லாவிடத்திலே சுகமாம் ஒள்ளியவாதனத்திருந்தே, என்பதாகக் கேட்கவும் பெறுகின்றது, ஸ்ரீ பதஞ்சலி பகவானும் சூத்தரித்துள்ளார், திரசுகமாசனம், மனத்தையும் இந்திரியங்களையும பிராணனையும் ஒடுக்கினவனாகி, ஏகாக்கிரமாக மனந்தூய்தாவதன்பொருட்டுத் தியானம் செய்தல் வேண்டும். சித்த ஏகாக்கிரத்தின் துணை காரணம் தேக

தாரணமாம், தேகமத்திய பாகத்தையும் சிரத்தையும் கழுத்தையும் மூலாதாரந்தொடங்கி மூர்த்தபரியந்தம், கொஞ்சமும் அசையாமல் நேரே தரித்து, அன்றியும் இடையிடையே திசையை நோக்காமல் தனது நாசிநுனியைப் பார்ப்பது போலேயிருந்து, கண்டு நாசிநுனியைப் பார்த்தல் விதானமாகாதாம், ஆயினே மனத்திற்காண்டே சமாதிவழக்காதலின் ஆகையானு சிநுனியைப்பார்ப்பவன்போலிருப்பவனாகி, இவ்வண்ணம் மனத்தையடக்கி, விஷயாகாரவிருத்தி சூனியமாக்கி யென் சித்தனாயிருக்கவேண்டுமென்பது தியானவிதியாம்; என்னென்றருளியது தியேய சொரூப சௌலப்யக் கூற்றும். முன்னெழுந்தருளியிருக்கும் மதனகோடி சுந்திர மணிகிரீடகுண்டல வலயஹாரகேயூர முத்ரிகாலங்கிருத மாங்கல்யத் திருமேனியையுடைய, மாணிக்க மணிரக்தப் புன்சிரிப்போடுற்ற கனிந்த கோவைக்கனியதர மாதுரியத் திருவாய்மொழியமைந்த போற்றத்தக்க சரித அற்புத ஸ்ரீ கணதேவனாகிய என்னிடத்தில் அமைந்த சித்தன் என்சித்தன், ஆகித்தியானயோகியாயிருக்கவேண்டும் என்பதாம். தேவரீரைத் தரிசிப்பவர் யாவருமே தேவரீர் சித்தராவரே அதுவே தேவரீரது தியானமாவெனின் அல்லவாம், என்னையே பரம புருடார்த்தமெனக் கொண்டவனாகி, இருக்கவேண்டும்; இவ்வண்ணம் பகவதேகாகார சித்தவிருத்திரூபத்தியானன்மக சம்பிரஞ்ஞாத சமாதிநிஷ்டன் இரசிய அவஸ்தானாதி முன்மொழிந்த நியமத்தானே யெப்போதும், மனதை யொருமைப் படுத்திச் சமாதியப்பியாச அதிசயத்தானே நிறுத்திய மனத்தையுடையவனாகிச் சருவவிருத்திபு பரமரூப நிர்வாண பரம மோக்ஷபரியவசாயினி யென்னது சொரூப பரமானந்தரூப நிஷ்டையைத் தத்வசாக்ஷாத்கார் வாயிலாக அடைந்திடுவன்.

அந்தர்தான ஆகாசகமனுதி சித்திபலன்களை யடையமாட்டான், எல்லாவற்றினின்றும் விரக்தனுய முமுக்ஷுவிற்கு அவற்றி னபேக்ஷையின்மையின் இதனுனேயே யுத்தாலகர் தேவர்க ளானே யழைக்கப்பெற்றபோதினும் அவரைப் பொருட்படுத் தாமல் நிருவிகற்ப சமாதியையே செய்துகொண்டிருந்தனர் என்பதாக ஸ்ரீ ஞானவாசிட்டத்தின் கண்ணே கேட்கப்பெறு கின்றது. யோகசூத்திரமருளிய ஸ்ரீ பதஞ்சலிபகவானுலும் பூதபௌதிகாதி யான்மவிஷயக சம்பிரஞ்ஞாத சமாதியை அந்தர்தானுதி துச்சபலவேதுவாக வெகுவாய் விரித்து, அவற்றிற் கபவர்க்கவுபயோகி யான்மசமாதி விரோதித்தன் மையானே, தன்னத்தக்கமையைச் சூத்தரித்துள்ளார்:— அவை சமாதியிலுபசர்க்கங்களாம் வியுத்தானத்திற் சித்திக ளாகும். திவ்யகுணங்களைக் கவர்வனவாமவை, சமாதியில்= அபவர்க்கபலத்தில், உபசர்க்கங்களாம்=இடையூறுகளாம், ஆகலின் மோக்கம் அவாவினரால் அவையாண்டுபேக்ஷிக் கத்தக்கனவேயாம், ஆண்டபேக்ஷையுளதாமாயின் மோக்கத் தினின்றும் பிரட்டனுகிவிடுவன் யாங்ஙனம் கிருதகிருத்தியத் தன்மையயடைவன், ஆன்மஞானமில்லாமல் இனிதான கிருதகிருத்தியத்தகைமையிலதேயாமன்றே,இவை சுவான்ம ஞானத்தில் உபகாரம் செய்வனவோ அல்லவாம், மற்றே வியுத்தானத்திற் சித்திகளாகும், இதனையே கருதிக் கூறப் பெற்றதாம்:—

திரவியமந்திரங் கிரியைகாலஞ் சத்தி திகழிவைகணல்ல னவாஞ் சித்திநல்கும், உறவியநற் பரமான்மபதத்தைமேவ வுபகாரமெள்ளளவு மிலவேயில்லை, சருவவிச்சை லாபமெ லாஞ் சார்ந்தியாகச் சருவான்மலாபமது தானேயுண்டாம்,

மருவதுசித்தியின் வாஞ்சைதனிலே மூழ்கி மக்கினமா மனத்தினனுன் மருவலெங்ஙன்.

இவ்வண்ணம் ஏகாக்கிரபூமியின்கண் சம்பிரஞ்ஞாத சமாதி சாற்றப்பெற்றது, நிருத்தபூமியிலசம்பிரஞ்ஞாத சமாதியைச்சாற்றுவாம். எப்போது விசேஷ நியதமாய சர்வஞானியத் தகைமையை யடைந்த சித்தமானது, இராஜதமங்கடந்ததால் அதி சொச்சத் தன்மையானே சருவவிடயாகாரக் கிரகண சமர்த்தமாயினும் எல்லாவற்றினின்றும் நிருத்தவிருத்தி யுடைமையானே பிரத்தியக் கான்மாவின் கண்ணேயிருக்கும், ஆன்ம ஏகாகாரத்தன்மையானே நிச்சலமாம், அப்போது, சருவவிருத்தி நிரோதமாகவே சமாகிதனெனப் பெறுகின்றான். இந்த அசம்பிரஞ்ஞாத சமாதிக்குச் சாதனமியாது கொலாமாலோவெனின்? சருவாசாநீக்கமேயாம், இயமாதி யோகசாதனங்களிம்பப் பெற்றனவாம், என்றாலும் வைராக்கியமே அஷ்டாங்கயோகப் பிரவர்த்தகமாய அந்தரங்க யோகசாதனமாம், அதுவும் அபரம்பரமெனவிருவகையாம்:—அபரமும் யதமானம் வியதிரேகம் ஏகேந்திரியத்வம் வசிகாரம் என நான்குவகையாம், அவற்றுட் சாராசாரவிவேக உத்தியோகம் யதமானவைராக்கியமாம், விவேகப்பயிற்சியானே இத்துணைத்தோடங்கள் பக்குவங்கள் இத்துணை யெஞ்சினவாமென்னும் பகுப்பு வியதிரேக வைராக்கியமாம், கண்டகேட்ட விடயப்பிரவிருத்திக்குத் துக்கான்மத்தன்மைப் போதத்தானே அதனைவிடுத்து மனத்தின் ஔத் சுக்கியமாத்திரமாகச் செய்தநிலைபெறு ஏகேந்திரிய வைராக்கியமாம், விதிருஷ்ணத்தன்மையே வசிகாரவைராக்கியமாம். அவ்விவ் வபரவைராக்கியம் அஷ்டாங்கயோகப்

பிரவர்த்தகத் தன்மையானே சம்பிரஞ்ஞாதத்திற்கு அந்தரங்கமாம் அசம்பிரஞ்ஞாதத்திற்கோ பகிரங்கமாம், ஆண்டந்தரங்கமோ பரவைராக்கியமாம், அது சகலப்பிரபஞ்ச விவகாரவைதிருஷ்ண்யரூபமென்பது யோகசாஸ்திர மரியாதையாம். உத்தாலக தேவசம்வாதம் ஸ்ரீ ஞானவாசிட்டத்திற் காணப் பெறுவதிவ்வாறும்:—

இந்தமிக்க பேருலகினிற் றற்பதத்திருக்கு மம்முனியைக்கண், டந்தரஞ்செறி சித்தர்விண்ணவர் குழுவற்புதப் பலபேரும், வந்துசுற்றின ரம்பையர் நிரம்பினர் வாசவன் றனிமூதூர், தந்தளிப்பவ னங்கவையனைத்தையுந் தள்ளினன் விருப்பின்றி.

அலங்கன்மாத ரிங்கிதங்களைச் சைசவத்தறிகிலா னெனச்சற்றுங், கலங்கலாத கெம்பீரமாமதியினன் கடவுள்வான் பேற்றெண்ணம், விலங்கியன்ன தன்னுநந்தவீட்டிலே மேவினன்மதியாறு, துலங்கியோங்கிய வுத்தராயணத்திலே சுடர்விடுகதிரென்ன.

மூவராகிய முதல்வரு மமரு மொய்த்த சித்தரும் வாழுஞ், சீவன்முத்தியாம் பதமடைந்தருந்தவன் செறியுமானந்தத்தி, ரேவலின்றிய நிறைவினு லானந்தமுதிர்ச்சியாம் பதமுற்று, ஞேவதான பேரானந்தமதுவி லவ்வறிவினுற் றிகழ்வுற்றான்.

ஒருகணஞ் செறிவருட நூறெனினு முயர்ந்தவப்பதமுற்றோர், வருபவந் தருமேதுவாய்க் காண்பன மருவுமிவ் விழிபேவார், பெருமையான விப்பதத்தி லுத்தாலகன்பிறைகளோ ராறிலே, யருகுறுவகைசித்தி பூமியைக் கடிந்தமைந் திருந்துனைவுற்றான்.

விலதாலே, ஒரு திண்யோகத்தைப்பயின்றிடுபவன்றனு
லொழிப்பனவிம்மூரசாம், மிருதிலோபங்களிவற்றினே யாத
ரமேவுருமையினுமே.

வி. ஸ்மிருதிலோபச்ச=வாதாதி மிருதியால் அனுஷ்டிக்கத்தக்கயோகாங்க விஷயத்தின் நினைவின் நாசமுமாம், மூகத்வம்=அதிவாதத்தன்மையானே ஊமைத்தகைமையாம், பதிர்யம்=மிகக் காற்றடித்தலானே செவிட்டுத்தகைமையாம், மந்ததா=பிசாசாதி சேஷ்டா தரிசனத்தாலே மிருதுத் தன்மையாம், ஜ்வர:=மிகுந்த வெம்மையானே தாகமாம், ஜடதா=ஆமவாதாதியானே ஜாட்டியமாம், சத்யோஜாயதே=உடனேயுண்டாம், தோஷாஜ்ஞானத=கூறியதோடங்களின் அறியாமையாலே, ஹி=நிச்சயமாக, யோகிந:=யோகிக்கு, யோகாப்யசனசாலினு=யோகத்தைப்பயிலுஞ் சீலனல், ஏதேதோஷா:=இத்தோடங்கள், பரித்யாஜ்யா=விடத்தக்கனவேயாம், ஏதேஷாம் அநாதரேஹிச=இவற்றின் அநாதரத்தினுலேயோ, ஸ்மிருதிலோபதயோ=ஸ்மிருதிநாசாதிகள் உண்டாவது த்ருவம்=திண்ணம்.

(அ - கை) யோகிகட்காகாராதி நியமத்தை யருளல்:-

சு. நாதிஸஂஜநதோயோ ஶீதஸஂஜஞாதிநிதி,தஃ
நாதிஜாமி,தி,ஸிேஃதிஸ-ுவ யோசஂஸஹா<ஸு,வங்.

க. உண்டிபினை மிகுக்காம லெப்போது மொறுக்காமற், கண்டுயிலே மிகுக்காமற் கண்விழிப்பை மிகுக்காமல், திண்டிறலே மேவுறுவன்றிண்புயனே யோகியிவன், அண்டிய யோகத்தையசா நிசமும் பயில்கற்றே.

வி. ந அதிபுஞ்ஜன்=மிகப்புசியாதவனாய், சதா= எஞ்ஞான்றும், யோகீ=தியானநிஷ்டன், ந அபுஞ்ஜன்= அயிலாதவன் அல்லனாய், ந அதிநித்ரித:=மிகத்துயிலாத வனாய், ந அதிஜாக்ரத்=மிகவிழியாதவனாய், பூப=மன்ன வனே, யோகம்=நிட்டையை, சதா=எப்போதும், அப்ய சந்=பயின்று, சித்திமேதி=சமாதிசித்தியை யடைவன். ஹே மகிபனே! யோகியானவன், மிகப்புசிப்பவனாய் மிகப் புசியாதவனாயாதல், மிக்குறங்குபவனாய் மிகக் கண்விழிப் பவனாயாதல், யோகாப்யாசஞ் செய்து சமாதி சித்தியை யடையமாட்டான், ஆகலின் ஆகார நித்திரையாதிகள், யோகியினால் அளவாகவே செய்யத்தக்கனவாம் எனவிதித் தருளப்பெற்றனவாம். 12

(அ - கை) இவ்வண்ணம் தேச சுத்திகால சுத்தி ஆகார நித்திரை நியமும் ஆசன சித்தியின் பொருட்டரு ளப்பெற்றது. அவ்வாசனம் பிராணாயாமம் என்னுமிரண் டுமே முன்னரே யருளப்பெற்றது. சுவேத அசுவதர வுப நிடதத்தில் ஆசன ஜயபூர்வகயோகம் விதிக்கப்பெறுகின் றது:

மூன்றிலுன்னதமாய் நிறுவியேயொப்பாய் முடலினையிருத்த்,, தேன்றனிந்தியங் கண்மனத்திறை விறு வியின் பிரமத்துடுபத்தா, லான்றநல்லறிஞன் றுன்கேவீர சேகரவாரியணருளாற், பூன்றபுன்னதிகளொன்றிமெல்லாப் பொருவரு வெருவருநிலையே.

பொருள்:—மனத்தினது நிக்கிரகம் பரமபுருடார்த்த சாதனமென்று முன்மொழியப் பெற்றது, அதுவே யுபாய மில்லாமற் பிராணிகளினாலே செய்யமுடியாத காரியமா

மென்று தடையோடுகூடிய தாயைப்போலச் சுருதி மாதா ஆண்டுபாயமுரைத்தல்:—

பிரமத்தினிட்டை பெரிது செய்திடுகவெனப் பெற்றது முன் எங்ஙனம் சமாதிகரணம் எனவா சங்கித்து அதன் பிரகாரத்தைக் காட்டல்: இப்போது சரீரம் கிடைத்த அதிகாரிக்கு ஆன்மஞானப்பொருட்டு யோகசாதனங்களைக் கூறல்: பதுமாசனாதிகளுக்குள் ஏதாவதொரு ஆசனத்தையினிது கவர்ந்து சரீரஸ்தாபனப் பிரகாரத்தைக் கூறும்வாயிலாகப் பிரத்தியாகாரங்கூறிக் கப்பலைப் பற்றலானே சமுசார சமுத்திரத்தைத் தாண்டல்கூடுமெனல், உதரந்தோள்களிலும் தனங்களின் மத்தியிலும் வாயு பூரணத்தானே யுன்னதத் தகைமையடைதலைத் தாபித்து, உரக்கிரீவ சிரங்களை யுன்னதங்களாகச் சரீரத்தில்மைத்து, சிரத்திற் கழுத்திலிருதயத்திற் செவ்வேயிருத்தறணைப்புரிவித்து, அல்லது காலைமத்தி மாலைகளில், மூன்றங்கங்களை யுன்னதமாகவுடைய சரீரத்தை நேராக நன்குதாபித்து, தண்டம்போல நெளியாமலிருத்திக் கெட்டுப்போம் சரீரமானபடியினாலே அதிலாசைவைக்காமல் வாயு மிகச்சிறக்கும்வரை பயிலலாகாது, என்பது ஒப்பின்குறிப்பாம், உன்னதத்தானே யாலசியாதியிராதாம் ஸ்தாபிதத்தானே பிரேத ஆசனாதியபாவமாம்; விநாசினியாய சரீரத்தில் அத்தியந்தம் ஆஸ்தையைவிட்டு வாயுப்பிரகோபத்தை வர்ஜித்து, தன்னதீன ஆசனத்தில் ஆலசியாதியற்றிருக்கவேண்டுமென்றதாயிற்று; சும்மாவிருத்தல் கூடாதாம் மற்றோ இந்திரியங்களைப் பிரத்தியாகாரமும் செய்யவேண்டுமெனல்:—

இருதயபதுமாகார ஐந்து சித்திரமாம்சகண்டத்தில்,

வெளிஞான கருமகாரணங்களாய இந்திரியங்களை புலன் பரிக்கடிவாள பூதமான மனத்தினுலே நன்ருக நிரந்தரம் புகும்படி செய்வித்து; கருமேந்திரியங்கள் நன்கு நிலைத்த சரீரத்தன்மையானே தாமே வியாபாரங்களினின்றும் உபரதங்களாம், ஆகையினுல் ஆசனத்திற் காண்டுபயோகமாம், பிராணுயாம அங்குசத்தானே பிராணயானையின் இஷ்டப்படி சஞ்சாரநீக்கம், பிராணுயாம உபயோகமாம், இயம நியமங்கட்கு அதிர்ஷ்ட விசேஷகரத் தன்மையானே, தாரணைத்தியான சமாதிகட்கும் ஜிதேந்திரியத் தன்மையிற் பாவிதத்தன்மையுண்மையின், பிரத்தியாகாரம் எஞ்சாநிற்கும், நிற்கவே, இயம நியமங்களினுலேயுண்டாய சமுசார வைராக்கியத்தையுடைய விசுத்தபுத்தியானவன் ஆசனத்தினுலே கருமேந்திரியங்களை வெற்றிகொண்டு, விடயங்களை நினைத்துக்கொண்டு குதித்தோடும் ஞானேந்திரியங்களாகிய குதிரைகளை விடயங்களிற்ருேட தரிசனமானசக்கடிவாளத்தானே, மீளவும் தன்னிருதயத்திற் சேர்ப்பிக்குக என்பது கருத்தாம். தேசகாலவஸ்துபரிச்சேத சூனியப்பிரஹ்மஞான ஓடத்தானே, உடுபம் = நீர்ப்பிரவாகந் தாண்டுங்காரண காஷ்டக்கட்டுவிசேடம், நன்ருகத் தாண்டுக வித்வான், பிரணவமாம் ஓடத்தாற்ருண்டுக வெனினும் அமையும், பிரணவப்பொருள் பராபரப்பிரஹ்மமாம், எவற்றைத் தாண்டவேண்டுமென்னின் பயங்கரமான சமுசார நதிகளையென்க, நதிகளைப்போல வெளிமுகமாக ஓடும் இந்திரியங்களை யென்பதாம்; பிரத்தியாகாரத்திற்கும் இதுவே செயல் எனினும் பிரத்தியாகாரம் கோபாலனைப்போல அடக்கமுடியாத காளைகளைப்போல வலிதிலேயே இந்திரிய அசுவங்களை இதயமாமிடத்தில் மனமாம் வடத்தாற்கட்.

டும், அவ்வாறு கட்டப்பெறினும் இந்திரியக் குதிரைகள் கொழுத்த இடபங்களேபோல, மனமாம் வட்டத்தையுங் கொண்டு வெளியோடிப்போம், தாரணைத்தியான சமாதிகளாம் கசைகளவசியம்வேண்டும், ஆதலின் முரணின்றும் அவற்றிற்கும் ஆண்டுபயோகமாம். நதிச்சதத்தானே விக்ஷேபமாத்திரங் கூறப்பெறும், விக்ஷேபமியாவுமே அநர்த்தவேதுவென்பது வெளியாம், அவ்வபிப்பிராயத்தானே யெல்லாம் என்றதாம், எல்லாப்பிரவிருத்திகளுமே எல்லா இந்திரிய அர்த்தங்களின் அநர்த்தஹேதுக்கள், என வெண்ணிலேம், இரண்டுலகத்திலும் பெரும்பாலும் இன்பமும் காண்டலின் எனக்கடாவி விடையிறுக்கல்:—ஒவ்வொரு சரீரத்தில் ஒவ்வொருபோது வெளிமுக விந்தியங்கள் இன்பப் பொருட்டாம் என்பது வெட்டவெளியேயாம் என்றலும், ஆண்டும் க்ஷயாதி ஜன்மபயம் மூடர்கட்கும் உண்டாயிருத்தலின், தன்முயல்வினலாதல் தன்முயல்வின் பலத்தினுதல் மிகவச்சத்தை என்றும் எங்கும் எல்லாச் சரீர்க்கவர்ச்சிகளிலும் உண்டாக்குவனவாம். விக்ஷேபத்திற்கு ஆவரண நீக்கமில்லாமல் எல்லா வடிவத்தாலும் நீக்கமின்மையின், ஆவரண விக்ஷேப வடிவ அவித்தை தாரணைதியான சமாதி ஜன்னிய பிரஹ்மசாக்ஷாத்காரத்தானே நசிக்கும் என்பதாம். சம்சாரசரித்துக்கள் அவித்தை காம கருமப் பிரவிர்த்திதங்களாம், பயங்கரங்களாம், பிரேத திரியக்குமேல் அடைவைச் செய்விப்பனவாம், புனராவிருத்தியைத் தருவனவாம் ஆசை நிர்மிதவாசனையேதுக்களாம், பதனகாரணங்களாம், இத்தகைய துக்கங்களைக் கடக்கவேண்டுமென்று சுருதி யோக்கிய அதிகாரியை நோக்கி யுபதேசிக்கின்றது. பெரியோரும் கூறுவர்:—

உபாசனைகள் நின்றிருந்து படுத்தாதல் செய்கவென அநியமமா அல்லது இருந்தே யெனநியமமாவென வையமுள்ளதாகவே, அநியமம் என்பது பூர்வபக்ஷம், சித்தாந்தமோ இருந்தே யுபாசனைகள்செய்க, வென்பதாம், என்னை, கமனாதிகட்குச் சித்தவிக்ஷேபகரத்தன்மையானே இருப்பவனுக்கே உபாசனைகளின் சம்பவமிருத்தலின், தியானத்தானும்—உபாசனைகட்கு தியாயதியர்த்த தியானரூபத்தன்மையால், தியானிப்பதற்கும் ஏகவிடய நாட்டமுடைய இருக்கும் கொக்காதிகளிடத்தில் பிரயோகங்காண்டலின் இருந்தேயுபாசிக்கவேண்டும்; அசலத் தன்மையைபேக்ஷித்தும்—தியானிப்பதேபோலும் பிருதிவி, என்பதன் கண்ணே, பிருதுவியால் அசலத்தன்மையை யபேக்ஷித்துத் தியான உபசாரம் காணப்பெற்றது, அந்தலிங்கத்தானும் இருந்தேயுபாசிக்கவேண்டும்; ஸ்மரிக்கின்றார்களும்—தேயந்தாயதிற் றன்னுடையாசனந்திரமாய், நேயமாய்ச்செய்து'' என்பதாதியினானே யான்றோர்கள் உபாசனையின் பொருட்டு ஆசனம் ஸ்மரிக்கின்றார்கள், ஆகலின் இருந்தே யுபாசிக்க வேண்டுமென்பது துணியப்பெற்றதாம். ஆண்டு நியதாஹார ஜாகர:—நியமமான ஆகாரத்தையும் விழிப்பையும் உடையவனாகி; "ஆகாரசுத்தியேற் சத்துவசுத்தியாம், சத்துவசுத்தியேற்றுருவமாமிருதி, மிருதிலாபமே லெலாக்கிரந்திகளின் விப்பிரமோக்ஷம் வெகுவாகும்மே'' வித்தையின் சாதனமிதுவாம், சப்தாதி விஷயவிஞ்ஞானம் போக்தாவின் போகப்பொருட்டுக் கவரப்பெறுகின்றதாம், அந்த விஷயவுபலப்தி லக்ஷண விஞ்ஞானத்தின்சுத்தி, ஆகாரசுத்தியாம், இராகத்துவேடமோக தோடங்களினாலே தீண்டப்பெறாத விஷயவிஞ்ஞான மென்பதாம், அவ்வாகார சுத்தி

மெய்யறிவிடையேயந்த, வேகமாய மனத்தினை மெல்லவே, யேகமாக விருத்திகலாதுநீ.

யோகாப்பியாசப் பிரகாரமிதுவாம்; மாலை சந்தன வனிதாதி யபிலாஷைகள் சங்கற்பத்துண்டாயினவாம், அசோபன விடயங்களில், அழிகின்றவைகளில், அழகினவை யாம் என்னும் அத்தியாசம் சங்கற்பமாம், அதுவோ நன் ருகக் காமங்களைக் கற்பிக்கின்றது, அவ்வாறே மிருதியு முளது:—காமனே யறிவேனுன்றன்மூலஞ் சங்கற்பந்தன் ணு, ணுமமாய் வருவாயன்றோ. அவ்வெண்ணத்துளவாய காமங்களை யெள்ளிசுனகன் கக்கியபாயசமேபோல விடய தோட தரிசனத்தால் விட்டொழித்து, மாலை சந்தனவனி தாதிகளிற்போலவே, பிரஹ்மலோகாதிகளிலும் அணிமா தியஷ்ட ஐசுவரியங்களும், உள்ள ஆசைகளையும் விட்டொ ழித்திடுக, உபவாசவிரதியினால் ஏதாவதொருதினத்தில், விடப்பட்டபோதினும் அன்னவாசை மீண்டு முண்டாம் அவ்வாறுண்டாகலாகாது ஆகையினால், யாவற்றையுமே விட்டொழிக்கவேண்டும்; பற்றேயிருக்கப்படாது; இவ்வண் ணங் காமங்களைவிட்டு இதனுனே காமபூர்வகத் தன்மை யுண்மையின் இந்திரியப் பிரவிருத்திக்கு, அஃதிலதாகவே, விவேகத்தோடுகூடிய மனத்தானே இந்திரியசமுதாயத்தை நன்ருக அடக்கி யுபராமத்தை யடையவேண்டும், திருவி ழாப்பார்த்தலாதியும் தியானத்திற் கிடையூறேயாம். சின் யாத்திர ஆன்மாவின்கண்ணே சம்ஸ்தா=சமாப்தி, கரக உதக நியாயத்தானே அது ஆத்ம சம்ஸ்தமாம், சம்பூர்வ திஷ்டதாதுவிற்குச் சமாப்திவசனத் தன்மையுண்மையின், பிரஸம சம்ஸ்தன் அமிர்தத்தையடைகின்ருன் எனப் பிர யோகங்காணுதலினுலும் என்க., எனவே இவ்வாறு மனத்

ரூபாவனை கூடாமையின், அதனுனே, தூலசூக்கும கிராகிய சம்பந்த சித்தம், ஆண்டுச் சமாதியையடையும், இவ்வண்ணமே பிறவற்றினும் காண்க. ஒவ்வொன்றும் மூன்று விதமாம், அதிலிருப்பதாந் தகைமை அதன் மயத்தகைமை தற்பாவ்யத் தகைமை யென்னும் பேதத்தாலென்பதாம்; ஆகலின் இங்ஙனம் க்ஷீணவிருத்தியையுடைய சித்தத்திற்கு இரஜ தமோமலமற்றவதற்கு படிகமணியைப்போல அதிசௌச்சமாயிருக்குமதற்கு, இச்சமாபத்தி கள்முறையாக ஒன்பதுவிதமா யடைவுறும்; சித்தப்படிகமானது சுத்தசித்தில் தன்மாத்திரத்தில் அடைவுற்று, பனிக்கட்டிபோலத் தாத்பாவ்யத்தை யடையாநிற்கும், ஆண்டிது முறையாம்:—முதற் கிராகிய ஸ்ரீகணபதி விக்கிரக தூலப் பிரதிமை ரூபத்தில், திருஷ்டியைத் தரிப்பவனு யெப்போது திரிவிதமாய திருக்கொருமையாமோ அப்போது மனத்தமென மலரப்பெறும், ஆண்டாதியது அருச்சுனனுக்குப் பாசகட (பரிசகூட) சப்தாதி கிரகசகிதம் திருக்கொருமை பாரதத்திற் காணப் பெறுகின்றது, இவ்வண்ணம் பாணக்காரனுக்கு, கண்டு, சப்தாதி கிரகரகிதம், சமனஸ்கவதாதியில் ஸ்மரிக்கப்பெறுகின்றது, இங்ஙனம், ஸ்ரீகணபதிப் பிரதிமையில் ஸ்துலத்தில் (ஸ்தூல) தேக அசங்கத்தால், சிதந்திரமாம்போது அதன் கண்ணுற்றதென வறையப்பெறும், இவ்வவத்தையில் மூர்த்தத்திற் சடத்தன்மை மறைகின்றது, இதனுனே பக்தர்கள் தங்களாராத்தியங்களோடு ஆண்டா னடிமைத் திறத்தானே மாபலிபாணுதிகள் விவரிக்கின்றூர்கள் எனக் கூறப்பெறுகின்றது ஈண்டே சித்திற் றன்மாத்திர சொரூபத்தில் ஆன்மவ்தன் பிரதிபிம்ப கருப்பமந்தக்கரணம் ஏதே யுபாதியை நோக்கிப்

டைகுகின்றதோ அதனையே ஆன்மா வேணுமென்ணி அதன் வாயிலாகச் சுகாதியனுபவிக்கும், இதுவும் நனைக்கனைக் காயங்களில் வெளியாம் பேய்க்குப் பரசரீர ஆவேசத்திலறியப்பெறும், ஆண்டாதியவற்றில் வெளியாம் தாற்பாவ்யம் மனத்தினுக்கு, பேய்க்குப் பரசரீரத்திலோ வேற்றுமைக் கவர்ச்சியிருந்தபோதினும், போகமாத்திரந் தோற்றலின் தன்மயத் தன்மையேயாம் தாத்பாவ்யமிலதாம், இங்ஙனம் ஸ்ரீ கணபதி விக்கிரகத்தில், பாவனாதிசயத்தாற் சித்தம் புகும்போது, யோகியானவன் கீடபிருங்க நியாயத்தானே ஸ்ரீ கணபதியின் சாரூப்பியத்தையும் பரானுக்கிரகாதியிலை சுவரியத்தையு மடைவன், அதனைக்கண்டாம் சிவமூர்த்தியைப் பாவித்த திருநந்திகேசுவரருக்கு அதனினும் நிரதிசய பாவனையால் ஸ்ரீ கணபதி தாத்பாவ்யமும் அனுபவிக்கப் பெற்றபோது அத்தேகத்திற்கே கிரகணபாவம் அபரோக்ஷிக்கப்பெறும், கிரகிக்கப்பெறும் இதனால் என்னும்விற்பத்தியினாலே கிரகணபதத்தாற் கரண சமுதாயங் கூறப்பெறும், ஆண்டுச்சுருதியின்கண்ணே பிராணன்களினின்றுந் தேவர்களும், தேவர்களினின்றும் உலோகங்களும், என விழி முதலிய் தசங்களினின்றும் ஆதித்தியாதி தேவர்களுண்டாயினார்கள், தேவர்களினின்றும் அவர்களானே பிரகாசியங்களாய சகலலோகங்களும் உண்டாயினவாம், அதன் பின்னர், அரசனுடைய ஆணையை யினிதடைந்து. சேனாதிபதியாதிகள் நகரத்துள்ளே எங்ஙனம் புகுகின்றார்களோ அங்ஙனம் பரமேசுரருடைய திருவாணையை நன்கடைந்து வாக்கபிமானியாகிய அக்கினி வாக்கேயாகித் தனது துவாரமாகிய முகம்புகுந்தது, வாயுப்பிராணனாகி நாசிகையிற் புகுந்தது, ஆதித்யன் சக்ஷுவாகி யக்ஷங்களிற் புகுந்த

னன்" வாக்கபிமானி யக்கினி வாக்கே யாகாதெனினும் அதற்கு வாக்கின்றிக் காக்ஷிப்படாமையின் வாக்கிற்கும் தேவதையின்றித் தனது விடயக் கிரகண சமார்த்தியமின் மையின் அவற்றிற்கு ஏகலோலீ பாவத்தால் அபேதங்கூறியதாம், தேவதைகட்கே பரமேசுரரானே பிரவேசம் ஏவப்பெற்றதெனினும், கரணங்களாலன்றி யவற்றிற்கு நேரே அயில்வதாதிபோக அசம்பவத்தானே அவற்றிற்கும் பிரவேசம் பொருளால் ஏவப்பெற்றதேயாம், என்றவற்றிற்கும் அது கூறப்பெற்றது; இதுவும் ஸ்ரீ வியாசபகவானுலே சூத்திரிக்கப் பெற்றுளது:—ஜோதியாதி யதிஷ்டானமோ அது கூறப்பெறுதலின்" ஈண்டு ஆதித்தன் சக்ஷுவாகியென்பதாதி யிந்திரியங்களின் தேவதாதீன சேஷ்டையுடைமைச் சுருதிக்கு சக்ஷுவினுனே ரூபங்களைப் பார்க்கின்றான் என்னுஞ் சுருதியோடு விரோதமுளதா இலதாவெனவையுற்றவழி, உளதாமென்பது பூர்வபக்ஷம், சித்தாந்தமோ, ஜோதியர்திகளினுலே—ஆதித்தியாதி தேவதைகளினுலே, ஏவப்பெற்றே, வாக்காதிகள் சேட்டிக்கின்றன, என்னை, அத்தேவதைப் பிரேரணையும் ஆதித்தியன் சக்ஷு என்பதாதி சுருதியினுலே கூறப்பெறுதலின், சக்ஷுவினுனே யென்னும் சுருதியினும் தேவதையால் ஏவப்பெறுந்தன்மை நிஷேதிக்கப் பெறாமையின் அதனுலிதற்கு விரோதமாகாதென்பது துணிபாம். அதாவது அக்கினியாதி தேவதைகளினுலே வாக்காதி இந்திரியங்களின் பிரேரணை யங்கிகரிக்கத் தக்கதாம் ஏனென்றால், தேவதையின் பிரேரணை அக்கினி வாக்காகி யென்பதனுனே கேட்கப் பெறுதலின் என்பதாம். எனத் தத்தம் விடயசகிதமாக அக்கினி யாதித்யாதி தேவதைகட்கு வாக்

குச் சக்ஷுவாதி பாவங்கேட்கப் பெறுகின்றது, அதனால் முழுவதுமேயாய விராட்டுக்கிரகண சத்திதம் இந்திரியக் கூட்டம், சூத்திர அபர நாமதேயம்புகும், இதனானே சாங்கியர் கரணங்கட்கு விபுத்தன்மையை யங்கீகரித்துச் சரீர தேசத்தில் விருத்திலாபங் கூறுவர், அக்கினிக்கே போலும் கடையுந் தேயத்தில் இவ்வவத்தையிற் சித்தம் சரணத்த மெனக் கழறப்பெறும், ஆகலிற் சர்வவிடயங்களையும் ஒரே போதில் ஒளிர்விக்கும்போது தன்மயமா மெனச் சாற்றப் பெறும், யானே யிவ்வியாவுமாயிருக்கின்றேன் என்றெண்ணும்போதோ கிரகண தாத்பாவ்யத்தை யோகியானவன் அடைந்தவன் ஆவன் எனக் கூறப்பெறுவன், இந்திரியங்கட்கும் நீடம் இருதயம், வாக்கிருதயம் சக்ஷு இருதயம் மனோ இருதயாதி மந்திரலிங்கத்தானே, கரணங்கள் இருதயம்புகும்போதோ, இருதயாகாசத்திலிரா நின்ற முக்காலத்திய காமங்களின்றரிசனமாம், அப்போது, மனம் இருதயத்தமென வியம்பப்பெறும், அக்காமங்களையுந் துச்சமாக்கி யான்மாவைக் காணும்போதோ ஆன்மாவிற் சூத்திர சதங்களைக்காண்பன், அந்த அவத்தையிலந்தக்கரணம் பகிர்முகத்தன்மையால் அகமென்னும் சப்தத்தானே யறையப்பெறும், யானே பிரஹ்மாண்ட சதங்காண்போனா யிருக்கின்றேன், என்னும் அனுபவத்தால்; இதுவே கிரகீத்ரு அஞ்சிதத்தன்மையாம், அப்போதுண்முகமாகச் சத்தாகவிருக்கின்றேன் என்றுமாத்திரம் அனுபவிப்பன்; இது கிரகீத்ருபாவ அனுபவமாம், இதுவே பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் சுருதியினானே கூறப்பெறுகின்றது இதுவே சாங்கியர்கட்கு சத்துவபுருஷ அன்யதாக்கியாதி யென்னும் வேறு பெயரையுடைய் குணபுருஷாந்தர

ஞானமாம் இதுவும் உபரமமாகவே மனம் ஆத்ம சம்ஸ்த மாம், அதனாற்றான் இஃதருளப்பெற்றது. ஒன்றையுஞ் சிந் திக்க வொண்ணாது என்பது; ஈண்டும் விரமேத் தென்பதே யாம், அதனானே மெதுவு மெதுவாக விராமத்தை யடைந் திடுகவென வியாக்கியானிக்கப்பெற்றது. ஈண்டு சனைசனை ருபரமேத் புத்யாத் ருதிக்ருஹீதயா, ஆத்மசம்ஸ்தம் மன: க்ருத்வா நகிஞ்சித பிசிந்தயேத் என்னும் ஸ்ரீ பகவத்கீதா சுலோகத்தை ஸ்மரித்துக்கொள்க அற்றேற் சூத்திரத்திற் கிராகியாதிகளில் அதிலிருப்பதாந் தன்மை அதன் மய மாந்தன்மைச் சமாபத்திகள் இரண்டே கூறப்பெற்றனவே யாங்ஙனம் தாத்பாவ்ய சமாபத்தியெனவும் மூன்றாவதாகக் கூறப்பெறுதல் எனின்? ஆண்டுக் கூறுவாம்:—

பேததரிசிகளாய அவ்வியோகிகட்கு தோற்று மிவ் வியாவுமே இவ்வான்மாவாம்'' என்னும் சுருதி சித்தமாய சர்வத்திற்கும் ஆத்மமாத்திரத்தன்மை யங்கீகாரமின்று மெனை இரண்டே சமாபத்திகளாம், அதனையுணர்ந்த நம் மனோர்க்கோ, மூன்றாவது சமாபத்தியுமுளதாம், இத னானே ஸ்ரீயாஸ்கரரானே கூறப் பெற்றதிதுவாம், யாவன் எந்தத்தேவதையை அகமென வுபாசிக்கின்றானோ அவன் அதனது தாத்பாவ்யத்தை யநுபவிப்பன் என்னுமாகமம், இதுவேதாத்பாவ்யமென்பது வெளியாம், இதனையே சுரு தியுமறையும்:—யாவன் எதனை யகமென வுபாசிக்கின்ற னனோ அவன் அதனையே யடைவன், இதனானே புருஷக் கிராகியக் கிரகண கிருஹீத்ருதாத்பாவ்யங்கள் முறையே யனுபவித்து ஆன்மாவாய சிதிதத்துவத்திற் சித்தத்தில், தன்மாத்திரத்தன்மையையு மனுபவிப்பன் அகம்பிரஞ்ஞா னத்தில், உபராமம் அடைகவென வருளப்பெற்றதே ஆண்

டுபரதி எங்ஙனம் எதனுல் இயற்றத்தக்கதாகும் எனின் உரைத்தும்: அவசியம் எனக்கு யோகம் உண்டாமென்னு தைரியத்தோடுகூடிய, செய்யத்தக்கதென்னும் நிச்சயவபு மதியினலே பையப் பைய சாஸ்திராசார்யர்களானே யு தேசிக்கப்பெற்ற பூமி கைச் சயக்கிரமத்தானே மனே நிரே தரூப வுபரமத்தைச் செய்க, பலாத்காரமாகச் செய்யற் மிக முயன்று வருந்தாமற் சமமாகின்ற வேண்டுகொளா றன் முயல்வால் விநோதந் தன்னுற், பகர்மனமாஞ் சிறு கவை நிறுத்தல் வேண்டும், என்பதால். பூமியின்வெற் முறை இவ்வாரும்:—

பூமிகளுன்காம், வாக்குப்பூமி மனேபூமி யகங்காரபூ மகத்தத்துவபூமி யென்பனவாம், இவற்றினது முறையா ஜயம் பூமி கை ஜயமாம், அவற்றுள் வாக்காதி சர்வேந் ரிய வியாபார நிரோதத்தானே மனேவிருத்திமாத்தி சேடமாக நிலைபெறுதல் வாக் பூமி வெற்றியாம், இந் முதற் பூமி வெற்றியுளதாகவே, கோபரியாதிக்கே போனும் இயற்கையேயாய் வாக்கு நியமம் அடைவுறும், அதன்பின் சங்கற்ப விகற்பாதி சகல மனேவியாபாரத் தியாகத்தால் அகங்காரமாத்திரமான ஸ்திதிரூபம் இரண்டாவதான மனேபூமி வெற்றியாம், இது உளதாகவே மயங்கிய பால மூடர்க்கேபோனும், இயல்பாகவே மனமிலாமையுளதாம், அதன்பின் யானிவன் மைந்தன் யானிவன் றந்தை என் றிவ்வண்ணம் வெளியாய் அபிமானிக்கும் வடிவ விசேடா கங்கார வியாபாரத்தியாகத்தானே இருக்கின்றேன் என்று இத்துணை மாத்திரமாக அபிமானிக்கும் வடிவ சாமானிய அகங்காரம் எனப்பெயரிய மகத்தத்துவமாத்திரமான நிலை பெறு மூன்றுவதான அகங்காரபூமி வெற்றியாம், இஃதுள

தாகவே சொற்ப நித்திரை யடைந்தவனுக்கு விசேஷ அக்ங்காரம் தானே சுருங்குதல் போலும் சுயமாகவே அதன் சங்கோசமுண்டாம், அதன் பின்னர் இருக்கின்றேன் என்பதான இத்துணை மாத்திர அபிமானரூப சாமானிய அகங்கார வியாபாரத்தினது உபதியாகத்தால் நிருபாதிக சின்மாத்திரமாக நிலைபெறுதல் வடிவ நான்காவது மகத்தத்துவ பூமி ஜயமாம், இஃதுள்ளதாகவே நிருபாதிக சுத்த ஆன்மாவாகிய துவம்பத இலக்கியம் சாக்ஷாத் கரிக்கப்பெறும், அவ்விப் பூமி காசதுஷ்டய ஜயம் கடவல்லி சுருதியானே கூறப்பெறும்:—

வாக்கதும் எத்திடைவைக்கு மம்மனம், போக்கிடும் புந்தியுட் புந்திமானிலே, யாக்கிடு மந்தமானி வையனைத்திலுந், தாக்கறுஞ் சாந்தமாந் தன்னிற் சாந்தமாம்.

ஆன்மாவை யடைதற்குச் சாதனீ பூதமாய ஞான உபாயத்தை யறைதலாமிது, விவேகியானவன் சங்கரிக்குக, எதனை, வாக்கை, வாக்கை யுபசங்கரித்த பேரதினும் வியாபாரங்களோடு கூடிய இதர இந்திரியங்களின் உபசங்காரம் ஆகாதவழி அம்மாத்திரம் ஞான சாதனம் ஆகாதேயெனின், எல்லா இந்திரியங்கட்கும் வாக்கீண்டுப லக்கணமெனக் கொள்க, எவ்வதிகரணத்தில், மனத்தில், அம்மனத்தையும் பிரகாச வடிவமாய புத்தி யான்மாவிலுப சங்கரிக்குக, புத்தியோமன, ஆதிகரணங்களை வியாபிக்கின்றபடியினாலே அவற்றிற்குப் பிரத்தியக் கான்மாவாம், சங்கற்ப விகற்பான் மக மனத்திற்குப் புத்திதந்திரத் தன்மை யுண்மையின், அதனை யதன் கண்ணிலயம் செய்ய வேண்டியபடியினாலே பிரகாச சாமானியமும், மனாதிகரண வியாப்தியினாலே அவற்றிற்குப்

பிரத்தியக்காத்மாப் புத்தியெனவும் கூறப்பெற்றதாம், ஞானமாம் புத்தியையும் பிரதம ஜன்னிய மகத்தான்மாவில் உபசங்கரிக்குக, ஆன்ம மகத்துச் சத்தங்களானே வியாபகப் பிரத்தியக் கான்மாக் கூறப்பெறுதலின் எங்ஙனம் பிரதம ஜன்னிய ஹிரண்யகர்ப்ப புத்தியில், வியஷ்டி புத்திக்குப் பிரவிலாபனங் கூடுமெனின்? அதனுக்கா பரியாயத்தில், சாந்த ஆத்மாவெனச் சிறப்பித்தலின். சர்வ விசேஷங்களும் நன்கடங்கியதின் கண்ணே இதற்குலயப் பிரதிபாதனைத்தால், அதனைக் கவர்ந்தது பூர்ணதாகாம், வியஷ்டி புத்திக்குச் சமஷ்டியில் விலயமேல், அதற்குப் பரம காரணத்தில் விலயம் கூறவேண்டும், அஃதின்றி நிர்விசேடத்தில் விலயம் எங்ஙனம் என்னற்க; ஆன்ம மகத்துச் சப்தங்களானே காரண சகித சூக்ஷ்ம சகித ஹிரண்ய கர்ப்ப சம்பந்த புத்தி கவரப்பெறுதலின், தோடமின்றென்க. சமஷ்டி வியஷ்டிகளின் சாமிய இலய நிமித்த மென்னெனின், சொச்சத் தன்மையேயாம், பிரதமஜம் போலச் சொச்ச இயற்கையதாக ஆன்ம விஞ்ஞானத்தைப் பாக்கிக்கொள்க, அவச்ச சுபாவகப் பிரதமஜ விஞ்ஞானத்தைப் பிரத்தியகான்மாவின் உபாதியுத விஞ்ஞானமாகச் சம்பாதித்துக் கொள்கவென்றதாம்; அந்த மகத்தான்மையும், சாந்த, சர்வ விசேடங்களும் அதன்கணுள்ள வாடுவ, அவிக்கிரிய, சர்வாந்தர, சர்வ புத்தி விருத்திகளின் சாக்ஷியாய முக்கிய ஆத்மாவின் கண்ணே உபசங்காரஞ் செய்தல் வேண்டும், விசேடணங்களும் ஒன்றுயக்கொண்டு மேலதுவெனக் கண்டு கொள்க இந்தப் பூரி ஜயக்கிரமத்தை கருதியருளியே மையர்மைய உபாமத்தைப் படைக வென்றருளப் பெற்றதாம்; இதன் விஸ்தாரமோ யோகபாடிய டீகாதிய ஜீவன் முக்திப் பிரகரணாதிகளிற் கண்டு கொள்க. இம்முறை

யானே. மனத்தை நிரோதித்து என்ன செய்யத் தக்கதெனின், நிருபாதி கதுவம்பத இலக்ஷிய பிரத்தியக்குச்சைதன்ய ஆன்மாவில், முடிவுடையதாய்ச் சருவாகார விருத்திரகிதமாய் மனத்தை யாக்கி, அனான்மாவையேனும் ஆத்மாவையேனும் ஒரு சிறிதையுமே சிந்தியாதொழிக, விருத்தியானேவிடயம் செய்யாதொழிக; ஆநாத்மாகார விருத்தியிருப்பினோஇல்லைகையேயாம், சமாதியாகாதாம், ஆத்மாகார விருத்தியிருந்தாலோ சம்பிரஞ்ஞாத சமாதியாம், ஆகலின் அசம்பிரஞ்ஞாத சமாதித்திரப் பொருட்டு, எம்மனோ விருத்தியையும் உண்டாக்கலாகாது, இங்ஙனமாயின் எங்ஙனம் ஆன்ம சாக்ஷாத்காரமெனின், என்னற்க, அதற்கு ஆன்மசைதன்ய ரூபத்தன்மையானே விருத்தி ரூபத்தன்மை யின்மையின்; ஆயின் தற்குத் தானே யெப்போதும், இருப்புண்மையால் யோகாப்பியாசம் வீணே யாமெனின்? ஆகாதாம், அனான்ம விருத்தியை யெஞ்ஞான்றுமிலலாமற் செய்தற்கு, நிவிருத்திரூப நிரோத சமாதி பயிலல் வேண்டியதேயாதலின், சிரேயோ மார்க்கத்திற் கூறவும் பெற்றுளது:—

ஆன்மாஞ்ஞான் மாகார வியற்கைத் தாய் அவத்திதஞ்சித்தமா மெப்போது, ஆன்ம யேகாகாரமா மதனான் அனான்ம திருஷ்டியை யகற்றியே வாழ்க.

அங்ஙனமன்றே:—சமித்து நெய்யாகுதி களினாலே மேலும் மேலும் விருத்தியாகச் சுவாலை விட்டெரிந்த அக்கினியானது, சமித்தாதி க்ஷயமாகவே முதற்கணத்திற் சிறிது சாந்தியை யடையும், இரண்டாவது முதலிய கணங்களில் அதனினும் அதனினும் சாந்தியை யடையும், அதுபோல் அநாத்ம விடய சங்கற்ப விகற்பாதி நாநாவிருத்திக.

ளானே வளரா நின்ற மனமானது நிரோத வசத்தால் உத்த ரோத்தரம் சாந்தியை யடையும், அவ்விருத்தியைப் பிரசாந்தவாகி தாவென யோக சாஸ்திரத்தில் விவகரிப்பர். இதனானே ஆன்ம விருத்திக் கூட்டம் பஞ்சாமற் செய்தபோது, மேகமறைப் பகன்றபோது சூரியப் பிரகாசமேபோல தானே யான்மப் பிரகாசமாம், விருத்தியைப் பிரேக்ஷியாதாம், அதி சூக்ஷுமமதியானானே காணப்பெறும், யாண்டுந்தான் றன்னுற் றன்னைக்கண்டு தன்னிலேமகிழும், ஆன்மபோதாகாரமதனானே, என்பதாதிகளும் ஆன்ம விருத்தி நிரோதமாம்போது, ஆன் மப் பிரகாசத்திற்குத் தானே யிருப்புண்மையாயின், அதன் நிரோதமாத்திர அபிப்பிராயத்தால் தன்பாற்புத்தி நிருசி யத்துவாதி விவகார ரூபமெய்பது, அத்வைத வஸ்து பஞ் சாத்திற பிரபஞ்சமாம். 13

(அ - கை) விராமமெய்த வையாப்யமா என்றருளிய தையே வியாக்கியானித்தருளல்:—அப்பேதல் ஆன்மாவின் கண்ணே நிலைபெற மனத்தைச் செய்வான் முயன்றயோ கிக்கு ஒருபோது மனம் சஞ்சல வியாபாரமாதலின், விடய நாட்டமாக வெளியிற் செல்லுமாயின் அப்போது என்ன செய்யத்தக்கது எனின் அருளல்:—

சு. ததஸ்தத꞉ ஸ்தைர்ய [illegible] ந்யேத்,
யதோ யதோ [illegible] சஞ்சலமஸ்திரம் ॥

க. விஞ்சி யெங்கெங்கெழுந்து விழுந்திடுஞ், சஞ்சலம் மனந்தன்னைத் திருதியா, லஞ்சுருதி யுத்தக வவ்விடத்தி னின், றஞ்சவாதரந் தன்வயமாக்குவாய்.

வி. இந்த, சஞ்சலம் சித்தம்—சலனமுள்ள மனமானது,

யத்ரயத்ர = யாண்டுயாண்டு மங்கையாதி விடயங்களிலே னும் பகையாதி விடயங்களிலேனும் இராகத்துவேடங்களில், பிரபலமாக, அநுகச்சதி = செல்லாநிற்குமோ, யாண்டுப்பற் றடையதாமோ என்றபடி; ததஸ்தத: = அவ்வவ்விடயங்களி னின்றும், ஏதத்க்ருஷ்த் = இச்சித்தத்தைக் கவர்க, கவர்ந்த பின், த்ருத்யா = சத்துவசம்பந்தத்தால், ஆத்மவசகம் = தன திச்சையின் அதீனமாக, குர்யாத் = செய்க, ஆத்ருத: = பிரத் யக்குத் தற்பரத்தை விட்டுவிட்டு வெளிமுகத்தை நாட்டாத படியாதரவுடன் செய்துகொள்க. சாத்விகீதிருதியும் ஸ்ரீபக வானாலே திருவாய்மலர்ந்தருளப் பெற்றுளது:—

மனஞ்செயுந் தொழின் மன்னுயிரிற்றொழி, லினஞ்செ யிந்தியஞ் செய்தொழிலென்றிவை, கனஞ்செய்தேறிலுங் கண்டுபொறுத்தலுஞ் சினஞ்செயாமையுஞ் சாத்திகதிருதி யே, சமாதி சமநியதமாய யெம்முயல்வினாலே மனப்பிராணேந் திரியங்களின் சேஷ்டை நியமிக்கப்பெறுமோ, எதனாற்றான் நியமிக்கப்பெற்ற மன ஆதிக்கிரியைகள் நூலைக்கடந்து பிறண்டு செல்லாவோ, அத்திருதி சாத்விகீயாம், மனதுக்கு மங்கையராதி சம்பந்தம் துக்கஹேதுவாம், அதனீக்கமே துக் கநீக்கமாம், என ஸ்மரிக்கப் பெறுகின்றது:—

ஆகுஞ்சந்துளத்தன்புறுஞ் சம்பந்தத்துணையுஞ், சோக சங்குகளிதயத்திற் றன்புறுத்திடுமே, ஏகுமெவ்வெதி னவ் வதினிடர் விடுமதனால், ஆகுமியாவையு மகன்றிடத்துயரா று வற்றியா. யாதினின்யர்தினின் நீங்கியான்நோதல் அதனின் அதனின் இலன்.

எத்தனை யெத்தனை நீத்தாயகிலத்தைப் பாஞ்சுடரா யெறிக்குஞ்சோதி, யத்தனையத்தனை தோன்றுமெந் நர்ண்மட்

டனைத்தும் விடாயங்காண்மட்டுந், தத்துவமாம் பொருளாய் தாச் சுகலமும்போனற் சேடந்தானுஞ்சித்தர், தொத்தற வேற்றுமையெல்லாம் போகாதேற் சம்மானசோதிநீதானு என்பனவர்தியாம்.

ஆத்ருத என்றருளிய தானே நீள்போது இடைவிடா மைகளுங் கவரத்தக்கனவாம்; அவ்வாறே யோகசூத்திரமும் அறைகின்றது:—அதுவே தீர்க்ககால நைரந்தர்ய சத்கார சேவித திடபூமியாம். அவ்வியோகமே நீள்காலஞ் சேவிக்கப்பெற்றதாய், இடைவிடாமற் சேவிக்கப்பெற்றதாய் ஆதர வோடுஞ் சேவிக்கப்பெற்றதாய் திடபூமியாம், முற்பூமியை வெற்றிகொண்டு பிற்பூமியை வெற்றிகொள்வான் ஆற்றல் உடையவன் ஆவனென்பது சூத்திரப்பொருளாம் அற்றால் இப்போதுள்ள பயிற்சி சுயம் திடமுற்றதாய், அநாதி சஞ்சித வியுத்தான சமஸ்காரங்களை எங்ஙனமமிழ்த்தும் எனவாசங் கித்தியம்பியதாமிது திவசங்களாலாதல் மாசங்களாலாதல் சமாதிசித்தியை வாஞ்சிக்கின் அப்போது இருப்பன நான்கே வேதங்கள், அவற்றைக் கற்கச்சென்ற மாணவகனுக்கு ஐந்து நாள்களாயினவே, இன்றளவும் அவன்வந்திலனே யென்னும் மூடவசன அனுசாரியே இவ்வியோகியாவன்; ஆகலின் சம் வற்சரங்களாலாதல் ஜன்மங்களாலாதல் தீர்க்ககாலம் யோகஞ் சேவிக்கத்தக்கதாம், அவ்வாறே ஸ்மரிக்கப்பெறுகின்றது:— அநேக ஜன்ம சம்சித்தனுனவன் அதன் பின்னடைவன் பரம மாங்கதியை நீள்காலஞ் சேவிக்கப்பெறுவனவாயினும் விட்டு விட்டுச் சேவிக்கப்பெறுவனவாயின் உண்டாய யோக சமஸ் காரங்கள், உடன் பின்னுண்டாவனவாய் விட்டகாலத்தனவாய வியுத்தான சமஸ்காரங்களானே மறைபட்டன்றோபோம், ஆகலின் இடைவிடாமற் சேவிக்கவேண்டும், சற்காரம் — ஆதர

ரம், ஆதரமின்றேல் இலய விக்ஷேப கஷாயாதிகள் அடையா நிற்கும், ஆகையினுலாதரவோடுஞ் சேவிக்கத்தக்கதாம், தீர்க்ககாலாதி மூவகையானே சேவிக்கப் பெற்ற சமாதி திடபூமியாம், அது அதிப்பிரபல துக்கத்தினுலும் அசைக்க முடியாததேயாம், அவ்வாறே ஸ்மரிக்கவும் பெறுகின்றது:— இருந்தவ னெதன்கண் ணின்பமேயாகிப் பெருந்துயரானும் பேதிக்கமாட்டான். இம் மிருதியின் விரிவிதுவாம்:—

யாதொன்றிந்தப்புலனறியா வளவிலின்பமாயிருக்கும், யாதொன்றினைச் சென்றடைந்தோர்கள் பின்னையதனி னிரண்டாகார், யாதொன்றினைப்பெற்றவரிதனின் மிக்கதொப்பதுண்டென்னுர் யாதொன்றிந்தவறிவுக்கே யறிவாய் நிற்குமதினின்றோர் வஞ்சர்வேல்கொடு மார்பினெறியினு, மெஞ்சவேதழன்மூடியெரியினு, நஞ்சினுரழுகை நலியினு, மஞ்சிடாது வானந்தமாவதே.

எதன்கண் ணைந்தக்கரண பரிணாம விசேடமாம்போது, அதீந்திரியமாமோ அதாவது வாக்கு மனது முதலிய புலன்களைக் கடந்ததாமோ, வாக்குமனமும் கண்ணு மற்றுள விந்தியங்களுமே, நோக்கரிய பரஞ்சுடரை நோக்கி யிவை செல மாட்டா, என்பதாதி சுருதியிருத்தலின், இதனுனே ஆத்தியந்திகம்—அநந்த நிரதிசயம், புத்திக் கிராகியம்—நுண்மையாய்ச் சூக்கமாமதியானே யுண்மையாய்ப் பார்க்கவது வந்திடுமே, என்பதாதி சுருதி புகன்ற சூக்குமத்தன்மை நுண்மைப் பெயரிய தமோ ரஜசற்றதாந் தகைமையடைவுற்றுச் சுத்த சத்துவம் பிரவகிக்கப்பெற்ற புத்தியினுலே கவரப்பெறு மத்தகையதா மின்பத்தை யாவனறிவனே, யாண்டு தானிருக்கு மிவ்வறிஞன் ஆத்துமதத்துவ சொரூபத்தினின்

றாம் அசையவேமாட்டாறோ, அதனை யோகமென்றுணர்ந்து கொள்ளல்வேண்டும், ஈண்டதீந்திரியமென்றது விடயசுக விலக்கப் பொருட்டாம், புத்திக்கிராகியமென்றது நித்திரையின்ப விலக்கப்பொருட்டாம், சுழுப்தியிற் புத்திக்கு லீனத் தன்மை யுண்மையின், சமாதியிலோ விருத்தியில்லாமல்தற் கிருப்புண்மையின்; இது கூறப்பெற்றுளது ஸ்ரீ கௌடபாத ஆசாரியரால்:—

நீங்குந்தூங்கினல் நீக்கினுமதுதா னீங்கிடாதன்றே, யாண்டிருப்பவன் அசையான் என்பதையே நன்குவிரித்து நோக்குமிடத்து இவ்வாறாம்:—எங்கிரதிசய ஆத்மசுகவியஞ் சக விருத்தியற்ற சித்த அவத்தை விசேடத்தை யடைந்து, வேறுலாபத்தை யதனினு மதிகமாக வெண்ணமாட்டாறே, ஆன்மலாபத்தினும் அயலொன்றிலையால் என்னுஞ் சுருதி யிருத்தலின், ஆகலின் விடய போகவாசனையினாலே சமாதி யின் பெருஞ்சலன மாகமாட்டாதாம், சீதவாத மசகாதி யுபத் திரவ நிவாரணப்பொருட்டும அலைதுண்டாகாதாம், எப்பர மான்மசுகமய விருத்தியற்ற சித்தாவத்தா விசேடத்தில் இருக்கும் யோகியானவன் பெருஞ்சத்திர நிபாதாதி நிமித் தப் பெருந்துயராலு மசையமாட்டான் என்றால் என்னே யியம்புவதாம், துச்சத்தா லென்றுணர்க, எவ்வந்தக்கரண பரிணமம் யோகசேவையாகிய யோகாப்பியாச பாடவத் தானே உண்டானபோது சித்தம், நிருத்தமா யுபசாமத்தை யடையுமோ, விறகிலாத் தீபோலும், காய்ந்த நிலமேலிட்ட சலம்போலும், உபசாந்தி யடையுமோ, விருத்தியில்லாமற் சத்துவவிருத்தி நிரோதரூபத்தாற் பரிணமத்தை யடையா நிற்குமோ; எது பரிணமிக்கும்போது இராஜ தமங்களான் மறைபடாத சுத்தசத்துவ மாத்திரரூப அந்தக்கரணத்தானே

த்தியக்குச் சைதன்ய அகண்டானந்த கனத்தை யறியுப்
ற்றவனுப், அவ்வான்மாவின்கண்ணே மகிழ்ச்சியுறும், அவ்
தக்கரண பரிணாமத்தை யோகமென்றறிந்து கொள்க,
பதாகத் தொடங்கி யநேகஞ் சிறப்புகளானே, எச்சித்த
த்தை விசேடங்கூறப்பெற்றதோ, அச்சித்தவிருத்தி நிரோ
த்தை சித்தவிருத்திமயச் சர்வதுக்க விரோதித் தன்மை
னே துக்கவியோகமாயேயிருந்தேயும், வியோக சப்தார்க
பினும், விரோதிலக்ஷணயினுலே யோகசப்தவாச்யமாக
ணர்ந்து கொள்க; யோகசப்த அனுசாரத்தால் யாதாவ
ாரு சம்பந்தத்தைச் சாற்றுவதில்லையாம்: சம்பந்தம் உணர்த்
பெறுவதுமில்லையாம்; அவ்வாறே ஸ்ரீ பதஞ்சலி பகவானு
டய சூத்திரமுமாம்:— யோகமென்பது சித்தவிருத்தி
ரோதமாம். இத்தகைய யோகத்திற்கு யாது கொலுவமை
மாலோ வெனின்? அதுவும் அம்மிருதியிலேயே காண
ம்:—இப்பரிசு பயில்கின்ற யோகிகாவிலாவிடத்து, மெய்ப்
ிசு நடுங்காத விளக்குப்போல் விளங்குமா, லெப்பொழு
ங்கவனுணர் விவ்வுண்மையிலே சென்றிசையுமப்பொழுது
மாநந்தத்தினையு மடையுமால். நிருத்தசித்த விருத்தியை
டைய அசம்பிரஞ்ஞாதரூப யோகத்தை முயன்றுகொண்
ருக்கும் யோகியி னந்தக்காணத்திற்கு அது உவமையாக
யாகமறிந்தவரால் ஸ்மரிக்கப்பெறும், யாதெனின், காற்
லாவிடத்தில்வைத்த பிரதீபம் சலனவேது விலாமையின்
சையாததேபோலு மென்பதே யுவமையாம், என்றுணர்க.
ச்சலமாகவும் சத்துவ பிருகுதியால் பிரகாசகமாகவும் இருக்
ும் சித்தத்திற்கு நிச்சலமான தீபமே திருஷ்டாந்தமாம்.
வ்வண்ணம் மகாபலத்தை யுடையது யோகமாதலினுலே
வசியம் பயில்த்தக்கதே யாகும், கூறிய பலத்தையுடைய

யோகமானது சாஸ்திர ஆசார்ய வுபதேசங்களின் உண்மைத் துணிவானே பயிலத் தக்கதேயாகும், இத்துணைக் காலம் அனுட்டித்தும் யோகம் சித்திக்கவில்லை யினி யென்னே கஷ்டமென்னும், அனுதாபரகித சித்தத்தால்—இப் பிறப் பிலேனும் மறுபிறப்பிலேனும் அடைந்துவிடலாம் விரைவ தென் என்பதான தைரியத் தோடுகூடிய மனத்தினாலே பயிலத்தக்கதேயாம்.

மனம்போன போக்கெல்லாம் போகாமல் நிறுவ அரு ளியதைப்போல் ஸ்ரீ பகவானும் அருளுவர் :—

வாங்கியைம் பொறிநின்ற மனத்தினை நீங்கிடாவகைநின் னுளிருத்தியே, தீங்கியாவையுஞ் சிந்தைசெயாமையாம், பாங் கியாததுவேயயில் வாயரோ.

சித்தவிக்ஷேபத்தை யுண்டாக்கும் ரூபரசாதிவிடய மத் யில் எவ்வெந்நிமித்த ரூபரசாதியினின்றும் விக்ஷேப நாட்ட மாய் மனஞ்செல்லுமோ சமாதி விரோதியாய விக்ஷேப விருத்தியை யுண்டாக்குமோ, சித்தலய ஹேதுநித்ராசேஷ வெசுவசன சிரமாதிமத்தியில் எவ்வெந் நிமித்தத்தானே அஸ்திரமாய் லயநாட்டமாய் மனஞ்செல்லுமோ சமாதி விரோதியாக நித்திரையென்னப் பெயரிய லயவிருத்தியையுண் டாக்குமோ அவ்வவ்விக்ஷேப நிமித்தத்தினின்றும் லயநிமித் தத்தினின்றும் இம்மனத்தை நியமனஞ்செய்து விருத்தியற் றதாக்கி, ஆனந்தகன ஆன்மாவிலே யேலயஞ்செய்க, விக்ஷே பப்படாதபடி லயப்படாதபடி தடுக்கவேண்டும். இவ்விடயம் ஸ்ரீ கௌடபாதீயவசன் விவரணங்களில் விரிவாம், விஸ்தர பயத்தால், விரித்திலேம்; ஸ்ரீ சூட்டார்த்த தீபிகையினும் காணலாம்.

முதுவிவே கத்தாற்போத மொய்ம்பினு லிந்தவுன்னைக்,
கதுமெனக் கொல்லாநின்றேன் காணுதி கவலைநெஞ்சே,
யிதுதசை யிதுபுண்ணீர் தென்பிவை யுளவுயிர்ப்பாய்ப்,
பொதுளியு வாதமிங்கே யகமெனல் பொருந்திற்றெங்கே.

தசைகள்வே றுதிரம்வேறு தடியென்பு வேறுமெய்யி,
லசைவுவே றறிவுவேறு வகமெனல் பொருந்திற்றெங்கே,
விசைவிழி யிதுதோலீது வியன்செவி யிதுமூக்கீது, பசை
வுறுநாவிதிங்கே யகமெனல் பயின்றதெங்கே.

அகமென லெங்குமாகு மற்பமிங் ககமன்றாகு, நிகழுமிந்
நல்லநோக்கே நோக்கயனெறி வேறில்லைப், புகரில்சின்மயனு
மென்னைப் போதமில் தூர்த்தநெஞ்சே மிகவருத்தினையான்
கன்றை வனச்செந்நாய் வெருட்டுமாபோல.

தெய்வயோ கத்தாலின்று தேறினன்சொ ரூபச்செம்
பொற், கைவழிகவரஞ் ஞானக்கள்வன்மீண் டிவனைச்சேரே,
னைவழிப் பொறிகளொன்று வாதனையற்றிருந்துந், தைவரு
புறனிற்றத்தம் பொறிகளிற்றாவாநின்ற.

வாதனை பொலன்கட்கெல்லா மன்னுகாரணமன்றாகு,
மாதலாற் பூர்க்கமான வைம்பொறி னீவிர்நெஞ்சி, னேதவா
தனைகண்மாற்றிக் கருமங்களெல்லாஞ்செய்வீர், வேதனைத்
துன்பமொன்றுங் கிஞ்சினுமேவா தென்றும்.

கூடுசெயுந்தம்வாயி னூலாற்பொன்றுங் கோசகாரக்கிரு
மிக்கூட்டம்போல, வோடுபொல னனுஞ்சிசுக்காள் மயலால்
வீணே யுலர்ந்திடுவீர் புலனெல்லா முறைபுளான, நீடுமன
னேயொடுங்கிப் பொலன்களோடு நீவேறற்றுத்தும தத்து
வத்தைகேளே, நாடுதிபற்றற்றொன்றாய் முத்தியானிஞானவடி
வினைநிலையாய் நண்ணுவரயே. 14.

(அ - கை) இவ்வண்ணம் அனுட்டிக்கப்பெற்ற யோகத்தினது பலத்தை யருளல் :—

சு. ஏவம் குர்வந் ஸதா யோகீ பராம் நிர்வ்ருதி ம்ருச்சதி, விச்வஸ்மிந் நிஜமாத்மாநம் விச்வஞ்ச ஸ்வாத்மநீக்ஷதே.

க. இந்தவண்ண மெஞ்ஞான்று மியற்றியே, யந்தமில் பதமியோகியடைகுவா, னந்தனை விசுவத்தினிலாந்தனிற், பந்தமாம் விசுவத்தினைப் பார்ப்பனால்.

வி. ஏவம்யோகி = கூறிய வகையானே ஆதரவுற்ற யோகியானவன், சதா = நித்தியம், குர்வந் = யோகநிட்டை புரிந்து, பராம்நிர்வ்ருதிம் = நிரதிசய சுகசம்பத்தை, இஃதிவனுக்கு மேலாஞ் சம்பத்திஃதிவனுக்கு மேலாம்யோகம் இஃதிவனுக்கு மேலாமின்பம், என்னுஞ் சாஸ்திரப் பிரசித்தமான அசம்பிரஞ்ஞாத சமாதியவஸ்தையை யோகியானவன், ருச்சதி = அடைவன இவ்வண்ணம் முக்கிய யோகபலத்தை யருளி விக்ஷேப சம்பிரஞ்ஞாத அவஸ்தைகளில் அவனுக்கவாந்தரபலத்தைக் காட்டியருளல் :—விசுவஸ்மிந் நிஜமாத்மானமீக்ஷதே = உலகத்தில் தனது ஆன்மாவைப் பார்ப்பன், அவ்வாறே சாமகானத்திற் கூறப்பெற்றுளது :—அகமன்னம் அகமன்னாதோ அகமசுலோககிருத் யாவும் என்னால் வியாபிக்கப்பெற்றதாம் என்று காண்பன் என்பது கருத்தாம். விசுவஞ்ச சுவாத்மநீக்ஷதே = விசுவத்தையும் தன்பாற் காண்பன் ; எனக்கவர்ந்தருளியுதைத் தாத்பர்ய அபிப்பிராயத்தினுதல் கிருகீத்ரு சமமாயேனும் என்னும் அபிப்பிராயத்தினுதல் சஙக. சஙஙு யென்னும் சுலோக வியாக்கியானப் பிரகாரமாக வுணர்ந்துகொள்க.

(அ-கை) இவ்விதமாய யோகத்திற்கு அவிநாசி பலத் தன்மையைக் காட்டியருளல் :—

சு. யோ யேந யோகேந மாம் உபைதி தம் ஏவாஹ மாதராத், ஸித்தேந யோகிநம் பாதி தமஹம் ஸம்ஸ்ருதேர்ஜவாத். ||

க. யாவனென்னை யடைந்திடுமி யோகத்தா, லாவலா லடைவே னவன்றன்னையான், மேவவே விடுவிப்பன வனையா, னேவிடேனவ னென்னையுமே விடான்.

வி. துவைதவாதிகளேயாய சாங்கியரும் யோகியரும், அத்தியந்தம் நிபுணர்களே யாயினும், துவம்பதார்த்த மாத்திரம் அறிபவராய் முறைமுத்தி மாத்திரத்தை யடைவார், பிரஹ்மாத்ம அபேதபோத அபிவியங்கியமாய் இங்கே யுண்டாம் முத்தியை யடைந்திடார் என்னுமிதனை யருளல் :— யோகேந=யோகத்தினாலே, ய:=யாவன், மாம்=என்னை உபைதி=அடைவனோ, தம்=அவனை, உபைமி=அடைவேன், அகம்=யான்; ஆதராத்=ஆதரவுடன்; ஸித்தேந யோகத்தினாலே எந்த யோகியானவன்.

"காரணத்திற் றாலமிட்டுக் கரணத்தைக் காரணத்திற், கரணகாரண மிலாதிற் காரணமதனையிட்டு, புரணமாமெஙிக ளிந்த விதமதிற் புகுத்திமேலாம், சரணைதயிங்குநல்ல சரணென வடைகுவாரே."

என்று புராணம் புகன்ற முறையாய், சத்தியஞான அநந்த ஆனந்த ரூபமாய வென்னை யடைவன், நதி சமுத்திரம்போலும் நவிலப்பெறுகின்றதாவென் ? அங்ஙனமன்றே கேட்கப்பெறுகின்றது :—

பாடுபெருவ மான்றும் மற்றந்தப் பரமனையாயவிருமே

யார்மே, லோடுமொறல்லாமுத்தி புக்கொன்று புருவுபே ரொழியுமாபோல.

ஓடாநின்ற ஸ்ரீ கங்காதி நதிகள் கடலடைந்து நாமரூப ங்களைவிட்டு அவிசேட வடிவுடைமையை யடைவனபோல, அவித்தையாலாக்கப்பெற்ற நாமரூபங்களை விடுத்தவனாகி யறிஞன், முன்மொழிந்த அக்ஷரமாகிய பரத்தினின்றும் சச் சிதானந்த பரமாகிய திவ்யபுருடனை யினிதடைவன் என்ப தாம். எனின்? அற்றன்றும், என்றருளல், தம் உபைமியகம் ஆத்ராத் — ஆவலாலடைவேன் அவன் றன்னையான், துவம் அர்த்தம் த்தர்த்தத்தைப் புகுவதேபோலத் தத்தர்த்தமும் துவம் அர்த்தத்தைப் புகும, இதனானே யறிஞானுபவம் யானே மேலும் யானே கீழும் என்பதாதியாக ஆன்மா விற்கு எல்லாவடிவமு முடையதாந் தன்மையைக் கவர்வ தாகும், ஆதிபதத்தானே.

புகலுமுப் பதத்திற்போகம் போக்கியும் புசிப்பானேநா, னிகழுமித் தனைக்குஞ்சான்றாய் நின்றதற் சொரூபனேநா, னிகழ்வதென் பாலென்பா னிற்பதுமிறப்பதென்பான், சக லமுமாதலாலே தற்பரம் பொருளாகின்றேன்.

அணுவினுக் கணுவுநானே யப்படி மகத்துநானே, துணியிலெப் பொருளுநானே சோதியுட் சோதிநானே, பணிவுறத் தகுவேனானே பழையனும் புருடனானே, யிணை தனக்கில்லாவீச னாகியவின்பநானே.

கண்ணனுஞ்செவியு மின்றியுமே காணக்கேட்கக் கட்வே னான், பண்ணனுங்கொழி லெல்லாம்வல்லேன் பாணிபாதமில் லெனினும், பெண்ணனுங்கடந்த விட்டமிங்கே யிருந்துஞ்செல்

வனு மொருவர்க், கொண்ணும்படியன் றெனையுணர வெல்லா முணருகின்றேனன்.

ஓதுவேதம்பலவாலு மோதியுணரப் படுவேனுன, வேத வேதாந்தப் பொருள்களெல்லாம் விளங்கவறிவேனுன், றீது நன்றும்வினை பாணஞ்செனனந் தேகேந்நியம்புந்தி, பூத மைந்துமின்றி யகமிதமாய் நானேபுசிக்கின்றேன்.

சிறப்புடைய தேசுவடிவிற் றிகழ்தலாலு, ணறித்தவடிவாலு மெறியாவடிவினாலு, நிறத்தசுடரானவடிவாக நிகழ்கின்றே, னிறத்தலிலனுன பரமீசனவனியானே.

எனையொழிய வொன்றுமிலை யெலாமென துருவென்று நிகழ்வதோ, ரனுபவம்வந்து விளையுமே லழிவுளதன்றி யமலமா, யினிதுறநெஞ்சி லுறைவதாயில துளதின்றி யெதுவுமா, யனிய மிறந்த பிரமமா யறிவுரு வொன்றையடையுமே.

என்னுங் கைவல்லிய வுபநிடதார்த்தத்தையுங் கவரலாம். ஒரு போதாலங்கட்டி நீர்த்தன்மையானே கண்டது மீண்டு மதனையே யாலங்கட்டித் தன்மையானே கவர்ந்து நீரேயிது என எண்ணுவதே போலும் என்றுணர்க. சுருதியோதுவம் பதார்த்தசுத்தி மாத்திரபரம்ஆம், பேதபரமன்று தத்துவமசி யென்பதே போலும், இவ்வத்தியந்த அபேத ஞானத்தினனே யென்னெனி யருளல் :—தம்=யோகியாகிய துவம் அர்த்தத்தை, அகம் = ததர்த்தமாகிய யான், பிரத்தியக்க பேதமாகக் கவரப்பெற்றவனுகி, மோசயாமி=சமுசாரபந்தனத்தினின்றும் முத்தனுக்குவேன் அசம்பிரஞ்ஞாதத்தை யுடைய சமாதிபவத்தையிலேயே விடுவிப்பேரோவெனில் இன்றென்றருளல் நமுஞ்சாமி=விடேன், அவனுக்கொருபோது

மே நீக்க முண்டாகமாட்டாதாம், ஒருபோது தக்தமாய பேதஜனக அஞ்ஞானமானது மீண்டுண்டாகாமையின்; அற்றேல் துவம் அர்த்தமே பூர்வபோகவாசனையால் ததர்த்தத்தை விட்டுவிடலாமேயெனின் அற்றன்றென்றருளல்:— மாம்சநத்யஜேத்—அவன் என்னையுமேவிடான், போதமடைந்தயோகியானவன் மீண்டும் மயலையடையான், தத்துவ பக்ஷபாதமும் புத்திக்கு இயற்கையாம், பாகியரும் இதுபற்றிப்பகர்வர்:—நிருபத்திரவபூதார்த்த வியற்கைக்கு விபர்யயங்களினலே போதமாகாதாம் பாதமாகாதாம், பலமுடைமையினும் புத்திக்குத்தற்பக்ஷபாத மிருத்தலின்; என்பதாம், மயலனுதியே யாயினும் ஒருபோதுளதாம் ஞானத்தினலே சமூலங்கெடும், அவ்வாறே சுருதியும் அறைகின்றது:—எப்போது மிலங்குவதாம் எப்போது மேகரூபமாம், தன்வடிவத்தாலிப்பிரஹ்மலோகம், பிரஹ்ம வடிவ அவேத்யலோகம் சுவப்பிரகாச சித்தேகரூபமாம், விருத்திசூனியமனத்தையுடைய அகல்மஷ விக்ஷேபசூனிய லய சூனியத்தையுடைய பிரத்தியக்கபின்ன பிரஹ்மபாவத்தையுற்ற யோகியை உத்தமமான நிரதிசய சுகமடையும், சகலகாமங்களையும் விட்டுத் தன்னையே தியானித்துக் கொண்டிருக்கும் யோகி சமுசாரகாரணமாகிய புண்ணிய பாவரகிதனகி அநாயாசமாகப் பிரஹ்மசம்பந்தி அவைஷயிகசுகத்தை, திரிவிதபரிச்சேதரகிதமான சுகத்தை, அனுபவிப்பன். அற்றேல் எங்ஙனம் யோகத்தினலே ஆத்தியந்திக சுகவடைவாம், அதற்கு தத்துவமசியாதி வேதாந்த மகாவாக்கியார்த்த ஞானைக பலத்தன்மையுண்மையின் எனின்? உண்மையே, அவ்வாயிலாக வாயதேயாம் யோகத்திற்கு அப்பயனுடைமை, அதனைக்காட்டுவோம், யோகத்

தோடற்று அதிநிர்மலமடைந்த மனத்தினையுடைய யோகியானவன், தன்னை அவித்தையால் ஆக்கப்பெற்ற தேகாதி பரிச்சேத சூனியமாகப் பிரமாதி ஸ்தாவராந்த சகலசரீரங்களிலும் இடங்கொடுக்குமதிஷ்டானமாக விருப்பதாகவும், அவ்வாறே பிரமாதி சருவப்பிராணிகளும் அத்தியஸ்தமாகத் தன்னிடத்திலிருப்பதாகவும் காண்பன், என்னை, சருவப் பிரபஞ்சங்களிலும் சமமாய நிர்விசேஷப் பிரஹ்மத்தையே காண்டலின், இதனானே சுவாத்மகற்பித பிரஹ்மாதி ஸ்தாவராந்த ஜகத்திற் றொடர்ந்த கேவல சின்மாத்திரரூப சுத்த துவம்பதார்த்த ஞானங்காட்டப் பெற்றதாம். இனிச் சுத்ததற்பதார்த்த ஞானத்தைக் காட்டுவாம்:—எந்த யோகியானவன் ஈசுவரனாகிய தற்பதப்பொருளாம் என்னை, மாயிகதேகாதி பரிச்சேத சூனியமாக எவ்விடத்திலும் சத்துரூபமாய்த் தொடர்ந்திருப்பதாகக் காண்பனோ, அவ்வாறே சகலப்பிரபஞ்சத்தையும் என்னிடத்தில் ஆரோபிதமாகக் காண்பனோ, அந்தப்பிரஹ்ம அத்வைததரிசிக்கு, ஈசுவரன் ஒருவன் என்னினும் பின்னனாக விருக்கின்றான் என்பதாக, பரோக்ஷஞான விடயமாய் அகமாகேன், அவனேயானதலின் அவனும் என்னினும் அன்னியமாய் அவனொருஜீவன் என்பதாக எனது பரோக்ஷஞான விஷயமாகான் யானே யவனாகலின், இதனை ஸ்ரீ பகவானே திருவாய்மலர்ந்தருளுவர்:—

இன்னவர் தங்களி லென்னொடும்வேறா, யுன்னலிலாமையின் ஞானியுயர்ந்தோன், அன்னவனல்லனெனக்கவனுக்கே, நன்னலம் வைப்பது நானும் நலத்தோய்.

ஸ்ரீதருஞானிபென் னுண்மையினுள்ளே மேய்தலினா

லவன்றென்னவேயா மாதலுமிங்ஙனனேக மெனச்சொல், காதலிறந்தபவங்களினுலாம். இருவருக்கும் ஓரான்மத் தன்மையுண்மையின், ஆன்மாவிற்கு வேருய பிரியபதார்த் தம் ஒன்றின்மையின், தனக்குத்தானே இதமாயிருத்தல் கூருமலே பெறலாம், இதனைப் பகவான் பாடியக்காரரும் அருளுவர்:—இரண்டிற்கும் ஆன்மவொருமையுண்மையின் தான் ருனே தனக்குப் பிரியமேயாம்.

வாக்கியார்த்த ஞானமிதுவாம்:—சர்வபூதங்களினும் அதிஷ்டானமாயிருக்கும் பரமேசுவரனுகிய என்னை—தற் பத இலக்ஷியத்தைத் துவம்பத இலக்ஷியத்தோடு ஒருமைப் படுத்தி அகம் பிரஹ்மாஸ்மி யென்று சாக்ஷாத்கரிக்கும் யோகி நித்தியமுக்த சொரூப என்னிடத்திலேயே யிருப் பன் சீவன்முக்தனும் கிருதகிருத்தியனும் ஆவன் அவனிடத் தில் விதி நிஷேத சாஸ்திரம் பிரவர்த்திப்பதில்லை, எல்லா வகையினும் நிகழ்ந்தபோதினும் லோகாநுக்கிரகப் பொரு ட்டுக் கருமம்செய்தபோதினும் செய்யாதபோதினும்வே ருெருவகையாற் செய்தபோதினும், கெடுதலேகிடையா தாம், அருளவும் பெற்றுளது:— எக்குணங்கடந்த நெறியி னில் நடப்பர் கெதுவிதியெது நிடேதமதாம். இப்பொருள் கள் நிறைந்த ஸ்ரீபரமார்த்த தரிசனம்:—

தேறுநெஞ்சினனுய்த் தன்செயலால், வேறுகண்டறி யா மெய்யறிவினு, ஊறிலிந்த வுடம்புடன்; வேறுபெற், றேறி நின்றவனே யின்பமெய்துவான்.

இழியாதிந்த யோகத்தை யென்றுந் தலைநின்றவ னென்று, மழியாவின்பத்தினை யின்பத்தாலே யடையுமது நிற்க, வொழியா வெல்லாவுயிர்களுந் தன்னுள்ளே தானு

மீவற்றுள்ளே, கழியாதெங்குந் தானின்ற பரிசுந் தெரியக் காணுமால்.

யாவனொருவ னென்னை யெல்லாவுயிர்களிடையுமென் னிடையே, மேவ வெல்லாவுயிர்களையும் வேறுகாதே மெய் கான்பான், தேவர் பகைமுன் செகுத்தோனே யவன் யாதேனுஞ் செய்திடினு, மாவவவனுகின்றேன்யா, னது நீயேதுமையுறேல்.

இன்னவர் என உதாகரித்த செய்யுட்களின் அபிப் பிராயம்:—ஆர்த்தன் ஜிஞ்ஞாசு அர்த்தார்த்தி ஞானியென் பவருள் மேன்மையன்யாவனே யென்னின்? நால்வருள் ளும் ஞானியே உயர்ந்தவன், எப்போது மென்னிட்டனு கியே யிருப்பன், இதனுனே யம்மூவரினும் இவன் சிறந்த வனே டாவன், என்னை, அம்மூவருக்கும் சுவார்த்த சித்தி பரியந்தமே என்னிடத் தன்மையுண்மையின் சமயாந்த ரங்களிலும் அவர்கட்குச் சிலபால் என்னிஷ்டையிருந்த போதினும், விக்ஷேபமிகுதியால் விச்சேதமர்வுதால் எப் போது மென்னிட்டையிருப்பதின்றும், எல்லாவற்றினும் விரக்தனய் ஜிஞ்ஞாசுவாய்ச் சற்பிரேமபக்தனுயுள்ளவனு க்கு, எப்போதும் பகவத்நிஷ்டையுளதாம் என்றுலும் ஒரு என்னிடத்திலேயே அன்பிருப்பதில்லையாம், ஞானிக்கோ ஒரு என்னிடத்திலேயே அன்பு மிகுந்திருக்கும், ஜிஞ்ஞாசு விற்கோ தான் விரும்பிய ஞானத்தின் சாதனமாக என்னி டத்தில் அன்பிருக்குமென்பதால் அவனுக்கு ஏகபக்தித்வ மிலதாம், நிட்காமப்பிரேமபக்தனுக்கு ஏகபக்தித்வ மிருந்த போதினும், ஞானிக்கு யான் பிரியனுயிருக்கும் வண்ணம் சர்வஞ்ஞனுய்ச் சர்வசக்திமானுயுள்ள வென்றுலும் கூற

முடியாததேயாகும், வெட்ட வெளியேயாமிது உலகத்தி லும் வேதத்திலும், ஆன்மாவே யெல்லாருக்கும் நிருபாதி கப் பிரேமவிடயமென்பது, சுருதியுமுளது:—ஹேமைத்தி ரேயி! ஜாயையின் காமப்பொருட்டு ஜாயை பிரியமென்ப தில்லையாம், ஆன்மாவின் காமப்பொருட்டோ இவையா வும் பிரியமாம் ஞானிகட் கான்மாவே யான், அது அகம் பிரஹ்மாஸ்மியென ஆன்மாவையே யுணர்ந்தது, எனச் சுவான்மத்தன்மையானே அவனால் அடையப்பெறுதலாத லின், அவ்வாறே, அந்த ஞானியும் எனக்கு மிகப்பிரியனா வன், என்னான்மத்தன்மையானே தன்னான்மதரிசியாமவ னுக்கும் என்னாற் றன்னான்மத் தன்மையானே அடையப் பெறுதலாந் தன்மையுண்மையின். எவரெவ்வா றெனை யடையுகிற்பாரோ அவரை யவ்வாறே யன்புசெய்வேனி யான், என்பதேயெனது நிலைமையாம், எவர்கள் எவ்வகை யானேன் எப்பல உத்தேசத்தோடும் பரமேசுரனாகிய அகில பலந்தருமென்னை, இனிது பற்றிடுவார்களோ, அப்பலங் கொடுத்தலானே யான் அவர்களை அனுக்கிரகிப்பேன் ஆக லின் நிட்காமமாகப் பஜிப்பவர்கட்கு மோக்ஷத்தையும் சகாமமாகப் பஜிப்பவர்கட்கு ஐசுவர்யாதிகளையுமே கொடு க்கும் எனக்கு வைஷம்மியம் ஏற்படாதாம்,எவ்வெத்தானி யத்தை யுத்தேசித்து எவ்வெவ்விரையை நடுகின்றார்களோ அவர்கட்கு அவ்வவ்வாறே கொடுக்கும் பூமியேபோ லும், ஆயின் என் ஆர்த்தாதிகள் உனக்குப் பிரியமல் லரோ, உன்மாயையைக் கடவாரோ வெனின்? இன்றாம், ஆர்த்தாதிகளாகிய என்னுடைய பக்தர் எவருமே மகத் துக்களே யிவர்கள் முற்பிறப்பிற் செய்த புண்ணிய புஞ் சத் தன்மையால், அன்றாயினோ, என்னைப்பஜிக்கவே மாட்

டார்களன்றோ, ஆர்த்தன் ஆதியோரும் எனையொழிந்து வேறு தேவதையைப் பஜிப்பவரும் காணப்பெறுதலின், ஆகலின் அவரியாவரும் எனக்குப் பிரியரேயாவர், என்னன்பன் எவனும் எனக்கப்பிரியமாவதே கிடையாதாம், என்னை யடைந்தவர்களுள் எவனும் அமுக்தனுவதே கிடையாதாம், ஆயின் எங்ஙனம் ஞானிமாத்திரம் சிறந்தவன் எனின், முன்மொழிந்த மூன்றுவிசேடணங்களாலுமென்க; ஞானியானவன் யானேயாவன் ஆர்த்தாதிகளோ, என்னவர்கள் ஆவர்கள், இது ஒருமத அனுவாத மல்லவாம், மற்றோர் சர்வஞ்ஞனுகிய சருவதேசிசர்கட்கும் தேசிகனுகிய என்னுடை துணிபாம், ஞானி யெப்போதும் யானுகவே ஒருமைப்பெற்றிருப்பன், பரமேசுரனுகிய என்னையே உத்தமோத்தமமாக அடையத்தக்க பலமென்று பற்றியிருப்பன் வேறொருபலனையுமேகருதான், இதுவே யென்னேக பக்தியாம். 16

(அ-கை) இவ்வாறுய யோகியினுடைய தற்பரசாக்ஷிகங்களாய இலக்கணங்களை அருளல்:—

சு. ஸாவெதூவெதரொஷெ க்ஷயிதொஷெ ஸஸ்ரூஷி, ஸூதுஸாஜெ ஹஹஷொதாநி ஸவஹூ ஸாவ வெதியஃ

ஜீவந்க்ஷ ஸயோகீந்த்ரஃ கெவலம் ஸயிஸாஷிதஃ ஸுஹாதீநாஞ்ச தெவாநாம் ஸவீந்த்ரஃ ஸ்யாத்ஜமநூயெ.

க. இன்பினிற்றுயிரி லிதரத்தில் வெறுப்பி லிரும்பசி மகிழ்விழற்சியினில், ஒன்பதன்றனக்கொத் தெவற்றையு

மெனையு முணர்பவ னுலகெலாமுறைந்த, அன்பவன் சீவன் முத்த யோகீந்த்ரன் அரிதினி லென்னிலே யமைவோன், வன்பிரமாதி தேவர்க்கு மெவர்க்கும் வந்தியன் றிரியுலகதிலே.

வி. சுகே=அனுகூலமென்றறிவதில் துக்கே=பிரதிகூலமென்றறிவதில், இதரே=அநுபயவேதநீயத்தில், துக்கஞ்ச இதரஞ்ச வெனச் சமாஹார துவந்துவசமாசமாம் துக்கேதரம், அதன்கண், இம்மூன்றில், சம:=ஒப்போன், இதரத்திற்போலச் சுகத்திலும் துக்கத்திலும் கொள்ளுந் தள்ளும் வேட்கையின்மையன், த்வேஷே=தன்பாற் பரனுண்டாக்கும் போதாம் வெறுப்பில், க்ஷுதி=பசி வறும் போதில், தோஷே=அயலானுற்றும் மகிழ்ச்சியில், த்ருஷி=தாகமாம்போதில், ஒப்போன், இச்சித்த விகார ஹேதுக்களில் நிர்விகாரன், இதனனே, பூதானி=பையிற் பிறப்பன முட்டையிற் பிறப்பன வேர்வையிற் பிறப்பன பூப்பிளந்து பிறப்பனவற்றை, ஆத்மசாம்யேநய:வேத்தி= தனக்கொப்பாக யாவன் உணர்வனோ, துக்கம் எனக்கு வேண்டாம் என்பதுபோலவே தனக்குத் துக்காபாவத்தை விழைபவன் எல்லாப் பிராணிகளிடத்திலும் இம்சையின்மையை எவனுணர்வனோ, மாஞ்ச சர்வகம்ய: வேத்தி= சகல பூதங்களிலும் புகுந்திருக்கும் சீருவான்மாவாகிய என்னையும் யாவன் பிரத்தியக்கனன் யமனத்தனுயே சுயம் யாவன் உணர்வனோ சஜீவன்முக்த:=அவன் ஜீவன்முக்தனுவன். அவன் சருவசாமியதரிசியாதலின் யோகீந்த்ர:= எல்லா யோகிகட்கும் இந்திரனுவன் மேன்மையனுவன், ஜீவன்முக்த்:=சதேகனுயினும் விதேகனேயாவன், அவ்வாறே சுருதியு மறைகின்றது:—ஙஞ்ஞான்று சமஸ்த

காமங்களும் விடுபடுமோ ஆன்மகாமனுய பிரஹ்மத்திற்கு மூலத்தோடும் கெடுமோ எவ்விகாமுந்திரார்த்தங்கள்—புத்திரவித்தலோக ஏஷணைகள், இவ்னது மதியிற் பற்றிக் கொண்டிருந்தனவோ, அஞ்ஞான்று மர்த்தியன் மரண தருமவானுயிருந்தும் மூலத்தோடுங் காமமெல்லா மேலின் அமிருதனேயாவன், அநாத்மவிடய காமங்கள் அவித்யா வடிவ மிருத்தியுக்கள் என்றதாயிற்று; எனவே மிருத்தியு வியோகமாகவே யறிஞன் ஜீவித்துக்கொண்டேய மிருதனுகின்முன், இத்தேகத்திலிருந்து கொண்டே பிரஹ்மத்தை யயில்வன்—பிரஹ்மபாவ மோக்ஷத்தையடைவன், ஆகலின் மோக்ஷம் தேசாந்தரகமனுதியை யபேக்ஷிப்பதில்லை, அதனுல் அறிஞன் பிராணன்கள் கிளம்புவதில்லையாம், இருந்தபடியிருந்தே தமது காரண புருடனிடத்தில் இனிதுவிலய மடைகின்றனவாம், ஈண்டே சர்வான்மாவாயிருந்தே மீண்டும் முன்போலத் தேகித்தன்மையைச் சமுசாரித்தன்மையை எங்ஙனம் அடையாமலிருப்பான் எனின் நுதலுதும்கேட்டி! ஆண்டிது திருஷ்டாந்தமாம், எங்ஙனம் உலகிற் சர்ப்பத்தின் சட்டைவல்மீகாதியில், மிருதமாய் அனுன்மபாவத்தானே யரவால் விடப்பெற்றதாய் கிகழாநிற்குமோ, அங்ஙனமே, இத்தேகம் சர்ப்பத்தானிய முக்தனுல் அநான்மபாவமாக விடப்பெற்றதாய் மிருதம்போல கிகழும், முத்தனே சர்வான்ம பூதனுய்ச் சர்ப்பம்போல ஆண்டே கிகழினும் அசரீரனேயாவன் முன்போல மீண்டுஞ் சசரீரனுகான். காமகர்மப் பிரயுக்த சரீராத்மபாவத்தினுலன்றோ முன்னர்ச் சசரீரனும் மர்த்தியனுமாயினுன், அஃதின்மையினிப்போது அசரீரன் ஆகலினுனே அமிருதனே யாவன் என்பதாம். கண்ணுளனேனும் கண்ணிலன்

போல்வன் வாக்குளனேனும் வாக்கிலன்போல்வன் மன முளனேனும் மனமிலன்போல்வன் என்பதாம், ஸ்ரீமத் பாகவதத்தின்கண்ணும் இது கூறப்பெற்றுளதாம்:—சாற்றியகுணமுமாக்கையு மனமுந் தானலவென்பதை யறிந்தாற், போற்றிய வாக்கையுடனிருப்பதுவும் போவது மறிந்திடயாகி, யேற்றதம்புய மேற்றுகில் கழிவதுவு மிருப்பதும் வெண்ணறைபருகி, மாற்றருமதத்தி னறிந்திடாதொழுகு மாக்களைப் போலுவர்மாதோ, ஈண்டேதுவை யருளல்:—கேவலம்—விருத்தியந்தராகிதனுகி, மயி—அகண்டைகரச என்னிடத்தில், சமஸ்தித:—முடிவு பேறுடையவனுவன், இதனுனே சஜகத்ரயே—அவன் மூவுலகத்திலும், பிரஹ்மாதீனுஞ் சதேவாநாம்—பிரஹ்மாதிகளாலும் தேவதைகளாலும், சகாரத்தால் இதரயோகிகளாகிய சுகசநகவசிஷ்டவாமதேவாதிகளாலும் வந்ய: ஸ்யாத்—துதிக்கப் பெறுபவனுவன். ஈண்டு யோகவாசிஷ்டத்தில் எழு பூமிகள் கூறப்பெற்றுளவாம்:—

ஞானபூமியை முடிவில் பேதமாகநவிலுவர் வந்திய ரவற்றினமக்குநல்ல, தானவிவையிவை யறிதன்ஞானமாகு மறிந்த விவற்றந்தமே யழிவில்வீடா, மானமுறு சுபம் விரும்பல் விசாரமெய்தன் மனஞ்சிறுக நுண்மையிலே மன்னிநிற்றல், லீனமறு சங்கற்பமறல் பதார்த்த வெண்ண மறுத்திட துரியமிவையேழாகும்..

இவற்றுட் சுபேச்சை விவேகவைராக்கிய பூர்விகை, தீவிரி முமுக்ஷை, விசாரணை வேதாந்த சிரவண மனனத்மிகை, தனுமானசை நிதித்தியாசனம், சத்துவாபத்தி அகம் பிரஹ்மாஸ்மியென வித்தியா விருத்திலாப,நான்காவதாம்,

யோகபல பூமியாம், இதன்கண்ணே யோகி பிரஹ்மவித் தெனப்பெறுவன், அசம்சக்தியாதிகள் "நிருவிகற்பசமாதி யினது அவாந்தர பேதங்களேயாம், யோகி சுயமே எழுந் திருக்கும் அந்தயோகபூமி அசம் சக்தியெனப் பெயரிய ஐந்தாவதாம், இதன்கண்ணே யோகி பிரஹ்மவித்வரனெ னப் பெறுவன், எதன் கண்ணே பரயோகிதனுகவே எழுந் திருப்பானே அது பதார்த்தாபாவ நீயென்னும் ஆறாவ தாம்; அதனால் பிரஹ்மவித்வரியான் என வியம்பப் பெறுவன், எதனினின்றும் தன்னுனேனும் அன்னியனு னேனும் எழுந்திருக்கவில்லையோ அது துரியகையென்னும் ஏழாவது யோகபூமியாம், இதன்கண்ணே யோகியானவன் "இவ்வறிஞனே ஆன்மாவின் அயலாக ஒன்றையும் பாரான் ஒன்றையுங் கேளான் ஒன்றையுமறியான், ஆகலின் ஒன்றை யும் பேசான், மேலுந் தன்னிலேயே கிரீடிப்பன் அன்றி மனைவி மக்களாதிகளிற் கிரீடியான், தன்னிலேயே இரமிப் பன், கிரீடை பாகியசாதன சாபேக்ஷையுடையதாம் பிரீ தியோ சாதனுபேக்ஷயற்றதாம், பாகியவிடயப் பிரீதி மாத்திர மென்பது விசேடமாம், ஞானத்தியான வைராக் கியாதி கிரியையை யுடையவன், என்னுமிவன் எல்லாப் பிரஹ்மவித்துக்களுள்ளும் மிகமிக மேன்மையன் ஆவன்" என்னும் சுருதியினுலே பிரஹ்மவித்துவரிஷ்ட னெனப் பெறுவன், இவனே சண்டி யோகீந்திர பதத்தானே கவ ரப்பெறுவன். பூமிகளின் விரிவுரை ஸ்ரீ விரகேசரத்துட் காண்க. இதனை ஸ்ரீ பகவானு மருளுவர்:—

இடானந்தா னின்பந்தான் யாவர்க்கேனு மாயிடு மேற், படாசின் றவைதன்னு முறுவான் பரமயோகியென் பான், நடாகின்ற வாவேலோய் துணிநீயென்று துழா

யலங்க, லடராநின்ற நெடுமுடியோ னருளிச்செய்ய வுவ னுரைப்பான்.

கைம்மாறில்லாதன செய்வான் காதற்றோழன் கடும் பகைஞன், விம்மாதேவர்க்கு மொத்திருப்பான் வேண்டப் படுவான் வேண்டாதா, னம்மாமறை நூனெறி புரிவா னுகாதனவாக்கிடுவானென், றிம்மாநுடவ ரனைவருக்கு மொப்பான் யோகியெனப்படுவான்.

தத்துவ ஞானமனோ நாசவாசனு க்ஷயங்களின் ஏக காலப் பயிற்சியாற், கண்கண்ட துக்கநிவிருத்தி வாயிலாய ஜீவன்முக்திச் சுகத்தை யனுபவித்துக்கொண்டு நுகர்வினை வயத்தால், சமாதியினின்றும் எழுந்திடில், தன்னை யொத் தெல்லாப் பிராணிகளிடத்திலும், சுகமேனும் துக்க மேனும் சமமாக யாவன் காண்பனோ தனக்கனிட்டம் எங் ஙனம் சம்பாதியானோ அங்ஙனம் அயலானுக்கும், துவேஷ சூனியத்தன்மை யுண்மையின், இங்ஙனம் தனக்கேபோலப் பரனுக்குமிஷ்டம் யாவன் சம்பாதிப்பனோ, இராக சூனி யத்தன்மை யுண்மையின், அவ்வியோகி மேன்மை மிக்கவ னுவனென்பது திருவுளச் சம்மதம், பொருளால் இவனி னும் அன்னிய யோகி கேவலந் தத்துவஞான மாத்திர வான்மனோ நாசவாசனு க்ஷயரகிதன் ஜீவன்முக்திசுகத்தை யறியான், விக்ஷிப்த சித்தத்தானே திருஷ்ட துக்கம் அனுப வித்துக்கொண்டுடல் விழும்போது கைவல்ய பாக்யபரமன் எனப்பெறுவன்: ஆகையினால், தத்துவஞான வாசனு க்ஷய மனோ நாசங்களி னப்பியாசம் அவசியம் விதேயமேயாம். அதனப்பியாசப் பிரகாரமோ ஸ்ரீ ஞானவாசிஷ்ட ஜீவன் முக்திப் பிரகரணாதிகளில் விஸ்தாரமாம், சுருக்கமாகச்

சிறிதுகாட்டுவாம் :—இவ் வெல்லாத்துவைதக் கூட்டமும் அத்விதீய சிதானந்த ஆன்மாவின் கண்ணே கற்பிதமாம், ஆன்மாவொன்றே பரமார்த்தமாம், அதுவே யானென்னும் ஞானம் தத்துவஞானமாம், விளக்குச் சுவாலைப் பரம்பரைபோலும் விருத்தி சந்தானவடிவத்தானே நிரந்தரம், பரிணமித்துக் கொண்டிருக்கும் மனத்துக்கு, விருத்தி ரூபபரிணாமத்தியாகத்தானே நிரோதாகார பரிணாமம் மனோநாசமாம் முன்பின் னாராய்ச்சியின்றித் திடீரென்றுண்டாகா நின்றகுரோதாதி விருத்திவிசேட காரணம் சித்தத்துள்ள சமஸ்காரம் வாசனையாம், முன்முன் அப்பியாசத்தானே சித்தத்தில் வாசிக்கப் பெறுதலின், அதனாசுக்ஷயமென்பது விவேகஜன்ய சித்தப்பிரசமவாசனை தாட்டியத்தானே வெளிநிமித்த மிருந்தபோதினும் குரோதாதியுண்டாகாமையாம்; இந்தத் தத்துவஞான மனோநாசவாசனை க்ஷயங்கள் பரஸ்பரம் காரியகாரண பாவமடைந்தனவாம், அங்ஙனமன்றோ :—தத்துவஞான முண்டாகிய வழி பொய்மய வுலகில் முயற்கோடு முதலவற்றிற் போலும் பயனின்மையின் மதிவிருத்தி யெழாமையின் விறகிலாத்தீயே போலும் மனமழியும், மனமழியவே சமஸ்காரத்தைக் கிளப்பும் வெளிநிமித்தம் தோற்றொழியவே வாசனை கெடும் வாசனை கெடவே காரணமின்மையின் குரோதாதி விருத்தியுண்டாகாமையின் மனங்கெடும், மனங்கெடவே சமதமாதி சம்பத்தியால் ஞானமுதிக்கும், இங்ஙனந் தத்துவ ஞானமுண்டாகவே இராகத்துவேஷாதி ரூபவாசனை கெடும், வாசனைகெடவே தடையில்லாமையின், தத்துவ ஞான உதயமாமெனப் பரஸ்பரம் காரியகாரண பாவமறியத்தக்கதாம், ஆகலின் இவை மூன்றும் ஒருங்குசேரப்

பயின்றளவே பயன்தரும் ஒவ்வொன்ருகப் பயிலிற் பயுன்றரா, காய்பருப்போதனங்கள் சேர்ந்தளவே போஜனம் நிர்வாகம் செய்வதே போலும், சேர்ந்த இவற்றிற்கே பல நிர்வாகஞ் செய்யுந் தன்மை யுண்மையின், அவ்வப்பியாசமும் நெடுங்கால மனுட்டிக்கத் தக்கதாம், ஜன்மாந்தர சதம் பயின்ற சம்சார் சந்ததியானது இராகவனே நெடுங்காலம் பயின்ற யோகத்திலைன்றிக் கெடமாட்டா தெங்கும் எனக் கூறியிருத்தலின், ஈண்டு அப்பியாசத்தின் கண்ணும் பிரயோஜன அநுசாரமாக குணப்பிரதான பாவம் உளதாம், முமுக்ஷுவாகிய புருடனுக்கும் விதேகமுக்தி ஜீவன் முக்தியென இரண்டு பிரயோஜனங்களுண்டு, அவற்றுள் விதேக முக்தியை விரும்பினவனுக்குத் தத்துவஞானம் முக்கியமாம் மனோநாசவாசனு க்ஷயங்கள் அமுக்கியங்களாம், ஜீவன் முக்தியை விரும்பினவனுக்கோ மனோநாசவாசனு க்ஷயங்கள் முக்கியங்களாம், தத்துவஞானம் அமுக்கியமாமென்பது விவேகம், ஈண்டு தத்துவஞானத்திற்கு சிரவணமனன நிதித்தியாசனங்கள் உபாயங்கள் என்பது வெளியேயாம், மனோநாசத்திற்கோ யோகாப்பியாசமாம் அதுவும் நிரூபிக்கப் பெற்றதாம், வாசனைக்ஷயத்திற்கோ பிரதிகூலவாசனையினுற் பாதனமாம் வாசனையும் இருவிதமாம் மலினம் சுத்தம் என்பனவாம், பாகியாந்தர பேதத்தால் மலினமும் இருவகையாம், வெளிவிடயத்தைப் பற்றியது பாகியமாம் அதுவும் லோகசாஸ்திர தேகவாசனுதி பேதத்தானே வெகுவிதமாம், உள்ளதோ காமக்குரோதாதி அசுரசம்பத்து வடிவமானசமாம், சுத்தவாசனையோ தெய்வ சம்பத்தாம் சுத்தவாசனையினுலே மலின வாசனைக் கெடுக்கத்தக்கதாம் விரிவோ ஆகரத்திற் கண்டுகொள்க.

கைமாறின்றி நேயசம்பந்தமின்றி உபகரிப்பவன் சுகி ருத்தெனப் பெறுவன், நேயோபகாரி மித்திரனாவன் காரணமின்றி அபகாரஞ் செய்பவன் சத்துருவாகும், விவாதிக்கும் இருவரையும் உபேக்ஷிப்பவன் உதாசீனனாவன், இருவருக்கும் இதத்தை விரும்புபவன் மத்தியஸ்தனாவன் உபகரிப்பவனிடத்திலும் அபகாரஞ் செய்பவன் துவேஷிப்பனாவன், சரீரசம்பந்தி பந்துவாவன், தருமசீலர்கள் சாதுக்களாவார்கள், பாபசீலர்கள் பாபிகளாவார்கள், இன்னோர்களிடத்திலும் அன்னியர்களிடத்திலும் சமபுத்தியெவன் எத்தகையன் என்று ஆராயாத மதியையுடையவன் யோகாரூடனாவன், எல்லா யோகிகளிலும் சிறந்தவனாவன் என்பதாம்,

ஆண்டு ஸ்ரீ ஞானவாசிட்டத்தில் கூறப்பெற்றதும் ஜீவன்முக்திப் பிரகரணாதிகளில் ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளால் நிச்சயிக்கப்பெற்றதும் ஆய பிரமேயக் கூட்டத்தை முதலில் அநுசந்திக்கவேண்டும் :—சமாதி யோகத்திற்கு ஏழு பூமிகளுண்டு அவற்றுள் நித்தியா நித்தியவஸ்து விவேகாதி வாயிலாய மோக்ஷேச்சை முதற்பூமி, அதன்பின் ஞானாசாரியரை யடைந்து சிரவணமனனாதி வடிவ வேதாந்த விசாரம் இரண்டாம்பூமி, அதன்பின் நிதித்தியாசன அப்பியாசத்தால் மனத்தின் ஒருமையானே சூக்ஷ்ம வஸ்துக் கிரகண யோக்கியதை மூன்றாம்பூமியாம், அதன் பின் வேதாந்த வாக்கியத்தால் அபரோக்ஷப் பிரஹ்ம சாக்ஷாத்காரம் நான்காம்பூமியாம், அதன்பின் சவிகல்பகச் சமாதியப்பியாசத்தானே நிறுத்தப்பெற்ற மனத்தில் நிருவிகற்ப சமாதியவஸ்தித ஐந்தாம்பூமியாம், அதன்பின் அதனப்பியாச மிகுதியானே நீள்காலம் நிலைத்திருப்பதே

ஆறாம்பூமியாம், அதன்பின் அதனது பரிபாகத்தானே எப்போதும் சொப்பிரகாச சிதானந்த ஏகரசப் பிரஹ்மத்தின்கண் மிகவும் மூழ்கிக் கடலிடையிடப்பட்ட கும்பம் போல உள்ளும் வெளியும் நிறைந்திருத்தல் ஏழாம்பூமியாம், இவற்றுள் முதற்பூமி மூன்றும் சாதனம் சாக்கிரதவஸ்தையென்று சாற்றப்பெறும் நனவிற்போல ஈண்டு துவைதப் பிரபஞ்ச உண்மைத்தோற்றம் உளதாதலின், நான்காவது பூமியோ பலம் சொப்பனவஸ்தை யெனச் சொல்லப்பெறும், துவைதம் பாதிதமாயினும் கனப்போல அதன்றோற்ற முண்மையின், இப்பூமியை யடைந்த யோகி பிரஹ்மவித்தெனப் பெறுவன், ஐந்தாவதாதி மூன்று பூமிகளும் ஜீவன்முக்தி யவாந்தர பேதங்களாம், அவையும் நிருவிகற்பக சமாதியப்யாசத்தினாலே யாக்கப்பெற்ற விசிராந்தி தாரதம்மியத்தால் அடையப்பெறுவனவாம், அவற்றுள் ஐந்தாவது பூமி சுழுப்தியெனப் பெறும், இருமைத் தோற்றமின்மையின், அதனையடைந்த யோகிக்கு விகல்பமுண்டாகவே தானாகவே எழிச்சி யிருத்தலினானும் இந்த யோகிப் பிரஹ்மவித்வரனெனப் பெறுவன், ஆறாவது பூமியோ காடசுழுப்தியெனப் பெறும் அதனையடைந்த யோகிக்குப் பரப்பிரயத் தனத்தினாலேயே உத்தான மிருத்தலின், இவன் பிரஹ்மவித்வரீயானாவான்; ஏழாவதோ துரிய அவஸ்தையெனப் பெறும், அதனையடைந்த யோகிக்குத் தன்னாலேனும் அன்னியனாலேனும் எழுச்சியேயிலதாம், ஜகத்தோற்ற மில்லாமையாலே யெப்போதும் தன்மயத்தன்மையானேயே யிருப்புண்மையின், அவனுக்கும் தேகநிர்வாகம் தனமுயல்வின்றியே பரமேசுவரரானே ஏவப்பெற்றப் பிராணவாயுவினாலேயே உண்டா

வதாகும், சிக்ஷிக்கப்பெற்ற எருது முதலியவை சாரதியால் மார்க்கத்தில் சேர்க்கப்பெறச் சாரதி முயற்சியில்லாமலே சுயமே தேர்வண்டியாதிகளை எதிரிருக்கும் கிராமத்தை அடைவிக்கும், அதுபோன்றென்பதாம், இதன்கண்ணே அசம்பிரஞ்ஞாத சமாதிப்பிரதிபாதக யோக சாஸ்திரங்கள் முடிவுபேருடையனவாம், இவ்வவஸ்தையை முன்னிட்டே முன்னிட்ட ஸ்ரீமத் பாகவதமும் சரிதார்த்தமாம், இவ்வவத்தையை யடைந்தவன் பிரஹ்மவித்வரிஷ்டனுவன், இவ்வண்ணம் நிலைபெறவே ஐந்தாவதாதி மூன்றவஸ்தைகள் பரஸ்பரம் தாரதம்மியமுடையனவாய நிருவிகற்ப சமாதிகளாம் இம்மூன்றினும் தொடர்ந்திருக்கும் இலக்கணம் இவ்வாறும் எப்போது சர்வகாமங்களையும் விடுவனே அப்போது சமாதிஸ்தன் திடப்பிரஞ்ஞன் எனப்பெறுவன், சர்வமென்றதனுனே மாலைசந்தன வனிதாதிகளிற்போல பிரஹ்மலோகாதிகளிலும் அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களிலும் எக்காமங்களுளவோ அவற்றிற்கும் ஆனிகூறு மபேக்ஷையாம், அதனுனே காம நீக்கக்கூற்று நிஷித்தகாம நீக்கபரமாம், திடப்பிரஞ்ஞனுக்கும் அநிஷித்தக்காமங்கூடலின் எனக்கூறுபவர் நீக்கப்பெற்றவராவர், அநிஷித்தக் காமங்கட்கும் குறித்த நிருவிகற்ப சமாதி விரோதித்தன்மையிருத்தலின், காமத்தால் கெடுக்கப்படாதவன் என்பதாதி சுருதிவிரோதத்தானும் உணர்ந்துகொள்ளலாம், காமாதிவிருத்திகட்கும் அனுன்மதன்மத்தன்மையுண்மையின் தள்ளத்தக்கமையுண்டு, அவை மனத்தின்கண்ணேயிருப்பனவாம், ஆன்மதன்மமேலோ அவை கெடுக்கமுடியாதனவாம், தீ வெப்பம்போலும் இயற்கையாய தன்மங்கட்கு தர்மியைவிட்டன்றி விடுதல்கூடாமை

யின், காமம் சங்கற்பம் என்பதாதி சுருதியினுலும் அவை மனேதன்மங்களேயாம், ஆகலின் மனத்தைவிடுதலானே அவற்றையும் விடுதல்கூடும், காமக்கவர்ச்சியும் சங்கற்பாதி சகலவித மனேவிருத்தி யுபலக்ஷணமாம், ஆகவே சர்வ வித மனேவிருத்திச் சூனியத்தன்மையே சமாதிக்கேற்ற விலக்கண மென்பதாயிற்று, இதனைக் கருதியே ஸ்ரீபதஞ் சலிபகவாஞலும் சூத்திரிக்கப்பெற்றுளதாம் "அதற்கும் நிரோதமாகவே சர்வநிரோதத்தால் நிர்ப்பீஜ சமாதியாம், பரவைராக்கியத்தோடுகூடிய விராமப் பிரத்தியத்தானே பிரஞ்ஞா சமஸ்காரத்திற்கும் நிரோதமாகவே யுண்டாவதாய பிரஞ்ஞா சமஸ்கார மெல்லாவற்றிற்கும் நிரோதமுண் டாதலால் எஞ்சுதலில்லாமல் தடை நீக்கமேற்படுதலின் நிர்ப்பீஜ சமாதியுண்டாம், அச்சமாதியுளதாகவே மீண்டும் எழும்பமுடியாதபடி சித்தம் நசிக்கும் அதன்பின் கூடஸ்த நித்திய அனந்தசுத்த சித் சக்தியானது தன்மகிமையில் நிரந்தரம் விக்கினமின்றி நிகழாநிற்கும்" இச் சர்வ தீவிருத் திச் சூனியத்தன்மை சுழுப்தி சாதாரணம் ஆமாலோவெனின் நிர்ப்பீஜமாகவிட்டால் ஆகாதாம், என்னை துயிலிலோ காமாதிவிருத்திகட்கு நிர்ப்பீஜமாக தியாகமின்றும், அவற்றின் பீஜமாய அஞ்ஞானமிருத்தலின், இதனுனே ஆண்டு மறைபடாத அகண்டானந்த ஸ்புரணம் இலதாம், சமாதியிலோ அங்ஙனமன்றுமென பெரும்பேதமுளதாம், சர்வகாம கிரஹணத்தில் ஏது வென்னுமெனின் உரைப்பாம், நியதிசயானந்தரூப தன்னிடத்திலேயே சந்துஷ்டனுதலின் மிகத் துச்ச காமானந்தத் தியாகம் பொருத்தமேயாம் "உலகினிற் பொருள்களெல்லாம் உணர்ந்தவன் றனை மேமக்கா, பொலிநகர் விடலைக்கென்னும் புல்லிய சிற்றார்

புன்பெண்.'' என் ஸ்ரீ ஞானவாசிட்டத்திற்கூறிய நியாயத் தாலென்பதாம், ஆத்மானந்தமும் ஈண்டு சம்பிரஞ்ஞாத சமாதியிற்போல மனோவிருத்தியா லிலக்கப் பெறுவதன் றும், மற்றோ சொப்பிரகாச சித்ரூப ஆத்மாவினாலேயே யாம், அவனது மகிழ்ச்சியும் விருத்திரூபமாகாதாம் மற்றோ ஆன்மப்பிரகாசமேயாம், தன்னாலேயே சந்துஷ்ட னென்றுணர்க, இது சமாதியிலிருப்பாவனது இலக்கண மாம், சமாதியினின்றுங் கிளம்பியவன திலக்கணம் மூட விலக்ஷணா பாஷணாதி விவகாரமேயாம், அஃதெவ்வாறெ னிற் காட்டுவாம், துக்கங்களுண்டானபோது கலக்கமில் லாத மனத்தையுடையவனாயிருப்பன், சுகங்களுண்டான போது ஆசையற்றவனாயிருப்பன், ஆண்டு சுகதுக்கங்களுக்கு பிராரப்தகருமத்தாலாய சித்தவிருத்தி விசேஷரூபத்தன் மையுண்மையின், கிளம்பியவனுக்கும் பிராப்தகருமச் சித்த விருத்திகளுளவாம், ஆதலின் சுகதுக்கங்களுமுண்டு அவற் றினும் வேறாய ஆசை கலக்கங்கள் உண்டாகாவாம் அவை அவற்றை விடயஞ் செய்யாமையின், அதன் கண்ணோது வென்னெனின் இராகம் பயம் குரோதம் அவன்பாலின்மை யேயாம், இராகமின்மை ஆசையின்மையிற் காரணமாம், சோபாதித்தியாசமேயாய இராகம் தனது விடயத்தில் ஆசையை யுண்டாக்குமாதலின் இராகமில்லாதவனுக்கு ஆசையிலதாம், பயக்குரோதமில்லாமை கலக்கமின்மை யிற் காரணமாம், பயமென்பது பிரியம்போதல் அப்பிரி யம் வருதலாதி ஹேது தரிசன ஜன்னிய தைனியவடிவ சித்தவிருத்தி விசேஷமாம், தனது ஹேதுபூத பிரியம் நீங் குதலாதியாலாக்கப்பெற்ற கலக்கத்தையுண்டாக்கும், அச் சமற்றவனுக்கோ கலக்கமுமிலதாம், துவேஷமென்பதோ

பிரியப்பிரிவாதி ஹேது புருஷாந்தரகத துக்ககாரணீ பூத சந்தாபவடிவ சித்தவிருத்தி விசேஷமாம், தனது விடயாதிகளில் கலக்கத்தையுண்டாக்கும், குரோதமற்றவனுக்கோ கலக்கமிலதாம் இத்தகைய முனிவன் திரப்பிரஞ்ஞனெனவும் ஜீவன்முக்தனெனவும் வியுத்திதனெனவும் புகழப்பெறுவன், ஈண்டு கூறிய விசேஷணங்களானே ஜீவன் முக்தனுக்கு லோகவிலக்ஷணத் தன்மைக் காட்டப்பெற்றதாமென்றுணர்க, லோகத்திலோ துக்கமடைவுற்றபோது, சீ நான் மகாதுக்கி பாபி அந்தோ வென் தலைவிதியென் என்னும் அநுதாபவடிவ கலக்கவசனங்களை மூடர் கூறுவர், ஞானி யவ்வாறுகூறான், இக்கலக்கம் விவேகம்போற் றோற்றுவதாயினும் பாபாநுஷ்டான காலத்திலே இருக்குமேயாயின் இது பாபப் பிரவிருத்திக்குத் தடையாய் பலமுடையதாம், போககாலத்திலோ பயனின்மையின் மயலேயாம், இவ்வண்ணம் சுகப்பிராப்தியிலும் இத்தகைய சுகம் எனக்கு நித்தியமுண்டாகுக வென்னும் ஆசை வசனங்களைப் பேசுவர் மூடர் ஞானிபேசான், இதுவும் அதன் காரண தருமத்தை யநுட்டிக்காமல் அதனை காங்க்ஷை வடிவமாதலின் தாமச மனோவிருத்தி மயலேயாம், ஜீவன் முக்தனுக்கு மயலின் காரணமாய வஞ்ஞான நாசத்தால் ஒருவாறாக தேகயாத்திரை மாத்திரத்தை நிர்வாகஞ் செய்யும் பிராரப்த கருமபலன் பிரமமில்லாமலும் பாதிதவநுவிருத்தியானே கூடலின் அவ்வாறு வாக்கு வியாபாரஞ் செய்யான், மற்றோ தனதநுபவ பிரகடனத்தால் சிஷ்யசிக்ஷைப் பொருட்டு ஆசையின்மை கலக்கமின்மை யடங்கிய முனிவனாகிய தனது அநுபவத்திற்குத் தக்கயுக்தி நிறைந்த பேச்சையே பேசுவன் என்பதனானே அத்தகைய் பாஷண விவ

காரம் அவனுக்கிலக்கணமாம், இராக பயக்குரோதத் தன்மையின்மையால் ஆக்கப்பெற்ற சுகதுக்க பிரியகலக்கமிலாத தன்மை ஞானதிகாரியாய ஜிஞ்ஞாசுவிற்குமுளதாம் என்வதன் விவகாரரூபம் ஆய திடப்பிரஞ்ஞ லக்ஷணம் ஆண்டு அதிவியாப்தமாயினும் விசேடமுளதாம், சிரேயோமார்க்கக்காரராலும் கூறப்பெற்றுளதாம், வித்தையின் திதியின் முன்பு விளங்கு சாதனங்களெல்லாம் எத்தினத்தானே யாரும் இலக்கணமாகு மீண்டு, சத்திய வியற்கையானே அவையெலாம் ஞானிபாலே.

மேன்மையாஞ் சீவன்முக்தி யென்பதாய் மேலோரானோர், ஆன்மசம்போதநின்ற வவத்தையா யறையாநிற்பற், பான்மலியிதனைப்பேத பாதிதத்தோற்றமாகப், போன்ம பாதிதமா மான்மபோதமா மாற்றலாலே.

இவ்வபிப்பிராயத்தானேயே ஸ்ரீ பகவான் பாடியக்காரராலும் அருளப்பெற்றுளது அத்தியாத்ம சாஸ்திரம் யாண்டுமே கிருதார்த்த லக்ஷணங்களாகிய இவையே சாதனங்களாக வுபதேசிக்கப்பெறும் என்பதாம்.

சுககாரண தன்மனைவியாதி சுபமாம், அதன் குணத்தைப் புகழ்வதாய பயனையுடைய மகிழ்ச்சி வடிவமதி விருத்தி விருப்பமாம், ஈண்டு குணத்தைப் புகழ்வதற்கு அன்னியரது உருசிப்பயன் இன்மையானே வாளா போதலின் அதன்காரணமாய விருப்பம் தாமசமேயாம், இவ்வண்ணம் துக்ககாரண அயலான்பாலுள்ள வித்தையாதி அசுபமாம், அதன் நிந்தையின்பொருட்டு எரிச்சல் வடிவமதிவிருத்தி வெறுப்பாம் அதுவும் தாமசமேயாம், நிந்தைக்கு நிவாரணார்த்தத் தன்மையின்மையானே வாளாபோதலின், இம்

மயல் வடிவமான விருப்பு வெறுப்புகள் கிளம்பிய ஞானி பால் சம்பவியாதாம், என்னை யாண்டும் நேயமின்மையின் தேகமும் வாழ்தலினும் நேயமிலதாம், நேயமென்பது பிரேமையெனப் பெயரிய தாமசமதி விருத்திவிசேஷமாம், அஃதிருப்பின் அன்னியன்பாலுள்ள விருத்தி ஆனிகளை தன்னிடத்தில் ஆரோபித்து விருப்பு வெறுப்புகளை யியற்றுவன், அஃதின்மையால் நேயமின்மையனும், இவ்வண்ணம் பிராரப்தந்தந்த சுபாசுபத்தையடைந்து விருப்பு வெறுப்பு இல்லாதவனுய் உதாசீனமாகவே விவகரிப்பவன் எழுந்த திடப்பிரஞ்ஞனவன், அவன் எவ்வாறிருப்பனென்றல் இக் கிளம்பியவன் சர்வேந்திரியங்களையும் சர்வ இந்திரியார்த்தங்களாய விடயங்களினின்றும் எப்போது ஒடுக்குவானே அப்போது அவனது பிரஞ்ஞை நிலைபெற்றதாம், அனுயாசமாக உபசங்காரத்தில் திருஷ்டாந்தமிதுவாம், ஆமையானது கரசரணுதிகளை முயலில்லாமலே இழுத்துக்கொள்வதேபோலு மென்பதாம், இதனுனே கிளம்பிய விச்சிப்த இந்திரியங்களை மீண்டும் உபசங்கரித்து சமாதியின் பொருட்டே திடப்பிரஞ்ஞனது இருப்பாமென இயம்பியதாயிற்று, மூடனும் பீடையுற்றபோது புலன்களை பொறிகளினின்றும் இழுத்துக்கொள்வன், ஆகலின் இந்தவிவகாரம் லோகவிலக்ஷணமாக திடப்பிரஞ்ஞ அசாதாரணம் எங்ஙனம் ஆம் எனின் பேதமிதுவாம், இந்திரியங்களினுகாரங்கள் விடயங்களாம் விடயங்களினின்றும் நிராகாரனுய் இழுத்த இந்திரியத்தையுடைய தேகியாகிய பீடையுற்றவனுக்கு விடயங்கள் அவற்றை அநுபவிக்கும் சமர்த்த இந்திரியங்கள் விலகுவனவாம் ஆனல் இராகம் விட்டுவிலகும், விஷயாபிலாஷை விலகமாட்டாதன்றே, இந்தத்திடப்பிர

ஞனுக்கு மேலான நிரதிசயானந்தரூபப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்துச் சுகமாயிருக்குந் தன்மையுண்மையின் விஷயாபிலாஷையும் விலகும், தனது உபாதான அஞ்ஞான நாசத்தால் நிர்ப்பீஜமாம், ஆன்மதரிசிக்கு விஷயராக நிவிர்த்தி பிரஜையாலென்னேயென்னும் சுருதியினுலும் கேட்கப்பெறுகின்றது பெறவே இராக சகிதவிஷய பிரத்தியாகிருத இந்திரியத்துவ விவகாரம் ஸ்திதப்பிரஞ்ஞனுக்கே ஆம், மூடனுக்கிலதாம் அதிவியாப்தியுமின்றும், இராகசகித விஷய நிவிருத்த இந்திரியத்தன்மையும் மூடர்களுக்குஞ் சம்பவிக்கும் விஷயதோஷ தரிசனத்தினுலும் நித்தியா நித்தியவிவேகத்தினுலும் விஷயராக நிவிர்த்திக்குச் சுகரத்தன்மையின் எனின் கூறுவாம் மீண்டு மீண்டும் விஷய தோஷதரிசன வடிவமுயற்சிசெய்யும் விவேகியினுடைய நிருவிகாரமனத்தையும் ஒருகணத்தில் வலிதிலிழுத்து விகாரஞ்செய்து இந்திரியங்களானவை தங்கள் விடயங்களின்மயமாய்ச் செய்விக்கும் வைராக்கிய இரக்ஷக விவேகராஜனிருப்ப பிரயத்தனமாகிய அவன் மந்திரியிருப்ப எங்ஙனம் இந்திரியங்கள் விகாரப்படுத்துமெனின் நன்குகடையுஞ் சீலத் தன்மையுண்மையின் இராஜமந்திரிகள் விழித்திருந்தபோதினும் அவர்கள் கண்களேயும் மூடி விகாரப்படுத்துமென்றுணர்க பிரமாதத்தோடுகூடிய துஷ்டர்களாகிய கள்வர்கள் பார்த்துக்கொண் டிருக்கும்போதே தனிகனிடத்திலுள்ள தனத்தை கவர்கின்றார்களென்பது உலகத்தில் வெட்டவெளியேயாமன்றே, பிரயத்தன விவேகங்களாலும் இந்திரியஜயம் உண்டாகாதாயின் அவை ஜயிக்கமுடியாதனவேயாம், பரத்தைச் சாக்ஷாத்கரித்து நீங்குமெனவுரைத்த ஆன்மதரிசனமே இந்திரியஜய உபாய

மென்பது பொருத்தமாகாதாம் அவ்வாருயின் ஆன்மதரி சனத்தால் இந்திரியஜயம், இந்திரியஜயத்தாலோ ஆன்ம தரிசனம் என அன்யோன்யாசிரயம்வரும் வரவே திடப் பிரஞ்ஞத்தன்மை அதிதுர்லபமாம், என்றெண்ணுவான். பொருட்டு இந்திரியஜயோபாயம் இவ்வாறுகிளத்தல்வேண் டும், பரமேசுவர் பரமாயிருந்துகொண்டு அவற்றையெல் லாம் ஒடுக்கி யோகியிருக்கவேண்டுமென்பதாம், பரமேசு வரனை இஷ்டமாகவுடையவனும் பரமேசுவரனிடத்தில் மனத்தை யர்ப்பித்தவனும் பிரமாதஞ்செய்யும் அச்சர் வேந்திரியங்களையும் வசஞ்செய்து ஒருமையையுடைய யோகியானவன் இருக்கவேண்டும், இராஜாவினிடத்தில் கொடுத்த தனம் சோரர்களானே அபகரிக்கமுடியாதாம் மாருகவோ இராஜாவைப்பற்றியவனிவனென்னும் பயத்தி னலே சோராதிகளே அவனது வசவர்த்திகளாவார்கள் அதுபோல சர்வலோக ஈசுவரனுகிய பகவானிடத்தில் அப் பித்தமனம் இந்திரியங்களாலே அபகரிக்கமுடியாதாம் இந் திரியங்களே அவனது பயத்தால் வசியங்களாயிருக்கும் பரமேசுவரனிடத்தில் சமர்ப்பித்த மனம் சகலகல்மிஷங்க ளும் விடுபட்டதாய் அதிவிமலமாம், எங்ஙனம் அக்கினி யெழுந்த சிகைதான் என்றாமுடனே துரும்பைக்கொளுத் தும், அங்ஙனம் உள்ளத்துள்ள பகவான் அழிக்கும் யோகி யின் களங்கமெலாமே என்பதாதி மிருதியிருத்தலின், ஆண்டு விஷயராகரகித மனம் சர்வேந்திரியங்களையும் தன் வயப்படுத்தும், அதனால் வசிய இந்திரியன் தத்துவஞானப் பொருட்டுச் சமர்த்தனுவன் என முன்மொழிந்த அன் யோன்யாசிரயமிலதாம், எவனுக்கு இந்திரியங்கள் வச மாமோ அவனது பிரஞ்ஞை நிலைபெற்றதாம் பெறவே இந்

திரியத்தை யடக்கினவனுகி ஜீவன்முக்தனிருப்பனென்பதாம், அற்றேல் ஆதியில் பரமேசுவரனிடத்தில் மனத்தை நிறுத்தி கல்மஷமற்ற தாக்கியவதனுல் பாகியேந்திரியங்கள் வயுஞ்செய்யத்தக்கன என இஃதென்னே தலையைச்சுற்றி மூக்கைப்பிடிக்கும் பிரயாசம், விழிமுதலியவற்றிற்கு அவ்வக் கோளகத்தில் வைப்பதனுனே ஜயசித்திகூடலின், இராகம்விட்டு என முன்மொழிந்த முறையாய் இராக ஜயமின்றி பாகிய கோளகத்தடை மாத்திரம் உபயோகமில்லையென விஷயதற்பரமான மனத்தை பரமேசுவர தற்பரமாக்கலால் அவற்றினின்றும் விலக்கி பாகியேந்திரியங்களை அதனனுசாரியாகச்செய்யவேண்டும் என்னற்க, பாகியேந்திரியப் பிரவிர்த்திவாயிலாகவே மனத்திற்கு அனர்த்தஹேதுத் தன்மையானே நிக்கிருகித பாகியேந்திரியன் பொருட்டு ஆந்தர விஷயாபிலாசை யிருந்தபோதினும் கெடுதலில்லை எனக்கடாவின் விடையிறுக்குவாம், சித்தத்தை பரமேசுவரனிடத்தி லர்ப்பிக்காமல் விஷய ராகத்தை விடாமல் கேவலம் பாகியேந்திரியக் கோளகத்தை மாத்திரம் தடுத்தவனுக்கு அனுதிவாசனை யியற்கையினுலே விஷயத்தியானம் அகற்றலாகாததாம், ஆண்டோ விஷயங்களை மீண்டுமீண்டும் மனத்தினுலே சிந்தித்துக் கொண்டிருப்பவனுக்கு அவ்விடயங்களில் அவ்வவ் விந்திரியங்களின் சம்பந்தமுண்டாம், பலவானுகிய சிந்தைப்பிரவாகம் மணலணை போல மிகவும் வலுவில்லாத வெளிக்கோளகத் தடையை எடுத்தெறிந்து அவ்வவ் விஷயேந்திரியச் சையோகத்தை அவசியமுண்டாக்கும், அவ்விஷயேந்திரிய சங்கத்தாலே அவ்விஷயக திருஷ்ணுவிசேஷ முண்டாம் உண்டாகவே புருடன் விஷயங்களை யநுபவிக்காமல் நிலைபெற முடியா

தாம், எதனாலேனும் தடைப்படுத்தப்பட்ட காமத்தானும்
அதனைக்கெடுக்கும் விஷயமாயு சினமானது ஜொலனவடிவ
மாக உண்டாம், சினத்தானும் செய்யத்தக்கது செய்யத்
தகாததுகளின் விவேகசூனியத்தன்மை வடிவ பெருமோக
முண்டாம், சினத்தையுடைந்த கனத்தமூடனே தந்தை
யையுங் கொல்கின்றான், பெருமோகத்தானே சாதிப்பா
னிச்சித்த இந்திரிய ஜயப்பிரயத்ன விஷயகஸ்மரண பிரம்ச
ரூப நினைவின் பெருமழிவு நிகழும், அது நிகழுதலினாலோ
புத்தி நாசமாம்=இந்திரியஜயப்பலத் தன்மையானே கரு
திய தத்துவஞானத்தினது அபாவமாம், புத்திநாசத்தால்
மீளவும் சம்சாரத்தில் மிகமூழ்கிவருந்துவன் இந்தப்பிரகா
ரம் விஷயாநு சிந்தனமானது மகா அனர்த்தபீஜமாம்,
எதிர்மறை முகத்தானே இராகஜயத்தின் இன்றியமையா
மைக் காட்டப்பட்டது, இனி உடன்பாட்டின்வாயிலானும்
அதனைக்காட்டி அதனதுவாயிலாக அறிஞனது நடையை
யுங்காட்டுவாம், இராகத் துவேஷங்கள் விடுபட்ட அத
னாலே மனோதீனமான மனோகத இராகத்துவேஷங்களி
னாலேயே பகிரிந்திரியங்கட்கு அஃதுடைமையாம், பகவா
னிடத்தில் அர்ப்பித்தலினாலே இராகத்துவேஷாதி அகில
களங்கங்களும் மனத்தில் க்ஷீணமாகவே அதனதீன இந்தி
ரியங்கட்கும் அஃதின்மையாம், இந்திரியங்களால் விஷயங்
களை அநுபவித்தபோதினும் அமிருத ஸ்நானத்தினாற்
போல மனத்தில் யாதோ ஒரு சொச்சதன்மைவந்து
பொருந்தும், விஷயத்தியானமும் அனர்த்தகாரணமல்ல
வோ அதன் கிரகணமும் அந்தியந்தம் அனர்த்தகாரணமே
யாம், ஆகவே எங்ஙனம். விஷயங்களைக் காண்பவனுக்குத்
தெளிவுண்டாதல்கூடும் எனின் இராகத்துவேஷம் விடுபட்

டதனுலென்க, அந்தக்கரணத்தை வெற்றிகொண்டவனும் ஆவன் அறிஞன் மனோஜய சூனியனுக்கே விஷயதரிசனம் அனர்த்தத்தைக் கொடுக்கும், மனத்தை வென்றவனுக்குக் கொடாதாம், மனோவசமாய இந்திரியங்களினாலே விஷயங்களை யடைவுறுவன் என்பது அறிஞனது நடையாம், தெளிவின் பலம் யாது கொலாமாலோவெனின் இஃதாம், கூறிய தெளிவுண்டாமேல் ஆத்யாத்மிகாதி சர்வதுக்கங்களின் நாசம் அறிஞனுக்குண்டாம், ஞானபலத்தன்மையானே பிரசித்தமாய சர்வதுக்கபலத்திற்கு எங்ஙனம் பிரசாதபலத்தன்மையெனின் பிரசன்ன சித்தத்திற்கு விரைவில் பிரஹ்மாத்ம விஷயபுத்தியானது திரமாயுண்டாதலினென்க, துக்கஹானி ஞானவாயிலாகப் பிரசாதபலமாம், இந்தப்பிரகாரம் நிரூபிக்கப்பெற்ற இந்திரிய நிக்கிரகனுக்கு அன்வய வியதிரேகங்களினாலே தத்துவஞான சாதனத் தன்மையைக் காட்டிக்கொண்டு முதலில் வியதிரேகம் உரைப்பாம் இந்திரிய நிக்கிரகனெனப் பெயரிய உபாயரூபயுக்தியற்றவனுக்கு வேதாந்த சிரவணஞ்செய்தபோதினும் ஆத்மதத்துவவிஷய புத்தியானதுண்டாகாதாம், சாதன சதுட்டய அந்தர்க்கத சமதமாதி சம்பத்தியின்மையின், சிரவணஜன்னிய ஆத்மபுத்தியோகரகிதனுக்கு நித்தியாசன வடிவாபாவனையிலதாம், நித்தியாசனத்திற்குச் சிரவணசித்தி அதீனத்தன்மையுண்மையின், ஆன்மாவைப் பாவியாதவனுக்கோ சாந்தியுண்டாகாதாம், நித்தியாசனஞ் செய்யாதவனுக்கு சர்வ அனர்த்த நிவிர்த்திசெய்யும் தத்துவ சாக்ஷாத்காரமிலதாம், அதற்கு அது காரணமாயிருத்தலின் அசாந்தனுக்கு மோக்ஷானந்தம் எங்ஙனமுண்டாம் மோக்ஷத்திற்குத் தத்துவ சாக்ஷாத்கார சாத்தியத்தன்மையின், தத்தம்

விடயங்களில் இஷ்டப்படிப் பிரவிர்த்தியாகின்ற இந்திரியங்களின்மத்தியில் எவ்விந்திரியத்தை அநுசரித்து மனம் பிரவிர்த்திக்குமோ எவ்விந்திரிய விடயத்தோடு கூடியதாக மனம் ஆமோ அவ்விந்திரியம் சாதகனுடைய ஆத்தும தத்துவபுத்தியாகிய பிரஞ்ஞையைக் கலக்கிக்கெடுக்கும் ஓரிந்திரியமும் பிரஞ்ஞையைக் கெடுக்குமாயின் எல்லா இந்திரியங்களும் ஒருங்குசேர்ந்தால் கெடுக்குமென்பதில் கூற வேண்டுவதென்னே அதன்கண் திருஷ்டாந்தமித்வாம், நீரில் ஓடத்தைக் காற்றேபோலும், தார்ஷ்டாந்திகத்தில் மனோனுயாதத் தன்மையானே இந்திரியத்திற்கு விசேஷிதத்தன்மையுண்மையுன் திருஷ்டாந்தத்திலும், ஓட அனுயாதத்தன்மை வாயுவிற்கு விசேஷணமென்றறிக, உலகத்தில் கடலில் கப்பலேறி வேறு தீவுக்குச் செல்பவர்களுக்குப் பிரதிகூல வாயுவுளதாகவே மாலுமி சாவதானமாகக் கப்பற்கட்டைத் திடஞ்செய்து அதனைக் காப்பன், அந்நாவிகன் காலவிபரீதவசத்தால் ஒருபோது பிரதிகூலவாயுவை அநுசரித்தே கப்பலை ஓட்டுவனேல் அப்போது நாவிகனையநுசரித்த வாயு இங்குமங்குமாகச் சமுத்திரத்திற் கப்பலைச் சுழற்றியடித்து நாசமேசெய்யும், அதுபோலச் சம்சார சமுத்திரத்தின் பிரஞ்ஞையோடத்தைப்பற்றிக் கரையையடைய இச்சித்தவனுக்கு இந்திரியலக்ஷணப் பிரதிகூல வாயுவுளதாகவே அக்கால் மனோநாவிகன் பரமேசுவர அநுபந்தத்திடபந்தனத்தால் அதனைக் காக்காமல் இந்திரியங்களையே பின்றொடர்வனுயின் மனோ நாவிகனைப் பின்பற்றிய இந்திரியப் பிரதிகூல வாயுவானது பிரஞ்ஞையோடத்தை இங்குமங்குமாகக் கலக்கி நாசஞ்செய்யும், இது முன்மொழிந்ததையே திருஷ்டாந்தவாயிலாக நன்குவிளக்

கியதாமென்றுணர்க, இவ்வண்ணம் இந்திரிய நிக்கிரகத்திற்கு ஞானஹேதுத் தன்மை எதிர்மறைமுகமாகக் காட்டப்பட்டது இனி உடன்பாட்டுவாயிலாகவும் அதனைக் காட்டுவாம் எக்காரணத்தால் இந்திரியநிக்கிரகமிலதாகவே பிரஞ்ஞையிலதாமோ அக்காரணத்தால் எந்தமகானுடைய இந்திரியங்கள் சர்வேந்திரியார்த்த விடயங்களின்றும் நிக்கிருகீதங்களாமோ அவனதுப் பிரஞ்ஞை நிலைபெற்றதாம், இந்திரியத்தை வெல்வது துர்லபமாம், வென்றவனே மகாத்மாவாவன் இதுவரையும் திடப்பிரஞ்ஞனுடைய சமாதியுத்தான அவத்தைகளின் இலக்கணஞ் சாதனங்களுடன் கூறப்பெற்றது, இப்போது அவஸ்தா துவய அநுகதமான திடப்பிரஞ்ஞலக்ஷணத்தைக் கூறுவாம், யாது சர்வபூதங்கட்கும் நிசிபோன்ற நிசியாய் பரம் பிரஹ்மமாமோ லோகத்திலோ நிசியில் நித்திரை செய்பவன் நிசியைக்காண்பதில்லை, அவ்வாறே பிரஹ்மலக்ஷண நிசியில் அஞ்ஞான நித்திரைப்பரவசங்களாய சர்வபூதங்களும் பிரஹ்மதத்துவத்தைக் காண்பதில்லை, அந்தப்பிரஹ்மரூப சர்வபூத நிசியில் இந்திரியங்களையடக்கிய திடப்பிரஞ்ஞனாகிய சீவன்முக்தன் விழித்திருப்பன் அஞ்ஞானலக்ஷண நித்திரைக்ஷயத்தால் பிரபுத்தனாய்ப் பரம்பிரஹ்மத்தைக்காண்பன், எந்த துவைதப்பிரபஞ்ச விவகாரரூப அவித்தையின் கண்ணே மிகத் தூங்குகின்றன பூதங்களே விழித்திருக்கின்றனவாம், கனாப்போல விவகரிக்கின்றனவாம், அது பிரஹ்மதத்துவத்தைக் கண்டுகொண்டிருக்கும் மனனசீலனாகிய திடப்பிரஞ்ஞையையுடைய சீவன்முக்தனுக்கு அப்பிரகாசவடிவ நிசியாம், இதனால் ஆசித்தியகப் பிரபஞ்சவிவகார சூனியமாய்ப் பரப்பிரஹ்மத்தைக்காணுந்தன்மை திடப்பிரஞ்ஞ இலக்கண.

மென்பப்பட்டது, யாஞ்ஞவல்க்கியாதிகளிடத்தில் சந்நியாசஅவஸ்தையின்முன்பு இளைப்பாறுதலின்றிய சித்தத்தாலே திடப்பிரஞ்ஞத்தன்மை யடையாமல் கேவலம் ஞானிகளாயிருந்த அவஸ்தைகளில் அதிவியாப்தி நீக்கப் பொருட்டு ஆய் என்பதுபரியந்தமாம், வியவகார சூனியத்தன்மையென்பது அதன் வாசனா சூனியத்தன்மையாம், யாஞ்ஞவற்கியாதிகளுக்கோ அவ்வவத்தையின்கண்ணே மலினவாசனை தொடர்ந்திருத்தலின் அதிவியாப்தியின்றாம் தூங்குபவரிடத்தே அதிவியாப்திநீக்கப்பொருட்டுப் பரம்பிரஹ்மத்தைக் காணுந்தன்மையாம், இனி அன்னிய திடப்பிரஞ்ஞ லக்ஷணமும் அதன் பலமுங் காட்டுவாம் நிரதிசயசுவாத்மானந்தத்தினாலேயே பரிபூர்ணனாய் அதனானே துச்ச விஷயானந்த இச்சைவடிவ விகாரமின்மையின் நிர்விகாரத்தியையுடையு எம்மகானை எல்லாக்காமவிடயுங்களும் இந்திரிய கோசரத்தன்மையை யடைவனவாமோ விகாரஞ்செய்யாவோ இதனானே காமங்களினால் விகாரப்படுத்தாமை திடப்பிரஞ்ஞ லக்ஷணமெனக் கூறப்பெற்றதாம், அவன் சாந்திரூப மோக்ஷத்தையடைவன் விஷயேந்திரிய சம்பந்தமுளதாகவே விகாரமுண்டாகவேசெய்யும் எனின் ஆகாதாம், எல்லையின்றி நீர் நிறைந்திருத்தலினாலே பரிபூர்ணமும் அதனானே நிர்விகாரத் திதியுமுடைய சமுத்திரத்தைநோக்கி நதிகள் செல்லுவதேபோலும் உணரலாம், நிஜரூபப்பரிபூர்ண அர்ணவத்திற்கு நதியாதி ஜலப்பிரவேசத்தினாலும் அப்பிரவேசத்தினாலும் விருத்தியேனும் ஆனியேனும் ஆகிய எந்தவிகாரமும் கிடையாதாம், இவ்வண்ணம் நிஜவடிவ ஆனந்தபூரணனுக்கு விஷயேந்திரியசம்பந்த அசம்பந்தங்களானே யாதொரு விகாரமுமேயிலதாம், திட

ப்பிரஞ்ஞனுக்கே மோக்ஷமாம் விடயங்களில் விவகாரப் பட்டுழல்பவனுக்கு மோக்ஷமின்றாம் முன்மொழிந்ததின் விரிவேயாமிது, எக்காரணத்திஞல் இவ்வண்ணம் காமிக்குச் சாந்தியிலதோ அக்காரணத்திஞல் யாவன் எல்லாக் காமங்களையும்விட்டுச் சரிக்கின்றனோ அவன் சாந்திரூப மோக்ஷத்தையடையாநிற்பன்,மனே தன தானியாதிகள்பாகியங்களாம் மனோராச்சியாதிகள் ஆந்தரங்களாம், நெறியிற் கிடக்கும் துரும்பாதிபோல் தொடக்கத்திற்றேன்றுவன வாசனைகளாம் இவ்வியாவற்றையுமே விட்டவனுக்கே சாந்தியுண்டாம், சரீரயாத்திரை நிர்வாகமெங்ஙனமா மெனின் வாழ்விலும் ஆசையில்லாதவனுகியே பிராரப்தந்தந்த தேகயாத்திராமாத்திரச் சேட்டையொன்றுடையவனுகச் சஞ்சரிப்பனென்றுணர்க. ஜீவனமாத்திரத்திலும் பிராரப்த கருமந்தந்த பிக்ஷைகந்தையாதிகளில் எனதென்னு மபிமானமற்றவனுகவிருப்பன், தேகாதிகளில் இதுயான் என்னும் அகங்காரவானுக்கு எனது இதுவென்னும் மமகாரமாம், அஃதுடையவனுக்கே தன்னதென்னும் பான்மையால்வரும் அதனுசையாம், அஃதிலதாகவே அவ்விரண்டுமிலவாம். என்றுணர்ந்து கொள்க, யோகீந்திரன் என்பதற்கு உதாரணம். பிரஹ்மகீதை

அன்புறுகுரவ னருளிஞலிங்ங னறிந்தவ னயர்ந்திருவினையாற், றன்புறுன்றன்பஞ் செய்வதுந்துன்பந் துய்ப்பது மாகியதோற்ற, முன்பதாம்வேத முடிவுவாக்கியத் தான் முளைத்த ஞானத்திஞன் முற்று, மின்புமாந்தன்னரதுருவமாயிலங்கு மிறைமிகு திருவருளதஞல்.

செய்வான் செய்விப்பவன் செய்யும்பொருள் செய்கருவி செய்தொழிலென்,, றைவாய்ப்பொருளும் வெறுமான்

மாவாகித் தோன்றுமிறையருளா, லெய்யாமான மெமதறி வுவறிவோ னென்னப்படும் பேத, மெய்யாமிறைவன் றிரு வருளா லெல்லாந்தானாய் விளங்குமால்.

துய்க்குமவன் றுன்றுய்ப்பிப்பான் றுய்க்கும் பொரு டான் றுய்த்தறன், கைக்கொள் பொருள்கொள்பவன் கொள்கை கடவுளருளாற் றனேயா, மைக்கொண் ஞான மொன்றொன்று மாறுஞான மையமுறுந், துய்க்குஞான முற்றுமிறை யருளாற்றனே யாய்த்தோன்றும்.

கடபட குட்டியமுதலா மிதின்ஞானங்கள் கடமது குட்டிய குதூலபடமதாகுந், தடமலை பாதாள முதலுலக மற்றைச் சத்தியமே முதலான வுலகமெல்லா, மிடவியமா மலரவன்ற னண்டமீதிற் கற்பிதமா மெல்லையி லண்டங்க ளெல்லாங், கடறடமிரு கண்மற்றுங் கண்டவெல்லாங் கட வுளருளதனாலே தானாய்க்காணும்.

மேருமந்தரமுலதா மிகுத்தமால்வரைகள்
சாருமெல்லையின்றியவனம் வனத்தினுள்ளவைதான்
றருவந்தமில்விதங்கள் புற்புதலெலாந்தானா
யேதமின்றிய விறைதிருவருளினா லிலங்கும்.

வான்முதலாம்பூதங்கள் பௌதிகங்கண் மன்னுமொலி பரிசமுருச்சுவை நாற்றங்க, ளூன்மருவு கிருமிகீடம் பதங்க முலவுப்சுவிதமோடு மெருட்டையானை, கான்மருவு பரிகரப மநுடர் சித்தர் கந்தருவ ரரக்கரியக் கர்கடாமிக்க, வான் மருவுந் தேவகண மெல்லாமாற்றுமாப் பரமனருட் டனது வடிவாய்த்தோன்றும்.

வினைமிகு விண்ணோர் விண்ணவர் விண்ணோர் வேந்தனும் விராட்டுடன் சுராட்டு, மெனையடைந்தவ ரென்செல்வமியானெடுமாலு ருத்திரனீச னற்சிவனென், றனைவர்கடம் பதங்களவர்களை யடைந்தோ ரவர்கடா மன்னியமின்றித், தனைநிகரில்லா விறையவனருளாற் சகலமுந் தானெனத் தோன்றும்.

நீதெனும்பொருள்க ணன்றெனும் பொருள்கள் செய்யலாவன செயப்படாத, வேதமாமுடல மிந்தியம்பிராணனிசைமனம் புத்தியாங்காரந், தீதுறுகாமங் கோபமேமுதலாந் தீயன சாந்தி தாந்திகளே, யாதியா நலங்களடையவுந்தானே யாகியேதோன்று மெய்யருளால்.

பேதமாஞ்சீவ பரங்களுமவர்கள் பேதமும் பேதிக்குமதுவும், போதமில் சடசத்தியு மதன்பிதையும் போதசத்தியு மதன்பிதையு, மோதுமுண் டில்லையென வெழுமுரையிலுள்ளதாம் பொருள்களுமிலாதும், யாதுமவ்விறைவ னருளினாற்றன்ன தேகமாமுருவமா பெறிக்கும்.

ஒருகால முன்செய்வினையளவு மியோகி யுயிருலகாதியைக் காண்பானொருகாற்காணு, னொருகாலிற் றோற்றமெல்லாம் பரமாய்க்காணு முளபரிசே யாயொருகா லொன்றுங்காணன், றுரிசானசக ரூபந்தோன்றும்போது துக்கசுகங்களுமா பாதித்துத் தோன்றும், பரமாகத்தோன்று பொழுதாபாதித்துத் தோன்றாது துக்கசுகம் பரமேதோன்றும்.

தத்துவஞானிகாணிலுஞ் சகத்தைக்கண்டிலன் றத்துவமே கண்டான், வத்துவேயாக வல்லவேயாக மற்றொருபொருளில்லையாணு, வித்தில் வேறொன்றை யெண்ணாங்காண

பானி யாதொருபடி சகத்தாகத், தொத்தரவில்லாத் தோற்றமெப்படியோ அப்படிநிகழ்வது பரந்தான்.

எப்படி யெப்படித்தோற்ற மப்படியாயிலங்குவ துண்மையேயோகிக், கப்படி யப்படி யுண்மையேயாக வறிவதே யான்மவேதனந்தான், செப்பு நாமத்தா லுண்மையாலெல்லாத் திகழ்வுமா தேவனேயாகி, யிப்படி யறிந்தஞானிகைக்கொள்வா னெத்தனையன்றென வெத்தைவிடுவான். 17–18.

(அ - கை.) பூரககும்பகமென்பதாதியானே பிராணநிக்கிரக பூர்வகயோகம் அருளப்பெற்றது, சங்கற்ப ஜன்னியகாமங்களை விடுகவென்பதாதியானே மனோ நிக்கிரக பூர்வகயோக மருளப்பெற்றது, அவ்விரண்டுமே இயறற்முடியாதன வெனவெண்ணி வரேண்யன் கூறுதல்:—

சூ. ஷிஷியொ ஷிஷியொ ஜொய ஜஷா வெ௱ ஷிஜெஜ தஃ
யதொ தஃகரணம் உஷ்வஜவஜ உவி௱ஜ
விஜொ ॥

க. கருதந்தக்கரணந் துட்டஞ் சஞ்சலங் கவர்ந்தற்கேலா
திருவகை யோகந்தானு மியற்றுதற் கேலாதத்தால்
திருதருபரனே வீரசேகரவிபுவே யெந்தாய் [டும்.
மருவிஃதென்றே யென்றன் மதமெனக் கருளல்வேண்

வி. ஹேவிபோ—ஹேவியாபகராகிய பரமேசுவரரே, வியாபகத்தன்மையானே யெல்லாருடைய வந்தக்கரணங்களில் தோஷபாவத்தை அறிந்தருளுவீராதலின், அந்தக்கரணம்—மனம், எல்லாப் பிராணிக் கூட்டத்தின் துஉம், துஷ்டம் — கெட்டதாம், இராகத்துவேஷாதி தோஷத்

தோடு கூடியதாம் அதனுனே, சஞ்சலம்=கணமுந்திரமற்றதாம், அதனுனே, துர்க்ரகம்=துக்கப்பட்டும் கவர நிய மிக்க முடியாதாம், யதঃ=எதனுலாமோ, அதঃ=அதனுல், த்வி விதோபி=பிராண ஜயப்பூர்வகந்தானுதல் கேவலந்தானுதல் இவ்விருவகையும், ஹி=பிரசித்தம், யோகঃ=சர்வ சித்தவிருத்தி நிரோத ரூபயோகம், அயம்=தங்களால் திருவாய்மலர்ந்தருளியது, அசம்பாவ்யঃ=அடைவதற்கு முடியாததாம், மே=சஞ்சல சித்தத்தையுடைய அடியேனது, மதঃ=கருத்தாம், ஆகலின் இதனினும் ஏதாவதொரு எளிதான உபாயத்தைத் திருவருள் செய்யவேண்டும் என்பது கருத்தாம், இவ்வண்ணமே ஸ்ரீ ராமபிரானும் கூறியுள்ளார்.

"கடுமனவன் பேய்கனலிற் கொடிதாரு மலைகளினுங் கடத்தற்கொண்ணு, நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரேபேர்த்துச், சுடுகனலை விழுங்குகினு நிறுத்தரிது புலன்முழுதுந் தோன்றுமூலங், கெடுமூலகீதுண்டெனிலுண்டிலதாகி விலதிதனைக் கெடுத்தல் வேண்டும்."

ஸ்ரீ பகவற்கீதையில் அருச்சுனன் வினுதல் ;

"எல்லாவுயிரு மொன்ருகப் பார்ப்பதி யோகமெனவுரைத்தாய், மல்லார்தோளா யிதற்குநிலைகாணேன் மனமாகின்றவிது, நில்லாவியற்கைத் தாய்ப்புலனைக் கலக்குமதனை நிலைநிறுத்த, லொல்லாதெனவுங் காற்றடக்கற் கொக்குமெனவு முணர்கின்றேன்."

மனத்தின் லயவிக்ஷேப சூனியத்தன்மையானே ஆத்ம ஏகாரமாக நிலைபெறும் வடிவத்தால் அருளப்பெற்ற யோக

த்தின் தீர்க்ககால நிலைபெறுதல் வடிவ இருப்பைக்காணகி கிலேன், மனசஞ்சலமாதலின் சம்பவியாதென்றே யெண் ணுகின்றேன் மனோநிக்கிரகமே யன்றோ யோகம், அதுவோ அத்தியந்தம் அசம்பாவிதமேயாம் ஏனெனின் மனத்திற் குத் தானேநிக்கிரகமோ சம்பவிப்பதைக் காணோம், இயற் கையாகவே அது சபலமாதலின் அன்னியத்தானு மாகா தாம் அன்னியமும் தேகேந்திரியாதியா அல்லது ஆன்மாவா ஆதியதாகாதாம் தேகேந்திரியங்கள் கலக்கும் சீலமுடைய னவாம் ஆதலின் அவற்றால் தடுக்கப்படுவதும் மனம் ஆகா தென்பதாம், மற்றது மியலாதாம் ஆன்மாவைக் குறித்தும் பலமுடைய தாதலின் என்னை நிர்விகார ஆன்மாவை விகா ரப்படுத்தி நாசியிற் கயிறிட்டிழுக்கும் பசுவைப்போல இங் குமங்கும் நன்கிழுக்கும் மனத்திற்கே ஆன்மாவைக் குறி த்து வலுவதிகமுண்மையின், மனத்தோடு கூடியன்றோ இரண்டு லோகத்திலும் சஞ்சரித்தல் தியானஞ் செய்வதே போலும் லீலை செய்வதேபோலும் ஆதல் என்று சுருதியு மறைகின்றது ஆகலின் ஆன்மாவினாலும் அது தடுக்கப் படாததே யாகும், அற்றேல் தன்னாலேனும் அன்னியத்தா லேனும் தடுக்கமுடியாத மனத்திற்கு மத்தவன கஜத்திற் கேபோலும் மதயகன்றவழி ஒரு காலத்தில் நிக்கிரகமா மெனின் ஆகாதாம், ஏனெனின் கணந்தோறும் வளர்ந்து கொண்டே போகும் விஷயவாசனைச் சகத்திரங்களோடு கூடியதானே விருத்தியாகும் அது அநேககோடி ஜன்மங்க ளாலே இளைக்கமாட்டாதாம், ஆகலின் மகாகாசத்தில் மிக வீசும் வாயுவைத் துணியாற் றடுத்தல் முடியாததேபோல் மனத்தினது தடையும் எல்லா வகையாலும் இயற்றமுடி யாததென்றே யெண்ணுகின்றேன்.

(அ-கை) ஸ்ரீகுருப்பிரசாதாதிகளாகிய சித்தஜய உ
பங்களைத் திருவருள்செய்ய விழைந்த ஸ்ரீ கஜானனப்பெ
மான் மனத்தினது தோஷ பாவத்தையே விஸ்தாரப
அநுவதித்தருளல் :—

௬. யோமீஹஹம் உாஹஹஹஷ உநஷீ ஷம்ஷஹகூ
பெ

வ்டியஜஷஸோஉஷாநாஷஃ ஷம்ஷஹதி வக்ஹகாக

௧. வீட்டினை விழைந்தயோகி விளம்புறு குடும்ப
மிவ், வோட்டுசக் கரத்தினிந்த வுயர்கடிப் பொறிபோல
றும், கூட்டுதற் கரியதான மனத்தினைக் கூட்டவேண்
வாட்டமாய் முயலவேண்டும் வரமிகு மருளினானே.

வி. முக்தஃ—மோக்ஷமடைய இச்சித்தவன், ..
கினி தான் விழைந்தான் என்பதேபோலும் அக்கினித் ..
மைக்காம எஜமான அனக்கினியினிடத்தில் அக்கினிப
போலும் வரும் விருத்தியைப்பற்றி இந்த முக்த பதப்
யோகமருளியதாம், அஸ்மாத் சம்சிருதி சக்ரகாத்—இந்
சம்சாரசக்கரத்தினின்றும், சம்சாரம் ஜனனமரணப்
வாஹம் அதுவே தேர்ச் சக்கரம்போல மேலுங்கீழும் ம
பாடாக இரவும் பகலும் மிகச் சுழற்றுதலின் கிலே
செய்தலானே நிந்திதமாதலினாலும் உருளைபோன்ற ..
ளையாம், கடீயந்த்ர சமாத்—ஏற்றவெந்திரம் போன்
னின்றும், இதனானே ஏற்றம்போன்றதாம் கடீயந்திரத்
கட்டியிருக்கும் கடிகை மேலேயேறும் கீழேயிறங்கும், இ
போல ஈண்டு தேவாதி தாவராந்தப் பிராணிகள் மே..
கீழும் போதலையேப்போர்து மடைந்துகொண்டேயிருக்கு

அஸ்மாத்=இதனினின்றும், யோகியாகிய முமுக்ஷுவானவன் தன்னை வெளிப்படுத்துக அடைக்கமுடியாத மனத்தினது நிக்கிரகத்தையும் இனிது செய்க, யோகி=தியானி, துர்க்கிரகஸ்யமனஸ:=நிக்கிரகம் பண்ணமுடியாத மனத்தினது, கிரகம்=அடக்கத்தை, சங்கற்பயேத்=நன்கு கற்பித்தலே செய்யவேண்டும், கிலேச பயத்தினாலே உதாசீனமாய் விட்டுவிடலாகாது. 20

(அ-கை) சங்கற்பத்திற்கு அதியத்தன சாத்தியத் தன்மையை அருளும்பொருட்டு அதனது துஷ்டபாவத்தை விரித்தருளல் :—

சு. വിഷയൈഃ ക്രകചൈരേതത്സംസൃഷ്ടം ചക്രകം ദൃഢം
ജനശ്ഛേത്തും ന ശക്നോതി കർമ്മശീലൈഃ സുസംവൃതം॥

க. விடயரம்பங்களாலே விளங்குமிம்மா சம்சாரக்கடவளே திடமதாகுங் கருமசீலங்களாலே, படர்வுறவமைவதாகும் பரம்பொரு ளருளாலன்றி, முடியவே முடியாவெட்டமூடரிங் கெதனினும்.

வி. விஷயை:க்ரகசை:=விடயங்களாகிய ரம்பங்களினாலே, ஏதத் சம்ஸ்ருஷ்டம்=இந்தச் சமுசாரமாகிய, சக்ரகம்=சக்கிரம், த்ருடம்=திரமாம், கர்மசீலை:=கர்மங்களாகிய ஆப்புகளினாலே, சுசம்வ்ருதம்=சூழப்பெற்றதாம், ஜன:=ஜனம், சேத்தும்=கெடுத்தற்கு, நசக்னோதி=முடியாதாம், இரும்புச்சக்கிர அரம்பம்போல தந்தங்களினால் உள்ளும் வெளியும் மரத்தைப் பிளக்கும் எந்தரசதிருசங்களினால் நாபிநேமிகளினால் சூழப்பெற்றது, திடமான ஆப்புகளினாலே அறையப் பெற்றிருத்தலின் எப்பக்கத்தி

லோக் சம்பந்தியேனும்ஆய போகசாதனத்தை யடைந்து அதன்கண் திருஷ்ணையின் அபாவமாம் இதே வைராக்கிய லக்ஷணம் ஸ்ரீ பதஞ்சலி பகவானல் சூத்திரிக்கப் பெற்றுள்ளது, கண்ட கேட்டவிடயவிதிருஷ்ணனுக்கு வசீகார சம்ஞை வைராக்கியமாம், கண்டவை இகலோகத்தாய மாலைசந்தன வனிதாதிகளாம், கேட்டவை வேதபோதித திவ்ய ஸ்திரீயாதிகளாம், அவைகள் கிடைத்தபோதினும் ஆசையற்ற புருடனுக்கு வசீகாரப் பெயரிய வைராக்கியஞ் சித்திக்கு மென்பது சூத்திரப்பொருளாம் குருப்ரசாத:—யோககலை யடைவு, சத்சங்க: — பிரத்தியக்காத்ம மீமாம்சாபரர்களோடு சகவாசம், அதன்சிந்தனம் அதன்கதனம் அன்னியோன்னியம் அதன் பிரபோதனம் இதனேக பரத்துவம் ஞானப்பியாச மென்று புதர்புகல்வர் எனக் கூறியவித ஞானப்பியாச ஹேதுவாய சாதுசங்கம் முக்கியஜயோபாயம் என்பதாம். (22)

(அ-கை) வைராக்கிய சற்சங்கங்களுக்கு ஜயோபாயத் தன்மையை யருளிச்செய்து அப்பியாசத்திற்கும் அதனை யருளல் :—

சு. [illegible]

ஜயாக ॥

க. பயிற்சியினனுமுள்ளந் தனைவசம் படுத்திவாழ்வார், யயற்சியில் யோகசித்தி யதனினலடையலாகு, மியற்கையிலோடுமுள்ள மிணக்கமு தில்லையாயின், செயற்கருயோக முன்றன் கைவரா செல்வமிக்கோய்.

வி. வா=சப்தம் உம்மைப் பொருளிலாம், அப்யா சாச்சமனோவசீ குர்யாத்=பசியினாலும் மனத்தை வயஞ் செய்க, அப்பியாச வைராக்கியங்களினால் அதன் நிரோதம் =இயற்கையாக எழுந்த மாலையாதி கோசரசித்தத்தின் விருத்தி நீர்ப்பிரவாகத்தை வைராக்கியத்தினாலே தடுத்து சமாதியப்பியாசத்தினாலே பிரசாந்தப் பிரவாகத்தைச் சம் பாதிக்கவேண்டும், ஆகலின் அவ்விரண்டினாலும் ஆக்கப் பெறுவதாம் நிரோதமென்பது பொருள், எனவே ஒன்று சேர்ந்தனவாய அவற்றிற்கே சித்த நிரோத காரணத்துவம் சூத்திரித்திருத்தலின், யோகஸ்ய சித்தயே=யோகத்தி னது சித்தியின்பொருட்டு, இது வசீகார பலம் அருளிய தாம், விபக்கத்தில் தோடமருளல், வரேண்ய=ஹேவ ரேண்யனே, அஸ்ய=சுபாவ சபலமாய, மனசோஜயாத் வினா=மனத்தினது வெற்றியினாலன்றி, யோகோ துர்லப: =யோகம் அடையப்பெறாததாம்.

“ இவ்வகை விசையன்கூற மாயவனியம்புகின்றா
னவ்வகைப் புலனுநெஞ்ச மடக்குகை யரிதானாலு
முய்வகை யோகமியாவு முயற்சியினாலு மொவ்வா
வைவகைப் புலன்செயின்ப மனைத்தையும் வெறுத்த
லானும்.

வெய்யநெஞ்ச மடங்கிடும் வேறிதற்
கையமில்லை யென்றேயறி யாதலாற்
பையவே கரணம்பதி னன்கையுங்,
கைகடந்தவர் யோகமுங் கைகீண்டார்.”

ஆண்டு மனோநிக்கிரகம் முடியாத காரியமாமெனின் விழியாதிகளுக்கு அவ்வக்கோளக மாத்திரத் தடைவடிவம்

அடத்தால் நிக்கிரகம்போல மனத்திற்கும் அடத்தை முடியாததா அல்லது முறைத்தடை முடியாததா? முதலது அங்கீகாரமாம். மனஞ்சலம் நிக்கிரகிக்க முடியாததாம் இனிச் சம்சயமில்லை உண்மையே கூறினை, ஈற்றதோ அசம்பவமாம் பிரத்தியக்காத்மாகார பிரத்திய ஆவிருத்திரூப அப்யாசத்தானும் திருஷ்ட அதிருஷ்ட போகங்களில் தோஷதரிசன அப்பியாச ஜன்னிய நிராசைவடிவ வைராக்கியத்தினுனும் மனம் நிக்கிரகிக்கப்பெறும், தீவிர வேகத்தோடுகூடிய நதியின் பிரவாகம் அணைத்தோடலால் தடுக்கப்பெற்று கால்வாயின்வாயிலாகச் செலுத்தப்பெற்று வயலைநோக்கி குறுக்குப் பிரவாகாந்தரமாக வுண்டாக்கப்படும், அதுபோல வைராக்கியத்தினுலே சித்தநதியின் விஷயப் பரவாகந் தடுக்கப்பட்டு தியானப்பியாசத்தினுலே பிரசாந்தப் பிரவாகம் சம்பாதிக்கப்பெறும் பெறவே முறைத்தடை இனிதுகூடும், இவ்வாறுகவே சமாதியப்பியாச வைராக்கியங்களுக்கு வாயில் வேற்றுமையால் ஒருங்கு சேர்தலாம், ஸ்ரீவசிஷ்டபகவான் மனோஜய உபாயங்களை ஒருங்கு சேர்த்தியுள்ளார் அத்தியாத்மவித்தையை அறிதல் சாதுசங்கஞ்செய்தல் வாசனையின் பரித்தியாகப் பிராண ஓட்டத்தின் தடையென்னு மிந்த யுத்திகள் சித்த ஜயத்தில் புஷ்டியுடையனவாம், இந்த யுத்திகளிருப்ப எவர்கள் சித்தத்தை அடமாக அடக்குகின்றார்களோ அவர்கள் தீபத்தைவிட்டு அஞ்சனங்களினுலே இருளைக் கெடுப்பவர்களாவர்கள், அவற்றுள் அத்தியாத்ம வித்தையானது திருசியத்திற்கு மித்தியாத் தன்மையையும் திருக்கு வஸ்துவிற்கு பரமார்த்த சத்திய பரமானந்த பிரகாசத்தன்மையையும் போதிக்கும் போதிக்கவே மனமானது தன்கோசரமாய திருசியங்

களில் மித்தியாத்தன்மையானே பிரயோஜன அபாவத்தை
யும் பிரயோஜனத்தோடுகூடிய பரமார்த்த சத்திப் பரமா
னந்தரூப திருக்குவஸ்துவின்கண் சொப்பிரகாசத் தன்மை
யானே தன் அகோசரத் தன்மையையும் உணர்ந்து வி
கில்லாத தீயேபோல தானே சாந்தியை யடையும், யாவன்
போதித்த போதினும் தத்துவத்தை நன்குணர்கிலானே
யாவன்றான் மறந்துவிடுகின்றானே அவ்விருவருக்கும் சாது
சங்கமமே யுபாயமாம் சாதுக்களோ மீண்டும் மீண்டு
போதிப்பார்கள் நினைப்பிப்பார்கள், யாவன்றான் வித்திய
மதாதி துர்வாசனையினாலே பீடிக்கப் பெற்றவனாவனோ
சாதுக்களைப் பின்றொடர முடியாதவனாவனோ அவனுக்கு
முன்மொழிந்த விவேகவாசனாபரித்தியாக பிராணாயாமா
கள் உபாயங்களாம், பிராணசலனமும் வாசனையும் சித்த
தையேவுதலானே அவற்றை நிரோதஞ்செய்ய சித்தசாந்தி
சம்பவித்தலின் கூறவும்பெற்றுளது ஸ்ரீவசிட்டபகவானால்
சித்தவிருக்ஷத்திற்கு பிராண சலனவாசனைகளென இரண்
பீஜங்களுண்டு இவற்றுள் ஒன்றீ கெடவே விரைவில் இரண்
டுங்கெடும், அப்பியாச வைராக்கியங்களினாலே நிக்கிரகி
கப்படுமென்பதை அன்வய வெதிரேகங்களினாலே திட
படுத்துவாம், அப்பியாச வைராக்கியங்களினாலே அட
காத அந்தக்கரணத்தை யுடையவனால் சித்தவிருத்தி நிரோ
தரூப யோகமானது அடையமுடியாததா மென்பது பெரி
யோர் சம்மதம், வசமாய சித்தமுடைய புருடனாலோ
மீண்டுமீண்டும் முயற்சி செய்தலாலே கூறியவுபாயத்தாலே
யோகம் அடைதற்கு முடியக்கூடியதாம், வெதிரேகத்தில்
வாக்கினையென்பதாதி சுருதிபுகன்ற பூர்வ பூர்வ பூமிதிடத்
தன்மையின்மைகொள்க அன்வயத்தில் உண்மைகொள்க

இது ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளினது திருக்கருத்தாம். 23

(அ - கை) மனோ நிக்கிரகமானது அனேக ஜன்ம சாத்தியமாதலின் போகத்தைவிட்டவனுக்கு மனோஜயமில்லாதவனுக்கு போகாதி அயோகத்தாலும் பிரட்டனுக்கு இடையில் நாசமாகவேண்டாமென சம்சயப்பட்டவரேண்யன் வினாதல்:—

சூ. யோகப்ரஷ்டஸ்ய கோலோகஃ காகதிஃ கிம்பலம் பவேத்

விதோயைதத்ஜகந்நாத விஸம்சயம் ஸர்வவித் ப்ரபோ॥

க. வீரமே மிகுத்தவெல்லா முணர்ந்தருள் விபுவே புந்தி, யேருலங் குழுவையெல்லா மியைந்தருள் கொழிக்குமெந்தாய், சீரிலா யோகியெந்த லோகத்தைக் கதியைச் சேர்வா, னுருவான் பலனையென் றனையநீ கற்றல்வேண்டும்.

வி. யோக ப்ரஷ்டஸ்ய=யோகப் பிரட்டனுக்கு, கஃ லோகஃ=என்னலோகம், காகதிஃ=என்னகதி, கிம்பலம்=என்னபலன், பவேத்=கிடைக்கும், யாகத்தைத் தொடங்கியவன் பாதியில் இழிவு செய்தவதனால் யாகபலத்தையடையான், மாறாகவோ தோஷத்தால் கீழேபோவான் இவ்வாறு யோகப்பிரட்டனுக்கு மேலுலக அடையில்லாமையினால் கீழானகதியை யடைவன், அதனானே மேலே யேறுதல் உளதா இலதா என்பது முதல்வினாவாம், அல்லது அற்பபுண்ணியத்திற்கு அற்பமே பலமாம் அதுவும் பலதானத்தினாலே தத்ஜன்யம் சுகிருதம் போகத்தினால் க்ஷீணிக்கும் என்பது இரண்டாவது வினாவாம், க்ஷீணமான

பேர்தினும் பூர்வசமஸ்காரத்தால் மறுபடி யோகாப்ப
சத்தில் முயல்வானு முயலானு என்பது மூன்ருவது
வா., ஹேவிபோ!—ஹேவியாபகரே!, புத்திசக்ரப்ருத்
சர்வப்பிராணிகளிடத்திலு மிராநின்ற மதிகளின் சமு
யத்தைத் தாங்குகின்றவரே! காப்பவரே!, இத்தகைய
வஜ்ஞः—முற்றுமுணர்ந்தவரும் முழுவல்லமை வாய்ந்
ரும் ஆகிய தேவரீர், மே—அடியேனுடைய, ஸம்சயம்
—கூறியமுறையான மூவகைச் சம்சயத்தைக் கெடுத்த
வீராக, ஸ்ரீ பகவற்கீதை அருச்சுனன் சங்கை,

என்றுகூற விசைய னியம்புவா
னின்று யோகத்திலே நெடுநாளெலாம்
பொன்றுங் காலத்தயர்ந்துயிர் போயினுற்
சென்று நற்கதியே யன்று சேருமோ.

யோகமேவ வினைக ளொருவினன்
மோகமேவலின் யோக முடிந்தில
னேகமே யிருபாலும் விடாநிற்க
மேகமேயென வீய்ந்து கழியுமோ.

மையலிது வென்மனத்தினின் மற்றிந்த
வையமறுக்க வல்லாரில்லை நீயன்றி
யுய்யவிதனை யுரையென்ன யோகத்தின்
மெய்யனிதனை விரியவுரைக் கின்றான்.

யோகாப்பியாச பரத்தினாலே யெல்லாக் கருமங்
யும் விட்டவனுக்கு யோகபலமாகிய தத்துவஞானத்
யும் அடையாதவனுக்குங் என்னகதியாம், அந்நேல்
வினை யோகமேற விழைந்தான் பொருட்டா? அல்லது

யவன் பொருட்டா? ஆதியதாகாதாம் அவனுக்குக் கருமித் தன்மையானே கருமப்பிரம உபயப்பிரஷ்டத்துவ பரனுக்கு உபய விப்பிரஷ்டபதனுக்கு ஆண்டுச் சேர்க்கையின்மை யின், மற்றதுமாகாதாம் யோகாரூடனுக்கு நற்றரிசித்தன் மையானே ஆண்டு பொருத்தமின்மையின், யோகாப்பியா சத்தைத் தொடங்கி மந்தவைராக்கியத்தினல் இடையில் விடயதற்பரனுனவன் பொருட்டு இவ்வினு வென்னற்க, பாவியாகிய அவன்பால் பொருந்தாமையின் ஆதலின் இவ் வினு இத்தகையதாம் தத்துவ சாக்ஷாத்காரபரியந்த விசார சூனிய விஷயகமாம் தத்துவஞானத்தை யடைந்தவன் ஜீவன்முக்தியை யடைந்தவன் பரமயோகியாம், தத்துவ ஞானத்தை யடைந்தவன் ஜீவன்முக்தியை யடையாதவன் அபரமயோகியாம், அவ்விருவரிடத்திலும் ஜீவன்முக்தி சதசத்பாவ மாத்திரபேத மிருந்தபோதினும் ஞானத்தி னுலே அஞ்ஞான விநாசத்தால் விதேகமுத்தி விவாதமற்ற தாம், ஆதலின் அவர்கள் கதிவிஷயத்தில் யாதொரு சங்கை யுமிலதாம், யாவன்ருன் நித்தியாநித்திய விவேகாதி முறை யாக விவிதிஷாசந்நியாசியாய் வேதாந்தசிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்துகொண்டிருப்ப மத்தியில் விபத்தடைவனே அவன் ஞானபரிபாக சூனியத் தன்மை யால் மோக்ஷசுகத்தை அடையமாட்டான் சொர்க்காதிக ளையு மடையமாட்டான் சர்வகர்ம சந்நியாசத்தால், இத னுல் இத்தகைய யோகப்பிரட்டன் எக்கதியை யடையவன் என்பது வினுவின் கருத்தாம், குரு வேதாந்த விசுவாசத் தோடுகூடியவனுய் சிரத்தை சாந்தி தாந்தி முதலியவற் ருேடுகூடியவனுய் சாதன சதுட்டய சம்பன்னனுய் முதலில் ஞானசாரியனையடைந்து சிரவணுதிகளைச் செய்துகொண்டு

அதிருட அப்பியாசப் பிரயத்தனனுய் தத்துவஞானத்தி னுடைய உதயத்தை யடையாமல் ஆதத்துவஞானனுகவே மிருதனுய் அந்தியகாலத்திலும் யோகத்தினின்றும் நழுவிய மனத்தனுய் மரணவியாகூல மனத்தையுடையவனுதலாலே ஸ்மிருதியில்லாதவனுய் கத்யந்தர அசம்பவனுய் உள்ளவன் என்னகதியை யடைவனென்பதாம்; கருமமார்க்கத்தினின் றும் ஞானமார்க்கத்தினின்றும் நழுவியவொருவன் நசித்து விடமாட்டானே சர்வகரும சந்நியாசித் தன்மையானே கருமரூப ஆசிரயரகிதனுய் தொடங்கிய பிரஹ்மப்பிராப்தி மார்க்கஞானத்தில் விமூடனுய் அதனுனே உபயப்பிரட்டத் தன்மையால் சின்னமேகம்போல நசித்துவிடமாட்டானே வாயுவினுலே பிரிக்கப்பட்டு சிதறுண்ட மேகமானது பூர்வ மேகத்தினின்றும் நழுவியதாய் உத்தரமேகத்தை யடையா ததாய் மழைக்குத் தகுதியற்றதாய் இடையிலேயே நசிப்ப தேபோல யோகப்பிரட்டனும் பூர்வகருமமார்க்கத்தினின் றும் நழுவியவனுய் உத்தர ஞானமார்க்கத்தை யடையாத வனுய் இடையிலேயே கருமஞானபல அயோக்கியனுய் நசி த்து விடுவானே அல்லது மோக்ஷசாதன சமாதிசம்பன் னத் தன்மையானும் சாஸ்திர நிந்தித கரும சூனியத்தன் மையானும் நசிக்கமாட்டானே யென்பது சம்சயம், இந்த யோகப்பிரட்டகதி விஷயசம்சயம் தேவரீராலாயே நீக்கத் தக்கதாம் அன்னியராலாகாததாம், இச்சங்கை ஞானவா சிட்டத்தும் காணலாம்,

"இவண முயர்பூமியி லொன்றை யிரண்டை மூன்றும் வேறொன்றைக், கவர்வுற் றடைந்தோ னுயிர்மாய்ந்தாற் கலந்துமேவுங் கதியேது, தவரிற் பெரியோ யுரையென்னச் —ரு வசிட்டனுரை செய்வான்." 24

(அ - கை) இவ்வண்ணம் பிரார்த்திக்கப்பெற்ற ஸ்ரீ கணேசப் பெருமான் உத்தரமருளல்:—

சு. திவ்யதேஹதரோ யோகாத்ப்ரஷ்ட: ஸ்வர்போகமுத்தமம்
புக்த்வா யோகீ குலே ஜந்ம லபேச்சுசிமதாங்குலே ॥

க. யோகமேநழுவலான யோகிதான் றேவர்போற்று
மாகமேபுனைந்துமேலா மரம்பையர் குழுமிவாழும்
மாகநாடணிற்போக வகையெலா மிகவுமாந்தி
யோகியர்குலந் தூயோர்தங் குலந்தனி லுதிக்குமன்றே.

வி. யோகாத்ப்ரஷ்ட:=யோகத்தில் நின்றும் நழுவி யவன், திவ்யதேகதர:=தேஜோமயமான தேகத்தைத் தரித்தவனாய், ஸ்வர்போகமுத்தமம்=மேன்மையான சொர்க்க போகத்தை, புக்த்வா=அநுபவித்து, யோகிகுலே= யோகிகுலத்தில், சுசிமதாம்குலே=சுசிமான்களுடைய குலத்தில், ஜன்மலபேத் = பிறப்பையுறுவன், யாகத்தை முடியாதவனைபோல யோகப்பிரட்டன் கீழானகதியை யடையமாட்டான், மற்றோ திவ்யதேகத்தைத் தரித்துக் கொண்டு உத்தமமான சுவர்க்கபோகத்தை யுண்பன், இது முதல் வினாவின் உத்தரமாம், இரண்டாவதனுத்தரமோ யோகிகுலத்திலாவது சுசிமான்கள் குலத்திலாவது ஜன்ம மடைவனென்பதாம்.



(அ - கை) மூன்றாவது வினாவினுத்திரமருளல்.

சு. வஸந்யோகீ ஸுவேதேஷு ஸம்ஸாராத்ருவங்கலே
ஜாக
நஹி புண்யக்ருதாங்கஸ்சின்னாசம் வ்ரஜதி வஸ்ருதே

௬ உதித்தவன் மீண்டுமுன்ன மொழுகிய பழக்கத்தானே
மதித்திட யோகியாகி வயங்குவ னருளினாலே [ழாய்க்
விதித்தமெய் யறத்தைச்செய்து விளங்கிய வெவருங்கீ
கொதித்துள நாகந்தோயார் குறையவர்க் கெதுவு
முண்டோ.

வி. ஏஷ=இவன், பூர்வகர்மஜாத் சம்ஸ்காராத்=பூர்வகர்ம ஜன்னிய சம்ஸ்காரத்தாலே, புனர்யோகி பவதி= மறுபடியும் யோகியாவான், புண்யக்ருதாம்=புண்ணியவான்களின்மத்தியில், கச்சித்=எவனும், நரகம்=நரகத்தை, நஹிப்ரதிபத்யதே=யடையமாட்டான், இந்த யோகப்பிரட்டன் யோகி குலத்திலாவது மகா குலத்திலாவது ஜன்மத்தை யடைந்து மறுபடியும் யோகியாவான், அதன்கண் காரணம் பூர்வகருமஜன்னிய சம்ஸ்காரமாம், யோகம் பயின்றவனுக்கு மறுபடி ஜன்மாந்தரத்திலும் யோகப்பயிற்சியிலேயே பூர்வ சம்ஸ்காரத்தால் அவசியம் பிரவிருத்தியாம், அவ்வாறே மிருதியுமுளது

"ஜன்ம ஜன்மாந்தரம் அப்யஸ்தமாய தானம் அத்தியயனம் தபம் அவ்வப்பியாச யோகத்தானே மீண்டும் அதனையே யப்யசிப்பன் என்பதாம்." ஸ்ரீபகவான் உத்தரமருளல்:—

பொய்ம்மை யடையாப் புலனுடை மாந்தர்க
ளிம்மையிடையு மறுமை யுலகத்தும்,
வெம்மை யடைகிலர் மெய்ம்மைவிடா ரென்றுஞ்
செம்மை தெளியின்னுஞ் செப்புதுங் கேளாய்.

யோகமுடியா திடையே யிறந்தவன்
யாகவினை பலசெய்தாங் கிசைந்திடுஞ்

சோகமினு டெய்தித் துன்பந் தொடராதே
போகநுகர்ந்து பல்காலங்கள் போயபின்.

சிறந்தவரசர் திருக்குலத்தாத
லறந்தருயோகி கடங்குலத் தாதல்
பிறந்து பெறுவதெல்லா மெய்திப் பின்னு
மறந்தவியோக மகிழ்வுட னெய்தும்.

கொண்டு பயிலுங் குணமிலனாகினு
முண்டு தெளிவென் றுணர்ந்த வியோகந்தான்
பண்டு பயின்ற பயிற்சினுன் றனைத்
தண்டுதலின்றி முன்றுனே தலைப்படும்.

அனையவி யோகத்தை யாற்றுவ னென்று
நினையு மவனு நெறி பிறழாமல்
வினைகள் பலசெய்து வேள்விமுடித்தா
னணையுங் கதிமேற்கதி பெறுவானால்.

நீடுமன் நிலை நின்றிலனாயினு
மோடும் வகையால் விடாதே யுழன்றவன்
பாடும் பவங்கள் பலகடந்தாயினும்
வீடும்பெறு மின்னும் வேறுஞ்சில கேளாய்.

யோகப்பிரட்டன் நசிப்பனென்பதில் யாதுகொல் ஐயம் அநிஷ்ட அடைவா, இட்ட நட்டமா, அநிட்ட அடைவும் இகலோகத்திலா பரலோகத்திலா, இருபாலும் ஆகாதாம் சாஸ்திரப்படி சர்வகரும சந்நியாசத்தை அநுட்டித்தவனும் எல்லாவற்றினும் விரக்தனும் சிரவணாதி செய்தவனும் மந்திரியில் மிருதனும் ஆகிய யோகப்பிரட்டனுக்கு

இகலோகத்திலும் பரலோகத்திலும் விநாசமும் அநிஷ்ட அடைவும் இலவே இலவாம், இகலோகத்தநிட்டம் உபயப் பிரட்ட னிவனென ஆன்றோரிகழ்தலாம், பரலோகத்த நிட்டமோ நரகவீழ்ச்சியாம், அஃதிரண்டுமே யிலதாம் சாஸ்திர விதிப்பிரகாரம் நடந்தவனெவனும் துர்க்கதியை யேனும் அகீர்த்தியையேனும் நிரயரூபத்தையேனும் அடையமாட்டான் சுகமேயடைவனெனின் நிரதிசய கலியாணத்தைச் செய்த விவன் துர்க்கதியை யடையமாட்டா னென்பதில் கூறவேண்டிய தென்னே, ஆயின் அவனதுகதி யெத்தகையதெனின் கூறுவாம் யோகப்பிரட்டன் இருவகையாவன் ஒருவன் பிராரப்தந்தந்த போகவாசனையன் மற்றொருவன் திடவைராக்கியவான், ஆதியன் அஸ்வமேதாதி செய்தவர்களின் லோகங்களையடைந்து போகங்களை போகாசை தீரும்பரியந்தம் புசித்து பிரஹ்ம சம்வத்சரங்களை ஆண்டு களித்து அதன்பின்னர் பரிசுத்தர்களும் ஞானயோகியர்களும் தனிகர்களும் ஆகிய மகாராஜச் சக்கரவர்த்திகளினுடைய குலத்தில் போகவாசனை சேஷமிருத்தலின் ஜனகாதிபோலும் அவதரிப்பன்; திடவைராக்கியவானோ போகவாசனையின்மையின் புண்ணியவான்களின் லோகத்தை யடையாமலே யோகிகளேயாய தரித்திரப் பிராமணர்களுடைய பிரஹ்மவித்தியாவான்களுடைய குலத்தில் பவிப்பன் இது மற்றெல்லாருக்கும் சித்திக்கவே மாட்டாதாம். அவ்விருவகைச் சன்மத்திலும் பூர்வதேகத்தில் சர்வகரும சந்நியாச குருசரணாகதி சிரவணமனன நிதித்தியாசனங்களின் மத்தியில் எத்துணை அநுட்டிக்கப் பெற்றுள்ளதோ அத்துணை பிரஹ்மாத்மைக்கிய விஷயபுத்தியோடு சையோகமுண்டாம் அவ்வளவு சாதனகலாபமும் கிடைக்கும்

தூங்கி யெழுந்தவனிடத்திற்போல உண்டாம் என்றபடி அந்தலாபத்தின் பின்னர் மோக்ஷ நிமித்தம் அதிகமாகக் கிடைத்த பூமியினும் மேலான பூமியைச் சம்பாதிப்பான் பிரயத்தனஞ்செய்வன், சகலமோக்ஷ பூமிகளையும் சம்பாதித்துக் கொள்வன், இவ்வர்த்தம்யாவும் ஸ்ரீ ஞானவாசிட்டத்திற் காட்டப்பெற்றுளது

"இவ்வின முயர்பூமியி லொன்றை யிரண்டை
மூன்றும் வேறொன்றைக்
கவர்வுற் றடைந்தோ னுயிர்மாய்ந்தாற்
கலந்துமேவுங் கதியேது."

என்பது ஸ்ரீ ராகவர் வினாவாம். முன்னரே ஏழுபூமிகள் கூறப்பெற்றனவாம் அவற்றுள் நித்தியா நித்திய வஸ்து விவேக பூர்வகமாக இகா முத்திரார்த்தபோ வைராக்கியத்தினின்றும் சமதம திதிக்ஷை சர்வகரும சந்நியாசாதிவாயிலாகவுண்டாம் முமுக்ஷை சுபேச்சை யெனப் பெயரிய முதற்பூமியாம் சாதனசதுட்டய சம்பத்தென்றபடி, அதன் பின் ஞானசாரியரை யடைந்து வேதாந்த வாக்கிய விசாரணை வடிவம் இரண்டாவது பூமியாம் சிரவணமனன மென்றபடி, அதன்பின் சிரவண மனனத்தால் உண்டான தத்துவஞானத்தின் சம்சயரகிதத் தன்மைவடிவம் தநுமானசியென்னும் மூன்றாவது பூமியாம் நித்தியாசன சம்பத்தென்றபடி, நான்காவது பூமியோ தத்துவ சாக்ஷாத்காரமேயாம், ஐந்தாவது ஆறாவது ஏழாவது பூமிகளோ சீவன் முக்தியின் அவாந்தர பேதங்களென்று முன்னரே கூறப்பெற்றது; அவற்றுள் நான்காவது பூமியை யடைந்திறந்தவனுக்கு சீவன் முக்தியிலதேனும் விதேக கைவல்யப் பொரு

ட்டுச் சம்சயமேயிலதாம், அதன் மேற்பட்ட பூமி மூன்றையு மடைந்த சீவன் முக்தன் விதேகமுக்தன் ஆவனென்பதில் கூறவேண்டிய தென்னையுளது, நான்கு பூமிகளில் சங்கையே கிடையாதாம், சாதனபூமி மூன்றிலோ, கருமத்தியாகத்தானும் அஞ்ஞானத்தானும் சங்கையுண்டாம் என ஆண்டையதே வினவாம், அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரம் விளம்பல்,

"யோகபூமி யம்சம்விடா துறலாற் பழைய தீவினைபோ
மாகவிமான மதற்பின்பு வந்துகொடுபோய் வானவர்வாழ்
நாகமுதலா முயர்பதியினன் மேருவின்சூழ் பொழின்முழையிற்
போகமடவாரொடுங் கூடிப்புணர்ந்து சிந்தைகளி கூர்வன்."

"அருந்துபோகமாய்தலினு லளவில்பண்டை யிருவினையும்
பொருந்தமாயு மப்போது புவியிற்பிறப்ப ரியோகிகடாந்
திருந்துசெல்வங் குணஞ்சுத்தஞ் சிறந்தநல்லோர் மனைப்பிறந்து
வருந்திமுன்னம் பழகுதலால் வழுவாயோக நெறிநிற்பர்."

ஆண்டு முற்பாவனைப்பியஸ்த யோகபூமிக்கிரமத்தை புதர் பார்த்து மேலாச உத்தரபூமித்திரயத்தை யடைய வேறுவர், ஈண்டு முன்வளர்ந்த போகவாசனை மிகுதிப்பாட்டினும் அற்பகால அப்பியஸ்த வைராக்கிய வாசனைக் குறைவுபாட்டினுலே உயிர்கிளம்புஞ் சமயத்தில் கிளம்பிய போகேச்சையுடையவன் சர்வகரும சந்நியாசியெனப் பெற்றான், யாவனான் வைராக்கியவாசனைப் பிராபல்யத்தால் மிகுந்த புண்ணியஞ் செய்ததாலுளதாய பரமேசுவரப்பிரசாத வசத்தானே உயிர்போஞ்சமயத்தில் அநுற்பூத போகேச்சைய னை சந்நியாசி போகத்தடையில்லாமலே சர்வப்பிரமாத

காரணசூனிய பிரஹ்மவித்துக்களாய பிராமணர்களுடைய குலத்திலேயே யினிதுதிப்பன், அவனுக்குப்பழைய சமஸ்கார வெளிப்பாடு அநுயாசமாகவே சம்பவித்தலின் முன்னவனுக்கேபோல மோக்ஷப்பொருட்டு ஆசங்கையிலதாம் என்பது ஸ்ரீ வசிஷ்டபகவானது கருத்து, பரமகாருணிகராய ஸ்ரீ கிருஷ்ணபகவான் பக்ஷாந்தரமே அருளியுள்ளார்; அற்றேல், யாவன் புண்ணியவான்களுடைய லோகங்களையடையாமல் யோகிகளின் குலத்தில் உண்டானன் அவனுக்குத் தடையற்ற முற்பிறப்பிலாய ஞானசமஸ்கார உற்போதத்தால் புத்தி சம்யோகலாபத்தால் அம்முயற்சியுளதாகுக, யாவன்றன் புண்ணியவான்களின் லோகத்தை யடைந்து ஸ்ரீமான்களின் குலத்தில் உண்டானனே வெகுவித விஷயபோகத்தடையா லுண்டானவனுக்குப் போகவாசனைப் பிராபல்யத்தால் எங்ஙனம் மிகத்தடையுற்ற ஞான சமஸ்கார உற்போத தற்பிரயத்தன சம்பவம் என்று சங்கிப்பின் அனேக ஜன்மத்தடையுறினும் ஞானசமஸ்காரம் சர்வ விரோதிகளையுங் கெடுத்தலால் தன்காரியத்தை அவசியஞ்செய்யுமென வுத்தரங்கூறுக, வெகுகாலத் தடையுற்ற ஜன்ம உபசிதாமாயினும் அந்தபூர்வஅப்பியாசத்தானேயே ஞான சமஸ்காரத்தினனேயே போக வாசனையோடு கூடியிருட்பதனாலே இச்சியாதிருப்பினும் அகஸ்மாத்தாகவே போகவாசனைகளினின்றும் கிளப்பப்பெற்றுமோக்ஷசாதன நாட்டமுடையவன் ஆக்கப்பெறுவன், ஞான வாசனைக்கு அற்பகாலப் பயிற்சித்தன்மை யிருந்தபோதினும் பரமார்த்த சத்வஸ்து விஷயகத் தன்மையானே அவஸ்து விஷயக போகவாசனையினின்றும் பிராபல்யமிருத்தலின், இதனைக் கைமுதிக ஞாயத்தானும் திடமாகக் காணலாம். மோக்ஷ

உபாய்பூத ஞானவிஷயத்தை அறியவேண்டுமென் றிச்சித்த முதற்பூமியிலிருக்கும் முமுக்ஷுவும் அதே பூமியில் மிருதனுய் யோகப்பிரஷ்டனுய் மறுஜன்மத்தில் கருமப்பிரதிபாதக வேதத்தைத் தாண்டுவன், கருமாதிகாரத்தைத் தாண்டலால் ஞானதிகாரியாவன், இவ்வண்ணம் முதற்பூமியில் மிருதனும் அன்னிய ஜன்மத்தில் ஞானியாகி விடுபடுவனேனாயின் இரண்டாவது பூமியிலேனும் மூன்ருவது பூமியிலேனும் மிருதன் அன்னிய ஜன்மத்தில் ஞானியாகி விடுபடுவானெனக் கூறவும்வேண்டுமோ, யோகியானவன் முன்னியற்றிய முயல்வினும் அதிகமதிகமாக முயல்பவனுய்க் களங்கமற்றவனுய் அந்த யோகப்பிரயத்தன புண்ணியத்தானேயே ஞானப்பிரதிபந்தக பாபராசியைத் தூற்றினவனுய் அநேகஜன்மங்களில் விருத்தியான யோக சமஸ்காரத்தினலே நல்ல ஞானியாகி அதன்பின் மேலான முத்தியையடைவானெனக் கூறவேண்டுவதென்னே. 26

(அ - கை.) இனி யோகியைப் புகழ்ந்து கொண்டு துவம்பதார்த்த சுத்தியை உபசங்கரித்தருளல்:—

சு. ஜ்ஞாநநிஷ்டாத்தபோநிஷ்டாத்கர்மநிஷ்டாந்நராதிப
ச்ரேஷ்டோயோகீச்ரேஷ்டதமோபக்திமாநஸ்யதேஷ்யய: ॥

க. ஞானிங்கருமந் தவமென்னு நாட்டமூன்று முடையரினு, மானயோகி சிறந்தவனு மற்றுமவர் கடமிலேவன், ஞானகனமா மென்னிடத்தி னல்மாரன்பு மிகுத்தவனே, தேனங்குலவு மணிமார்பா சிறந்தோர் தமினுஞ் சிறந்தவனே.

ஆரியயனரற்கு முமைமுதலெவர்க்கு மரியவனுகினு மருளால், உரியவனெனவே யவர்களும்போற்ற வுத்தமக் குரவனுய்ப் போந்தே, திரிபைய மெவையு மகன்றிட யோ கஞ் செப்பின னரசனைநோக்கி, கரியவனமையின் மடியின் மேலாலுங் கருத்தினி லாடுதற் கெளியோன்.

ஓம் தத் சத் திதி யுபநிடதார்த்த கருப்பம்வாய்ந்த ஸ்ரீமத் கணேசகீதை யென்னும் யோகாமிருத அருத்த சாஸ்திரத்தில் ஸ்ரீம தாதிகணேசபுராணத்திலுள்ள ஸ்ரீமத் கஜானனவரேண்ய சம்வாதத்தில் யோககதன மெனப் பெயரிய ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

வி. ஹே நராதிபனுகிய வரேண்யனே! ஞான நிஷ்ட கேவல வேதாந்தி சிரவணுதி பர பரத்வாஜாதியினின்றும் யோகி மேன்மையனுவன் அவ்வாறே தபோநிஷ்ட விசுவா மித்திராதியினும் யோகி சிறந்தவன், கரும நிஷ்ட வசிஷ் டாதியினும் சனகாதியோகி சிறந்தவர் அவ்வியோகிகளுள் ளும் எம்மிடத்திலன்புடைய பிரகலாதாதிகளேனும் நார தாதிகளேனும் மிகமிகச் சிறந்தவர் என்பது என்றிருவுளம் ஆகலின் நீயும் அத்தகைய யோகியாவாய் என்பது திருக் கருத்தாம், இவ்வண்ணம் சோதித துவம்பதார்த்தமாம் இனி தத்பதார்த்த சுத்திபாம், அதாவது கரும சந்நியாசப் பிரதிபாதனவாயிலாக ஊகத்துடன் துவம் பதார்த்த நிரூ பணபரனுக்குப் பகவற்பத்தி நிட்டைப் பிரதிபாதன வாயி லாக தத்பதார்த்த நிரூபணப் பிரவிர்த்தியாம்.

நராதிப=நரேந்திரனே, ஞானநிஷ்டாத்=ஞானநிட்டையனினும், தபோநிஷ்டாத்=தவநிட்டையனினும், கர்மநிஷ்டாத்=கர்ம நிட்டையனினும், யோகி = யோகியானவன், சிரேஷ்ட:=சிறந்தவன் தேஷு=அவர்களுக்குள், ய:=யாவன், மயி=என்னிடத்தில், பக்திமான்=அன்புடையவன்,சிரேஷ்டதம:=மிகமிகச்சிறந்தவனுவன்(அவன்) அவன் ஸ்ரீமத் பகவற்கீதை,

எல்லாத்தவமு மியற்றிநின்ருேனினு
மெல்லாக்கலைகளுங் கற்றுணர்ந்தோனினுஞ்
செல்லாக்கருமமெல்லாஞ் செய்தவனினு
நல்லான்வலியோகி நீயிதுநண்ணுவாய்.

இருவகையவினையறுக்கு மியோகிகளெல்லார்களினு
மருவரியமனத்தினையு மன்பையுமென்பால்வைக்கு
மொருவனுமே யானுவக்கப் படுகின்ருெனெனவுரைத்தா
னருவென வன்றுருவென முன்பாராலு மறிவரியான்.

இப்போது அத்தியாய அர்த்தவடிவ யோகத்தைப் புகழ்ந்து உபசங்கரித்தருளல், தத்துவஞான மனோநாசவாசனக்ஷய சம்பன்ன யோகியானவன் கிருச்சிரசாந்திராயணுதி தபோநிஷ்டர்களினும் உத்தமனுவன், மனம்பொறிகட் கொருமையே தவமாம் அது சர்வதர்மங்களினும் மேலானது என்பதாதி ஸ்மிருதிகளினுலே யோகத்திற்குச் சர்வதவமேன்மை கூறப்பெற்றிருத்தலின், அவ்வாறே அஸ்வமேதாதி கருமஞ் செய்பவர்களினும் அதிகனுவன் அஸ்வமேதாதி பலங்களுக்கு யோகப்பிரட்டன் பொருட்டு அடைவுறுதலாந் தன்மையுண்மையின் யோகத்திற்கு அதனினும் ஆதிக்கியம் உணரப் பெறுதலின், வித்தையினுலே யதனை

யடைவர், விழைவுகளெல்லாம் எதனின் முடியும், அத்திற் றகக்ஷிணை யடைவுறமாட்டா, வித்துவானல்லாதவத்தினர் தாழும், நத்தியதனை நண்ணவுமாட்டார். என்னுஞ் சுருதியினுனே தவக்கன்மபலத்தினுஞ் சிறந்த அவற்றால் சாதிக்கமுடியாத புருஷார்த்தஹேதுத் தன்மைக்காட்டப்பெறுதலினாலும் உணர்க, அவ்வாறே ஞானிகளினும் அதிகன் தத்துவசாக்ஷாத்கார மிருந்தபோதினும் மனோநாச வாசனாக்ஷயவானுக்கு மேன்மைகூறப் பெற்றிருத்தலின் நீயோகியாவாய், பக்தியோகத்திற்கு ஞானயோகத்தினும் மேன்மையின்றும் பூர்வாபர விரோதம் வருதலின், பக்தியினால் என்னையறிவன் என்னையுண்மையா யறிந்து பரமபத முறுவன், எவனுக்குத் தேவனிடத்தில் பரமபக்தி யென்பதாதியானே ஞானசாதனமாகக் கூறப்பெற்ற பக்திக்கு பலத்தன்மையானே முக்கியமாய ஞானத்தினும் அதிகத்தன்மை கூடாமையானும், மற்றே தேவதாந்தரபக்தி யோகத்தைக் குறித்து ஸ்ரீ கணேசபகவானுடைய பக்தியோகத்திற்கு மேன்மைகூறப்பெறும், வசுருத்திர ஆதித்தியபரர்களாய யோகிகளெல்லாரினும் என்னும் ஸ்ரீ பகவத்பாடியத் திருமொழியிருத்தலின், அவ்வாறுகவே யாவன் எம்மைச் சிரத்தையோடு பஜிக்கின்றனோ அவன் எல்லாத் தேவதைகளின் பக்தர்களுக்குள்ளும் மேன்மையனவன் என்பது பரமேசுவரராகிய எம்முடைய திருவுளம், இராஜாவை வேலைக்காரன் பஜிக்கின்றான் அதுபோலவே யாதங்களுடைய பஜனம் எனின்; எம்மிடத்தில் அன்புமிகுந்த மனத்தோடும் பஜிப்பவன் என்றுணர்க, வேலைக்காரனுக்கு மனைவிமக்களிடத்தில் அன்பாம் அரசனிடத்திற் சேவையாம், அரச அன்போடேற்றுமனத்தால் அரசனைச் சேவிப்பான் சிலபால்

தானமாணுதியால் அரசனாற் கொண்டாடப்பட்ட சேவகன் அன்போடுகூடச் சேவித்தபோதினும் சிரத்தையிராதாம், சுருதிமிருதியிதிகாச புராணப் பிரசித்த எம்முடைய பரமேசுவரத்தன்மை பரமகாருணிகத் தன்மையடைந்தாரைக் காக்குந் தன்மையாதி விஷயக சத்தியத்துவ விசுவாசமென்னும் சிரத்தையோடுகூடி யெம்மைப் பஜிப்பன், ஆகையினாலே நீயும் இவ்வண்ணம் எம்மைப் பஜிப்பாயாக. 27

பிறப்பொடுமிறப்பை யகற்றுகம்பீரப் பெருமருஞ்சற்பொருள் பெரிதுந், திறப்புறக்காட்டுங் கணபதிகருத்தின் றீபிகையெனுங் கணேச்சுரன்றன், சிறப்புறு சாதுர்தரனணிபுரிந்த திவ்வியகீதையி னுரையின், மறப்பறுமைந்ததாமத்தியாயம் மாமுகன் றிருவடிமகிழ்வே.

ஸ்ரீமத் பதவாக்கியப் பிரமாண மர்யாதா துரந்தர சதுர்தர வம்சாவதம்ச கோவிந்தசூரிசூனு ஸ்ரீ நீலகண்ட பண்டித ராற்றிய கணபதிபாவ தீபிகையென்னும் ஸ்ரீ கணேச கீதை டீகையில் இது ஐந்தாவதத்தியாயம் முற்றிற்று.

# ஆறாவது புத்தியோக அத்தியாயம்.

---

(அ - கை) பூர்வ அத்தியாய அந்தத்தில் யோகி சர்வ சிரேட்டனாயினும் என்னிடத்தில் பக்திமான் சிரேட்ட தம னுவன் என்றருளியதைக் கேட்டு பக்தியோகத்தை வினவ இச்சித்தவரேண்யனை நோக்கியருளி சுயமே தெரிவித்த ருள்பவராய் ஸ்ரீ கணேசப் பெருமான் திருவாய் மலர்ந் தருளல்.

சூ. ஈத்₃ருஶம் வித்₃தி₄ மே தத்த்வம் மோஹதோ நாஜ்ஞாத தத்த்வதா
யஜ்ஞாத்மா மா ம்ஸம்ஜ்ஞம் வேத்தி மோக்ஷம் வித்₃தி₄ ம்ஸம்ஹம் ॥

க. வத்துவாகி வபுவை மறந்திடச்
சத்தியானந்த தற்பரரூபமே
யத்திமாமுகனாகி யரசனைப்
புத்தியோகம் புரியப் புகலுமால்.

இவ்வகையுணர்தி யென்றன் றத்துவ மென்பாலான
வொவ்வுமுண் மனத்தினாலே யுணர்ந்திந்த வகையதாக
வெவ்விடத்தினுமா மென்னை யிருமையாமையம் போக்கிச்
செவ்விதின டைவாய்முத்தி செறிதிநீ செல்வமிக்கோய்.

வி. ஈத்ருசம்=இவ்வண்ணமாக, மே, தத்வம், வித்தி=என்னுடைய தத்துவத்தை யுணர்தி, பூர்வாத்தியாயத்தில் அருளியவிதமாக அறிவாய், ஆண்டோ, பராம் நிர்வ

ருத்திம் என்பதனனே துவமர்த்தத்திற்கு பரமானந்த ரூபத்தன்மைக்கூறி யருளப்பெற்றது, விசுவஸ்மின் நிஜமாத்மானம் விசுவஞ்ச ஸ்வாத்மனீக்ஷதே என வதற்கே எங்குமிருக்குந் தன்மையாதி யருளப்பெற்றது, சர்வகம் மாஞ்ச வேத்திய என்பதனனே தத்பதார்த்தமாகிய தனக்கும் எங்குமிருக்குந் தன்மை யருளப்பெற்றது இரண்டு சர்வகங்கள் இயலாவென்று சங்கிப்ப யோகேன யோமாம் என்னுஞ் சுலோகத்தினலே துவமர்த்தம் என்னை யடையும் யானும் துவமர்த்தத்தை யடைவேன் என அவ்விரண்டிற்கும் அபேதமருளப்பெற்றது, அவ்விது ஈத்ருசம் என்னும் பதத்தினலே உணர்த்தப்பெற்றதாம் அனுரோபிதரூப ஆத்மாவினுடைய தத்துவத்தை, சீவர்களுக்கு பிர்ஹ்ம அனன்யத்தன்மையையும் பிரஹ்மத்திற்கும் ஜீவதத்துவ அனன்யத்தன்மையையும் உணர்தி எங்ஙனமெனின், மத்கதேன அந்தராத்மனு=என்னுட்படுத்திய உண்மனத்தானே ஆலங்கட்டி நீர் நியாயத்தானே என்னிடத்தில் பிரவிலாபித மனத்தினலே, யத்=இவ்வகையாக, சர்வகம்மாம் அசங்திக்தம்=பிரத்தியக்கு அபின்னத் தன்மையில் சம்சயாதியீனமான எங்குமிருக்கும் என்னை, ஜ்ஞாத்வா=உணர்ந்து, வேத்ஸி=சாக்ஷாத்தாக அடைவாய், அதன் பின்னர், மோக்ஷ்யஸி=முக்தனுவாய், நீ சர்வகன் ஆவாய் ஆதலின்; முக்தனுக்கும் சர்வான்மத் தன்மையுண்மையின் சர்வகத்தன்மையானது பிரசித்தமேயாம், யாவன் இவ்விதம் உணர்வானே அகம் பிரஹ்மாஸ்மியென்று அவன் இவ்வியாவும் ஆவன், இவ்வியாவும் எவ்விவ்வான்மா வெனவும் பிரஹ்மவித்தாய் முக்தனுக்கு சார்வான்மியம் கேட்கப் பெறுதலின். 1

(அ - கை) இவ்வண்ணம் ஞானபலத்தைக் காட்டியருளும் வாயிலாக ஜிஞ்ஞாசுவை அபிமுகப்படுத்தியருளி ஞானசாதனமான தத்பதார்த்த உபாசனத்தைக்கூறி யருளும் பொருட்டு பதிஞ்ஞை செய்தருளல்.

சு. தத்தேஹம் ஸம்ப்ரவக்ஷ்யாமி லோகாநாம் ஹிதகாம்யயா
ருதே யஜ்ஞாநதோ நாந்யந் மோக்ஷஸ்ய ஸாதநம் ந்ருப ॥

மன்னவ நினக்குஞேய மாமுகமானயானே
பன்னுவல் கேட்டிலோகம் பயன்பெறும் விழைவினாலே
யன்னியம் வீடுமேவச் சாதனமமையாதாகு
மென்னினிங் கிதையேயெந்த வகையினு மெய்தவேண்டும்.

வி. ஹே, ந்ருப=ஹே வரேண்யனே!, தத்தே= அதனை உன்பொருட்டு, ஞானசாதனமாகிய ஞேயவஸ்துவையும், அஹம்=சர்வஞ்ஞ பரமேசுவரராகிய யாம், வக்ஷ்யாமி=கூறுவேம், நீயும் எம்மால் அருள்பெற்ற அதனை, சுருணு=கேட்குதி, நீ எமது தரிசனமாத்திரத்தால் கிருதகிருத்தியனுவாய், ஆயினும், லோகானும் ஹிதகாம்யயா= உலகத்தாரின் ஹிதத்தை யுத்தேசித்து, அருளுவே மென்பது சம்பந்தம், அவ்வாயிலாக வுண்டாம் சிஷ்டபரம்பரையால் இதனைக்கேட்டு அன்னியரும் கிருதகிருத்தியர் ஆகுக என்பது திருக்கருத்தாம், யதஃ அன்யத்முக்தேச்சு சாதனம் ஜ்ஞேயம் நாஸ்தி=எதனால் வேறுமோக்ஷத்தினது சாதனமான ஞேயம் இலதாமோ, எதனால் ஆத்மஞான சாதன அன்னியத்தினும் உணரத்தக்க ஞேயம் இலதாமோ மற்றூ ஆத்மதத்துவமே முத்தியின் நற்சாதன மேஞயமாம்;
ஸ்ரீ பகவற்கீதை

உய்யவன்பிஞெடு மென்னையே யடையு மியோகமே பயிலும் யோகிதா, ஐயமின்றியென்னையே யறிந்திடுமதைய நீயுமறிவாயென, வையமுண்டமறை நீர்மையுண்டிடையர் மாதருண்டிட மலர்ந்திடுஞ், செய்யதண் பவளவாய் திறந்து திருமாது கேள்வனிவை செப்புவான்.

மாயுமாயை மறையாத நெஞ்சினிடை மற்றெனுண் மையினை வாய்மையா, லேயுமாறறவறிந்துளோர்க ளறியாத தொன்றுமிலை யென்னினும்.

சிரத்தையோடுகூடி யென்னைப் பஜிப்பவன் யோகிகளுக்குள் சிறந்தவனென் றருளப்பெற்றது, ஆண்டு தேவரீருடைய சொரூபம் எத்தகையது எனின் இத்தகையதாம் பரமேசுவரரிடத்தில் பற்றுற்று கணமாத்திரையும் அஃதொழிந்த அளவே கெடுமியற்கை வருதலின் மேலுமேலும் திடமாகப் பற்றிய மனத்தனுய் அதனுனே எமதேக சரணனுய் முன்னருளிய யோகத்தைப் பயின்று யோகவிஷயமாய சர்வபூதி பலைசுவரியாதி சம்பன்ன எம்மை ஐயமின்றி எந்த ஞானத்தினுலே உணருவாயோ அதனைக் கேட்குதி, அபரோக்ஷ அநுபவ சகிதமாய இந்த சாஸ்திரசித்த ஞானத்தை உன்பொருட்டு முழுவதையும் யாம் கூறுவேம், எந்த ஞானத்தை யுணர்ந்து இருக்குமுனக்கு இங்கு மறுபடி வேறென்றறியத்தக்கதாக எதுவும் எஞ்சமாட்டாதோ இவ்வியாவும் அறியப்பெற்றதேயாம் என பிரஹ்ம சொரூபத்தையறிந்தவனுக்குச் சர்வத்தையு முணர்ந்திருக்குந் தன்மையானே அறியத்தக்க தொன்றின்மையினுனே கிருதார்த்தனுவாய். 2

(அ - கை) ஞேயத்தையே அருளல்.

சு. ஜ்ஞேயா மத்ப்ரக்ருதி꞉ பூர்வம் தத꞉ ஸ்யாஜ்ஜ்ஞானகோசர꞉
ததோ விஜ்ஞானஸம்வித்திரஜ்ஞானே தந்ருணாம் ஸுகம்

க. விம்மென் பகுதியுணர்ந்திடுக முன்பின்ஞான விட்டயமதாம், அம்மவதனால் விஞ்ஞான வடைவதாகு மெனை யுணரிற்,செம்மை நரருக்கு குதிக்சமகங் கஞ்சித்தந்நீகாலே, வெம்மைநிலவு முயிரேகாத சத்தின்விதமா மென்பகுதி.

வி. மத்ப்ரக்ருதி꞉=எமது பகுதி, எஞ்சம்பந்தியாய முக்குண வடிவமாயை, பூர்வம் ஜ்ஞேயா=முன்னுணரத் தக்கது, மாயாகாரிய பூததேகேந்திரியாதிகளை முன்னுணர்ந்து, தத꞉=அதன்பின்னர், ஜ்ஞானகோசர꞉=ஞானத்தின் விஷயமாய ரூபாதி, ஸ்யாத்=உண்டாம், இதுபொருள் சுஷுப்தியைத் தொடங்கி அப்போது இதனை வாக்கானது சர்வ நாமங்களோடு அடைகின்றது, சக்ஷு சர்வரூபங்களோடு அடைகின்றது அதாவது கிரியாசக்தியின் கண்ணை ஒன்றும்போது பிராஞ்ஞோபாதிக ஆத்மாவை வாக்காதிகள் விடயங்களுடன் அடைகின்றது எனச் சர்வலய அதிஷ்டான ஆன்மாவைக் கூறி மறுபடி பிரபோதத்தில் ஜாஜ்வல்யமான அக்கினியின் நின்றும் துச்சமான அக்கினி கணங்கள் எத்திசையினுங் கிளம்பிச் செல்கின்றன இவ் வண்ணமே வேறுவகையின்றி இந்தப்பிராஞ்ஞோபாதிக ஆனந்த ஆத்மாவினின்றும் வாக்காதிப் பிராணன்கள் எதற்கு எத்தகைய நராவாதி யிடங்களாமோ அதனைக்குறித்து விவிதமாகச் செல்கின்றனவாம், பிராணன்களினின்றும் அக்கினியாதி தேவர்கள் கிளம்புகின்றார்கள், அவர்களிடத்தினின்றும் நாமாதிவிடயங்களாம், பிராஞ்ஞோபாதிக பீருடன்

எப்போது நனவையடைகின்றனரோ அப்போது இவ்வி டத்தினின்றும் உற்பத்தியில் திருட்டாந்தமாமிது அதாவது ஆத்மாவினிடத்தினின்றுமே வன்னி விஸ்புலிங்க நியாயத் தால் பிராணசப்தித சக்ஷுராதிகட்கும் அவற்றினின்றும் அவற்றினதிஷ்டாதாக்களாய சூரியாதி தேவர்களுக்கும் அவர்களினின்றும் அவர்களால் விளக்கப்படுவனவாய லோகங்களுக்கும் உற்பத்தி கூறப்பெறுகின்றதென்று தெரி ந்துகொள்ளல் வேண்டும் ஆகலின் இவ்வண்ணம் திருஷ்டி சிருஷ்டியைப் பின்பற்றி சித்தத்தைப் பிரத்தியக்கின் தற் பரமாக்கி,மயி=எமது விஷயத்தில், விஜ்ஞான சம்பத்தி= அநுபவ வடிவமாகக் கைவல்யமுண்டாம், அடையலாம் எவர்களுக்கெனின், ன்ருணும்பவேத்=அதிகாரிகளுக்குண் டாம், நிஷ்பிரஞ்சமாகவிருப்பின் எல்லாப்பிராணிகட்கும், ததஃ=அதன்பின், ஜ்ஞாதே=பிரத்தியக்காத்மா வுணரப் பெற்றதாய், சம்பத்தியுண்டாமென்பது சம்பந்தம். 3

(அ - கை) முக்குணவடிவமாய மாயையைக் காரிய வாயிலாயே குறிப்பிக்கலாம் இரஜ்ஜு சர்ப்பாதிகாரண மாகிய அஞ்ஞானம் இதுவெனக் குறிப்பிக்க முடியாதாம், பிரமாண அகோசர மாதலின், ஆதலால் அதன்காரியமே யாய பதினொரு விதத்தையருளல்.

ஸூ. க்ஷ்நமௌவஉஹங்காரஃ கஂவித்துஂயீவஸீரணஃ
ரவீநூ ராமக்ஷுவெகாஃயாவ க்ஷுதிஉஉஉ ॥

வி. ஈண்டு இனி,அதனால் விபூதிகள் அந்தப் புருட னுடைய வாக்கால் பிருதிவியும் அக்கினியும் சிருட்டிக்கப் பட்டன இவ்வண்ணமாதி ஐதரே யகத்தில் கண்ட சிருட்

டிக்கிரமமே ஆதரிக்கத்தக்கதாம் என்னு மிதனைக் குறிப் பித்தருளும் பொருட்டு இச்சுலோகத் தொடக்கமாம், க்வ னெளெள—பிருதிவி அக்கினிகளின் உபாதானம், அதனால் சக்ஷுவால் சுவர்க்கமும் ஆதித்தியனும் சிருஷ்டிக்கப்பட் டனவாம் பிராணனால் அந்தரிக்ஷம் வாயுவும் சிருட்டிக்கப் பட்டனவாம் என்பதாதியும் கொள்ளத்தக்கது, கம்= ஆகாசம், அஹங்காரஃ=அபிமானம், கம்=உதகம், சித் தம்=சிந்தனைவடிவ தீவிருத்தி, தீஃ=நிச்சயவடிவ புத்தி விருத்தி. சமீரணஃ=வாயு, ரவீந்தூ=சூரியசந்திரர்கள், யாகக்ருத்=எஜமானன், இம்முழுக்கூட்டத்தில் மநுடன் யான் பிராஹ்மணன் நான் என அபிமானவானவான், அந்த இந்த், ஏகாதசதா=பதினொருவகை, மம=எமது சம்பந்தி, ப்ரக்ருதி=மாயை, சகாரம் எண்ணும்மையாம், பிரத்தியக்ஷமாக நித்திரையில் அடங்கும், விழிப்பினே வெளிப்படும், கனு இந்திரஜாலம் போலும் என்பது திருக் கருத்தாம். 4

(அ - கை) இவ்வண்ணம் ஜடப்பிரகிருதியைத் திரு வாய்மலர்ந்தருளி சேதனமான ஜீவரூபப் பிரகிருதியைத் திருவாய்மலர்ந்தருளல்.

சு. அந்யாம்த்வதஃப்ரக்ருதிம் வ்ருஸ்ணாம் உபநயஃ ஸம்ஹிரக்ஷித்வ
தாயதிர்விஷ்வம் வ்ருத்தம் ஜீவகஹம் மதயாநயா ॥

க. அனியமென் பகுதி யனதியானதை, முனிவரர் மொழிகுவர் முயல்வதாமுயிர், வினை தருமதனினால் வளைந்த தாகுமால், தினையெனமுனைவுறுதிரய விட்டபம்.

வி. அன்யாம்=வேறான, வ்ருத்தாம்=அநாதியான, மத்ப்ரக்ருதிம் ச=எமது பகுதியையும், முனய:=மனன சீலர்கள், சங்கிரந்தி=கூறுகின்றார்கள், தயா=அதனால், ஜீவத்வம் கதயானயா=ஜீவத்தன்மையை யடைந்த இதனாலே, த்ரிவிஷ்டபம் வ்யாப்தம்=சுவர்க்கம் வியாபிக்கப் பெற்றதாம், சகலலோகமும் வியாபிக்கப் பெற்றதாம், திருசியம்போல சிதாபாசரூபதிஷ்டாவும் அத்தியஸ்த மென்பது திருக்கருத்தாம். ரு

(அ - கை) இவ்வண்ணம் பிரகிருதி யிரண்டையு மருளி அவற்றின் காரியத்தைத் திருவாய்மலர்ந்தருளல்.

சு. 𑌆𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑌯𑌂 𑌜𑌗𑌤𑍍
𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑌹𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌸𑌂𑌭𑍂𑌤𑌿𑌃 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌂 𑌲𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌹𑌮𑍍॥

க. சரவசர மயவுலகஞ் சருவமுறி மஜடவஜடம்
விரவியவப் பகுயினா லுண்டாகும் விசுவமதன்
விரிவுதயம் வியன்காப்பு விலயமதன் காரணமாய்
பரவரிய யானே காண்பண் பாகவிருக்கின்றேன்.

வி. ஆப்யாம்=ஜடாஜடப் பிரகிருதிகளின், சங்காத்=சம்பந்தத்தால், அஹமேவ=யானே, விசுவஸ்யசம்பூதி:=உலகத்தையுண்டாகுவன், யானே, பரித்ராணம்=காப்பவன், யானே, லயோபி=சம்மரிப்பவனும், ஆவேன் அந்த விசுவம் யாதுகொலாமாலாவெனின், எந்த சகத் சராசர மயம் சர்வம் உத்பத்யதே=ஜங்கமஸ்தாவரமாய் போக்த்ருப் பிரதானமாய் உள்ள சர்வஜகத்தாகிய யாதுண்டாமோ அது விசுவம், இது பொருளாம் அஃதெங்ஙனம் சைந்தவகனம் அனந்தரம் அபாஹ்யம் கிருத்ஸ்னம் ரசகனமே இவ்

வண்ணம் நிச்சயமாக அரே இந்த ஆத்மா அனந்தரம் அபாஹ்யம் கிருத்ஸ்னம் பிரஜ்ஞானகனமே சர்வகாரியப் பிரளயத்தில் வித்தியா நிமித்தமுளதாகவே சைந்தவகனம் போல உள்ளற்றதாய் வெளியற்றதாய் முழுவதுமாய் பிரஜ்ஞானகன ஒரு ஆன்மாவே நிலைபெற்றுளதாம் என்னுஞ் சுருதியினால் நஞ்க்கனுச் சுஷுப்திரூப வெளியுள்அவஸ்தா பேதத்திலும் பிரஞ்ஞானகன ஆத்மாவே உளதாம், உற்பத்தி ஸ்திதிலய காலத்திலும் சைந்தவகனம் ரசகனமே, இவ்வண்ணம் சர்வகிரியா காரக பலவடிவ இவை யானேயாவேன், ஸ்ரீ பரமார்த்தரிசனம்,

மண்ணுநீருமெரி தீயும்வாயுவு மவ்வானினோடு மனபுந்தியு, மெண்ணுநீர்மைகளில் யானெனும்பதமு மென்னுமெட்டுமிவை யன்றியே, பண்ணுநீர்மைகளின் மேலதாயுலகிலி யாவையுங்கொடு பரித்துடற், கண்ணுநீடுயிருமாகியென்னுடைய மாயைநிற்பது கைவேலினோய்.

கண்ணினுற்றெரிய லுற்றுணர்ந்திடி விரண்டினுலும் வருகாரியம், மண்ணிநிற்ப நடப்பவென்றபொருள் யாவுமற்றவிரு பான்மையே, நண்ணிநிற்ப துலகாதலாலுலகினுசவுற்பவமு நானலா, தெண்ணின் மற்றறிவதில்லை யெப்பொருளு மென்னினன்னியமதில்லையால்.

வேதமாகிநிகழ் யானலாதுலகி லென்னின் வேறெனவிளங்கிடும், பூதமானவை பொறுக்கவேறு பொறையாளரில்லை யெதுபோலெனி, லோதுமாமணியனேக மூடுருவுகோவை நூலினொரு பான்மைபோன்ம், பேதமானபொருடோறு நான்மருவி நின்றவாறுநனி பேசுகேன்.

சர்வாத்வைதலக்ஷணம் பிரஹ்மசொரூபத்தின் மாயா கத்மம் தாவர ஜங்கமரூப சர்வப்பிரபஞ்சமுமாம், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரம், என்னும் வேற்றுமையால் முக்குணவடிவ அநிர்வசனீய மாயாசக்தி எட்டுவகையானே வேற்றுமையாம், ஈண்டு பிருதிவியாதி பஞ்சமகா பூதவாசகங்களாய பூமியாதி சப் தங்களினாலே மகாபூத சூக்கும அவஸ்தை வடிவப் பஞ்ச தன்மாத்திரைகட்கும் அகங்கார சப்தத்தானே அதன் காரிய இந்திரியதசகத்திற்கும், புத்தி சப்தத்தானே அதன் காரண மகதத்துவத்திற்கும் உபலக்ஷணமாம், ஆகலின் மூலப்பிரகிருதி மகத்தகங்கார பஞ்சதன்மாத்ர பஞ்சமகா பூத ஞான கர்மேந்திரிய மனோரூபமாகச் சாங்கியர் கருதிய வற்றிற்கும், மாயாபரிணாமங்களாய் ஈக்ஷண சங்கற்ப வடி வங்களேயாய் உள்ள புத்தி யகங்காரங்கள் அபஞ்சிகிருத பஞ்சமகா பூதங்களேயாய பஞ்சதன்மாத்திரைகள் எனப் பெயர் வேற்றுமை மாத்திரத்தானே சித்தாந்தத்திற் கரு தியவற்றிற்கும் இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் எட் டிலேயே அடக்கமாமென எண்வகை வேற்றுமையாதலின் யாதொரு கோதுமின்றாம், எண்வகையாய் மொழிந்த பகு தியிது அபரையாம் தாழ்ந்ததாம் ஜடத்தன்மையானு பந்தரூபத் தன்மையானு மென்க, இதனினும் அன்னி மான ஜீவபூதப்பகுதியைச் சேதனத்தன்மையானே மேல னதாகத் தெரிந்துகொள்க, எந்த ஜீவப் பெயரிய பரப்பி கிருதியினாலே தன் கருமவாயிலாய் இந்தவுலகந் தாங்க பெறுமோ நாமரூப விபாகத்தானே இந்தவுலகம் நிர்வகி கப்பெறுமோ இந்தச் சீவவடிவமாய் உட்புகுந்து நாம ரூபங்களை நன்கினிது செய்வேன் எனச் சுருதியிருத்தலின

சதனு சேதனப் பிரபஞ்சத்திற்கு எங்ஙனம் பகுதிவடிவத் ன்மை யெனின் இந்தப் பிரகிருதி அவற்றிற் குபாதான ரணமாம் அவையாவுமே யிதனினின்றும் உண்டாம் னவறிக, மண்ணை யுபாதானமாக வுடைய கடாதிகட்கு ண்வடிவத்தன்மை யிருப்பதேபோல பிரகிருதியை யுபா ானமாகவுடைய ஜடாஜடப் பிரபஞ்சத்திற்கும் பகுதிமா ான்மகத் தன்மை யுளதேயாம், இதனுனே, மாயாமாத் ிரம் இதம் துவைதம் அத்வைதம் பரமார்த்தத்தால், என் தாதிச் சுருதி புகன்ற மித்தியாத்தன்மை அகிலத்துவை. தப் பிரபஞ்சத்திற்கும் மாயாபரிணமத் தன்மை யுண்மை பின் ஐந்திர ஜாலிக பதார்த்தக் கூட்டத்திற்கே போலக் காட்டப் பெற்றதாம், இவ்வியாவும் துணிவாய்ப் பிரஹ்ம மேயாம் என்னுஞ் சுருதிபுகன்ற அத்வைத சித்தி யுபாய மான துவைதப் பிரபஞ்சமித்தியாத் தன்மையைக் காட்டு வாம், மித்தியாத் தன்மை யென்பதைச் சத்வாத்தியந்தா பாவத் தன்மையோடுற்ற அசத்வாத்தியந்தாபாவத்தன்மை யென்றேனும், அடைவுற்றவுபாதியின்கண் முக்காலத்திய அத்தியந்தாபாவ எதிர்மறைத் தன்மையென்றேனும், தன தாசிரயத் திருப்பதாகக் கருதப்பெற்ற முழுதுமிருக்கும் முற்றுமின்மையின் எதிர்மறைத் தன்மையென்றேனும், சுருக்கமாகத் தெரிந்துகொள்க. பரமான்மா வேசகல ஜகத்திற்கும் உற்பத்திகாரணமும் ஸ்திதிகாரணமும் நாச காரணமும் ஆம், எது தான் எதன்கண்ணே உண்டாயிருந் தொழியுமோ அது அதனுல் அபின்னசத்தையை யடை யும் எனவே பிரஹ்மத்தின்கண் உற்பத்தி ஸ்திதி லய வடி வப் பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மபின்னமாகத் தோற்றுதல் மித்தையே யாம்,

எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளு மிலதாகி, வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று மோவியந்தான், பழுதின்மேவுந்தனைத்தானே பாராநிற்கும் பலபொறியு, நழுவு துயிலிலன்றி நனவான்மேவுங் கனவொக்கும்.

விளக்குமிரவிபு மலருமுண்டா யுண்டாம் வீசொளியும் பகற்பொழுதும் விரையும்போலத், துளக்கமில் சித்துண்டாகி லுண்டா ஞாலந்தோற்றரவு மாத்திரமே சொரூபமாகுங், கிளத்த பரமார்த்தத்தா லில்லையென்னக் கேட்டலுமே பாற்கடல் போல்கெம்பீரத்தா, லளக்கரிதாய்ச் சீதளமாயமலமாகி யற்புதமா நின்மொழி யென்றண்ணல் சொல்வான்.

வானநிகரா மனைத்துங் கற்பனை மாத்திரம் வாளாவளராநிற்கு, மானசக நனவுதனிற் கனவுபோலி ராகவனேயறிதியன்றே, யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்றுமென்று, ஞானபரமார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணுமன்றே.

ஏகுதல் வருதறுஞ்சல் விழித்திட லிருத்தனிற்ற, லாகியவெல்லாம் பொய்யென் றழுந்தியுள்ளாசை தீர்வாய், சேகுறவலையுஞ் சித்தம்பகுதியாற் சித்தின்பின்னே, போகவூன்மணத்தாற் சிங்கந்தனைத் தொடர்பூசை போலாம்.

நீண்டகன நீண்டமன விராச்சியந்தா னீண்டமன மயக்கமென்றே, யீண்டு பவந்தனை நினைவாய்த்தோற்றரவு மாத்திரமாமிந்தஞாலங், காண்டகவுண்டன்றிலது மன்றென்றே வேற்றெண்ணங்களை தருனே, யாண்டகையே நன்றுணகாட்சியென மெய்ஞ்ஞான ரறைவரன்றே.

சொன்னநெறியி லறிஞர் தினந்தோறுந் தேவார்ச்சனை புரியி, லென்னைமுதலோர் தொண்டர்களா லேத்தமிக்க பதமுடைய, ருன்னுசகமில்லாதிருந்து முண்டுபோற் றோற்றிடுந்தோற்ற, மன்னதொழிந்து வேறில்லை யரியதவத்திற் பெரியோனே.

என்னும் ஸ்ரீ ஞான வாசிட்டச் செய்யுட்களையும் ஈண்டுதாகரித்துக்கொள்க.

பிரஹ்மபின்ன சகலஜகத்தும் மித்தையாதலின் சர்வாதிஷ்டான பூதப் பரப்பிரஹ்மத்தினும் வேறொரு சிறிதும் பரமார்த்த சத்தியத்தன்மையானே மேன்மையதாக விலதாம் ; பரமாத்மாவினிடத்தில் இவ்வியாவும் சூத்திரத்தில் மணிகணங்கள்போல ஆரோபிதமாகக் கோர்க்கப்பெற்றுளதாம் என்னு மிதுவே சுத்தாத்வைத லக்ஷணப் பிரஹ்ம சொரூப உபதேசமாம், ஜீவ ஆவிர்ப்பாவ விஷயத்தில் அநேகமுறை அநேகவிடத்தில் ஸ்ரீ ஞானவாசிட்டத்தில் காட்டியிருந்தபோதினும் ஓரிடமாத்திரம் காட்டுவாம்.

நொய்யநெடுஞ்சிற் கடறன்னிடத்தே யற்பநுடக்கத் தாற் கணம்விளங்கு நுண்மை நோக்கா, லையமறத் தற்பத மொன் றகண்டமென்றே யழுந்துவாயுக்கடலி லசைந்து சற்றே, மொய்யறிவாஞ் சிற்சித்தி கணகாலத்தின் முழுதுறு சத்தியினுது முழங்கத்தோன்றித், துய்யவிடங்கால மொடுதொழில்கண்மூன்று தூயனசத்திகடம்மைத் துணையாய்ச் சேர்க்கும்.

தனதுசுபாவத்தை யறிந்தநந்தமான தற்பதத்திலிருந்துஞ் சிற்சத்திதானே, யெனதுரு விவ்வவுவென்றே யறி

வுற்ருற்போ லெண்ணுறு மிப்படியுருவை யிதுபாவிக்கி, லனுகதமா யப்பொழுதே பெயர்களெல்லே யாதியாம்பார் வைகள் வந்தடையா நிற்குங், கனவிகற்பந்தரு வடிவாய்ச் சித்துரூபங் கவரிடங் காலந்தொழிற்குக் கலந்தபற்ரும்.

ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந்தன்னே யாவருஞ் சேத்திரக்கிய னென்றியம்பாநிற்ப, ராங்கதுவும் வாதனே யைச் செய்யாநின்றே யகங்கார பாவனேயை யடையாநிற் கும், வாங்கருமாங்காரமு நிச்சயிப்பதாகி மலினமுறு புந் தியாமலஞ்சேர்புந்தி, வீங்கியகற்பனேவடிவாய் மனனநெஞ் சாம் விகற்பமிகு மனம்பொறியா மெல்லவந்தே.

கரசரணமய வுடலேம்பொறிகளென்பர் கவல்வுறவிப் படியன்ரே கலந்துசீவன், விரவிய சங்கற்பமெனும் பாசத் தாலே வீக்குண்டு துன்பவலே வீசப்பட்டுத், தரமறவினைதை யடைவே யடையாநிற்குஞ் சத்திமயமாமனமித் தன்மை யாகிப், பொரவகங்காரதைமேவிக் கோசகாரப் புழுப்போற் றன்னிச்சையினுற் பூணும்பந்தம்.

திசைகாலமாதிகளாற் றன்னுடைய சத்தியினுற் றிரி யாச்சீவன், பசையான லீலேயினுற் றிசைகால மாதிகளாற் பயின்றமேனி, யிசையாநின்றுளபோதே சீவனுக்குப் பரி யாயமென்னப்பட்ட, வசையானவாதனேயின் வசத்தாலே யுலேயுமனம் வந்துதோன்றும்.

இதனுனே அந்த நிர்விகாரப் பரமசிவமே ஜீவரூப மாகி விளேயாடுகின்றதாம், இப்படி விளேயாடுதற்கும் இவ் வுண்மையைத் தெரிந்தவர்க்கு இடரின் றென்பதற்கும், தெரியாதார்க்கு இடருண்டென்பதற்கும் உதாரணம், பிர

ஹமகீதை, கைவல்ய முபநிடதார்த்த முரைக்கு மத்தியா யம்,

தாக்கரும் பரமன்றன் சுதந்தரத்தாற் றன்னுடை மாயை தன்னாலே, யாக்கினனிந்தவுடம் படைந்தறியான் போல நின்றனைத்தையுமதிலே, சாக்கிரத் தென்னுமிடம் வகுத்தன்னபானமுந் தையலார்முதலாம், போக்கியங்களை யும் புசுத்திடுங் கனவும் பண்ணியத்தன்மையே புசிக்கும்

உறங்குமவ்வியத்தமன்னி யதமத்தினுட்புகுந் தொன் றொழியாம, விறந்தவவ்விடத்தே தன்னுருவான வின்பமே புசிக்கு மீண்டெழுந்து, கறங்குபோ னனவையடையினு மடையுங்கன வைவந்தடையினு மடையுஞ், சிறந்தமுப் புரமுமிவன் விளையாடித் திரிதரச் செய்ததேதிகழ்த்தில்.

சொல்லிடும் பொருள்களி யாவையுங்கடந்து சுதந்தர னுய்த் துவக்கின்றி, யெல்லைதீரின்பமே வடிவாகி யிருந்துள விறைவனுக்கென்று, மல்லலுண்டாகா திவையனுபவிக்க வன்னியமாகவோர்சீவ, னில்லையே பேதமின்மையாற் சடந் தானெங்ஙனே புசிக்குமாறியம்பீர்.

ஆதலா லறிவானந்தமா யுள்ளவமலனே யவைபுசிக் கின்ற, னீதெலாம் விளையாட்டே விளையாடு மிடங்களே யிப்புரமூன்று, மாதலாகாமை சொல்லவும்படுமோ வதி சுதந்தரனை யன்னியமா,.யோதலா மோவிப்புரங்களுமவன் றனுருவமே யொழிவிலாமையினல்.

மானுருநனவு கனவுறக்கங்கள் வடிவமா நிகழ்ந்துள விறைக்கு, ஞாலமே விசுவன்றைசதன் பிராஞ்ஞனுமமர் நவிலுவரடைவே, தூலமேவிசுவனுண்பன சுருக்கந்தைச

தன்றுய்ப்பனசுகந்தன், பாலதாதலினுற் றன்னுடையின் பம் பருகிடா நிற்குமே பிராஞ்ஞன்.

புரங்கண் மூன்றிலும் போக்கியமியாவையங், கிருந்து துய்ப்பவனி யாவன்மற்றியாவையும், பரம்பிரமமெனும்படி பார்ப்பவ, னரந்தை யெய்திடா ஞயிரஞ் செய்யினும்.

விழுமிதாமய மேதங்கள் செய்யினும், பழிமிகும்பஞ்ச பாதகம் பண்ணினு, மொழிவுறுமலொன்றே யென்றுண ருவா, னழுவினனந்த நன்மையுந் தின்மையும்.

சீவனன்று புரமூன்றிற் சித்தாமவனே விளையாடு, மேவுமெல்லா மெய்போல வவனுல் விளைதலான் மெய்யத், தேவனே சான்றுதலினுற் சித்துமவனே யத்துவிதன், யாவுந்தானுதலி னெதினுந் தனையே விரும்பிலாலின்பன்.

இந்தப்புரங்க ளொருமூன்று மிவன்றனிடையே யிறப் பதுநிர்த், தொந்தப் புருடனெருகாலு நசியாதலாற் சொல்லு, மந்தப்பிரமமே யவன்று னறியாமையினு லப்பர னைப், பந்தப்படுமோர் சீவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றார்.

பரமான்மாவானது உபாதியின் வயத்தினுலே ஜீவனு யது என்பது சுருதி கண்டாகோஷமாம், அஃதெங்ஙன மெனின் ஒரு சிறிது காட்டுவாம். எதனைத் தெரிந்துகொள் வதினுலே ஜீவசப்தம் பரமான்மாவிற்குப் பரியாயமென வுணர்ந்து இடர்களையலாமோ அஃதிவ்வாறும்:—

நகிய வியாகர்த்தாவால் 'வியாகிருதமாகிய உலக ம் எப்போதுமே எவ்விடத்திலுமே வியாபிக்கப்'

பெற்றுளதாம், யாங்ஙனம் ஈண்டு பிரவேசிக்கப்பெற்ற தென்பது கற்பிக்கப் பெறுதல்கூடும்? அப்பிரவிட்டமான இட்மன்றோ பரிச்சின்னத்தானே புகுதற்குக் கூடியதாகும், புருடனூற் கிராமாதிபோலும் ஆகாசத்தானே சிறிது இல்லை யன்றோ, நித்தியப்பிரவிட்டத் தன்மை யுண்மையின், பாடாண சர்ப்பாதிபோலும் தருமாந்தரத்தானேயெனின்? ஆயினும், பர ஆத்மா தன்னுருவத்தானே புகுதலாகா தாம், ஆயின் என், காரியத்திலிருந்தே தருமாந்தரத் (ஜீவப் பெயரிய) தானே உண்டாம், அதனாற் புகுந்ததென்றுபசரி க்கப்பெறும், பாஷாணத்தில் சகஜமாகவே யுள்ளிருக்கும் சர்ப்பம்போலேனும், தேங்காயிற்றேங்குந் தோயம்போ லேனுமாம்; எனின்? கூடாதாம், அது சிருட்டித்து அதுவே புகுந்தது என்னுஞ் சுருதியான், எவன் சிருஷ்டிக்கத்தான் அவன் வேறுவடிவ மூடையாமலே காரியஞ் சிருஷ்டித்துப் பின் புகுந்தனன் எனவன்றோ கேட்கப் பெறுகின்றது, எவ்வாறு உண்டு செல்கின்றான் என்புழி உண்ணல் செல் லல் வினைதீட்கு முற்பிற்போதுகளில் இதரேதர விச்சேத னும் அவிசிஷ்டனும் ஆயகருத்தாவாவனே, அவ்வாறே ஈண்டுமாம், காரியத்திலிருப்பதற்கே பாவாந்தர உபஜனன மாகிய வழி இது சம்பவியாதன்றோ! ஸ்தானாந்தரத்தோடு வியோகமாகி ஸ்தானாந்தர சையோக வடிவப் பிரவேசம் நிரவயவமாய் அபரிச்சின்னமானதற்குக் கண்டதில்லையாம்; சாவயவத்திலேயே பிரவேச சிரவணத்தான் எனின், அன் றும், "திவ்வியமே யாமமூர்த்த மெய்ப்புருடன் (அமூர்த் தத்வம்=நிரவயவத்வம், புருஷத்வம்=பூர்ணத்வம்) நிஷ் கலம் நிஷ்கிரியம்" என்பதாதி சுருதிகளான்; சர்வவியப தேசிய தர்மவிசேஷப் பிரதிஷேத யாதின் பொருட்டுச்

சர்வசாஸ்திர ஆரம்பமாமோ, எதன்கண்ணே இயல்புதாய அவித்தையானே கர்த்தா கிரியை பல அத்தியாரோபமாக் கப்பெற்றதாமோ, எல்லாவுலகிற்கும் யாதுகாரணமாமோ, எதன் வடிவமாய நாமரூபங்கள் சொச்சமாய சலிலத்தினின்று மென்ன பேனமாய மலமென்ன, அவ்வியாகிருதங் களாய் வியாகிருதங்களாமோ, யாதுதான் அந்நாமரூபங் களினின்றும் விலக்ஷணமாமோ, தானுகவே நித்தியசுத்த புத்த முக்த இயற்கையதாமோ அவ்விதுவே அவ்வியாகிருத ஆத்மபூத நாமரூபங்களை வெளிப்படுத்தி, பிரஹ்மாதிஸ்தம்பபரியந்தமாய தேகங்களில் ஈண்டுக் கருமபல ஆசிரயங்களாய்ப் பசிதாகமுடைய அவற்றிற்புகுந்ததாம். அற்றேல், சுருதிகளானும்; பிரதிபிம்பப் பிரவேசம் போலும் எனின், வேறுபொருளோடும் விலகியிருத்தல் கூடாமை யின்; பொருளின் மாட்டுப் பண்பு புகுதலே போலும் எனின்? பொருந்தாதாம், பற்றியிருத்தல் படராமையின்; நித்திய பரதந்திரமேயாய் ஆசிரிதமாய குணத்திற்குத் திரவியத்திற் பிரவேச முபசரிக்கப்பெறும், பிரஹ்மத்திற்குச் சுதந்திரமாயிருத்தல் சிரவணிக்க வருதலின் அவ்வாறு பிரவேசம் அமையாமையின் கனியில் விரைகடுப்பவெனின்? சாவயவத்வ விருத்திக்ஷய உத்பத்தி விநாசாதி தர்மவத்து வவழக்காதலின். இவ்வாருய தருமமுடைமை பிரஹ்மத்திற்கிலதேயாம்; அஜன் அஜரன் என்பதாதி சுருதிநியாய விரோதத்தான். ஜன்மாதி தருமங்கட்குத் தருமியினும் பின்னத்வ அபின்னத்வ அசம்பவாதி நியாயம், பீஜ பலங்கட்கு அவயவ அவ்யவித்வம் பாஷாண சர்ப்பங்கட்கு ஆதார ஆதேயத் தன்மையெனக் கூறியது கூறலில்லையாம். அயலேயாய பரிச்சின்ன சம்சாரி ஈண்டு புகுந்தனன்

என்னின்? ஆகாதாம், அவ்வித் தேவதை நோக்கிற்றெனத். தொடங்கி நாமரூபங்களை வியாகரணிப்பேன் என்பதாக வதற்கே பிரவேச வியாகரண கருத்துருத்துவ சுருதியிருத் தலின்; அவ்வாறே அது சிருஷ்டித்து அதுவே புகுந்தது, அது இதே யெல்லையைப் பிளந்துகொண்டு இத்துவாரத் தால் அடைவுற்றது; எல்லா ரூபங்களையுமே தீரன் இயை த்து நாமங்களையுமே யியற்றி, நல்லாவுரைத்து நனியிருப் பானே "நீ குமாரன் அலது நீ குமாரி நீ ஜீரணன் வஞ்சிப் பை தண்டத்தால், "புரமியற்றியது துவிபதம், ரூபம் ரூபம்" எனவும் மந்திர வருணத்தான். பரத்தினும் அய லானதற்குப் பிரவேசம் கூடாதாம். ஜகத்திற்கோ பரனே சிருட்டா என்பது வேதாந்த மரியாதையாம், சிருஷ்டாவே தான் பிரவிஷ்டா, 'பிரவேசித்து வியாகரிப்பேன் என்று பிரவேச வியாகரணங்கட்கு ஏக கருத்துருத்துவ சுருதி யுண்மையின், ஆகையால் பரத்தினும் அயலாயதற்குப் பிர வேசம் யுக்தியுடையதாக வாகாதாம் என்பது கருத்து. புகுந்தவைகட்கு இதரேதரபேத முண்மையின் பர அநே கப் பான்மையாம் எனின்? ஆகாதாம், ஒரு தேவன் வெகு வகையாகப் புகுந்தனன், ஒருவனுகியே வெகுவாக விவ கரித் தலைவன், பலவற்றிற் புகுந்தவன் நீ யொருவனுவாய், சர்வபூதங்களிற்கூடனு மேகதேவன், சர்வவியாபி சர்வ பூதாந்தராத்மா, என்பதாதி சுருதிகளானே என்று புகு தல் பொருந்துமோ பொருந்தாதோ என்பது நிற்க, முத லிற் புகுந்தவைகட்குச் சம்சாரித் தன்மையுண்மையின், அதன் அனன்னியத் தன்மையுண்மையினுனே பரனுக்குச் சம்சாரித் தன்மையாம், எனின், ஆகாதாம், புசிபானுதி விழைவுகடந்த சுருதியுண்மையின். சுகித்வதுக்கித்வாதி

தரிசனத்தானே கூடாதாமெனிற் கூட்டாதாம், பாகியன் பற்றுமுன் லோகதுக்கத்தால் என மறையறைதலின்; காக்ஷியாதி முரணுற் பொருத்தமுருதாம் எனின், பொருந்தா தாம், உபாதி யாசிரய ஜனித விசேட விடயத் தன்மையுண் மையின் காக்ஷியாதிகட்கு, உபாதி=அந்தக்கரணம், அதனுசிரயத் தன்மையானே ஜனித்தவிசேடம் சிதாயாசன், அவன் பாலுற்ற துக்காதி விடயத்தன்மையாற் பிரத்தியக்ஷாதிகட்கு ஆபாசத் தன்மையான், அதனுல் ஆன்மாவின்கண் ணசம்சாரித்தன்மை யாகமத்திற்கு விரோதமில்லையாம் என்பது கருத்து. திருஷ்டிக்குத் திருஷ்டாவைக் காணுய், அறிபவன்றன்னை யரேயெதனுற்முன் அறிதலாம், என்பதாதி சுருதிகளானே, ஆன்மவிடயம் விஞ்ஞானம் ஆகாதாம், ஆயின் என், புத்தியாதி யுபாதி ஆத்மப்பிரதிச்சாயை விடயமே, சுகிதனியான் துக்கிதனியான் என்பது போன்றதாதி பிரத்தியக்ஷ விஞ்ஞானம்; இது யான் என்னும் விடயத்தோடு விடயிக்குச் சாமானுதிகரண்ய உபசாரத்தானே, அதனினும் அயலாய்க் காண்போனில்லை என்றன்னியாத்மப் பிரதிஷேதத்தானேயும், தேகாவயவ விசேஷயத்தன்மையானும், சுகதுக்கங்களின் விடய தர்மத்வமாம். ஆன்மாவினுடைய காமப்பொருட்டே, யென்னும் ஆன்மார்த்தத்வ சுருதியின் அயுக்தமாமெனின், ஆகாதாம், யாண்டுதான் அன்னியம் போலாமோவென அவித்யா விடய ஆன்மார்த்தத்வ அங்கீகாரத்தான், ஆண்டெதனுனே யெதனைக் காண்பன், ஈண்டஃப்பமும் நானுவில்லையாம், ஆண்டென்மோகம் சோகாந்தரனென், ஈண்டேகத்வமினிது காண்பவற்கே, என்பதாதியானே வித்யா விடயத்தில் அதன் பிரதிஷேகத்தானும், ஆன்மதன்மைத் தன்மையாகா-

தாம், தார்க்கிக சமய விரோதத்தானே பொருத்தமின்று. மெனிற் பொருத்தமின்றும், ஊகத்தானும் ஆன்மாவிற்குத் துக்கித் தன்மை பொருந்தாமையின், துக்கமாகிய பிரத்தி யக்ஷவிடயத்தானே ஆன்மாவிற்கு விசேடியத் தன்மை யாகாதாம், பிரத்யக்ஷ அவிடயத் தன்மையான்; ஆகாசத் திற்குச் சத்தகுண முடைமைபோலவே ஆன்மாவிற்குத் துக்கித்தன்மையாம் எனின், ஆகாதாம், ஏகவுணர்வின் விடயத்தன்மைகூடாமையின். சுகக்கிரா ககப்பிரத்தியக்ஷ விடயப் பிரத்தியயத்தானே நித்திய அநுமேய (ஜரந்நையா யிகமதம் பற்றி) மாய ஆன்மாவிற்கு விடயீகரணம் பொருந் துறு தாம். அதற்கும் விடயீகரணமேல் ஆன்மாவிற்கு ஏகத் தன்மையுண்மையின் விடயி அபாவ வழக்கமாம்; சுகாதி போலும் ஆன்மாவிற்கும் காக்ஷியானே விடயீகரணமாவ துடன் ஒருடம்பில் அதனைக்கிய சம்மதியாயின், வேறான் மாவிற் காண்டுப் பொருத்தமின்மையின், ஓரிடத்தில் இர ண்டு போக்தாக்கள் இட்டமுறுமையின் புருடாந்தரனுக் கும் அன்னியன்பொருட்டு அப்பிரத்தியக்ஷத் தன்மையுண் மையின், காண்போன் இன்மையின் ஆன்மதிருசியத்வ அசித்தியென்பதாம். ஒன்றினுக்கே விஷய விஷயித்தன் மையாம் தீபம்போலு மெனின்? ஆவிதாம், ஒரேபோத சம்பவத்தான், ஆன்மாவின்கண்ணே அம்சம் பொருந்தா மையினுனும் என்றுணர்க. இதனுனே விஞ்ஞானத்திற் குக் கிராகியகி ராககத்தன்மை மறுக்கப்பட்டதாம். பிரத் தியக்ஷ அனுமான விடயங்களேயாய துக்க ஆன்மாக்கட் குக் குணகுணித் தன்மையில் அநுமானமிலதாம், துக்கத் திற்கு நித்தியமுமே பிரத்தியக்ஷ விஷயத்தன்மையான் ருபாதி சாமானுதிகரண்யத்தானும் என்க. துக்கத்திற்கு

ஆன்மாவின்கண்ணே மனச் சையோகஜத்வ மங்கீகரிக்கப் பெறினும், ஆன்மாவிற்குச் சாவ யவத்தன்மை விக்கிரியை யுடைமை அநித்தியத்தன்மை வழக்காதலின்; விகாரப் படுத்தாமற் சையோகியாதலிலதாம், எக் குணமேனும், திரவியத்தை விகாரப்படுத்தாமல் ஆதலேனும் போதலே னும் எங்கேனும் கண்ட தூண்டுகோல் இலையாம். யாண் டும் நிரவயவம் விக்கிரியமாணமெனக் கண்டதிலேயயாம். அநித்திய குணுசிரயந்தானுதல் நித்தியம் பார்த்திலேம்; ஆன்மா பரிணுமியலல. நிரவயவத் தன்மையின், நபம் போலும் என்றும், ஆன்மாகுணியல்ல, நித்தியத் தன்மை யான், சாமானியம்போலும் என்றும் தெரிந்துகொள்க. ஆகமவாதியர்களானே ஆகாசம் நித்தியமதாக அறியப் பெறுவதாகாதாம், அன்னிய திருஷ்டாந்தமோ அமைவது மாகாதாம், மும்மை யணுக்கள் ஒழிந்து அணுக்கள் இல வாம், திக்குக் ககனத்தடக்கம், காலத்திற் குற்பத்தி சுருதி யுளதாம், உற்பன்ன மாயமனமோ அன்னமயமாம். விக் கிரியமானமாயினும் அவ்வுணர்வகலாமையின் நித்தியமே யாம் எனின்? ஆகாதாம், திரவியத்திற்கு அவயவ அயலா ஞுதல் இல்லாமல் விக்கிரியை கூடாமையின், சாவயவத் தன்மையிலிருப்பினும் நித்தியத் தன்மையாம் எனின்? ஆகாதாம், சாவயவத்திற்கு அவயவ சையோக பூர்வகத்வ முளதாகவே விபாகங் கூடலின்; ஆடையாதிபோலும் அழியுமென்றறிக. வஜ்ஜிராதிகளிற் காணுமையின் கூடாதா மெனிற் கூடாதாம், சம்யோக பூர்வத் தன்மைக் கனுமே பத் தன்மை யுண்மையின்:—விமதம், அவயவ சம்யோக பூர்வகம், சாவயவத்தன்மையான், ஆடைபோலும் என்ப தாம். ஆகலின் ஆன்மாவிற்குத் துக்காதி யநித்தியகுண

ஆசிரயத் தன்மைப் பொருத்தம் இலதாம். பரத்திற்குத் துக்கித் தன்மையிலதாயின் அன்னிய துக்கிக்கும் அபாவமாகிய வழி துக்க உபசாந்தியின் பொருட்டுச் சாஸ்திராரம்பம் பயனற்று வாளா போமெனின்? போகாதாம், அவித்யாத்தியாரோபித துக்கித்வப் பிரமத்தை யகற்றும் பயனுதலுண்மையின்; தன்னிடத்திற் பரகிருத சங்கியா பூரண்மாயுலகற்றலே போலும், கற்பித துக்கியாத்மா அங்கீகரத்தானும், ஜலசூர்யாதி பிரதிபிம்பம்போலும் ஆன்மப் பிரவேசமுமாம், பிரதிபிம்பம்போலும் வியாகிருதஞ் செய்யப்பெற்ற காரியத்தில் புலப்படுதலாதலும் பொருந்தும்; உற்பத்திக்கு முன்பு புலப்படாத ஆன்மா பின்பு காரியஞ் சிருஷ்டியாகவே வியாகிருதமாய புத்தியினுள்ளே புலப்படுவதாய், ஜலாதியிற் சூரியாதிப் பிரதிபிம்பம் போலும், காரியஞ் சிருட்டித்துப் புகுந்ததேபோலும் குறிக்கப் பெறுவதா யுணர்த்தப்பெறும்;—அவ்விது ஈண்டுப் புகுந்தது, அது சிருஷ்டித்து அதுவே புகுந்தது, என்பதாதி முன்புரைத்த சுருதிகளானே. சர்வகதமாய் நிரவயவமானதற்குத் திசையினின்றும் தேசத்தினின்றும் காலத்தினின்றும் கடந்து, திகந்தரத்தில் தேசாந்தரத்தில் காலாந்தரத்தில் அடைவு வடிவப் பிரவேசம் ஒருகாலத்தினுமே பொருந்துறுதாம். பரமான்மாவினும் அன்னியங் காண்பானில்லை. இதனினுமயலாய்க் காண்பானில்லை இதனினும் அயலாய்க் கேட்பானில்லை என்பதாதி மறைகளான் எனக் கூறினேம்; உபலப்தியர்த்தத் தன்மையானும் சிருஷ்டி பிரவேச ஸ்திதி அப்யய வாக்கியங்கட்கு, உபலப்திக்குப் புருடார்த்தத் தன்மைச் சிரவணத்தான், தன்னையே யுணர்ந்தது, ஆகலின் அது, யாவுமாயது, பிரஹ்மமே முணர்ந்

தோன் பெரும் பரம்பெறுவன், யாவனப் பரம்பொருள் அறிந்தவனுவனே, ஆவவன் பிரஹ்மமே யடைந்து வாழ்ந் திடுவன், குருவுறு புருடனே குறைவிலாதறிவன், அவனுக் கத் துணையே ஆந்தாமதமே, என்பதாதி சுருதிகளான்; அதன்பின் னெனயறிந்து தத்துவமாய், அதன்பின் புகு வன் ஆநந்தமுதலே ; அதுவே மேன்மைமெலா வித்தை கட்கும், அதனுலமிருமடையவே பெறுமால் ; என்பதாதி ஸ்மிருதிகளானும் ; பேததரிசன அபவாதத்தானும் ஒிருஷ் டியாதி வாக்கியங்கட்கு ஆன்மை கத்வ தரிசனுர்த்த பரத் வங் கூடுதலாம். ஆகலின், காரியத்திலிருப்பதற்கு உபலப் யத் தன்மையே பிரவேசமாமென உபசரிக்கப்பெறும். "நகாக்கிரம் வரை ஆன்மாவிற்குச் சைதன்யம் புலப்படா நிற்கும்" எனத் தொடங்கிக் கூறப்பெற்றதுஃ—பிராண னக்கிரியையையே செய்து பிராணப் பெயரைப் பெறும், வசனக் கிரியையை இயற்றி வாக்கெனப் பெறும், காண்ப தாற் கண்ணும், கேட்பதாற் செவியாம், மனனித்தலான் மனமாம், அவ்விப் பிராணுதிகள் இவ்வான்மாவிற்குக் கரும ஜன்னிய நாமங்களாம், கரும நாமங்களேயலது வஸ்து மாத்திர விடயங்கள் அலவாம், ஆகலின் விழுப் பொருளாம் ஆன்ம வஸ்துவை விளக்குபவை யாகாவாம். அவ்வாறே:—தானே ஜோதியாய ஆன்மாவாம் புருடன், ஒப்பானவனுய் இரண்டு லோகங்களையுந் தொடர்ந்து சஞ் சரிக்கின்றுன், தீசாதிருசியமே யுபயலோக சஞ்சரண ஹேது, தானுயிலதாம். தியாயதீவ=தியான வியாபாரம் செய்வதேபோலும், சிந்தனை செய்வதேபோலும், தியான வியாபாரவதியாய புத்தியை அவன் அதன் கண்ணிருக்கும் சிற்சுபாவ ஜோதிரூபத்தானே யிலக்கிக்கொண்டு அதனுக்

கொப்பூரணவனுகித் தியாயதீவ ஆலோகம்போலும். ஆகலின் உலகுக்குச் சிந்திக்கின்றனன் என்னும் பிராந்தியுண்டாகின்றது, உண்மையாகவே சிந்திப்பதில்லையாம். அவ்வாறே லேலாயதீவ—மிகச் சலிப்பதேபோலும், கரணங்களாகிய மதியாதிகளும் வாயுக்களும் சலனமுறவே, அவற்றை யிலக்கலின் அத்தகையதுபோலுமவன் என அமையும், உண்மையாக அவ்வான்மச் சோதியானது சலன தருமமுடைய தாகாதாம். யாங்ஙனந்தானி துணரப் பெறும் தற்சமானத் தன்மைப் பிராந்தியே உபய லோக சஞ்சரணுதி ஹேதுவாம் சுயமாகவோ இலையாம் என்பது, இப்பொருளைக் காட்டற்பொருட்டு ஹேது உபதேசிக்கப் பெறுகின்றது:— அவ்வான்மா எதனுற் சொப்பனமடைந்து—அது, எம்மதியோடு சமானமாமோ அம்மதி எது எது ஆமோ அது அது இதுவும் ஆவதுபோன்ம், அதனுல் எப்போது இது சொப்பணமாமோ சுவய விருத்தியை யடையா நிற்குமோதீ, அப்போது அதுவும் சொப்பன விருத்தியை யடையாநிற்கும், எஞ்ஞான்று தீநனுவுற வாஞ்சிக்கின்றதோ அஞ்ஞான் றிதுவுமாகலின் உரைப்பதாம்:—சொப்பனமுற்று—சொப்பனவிருத்தியை யிலக்கிக் கொண்டு, மதியினுடைய சுவய விருத்தியாகாரமாகி, இவ்வுலகத்தை—ஜாகரித விவகார வடிவ காரியகரண சங்காதான்மக, லௌகிக சாஸ்திரீய விவகாராஸ்பதத்தை, கடந்து சென்றிலங்கும், தனித்த தனது ஆன்மச் சோதியினலே சொப்பன வடிவமாய தீவிருத்தியை யிலக்கிக் கொண்டு இனி திருக்கும்; எதனுல்தனுல், சுயஞ்சோதி சுபாவமேயாய இது விசுத்தமாம், கர்த்ரு கிரியாகர்ர கபலசூனியமாய்து, உண்மையாக, தீசாதிருசியமே உபயலோக

சஞ்சாராதி சம்வியவகாரப் பிராந்தி ஹேது ;
ரூபங்கள்=மிருத்தியு கரும அவித்யாதி, அ...
ரூபம் சுயமாக இலதாம். காரிய கரணங்க...
ரூபங்களாம். ஆகலின் கிரியா பல ஆசிரயங்...
மிருத்தியு ரூபங்களைக் கடந்திலங்கும் ; 'பிரு...
அவ்வாறே சுருதி யந்தரத்தில்:—ஜரையாதியே...
குரோதாதி பரிச்சின்னத் தன்மைகளோடும் ...
தோடுங் கூடி விவகரிப்பதாய், இருப்பூசியின் ...
அதி சூக்குமமாய், அவரமாயும் காணப்பெ...
குஷ்ட மாத்திரம் ரவதுல்யரூபம் சங்கற்ப அ...
விதமாயது ஆத்மாவென முற்பாதியிற் கூறிய
மாத்திரத் தன்மை சூக்குமசரீர உபாதி த...
யாம், பிற்பாதியிலுரைத்த ஆராக்கிரமாத்திரத்...
புத்தியு பாதித் தன்மையானேயாம் என்று உபி...
யானே யங்கீகரிக்கத் தக்கதாம், ஆராக்...
தன்மையும் அதி சூக்குமத் தன்மையானேயாம்...
யாக வதன் பரிமாணத்தானேயல்லவாம், என...
குக் கூறப்பெறுகின்றது:— கேசத்தினுடை...
தேசத்தினுடைய நூறு கூறினதூஉம் நூறுக...
னது பாகம் ஜீவனும், கேசசதாம்சசதாம்சம்
முடியாதாம், எனினும் அதனை மனத்தானே
பித்து அப்பரிமாணன் ஜீவன் என உணரத்தக்...
சூக்குமம் என்பது பொருள். பாகம்=அம்சம்
பிராணதாரணை செய்பவன், அவன் கேசசதா...
கற்பித பாகசமன் என விசேடமாயறிக. அற்...
பொருட்டிவன் அதிசூக்குமமேயாதல், அதி...
பிருந்தபோதினும், பரமான்மாவினும் பின்ன...

ஆகாயத்தினின்றுந் திரிசரேணுவேபோலும் என ஆசுங்கித்துரைத்தல்:—அவன் அதி சூக்குமனேயாவன், காரிய சகித அவித்தையானது அகன்றவழி யுபாதியின்மையின் அநந்தத் தன்மையின்பொருட்டு=தற்பதார்த்த தாதாத்மியப்பொருட்டு, சமர்த்தனவன். ஆராவென்பது அயமுண்முனைக்கோல் சுவேத சுவதரம், அது சிருட்டித்து அதுவே புகுந்தது, அது புகுந்து மூர்த்தமும், அமூர்த்தமும் ஆபது, தைத்திரீயம். அச்சிருஷ்டாவாய பரம ஈசுரன், மூர்த்த சீமானமாய கேசவிபாக அவசானமாம். இதனையே=மூர்த்தமத்திய பாகமாய்க் கபாலசந்தி ரூப ஸ்தான விசேடமாம். இதனையே, சித்திரஞ் செய்து அச்சித்திர ரூபவாயிலாய், ஞானசக்தி சகிதனாய், காரியகாரண சங்காதத்தில் தேகமத்தியிற் புகுந்தனன். ஞானோபாதிகனுக்கு மூர்த்தமத்தியில் பிரவேசமாதலினானே, மூர்த்தனத்தில் ஞானேந்திரிய பாகுல்யம் புலப்படுகின்றது. கிரியாசக்தி யுபாதிகனுக்குப் பாதாக்கிரப் பிரவேசத்தால் கண்டத்தினின்றுங் கீழ் பாகத்தில் கருமேந்திரிய பாகுல்யம் புலப்படுகின்றது. பாகுல்யம்=மிகுதிப்பாடு, ஹிருதயம்=புத்தி, அதுவும் ஆன்மாவின் மாட்டுக்கர்த்துருத்துவாதி தர்மாரோப சாதனத் தன்மையான் அந்தக்கரணமென வறையப்பெறும்; அந்தப் புத்தி விசிஷ்டமாய்க் கர்த்தாவாய ஆன்மாவின், ரூபாதி விடய சங்கற்ப விகற்பாதி சாதனம் மனமெனப்பெறும்; அந்தக்கரண விசேடங்களாய புத்தி மனங்கள் இரண்டிற்கும் சமுச்சயப் பொருட்டாம் உம்மை. இதே யந்தக்கரண இருவகையைக் கருதியே தைத்திரீயகத்தில்:—“அவ்விம்மனோமயனினின்றும் அன்னிய அந்தராத்மா விஞ்ஞானமயமாம்” எனக் கோசமிரண்டாக

உபந்யசிக்கப்பெற்றது. அம்மனத்தின் விருத்தி விசேடமே இச்சம்ஞானம் என்பதாதியானே விரிக்கப்பெறுகின்றது. சம்யக்=நல்லது, இவ்வஸ்து என்னும் உணர்வு சம்ஞானமாம், ஆஞ்ஞானம் ஆஞ்ஞப்தி ஈசுவரபாவமாம், விஞ்ஞானம், இது இதனினும் விசிஷ்டம் என்பதாதி விவேகமாம், கிரந்த அர்த்தாதியில் விழிப்பாதல் பிரஞ்ஞானமாம். எதனால் இது இத்தகையது எது சாக்ஷாத் அபரோக்ஷப் பிரஹ்மமாமோ, சர்வாந்தரமாமோ எது தனது வடிவமாக அபரோக்ஷமாய்க் கண்டதாமோ அதனால், இதனைப் பார்க்கின்றதென இதந்திரோ நாம பரமாத்மாவாம்; ஐதரேயாம். நீ யொருவனேயாதி வெகுவிற் புகுந்தனை, ஒரே தேவன் வெகுவகை விரிந்தனன், ஒன்றாயிருந்தே பலவகை பகுத்து நன்றாயாடி நலம்பெறவமரும்; என்பதாதி சுருதி சதங்கள் உள்ளனவாம். இவ்வண்ணம் ஹே அனகனே! ஜீவனுடைய சொரூபம் பிருகதாரண்யகாதி வெகு வேதாந்தங்களில் வெகு வகையாக வெளியாய், விளம்பப்பெற்றுளதாம். இதனானே அவைதிக குதார்க்கிகர்களின் அயல் வகை அயல் வகையாய ஜீவ சொரூப கற்பனை யாதரிக்கத் தக்கதன்றாம்.

(அ - கை) இந்தச் சிதேக ரசத்தின் புத்தியில் அதிகத் துர்லபத் தன்மையை யருளல்.

ஸு. [illegible]
[illegible]
[illegible] ॥

க. பிறந்த மனுடர் தமக்குள்ளும் பிரிய வருணவாசிரம, முறைந்த தருமம் புரிவார்களுடு முனஞ்செய்வினை

யதனாற், சிறந்தவொருவன்றனே யென் சித்தின் வடிவைச் சிவசுகத்தை, யறிந்து வாழவிரும்பிடுவனரியமுயல்வும் புரிந்திடுவன்.

வி. பும்ஸாம்—புருடர்களுடைய மத்தியில், வர்ணாசிரமவதாம் — எவர்கள் வர்ணாசிரம தர்மவான்களோ அவர்களுடைய மத்தியிலும், அத்ர—இந்த வுலகத்தில், மே—பரப்பிரஹ்மமாகிய என்னுடைய, தத்வம்—அநாரோபிதரூப ஆநந்த ஏகரசத்தை, ஸிபோத்தும்—நன்கு காட்சிப்படுத்தும்பொருட்டு, ஹி—பிரசித்தம், கச்சிதேவ— எவனோ ஒருவனே, யததே—முயல்கின்றான், இதன் கண்ணேது, புராசீர்ணேனகர்மணா—ஜன்மஜன்மாந்தரங்களிற் செய்த புண்ணிய கருமத்தால், அவ்வாறே அநேக ஜன்ம சம்சித்தன் அதன் பின்னடைவன் பரகதியை யென்னும் ஸ்மிருதி யிருத்தலின், ஆத்மதரிசனத்திற் பிரவிருத்தி அத்தியந்தந் துர்லபமென் றருளப்பெற்றதாம் அவ்வாறே சுருதியுமுளது:—யாவன்றான் அநேக ஜன்மங்களில் சம்பாதித்த புண்ணிய பிரசாதத்தால் அடைந்த சுத்திபுத்தியையுடையவனாய் காமாதி விமுகனாய் நிரதிசய புருஷார்த்தப் பிரஹ்மத்தைப் பிரத்தியக்குத் தன்மையானே யுணர்வனோ அவன் ஆயிரக் கணக்கான பெயர்களுக்குள் நசிகேதனைப் போல எவனோ வொருவனே ஆவன், யாவன்றான் மேன்மையை விரும்புவானோ அவன் ஆயிரம்பேர்களுக்குள் ஒருவனேயாகி முன்போல ஆத்மவித்தாவனென்பதாம், அதன்கண் ஏது பரமாய உத்தரமிதுவாம் எக்காரணத்தால் செவிகொளக் கேட்பதற்கும் அநேகர்களால் எந்த ஆத்மா கிடைக்கப்பெறுததாமோ சிரவணத்திற்குக் கண்கண்ட பலத்தன்மை யுண்மையின் நிர்விஷயத்திற்கும்

சாக்ஷாத்கார அஜனகத்தன்மை யுண்மையின் ஜனிதத்திற்கும் பிரதிபைப் பிரத்தியயம்போலப் பிராந்தித் தன்மையால் ஆத்மா அவிஷயமென்றே யங்கீகரிக்கத்தக்கதாம், கேட்பவர்களுக்குள்ளும் முன் மொழிந்த அதிகாரிகளிலும் வேறாய அநேகர்கள் எந்த ஆன்மாவை யறியமாட்டார்களோ அபாக்கியவான்களாய் நித்திய நைமித்திகங்களினாலே சமஸ்கரிக்கப்பெறாத அந்தக்கரணத்தை யுடையவர்களாய் அறியமாட்டார்களோ அதாவது சிலபேருக்கு ஆன்மா கேட்பதற்குந் துர்லபமாம், மற்றுஞ் சிலபேருக்கு அறிவது துர்லபமாமென்றுணர்க, எனவே கேட்பவர்களும் உணர்பவர்களும் துர்லபர்களாக எவனேவொருவனே அதிகாரி ஆவன், அன்றியும் இதனது வக்தாவும் அற்புதவானாகவே அநேகர்களுக்குள் ஒருவனேயாவன், கேவலம் சுரோதாவே துர்லபனென்பதாகவில்லை. வக்தாவும் துர்லபனேயாவன், அநேக பதார்த்தங்களுக்குள் யாதோ ஒரு பதார்த்தமே ஆச்சரியப்படுத்துவதேபோல வக்தாவும் ஒருவனேயாவனென்பதாம், அவ்வாறே—வக்தா துர்லபனுமாறே, கேட்கும் இந்த வாத்மாவில் நிபுணனே யுக்தி யநுபவ சமர்த்தனே அநேகர்களுக்குள் அடைவுற்றவனாய் எவனோ ஒருவன் ஆவன், அதன்கண்ணேதுவென்னின் பிரஹ்ம தத்துவத்தைச் சாக்ஷாத்கரித்த நிபுணனாகிய ஆசாரியனால் வேதாந்தங்களினால் சிக்ஷிகப்பெற்றவனாய்ச் சாக்ஷாத்காரவான் எவனோ ஒருவனே யாவனாதலின் எவனோவொருவனே ஆத்மாவின் அடைவினை யுறுவானென்பதாம், எனவே ஆச்சரியமென்பது திண்ணம். இதனை ஸ்ரீ பார்த்தசாரதி திருவாய்மலர்ந்தருளிய ஸ்மிருதியின் கண்ணும் காணலாம்.

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵
𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾
𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥

இந்த ஸ்மிருதிக்கு ஸ்ரீ கூடார்த்த தீபிகையின்கண் விரித்துப் பொருளமைத்திருந்தபோதினும் ஈண்டுச் சிறிது புகல்வாம். பிறப்பதுமில்லை யிறப்பதுமில்லை என்பதாதியானே நிர்விகார ஆத்ம தத்துவத்தைக் கூறியருளியும் இனியிதனை நித்திய ஜாதமாகவெனை ஆன்மாவிற்கு ஜன்மநாசங்களை யங்கீகரித்தருளி எவ்வசோச்சியத்தன்மை வருணித் தருளப்பெற்றதோ அது சோக நிவர்த்தகத் தன்மையானே கூறியருளிய நிர்விகார ஆத்ம தத்துவ ஞானத்தின் துர்லபத்தன்மையானே லோக திருஷ்டியால் ஆன்மாவின்கண் ஜன்மநாச அங்கீகாரமாயினும் சோகவடைவு இலதாம் என்னுமிந்தத் திருக்கருத்தாலேயாம், ஆன்மாவிற்குச் சவிகாரத் தன்மையுளதாமென்னுந் திருக்கருத்தாலோ அன்றாம் என்று காட்டி யருளும்பொருட்டு நிர்விகார ஆத்ம தத்துவஞானத்தின் துர்லபத் தன்மையை யிதன்கண்ணருளுகின்றார், எவனோ ஒருவன் இதனைக் காண்பன் என்பது முதலில் அன்வயம், இதனையென்பது நிர்விகார ஆன்மபராமரிசமாம், எவனோ ஒருவன் என்பதனானேயோ ஒருவன் என்னை உணர்வன் உண்மையாய், அம்மகாத்மா அதிதுர்லபன், என்பதாதியாக இனிக் கூறியருளும் முறையானே அனேகாயிரம் பேர்களுக்குள் ஒருவனே ஆன்மதரிசியாவன் யாவருமாகார்;

பரம்பினுனிந்தியங்களைப் பராக்குறப் பரம்பரனுள்ளார்கி, யிருத்தலா லறிவொண்கி லன்புறம்புள விதரமே

காண்கின்றான், திருப்பி ஞான நாட்டத்தினை லப்பொரு டெரியவே பெறுந்தீர, னெருத்தனே யவிநாசியாம் பர வொளியாயவனெளிர்கின்றான்.

ஆன்மாவை யுணர்வனேல் என்பதாதி சுருதியால் வெளித்தற்பரமாகவே பிரமனால் உலக சிருஷ்டியினதூஉம் ஆத்மதரிசன தௌர்லப்யத்தினதூஉம் உணர்வாதலின் என்னுமிப்பொருள் குறிப்பிக்கப்பெற்றதாம், அற்றேல் யாவரும் அகமென ஆன்மாவைக் காண்டலின் எங்ஙனம் ஆத்மவித்து துர்லபனாதல் கூடுமெனின் உத்தரமருளல்:—ஆச்சர்யவத்தென்பது, ஐந்திர ஜாலிக முடியாத ஆச்சரியம்போல விராகின்ற இதனைக் காண்பனெனக் கூட்டுக, சத்தியம் அகிலமும் யானென்று ஆன்மாவைக் காண்பன் அதுவோ ஆத்மதத்துவ தரிசனமன்றும் ஆத்மதத்துவமோ பரம ஆச்சரிய ரூபமாம், கர்த்தா போக்தாதி ரூபமாக அகம்பிரத்யயத்தால் உணரப்பெறுவதாயினும் வாஸ்தவமாக நித்தியசுத்த புத்த முக்த சுபாவரூப பரமானந்த பரட்பிரஹ்ம ரூபமாதலின், இவ்வாறாய ஆன்மதத்துவமும் சுருதியாசாரிய உபதேசமொன்னே யினிதுணரத்தக்கதாம், அகம்பிரயயத்தால் உலகர் அறிந்துகொள்ளத் தக்கதன்றும் மற்றோ அநேகஜன்ம சம்சித்த சரமசரீரி யெவனோ வொருவன் உணர்வனென அத்தரிசனம் துர்லபமாம், கேவலம் அறிவோனகப்படாமை விடயம் உணரப் பெறுமைகளான்மாத்திரமே ஆத்மதரிசனம் துர்லபமன்றும், மற்றோ உபதேசிக்கும் ஞானசாரியனது துர்லபத் தன்மையானும் என்றருளல்:—ஆச்சர்யவத்வததி ததைவசான்யஃ, பஸ்யதி யென்பதோடு வததியென்பதற்குச் சமுச்சயார்த்தம்சகாரமாம், ததாசப்தமோ பிரதம்பாதத்தினின்றும்

கச்சிதேன மென்பதன் அதிதேசப் பொருட்டாம், இவ்வா ருகவே ஒருவனே இதனைக் கூறுவனென முதலிற் சம்பந்த மாம், ஒருவனே யென்னுந் தேற்றத்தால் அநேகர்களுக் குள் ஒருவன் அறிந்தவனுவன் அவர் தம்முள்ளும் ஒரு வனே உபதேசிப்பவனுவன் ஆகவே அறிந்தவனைக் குறி த்து உபதேசிப்பவன் துர்லபனென அருளப்பெற்றதாம், யாவர் ஆன்மாவை நன்ருக உணர்வரோ அவர் யாவருமே உபதேசிப்பவரல்லர், சமாதி நிஷ்டனுக்கு அது கூடாமை யின் கிளம்பியவனுக்கும் கியாதிலாபம் பூஜை முதலியவற் றின் அபேக்ஷையின்மையானே சுயமாக அந்தப் பிரவிருத் திகூடாமையின், ஒருவாறு கிருபாமாத்திரத்தால் உபதே சிப்பான் முயன்றவனே பரமேசுவரன்போல அதிதுர்ல பனே யாவன் என்பது திருக்கருத்தாம், ஒருவாறு உபதே சிப்பவன் கிடைத்தபோதினும் முன்மொழிந்த சுருதிப்பிர காரம் கிஷ்யசமாதான குசலனுயவக்தாவும் அத்தியந்தம் துர்லபனேயாவன், பகவான் வாதராயணரிடத்தினின்றும் சமாதானம் பெருத சுகமுனிவன் ஜனகராஜாவை யடைந்து விசிராந்த சித்தனுனென்று ஸ்ரீ ஞானவாசிட்டத்தில் கதைக்கேட்கவும் பெறுகின்றது என்னுந் திருக்கருத்தால் உரைத்தல், அன்னியனென்பது, விலக்ஷண னென்பது பொருள் உபதேச சொரூப பரியாலோசனையினுலும் உப தேசிப்பவன் துர்லபவன் என்றுணர்க, ஈண்டு வததிக்கு விசேஷணம் ஆச்சரியவத்பதமாம், ஆச்சரிய மெவ்வாறு மோ அவ்வாறு கூறுவனென்பதாம், சப்தவிஷயத்தி லேயே வஸ்துவி னுபதேசம் வியங்காநிற்கும், ஆத்துமதத் துவமோ எச்சப்தத்துக்கும் விஷயமாகாதாம்,

வாக்குமனமுங் கண்ணுமற்றுள விந்தியங்களுமே,

நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா, தாக்கில்பரம்பர னறியிற்ருன் வேருமறியாதே, போக்குபொழுதினும்வேரும் பரனரிய பொருளன்ரே.'

வாக்குமனங் கண்செவியான் மன்னிநின்ற பிராணனின், னீக்கியுளகரணத்தா னின்மலன் கோசரிக்கவுருன், பாற்கரனுக் குருவம்போற் பகர்பொருளௌலாந்திகழ்வ, தாக்கதனைச் சனதனமாம் பரம்பிரமமென வறிமின்.

என்பதாதியாகச் சுருதியிருத்தலின் ஆதலால் எங்ஙனம் அது உபதேசிக்கத்தக்கதாகும், இதனுனே யன்ரே மௌனமாய் மொழியும் வேதம், என்றதுமமையும், ஆதலின் பொருந்தாமையானே ஆச்சரியவொப்புமையால் ஆத்மோபதேசம் ஆச்சரி முடையதேயாம், இங்ஙனமேனும் அபிதையினல் ஆன்மாவின்கண் சப்தத்திற்கு பிரவிருத்தியின்ருயினும் இலக்ஷணையினல் வேதாந்தரூபசப்தம் ஆண்டு பிரவிருத்திக்கும், உபநிடதப் பிரதிபாத்திய வதனையேயென்னுஞ் சுருதியிருத்தலின், வாக்கு என்பதாதியோ அபிதாவிருத்தியால் ஆத்மாவிற் சப்த நிஷேத பரம் என்பது சித்தாந்தம், அங்ஙனமாயினும் இலக்ஷணையினுலும் ஆத்மோபதேசம் அத்தியந்தம ஆச்சரியரூபமாம், சக்கிய சம்பந்தமின்றி சக்கியதா அவச்சேதகமுமின்றி யெச்சப்தத்தானும் வாச்சியத் தன்மையுமின்றி எவ்விடத்திலும் இலக்கணையால் உலகத்தில் சப்தப்பிரவிர்த்தி காணுமையின் என்பது திருக்கருத்தாம், இவ்வண்ணம் ஞாதாவிற்கே ...ந்தன்மையுண்மையின் அவனிருந்தபோதினும் உப ...ப்வன் துர்லபனுதலின் ஆத்மதரிசனம் துர்லபமென ...பெற்றது, இப்போது உபதேசிப்பவனிருந்தபோதி

னும் கேட்பவன் கிடையாமையின் அது துர்லபமென வரு ளல்:—ஆச்சரியவச்சைன மன்யசுருஞோதி யென்பது; வத்தியோடுகூடச் சுருஞோதிக்குச் சமுச்சயார்த்தம் சகார மாம், ஆச்சரியவத் என்பதும் அன்னிய வென்பதற்கு விசேஷணமாம், ஆச்சரிய துல்லியன் எவனோ வொருவன் இதனைக்கேட்பன், வேதாந்தவிசாரப் பெயரிய சிரவண விஷயீ ஆக்குவன், யாவருமாக்கார், நாஸ்திகனுக்கு அஃ தின்மையின் ஆஸ்திகனுக்கும், ¦ஒளி மறைநெறி யென்பதா தியாக அருளும் முறையால் பெரும்பாலும் போக ஐச் வரிய ஒரு நாட்டத்தானே கருமமார்க்கத்திலேயே யியற்கை யாகப் பிரவிர்த்தியாமென ஞானமார்க்கப் பிரவிர்த்தித் துர்லபமேயாம், எங்கேனும் எப்போதேனும் எவனுக்கே னும் உண்டானபோதினும் அது தேவர்களால் தடைப் படுத்தப்படும், மநுடர் இந்தப் பிரஹ்மத்தை யுணர்தல் தேவதைகளுக்குப் பிரியமின்றுமென்று சுருதியிருத்தலின், தேவதைப் பிரதிகூலப் பாவத்தில் மநுடயத்தினம் மலரா தாம் இதனைக் கருதியே சுருதி கேட்கப் பெறுவதற்கும் என்பதாதியாக வறைந்தது, மாநுடரநேகர்பால் ஒருவன் என்பதாக அருளவும்பெறும், பெறவே அநேகஜன்மங்களி லாற்றிய அறத்தினலே அந்தக்கரணமூலத்தைக் கழுவியவ னய் சமதமாதி சாதன சம்பன்னனய் முமுக்ஷுத்தன்மை யோடுங்கூடி விதிப்பிரகாரம் ஞானசாரியனைச் சரணகதி யடைந்த எவனோ வொருவன் வேதாந்த திரவணஞ் செய் வன் எனக்கேட்பவன் அதி துர்லபனென்பது திருக்கருத் தாம், இவ்வண்ணம் ஒருவாறுகக் கேட்பவன் கிடைத்த போதினும் அவனுக்குச் சிரவணத்தினலேயே ஆத்மஞா னம் உண்டாமென்பது நியமமாகுமாயின் ஆத்மஞானம்

சிலமெனை இன்றியமையாது அங்கீகரித்துக் கொள்வேம், இவ்வாறின்றன்றே சிரவணஞ்செய்தபோதினும் அநேக விக்கின பிரதிபந்தமிருத்தலின் பிரதிபந்தமில்லாதவழியே தான் சிரவணாதிகளுக்கு ஞானஜனகத் தன்மையாம், கேட்கவும் பெறுகின்றதன்றே ஆன்மாவை யறியவேண்டுமென்னு மிச்சையினால் விதிப்பிரகாரம் பிரஹ்மாவைச் சரணடைந்து சிரவணஞ்செய்த இந்திரவிரோசனர்களுக்குள் விரோசனன் ஆன்மதத்துவ ஞானத்தை யடையாமலே தன்புரமடைந்தான், இந்திரனோ நூற்றுக்கணக்கான வருடங்கள் ஆண்டுப் பிரமசரியஞ் செலுத்தி ஆத்தும தத்துவத்தை யுணர்ந்தவனாகிச் சென்றானென்பது சாந்தோக்கியத்திற்கதையாம், இதன் விரிவை ஸ்ரீ ஆத்மபுராணத்தில் தெரிந்து கொள்ளலாம், வாமதேவரும் சிரவணஞ் செய்திருந்த போதினும் ஜன்மாந்தரத்தை யடைவிக்கும் வலுவான நுகர்வினைத் தடையால் ஞானமுண்டாகாமல் அவ்வாறே கருவாசமடைந்து தடைபடவே அப்போது ஞானியானார், கருப்பத்திலேயே வாமதேவருணர்ந்தா ரென்பதர்திச் சுருதியாலுணரப் பெறுவதாகும், இதுவும் ஸ்ரீ ஆத்ம புராணத்தில் பிரசித்தமேயாம், ஜடபரதரும் வெகுவாக ஆன்ம விசாரஞ் செய்திருந்தபோதினும் நுகர்வினைவயத்தால் முப்பிறப்பை யநுபவித்து வாசனையற்றுப் பின் தடையற்ற ஆன்ம சாக்ஷாத்காரத்தால் முத்தரானார் என்பது ஸ்ரீ பாகவதாதிகளில் பிரதி பாதிக்கப்பெற்றதாம் ஈண்டு மருளப்பெறும் அநேக ஜன்மவென்பதாக, ஸ்மிருதி புராணங்களுங்கூறும், புருடர்க்கு ஞானம் புகுதுவதாகும் மருளுற்ற பாவும் மழுங்கியதானே, கடவல்லீயும் இதனைக் கருதியே கூறியதாம். இவ்வண்ணமே ஸ்ரீ வியாசபகவானாலும்

பிரஹ்மமீமாம்சையில் சூத்திரிக்கப்பெற்றதாம். ஐகிகமும் அப்பிரஸ்துதப் பிரதிபந்தமாக அது காணப்பெறுதலின், பொருளிதுவாம் ஈண்டு பூர்வபக்ஷத்தில் சிரவணாதிக்கு வித்தியா சாதனத்தன்மை அசித்தியாம் சித்தாந்தத்தில் பிரதிபந்த கவசத்தால் விலம்ப மேற்படினும் அதன் சித்தியாம் என்பது பல பேதம் ஆண்டுச் சிரவணாதிகளால் ஈண்டே வித்தையினுதயமா அல்லது ஒருபோது பரத்திலுமா என்பது சம்சயமாக ஈண்டே வித்தையினுதயம் உளதாகுக என்னுங் காமனையால் சிரவணாதிகளில் முயன்றவனுக்கு இகலோகபலமாகவே வித்தையினுதய மென்பது பூர்வபக்ஷமாம், சித்தாந்தமோ வித்தியாவிருத்த பலத்தையுடைய பலோன்முகமாய கருமம் பிரஸ்துதப் பிரதிபந்தமாம் அந்தப் பிரதிபந்தகமபாவமாகவே ஐகிகமாய வித்தையினுதயம் சிரவணாதிகளினாலே உண்டாகவே செய்யும், பிரதிபந்தமிருப்பினோ அமுத்திரத்திலுமாம் என அநியமமே, ஈண்டேயென்பது நியமமில்லையாம், என்னை அது காணப்பெறுதலின், கர்ப்பத்திலேயே சயனித்துக்கொண்டு வாமதேவர் இவ்வண்ண மிதனைக் கூறினர். கேட்பதற்கும் வெகு பேர்களால் யாது கிடைக்கமாட்டாதோ என்பதாதி சுருதிகளில் பிரதிபந்த அப்பிரதிபந்தங்களால் அந்நியமங் காணப்பெறுதலின் என்பதாம். இவ்வியாவற்றையும் கருதியருளப்பெறுகின்றது. சுருத்வாப்யேனம் வேத நசைவகச்சித்தென்பது, இந்த வான்மாவைக் கேட்டபோதினுமே ஒருவனுந் தெரிந்துகொள்ளவேமாட்டான் என்று கூட்டுக, சுருத்வாபி என்பதனானே சிரவணமே துர்லபமாம், சிரவணஞ் செய்தபோதினும் எவனுந் தெரிந்துகொள்ளான் என்னும் பொருள் காட்டி யருளப்பெற்றதாம், அல்லது

கேட்டபோதுந் தெரிந்திலதேல் கேட்காவிடின் தெரியாமைபற்றி கூறவேண்டியதென்னே எனவாம், அல்லது கேட்டபோதினுமென்பதற்கு இவ்வாறு வியாக்யானமாம் நித்திரையின்கண் யாவரும் சுகரூப ஆன்மாவை அநுபவிக்கவே செய்கின்றார், துயிலிலே யெல்லாந் துலைந்து போகவே அயர்வுறுதமத்தினால் மூடலாகிய நயசுகரூபமே நண்ணுவானரோ எனச் சுருதியிருத்தலின், எங்ஙனம் எவனே வொருவன் இதனைக் காண்பன் என்று கூடுதலேனும், அவ்வாறே உலகத்தில் யாவரும் வேதாந்தங்களைப் படிக்கின்றனர் கேட்கவுஞ் செய்கின்றனர் வியாக்கியானிக்கவுஞ் செய்கின்றனர். செய்யவே எங்ஙனந்தான் உபதேசிப்பவன் கேட்பவனும் துர்லபமாவர், எனக்கடாவ விடையளிக்கப் பெறுகின்றது. சுருத்வாப்யெனமென்பது, அபிசப்தம் பூர்வார்த்தத்திற் புகன்ற தரிசன உபதேசச் சமுச்சயப் பொருட்டாம், கண்டும் உபதேசித்தும் கேட்டும் எவனும் இதனை உணர்வதேயில்லை யென வந்நுவயம், எல்லாப் பிரஜைகளும் எய்துற்று மெய்தார் எய்துவேம் யாம் பொற்பொருள் புதைத்த புவியிற் புலனிலார்போய், நிற்பினுமிடிப்பர் நனி நித்தமுலகத்தோர், தற்பொருள் சுழுத்திதனினுற்று மதுதானே, யற்பமறிகிற்றிலரயர்ச்சி வலியையோ.

என்பதாக சுழுத்தி காலத்திய ஆத்மசுக சம்பத்திக்கு அஞ்ஞானத்தால் மறைபட்டிருக்குந் தன்மைக் கூறப்பட்டிருத்தலின், இப்போதைய் பிரர்பஞ்சிகக் குணசிஷ்ய சமுசாயத்திற்கும் உபதேசிப்பர். உனக்கு ஞானம் என்று அருளும் பிரகாரம் உள்ளபடி ஆத்துமதத்துவ தரிசன சீலத்தன்மையின்மையானே அதனது உபதேசச் சிரவ

ணங்களுக்குப் பயனென்று மின்மையினாலும், கூறிய தரிசன உபதேச சிரவணங்களினாலே எவனும் ஆத்தும தத்துவத்தைத் தடையற்ற அபரோக்ஷமாக அறிந்திடான், எனவே துர்ப்போதம் ஆத்தும தத்துவம் என்பது துணிந்த பொருளாம். 7

(அ-கை) இதனையே நன்கு உபயமாகவருளல்.

சு. ஸாக்ஷாத்கரோதி மாம் கஶ்சித் யத்நவத்ஸ்வபி தேஷு ச
மத்தோऽந்யத் கிஞ்சிந்நேக்ஷேத விஶ்வம் ச வீக்ஷதே॥

க. வன்மையொடு மேன் முயலுவாரவர்கடமினு, மென்மகிமை தன்னை யெவனோ வறிகுவானு, லென்மகிமை தன்னி லெவையுந் தெரிதலானே, தன்மயமதன்றி யணுவுந் தரிசியானே.

வி. எவனொருவனே என்னைக் காண்பான் முயலுகின்றான் என்றருளப்பெற்றது, யத்னவத்ஸ்வபி = முயல்வார்களுக்குள்ளும், கச்சிதேவ = எவனோ ஒருவனே, மாம் = என்னை, சாக்ஷாத்கரோதி = பிரத்தியக்ஷமாகக் காண்பன், தேஷு ச = அந்த வெகு முயல்வார்களுக்குள்ளும், எவனோ வொருவனே என்னைக் கூறியவிதமாக ஏகரசமாய் சாக்ஷாத்கரிப்பன், என்னைச் சாக்ஷாத்காரஞ் செய்தவனுக்கு இலக்கணங் கேட்டி, மத்தஃ = சின்மாத்திர என்னினின்றும், அன்யத்ரகிஞ்சித் நஈக்ஷதே = வேறொரு ஜடத்தையும் ஒரு சிறிதுங் காண்கிலன்; மயி = சின்மாத்திர என்னிடத்தில், ஆகாயத்தில் நீல்மேபோல, சர்வம்சவீக்ஷதே = யாவற்றையுமே காண்பன், கனப்போல தன்னினும் அன்

னியம் இருக்கவில்லை யெனக் காண்பனென்பதாம், சொப்பனத்தில் எனக்கயலாக ஒரு சிறிதும் இராததேபோல ஜாக்கிரத்தின் கண்ணும் காணப்பெற்ற இது எனக் கயலாக விலதாம், இரவியின் வெப்பத்தாலே மருப் பூமியில் வெறுந் தோற்ற வெள்ளப் பிரவாகமேபோலவும் சுவரில் ஓவியமே போலவும் ஆம் என்பது திருக்கருத்தாம், இதற் குதாரணம் திருவாசகம்

பூத்தாரும் பொய்கைப் புலனிதுவே யெனக்கருதிப்
பேர்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்
கூர்த்தாவுன் சேவடி கூடும்வண்ணந் தோணோக்கம்.

குறுந்திரட்டு.

காயநீர்க்குமிழி யதிலுறுமின்பங் கானலிற் புலனது தனக்கிங், காயவத் துயரமளவில்லையது நீயாய்வுறுமையி லழிந்தற்றாய், நீயினிக்கவலை நினைவெலாமொழித்து நெஞ்சமேவந்தெனக்குடன்பட், டாயநற் சொரூபற் கன்பதே யிசைந்தாலரியதே தார்நமக்கெதிரே.

பட்டினத்துப்பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக் கோவை,

எந்தை நின்,
றிருவளர் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய
சிற்ப விகற்ப மெல்லா மொன்றிற்

றவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவு போன்றனவே.

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ
யையாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத் துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்ட வெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போன
[துவே.

மாயப் பேய்த்தேர் போன்று நீப்பரு முறக்கத்துக் கனவேபோன்று நனவு பெயர்பெற்ற மாயவாழ்க்கையை மதித்துக் காயத்தைக் கல்லினும் வலிதாகக் கருதிப் பொல்லாத் தன்மைய ரிழிவு சார்ந்தனே.

சுவாநுபவத் திருவாக்கு.

சுவருறையு மோவியங்கள் சுவரே யென்றல்
சுபாவமதிபோற் பரத்திற் றோன்றுநின்ற
பவமுதலாஞ் சங்கற்ப விகற்பமெல்லாம்
பரவடிவாய்க் கண்டு பரவடிவமான
தவருறையுங் கழனிநகர்க் கொற்றநாதன்
றனதருளாற் பேதமதி நாயினேனுக்
கிவனவனது வென்னும் பேதமின்றி
யெவ்வுருவுஞ் சின்மயமா யிருந்தவாறே.

ஸ்ரீமத் பகவற்கீதை.

மாயுமானுட ரனேகர்பா லொருவ னென்னையாயு மனம் வைத்துளர், ஞயுமாநுட ரனேகர்பா லொருவனே யறிந்து முடிவானையா.

கேவலம் விகிஷ்டபலமுடைமையானே ஞானத்திற்கு மாகான்மியமென்பதிலதாம், மற்றே அதிதுர்லபத் தன்மையானும் என்றறிக, எண்ணிக்கையற்ற சீவக்கூட்டங்களுக்குள் மநுடரினும் வேறானவைகட்கு சிரேயசிற் பிரவிருத்தியே யிலதாதலின் மநுடத் தன்மையே முதலில் துர்லபமாம் மநுடத்தன்மை கிடைத்தபோதினும் எல்லாருமே ஞானப்பொருட்டு முயல்வதின்றாம் மற்றே ஆயிரத்தி லொருவனே மகா புண்ணியவானாய் முயல்வன், விசுவம்சதம்சகஸ்ரம் யாவும் அக்ஷயவாசகம் என்னும் மகாபாரத வசனத்தால் சகஸ்ரபதம் ஆனந்த்யபரமாம், ஆதலின் தத்துவஞான சாதன அநுட்டானம் புரிபவன் துர்லபதரனாவன், அநுட்டானவானிருந்த போதினும் அவ்வாயிரம் பேர்களுள் ஒருவனே என்னை யுணர்வன் எனச் சித்த ஞானி துர்லபதமனாவன், சித்தனிருந்த போதினும் அவ்வாயிரத்து ளொருவனே என்னை உண்மையாக உணர்வன் அம்மகாத்மா சுதுர்லபன், என்னையோ ஒருவருமுணரார் எனவு மருளப்பெறும் ஆகலின் நிரதிசயமான ஞானமாகான்மியம் இத்தகையதாம். 8

(அ - கை) இவ்வண்ணம் பரமசித்தாந்தத்தை திருவாய்மலர்ந்தருளி அதனை யுணரு மடையுமுபாயமாகிய விபூதிகளின் சிந்தனைத்தைச் சுருக்கமாக வருளல்.

சு. க்ஷிதௌ ஸாமயரூ௫வெண தெஜொரூ௫வெணவாஹ்ஷு வுாரூ௫வெண வாஷுணெஷ்ருஷூ ரூ௫வெண வாவுஸாயீதவொ பஞ்நாம வாஹயீஸவொ ஷுஐெஷ்வ், தி்விவெஷு விகாரெஷு ஊஃ்தவொஷு ஷ ஹ்ஃஷிதஃ ॥

க. நறுநற்றமதாய்ப் பூவிலெழு நாவிற்றே யுருவம தாய், நெறியாதபமாயிரவியினி னிலவினீரிலிரதமதாய்ச், செறிதீத்தவமாய்த் தீத்தவரிற், றிறமாய்த் திறமைவாய்ந்த வரி, லறிவா மெனினேனு மூன்றுவகை யவற்றாடகமே யமர்ந் திடுவேன்.

வி. அஹம்=அநுபவாத்மாவாகிய நான், க்ஷிதௌ=ஜடமாயு இந்தப்பூதர்துவில், பூத்தன்மை ரூபத்தானே இல்லாததில், சுகந்தரூபேண=சுகந்த அநுபவரூபமாக, ஸ்திதோஸ்மி=இருக்கின்றேன், இதுபொருள் இரச்சு உரக சொப்பன மாயாதிகளில் அசத்தாய ஜட சர்ப்பாதி சரீரத் திலும் அதனநுபவாத்திரச் சரீரனுகியயான் அநுபவிக்குஞ் சாக்ஷியாய் அவிக்கிரியனுய் இருக்கின்றேனென்பது திருக் கருத்தாம், அக்னிஷு=அக்னிகளில், தேஜோரூபேணச=தேஜோரூபமாகவும், தேஜ என்பது உஷ்ணஸ்பரிசத்தை மாத்திரங் குறிக்கும், பூஷ்ணி=சூரியனிடத்தில், ப்ரபா ரூபேண=ஆதபரூபமாக, அப்ஜே=சந்திரனிடத்தில், சந் திரிகைவடிவமாகவும் இருக்கின்றேன், அப்சுச=நீர்களி லும், ரஸரூபேணச=ரசரூபமாகவும், இருக்கின்றேன், தீ=புத்திமான்களுக்குள், தீ=விஷயப்பிரகாசவடிவம் யானே, தப:=தபசிகளுக்குள், தப=ஊர்ஜிதத்தன்மை மகானு பாவத்தன்மையானே, பலினும்ச=யோக ஐசுவரியவான்க ளுக்குள், பலம் அகமேவச=ஐசுவரியம் ஸ்ரீ அகஸ்தியாதி யர்களின் கடல்வற்றச்செய்தலாதிஆற்றல்யானே யாவேன், மதுத்பன்னேஷு = என்னிடத்தினின்றும் உண்டாயின வாய, த்ரிவிதேஷு விகாரேஷு=மூவிதவிகாரங்களிலும், அஹம் ஸ்தித:=யான் இருக்கின்றேன், சாக்கிரத்தபிமானி விசுவன், சொப்பன அபிமானிதைஜசன், சுஷுத்தியபிமானி

பிராஞ்ஞன், என்னும் இம்மூன்று விகாரங்களிலும் எனது மாயையினாலே என்னிடத்தினின்றும் உண்டாய பரஸ்பரம் விலகியனவாயவற்றுள், குசுமசூத்திர நியாயத்தானே தொடர்ந்திருக்கும் யான் ஒருவனே யாவேன், அநுபவிக்கப் பெற்ற கந்தாதியினின்றும் அதனிச்சையினாலே கற்பிக்கப் பெற்ற க்ஷிதியாதியினின்றும் அன்னியனாய் அநுபவாத்மாவாய் யான் இருக்கிறேன்,

ஸ்ரீ பரமார்த்ததரிசனம்—திரியுமிருகதிரினிடைத்திகழொளி நான்றிருமறையி, னரியமுதலெழுத்தது நானுடைவர்பாலாண்மையு நான், விரிபுனலிற்சுவையது நான் மேதினியில்வாசமுநா, னெரியில்வரு வெம்மையு நானாகாசத்தெழுமொலி நான்.

ஆன்றவறிவுடையோர்பா லறிவுநானடங்கினர்பால், வான்றவநான் வளர்நன்மை பூண்டார்பால் வண்புகழ்நான், றோன்று மிகுதிறலோர்பாற் கிரமமுறுத் தொல்வலிநா, னான்று பொருளனைத்தினுக்கு முயிராகி யுள்ளேனே.

நிர்விசேஷ அத்வைதலக்ஷணப் பிரஹ்ம சொரூபம் கூறப்பெற்றதாயினும் அது வேதாந்தமொன்றினாலேயே அறியத்தக்கதாகும், மந்தமதிகளினாலே கோசரிக்கமுடியாததாகும் ஆகவே அதனது பஜன உபயோகி விபூதிலக்ஷணப் பிரஹ்மசொரூபத்தைக் காட்டுவாம், சர்வஜலங்களிலும் மதுரதன்மாத்திர ரூபரசமாகிய சாரம்பரம்பொருளேயாம், இரசரூப விபூதியைப் பரம்பொருளின் வடிவமாகவே தியானிக்கவேண்டும் சசசூரியர்களிடத்தில் பிரபையாயிருப்பது பரம்பொருளேயாம், சந்திரசூரியபிரபை விபூதி

யைப் பரம்பொருளின் வடிவமாகவே தியானித்தல் வேண்டும், இவ்வண்ணமே பிறவற்றினுங் கண்டுகொள்க, எல்லா வேதங்களினும் தொடர்ந்திருக்கும் பிரணவம் பரம்பொருளேயாம், இலைகள் முழுவதிலும் வரிகள் படர்ந்திருப்பதே போல ஓங்காரத்தினாலே எல்லாவாக்கும் வியாபிக்கப்பெற்றிருக்கும் என்று மறையுங் கூறுகின்றது, ஆகாயத்தில் சத்த தன்மாத்திர ரூபம் பரம்பொருளேயாம் நரர்களிடத்தில் புருடப்பிரயத்தனம் பரம்பொருளேயாம், முயற்சியே புருடர்களிடத்தில் விபூதியாம், பிருதிவியினிடத்தில் நறுநாற்றம் பரம்பொருளேயாம், அக்கினியினிடத்தில் சகிக்கமுடியாத தீப்தியும் பரம்பொருளேயாம், வாயுவின்கண்ணே நல்லபரிசமும் பரம்பொருளேயாம், சர்வப்பிராணிகளிடத்திலும் பிராணதாரணமாகிய ஜீவனமென்னும் ஆயுள்பரம்பொருளேயாம், தபசிகளிடத்தில் பசிதாகாதி துவந்துவசகன சாமர்த்தியரூபதபம் பரம்பொருளேயாம், மனத்தின் ஒருமை வடிவ உட்டவமும் நாவையும் உபஸ்தாதியையும் அடக்கும் வெளித்தபமும் பரம்பொருளேயாம், சிரந்தனமாய சர்வபூதங்களின் காரணம் பரமாத்மாவேயாம் அதனைச் சிவமென்றே சேவிக்கவேண்டும், புத்திமான்களுக்குள் இருக்கும் விவேகசக்தியும் தேஜஸ்விகளுக்குளிருக்கும் பிராகல்ப்யமென்னும் பிறரை யடக்குஞ் சாமர்த்தியமும் பிறரால் அடங்கப்படாமையும் பரம்பொருளேயாம், மேலும் அப்ராப்தவஸ்துவின் அபிலாஷை வடிவகாமமும், அடைந்தவஸ்துவிலும் மீண்டும் அதனதிகப் பிராப்தி திருஷ்ணைவடிவ இராகமும் அற்றபலம் அதாவது தனது தருமாநுஷ்டான சாமர்த்தியரூபச் சாத்விகபலம் பலவான்களுக்குள் பரம்பொருளேயாம், காம ராக விவர்ஜிதமேயாய

பலத்தைப் பரமாத்மாவென்றே தியானஞ்செய்க, தருமம் அவிருத்த பத்தினி புத்திரவித்தாதி விஷயகாமம் பரம்பொருளேயாம், அனேகமாக எண்ணுவதனுல் பயனென்னை, எல்லாவுலகமும் பரம்பொருளாலேயே உற்பத்தி ஸ்திதி நாசமாதலின் பரம்பொருளென்றே சகலத்தையுந் தியானிக்கவேண்டும், சேதன சேதனவடிவங்களான சாத்விக பதார்த்தங்களும் இராஜசபதார்த்தங்களும் தாமசபதார்த்தங்களும் யாவுமே பரம்பொருளினின்றுமே யுண்டாயின வென்று தெரிந்துகொள்ளல்வேண்டும், ஆகலின் எல்லாம் பரம்பொருளென்றே சிந்திப்பதற் கென்னதடை, அற்றேல் சாத்விக பாவங்களில் பரம்பொருட் சிந்தனம் பொருத்தமாம், இராஜச தாமசங்களிலோ எங்ஙனமது பொருந்தும், அவற்றிற்குத் தாழ்வுண்மையானே அவ்வடிவத்தாற் சிந்திக்கப்பெற்றப் பரம்பொருளுக்கும் அவ்வழுக்காதலின் எனின் அவைகளிடத்தில் பரம்பொருளிருப்பதில்லை அதாவது அவற்றினதீனமாயிருப்பதில்லை அவையோ பரம்பொருளின்தீனமாய்ப் பரம்பொருளிலிருக்கும், ஆகலின் எல்லாவற்றினும் மேன்மைவாய்ந்த பரம்பொருளின் சர்வரூபத்வ சிந்தனஞ்செய்தபோதினும் தாழ்வில்லை யென்றுணர்க சர்வரூபத்வ சிந்தனமும் சர்வத்தில் பரமாத்மதிருஷ்டியாம், சேவகனிடத்தில் அரசதிருஷ்டியேபோலும், அதனுல் அரசன் தாழ்வதில்லையல்லவோ மற்றுஞ் சேவனுக்கே உயர்வாம் இதனுனே மனம் பிரஹ்மமென்பதாதிப் பிரதீகவுபாசனை விதியாம், பிரஹ்மதிருஷ்டி உத்கர்ஷத்தால் என்னும் நியாயமுமாம், அன்றுயினே அதன் விரோதமாம் என்பது திருக்கருத்து, சூத்திரப் பொருளிதுவிமை ஈண்டு பூர்வ பக்ஷத்தில் தாழ்ந்ததில் உயர்ந்ததன்மதி செய்யத்தக்

கதாம் என்னும் லௌகிக நியாய அநபேக்ஷையாம், சித்தாந்தத்தில் அதனபேக்ஷயாமென்பது பலபேதம், ஈண்டு பிரஹ்மத்தில் பிரதீக திருஷ்டிசெய்யத்தக்கதா, அல்லது பிரதீகத்தில் பிரஹ்மதிருஷ்டி செய்யத்தக்கதா என்று சம்சயமுண்டாயவழி பிரஹ்மத்திற்குப் பிராதான்யமாக உபாசியத்தன்மைச் சித்தியின் பொருட்டு அதன்கண் பிரதீக திருஷ்டி செய்யத்தக்கதாமென்பது முன்விஞவாம், சித்தாந்தமோ பிரதீகத்திலேயே பிரஹ்மதிருஷ்டி செய்யத்தக்கதாம், என்னை பிரஹ்மத்திற்கு உத்கர்ஷமிருத்தலின், தாழ்ந்ததில் உயர்ந்த தன் திருஷ்டியைச் செய்திடினே தாழ்ந்ததற்கு உயர்ந்ததாந் தன்மையுண்டாம், இராஜதிருஷ்டி ஆமாத்தியனுக்கேபோலும், இங்ஙனமாயின் பிரஹ்மத்திற்குப் பிராதான்ய அலாபம் ஆம் என்னற்க இஷ்டாபத்தியாதலி னென்பது கருத்து;

(ஈசுரகீதை) ஆகமுறுமாருயிர்நீ யவ்வுயிர்க்கு மதிபதிநீ, போகநுகர் புருடனுநீ நுகர்விக்கும் புராதனனீ, யோகிநீ யுணர்பவனீ யுளந்தொறு நின்றுணர்கின்ற, வேகனீ நின் மலமாயாவையுமாம் பரம்பொருணீ.

பரமாணுவினதுருவாகிப் படைப்பாய்நீ பல்லுலருக ளூந், திரமாமுன்னுலே யுண்டாஞ் சிறிதிற் சிறிதாய் மிகப் பெரிதிற், பெரிதாய் நின்னில்வேறில்லாப் பெருமைகாணும் பெருந்தகைமைக், குரியாரெல்லா மொருநீயே. வேறென்றில தென்றுரைப்பர்களால்.

இப்பிரம சக்கரமியங்குவது முன்பா, லப்பெரிய மாயையுடையா யமலநீயே, சிற்பரம யோகபதி திவ்யநடனின், பத்மசரணங்கள் சரணென்று பணிகின்றோம்.

உன்னுரையா மோங்கார முயர்முத்திக் கொருவிதை நீ, துன்னியுடஞேறுந் தோன்றுமை மறைந்திருத்தி, நின் னிடையெல்லாமாய நீமாயாய் நின்ஞெழிய, வன்னியமா யுள்வெல்லா மசத்தியமென்றறைவர்களால்.

அகிலவுலகு மிருப்பிடநீ யறியவேண்டு மக்கரநீ, சகல தருமங்களும் வளர்க்குந்தாய்நீ புருடோத்தமன்ஞனீ, புக லுமரிநீ பூமகனீ புராரிநீ யெப்பொருளுக்கும், பகுதிநீ நீயொழிவின்றி நிலையாய் நிற்கும் பரம்பரநீ. 10

(அ - கை) இந்த ஞானம் மிகவும் துர்லபமென்றரு ளல்.

சு. 𑌨 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑌾 𑌮𑌾𑌯𑌾𑌮𑍋𑌹𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃
𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑌾𑌰𑌾 𑌮𑍋𑌹𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑍇 𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌂 ॥

திலகமாகிய வென்றனைப்பாவியர் தெளியார், கலக மாயையிற் கலங்கியகருத்தினைப் பொறுத்தார், விலகுமூவ கையாகிய விகாரமதுடைய, வுலகமூன்றையும் பகுதியென் மோகமேயுஞற்றும்.

வி. பாபிஷ்டா꞉=பாவஞ்செய்தலானே அதன் சம் பந்திகள் பாபிஷ்டர்களாவர்கள், அதிதுஷ்டர்கள், பாகண் டிகள் அவர்களோ தேகாதி ஆத்மவாதிகள், மாம் = என்னை, தன் வடிவத்தானே முன்போன்றதாய் ஆத்மா மாய் அசரீரமாய் தேவபித்ரு மநுஷ்யாதி சரீரங்கள் நிலை பெறுதன்வாயினும் அவற்றுள் நிலைபெற்றதாய், நித்திய மாய், அவிகாரமாய், மகத்தாய், நிரபேக்ஷிகவிபுவாய், தன் வடிவமாய் இருக்கும் பிரத்தியக்காத்மாவை இதுவே என்

னுடைய வடிவமென வறிந்து தீரனாகிய தீமான் சோகத்தையடையான், பரம்பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்தவனுக்குச் சோகமின்றென்பதாம் என்னுமிச் சுருதியினால் காலத்திரயத்திலும் சரீரசம்பந்த ரகிதமாய என்னை, நவிந்ததி=அடைவதில்லை, அதன்கண் ணேதுவெனின், மாயாமோஹித சேதஸঃ=மாயாவான்களாகிய பாகண்டர்களாலே போதிக்கப்பெற்ற சித்தத்தை யுடையவர்களாதலின், த்ரிவிகாரா=மூன்று விகாரமுடையதாகிய, மே பிரகிருதி=என்னுடைய மாயை, ஜகத்த்ரயம்=மூன்றுலகத்தையும், மோஹயதி=மயக்குகின்றது, பிரமாதா பிரமாணம் பிரமேயமேனும், ஜாக்கிர சொப்பன சுழுத்தியேனும், தமசு இரஜசு சத்துவமேனும், மூன்று விகாரங்களாம், அவற்றையுடைய மாயை யென் சம்பந்தியாம், மாயையைப் பகுதியென்றே மதிக்க, மாயிகன்றனையோ மகேச்சுரனென்றே, பொருள், மாயை யாது மாயாவியாவன் எனின் ஜகதுபாதான காரணபூதமே மாயையாம் என்றறிக, மாயிகனே மகேச்சுரனவன், மாயாவி யென்பான் மகத்தாகிய அக்கினியாதிகளுக்கும் நியந்தாவேயாவன், அந்த மாயாவினுடைய ஏகதேச அவயவங்களினாலேயே இந்த நாநாவித ஞானகோசரமாய சேதனசேதன வடிவப் பிரபஞ்சம் வியாபிக்கப்பெற்றதாம், மாயையின் வசத்தினாலே கற்பிக்கப்பெற்ற சச்சிதானந்தப் பிரஹ்மத்தின் அவயவபூத காரிய காரண சங்காதங்களினாலே காணப்பெற்ற இந்தச் சகலப் பிரபஞ்சமும் வியாபிக்கப்பெற்றதாம், அடிக்கடி கூறப்பெற்ற ஜகத் பிரகிருதிக்கு மாயைத் தன்மையாம், அதனதிஷ்டான் அனந்த சுகசின்மாத்திரப் பரமேசுவரனுக்கு மாயாவித் தன்மையாம், சகல ஜகத்தும் வியாப்பிய

மாம், மகேசுவரர் வியாபகராவர், இருப்பு விளக்கங்களி ஞலே இவையாவு மிருந்து விளங்குவனவாம், இவையாவும் விவர்த்தமாதலின், இவ்வியாவற்றையும் நீக்கும்பொருட்டு இனிய தரிசனம் வேண்டியதிருத்தலின், அத்விதீய ஈசுவர ஏகத்துவ ஞானசித்தியின் பொருட்டு முமுக்ஷுக்களி ஞலே எத்தனஞ் செய்யத்தக்க தென்பதாம், என்னுஞ் சுருதியினுனே சர்வ காரிய உபாதான பூதமாய மாயை யானது அத்தகைய மூடர்களை மயக்குகின்றது, மாய வலைக்குட்பட்டவர்கள் மீள்வதில்லை யென்பதாம், இந்த மோகமானது அதம மத்திமர்களாய திரியக்கு மநுடர்க ளிடத்திலேயே இருக்கின்றதென்பதாகவில்லை, மற்றோ உத்தமர்களாகிய தேவதேவர்களிடத்திலும் ஐதரேயப் பிராமணத்தில் கேட்கப் பெறுகின்றது, பிரஜாபதிதான் தன் புத்திரியை யடையமுயன்றனன், என்பதன் விவர ணம் சிவமஹிமையின்கண்ணும் காணலாம்.

நாதவவமதியினு லுழையதாகியதனுடு சிறுமியினை மானுருவினுலிரமி, காதலொடுவனுவனுலடையு கர்முகனுங் காது கணையினெடு கூடுமுடலானவனும், பீதியுடையவனும் வானுலகிலேயு நிலைபேணி யடைபவனுமாகு மலரோனி வனை, மாதுதனுகரனின் வேடமகிழ்வானவது மாறியொரு பொழுதுமே விடுவதேயிலதே.

ஸ்ரீ பகவத்கீதை:—

மூன்றுகுண வகையாகி முடிகின்ற பொருண் முழுதுந், தோன்றுவது மென்னிடையே யெனைத் தொடர்ந்தே நிற்ப துவு, மான்றவமற்ற வற்றினிடை யான்றேன்றே னவற்றி னுக்குச், சான்றென நிற்பேனல்லா லவைசார்ந்து வாழே னன்.

மைக்குணங்க ளெனமுனம் யான்வகுத்து நினக்குரைத்
திட்ட, விக்குணங்கண் மூன்றானு மயக்கப்பட் டறிவிழந்து,
தொக்கிணங்கு கின்ற வுயிரிவை யெல்லாஞ் சுடர்வேலோ,
யக்குணங்கள் கடந்தவெனை யறியுமோ வறியாவால்.

இவ்வகைய குணமூன்றி னியற்கைத்தா யாராலுஞ்
செய்வகைய தல்லாவென் மாயையினாற் றிகைப்பொழிந்திங்
குய்வகைய தரிதெவர்க்கு மென்னையே யெப்பொழுது
மெய்வகையோ டடைகின்ற மனமிலரேல் வேல்வேந்தே.

ஊழலோ வருமிந்த மாயையினா லேயுள்ளம்
பாழாக வறிவிங்கே பறியுண்டு நெறிநின்றோர்
வீழாத தீவினையே வினையாக விளைக்கின்றார்
கீழானோ ரெனையடையா ரடைவாருஞ் சிலருளர்கேள்.

சத்துவ ரஜ தமோகுண அதிகாரத்தோடு கூடினவாய் அதனாலே மூவிதங்களாய் உள்ள பாவபதார்த்தங்களினாலே இவ்வுலகமெல்லாம் அவிவேக முற்றதுவாம் அதனாலே இந்தக் குணமயங்களினும் மேலானதாய் இவற்றின் கற்பனைக் கதிஷ்டானமாய் அதனாலே சர்வ விகார சூனியமாய் உள்ள என்னை அறியமாட்டா, அந்தோ அவிவேக லோக துர்ப்பாக்கியம் என்னே, எல்லாச் சகத்தும் முக்குண மோகிதமாயின் மோகரகிதன் எவனுமில்லெனை உலகம் மோக்ஷமில்லதாகவே ஆய்விடுமெனின், என்னையே யாவர் அறிகின்றாரோ அவர் மாயையைக் கடப்பர் என்றுணரலாம், இந்த மாயை அவித்தையினும் வேறாகாதாம், மாயை யென்றும் அவித்தை யென்றுந்தானேயாம், மாயையைப் பகுதியென்றே மதிக்க, அவித்தை பகுதி மாயை தமம் அஞ்ஞானம் அஜை பொய் பிரதானம் ஜடம்

நாசசீலம் திரிகுணவடிவம் அசேதனம் அசத்து சர்வ அசுபஸ்தானம் என்பதாதி சுருதி மிருதி வசனங்களிலே மாயை யவித்தைகளின் அபேத முணரப்பெறுதலின்; இதனுனே மாயா சப்தம் ஈண்டு விசித்திர சக்தி பரமாம் மித்தியாஞான பரமன்ரும் என்பது நீக்கப்பெற்றதாம், விசித்திர மாடமாளிகை யுண்டாக்கும் விசித்திர சக்தி மானிடத்தில் மாயாவி சப்தப் பிரயோகங் காணுமையின், மாமாத்திரமிதந் துவைதம் அத்வைதம் பரமார்த்தத்தால் என்னுஞ் சுருதியில் பாரமார்த்திகமல்லாத வாஸ்துவின் கண்ணே மாயா சப்தத்தினது பிரயோகம் காணப்பெறுதலினுனும், இம்மாயை என்னுற் சிருட்டிக்கப்பெற்றது. எவ்வென்னைக் காண்கின்றனையோ நாரதனே என்னும் மகாபாரதத்திலும் அர்த்தக்கிரியாகாரிணியாய மித்தியார்த்தத்திலேயே மாயா சப்தப் பிரயோகத்தினுலும், பூயச்சாந்தே விசுவமாயா நிவர்த்தியென ஞான நிவர்த்தியத் தன்மையானே சுருதி புகன்ற மாயைக்கு மித்தியாத் தன்மை அவசியம் பவித்தலானும், ஐந்திர ஜாலிக கஜ துரகாதி மித்தியாபூதங்களிலேயே உலகத்தில் மாயாப்த விவகாரத்தினுனும், என்றுணர்க, கட்டில் கரைகின்றது என்பதுபோல இது உபசார விவகாரமென்னற்க, முக்கியமுளதாக நிர்நிமித்தமாய் உபசார கற்பனை செய்தல் அநியாயமாதலின், அதனுல் மாயா சகத்திரம் அச்சம்பரன் றன் என்னுமிடத்திலும் மாயா பதம் மித்தியாத்துவ வாசகமேயாம், என்னையே யென்னுந் தேற்றத்தானே துவிதிய ஞேயநிஷேதத்தால் அத்துவிதிய ஆத்மஞானம் அருளப்பெற்றதாம், சமஸ்த பேதங்களும் நீக்கப்பெற்று உபாதியற்ற நித்திய சுத்த புத்த முக்த பிரத்தியக்கபின்ன

பிரஹ்ம சைதன்யத்தை யாவர் சாக்ஷாத்கரிப்பரோ அவர், முன் மொழிந்த முக்குணமய சகல அனர்த்த ஹேதுவாய மாயையைக், கடப்பர் = கெடுப்பர் என்பதாம், இப் பொருள் சுருதி மிருதி பலத்தினுலென்றுணர்க, மாயா நிவர்த்தி யென்னுஞ் சுருதிக்கும் இனி விநாசப் பொருள் கூறப்படுதலின், இம்மாயை என்ன பற்றுக்கோடுடையது, எவ்விடயத்தது, எவ்வளவையது, எவ்வுருவத்தது, எத னதீனமானது, என்றிடில் கூறுவாம். ஒரு தேவன் சருவ பூதங்களிற் கூடன் என்பதாதி சுருதிப் பிரசித்த சுயம்பிர காச சொப்பிரகாச சைதன்னியத்தினிடத்தில் ஆசிரயம் தாகவும் விடயமதாகவுங் கற்பிதமாம் இதனுனே சொப்பிர காச சின்மாத்திரமே அஞ்ஞான ஆசிரயம் விஷயமென முத லிரண்டுவினுக்கட்குத்தரமாம், இதுகூறவும் பெற்றுளது சங் க்ஷேப சாரீரகத்தில்— "பற்றலாதலும் விடயமதாதலும் பாக, மற்றதாமறிவே தனியாயிடும் பூர்வ, முற்றதாமிருட்கு தன் முனமுதயமாயதுதான், பற்றலாதலும் விடயமதாத லும் படுமோ." அற்றேல் அகம் அஞ்ஞன் எனச் சீவா சிரயமாக அஃதனுபவிககப் பெறுகின்றது இவ்வண்ணம். விடயமும் பிரஹ்மத்தை யானறிகின்றிலேன் என்னு மநு பவத்தால் அதற்குப் பிரஹ்மமேயாம், ஆதலின் எங்ஙனம் சித்துவத்துவினது வடிவமாய சித்திலிருக்கும் திமிரம் எனக் கூறப்பெற்றதாம் எனின் ஆண்டு கூறல் பற்றலென் பது, அஞ்ஞானத்திற்கு பற்றலாதலும் விடயமதாதலும் ஆயிடும் அறிவே தனி—அத்விதீயமேயாயது, அதனுனே பாகமற்றதாம் சீவேசுவர விபாகரகிதமாம், இவ்வண்ண மாயின் காட்டப்பெற்ற அநுபவமுரணுமென்னற்க அதற்கு வேறெராற்றுல் பெறலாதலுண்மையின், மாறுயினே அன்

யோன்யாசிரயமாம் என்னுங் கருததாலுரைத்தல் பூர்வ முற்றதாமென்பது, இருட்கு=தன் சத்தைப் பிரயோஜக அஞ்ஞானத்திற்கு, தான்=எதுவில், ஜீவேசுவர விபாக சத்வப் பிரயோஜகமாய அஞ்ஞானம். அதன்பின் வருவ தாய அதன் பிரயோஜ்ஜிய பிரஹ்ம விபக்த ஜீவனும் ஜீவ விபக்த பிரஹ்மமும் முறையே ஆசிரயமாகாதாம் கோசா மாகாதாம், எங்ஙனமேனும் ஜீவேசுவர விபாகாதி அநுதி யாம், அங்ஙனமாயினும் அது வாஸ்தவமன்றும் மாயி கமோ ஆயவது அத்வயப் பிரஹ்மம் விளங்காத தசையி லேயேயாம். ஆகவே அது அஞ்ஞான அதீன சத்தை யுடையதேயாம். அஞ்ஞானமோ தன் சத்தையில் விபா காதி சத்துவத்தை அபேக்ஷிப்பதில்லையாம் என் அது பிர யோஜ்ஜிய மன்றும், இவ்வாறுகவே அநுதிபூதமாயினும் ஜீவப் பிரஹ்ம விபாகம் அஞ்ஞான விகாரமேயாம், இத ணக் கருதியே 'பூர்வமுற்றதென்பதாதி கூறப்பெற்றதாம். அதனுனே ஆத்மாவின்கண் அஞ்ஞானத்தி னிருப்புளதா கவே ஜீவேசுவரவிபாக இருப்பாம், அஞ்ஞானத்திற்கு விபக்த ஜீவ சைதன்ய ஆசிரயத் தன்மையில் அதனதீனம் சத்வம் என அன்யோன்யாசிரயமாம், நான் அஞ்ஞன் என்பதாதி பிரதீதியோ அஞ்ஞான ஆசிரய பூரண சைதன் யத்திற்கே அகங்காராதி உபகிதத் தன்மையால், ஆண்டும் அதன் சம்பவத்தால் பொருத்தமுடைத்தேயாம், இத ஞனே இவ்வநுபவத்தால் அகங்கார ஆசிரயம் பிரஹ்ம விஷயம் என்பது மறுக்கப்பெற்றது, அஞ்ஞானத்திற்குச் கேவல ஜடவிருத்தித் தன்மை கூடாமையானுமென்க, இவ் வண்ணம் 'விஷயமும் பூரணப் பிரஹ்மமேயெனக் கூறப் பெறும் பெறவே சித்துவத்துவின் வடிவச்சித்தில் திமிர

மென்றது பொருத்தமுடைத்தே யென்பது கருத்தாம், அலௌகிக மிதுவென்பது கூடாது நானஞ்ஞனென சர்வ லோகப் பிரசித்தமாதலின், இனி அஞ்ஞானத்தில் அளவை யென்னென்னும் மூன்றாவது வினாவின் விடைபகர்வாம், யான் அஞ்ஞன் என்னையும் பிறனையும் அறியேன் எனச் சர்வப் பிரத்தியக்ஷ சித்தமாம், சின்மாத்திர ஆசிரய அஞ்ஞானத்திற்கு அகமர்த்த அனுசிரயத் தன்மை யுண்மையின் அகமஞ்ஞனென்னும் பிரத்தியக்ஷம் எங்ஙனம் பிரமாணமாமென்னற்க தக்துருத்தன்மை அனுசிரயமாய இரும்பினுக்கும் வன்னி சம்பந்தத்தால் இரும்பு சுடுகின்கின்றது என்பதேபோல அஞ்ஞான அனுசிரயமாய அகமர்த்தத்திற்கும் சைதன்ய தாதாத்மிய அத்தியாசத்தால் யானிருக்கின்றேன் என்னும் பிரத்தியக்ஷப்பிரதீதி அவிரோதத்தான் என வஜ்ஜிரபஞ்சரத்தில் பிரபஞ்சமாம், எத்தகைய வுருவமுடைய தென்னும் நான்காவது வினாவிற்கு விடை வருமாறு சத்துவ இரஜதமோகுண மூன்றன் வடிவாயிருப்பது அதனானே கடக்க முடியாதது, முப்புரிக் கயரேபோல அதிதிடத் தன்மையினானே அபேத்திய பந்தனத் தன்மையால் கெடுக்க முடியாததேயாம் ஞானமின்றி அநுச்சேத்தியமென்றபடி, எதனது அதீனமென்னும் ஐந்தாவது வினாவிற்கு உத்தரம் வருமாறு:—பரமேசுவரனது வசவர்த்தினி யென்பதாம், மாயை பரமேசுவரனது ஆணையைச் செய்வதாம் என்னும் பாகவதத்தால் உணரலாம்; ஈசுரகீதையின் கண்ணுங் காணலாம்.

ஓதுமியோகியர் கடங்களுற்பவ மொழிப்பனுனு பிறப்பிலுக், கேதுநானொரு பிறப்பிறப்பு மிலனவனனி வகிலத்திலுக், காரிநானது துடைப்பனனது ப்ரப்பஞ்ன் முழு

த்ளிப்பனு, னீதிதானினையலற்ற மாயைசெய்து நித்தனுய் மறைய நிற்பனுன்.

வஞ்சமாயையொரு சத்தியென்றனது மற்றியாரமை மயக்குமாம், விஞ்சையாகுமொரு சத்திமற்றெனது விமல யோகுபுணர் வார்கடந், நெஞ்சின்மேவியதனு லம்மாயை யினை நீக்கியே நிகழுகிற்பனு, னஞ்சிடாதெனை யனந்தசத் திகளுமியானினைத்தவண மாகுமால்.

ஆலம்பனமாஞ் சத்திகளுக் காலம்பனனு னடங்கவு மென், பாலங்கிருக்கு முத்தியுமென்பாலே யெவர்க்குமுள் ளாயென், மாலொன்றியமாயையை யடைந்துமலரோன் வடிவுகொண்டொன்று, ஞாலந்தன்னையுண்டாகப் பண்ணு நானுவிதமாக.

ஒதியாவையுந்தானு யுயிர்க்கெலா, நாதனுகிய நாரா யணனெனுந், தீதிலாதவென் சத்திதித்தலா, லீதெலா நிலைபெற்றேயிலங்குமால்.

மூன்றுவது ருத்திரமூர்த்தியதாய்த், தோன்றுவகை நின்று துடைப்பதனைச், சான்றோர் பலர்தாமதகாலமென, வூன்றுவெனதாகவுரைப்பர்களால்.

ஆகலின் பரமேசுவர அதீனமான மாயையை பரமேசு வர பக்தரே கடப்பர் அன்னியர்கடவார், பக்தர்களின் பேரில் கருணைபுரிந்து அந்தரியாமியா யிருந்துகொண்டு விளங்காநின்ற ஞானதீபத்தால் அஞ்ஞானகம்மிய விரு ட்டை யகற்றுவேன், என அருளவும் பெறும், அற்றேல் பிரஹ்மதத்துஞானத்தால் அஞ்ஞான நிவிர்த்தியென்னு மிது உண்மையே, எனினும் அது துர்லபமே யல்லவோ,

ஒருவனென்றுங் கண்டறியாதது எனப் பரமேசுவரனாலே யே ஆத்மஞானத்திற்குச் சகத்தில் அசம்பவமருளப் பெற் றிருத்தலின், ஜகத்தநிர்மோக்ஷம் அவ்வாறேதானிருக்கும் எனின், அற்றன்று பரமேசுவரனையே பஜிப்பவர் மாயை யைப் பாறுவர், சமீபத்திலிராநின்ற அகிலஜன விலோசன சீதளமிகவுங் கவின்வாய்ந்த அற்புதச் செக்கர்வான்போன்ற அரதன வடிவ அன்பர்பால் வாச்சல்ய மிக்க கருணைப் பெருந்தடங்கடலாகிய பரமதெய்வவிசுவரூப விசித்திர சரி த்திர அகிலலோக சரண்ய அனவரதப் பிரசாத சுமுக அர விந்தபலாசலோசன மாமுகனு யிராநின்ற என்னை அளவி றந்த அன்போடும் எவர்கள் அனன்யமாகப் பஜிக்கின்றார் களோ, அவர்கள் மாயையால் மறைபடாதவர்களாய் மாயையைக் கடந்திடுவார்கள், அதாவது குரோத தபோ தனனிடத்தினின்றும் வாரவனிதையேபோல பயத்தோடும் என்னன்பர்களிடத்தினின்றும் மாயையே ஓடிப்போய்வி டும், அவ்வன்பர்கட்கு தத்துவஞானம் மிகவுமெளிதாம் ஆகையினாலே மாயையைத் தாண்டவிளைவோன் எவனும் என்னுடைய அன்பு செய்யத்தக்கதென்பது திருக்கருத் தாம், இவ்வண்ணமாயின் எல்லாரும் பரமேசுவரனை யேன் பஜிப்பதில்லையெனின் பாபப் பிரதிபந்தத்தா லென்றுதெரி ந்துகொள்ளல்வேண்டும், பாபிகள் பஜிக்கமாட்டார்களென் றபடி, எப்படி பஜிக்கப்பட்டப் புண்ணியவான்கள் ஆர்த்த னென்றும் ஜிஞ்ஞாசு வென்றும் அர்த்தார்த்தி யென்னும் ஞானியென்றும் நான்குவித மாவர்களோ அப்படி மூடர் களென்றும் நராதமர்களென்றும் மாயையா லபகரிக்கப் பட்ட ஞானவான்களென்றும் ஆசுரர்களென்றும் பாபிக ளும் நான்குவிதமாவார்கள், அவர்களுள் மூடர்கள் ஆடி

யோடும் பரமேசுவர சொரூபஞான சூனியர்கள், நராதமர்களோ பரமேசுவர சொரூபஞான மிருந்தபோதினும் பரமேசுவர நாட்டமற்றவர்கள், மாயா அபகிருத ஞானர்களோ பரமேசுவர சொரூபஞான மிருந்தபோதினும் குயுக்தியா லாக்கப்பெற்ற அசம்பாவனையோடுகூடிய சித்தமுடையவர்கள், ஆசுரர்களோ அதிதிடமாக பரமேசுவர சொரூபத்தைத் தெரிந்தபோதினும் துவேஷத்தால் தூஷித்துக் கொண்டிருப்பார்கள் இவர்கள் உத்தரோத்தரம் பாபிஷ்டர்களாவர்கள், இவர்களுக்கு மாறுய புண்ணியவான்கள் என்று கூறிய நால்வர்களை ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவே திருவாய்மலர்ந்தருளியுள்ளார்,

செல்வம்விரும்பினர் செல்லலடைந்தோ
ரல்லல்கெடுக்கெனை யன்புசெய்வோர்க
ணல்லதறிந்தமெய்ஞ்ஞானி யிந்நால்வரும்
வல்லதிலென்னை வணங்குதவத்தோர்.

இந்நால்வருள் ஆர்த்தனென்பவன் சத்துரு வியாதியாதி உபத்திரவங்களால் பீடிக்கப்பட்டவன் கஜேந்திர துரோபதையாதிபோலும் ஜிஞ்ஞாசுவென்பவன் ஆன்மஞானத்தை விரும்பியவன், மைதில ஜனக சுருத தேவாதிபோலும், அர்த்தார்த்தி யென்பவன் இம்மையிலேனும் மறுமையிலேனும் போக ஐசுவரிய காமன் இகத்தில் சுதாமாவேபோலும், பரத்திலோ துருவன் போலும், ஞானியென்பவனோ பகவத் தத்து சாக்ஷாத்கார முடையவனவன், சனகாதிபோலும், அவனுக்கு அஞ்ஞான வதன்காரி துவைதத்தோற்றம் நீங்கியிருந்தபோதினும் விதேகமுத்தி பரியந்தம் நுகர்வினை வயத்தால் தொடர்வுற்ற

துவைத விவகாரங்கூடவின் பஜனம் அவிருத்தமாம், கிருத கிருத்தியத்தன்மை யிருந்தபோதினும் ஆத்மாராமர்களாய முனிவர்கள் கட்டற்றவர்களாய் முறைதவறுமல் அகாரண மாகவே அன்பைச்செய்வர், அத்தகைய கலியாணகுணனே யன்றே ஆனேமுகன், நிட்காமப் பிரேமபக்தன் ஞானியுள் ளேயடங்குவன், ஞானசூனியனுய கேவலப் பிரேமபக்த னுக்கு ஞானியிடத்தில் அந்தர்ப்பாவங்கூடாது எனின் ஜிஞ்ஞாசுவிலேயே அடக்கலாம்; ஞானயோகத்தன்மை அவசியம் பவித்தலால் ஞானியினு மடக்கலாமென்றதாம், சகாம நிட்காமப்பேதத்தால் இருவகை பக்தராசிகளுள் சகாமர்கட்கு ஆர்த்தாதிகளிலேயே அடக்கமாம் நிட்காமப் பக்தர்கட்குக் கூறியமுறையானே யாம் என்று சுருக்கமா கத் தெரிந்துகொள்ளல்வேண்டும், இவர்களுள் தத்துவ ஞானியே உயர்ந்தவனென்று ஈசுவரகீதை கூறுகின்றது,

நித்த நியமத்துடனே நெறியுறப் பார்ப்பர்கள் சிலர்
பத்தியாற் பார்ப்பர்சிலர் பாவனையாற் பார்ப்பர் சிலர்
சத்தியமா ஞானத்தாற் பார்ப்பர் சிலர் சாற்றுகின்ற
வெத்திறத்தாரினு மிவனே யெனையுணரு மெய்ஞ்ஞானி. 11

(அ - கை) மாயா நிவிருத்தி யுபாயத்தை யருளல்:—

சு. யோவேத்தம் விஜாநாதி மோஹஸ்ய ஜதிவோவி ஷம், ஸநைவகைஜந்ஹிவேஸம் ஜ்ஞாகவாலம் லமேத்த தத:

க. யாவனென் றுண்மையை யறிவா னவன்
மேவிய மோகத்தை விடுகுவா னெலாம்
கூவிய பிறவிகள் கோடியார் லெனை
யேவமெய் யறிந்ததி னேகுவா னரோ.

வி. யஃ=எப்புருடன், மே=என்னுடைய, தத்வம்=நிட்கல அநுபவரூப உண்மையை, விஜாநாதி=உணருவானே, ஸஃ=அவன், அகிலம் மோகம் த்யஜதி=என்னது விஷயமாய மாயையெனப் பெயரிய அஞ்ஞான மோகமியாவற்றையும் காரிய சகிதமாக ஞானத்தினலே நாசஞ்செய்வன், அகிலமென் றருளியது விதேக கைவல்யத்திருக்கருத்தாம், தத்துவத்தை யுணர்ந்தவனுக்கும் பிராரப்த கரும உபயோகப்பொருட்டு மாயாலேசத்தொடர் பங்கீகரிக்கப் பெறுதலின்.

திகழ்பிரதானம் க்ஷரமெனலாகுஞ் சிவனரன் க்ஷரமமிர்தம், இகழ்க்ஷர ஞன்மனெனு மிவைதம்மை யேவுவன்றேவ னிங்கொருவன், புகழுவனினிய தியானத்தாற் பொருத்தாற் பூரணவத்து பாவத்தால், திகழ்மறுபடியு மீற்றினின்மாற்ற நீக்கமாம் விசுவமாமயலே,

என்னும் சுருதியில் ஜீவன் முக்திகாலத்தில் நீங்கிய மாயைக்கும் மீளவும் நிவிருத்தி கூறியது விதேக கைவல்ய அபிப்பிராயமென வியாக்கியானிக்கப் பெற்றிருத்தலினுமென் றுணர்க. சுருதிவியாக்கியானம் வருமாறு:—ஏகத்திற் கநேகான்மத்தன்மையை யுபபாதித்தல், பிரதான ஈசுவரர்கட்கு விலக்ஷணபாவத்தைக் காட்டியதன் விஞ்ஞானத்தா லமிருதத்தன்மையைக் காட்டல், க்ஷர அக்ஷரங்களின் சொரூபத்தைக் கூறல், ஜீவேசுவரப் பிரகிருதிகட்கு அநாதித் தன்மையையும், பிரகிருதி சம்பந்த வசத்தாற் சர்வஞ்ஞத்தன்மையாதி விவஸ்தையையும், ஜீவேசுவரப் பிரகிருதி யான்மகத்துவைதக் கூட்டத்திற்கு அசேட விகற்ப நீகன்று, சத்தியசுக சம்வின்மாத்திரமாக நல்

துணர்வனே பிரவிமயத்தையும் கூறி, இப்போது பகுதிச் சுநித்தியத் தன்மையையும் புருடனுக்கு நித்தியத்தகைமை யையும், இரண்டற்கும் ஈசுவரனுன் நியமியத் தன்மையை யும், அதனேகத்வ விஞ்ஞானத்தால் ஜீவனுக்கு மோக்ஷத் தையும், காட்டல், க்ஷரம்=விநாசமுடையது பிரதானம், முக்கியம் அவித்யாசப்த வாச்சியம் அக்ஷரமென்பதாம், எனவே யுலகிது அவித்தையெனப் பெற்றதாம் காரிய காரணங்கட்குஅனன்னியத்தன்மை யுண்மையின்,இவ்வண் ணம் ஆகுகவாயினும் அக்ஷரம் பிரதான சப்தவாச்சியம் பின்னம் என்றுசங்கித்துக் கூறல் அமிருதாக்ஷரமென்பது, அமிருதம்=பிரஹ்மஞானத்தினுலும் மரணசூனியம், அக்ஷ ரம்=உபசாரமற்ற வியாப்தியை யுடையது, சேர்ந்தமிர்தா க்ஷரம், எங்ஙனம் க்ஷரம் பிரதானம் அங்ஙனம் அக்ஷரம் பிரதானம் அமிர்தாக்ஷரம், அக்ஷரம் அகாரியம் அமிர்தா க்ஷரத்திற் கென்றபோதினும், அமிர்தாக்ஷரத்திற் பரிகற் பிதமாம், கற்பிதங்கட்கும் அதிஷ்டானத்தினும் அனன் னியத் தன்மையாம் சுத்திரஜதம்போலும் என்பது அபிப் பிராயமாம், எங்ஙனம் அதன் அபாவம் அமிருதாக்ஷரத் தினும் தனியாமோ அங்ஙனம் அக்ஷரமும் ஆமெனின் அறைதல் ஹரனென்பது. அவித்யாபாவம் ஹரன் அது வும் அதுவும் அமிருதாக்ஷரம் என்பதாம், அவித்யாபாவம் கற்பித மேலாயின் அவித்தைபோலும், அதுவும் உண்மை யாக வதிஷ்டான மாத்திரமேயாம், அகற்பித மேலாயினே ஈண்டிற்பமும் நாஞ இல்லையென்பதாதி சுருதி விரோத மாம், அவித்தையாதியின் ஹரணத்தாற் பரமேசுவரன் ஹரன்ருவன் அமிர்தாக்ஷர பிரமமே பரமேசுவரன் க்ஷர மாகிய காரியத்தையும் அவித்யாசகித சைதன்யத்தையும்

ஏவுவன் = நடத்துவன், யாவினும் புகுவன் யாவுமா யிருப்பன், தேவன் = சுயம்பிரகாசன், ஒருவன் = சூ அஞ்ஞாதி பேத சூனிய சைதன்யானந்த வியற்கையன், ஆன்மஞானத்தினாலே முக்தியென்னும் பிரத்தியக்ஷ விரோதமாம் என்னுஞ் சங்கையை யகற்றல் பேதமற்ற சிதானந்த ரசத்தின் அபரித்தியானத்தால் எல்லாச் சிந்தனத்தால் சருவம் ஆன்மாவென்னும் ஞானத்தால், அநாத்ம மாயா நிவிருத்தியாம் என்றுணர்க, சுரநர திரியாக்காதிப் பிர பேதங்களிலும் ஆகா சாதிபேதங்களினும், சிதேகரச அத்வதீய தேவனே சொரூபன் தந்து காரணத்தன்மையானும் ஆனந்தந்தந்து போஷகத்தன்மையானும் விளக்கந்தந்து சாக்ஷித்தன்மையானும் பிரவிருத்திக்கின்றனன் என்று அபித்தியானத்தால் என்றுங் கொள்ளலாம், யோஜனத்தால் = காரியாகாரண சங்காத சாக்ஷிபூதயான் பிரஹ்மமாகவே யிருக்கின்றேன் என்றுண்டாம் ஞானத்தினாலே ஆன்மாவிற்குப் பிரஹ்மமத்தன்மையும் மாயாநீக்கமுமாமெனக் கண்டுகொள்க, தத்வபாவத்தால் = தேகவீழ்ச்சியின் பின்னபாதித சொரூப இருப்புண்மையின், துவைதமயல் அதன் மூல அவித்யாதி யேகித நிரதிசயானந்த மோக்ஷ புருஷார்த்த சொரூபப் பிரஹ்மதத்துவத்தின் றடையாய துவைதமயற்கும் அதன் மூல அவித்தைக்கும் வித்தையினாலே தாகமேவலால் முமுக்ஷுவிற்குச் சொரூபத் தன்மையானே ஆவிர்ப்பாவத்தால், மறுபடியும் அனுன்மா பிரமம் ஆன்மாவும் பிரஹ்மம் என்னும் புத்திகளால் இருமுறை நிவிருத்தி யுண்டானபோதினும், ஜீவன்முக்தப் பிராரப்த கருமபல க்ஷயமாய வீற்றில் விசுவமாயா நிவிருத்தியாம் = விபரீதப் பிரதீதியும் அதன்

காரணமாய விசுவமாயையின் நீக்கமுமாம், அடியேஙடும் நாசமாம், சமஸ்கார சேடமாய அவித்தை உடல் வீழவே நீங்கும் அதனால் அறிஞனுக்கும் அவிருத்த மாம் தேகயாத்திராதியரின் பொருட்டாம் விவகாரம், திருசியத் தன்மையாதி யேதுக்களினாலே துவைதத் திற்கு ஞானபாத யோக்கியத்தன்மை வடிவ மித்தியாத் வப் பிரசாதனத்தால், ஆன்மாவிற் கத்வய நிர்ணயத்தால், துவைதப்பற்று வாய்ந்த அபரமார்த்தத்தன்மைக் கற்ப னைக்கும், அதன் வேறது பூதமாய மாயைக்கும் த்ாகமாம் பூர்வம் மறுபடியும் பிரஹ்ம ஏகத்வ அபரோக்ஷத்தினாலே ஏகத்தன்மையை மறைக்கும் அவித்யாதமசி னாசமாம், அதன்பின் சுவ அசாதாரண அர்த்தக்கிரியா சமர்த்துத் தன்மையானே ஆகாசாதி த்வைதப் பிரமகற்பக மாயைக் குந் தாகமாம்; பிராரப்த கருமாந்தத்தில் துவைதப் பிரதி பாச மாத்திரநிர்வாக மாயாலேசத்திற்கும் அப்பிரதிபக்த சக்தி வித்தையினாலே நிவிருத்தியாம், இவ்வண்ணம் விசுவ மாயா நிவிருத்தி விதுஷனுக்குண்டாமென வறிக. மீள மீளவும் தியானஞ் செய்துகொண்டே யிருந்தால் எல்லா மாயையும் இருந்தவிடமே தெரியாம லோடிப்போய்விடும். இதுவும் வெகு ஜன்மசாத்தியமெனத் திருவாய்மலர்ந் தருளல்:—அநேகை: ஜன்மபிச்ச=வெகு பிறப்புகளினாலே ஏவம்=இவ்வண்ணம், மாம்ஞாத்வா=என்னை யறிந்து, தத முச்யதே=பின்பதனால் விடுபடுவன், ஞானத்தின் பொருட்டு வெகு முயற்சிசெய்யுத்தக்கது என்பது திருக் கருத்தாம். இதனை ஸ்ரீபார்த்தசாரதியும் திருவாய்மலர்ந் தருளி யுள்ளார்:—

விரிய வுணர்ந்த விழுப்பொரு ளெல்லா, மூரியவெ

னன்றி யிலாத வொழுக்கந், தெரிய வறிந்தெனை யேசெறி கிற்பா, னரிய னவன்பெறு தற்கயில் வேலோய்.

ஸ்ரீ ஈசுர கீதை: அடங்குமனனுய்ப் பயனென்றி லாசைப்படாதா னளவற்ற, விடங்கொள் வினைகள் செய் தானும் வீடேயெய்து மாதலினு, லுடம்பு காணுநல் யோகி யுண்டாம் வினையா லொருகாலு, மிடும்பை யடையா னுசைப்பா டில்லா னெனையே யடைந்திடுமால்.

தூர்வரு தொந்துவ மயக்கவை துடைத்துப், பெற்ற தொட பைந்தனருள் பேறுற நினைந்தே, யுற்றகரு மங் கள்வினை யென்னவுரை செய்யார், கற்றவர்கள் வீட தென வேகருது கின்றார்.

அற்றேல் இவ் வீசுர கீதையின்கண்

"காமர மெங்குங் காமரகன்றார் காசிக்கே, யாமர னுந் தத்தளவு மிருப்பாரங் காவி, போமள வுற்றார் போய் வரவுற்றார் புரையற்றோர், காமரை வென்றார் தாமரை வென்றார் கழல்கண்டே. எனவும்,

பொல்லாதவரும் அங்காவி போகிலென்னைவிடப் போகார், நல்லாரென்னை யடைவரென நவிலவேண்டுவது முண்டோ, வெல்லாவுயிர்க்கும் வீடளிப்பனென்றால் வினை யாலிரங்காத, வல்லாவகைகூடினு முயிர்விட்டகல்வா னல்ல னறிவுடையான்".

எனவுங் காணப் பெறுதலின் என்னை யுணர்ந்து விடு படுவான் என்றருளியது என்னை கொலோவெனின், உண் மையே, "காசீமரணுன் முக்திியென்னும் சுருதியுள்ளடங் கிய ஐந்தாம் வேற்றுமைக்குப் பிரயோஜகத்வ பரத்வ

உபவர்ணனம் பொருத்தமாமென் றுணர்க; அன்றுயிஞே ஆண்டும் காசிமரண விசிஷ்டமுக்தியின் பொருட்டுக் காசிமரணஹேதுத் தன்மைக்கு நிர்த்துஷ்டத்தன்மை யிருத்தலினுனே, அவ்வாறு உபவர்ணனம் அசங்கதமாய்விடும்;

அதனையே யறிந்து தானருஞ் சமுசாரமா, மிதனையே கடப்பா னிதரமா மார்க்கம், விதமதா யிலையாம் வீடு றற்பொருட்டே யென்னும்.

என்னுஞ் சுருதியினுலே தத்துவஞான த்திற்கு முத்தி சாமானியப் பொருட்டு ஹேதுத்தன்மை பிரதிபாதிக்கப் பெற்றதாம், அதுவும், காசிமரணத்திற்கு முத்திஹேதுத் தன்மையேலோ சம்பவியாதாம், காசிமரண ஜன்னிய முத்தியின் கண்ணே தத்துவ ஞானத்திற்குப் பிறழ்ச்சி யுறக்காதலின், ஆகலின் காசிமரணத்திற்கு முத்தியைப் பயக்குந் தன்மையிலதாம், மற்றே தத்துவஞான வாயிலாக முத்திப்பிரயோஜகத் தன்மையேயாம், எனச் சுருக்கமாக வுணர்ந்துகோடலாம். இதனுனேயன்றே ஆண்டேயிது வுணர்த்தப் பெற்றுளது:—

அறிவினில் பிறிதெல்லா மறிவெனு வறிவாகும், பெறவரி திதிலல்லாற் பிறிதினில் வெளிதில்லேன், பிறவியதறு ஞானம் பெறவரி ததனுலே, மறவிய துறுமாயா மயலல திலையெல்லாம்.

நின்மல மாகி நிரஞ்சன னாய்வே, றின்மைய தாய விகார மிதீமித், தொன்மைய தாகிய சூக்கும ஞான, மென்மல மில்லுரு வென்ப ரறிந்தோர்.

பேறுறுபரமானந்தமு மதுபெறுதாமும், வேறுறவறி கின்று ரவர்விழி மறைகின்றார், கூறறவுவிகாரங்கூடிய விறைதாமா, யூறறவுணர்கின்று ருண்மையை யுணர்கின்றார்.

பங்கமில்சீர் பரனுடையதாதித் தன்பான்மையினை
யிங்கொருவற் கறிவரியதாகிய தவ்வியத்தை
யெங்குமுளதாய்த் தம்பாலிலங்கிய பேரின்பத்தைத்
தங்களிலே நிலைபெற்ற சாந்தரடைந்திருப்பர்களால்.

மெய்த்தகவீடிது விமலமாய்ப்பரி
சுத்தமதாகி நிர்த்தொந்தமாயொரு
பெத்தமில் பிரமரூபத்திற் பேதியா
வுத்தமமெனது சாயுச்சமென்பரால்.

ஆதியுநடுவு மந்தமுமிலாததொன்
றேததுவெனிற் பரமீசனுனைநா
னீதியிலெனையறி நிமலநித்தனும்
பேதமிலெனைப் பெறும் பிறவியின்பெருன்.

இதனைப் பிரஹ்மகீதையிற்கண்ணும் காணலாம்:—

சிவனேயுள்ளான் பிறிதில்லையென்று திரமாயறிவதுவே
பவமேயொழிக்கும் பரமார்த்தம் பகருநெறிதானதுவாகு.
மவயேயிதனையொழிந்துலதாமவைதானிதனையடைதற்குத்
தவமேமுதலாஞ் சரிதைகளைச் சாற்றுகின்ற தன்மையவே.

இதுபோன்ற பல வுதாகரித்துக் கொள்க.

சிறிதுசிறிது புண்ணிய வளர்ச்சியேதுக்களாய் அநேக சதசகத்திர ஜன்மங்களின் முடிவான ஜன்மத்தில்—அங்

தச் சுகிருத விபாகரூபமானதில், பரம்பொருளே யாவு மென்னும் ஞானமுடையவன் அதனையே யடைவன்,

"இவையெலாந் திரமாய்ப் பிரமமேயாகும் பிரமமே யிவையாவும், ஆன்மாவேயிவையாவும், யாவும்யானிதுவும் பரம்பொருட்பொலிவே"

என்பதாதி சுருதி மிருதி சதப்பிரசித்த சருவான்ம நாட்டவடிவப் பஜனரூபப் பிரபத்தியைச் செய்வன். ஆக லின் அம்மகான்மா அபரிச்சின்னதிருஷ்டியன் மிகவுந் துர் லபன். அந்நால்வருட் பொதுவலன் ஞானியென்றறிக. முயற்சி மிகவும் செய்யவேண்டு மென்பதற் குதாகரணம் ஸ்ரீ ஞானவாசிஷ்டம்:—

இராகவ கேளிப்பவத்தி லென்று மெல்லா மியல்புறு நன்முயற்சியினு லியார்க்குமெய்து, மாகலைநன்றுன் முய ற்சி யொன்று மொன்றுவருநாலிலா முயற்சிமற் றிவற்றின், சோகமின்றால்வழிவீடா நூலிலாமை துன்பமாஞ்சை சுவ த்திற்றொடருமிந்நூன், மோகமினல்லோர் கூட்டங் குணங் களாலே முயற்சியுறு பெரியோர்க்கு முத்திபேறும்.

முற்பிறப்பின்வாதனையின் வயத்தினின்றேன் முயற்சி யிலே னென்செய்கேன் முனிவவென்ன, வற்புதனே தன் வருத்த முயற்சியாலே யடையலாம் பரமபத மயல்வேறி ன்று, சொற்புயில்வாதனைத் திரனின்பேதஞ் சொல்லிற் சுபமசுபமென விரண்டாஞ் சொன்னவற்றில், வற்புறுமுற்ப வந்தோறுந் தொடர்ந்துவந்த வாதனையே ததுவொன்றே மருவிநிற்கும்.

மிகமுயன்று வருந்தாமற் சமமாகின்ற வேண்டுகோ ளாற் றன்முயல்வால்விநோதந்தன்னுற், பகர்மனமாஞ் சிறு மகவை நிறுத்தல்வேண்டும் பலபிறப்பிற் பரிசயங்களிகலட் பண்ணி, யகல்சுபவாசனை யுதித்தான் முயற்சிபேருமையுற் னுஞ் சுபமுயல்வையது தீதல்லத், திகழ்மனம்போய்த் தற் பதத்தைத் தெளியுமட்டுந் தேசிகனாற் சொல்வழியிற் செல் லுவாயே.

ஒழிவறு முயற்சிதன்னு லூகத்தா லுயர்ந்த நூலா, விழிவறவியற்றுவோர்கட் கெப்பய ளெளிதினெய்தா, வழி படு நன்னூலாளர் வருபயன் கருத்தாச்செய்பி, லழிவற முற்றுமுற்றியளவறு பயனைநல்கும்.

பெருகியவித்துயர்களா லவசமாய்த் தன் பிதாமகனை மறந்து மிகப்பீடையுற்றுக், கருகிய விம்மனந்தன்னை யளாற் றிலானைக் கரையேற்றி விடுவதுபோற் கரையிலேற்றாய், வெருவுசராமரணமெனும் விடத்தால் வெந்துமிக நலந்தீங் கெனும் பகையான் மெலியுநெஞ்சுக், கருள்புரியா நரர் மனிதவடிவமான வரக்கரே யருள்வடிவமான வள்ளால்.

சனனமஞ்சினர்க் கவருடை முயற்சியேசரணுந், தினை மிங்கிவனு னெனுஞ் சிறுமைதான் சிதையி, லனகமாயுல கெங்குமாம் விசாலமுண்டாகு, மனனுறத் தனதுயர்ச்சி தான்காண் புறவருமால்.

சோகநன்மைதீமைகளைச் சூழ்வுற்றிருந்துஞ் சமமா கிப், பாகமின்றிக் கற்போலப் படிந்துநிற்பாய் பலபிறவி, மோகமகலு மவ்வளவு முயலுந் தனது முயற்சியினு, னக மனையாய் சுகதுக்க நடுவுள்ளது நீ நாடலையாய்,

இந்தவளவாந் தன்முயற்சியிடர்தீர்முடிவில் பதமளிக்குஞ், சிந்துகலைகணிறைமதிபோற் சீதவமுதேயுண்ணிறைய, வந்தவறிவன் சுகமடைவ னகிலவுலகின் பொருட்சார, முந்தவறிந்து செயற்செய்யாதவனும் முத்தியெய்திடுமே.

ஸ்ரீமத் பாகவதம்:—

மானுட வாக்கையென்னு மருவறுந் தோணிபெற்று, மூனமில் குரவன்சொல்லா மோடமுய்ப்பவனே டென்சீ, ரானதோ ரனுகூலக்கா லனுகவும் பிறவிவேலை, தாநொழி தர வெண்ணுதான் றன்னையே கொல்கின்றனே.

இறந்தொழிந்தது வெங்கூற்றமென்றுளத் துணர்ந் தார்போலு, மறந்தலை மணந்தசெங்கோ லவர்பா ரேழுங் காப்ப, நறுந்துழாய் கொண்டறாது நடந்ததாட் கமலப் போது, மறந்தனர் மாக்கள்வாளா வருபகற் கழிக்கின் றரே. 12

(அ - கை) ஞானநிஷ்டை ரகிதர்கள் காமனுவர்ன்க ளாயினும் என்னினு மன்னியம் பூசிப்பதற் கொன்றில்லாமையிற் அந்தவந்தத் தேவதாரூபமாய வென்னையே யஜிக்கின்றார்கள். என்றருளல்:—

சு. சுதெநூநாநாவியாநெவாநூஜநெதாநஜதெ
யயாயயாதிஂகூகூா ஸஜதெஶாஂ ஜநாவிஃ ॥

நாலுவகையாந் தேவர்களை நாடியயலோ ரருச்சிப்பா, ரானநெறியி லாங்கவரை யவர்களடைவ ரவ்வகையே, யீனமிலதாமதிப்பிரிந் திங்கெந்தவ்வகையிலேவர்கடாம், ஞானகனமா மென்னையே நயமாய்வாழ்த்தி வணங்குவரோ.

வி. அந்யே=ஞானிகளினும் அயலோர், நானுவிதாந் தேவாந்=சாத்விக இராஜச தாமசர்களாகிய இந்திராதிகளையும் இயக்கர் அரக்கராதிகளையும் பிரேத பூத கணுதிகளையும் அதிகாரத்திற்குத் தக்கபடி வாஞ்சையின் அனுசாரமாக, யஜந்தே=பஜிக்கின்றூர்கள், தாந்வ்ரஜந்தே=அவர்களை யவர்களடைவார்கள், அவர்களையே பூசித்துத்தத்தமாராத்தியர்களை அவ்வவ்வாராதகர்கள் அடைவோர்கள், அகிலோஜநஃ = எல்லா வதிகாரிகளும், யதாயதா = எவ்வாறு எவ்வாறு, மதிம்=புத்தியை, க்ருத்வா=செய்து, மாம்பஜதே=என்னைப்பஜிக்கின்றூர்களோ, சாத்விகமாகத் தான் இராஜசமாகத் தான் தாமசமாகத் தான் எவ்வெவ்வகையான காமத்தால் இரஞ்சிதமாய தந்திட நிச்சயத்தைச் செய்து, அகில ஜனங்களும் என்னையோ பஜிக்கின்றூர்கள் என்னினும் அன்னியமாய்ப் பஜிக்கத்தக்க தொன்றின்மையின். 13

(அ - கை) அதனுல் என்னுமெனி னருளல்:—

ஸ. தயா தயாஸ்ய தம்ஸாவம் பூரயாம்யஹமேவதம்
ஸஹம்ஸவம் விஜாநாமீமாம் நகஸ்சித்விபச்யதெ ॥

அந்தவகையி லவர்தமக்கிங் கவ்வப்பயனை யானே காண், முந்தித்தருவன் முழுதினையும் முற்றுமுணர்வன் யர்னேதான், எந்தவுயிரு மெனையறியு மியல்பையியையா தெனவுணர்நீ, விந்தைசெறியும் புயத்தோனே வீரவிறைவன் றிருவருளால்.

வி. அஸ்ய=இவ்வுயிருக்கு, ததா ததா=அந்தவந்த வகையானே, தம்தம்பாவம் அகமேவ பூரயாமி=என்னை

யாராதிப்பவருக்கு, அந்தவந்த மனோரதத்தை யுணர்ந்து யானே பூர்த்திசெய்வேன், இரண்டு தம்தம் என்னுஞ் சப்தங்களுந் தடையுற்று நின்றனவாயினும், தம்தம்மென வொன்றுபடுத்தித் ததா ததாவென்னும் வீப்சையின் அனுகுணப் பொருட்டு, வியாக்கியானிக்கத்தக்கனவாம், அகம் சர்வம் விஜாநாமி=யான் யாவற்றையு முணர்வேன், மாம் நகச்சித்விபுத்யதே=என்னை யெவரும் அறிவதிலர், அவ்விவ்வாராதகரி னபிப்பிராயத்தைச் சருவதேவதை வடிவமாயிருத்தலின் யானுணர்வேன், பேதப்பிரதான திருஷ்டியையுடைய எவ்வாராதகனும் அவ்வத் தேவதாரூபமான வென்னை யுணர்வதே கிடையாது. 14

(அ - கை) ஏன் உணர்வதே கிடையாதெனின் அருளல்:—

ச. அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் நவிது: காமமோஹிதா:
நாஹம் ப்ரகாஶதாம் யாமி ஸஜ்ஞாநாம் பாபகர்மணாம் ॥

வெளியதின்றி நின்றுமே விளங்கிடும் வெளியதாய்க், களியதாகுமென்னை வெய்யகாமமோகர் கண்டிலார், தெளிவிலாதபாவமிக்க தேர்விலாத மூடருக், கொளிர்வதாகி நின்றிலேனதென்று நீயுணர்ந்திடாய்.

வி. அவ்யக்தம்=அமூர்த்தமாயினும், சாதக அனுக்கிரகப் பொருட்டு அம்வம்மூர்த்தி பேதத்தானே, வ்யக்திம்=பூடத்தன்மையை, ஆபந்நம்=எல்லா மூர்த்திகளிடத்திலும் அனுகதமா யேய்ந்த ஒன்றேயாய என்னையும், மூர்த்தி பேதத்தானே யபகரிக்கப்பட்ட சித்தத்தால் நவிது:—உணர்ந்திடவே மாட்டார், மற்றே நானுத்

தன்மையையே யுணர்வார்கள், காமமோகிதா:—அத்தியந்தங் காமமோகிதர்கள், சாத்விக இராஜச தாமச காமங்களினுலே மோகிக்கப்பட்டவர்கள், அங்ஙனமன்றே சாத்விகர்கள் சுவர்க்க காமர்களாய் யஜிப்பார்கள், இராஜசர்கள் இகலோகத்திய சுககாமர்களாக யஜிப்பார்கள், தாமசர்களோ பரஹிம்சையாதி காமர்களாக யஜிப்பார்கள், காமித்தபடி அவ்வத் தேவதைகளைப் பஜிப்பார்கள் என்றபடி, ஆகையினுல் அத்தகையர்களுக்கு எனது ஞானம் மிகவும் துர்லபம் என்றருளல்:—பாபகர்மணும் அஞ்ஞாணும்—பாவகருமங்கள் மிகுந்த அறியாதவர்கட்கு, அகம் ப்ரகாசதாம் நயாமி=யான் விளங்கவே மாட்டேன்.

ஸ்ரீபகவானும் இச்சுலோகத் திரயங்களி னருத்தத்தை யருளி யுள்ளவர்:—

மற்றவருந்த மனங்களில் வைத்த, மற்றதிலே பறியுண்டறி வெல்லா, முற்றவை தந்திடு தெய்வ வொழுக்கா, னற்றவ நின்றவை நண்ணுவர் வேலோய்.

யாவனொருத்தன் யாதொரு தெய்வ, மேவவருச்சனை யன்பின் விளைப்பா,னுவல்சலிப்பறு மன்பவனுக்கே,யாவது முற்று மளித்திடுவேனுன்.

அளித்த வவ்வன்பொடு மத்தெய்வநாளுங், களித்து வணங்கினர் காதலவெல்லாம், வெளிப்பட முற்று மளித்திடுவேனு, னௌிப்பரிதாமுரு வஞ்சவுடன்றேய்.

சிந்தையினித் தெய்வ மெய்த் தெய்வமென்றே, முந்த வருச்சனைசெய்து முடிக்கு, மந்தமனத்தர் பெறும்பயன் வாளா, வந்தமுடைத்த நித்தமுமையா.

தானந்தமிலியு வமைதர நின்றுதாவரிய, வானந்த வுருமமென வெனையொன்று மறிவதிலர், கோனந்தன் மகனரசர் குலமைந்தனிவனுமெழி, லானந்தமிலி யொருவனிவனென்ப ரறிவிலிகள்

மருவுற்ற பிரகிருதி யதிலுற்ற மறைவனெழி, லொருவர்க்கு மறியும் வகைவெளி நிற்பதிலே யுலகில், வெருவுற்ற பெருமயலின் மனமுற்று விழிமறைய, வருவுற்ற வெனை யுலக மறிகிற்பதிலையடைய.

போனவை யினிமேற் புகுத நின்றவை யிப்பொழுது போகின்றவை யனைத்தும், யானறிந்திருப்ப னியாவுமா மென்னை யுலகின் மற்றியாவரு மறியார், மானவெஞ்சிலை யாய் வேண்டல் வேண்டாமை தன்னிலே வருகுண மயக் காற், றனமைந்துருவாய்ச் சனித்திடும்பொழுதே தந்த மெய்யறிவு சார்ந்திடலால்.

வியக்கமேன் முயன்ற நல்வினைமாந்தர் விரும்பல ராகி முன்செய்த, பயக்கமேவிய தீவினையெலா முறவே பற்றறப்பறிந்து முன்போனாற், றுயக்கமே புரியுஞ் சோகமேமுதலாந் துவந்துவ குணங்களிற் றொடர்ந்த மயக்கமே வலராயொழுக்கமே நிலைநின்றென்னையே மனத் திடைவைப்பார்.

ஈசுரகீதையின் மாட்டும் இதனைக் காணலாம்:—

என்பதத்தை விட்டிதர தேவதைகளைக் காமித், தின்பம் வேண்டினர்தாமு மிங்கிதனை யெய்துவரா, லன் பினு லருண்மூர்த்தி வேண்டிநர்களு மவர்பாற், பின்புவந் தெனையறிந்து நன்முத்தியே மெறுவார்.

ராமவலிந்தக் கடவுளருஞ் சாவில்லாதென், ருழமதா மென்றென்னை மொழிந்தார் தமைவிட்டன், பாமகவறிச் சுற்றமும் விட்டென்பா லன்பா, யாமரணுந்தத் தளவும்லிங் கத் தருச்சிப்பான்.

எந்தப்பதமுங் காதலிலாதே லிங்கத்தே, வந்திப்ப வன் ஞானுத்மகமாகி மயலற்றோன், சிந்தைக்குலதா யெங்குந்தானுஞ் சிவலிங்க, மந்தச் சனனந்தனிலே யறிவா லடைகின்றான்,

பங்கமில் பத்தியோடு மற்றெவரும் பாவனையா லிலிங்கத்தே, யிங்கெனையிறைஞ்சி லின்பமெய்ஞ்ஞான மெங் குமாமிலிங்க மெய்துவரா, லங்கியிற் புனலிலம்பரந்தன்னி லருக்கனி லனிலனிந்துவினி, லிங்கிவையிலிங்க மாரணுதி யிலே யெனை நினைந்திறைஞ் சிடப்படுவான்.

ஈதெலாம் வெறும் லிங்கமயமதா, மீதெலாமிலிங்கத்து ளிருப்பதா, மாதலாலந்த லிங்மெங்கே யங்கே, காதலாற் றொழுவே கடனுகுமால்.

கருத்திலா மூடர்காட்ட மாதிகளிற் காண்பர் கற்ற வர்களாகாயத், தருக்கனிற் புனலிற் காண்பராகுதியி லருச் சனை செய்யு மந்தணரவ், வெரிக்கணே காண்ப ரெங்கு மாய்நின்ற வெனது லிங்கத்தினை நேரே, யொருக்கிய பரம யோகிகளென்று மொழிவறக் காண்பர் தம்முளத்தே.

நீங்காத காதலினுன் மலபேர்த மப்யக்கு, மோங்கார மாதனுருத்திரியந் தாஞ்தல், பாங்காக வத்தியளவானுகிப் பரித்தவிடல், போங்காலத் தளவுநிரந்தர யேர்கம் புரிந் திடுவான்.

தேவதாந்தர பக்தாபேக்ஷயால், ஆர்த்தாதி பக்தத்தியர் மேலாவர், மற்றையர் பரம்பொருட் பக்தியை விடுத்துத் தேவதாந்தர பக்தியைச் செய்ய யாதுகாரணமெனின், இதுவாம், தங்களுடைய பிரகிருதியை முன்னிட்டு முன் பயின்ற வாதனையினாலே வசீகிருதர்களாய், அதனானே மோகன தம்பன ஆகர்ஷண வசீகரணமாரண உச்சாடன ஆதிவிடய, பகவற் சேவையினாற் கிடைக்க மாட்டாதென் றெண்ணப்பட்ட வபிலாஷைகளினால் அவ்வதற்கு வேண்டிய நியமங்களினால் விவேகமப்கரிக்கப்பட்டவர்களாய், பரம்பொருள் விமுகர்களாய், பூதப்பிரேத யக்ஷாதி க்ஷுத்திர தேவதைகளைச் சேவிப்பர், அந்தவந்தத் தேவதாராதனத்திற் பிரசித்த ஜபஉபவாசாதி ரூப அந்த வந்த நியமத்தை விரத விசேடத்தைப்பற்றிச் சேவிப்பரென்பதாம். அந்த வந்தத் தேவதைகளின் றிருவருளால் அவர்களுக்குப் பரம்பொருளிலேயே பக்தியேன் உண்டாக மாட்டாதெனின், ஆகாதாம் எவ்வெக்காமி எவ்வெத் தேவதா மூர்த்தியைப் பக்தி செய்கின்றானோ, தனுநிபந்தனமேயாம் அன்யதேவதா விவகாரம், ஜன்மாந்தர வாசனையினாலே யுண்டாய விசுவாசத்தோடு கூடியவனாய், அருச்சிக்க விச்சிக்கின்றனனோ, அவ்வக்காமிக்கு அவ்வம் மூர்த்தியின் பெர்ருட்டேயாய பூர்வ வாசனைப்பிராப்த பக்தியைத் திரமுடையதாக அந்தரியாமி செய்யும், அதனால் என்னுமெனின் இஃதாம்:—அந்தக்காமி அந்தச் சிரத்தையோடு கூடியவனாய் அந்தத் தேவதா மூர்த்தியின் ஆராதனத்தையாற்ற ஆசைப்படுவான், பின்னந்தத் தேவதா மூர்த்தியின் பிரசாதத்தால் இஷ்டார்த்தத்தையும் அடைவான், இவ்வண்ணமாயின்

பரமாத்மாவிற்குச் சருவகரும பலமீயுந் தன்மையானியா மென்னற்க, பரமான்மாவினாலேயே கொடுக்கப்பட்ட சகல காமங்களையுமே யடைகின்றான், இதன்கண்ணே ஸ்ரீ வை யாசிகநியாயமும் உளதாம்:—

பிரஹ்ம அதிரிக்தவஸ்துவின் நிடேதமாகவே பிரஹ் மத்திற்கு நிர்விசேஷத்தன்மையானே பலதாதுருத்தன்மை யாகாதெனல் ஆமெனில்; பலமிதனாற் கூடலின்—ஈண்டுப் பூர்வபக்ஷத்திற் றற்பதவாச்சியமாய பல தாதாவாமீசுரன் றன் அசித்தியாதலின் இலக்கிய அசித்தியாம், சித்தாந்தத் திலோ அதன் சித்தியாமெனப் பல பேதமாம் ஈண்டுச் சருவஜந்துகட்டும், கருமத்தினின்றே பலமுண்டாகின்றதா அல்லதென் னீசுரனினின்றாவென வையமுண்டாய வழி கருமத்தினின்றென்பது பூர்வபக்ஷமாம், சித்தாந்தமோ, இந்தப் பரமேசுரனினின்றும் பலம் சருவ ஜந்துக்கட்கும் பலிக்கயோக்கியமாம், கணிக கருமத்தினின்றும் பல அசம் பவத்தால், ஈசுரனுக்கே பலதாதுருத் தன்மைகூடலின் என்பதாம். சுருதத்தன்மையினாலும் "இம்மகானஜ மாமாத் துமாவே யம்மவன்னந்தரும் வசுதானனுமாம்" என வீசு ரனிடத்திற் பலவேதுத் தன்மைகேட்கப் பெறுதலினாலும், ஈசுரனே பல தாதாவாம். வினாதல், தருமம் ஜைமினியித னானே—எதனாற் சுருதியுபபத்திகளால் ஈசுரனைப்பலதாதா வாகச் சித்தாந்தி யெண்ணுகின்றானோ, அதனானேயே சுரு தியுபபத்திகளினால், தருமம் பலதாதாவென ஜைமினி யாசி ரியர் எண்ணுகின்றனர். அங்ஙனமன்றோ:—சுவர்க்க கா மன் யஜிக்கக்கடவன், என்னும் விதிவிஷய யாகத்திற்குச் சுவர்க்கசாதனத்தன்மை கேட்கப்பெறும் அதன் நிர்வா கப்பொருட்டுச் சுருதிப்பிராமாண்யத்தால் அபூர்வமெனப்

தேவதாந்தர பக்தாபேக்ஷையால், ஆர்த்தாதி பக்தத்தியர் மேலாவர், மற்றையர் பரம்பொருட் பக்தியை விடுத்துத் தேவதாந்தர பக்தியைச் செய்ய யாதுகாரணமெனின், இதுவாம், தங்களுடைய பிரகிருதியை முன்னிட்டு முன் பயின்ற வாதனையினாலே வசீகிருதர்களாய், அதனாலே மோகன தம்பன ஆகர்ஷண வசீகரணமாரண உச்சாடன ஆதிவிடய, பகவற் சேவையினாற் கிடைக்க மாட்டாதென் றெண்ணப்பட்ட வபிலாஷைகளினால் அவ்வதற்கு வேண்டிய நியமங்களினால் விவேகமபகரிக்கப்பட்டவர்களாய், பரம்பொருள் விமுகர்களாய், பூதப்பிரேத யக்ஷாதி க்ஷுத்திர தேவதைகளைச் சேவிப்பர், அந்தவந்த் தேவதாராதனத்திற் பிரசித்த ஜபஉபவாசாதிரூப அந்த வந்த நியமத்தை விரத விசேடத்தைப்பற்றிச் சேவிப்பரென்பதாம். அந்த வந்தத் தேவதைகளின் றிருவருளால் அவர்களுக்குப் பரம்பொருளிலேயே பக்தியேன் உண்டாக மாட்டாதெனின், ஆகாதாம் எவ்வெக்காமி எவ்வெத் தேவதா மூர்த்தியைப் பக்தி செய்கின்றானோ, தனுநிபந்தனமேயாம், அன்யதேவதா விவகாரம், ஜன்மாந்தர வாசனையினாலே யுண்டாய விசுவாசத்தோடு கூடியவனாய், அருச்சிக்க விச்சிக்கின்றனனோ, அவ்வக்காமிக்கு அவ்வம் மூர்த்தியின் பொருட்டேயாய பூர்வவாசனாப்பிராப்த பக்தியைத் திரமுடையதாக அந்தரியாமி செய்யும், அதனால் என்னுமெனின் இஃதாம்:—அந்தக்காமி அந்தச் சிரத்தையோடு கூடியவனாய் அந்தத் தேவதா மூர்த்தியின் ஆராதனத்தையாற்ற ஆசைப்படுவான், பின்னந்தத் தேவதா மூர்த்தியின் பிரசாதத்தால் இஷ்டார்த்தத்தையும் அடைவான், இவ்வண்ணமாயின்

'பரமாத்மாவிற்குச் சருவகரும பலமீயுந் தன்மையானியா மென்னற்க, பரமான்மாவினாலேயே கொடுக்கப்பட்ட சகல காமங்களையுமே யடைகின்றான், இதன்கண்ணே ஸ்ரீ ஷைவ யர்சிகநியாயமும் உளதாம்:—

பிரஹ்ம அதிரிக்தவஸ்துவின் நிடேதமாகவே பிரஹ் மத்திற்கு நிர்விசேஷத்தன்மையானே பலதாதுருத்தன்மை யாகாதெனல் ஆமெனில்; பலமிதனாற் கூடலின்—ஈண்டுப் பூர்வபக்ஷத்திற் றற்பதவாச்சியமாய பல தாதாவாமீசுரன் றன் அசித்தியாதலின் இலக்கிய அசித்தியாம், சித்தாந்தத் திலோ அதன் சித்தியாமெனப் பல பேதமாம் ஈண்டுச் சருவஜந்துகட்டும், கருமத்தினின்றே பலமுண்டாகின்றதா அல்லதென் னீசுரனினின்றாவென வையமுண்டாய வழி கருமத்தினின்றென்பது பூர்வபக்ஷமாம், சித்தாந்தமோ, இந்தப் பரமேசுரனினின்றும் பலம் சருவ ஜந்துக்கட்கும் பலிக்கயோக்கியமாம், கணிக கருமத்தினின்றும் பல அசம் பவத்தால், ஈசுரனுக்கே பலதாதுருத் தன்மைகூடலின் என்பதாம். சுருதத்தன்மையினாலும் "இம்மகானஜ மாமாத் துமாவே யம்மவன்னந்தரும் வசுதானனுமாம்" என வீசு ரனிடத்திற் பலவேதுத் தன்மைகேட்கப் பெறுதலினாலும், ஈசுரனே பல தாதாவாம். வினாதல், தருமம் ஜைமினியித னானே—எதனாற் சுருதியுபபத்திகளால் ஈசுரனைப்பலதாதா வாகச் சித்தாந்தி யெண்ணுகின்றானோ, அதனானேயே சுரு தியுபபத்திகளினால், தருமம் பலதாதாவென ஜைமினி யாசி ரியர் எண்ணுகின்றனர். அங்ஙனமன்றோ:—சுவர்க்க கா மன் யஜிக்கக்கடவன், என்னும் விதிவிஷய யாகத்திற்குச் சுவர்க்கசர்தன த்தன்மை கேட்கப்பெறும் அதன் நிர்வா கப் பொருட்டுச் சுருதிப்பிராமாண்யத்தால் அபூர்வமெனப்

பெயரிய வியாபாரம் யாகத்தின் உத்தராவஸ்தை ரூபம் கற்பிக்கத்தக்கதாம் என யாகாதி தருமமே பல தாதாவாம் சருவ சாதாரண வீசுரனுக்கு விசித்திர பல தாதுருத் தன்மை கூடாமையின். விடைதரல்:—பூர்வமோவாதராயணர் ஹேது வியபதேசத்தால்=ஒகாரம் சங்காநிராசார்த்தமாம், முன்மொழிந்த வீசுரன் பல தாதாவென வாதராயண வாசாரியரோ எண்ணுகின்றனர், கருமமேனும் அபூர்வமேனும், சுவஸ்வரூப சுவவிநியோக சாக்ஷாத்காரவானல் அதிஷ்டிதமாகத் தக்கதாம், அசேதனத் தன்மையால் மண்ணுதிபோலும், என்னும் அனுமானத்தாற் சம்பாவித அருத்தத்தில் சுருதிமிருதிகளைப் பிரமானித்தல்:— ஹேதுவியபதேசத்தாலென்பது, "இவனே நல்வினை யியற்றுவிக்கின்றான்" அன்னமுந்தருவன் றனமுந்தருவன் "என்னுஞ் சுருதியினும், காதலவெல்லாம் வெளிப்படமுற்றுமளித்திடுவேனன்" என்பதாதி மிருதியினும், ஈசுவரனுக்குத் தருமா தருமங்களிலும் அவற்றின் பலத்திலும் ஹேதுத்தன்மையானே குறிப்பிடல்காணப் பெறுதலின். எல்லாருக்கும் பரம்பொருளே பலந்தரின் ஆர்த்தாதிகட்கும் பிறருக்கும் பேதமியாது கொல்லெனின்? கேட்டி அன்னியதேவதை யன்பர்கட்குக் கிடைத்த மகத்தமமாய அந்தப் பிரயோஜனமும், அழிவுடையதாம், பரிச்சின்ன துச்ச தேவதைகளிடத்தில் புத்தியுடையவர்கள், ஆதலின், தேவபஜனையர் அழிவுறு தேவரையேயடைவர், இந்திராதயரோ பரிச்சின்னபோகர் அளவுறு காலத்தமர்பவர், ஆகலின் அவரை யுடைந்தவரு மவரோடுகூடவே யழிவர், ஆர்த்தாதியரோ அநந்தமாம் என்னையே யடைவர் என்னையடைந்தவர் மீளவும் பிறவார் எனவருளவும் பெறும்; முத்தியும்

போகமும் சத்தியம் பெறுவர் வெப்பசாந்தியின்பொருட்டு ஸ்ரீ கங்கையில் மூழ்கினோன் தான்விரும்பிய தாபசாந்தியையும் விரும்பாத பாவனத்தையும் அடைவன் எதனாலெனின், முழுகுங் கங்கைநீரியற்கையால், அதுபோல் ஆர்த்தி பரிகாராதி காமனையாற் பரமான்மாவைப் பஜிப்பவர், தாங்கள் விரும்பிய காமங்களையும் பரம்பொருட் பஜனை மாகான்மியத்தால், உளதாய மறுபிறவியின்றிய வடிவ பரமான்மப் பிராப்தியாம் மோக்ஷத்தையும் அடைவர்; ஆகையால் இருவரும் விலக்கணரேயாவர் இங்ஙனம் பிரயாசம்சமானமாயிருந்தும் பல விசேஷம் மகத்தாயிருந்தும் பரம்பொருளை யநாதரஞ்செய்து தேவதாந்தரத்தைப் போற்றுதல் விசித்திரமேயாம், இதற்குமுன் வெளிப்படாமல் இப்போது உலக புண்ணியவசத்தால் வெளிப்பட்டிருக்கும் விநாயகனு மென்னைப் பொதுவதாக மூடர் கருதுவர், விவேக சூனியர்; ஜகத்காரணபூதமாய்ச் சருவோத்கிருஷ்டமாய் நித்தியமாயுள்ள எனது சொரூபத்தை யறியாதவராய், காரியங்கண்டு சாமானியமாகவே கருதாநிற்பர், ஆகலின் பரம ஈசுவரனாகிய என்னையொழிந்து தேவதாந்தரத்தைப் போற்றுவர் அதனாற்றான் அந்தவற்பலத்தை யடையாநிற்பர், அவதரித்தது தொடங்கி மற்ற தெய்வங்களாலியற்றமுடியாத அதியற்புத விவித திவ்யசரித்திர சாலியாய தேவரீரிடத்தில் எங்ஙனம் இதர தேவசாதாரணபுத்திகூடல் தேவரீரது ஒவ்வொரு விசித்திர சரித்திரமும் அப்பிராகிருத திவ்ய தெய்வத்தன்மையை எனின், யான் எல்லாவுலகிற்கும் என்றன் வடிவுத்தானே பிரகடமாவதில்லை, எனது சில பக்தர்கட்கு மாத்திரமே விளங்காநிற்பேன், தியானரூபு எனது சங்கற்பவசவர்த்தினியாய என்னன்ப

ணினுமிதரன் என்னை யறியாதொழிக என்னும் சங்கற்பாதீனமாய மாயையினால், மறைபெற்றவனாயிருப்பேன், ஆகலின் மூடன் அந்நால்வரினும் விலக்ஷணன், ஞானகாரணமிருந்தபோதினும் அஜமாயவ்யமாய் அநாதியா யநந்தமாய்ப் பரமேசுரனாயிருக்குமென்னை உணர்ந்திடமாட்டான், மற்றோ தெய்வசாதாரணமாகவே காண்பன், சென்றன நின்றனவருவன வென்னும் காலத்திரய வர்த்தினியாய ஸ்தாவர ஜங்கம சருவபூதங்களையும் நானறிந்திருப்பன், என்னையோ ஒருவருமறியார், இது உலகத்திலும் பிரசித்தமேயாம் மாயாவியாய இந்திரஜாலக்காரன் உலகரை மயக்கியவர் யாவரையுந் தானறிவன், உலகராலோ தானறியப்பெறான், அங்ஙனம் சர்வ ஜகன்மோககனாய் மகாமாயாவியாய் யானு மிருப்பேனென்பதாம். மாயையைப்போலத் துவந்துவமோகமும், தத்துவஞானத்தடையேயாம், இச்சாத்வேஷ அனுகூலப் பிரதிகூல விடயங்களினால், கிலம்பிய சீதோஷ்ணாதி துவந்துவப் பெயரிய மோகத்தினால், சர்வ பூதங்களும் ஜன்மகாலத்திலேயே சம்மோகத்தை யுடைகின்றனவாம், குணமய சுகதுக்காதி துவந்துவங்களில்பூர்வ ஜன்மத்தில் எவ்விடய விச்சை துவேடங்கள் பயின்றனவாமோ அவ்வாசனையான் மீண்டுஞ் சன்மகாலத்திலேயே துவந்துவமெனப் பெயரிய இச்சாத் துவேட விடயத்தன்மையானே கிளம்பிய அதேமோகனம் பூதங்கட்காம், அம்மோகத்தானே சருவபூதங்களும் சம்மோகத்தையடையும், அவ்விடய இச்சாத்துவேட வியற்கையுடையனவேயாம், பகலற் சையோக வியோக சுகதுக்கமுடைய வியற்கையனவாகாவாம், ஆகலின் பகவானைப் பஜிப்பன்வு மல்லவாம். 15

(அ - கை) காமமோகிதர் தேவரீரைப் பஜிக்கின்றிலர் தேவரீரும் அவர்கட்குப் பிரகாசமாகின்றிலீர், ஆயின் அவர்கட்கென்னே கதியெனின்? உரைத்தருளல்:—

சு. யஃஸ்ம்ருத்வா த்யஜதி ப்ராணாநந்தே மாம் ச்ரத்தயாந்விதஃ
ஸயாத்யபுநராவ்ருத்திம் ப்ரஸாதாந்மே நரேச்வர ||

எண்ணியேவன் பிராணனை யென்னையே, திண்ணமீற்றில்விடுவன் சிரத்தையாய், அண்ணலாமவனுதல் பிறப்பினி, னண்ணிடானிறையே நம்மருளினால்.

வி. ஹே பூபுஜ=புவனங்காப்போய்! எவ்வாறரசனவ்வாறுயிர்கள் என்னும் நியாயத்தானே நீயெமது சிந்தனைபரனுகவே சகல லோகர்களும் உன்போன்றே யாவர், எனக் குறிப்பித்தருளி விளித்ததாம், யஃ=யாவன், மாம் என்னை ஸ்மிருத்வா=நினைந்து, ப்ராணம்=உயிரை, அந்தே=ஈற்றினில், த்யஜதி=விடுவன், சிரத்தயாந்விதஃ=சிரத்தையோடுகூடினவனுகி, மம=என்னுடைய, ப்ரசாதாத்—திருவருளினால், அபுநராவ்ருத்திம்=மறுபிறவியின்மையை, ஸ்யாதி=அவனடைவன், நிரந்தரம் எமது ஸ்மரணம் அவ்வாறு செய்குக, எங்ஙனந் திடதர சமஸ்காரத்தால் அந்தகாலத்திலும் சிரத்தாபூர்வகமாக எமது ஸ்மரணம் ஆமோ அதனுனே ஈற்றின்மதிதான் கதியாவதுதான் என்னும் வசனத்தால், அவன் எம்வடிவாயினவனாய் மீண்டுஞ் சமுசாரத்தைச் சேவியான், ஆகையால் எமது நினைப்பே யவர்களாலின்றியமையாது செய்யத்தக்கதாம், இவ்வண்ணமே யவர்கட்கு முத்தியுபாயம் என்றுணர்க. 16

(அ - கை) இந்த நியாயமே தேவதாந்தரத் தியானத்துஞ் சமானம் என்றருளல்:—

௬. யம்யம் தேவம் ஸ்மரந் பக்த்யா த்யஜதி ஸ்வம் கலேவரம்
தத்தத் ஸாலோக்யமாயாதி தத்தத் பக்த்யா நரோத்தம ॥

எவ்வெத்தேவரை யெண்ணிமெய்யன்பிஞல், வெவ்வித்தேகத்தை விடுவன்வீரனே, யவ்வத்தேவருலகை யடையுமா, லவ்வவ்வன்பினி னென்பதுமையமோ,

வி. யம்யம் தேவம்=எந்த எந்தத் தேவனை, பக்த்யா ஸ்மரந்=அன்போடும் நினைந்து, ஸ்வம்=தனது, கலேவரம்=காயத்தை, த்யஜதி=விடுவானே, ஹே நரோத்தம=ஹே புருஷோத்தமனே தத்தத்ஸாலோக்யம் ஆயாதி=அந்த அந்தச் சாலோக்கிய பதவியை அடையாநிற்பன், தத்தத்பக்த்யா=அவ்வவ்வன்பிஞல்; எந்த எந்த விஷ்ணு ருத்திர கௌரி கணேச சூரிய தேவனைபேனும், பற்றிய அன்போடுங்கூட அந்தத்தில் தனது களேவரத்தைத் தியாகிப்பானே, அந்த அந்தத் தேவனுடைய சாலோக்கியத்தை= சமான லோகவாசத்தை யடைவன், சாலோக்கிய மென்பது உபலக்கணமாம், பாவனைத்தாரதம்மியத்தால், சாமீப்ய சாரூப்ய சாயுஜ்ய அடைவுங்கூடலின், கேவலமிவர்கள் தேவதா ஸ்மரணத்திஞலேயே அந்த அந்த சாலோக்யாதிகளை யடைகின்றூர்கள். என்பதாக விலதாம், மற்றே, எப்பொருளையேனும் பிரீதியால் நினைத்துக்கொண்டு இக்கலேவரத்தைவிடில் அச் சாரூப்பியத்தையும் அடைதல் கூடும், பரதன் மானைமரித்துக்கொண் டுயிரைவிட்டு மான் றன்மையையே யடைந்ததுபோல்வாம், அவ்வாறு நீ ரூபாதிபரஞகவேண்டாம், என்பதாகக் குறிப்பித்துச் சம்போதித் தருளியதாம் வீரனே யென்றருளியது.

(அ - கை) பாவனுவிதான சாத்திரத்தையுபசங்கரித் தருளல்:—

சு. அதஶ்சாஹநிஶம்ஸம்பூப ஸ்மர்த்தவ்யோ நேக ரூபவாந் ஸர்வேஷாமபி ஸர்வேஷாம் ஸ்ரோதஸாமர்ணவோ யதா ॥

ஆதலா லிரவும் பகலன்பனே
சாதியா னினைதக் கவன் பல்லுரு
வேதமோ தெவர்க்கு மடைவே னியான்
ஓதம்புக்க நதிகளுக் கொப்பவே.

வி. அதஃச=ஆகையினுலேயும், அகர்நிசம் = இரவும் பகலும், பூப=பூமியை இரக்ஷிப்பவனே! சப்த பூமியையும் இரக்ஷிக்கும் குறிப்பாமிது, ஸ்மர்த்தவ்யஃ=ஸ்மரிக்கத்தக்கவன், அநேக ரூபவான்=அநேக உருவமுடையவன், சர்வேஷாமபி = யாவருக்கும், அகம் = யான், கம்யஃ=அடையத்தக்கவன், ஸ்ரோதசாம்=நதிகளுக்கு, அர்ணவஃ=சமுத்திரம், யதா=எங்ஙனம்; எக்காரணத்தால் நினைப்பவன் நினைப்பிற்கு விடயமாய தேவதா சாலோக்யாதியை அடைவனே அக்காரணத்தினுல், உம்மையால் பக்தியுக்தனுங் கொள்ளவேண்டும், எப்போதும் ஹே மன்னவனே! பல்லுருவுடையன் யானுயினும், ஏதாவது ஒரு சிறிது ரூபத்தை கொண்டு நினைக்கத்தக்கவனியான், அன்னிய தேவதா சீரூப்ய வாயிலாயும் நதீ சமுத்திர நியாயத்தால் யானே யெவருக்கும் அடையத் தக்கவனுவேன் என்பதாம். இதுபோன்றே ஸ்ரீ பகவான் கண்ணபிரானும் திருவீருள் செய்துளார்.

எஞ்சு தலையிலதி யெச்சமாகின்றே ஞனிறகுங்கால், நெஞ்சுகவரும் நெறிகளெலாமடைத்து நினையப்படுவதுநா, னஞ்சுபுலனும் பொறியைந்துமடக்கி யறிவென்பாலதாய்த், துஞ்சுமவர்க ளெனையடைவா ரெவ்வாறென்னிற் சொல்லக் கேள்.

இந்தவுடலம் விடும்பொழு தியாவன்யாதொன் றினை நினைந்தா, னந்தவள வேயந்தப் பாவனையா லதனையடை யுமா, லென்றனியல்பே யெப்பொழுது மிதயத்திடை கொண் டென்பாலாஞ், சிந்தையொடும் வாளமர்தொடங்கி லத ஞலெனையே சேருதியால்.

அந்த் காலத்திற் பரமான்மாவை நினைந்து களே வரத்தை விட்டு யாவன் செல்வனே அவன் பரம்பொ ருளையே யடைவன், இதனை ஸ்ரீ பகவானே யருளியுள் ளார்:—

ஈனமதடையா ரித்தையடைந்தவ ரிறக்கும்போ
தேனுமீத்தடைவா ரென்னையெய்துவார் பிறவியெய்தார்.

இந்தப் பிரஹ்மவித்தையானது பன்முறை யுபதேசிக் கப்பெற்றதே யாகும், இதனது பலமியாது கொலாமாலோ வெனின் இந்தப் பிராஹ்மீஸ்திதியை யடைந்து சமுசார அநர்த்த ஹேதுவாய மோகத்தையுடையான், இதனை யிது வரையும் அடையாதவன் என்ன செய்வதெனின், மரண காலத்திலும் இந்தப் பிரஹ்ம நிஷ்டையின்கண்ணிருந்து பிரஹ்மரூப மோக்ஷத்தை யடையாநிற்பன், இப்போது கிடையாவிடினும் தத்துவஞானம் ஈசுவர ஆராதன மனன நிதித்தியாசன பரிபக்குவமானவனுக்கு அந்தியசமயத்திற்

கிடைத்தல் கூடும், இதனை ஸ்ரீ விசாசபகவானது திருக்குமாரரே யருளியுள்ளார்:—

கழிபுகழ் கட்டுவாங்கனென் றுரைப்போன் கடவுளர் சொல்லினுள்ளாவி, யொழிவதற் கிரண்டுகன்னலுண் டினியென் றுணர்ந்தன னனைத்தும்விட் டொருவி, யழலவிர் மணிச்சூட் டரவினின்றுடு மமலனை நினைத்துவீடுற்று, னெழுபகல்கிடந்த வுனக்குமற்றெண்ணி லென்னைகொல் பெறுவதற் கரிதோ.

ஞானமார்க்கமானது இத்தகைய உயர்ந்ததென்று தெரிந்துகொள்ளல் வேண்டும், மரணகாலத்தில் எல்லாக் கருவி கரணங்களும் இருண்டு கலங்கவே நினைவு கூடா தெனினும் மற்றெப்போதுமே சிந்தித்துக்கொண்டிருந்தால் அப்போதும் அப்பழக்கம் போகாமல் வந்துசேரும் திருவருளால், நிரந்தர பகவதநுசிந்தன அப்பியாசவாசனையே பெருகவேண்டும், பெருகினால் முத்தியே பெறலாம். மரணகாலம் பரவசகால மென்பதற்கும் அப்போதுந் திருவருள் செய்யும் அன்பற்குக் கடவுள் என்பதற்கும் உதாகரணங்கள்:—

குறுந்திரட்டு: பரணமாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதங் கையிற்றந்த, விரணமானவை கொண்டிட விவரைவிட் டியம்பிடா திவணேகும், மரணவேதனை யாவராலறியலாம் மயங்கியைம் புலனந்தக், கரணமியாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான்.

சிவதருமோத்தரம் 'தனத்தினை மனைதனைத் தானியந் தனை, நினைத்தினி யெவரனுப்பர் நீங்குநா, ளெனக்கிவை

யின்னிய மாகுமேயெறு, மனத்துயர் மலியவே மாயு மாவியே.

மெய்ஞ்ஞான விளக்கம்: வந்திடு மரணத்துன்ப மறித் துரை செய்யப்போமோ, வுந்திமே லையும்பித்து முண்ணர் வொடு பொறிகலங்கி, நந்திடா விருளேமுடி நாவுலர்ந் தல மாந் தென்னே, யிந்தமா விறப்பிற்றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே.

திருக்கடைக்காப்பு: புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி யறிவழிந்திட் டைம்மெலுந்தி, யலமந்தபோ தாக வஞ்சே லென்றருள் செய்வா னமருங்கோயில், வலம்வந்து மடவார்க ளடமாட முழவதிர மழையென் றஞ்சிச், சில மந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே.

வைராக்கிய சதகம்: நெஞ்சமே யுடலந்த மாதியை விடார்நிற்க ழற்றையர்க் கெல்லாம், வெஞ்சமற் குதிப்பரி திவைக்கொரு மிருகண்டு புத்திரன் சான்று, லஞ்சலிவ் வுடற்கிறுதி யிப்பொழு தெனவறி யொணுமையி னாலும், தஞ்சமென் றரன்சரண் விடேல்யாமு மச்சமன்வலி தடுப் பாமே.

பெருந்திரட்டு: வில்விளங்கிய விண்ணவர் மிகுத்த வாழ் நாளும், அல்லரும் பகலென்னுமீர் வாளினலறிந்து, கொல்லும் வெங்கொடுங் கூற்றையார் குலைவுறார் குறுகி, னல்விருந்தென வுவந்தெதிர் கொள்ளுவான் ஞானி.

திருவள்ளுவர்: வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டுமி டும்மையில.

முன்மொழிந்த தோற்றத்தானே "எறிவரும் பிணி மூப் பிறப்பொடு பிறப்பென்றிவை கெடுத்திடல் பொருட்

டாக, குறிவரும் பரிசுநினைத்து மற்றெனையே கூடுதன் மேவிநின் றவர்க, ளறிவரும் பிரமந்தன்னையு மதனையறியு மெய் யறிவைமறிவி, னெறிவருங்கரும மனைத்தையுமறிவ ரறிந்தபின் னிகழ்வதுங் கேளாய்.

தேடும் பழையவழி தெய்வத்தோ டதிமெச்சங், கூடும் பரிசுநின்ற வெனையறிவா ரிந்தப் புழுக்கூடு, விடும் பொழுதுமெனை மெய்யயேறிவா ரென்றுன்யாம் வெவ்வே, றுடும்பழைய மாயக்கூத் தாட்டுவிக்குமம் மாயன்"

என அந்த காலீன பகவத்தனுசந்தான ஹேதுத்தன் மையானே ஸ்ரீமத் பகவற்கீதையில் அருளியபடியாய சாதிபூதாதி தைவ பகவத்பஜன பக்ஷத்திலும் பக்ஷாந் தரம் காட்டப் பெற்றதாமென் றுணர்க. அதிபூதாதி நியாமகத்வாம்ச பரித்தியாகத்தானே கேவலம் பரம் பொருளையே நன்கு சிந்திக்கவேண்டு மென்பதாம். பிர சங்கத்தால் விளம்பியதை விளக்கி மேற்செல்வாம்:—எல் லாப் பிராணிகளும் துவந்துவ மோகபீடிதர்களாய்ப் பக வானைப் பஜியார்கள் என்றால் பின்னர் யாவர்தாம் பஜிப் பவர்கள் எனின் உண்மையே, அநேக ஜன்மங்களிற் சம்பா தித்த புண்ணியபுஞ்ச எச்சனங்கட்குத்தாம், அப்புண்ணிய மகிமையானே பிரஹ்மஞானப் பிரதிபந்தகம்பாவம் நட்ட மடைந்ததாமோ, அவர்கள் முன்மொழிந்த துவந்துவ மோகத்தானே விடுபட்டவராயத்தனே திடவசல விரத நியமங்களை யுடையவர்களாய், பகவானே பஜிக்கத்தக்க வன் அவனும் இத்தகைய் ரூபனே யென்னும் துணிபுடைய வர்களாய்ப் பகவானையே பஜிப்பார்கள், இவர்களே மூன் றென்கு வகையர்கள் எனப் பெற்றார்கள் இவர்களே புண

ணியவான்கள், பாவிகண் மோகமடைவா ரெனினும் புண்ணியவான்கள் பஜிப்பார்க ளன்றே. இதனது பலம் என்னை கொலாமலோ வெனின், இதுவாம்:—ஜராமரணாதி சருவதுக்க நீக்கப்பொருட்டு அதற்கு முக்கியகாரணமாய பரமேசுரனைப்பற்றி யாவர் முயன்று பஜிப்பாரோ அவர் மனத்தூய்மையானே அந் நிர்க்குண தற்பதலக்ஷியப் பிரஹ்மத்தை யுணர்வார்கள், அவ்வாறே அத்தியாத்மத்தையும்=ஆன்மாவென்னுந் தேகம்பற்றி நிகழும் முழுக் காரியகாரண சங்காத சகித துவம்பத இலக்ஷியத்தையுமுணர்வார்கள், அவ்வாறே தத்துவம் பதார்த்த ஐக்கிய ஞான சாதனமாய யாகதான தவச்சிரவண மனனாதி சகல கருமங்களும் அனுஷ்டித்தவர்களே யாவார்கள். இவ்வித பகவத்பக்தர்கட்கு அந்தகாலத்தில் மறதியுண்டாகமாட்டாதோ வெனின் உண்டாகாதாம், அதிபூத அதிதைவ அதியஞ்ஞங்களோடு கூடிய பகவானை யாவர் சிந்திக்கின்றனரோ அவர் எப்போதும் பகவானிடத்திலொருமையுடைய சித்தராய் அச்சமக்கார பாடவத்தால் மரணசமயத்திலும், முன்மொழிந்தபடி சகல கரணவியாகுலீ பாவத்தால் ஞானேதயங் கூடாத அந்த காலத்திலும் சர்வான்மாவாய பகவானைச் சிந்திப்பர்; பகவதாகாரமாகவே சித்தவிருத்தி பகவத்கிருபையினாலே யவர்களுக்குண்டாமென யோகப்பிரம்ச சங்கையேயிலதாம். இதன்கண் வினவும் விடையும்:—வருமாறு.

அடைய ஞாலத்தையார்த்ததிலார்ப்புறு, திடையர் தாம்பிடையார்ப்ப விருப்பவ, னுடைய னுகமுன்போகினவேகொட்வ, விடையனனவன் மீள வியம்புவான்.

ஆய பிரமத்தொடத்தி யாத்மமமை கரும, மேயவ்தி பூதயதிதெய்வமதி யெச்சங், காயமதிலுள்ள பரிசுங் கெழு முகாயம், வியலுறு போழ்தினுனே மெய்தெளியுமாறும்.

விரியவுரை செய்தருள வேண்டுமென மீண்டவ், வரிய ரவி லேதுயிலு மாயவ னுரைப்பா, னரியதழி யூரமைடைய தனைத்தினு முரைக்கிற், பெரியது மொழிந்தபிரமம் பிறவு நீகேள்.

அந்தக் கரணங்களி னின்றவறி வத்தியாத்ம மாவ துதா, னிந்தப் பிறவிதனை யாக்குமி யாகங்கரும மென்ப துதா, னந்தற்கமைந்த வுடம்புதனை நானெனன்கின்ற அதி பூதம், பந்தப்படுமிவ்வுடற்கமைந்தபுருடன் றெய்வமெனப் படுவான்.

இருவகையிலும் பிரஹ்மபதப் பிரயோகத்தானே அந்தப் பிரஹ்மமென் சவிசேஷமா நிர்விசேஷமா? இவ் வண்ணம் அத்தியாத்மம் என்பதென்? ஆன்மாவென்னுந் தேகத்தைப்பற்றி யிருக்கும் என்பதாக அத்யாத்ம சப்த வாச்சிய ஜீவனுக்கும், சக்ஷுராதி யிந்திரியக் கூட்டத்திற் கும், சருவவிதிதத்தன்மையானே அதன் வேதனத்திற் குப் பகவத்பஜன பலப்பான்மைக்கூற்றுக் கூடாமையின் ஈண்டத்தியாத்ம சப்தவாச்சியம் வஸ்து யாது? இவ்வண் ணம் கருமமென்பதென்? கிருஷிவாணிஜ்யாதி லௌகிக வேதனத்திற்குப் பஜனபலத்தன்மை கூடாமையின், எத் தகைய கருமம் விளம்ப விழைந்ததாமோ? அதிபூத அதி தைவாதி யஞ்ஞசகித மகவத்சிந்தகர்கட்கு அந்தியகாலத் திற் பகவத் ஸ்மரணங் கூறப்பெற்றது ஆண்டீதி பூதாதி சப்தவாச்சியமென்? அதியஞ்ஞமியாது எங்ஙனந்தான்

அதற்கு அதியஞ்ஞத்தன்மையாதல், அந்த அதியஞ்ஞமும் யாண்டிருக்கும், வெளித்தேசத்திலா? இத்தேகத்திலேயா? மரணகாலத்திற் சகலேந்திரியக் கலக்கத்தான் மனச்சமாதானமின்மையி னெங்ஙனம் அக்கால் சமாகிதசித்தர்களாலறிதல்கூடும்? ஆகலினக்காற்பகவத்துணர்ச்சி பொருந்தாதுபோலத் தோற்றுகின்றது அதுவும் கூறவேண்டியதேயாகும்? என்றிவ்வண்ணங் கிளம்பிய ஏழுவினக்கட்கும் முறையே விடைவருமாறு:—விநாசமின்மையினனும் யாவற்றையும் விலயம் செய்து கொள்ளுதலானும் யாவற்றையும் வியாபித்து நிற்றலானும் அக்ஷரமென்னப் பெறும் பிரஹ்மமே யீண்டுப் பிரஹ்மமெனக்கூற விழைந்ததாம், சவிசேஷப் பிரஹ்மத்திற்கு அவ்வுருவத்தானே அவிநாசித்தன்மை வியாபித்தன்மைகளின்மையின் அதன் விலக்காம், அதற்கும் சொரூபமாக நித்தியத்வ வியாபித்வ மிருத்தலின் பிரணவித்திலும் அக்ஷரசப்தத்திற்கு ரூடத்தன்மையானே யோகத்தினும் ரூடம் வலுவாதலின் சவிசேடப் பிரஹ்மமாதல் பிரணவமாதல் ஈண்டக் கரமென்னுஞ் சங்கையுண்டாம்; அதனையகற்றப் பரமமக்ஷரமெனப் பெறும் மேன்மையும் நிரதிசய மகத்துவரூபமாம், அதுவு மீண்டுச் சங்கோசகாபாவ நியாயத்தானே திரிவிதபரிச்சேதராகித்தியத்திலேயே, எஞ்சுவதாகி நிர்விசேஷப் பிரஹ்மத்தையேயுணர்த்தும், உணர்த்தவே, காணமுடியாதது கவரமுடியாதது என்னு மிவ்வதனைக்கார்க்கியே யக்ஷரமெனப் பிரஹ்மவித்துக்கள் கூறுவர், தூலமற்றது அணுவற்றது குறுகலற்லது; அக்ஷரமம்பராந்த திருதியின் என்பதாதி சுருதிநியாயப் பிரசித்தமாய் நிர்விசேட அத்வைத சித்தாநந்தரூபப் பரம்பிரஹ்மமே யக்ஷரமென்பது கருத்தாம், சுருதி

ரப்பொருள் :—ஈண்டுப் பூர்வபக்ஷத்தில் ஓங்காரரூப அக்ஷர உபாஸ்தியாம், சித்தாந்தத்திற் பிரஹ்மஞானமெனப் பல பேதமாம், பிருஹதாரண்யகத்திற் கார்க்கியின்பொருட்டு யாஞ்ஞவற்கியர் கூறுதல்:—இவ்வவ்வக்ஷரத்தைத் தான் கார்க்கி பிராஹ்மணர் அஸ்தூலமெனக் கூறுவர் என்பதாதி. ஆண்டென்னக்ஷரசப்தத்தால், வர்ணங் கூறப்பெறுகின்றதா அல்லது பிரஹ்மமாவென வையமுண்டாகிய வழி வர்ணமென்பது பூர்வபக்ஷம், சித்தாந்தமோ, கெடாத அக்ஷரப்பிரஹ்மமேயாம், என்னை, அம்பராந்ததிருதியின் = இவ்வக்ஷரத்திலேதான் கார்க்கி ஆகாசம் குறுக்கும் நெடுக்குமாம், எனப் பிருதிவியாதி ஆகாசாந்த விகாரக் கூட்டத்திற்குத்தாரணத்தான் என்பதாம். அற்றேல் அம்பராந்த தாரணம் பிரதானத்திலும் சம்பவிக்கின்றதெனக் கடாவி விடையளித்தல்:—அதுவும் பிரசாசனத்தால் = அந்தத் திருதியும் பரமேசுரனதே கருமமாம், அன்னியவசேதனத்ததல்லவாம், என்னை பிரசாசனத்தால்=இவ்வக்ஷரத்தின் எழிலாமாணையில் அவ்விரவி சந்திர னமைக்கப்பெற்றிருக்கும் என்பதாதியானே பிரசாசனங் கேட்கப்பெறுதலின், பிரதானாதி நிராசவாயிலாகப் பிரஹ்மோபாதனத்தில் காரணாந்தரங்கழறல்:—அன்னியபாவ வியாவிருத்தியினானும்= அன்னியப்பிரதானாதிகளின் பாவம்=தருமம், அன்னியபாவமாம், அதன் விலக்கலான், "அதுதா னிவ்வக்ஷரங் கார்க்கி அதிருஷ்டம் திருஷ்டரு" என்பதாதி யதன் விபரீததரும சிரவணத்தால் பிரதானாதி யக்ஷரமலவாம், மற்றுே பிரஹ்மமேயெனத் துணியப்பெறும். ஈண்டிதற் கநுகூலமாகப் பிரஹ்மகீதை ஈசுரகீதைகளையும் உதாகரித்துக் கொள்ளலாம்:—

அங்கமாறினையும் வேதநாலுடனே யறியினு மனன மில்லவனுக், கெங்கு மெப்பொழுதும் பயத்தினுக் கேதுவா யிடு மிறைவனிந்திரன்கால், செங்கதிர்வாரிதீ யமன்றத்தஞ் செய்தொழில்களி லொருகாலும், பங்கியாதொழுகும் ப்ரி சதுபரனைப் பற்றியுண்டாகியபயத்தால்.

தந்தமளவிலரியாதிதம்பமீருய்ச் சகத்தெல்லா, மிந்த விறைவனனந்தலேசத்தாலே யின்புறுமா,லந்தவந்தப் பதத் தாசையற்றோர்க் கருளாலுள்ளபடி, தொந்தமறுதன் சொ ரூபமதாமின்பந்தானே தோன்றுமால்.

பருதிநெஞ்சினு மொழிந்தவர் நெஞ்சினும்பரனே, கரியதாகிநின்றறிபவன் காயமே முதலாம், பொருளைமாய் வுறத் தத்துவ விவேகத்தாற்போக்கிக், கரியதாகிய வீச னைக்கண்டவன் கண்டான்.

உருத்திரன் மான்முதலாகத் தம்பமீறுயுள பொருட் குஞ் சாற்றுகுமொருவன்றன்னைக், கருத்துறத் தர்க்கத்தா லும் மானத்தாலுங் கண்டவன் கண்டவன் தருக்கமான ஞானங், கருத்துறவுள்ளவ னுலகினின்றுந் தன்னைத்தன் னாலே வேறுபடக் கழற்றிக்கற்றே, னுருத்துவரு மன்னதி கோசமெல்லா முள்பகிரு மிறைவனரு ளொன்றினாலே.

விளம்பும்வாக்கு யாதொன்றின்பக்கற் செல்லாதே மீளும், விளம்பும் வாக்குத்தான்விளம்ப விசேடமொன்றும் பெருமையினால், விளம்பல்வாதஞ் சிறிதில்லை விசேடம் பெறிலே விசேடமாம், விளம்பலாதலறுஞ்சிவனை யுரையால் விளம்பும்பரிசென்னே.

யாதொன்றின்பா லெங்குங் கோசரமா மிந்தமனஞ் செல்லா, தியாதொன்றின்பாற் செவிமுதலிந்தியங்கள் விட

யங்களுஞ்செல்லா, வோதுஞ் சச்சிதானந்த வொன்ளும் பிரமமதுதன்னைப், பேதமறத் தன்வடிவாகப் பெற்றுனச்சு மற்றுனல்.

அக்கரந்தனை யிக்குரம்பையி லறியுமாகி லவிச்சையா, மிக்கிரந்தி நசிக்குமீசனை யெய்தலா மமுதென்பதும், புக் கிருந்த பிராணனு மனமாவதும் பரபோதமே, மிக்கிருந்த வுளத்தினோர் விரகாலிதுள்புக மேவுவார்.

அக்கரமாகி மெய்ம்மையாயுள்ள வப்பொருளறிந்த போதல்லா, லெக்கருமங்களாலும் வீடில்லையாக மாதிகளி யற்றுங்காற், றக்கரமாகி யநித்தமாய் பேறுஞ் சுருக்கமா யிருக்க மற்றிவற்றைத், திக்கறியாதே முயல்பவர் முத்தி செறிந்திடார் மரணமே செறிவார்.

ஈசுரகீதை:--துக்கரங்குறியில் குறிகூக்கூசனை தெரியி, லக்கணஞ் சகலவுலகத்தினங்குரமவ், வக்கரம் பரமபதமப் பரஞ்சுடர்பிரம, நிர்க்குணம் பரவெளியி னிச்சயம்பெற நிகழும்.

இதுபோன்றன பலவுரைத்துக்கொள்க. இவ்வண்ணம் அந்தப் பிரஹ்மம் என்னென்பதற் குத்தரம் உரைக்கப்பெற்றது அத்தியாத்மம் என்னென்பதற்குத்தரம் வருமாறு:—சுபாவம் அத்தியாத்மமாம்,அக்ஷரப்பிரஹ்மத்தின் சொரூபம் துவம்பதலக்ஷியம் திரட்டப்பட்ட அகங்கார சுத்தஜீவசைதன்யம் என்றபடி. அதுவே ஆத்மாவென்னுந் தேகத்தைப்பற்றி நிகழுதலின் ஈண்டு அத்தியாத்மம் எனக் கூறப்பெறும்,தத்துவமசி அகம்பிரஹ்மாஸ்மி அயமாத்மா பிரஹ்மம் அன்னியமிதினிலும் காண்பவனில்லை என்பதாதி

சுருதிசதப், பிரசித்தியினுலும் அதன் வேதனத்திற்கும் பக வத் தனுக்கிரகத்தாலுண்டாய சித்தசுத்தி நன்கடையப் பெறுதலானே பகவத்பஜன பலத்தன்மை கூடுதலினுலும் என்பது கருத்தாம், இனிக் கருமமென்றென்பதன் விடை:- பிராணிகளினுற்பத்தியையும் வளர்வையும் செய்வதாய யாக ஹோமதான வடிவத்தியாகம் கருமமெனப்பெறும், அந்தத்தியாகத்திற்கும் பூதபாவ உற்பவகரத்தன்மை "அக் கினியிற்பெய்த ஆகுதி ஆதித்தனை நன்கடையாநிற்கும் ஆதித்தனினின்றும் மழையாம் அதனுலன்னமாம் அதனுற் பிரஜையாமெனும் ஸ்மிருதி சித்தமாம், ஆகலின் வைதிக கரு மமேவீண்டுகொள்க இலௌகிகம் ஒழிக. அதிபூதம் யா தென்றதற்கு விடை:—விநசுவர பதார்த்தமாய தேகாதி யாம், அதுவேயீண்டுப் பிராணிக்கூட்டத்தைப்பற்றி நிற்ற லின் அதிபூதமாம், புருடனும் அதிதைவதமாகுமென்பது ஐந்தாவதன்விடையாம், புருடன் ஹிரணியகருப்பன், ஆன் மாவே யிதன்முன்னையது புருடன், அவனே சரீரியாதியன் அவனே புருடனெனப் பெறுவன், ஆதிகர்த்தாவவன் பூதங்கட்காகியேயிருப்பன் பிரமமுன்னிலையில், என்பதாதி சுருதி மிருதிப் பிரசித்த சருவபூத அதிபதி பகவதங்கிசன், அவனே, யீண்டுத் தெய்வதங்களாய ஆதித்தியாதிகளை யதிட்டித்து, விழிமுதலியவற்றிற்கனுக்கிரகம் செய்வன் என அதிதைவதமெனப் பெறுவன்; அதியஞ்ஞும் பகவானே. யென்பது ஆறுவதன்விடையாம்:—இத்தேகத்தில் அந்தரி யாமித் தன்மையானே யிருக்கும் பகவானே யஞ்ஞாதிப் பிரவர்த்தகத்தன்மையால் யஞ்ஞத்தை முன்னிட்டிருந்து அதியஞ்ஞமாம், இதனுனேயே எங்ஙனம் அதியஞ்ஞத்தன் மையாண்டுதான் அதியஞ்ஞமிருக்கிறதென்னும் விஞக்கட்

கும்விடையாம், பராதீனமான தனது பிரவிர்த்தி நிவிருத்தி யன்னுவய வியதிரேகங்களால் அந்தரியாமியைத் தேக முடையோன் றெரிந்துகொள்வன் பிரசங்கத்தால் விரித் தது சாலும் பிரகிருதத்தே செல்வாம்; அந்தகாலத்திலும் பகவானையே ஸ்மரித்துக்கொண்டு விடுத்துக் களேவரத்தை யாவன் செல்வனோ அவன் பகவானையே யடைவன் இதன் கண்ணே யாதொரு சந்தேகமுமேகிடையாது என்னுமிது ஏழாவது வினவின் விடையாம்; ஈண்டிவ்வண்ணஞ் சங்கை யுண்டாதல்கூடும், மரணகாலத்தில் மான் மரணத்தினலே யேகாயத்தை விடுத்த பரதனுக்கு மிருகசமானகாரத்தன் மையேயுண்டாயது, நினைந்த மிருக ஐக்கியமிலதாம், அங்ங னம் பகவத்ஸ்மரணத்தோடும் தனுவை விட்டவனுக்கும், பகவத் சமானகாரத்தன்மையேயாம், பகவதைக்கியமோ ஆகாதாம், என்னுமிச்சங்கை செல்வனோ என்பதனானே யகற்றப்பெறும்; அக்கினிச்சோதியென இனி ஏழாவத்தி யாயத் தொடக்கத் தருளப்பெறும் பித்ருயான மார்க்கத் தினும் அநாவிருத்திலக்ஷண தேவயான மார்க்கத்தானே யினிது செல்வனோ என்பதாம்; எனவே பகவத்சமானகா ரத் தன்மையை யடைந்து தேவயானத்தினலே பிரஹ்ம லோகமெனப் பெயரிய வைகுண்டாதியை யடைந்து திவ் விய போகங்களை யனுபவித் ததனீற்றில், விஞ்ஞானங் கிடைக்கப்பெற்றவனாகிப் பகவத்தடைவு வடிவப் பரப்பிர ஹ்மைகலக்ஷண மோக்ஷத்தை யடைவன் என்பது கருத்து. இவ்வண்மாகவே பரதனுக்கேபோல அதன் சமானகாரத் தன்மைமாத்திரமா அல்லது அதனைக்கியமா என்றையுற வேண்டியதும் அவசியமில்லை. கேவலம் பகவானைமரித்து மரித்தவனே பகவத்தருவமடைவன் என நியமமின்றும்

மற்றே, அந்தகாலத்தில் எந்த எந்தத் தேவனையேனும் மற்றெதனையேனும் எண்ணிக்கொண்டுயிர்விடின் எண்ணிய வதனையே யடைவன் அயலையடையான், அந்தகாலத்தில் விவசத்தன்மையுண்மையின் எங்ஙனம் எங்ஙனம் பாவ விசேஷ ஸ்மரணம் எனின், எப்போதும் அப்பாவத்தையே பாவித்திருக்கவேண்டுமென்க. எதனுலிங்ஙனம் முன்பயின்றதே முடிவின் பாவனையாக வந்து தீருமோ அதனுல் பகவத்விஷயக அந்தியபாவனை யுற்பத்தியின் பொருட்டுச் சருவகாலத்திலும் பகவத் தனுசிந்தனபரனுக வேண்டும், நிரந்தரம் பகவதனுசிந்தன வாசனையே அந்தியகால விவசனுக்கும் ஸ்மரணகாரணமாம், பகவதனுசிந்தன வியாபாரத்தையே முக்கியமாக வுடையவன் றனது தருமத்தை விட்டுவிடலாகாதாம், வருணுசிரமதருமானுஷ்டானப் பெருநிட்டையுடையவனுக்கே நிரந்தர பகவதனுஸ்மரணங் கூடலின், இரண்டையுமே விடாமற் செய்யவேண்டும், . பரமேசுரனிடத்தி லருப்பிக்கப்பெற்ற சங்கற்ப நிச்சயமுடையவன், பரமேசுரப் பிரீதியின்பொருட்டே இக்கருமத்தைச் செய்வேன் என்று சுவதருமத்தைச் செய்க, இவ்வண்ணமியற்றியவன் அந்தகாலத்தில் பகவதநுஸ்மரணத்தால் பகவானையேயடைவன் இதில் ஐயமேகிடையாது. ஓதம்புக்க நதிகளுக்கொப்பவே யென்றருளியதற் குதாகரணம்:—

சிவமகிமை:—பன்னெறிமறையர் சாங்கியர் யோகர் பசுபதிமதத்தர் வைணவரே, மன்னுறுசுவையின் பலவகையதனுல் மருவிடுபின்னநூல்களிலே, நன்னெறியிதுவே நன்னெறியெனவே நதிகளுக் குததியேபோன்று, செந்நெறி குடிலநெறியுறு நரர்க்குச் செறிவுறு சிவபதமொருநீ.

இப்போது அந்தகாலீன பகவத்ஸ்மரணகாரணீபூத பகவத்துபாசன பேதங்களை ஸ்ரீபார்த்தசாரதி விவரிணித்தருளியவாறு சிறிது விரிப்பாம்:—

நல்லகரும யோகத்து ஞானயோக மதுதனிலுஞ், செல்லுமனை மிகச்செலுத்திப் பிறிதொன்றினையுஞ்சேரா தார், சொல்லவரிய கதிரவன் மண்டலம்போற் றோற்றுந் தொல்லோனை, யல்லதடையா ரவனியற்கையடையும் பரிசையறையக்கேள்.

எல்லாப்பொருளு மறிவானை யெல்லாப்பொருட்கும் மழையானை, யெல்லாரையுந் தன்னிலை நிறுத்துவானை யிரம்பச் சிறியானை, யெல்லாப்பயனு மீவானை யார்க்கு நினைதற் கரியானை, யெல்லாவிடத்து மிருடீர்த்த விளவெங்கதிர்போ லெழுவானை.

மருவற்குரிய வன்புடையார் மயங்காயோக மனத் தாலே, புருவத்திடையே தம்முடைய புரைதீருயிரைப் புக நிறுத்தி, யுருவத்தினை விட்டிடலிந்து யோகத்தாலே யவ ணேடும், பொருவப்படுவ ரப்பொருண்மேலிண்ணம் புகல்வன் பொருவேலோய்.

யாதொன்றை மறைதெரிந்தோ ரழியாதென்றெடுத் துரைப்பர், யாதொன்றை யவாவறுத்த யோகிகடா மெய் திடுவர், யாதொன்றை யுறநினைந்தோர் காமமுதலிய விழப் பர், யாதொன்றைப் பரம்பொருளா மதைச்சுருங்க வியம்பு வன்கேள்.

அஞ்சுபுலன்வழி யடைத்வை யடைத்தயிலுறுதே, நெஞ்சுதனை யிதயகமலத்திடைநிறுத்தி, யெஞ்சுதலினுயிர்

வளியை யுச்சியினிலேற்றி, யுஞ்சுபுகு நெறியிதெனயோ கூடனிருந்தே.

ஓதலினியற்கையினொ டோமெனு மெழுத்தை, வாய் தனிலுரைக்க மனமானது தனித்தே, மேதகுமெனைத் தெளிபவாவிதனை விட்டோர், வீதலினியற்கை யெனையே யடைவர் மிக்கோய்.

இப்பரிசி னெண்டொரறு திங்களளவென்ற, தெப்பொழுது மென்றனியல்பே நினையலுற்றூர், கைப்டுவனியா னெனியல் கைப்படவிருந்தோர், பொய்ப்பிறவியானது மறித்தடைதல்பூணுர்.

நித்தியநைமித்திக அவிருத்தகாலங்களில் மனத்தினாலே யுபாசியத்தை யுபாசித்து வழிபடுதல் பயிற்சியாம், தினந்தினம் யோககாலத்தில் அனுஷ்டிக்கத் தக்கதாய கூறிய வடிவ உபாசனம் யோகமாம், அவற்றேடு கூடியதனே அன்னியத்தை நோக்கிச் செல்லுஞ் சீலமில்லாத மனத்தினாலே நிரதிசயமாயப் பிராகிருத திவ்ய தெய்வத்தையே தியானித்து அதனையே அடைவன்; அநுசிந்தனீய வஸ்து எத்தகையதெனி னித்தகையதாம்:—சர்வஞ்ஞமாயிருப்பது அநாதியாயிருப்பது நிகில ஜகந்நியந்தாவாயிருப்பது சூக்குமபரபாணுவாதிகளினும் சூக்குமத்தினும் சூக்குமமாயிருப்பது அறியமுடியாததாயிருப்பது, எல்லாரையுங் காப்பாற்றுவது அளவுகடந்த மகிமையது ஆதலினாலே சிந்திக்கமுடியாதது. ஆதித்தனேபோலச் சகல சகற்பிரகாசகப் பிரகாசத்தையுடையது, அஞ்ஞானந்தகாரத்தைப் பிரகாசரூபத்தன்மையானே யகற்றுவது, என்றிவ்வாறுய

பரம்பொருளை யாவன் சிந்திப்பனோ அவனதனையே யுடையவன். இதனையே ஈசுரகீதையின்கண்ணும் காணலாம்:—

அறிவெனவுரைக்கப்பட்ட தன்னுடை யுருவுதன்னே, குறைவிலா நிமலன் சாந்தனுண்ணிய னென்றுமுள்ளோன், செறியுமெப்பொருட்கு முள்ளாய்ச் சின்மயமாயே சான்றாய்ப், பிறிதருமவித்தைக் கெட்டாப் பெற்றியனென்றானீசன்.

யாதொருபொருட்கு முள்ளாயிருந்துளவறிவு தன்னை, மேதகுபுருடனென்று முயிரென்று மீசனென்றும், பேதமில்காலமென்று மனமொடவ்வியத்தமென்று, மோதிடுமறைகளென்றே யுரைத்தன ஞெழிவிலீசன்.

ஆங்கவன்பாலாவவெலா மவனிடையே சாவதுவு, மோங்கியமா மாயையினையுடையனதிலார்ப்புண்ணான்,பாங்குறநானுவுடலம் பண்ணியிடுமாயிடினு, மீங்கிவை தன்னிடைத்தோயா திவைநடத்து மியல்புமிலான்.

பந்தமதிலொருகாலும் பற்றுனனப்பந்தஞ், சிந்தை செய்துந்தான் செய்யான் செய்வானுயேநிற்கு, முந்திய வான் காற்றனனீர் மண்ணல்லன் முழுதுமா, யந்தமிலா வானந்த வறிவுருவே யவன்வடிவம்.

உயிரினேடு மனமவ்வியத்தமுறுகந்த மாதிபுலனைந் தலா, னயர்விணுகி யகமென்று நின்றறியு மந்தநாற் கரணமும்மிலான், பெயர்விலாதுசொலும் வாக்கினேடு முதலைந்துமாய் விடயமும்மிலா, னுயர்வதாய வறிவேதனக்குருவமென்றுரைக்கு மொளிமேனியோன்.

அயில்கின்றவவைமுதலாம்போகநுகர்பவனல்லனுயி ரல்ல னுயிர்க்குயிராம் புருடனெனுமவன்ல்லன், மயலொன் றியுள்மாயையதுவல்லன் மற்றெல்லா, மயர்வின்றி யறிகின்ற வறிவுருவென்றே யறிக.

இருளுடனே ரொளியாவ தெவ்வண்ண, மருவலிலா வவைமற்றதுபோல, விரிவுளதாய சகந்தனினோடும், பொரு வலிலாத பரன்புணர்வெய்தான்.

உலகினிலெவ்வணமொண்ணிழறன்னோ, டிலகுவெயிற் கலவாததுபோல, நிலையிலதாய சகத்தொடு நில்லா, னுலவ விலா தொளிர்கின்றபரன்றான்.

முத்தியை யடைந்துபார்ந்த நித்தநன் முனிவரென்று, மொத்தபேரறிவே தன்பாலுள தவிகாரமென்றுஞ், சுத்த முற் சுகதுக்கங்கடொடர்பிலானந்தரூப, நித்தமென்றிட வுங் காண்பரென்றன னிகரிலீசன்.

அழியாதெங்குமுளதாகி யனைத்துட்புறம்புந்தானாகி, யொழியா வறிவாயொருகுற்ற முரைத்தற்கரியதொருபொ ருளே, கழியாமாயையதனாலே காணப்பலவாய்த்தோன்றி யிடு, மழிவாயினதென்றென்றுமிலா திருக்குமதுவே யியல் பெற்றான்.

கண்ணின்றி யெல்லாங்காண்பன் காலின்றியெங்குஞ் செல்வன், விண்ணின்றவோசை யெல்லாஞ் செவியின்றி விரைந்துகேட்பன், பண்ணின்றகையதின்றிப் பற்றுவன் விடுவனென்றே, யண்ணனன் முனிவர்தங்கட் கருளின னறியுமவண்ணம்.

எல்லாரையு நானறிந்திருப்ப னென்னையறிவாரி யாரு மிலை, நல்லாருண்மையெனக்கண்டோர் நாடிநின்றே யறிந்த படி, யல்லாதில்லா வளவில் பரம்புருடனெனவு மறிவின்றி, யெல்லாமாகி யல்லாதவேகமெனவு மியம்புவரால்.

எங்குந்தானு யாவையுமாய் நின்றே யொன்று யழி வின்றி, யங்கமொன்றின் றறிவேயாய் நுண்ணிதாய வருள் வடிவைத், தங்கு ஞானயோகத்தான் முன்பாசரித்துப் பிணைவந்தே, னங்கமான பேரொளியோ டொன்றியாறு யடங்கிடுவார்.

நன்றாய் ஞானகனமாகி நானுவெல்லாம் பிறப்பிடமா, யொன்றாய் வேறோர் பொருளின்றி யொளியாயொன்றே டுவமிப்ப, தன்றாயகில சராசரங்கட்காதாரந் தானுயென் றும், பொன்றாததுவா யவிகாரப்பொரு ளொருளாய்ப் புல னுய்ப் புணர்ப்பரிதாய்.

இரண்டாவதிலாதளவைகளா லெட்டாததுவா யெங் கெங்குஞ், சிரங்கால் கைகண்முகமுடைத்தாய்த் தெரியப் படாதாய்த் திரமாகி, யிரும்பார் நீர் தீகால் வானிமெல்லா மிருத்தற்கிடமாகும், பரந்தானுணர்ந்தோர் நிர்க்குணமாம் பரமவியோம மென்பர்களால்.

அரிதாயறியா வறிவேயா மனைத்தாருயிர்க்கு முயிரந் தப், பெரிதாயகமும் புறமுமாம் பிரமநானே பிறர்க்கென் றுந், தெரியா தென்னுலே பரம்பியென்பா லிருந்திச் சக மெல்லாஞ், சரியாநின்றதென் றறிவான் சகலவேதங்களு மறிவான்.

ஞானவாசிட்டத்துங்காணலாம்:—

அந்தமியாதசோதி யருக்கனுயளவிலாதாய், மெத்திய

பிணியிலாதாய் மேவரும்பிறப்பிலாதாய், யெத்தலங்களினு மென்று மியாவுமா யாவுஞ்செய்து, மூத்தியுமாகியோங்கு முதற்பரம் பொருளொன்றுண்டு.

எங்கணுமுளது நித்தமெழுதலத்த மித்தலில்லை, யங்கண் மெய்யறிவு சாந்தவமலமச்சுதங் குணங்க, டங்குத லில்லை யீதொன்றுளதெனச் சாற்றலோடும், பங்கமின் முனியைநோக்கிப் பகீரதனுரைக்கலுற்றான்.

நித்தமுறுமுதய முளதாதி யாகுவதநந்த நிமலமேக, மத்தகைய பிரமமேயுளது விகற்பத் தெண்ணமய லொன் றில்லை, யித்திறமென்றே பாவித்தழுக்கிலனாய்ச் சுகமேவி யியற்றுஞ் செய்கை, சுத்தவிமலஞ் சாந்தமுளவெல்லாமேவு வாய் சுத்தவீரா.

கிஞ்சில்கரணங்களுக்கெட்டா கிளர்வானினுஞ் சற்றாய் முடிவி, லெஞ்சலிலதா மழிவின்றி யிருந்தென்று மான்மா வாம், விஞ்சுமந்தப் பெருங்கண்ணாடியிலே நேயவிரிவிடய பஞ்சபூத சிருட்டியெலாம் பத்திபாய்ந்து விளங்கிடுமால்.

இவையெனுமனைத்துஞ் சிற்கனமாகி யிறப்பிலாப்பிரம மேயென்று, நவையுறுமனமாங்கற்பனையில்லை நாசமும் பிற வியுமென்னு, மவையெலாம் புவனமூன்றினுமில்லை யறு வகை விகாரமுமில்லைக், கவையறு சமமாங்குறிபெறு மறிவு மாத்திரங்காண நின்றுள்தால்.

கேவலமாகிக் கேவலவொளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவா, யோவவிலறிவு மாத்திரமாகி யுறுதுயரொன்றுமற் றாறி, மேவருமிரத மனைத்தினுக்கொத்து விகாரமற்றுள

பொருளிடத்தே, தாவருந் தனதுநினைவையே விரும்பித்தன் வயத்தெழுந்ததோ ரறிவு.

வேறிலாதெவ்விடத்து மேவிநின்று மேவாமனுண்மை யினல்வேறும் விண்போற், கூறிலாச் சிற்பாவ மெங்குநின் றுங் கூறுபடுமவற்றைன்றுங் கூடிப்பற்றுப், பேறிலாச் சங் கற்பமனைத்துமின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேதமின்றி, யூறிலாவாகாயங்கோடி கூருவுரித்த வற்றிலொரு கூற்றை யொப்பநொய்தாம்.

நன்றிதருமுண்மைமுதற் பெயர்கள்பெற்று ஞானிகள் பானிமலமா ஞானமாகி, யொன்றுமலவுருவான குடும்பரூப மொன்றாகித்தனைத் தெரிவித்துணர்வே மெய்யாய்த், தன்று ணைச்சின்மாத்திரத்துக் கயலற்றிந்தச் சுத்தாமாத்திரமய மாஞ் சகங்களெல்லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாஞ்சூழ்கடலில் வேறுகாத்தொடர்ச்சி போலாம்.

துணைதரும் பல்பிறப்பாகிக் கொடிதாய்ப் பொல்லாச் சுபர்வமாந்தனை யறியாச்சுமடர்க் கென்றுந், தீனையறிந் தோர்க்கொளியுருவா யெல்லாமொன்றாய்த், தானுகவனுப விக்குந் தன்மையாலே, நினைவொடுசெய்வோன் செய்கை செயலிம்மூன்று நிகழ்விக்கும் பாவித்த நினைவுக்கெல்லாம், மனையசுவையாய்நிற்கும் பிறவிப்போக மருந்துவோர்க்கப் பேரகமாகிநிற்கும்.

அத்தமனமுதயமில்லை யெழுதநிற்ற லயல்போதல் வருதலெனு மனைத்துமில்லை, யித்தலத்திலில்லை யிலாதிருக்க வில்லை யித்திறமாஞ் சித்துமலமில்லா மெய்யாய்ச், சுத்த முறுதானே தன்னிடத்திற்குஞ் சொன்னநெறியே சகமா

ய்ச்சொல்பேராலே, மெத்தவெகுரூபமாந்தற்சுபாவம் விரிந்தெங்குஞ் சிற்பையரால் விளங்கிநிற்கும்.

மந்திரமுன்னுரைசெய்வான் மாசிலாப்பரம்பொருளை வகுத்துச்சொன்னாய், சிந்தைமுதலாம் பொறிகளாறுனு மெட்டரிதாந், திறத்தினாலே, யந்தமில் சின்மாத்திரமாய் விண்ணினு நெய்தாம் பரமணுவேயாகு, முந்துபிரமாண்ட மெலாமவ்வணுவிலேதோன்றி முதிர்ந்துமாயும்.

தடமானவதன்புறமில்லாமையினால் விண்ணாகுந் தனிப்போதத்தா, லிடமான விண்ணன்றுமின்னதெனத் தெரிவரிய வியல்பினாலே, திடமாகவிலதாகுஞ் சற்பாவத்தாலுளதாய்ச் செப்பலாகும், புடமாக விளங்குதலாற் சித்தாகு மறிவதிலாப் பொருட்டாற்கல்லாம்.

தானாகுமிகவொய்தாமாகாசத்திற் சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானேகோட்டு, மானாதவுலகமெலாந் தனது சோதி யாதலினாலதற்குவே றயலொன்றில்லை, நீநானுஞ்சகபேதவடிவந்தானு நிற்கின்றவதன்வடிவாய் நீங்காதென்றும், நாநாவாம் பொருட்புணர்வானடந்ததாகு நடக்கவிடமிலாமையினா னடவாதாகும்.

அறவுநொய்தாய்ச் சமமாகி யவிகாரமதா யதீதமதா, யிறவுநிகழ்வோ டெதிரென்ன வெண்ணுங் காலமூன்றிலதாய்ப், பிறவுநினைக்கு நினைவின்றிப் பேதமற்றவறிவாலே, நிறைவிதான சத்தியெலா நேரே செய்யப்பட்டனவே.

இவனே தேடப்படுகிற்போ னிவனே துதிக்கப்படுகிற்போ, னிவனே தியானிக்கப்படுவோ னிவனன் மரணமயக்கொழிந்த, திவனே யெளிதினெய்திடுவோ னிவனே நன்று

யறிகிற்போ, னிவனேயெல்லார் மனக்கமலத்திடையி லிருக்குமிசைவண்டே. இவைபோன்றன பலவாம்.

பிரஹ்மகீதையின்கண்ணுஞ் சிறிது கண்டுகொள்ளலாம்:—

சின்மாத்திரமாயுள்ள வெறுஞ்சிவனே திகழ்வானியாதுக்கு, முன்மாத்திரமும் வேறில்லை முற்றுமவனேமொழிவுற்ற, நன்மாத்திரமாயான்மாவென்றுரைக்கு நாமத்தினையுடையான், றன்மாத்திரமே யாகியவத் தன்மையானசங்கரன்றான்.

எப்பொருள்களுக்குஞ் சான்று யார்க்குமுள்ளாகியென்று, மெய்ப்படுந்தன்றே சாலேவிமலமாய் விளங்காநின்ற, தெப்பொருளெல்லாமாகி யெங்கணுநிறைந்துநின்ற, வப்பரம்பிரமநேரே யழகுறவறியலாகும்.

இவைபோன்றன பல வுய்த்துணர்ந்து கொள்க.

உண்மையாவுனக்கு நாடிலுருவிலை யுரைக்கிற்பொய்க்கும், பெண்மையா மாயையாலே பெருகுநல்லுருவென்றுலுந், திண்மைசேர் நின்னையன்றித் திகழ்சகமில்லையானல், வண்மையால் வழுத்துவாரார் வழுத்திடப் படுவார்யாரே.

ஈங்கிதன் றீங்கிதன் றென்றெவையும் விட்டொருவிநின்ற, வாங்கதுதானே தானென்றறிவினு லறிந்துதன்னைநீங்கலாவுணர்வினுலே நினைந்துகொண் டிருப்பானண்ணலோங்கிய பரமானந்த வுருவினை நினைந்தானுமால்.

உரைத்திடுங் கனவுபோல வுபாதிபொய் யாகுமென்றும், விரித்தமூன்றவத்தை யுள்ளும் விளங்குவன் புருடனென்றும், திருத்திய வறிவினுலே தேர்ந்துகொண்டிருப்

பான்முத்தி, தரித்திடுமும்மையான தனுவொழித்தடைவ னென்றான்.

தோற்றுவன் சத்தாய்ச் சித்தாய்ச் சுத்தமாய்ச் சுகமாய்த்தோன்றிப், போற்றிய நாமரூபம் புகல்குணமொன்று மின்றி, யாற்றுமோர் வினையுமின்றி யமர்ந்தவன் விகாரமெல்லாஞ், சாற்றியகுணங்களாலே சார்ந்திடு முரைக்கின் மாதோ.

பன்னுமாக்கைசேரவயவ முதலியபலவு, முன்னி யீங்கிதன்றென முறைமுறைமையா யொழித்துச், சொன்னபுந்தியிற் கரியெனத்தோன்றிய வறிவை, யின்னதே பரம்பொருளென வறிவதிங்கியல்பே.

புந்திமுக்குணம் பொருந்தி மூன்றவத்தையும் பொருந்து, மந்தமின்றியவவத்தையி லறிவெனவமரு, நந்தலின்றிய பரம்பொருளெனக்கருதிப், பந்தமுற்ற வெவ்வினை யறப் பரத்தொடொன்றுவரே.

நிலவுமோர்வினையின்றியே நித்தியமாகி, யுலகெலா நிறைந்துயிரெனவெருமுதலென்ன, விலகுசித்தென வெண்ணறுஞ் சுத்தமாயிருக்கு, மலகில்சோதியை வறிவதற்கென்னரிதம்மா.

அன்புசெய்வதிங்கரிதிலை யன்புசெய்வதுதான், பொன்பிறங்கிய வணியெலாம் பொலிந்திருப்பதுபோன், மன்புகழ்ச் சராசரங்களாய் மாயனென்றுரைக்கு, நன்பெரும் பொருளிருக்குமென்றுளத்துள் நாடுதலே.

என ஸ்ரீமத் பாகவதத்தும் சிறிது காணலாம்.

இவ்வண்ணம் பகவானை யுபாசிப்பவனுக்கு அந்தகா.

லீன பகவதநுஸ்மரணபூர்வகம் பகவானது பிராப்திப் பிர காரத்தைக் காட்டுவாம்:—

இவ்வண்ணம் தினந்தினம் பயிலாநின்ற பக்தியோடு கூடியவன் அந்தப்பக்தியோகத்தின் பலமென்னும் நெடும் போதப்பியாசத்தாற் சனித்த சித்த ஸ்தைரியமாகிய வீரிய சீரியன் அவ்வேதுவினாலே பிரயாணகாலத்திலும் பரமபுரு டனிடத் தொருமையான சித்தத்தானே அந்தப் பரம் பொருளையே சிந்தித்தடங்குக; இவ்வாறு சிந்திக்குமவன் பரமதிவ்ய புருடனையே அடைவதற் கென்னதடை. எவ் வாறிருந்தெனின்? புருவங்களிடையில் நன்றாகப் பிராணனை நிறுத்தி, முதலில் இருதயபுண்டரீகத்தில் தனதான்மாவை வயப்படுத்திப் பின் மேலேசெல்லும் சுழுமுனை நாடியால் குருவருளிய நெறியாகப் பூமி வெற்றிமுறையாக, புருவமத் தியிலிருக்கும் ஆஞ்ஞாச் சக்கரத்தில், அதனைத்தாபித்துப் பின் பிரஹ்மரந்திரத்தினின்றுங் கிளம்பிப் பரமபுருடனை யடைவன் என்னு மிது மறையின் மறைபொருளாம் எனி னும் தெரிபொருளாய் விரித்தாம் ஸ்ரீ ஆன்மபுராணத்துள் ஆண்டுவிரிவாகக் கண்டுகொள்க.

வேதவித்துக்கள் எவ்வக்ஷரத்தைக் கூறுகின்றார் களோ, "இதுதா னவ்வக்ஷரம் கார்க்கி, யாதுபரவித்தை யினாலே யடையப்பெறுமோ" என்பதாதிகளினால்; வாக் கினன்மாத்திரம் கேவலம் கூறுவதில்லை, மற்றோ, முத்தர் கள் தங்கள் வடிவமாகவே யனுபவிக்கின்றார்களோ, ஆசை யற்றயதிகள் தங்கள் சொரூபமாகவே எவ்வக்ஷரத்தைச் சாக்ஷாத்கரிக்கின்றார்களோ, ஞானிகளான்மாத்திரம் அனு பவிக்கப்பெற்ற தொன்றன்றும், மற்றோ ஜிஞ்ஞாசுக்களினு

ளுடைய சகலப்பிரயத்தினமும் அதனை யடைதற்பொருட்டே யாம், எதனை யறியவேண்டுமென்றிச் சித்தசாதகர்கள் குரு குலவாசாதிரூபப் பிரஹ்மசரியத்தையாசரிக்கின்றார்களோ, கிரகஸ்த வானப்பிரஸ்த தருமங்களாய யாகதான தபங் களை யனுட்டிக்கின்றார்களோ, "அவ்விதனைப் பிராஹ்மணர் வேதானுவசனத்தினாலும் யாகத்தாலும் தானத்தாலும் தவத்தினாலும் உண்டி சுருக்குதலாலும் அறிய வியம்புகின் றனர்" என்பது சுருதியாம். அவ்வரும்பெரும் அக்ஷர பதத்தைக் சுருக்கமாகக் கூறுவாம். " சருவவேதமும் பதமெதைச் சாற்றுகின்றனவோ சருவமாகிய தவங்களும் பதமெதைச் சாற்றும், பிரமசாரத்தை யெதுகுறித்தொழு குவர் பெரியோர், வரமதாகிய பதமதை வழங்குவன் ஞெருக்கே". ஓமென்னுமிது, எனக் கடவல்லியிற் கூறிய ஓங்காரப் பிரஹ்ம உபாசனமாமிது, பொருள் :—யான்கேட் கத் தகுதியனேயாயின் அடியேன்பேரில் திருவருள்சுரந் திருப்பது மெய்யாமேல் ஆயின் தாங்கள் தெரிந்துகொண் டிருப்பதை யருளவேண்டும் என்று நசிகேதாகேட்பத்தர்ம ராஜா அருளல்:—

எல்லாவேதங்களும் எவ்வடையத்தக்கபதத்தை முரணிற்றி மொழிகின்றனவோ, எல்லாத்தவங்களுமே யாதை யடைவதன்பொருட்டாமோ எந்தப் பிரஹ்மப்பிராப்தியை யிச்சித்தவர்கள் பிரஹ்மசரிய குருகுலவாசாதிகளை யனுட் டிக்கின்றார்களோ நீயறியவாஞ்சித்த அந்தப்பதத்தையுன் பொருட்டுச் சுருக்கமாகக் கூறுகின்றேன் உன்னால் அறிய வாஞ்சிக்கப்பெற்ற அவ்விப்பதம் ஓங்காரவாச்சியமும் பிர தீகமுமாம்; சருவவிழிமுதலிய இந்திரியங்களையும் அடக் கித் தத்தமது விடயங்களினின்றும். பிரத்தியாகாரஞ்

செய்து செய்தபோதினும் மனம் விஷய சிந்தாபரமாயின் பாகியேந்திரிய நிரோதம் பயனற்றதாம் எனினுண்மையே, முன்மொழிந்த அப்பியாச வைராக்கியங்களினாலே மனத்தையும் இருதயதேயத்தில் நிறுவிகிரியையின் வாயிலாம் பிராணனையும் நன்றாகநிறுத்தி, பூமி ஜயக்கிரமமாக மூர்த்தன்னியத்தில் புருவத்திடையில் நிறுத்தியதன்மேல், குரூபதேசம் ஒன்றானுமே யறியத்தக்க யோகதாரணையென்னும் ஆன்மவிஷயக சமாதி ஸ்தைரிய ரூபத்தைப்பற்றி, பிரஹ்மவர்சகத் தன்மையானும் பிரதிமாதிபோலும் பிரஹ்மப் பிரதீகத்தன்மையானும், ஓமென்னும் ஏகாக்ஷரப் பிரஹ்மத்தையுச்சரித்து, அதன் வாச்சியமாகிய பகவானை நன்குதியானித்து, மூர்த்தன்னிய நாடியினாலே தேகத்தை விட்டு யாவன் செல்வனோ நன்றாக அர்ச்சிராதிமார்க்கத் தானே பிரஹ்மலோகத்தை யடைவனோ ஆண்டவன்போகாந்தத்தில் விஞ்ஞானமடைந்தவனாகிப் பரமகதியாகிய மோக்ஷத்தையடைவன். அப்பியாசத்தைப்பற்றி முன்னரே யறைந்திருந்தபோதினும் மீண்டும் சிறிது தெரிந்து கொள்ளலாம்:—

உள்ளூறு தொழில்கண்முற்று மொருக்கியோருணர்வைப்பற்றி, மெள்ளவாங்கதுவுமந்தக் கரணங்களுடனே விட்டுத், தள்ளுவ வெல்லாமெத்தாற் றள்ளியதுவுந் தள்ளித், தெள்ளுணர் வுள்ளஞ்செய்கை தேசிருளனைத்துந் தீர்ந்து.

வாதனைவடிவமான வினைகளு மற்றிவற்றைப், பேதமாய்ப் பழகுவோனும் பிராணனிலியக்கந்தானு, மியாது மூலத்தோடீர்த்து விண்ணகமென்னநின்று, லியாதுநீர்சாந்தனாயென்றுயினையுது நீமெய்யால்.

தேகத்தை நோக்கியன்றே செகமிலாந்திரிவதல்லா, லேகத்தை நோக்கியன்றே வெங்கணும் பஞ்சபூத, நாகத்தைத் மண்ணைக்கிழை நாடினுமாறுகாணே, மோகத்தைவிடுதுமென்றே திடமுற்றூர் முழுதும்பற்றூர்.

கொள்ளற்பாலது துயரிலாதவர் நிலைகுறுகத், தள்ளற்பாலது தீயவர்நெறியெனுஞ் சழக்கே, யெள்ளற்பாலதாமுலகமேதியா மெவனென்றே, தெள்ளற்பாலது குரவராலறிவினற்றீர.

வருந்துகிற்பது தனையறிநெறியிலேமனத்தாற், றிருந்துகிற்பது கருமத்திலழுந்திலாச்செய்கை, பொருந்துகிற்பது தீயவரல்லவர் புணர்ச்சி, யருந்துகிற்பது நானென்பதாக்குகிற்பதுவே.

தீர்க்கத்தக்கது நரம்பெலும்பெனு முடற்றியக்கம் பார்க்கத்தக்கது முழுதுயிர்க்குள்ளுறைபரம, மீர்க்கத் தக்க தேரிரவியினிடத்தினும் பாரி, னீக்கத்தக்கிலாப் புழுவினுஞ் சித்தொன்றேநிற்கும்.

சுழுமாகிச் சொரூபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்தனாகி. யமர்மனன மவுனியாய் நன்மணிபோற் றெளிந்து துயரனைத்துந் தீர்வாய், நிமலமுற நிகழ்காலத்தொழிற் செய்தியாவையினு நேயமின்றி, நமதெனக் கொள்ளுதல் விடுதலிரண்டுமறத் துன்பமெலா நாசஞ்செய்வாய்.

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்புகீத, நெறியார் மன்னவன் கேட்டபடி யுரைப்ப நெடியவனே நினைவிற்கொள்வா, யறிவானு மறி

பொருளுங் கூடியகூட்டரவி லெழுவறிவானந்தம், பிறியாத வான்மதத்துவத் தெழுந்ததாமதனைப் பேணல்செய்வாம்.

காண்பானுங் காண்பனவுங்காட்சியும் வாதனையுடனே கழல்விட்டுச், சேண்பாவுகாட்சிக்கு முதலொளியா மச் சொரூபஞ் சிந்தைசெய்வாம், மேண்பாலா முள்ளதில தெனு மிரண்டினிடையெய்தி யிறவிலாதாய், மாண்பான வொளிக்கெல்லா மொளியாமச் சொரூபத்தை மதித்தல் செய்வாம்.

அகமகமென் றனைத்துயிரினிடத்துமிருந் தனவரத முரைப்பதாகி, நிகழொளியா யான்மதத்துவமான சொரூ பத்தை நினைத்தல் செய்வாந், திகழிதயகுகையுறையுந் தேவதையைவிட்டயலே தெய்வந்தேடன், மிகவரியகௌத் துவத்தையெறிந்து சிறுமணிதேடும் வேட்கைபோலாம்.

ஞானவாசிட்டம்:—

தக்கஞானத்தைத் தான்பெறற்பொருட்டுத் தனியிடந் தனை யுடைந்திதய, துக்கமே வாமற் சுகாசனத்திருந்து தோடலை கழுத்துடம்பிவைநே, ரொக்குமாறிருத்திப் பூதி கொண்டிந்த வுடலையுத்தூளனம்பண்ணி, மிக்கவாய்வரு மிந்தியங்களை யெல்லாம்விடய மேலெழா வகைவிலக்கி.

பத்தியாற்குரவன் பதம்பணிந்திதய பங்கயந்தனை நினைந்ததிலே, நித்தமாயொருவரா னினைப்பரிதாய் நிமல மாயெங்கணு நிறைந்து,சுத்தமாய்ச் சாந்தமாயனைத்துலகுந் தோன்றுதற்கியோனியாய்ச் சுபாவ, சித்தமாயுமூதா யரு வமாயொன்றாய் சிற்சுதானந்தமாய்ச் சிவமாய்.

உரியநூல்வேதத் தோமெனும் பொருளாயுள்ளதா

யுள்ளவெப்பொருட்டுங், கரியதாய் நின்றவொன்றினைக் கீளகண்டமுங் கண்ணொருமூன்றும், பிரிவிலாமங்கை பாகமுமாகப் பேணுநற்பாவனைபெறுவா, னரியதா யருளினால் வரும்விச்சை யதனினாலதனையேயுடையும்.

தெரிவரியசிற்கனமாய்த் திகழ்சிவனே திசைமுகனு, மரியுடனவ்வரனு மவனவனமரர்க்கதிபதியுந், துரிசறவே யக்கரமாய்ப் பரமாகுஞ் சுராட்டுமவ, னெரியுமழல் காலனவனிந்து வொடுபிராணனவன்.

ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெல்லாமவ்வனேமுன், கழிந்தபொருண்மேலும் வரக்கடவ பொருடானுமவன், மொழிந் தனிபல விச்சையவிச்சையெனு முற்றுமவனிழிந்த பிறப்பறவேறோர்வழியில்லை யிவனொழிய.

இன்னதெனுமற் றன்னிடைக்காணத் தன்னையெப்பொருளினுங்காணு, மந்நிலையடைந்தா னவன்பிரமத்தை யடையும் வேறொன்றினாலடையான், தன்னையுமோங்காரத்தையுமரணியாக்கியத் தத்துவஞான, வன்னியைத் தியானமதனம்விட்டெழுப்பு மதியினார்வன்பவஞ்சேரார். பிரஹ்மகீதை.

அப்பியாசஞ்செய்யாமல் ஏங்கித்தூங்கலாவது விழித்தேயிருக்கவேண்டும் இதனைப் பெரியாரும் பிறங்குவர்:—

தந்தையுமிலை பெற்றதாயுந்தானிலை, பந்துவுமிலை யுடன்பாகத்தானிலை, தந்தனமிலைமனை தானுமேயிலை, வெந்துயர் விழித்திரு விழித்திருத்திநீ.

பிறத்தலுந்துயர் சரைபேணலாற்றுய, ரிறத்தலுந்துயர், முனையேதிமாந்துயர், கறுத்தவிக்குடும்ப வெங்கடறுயூரமாம், வெறுத்திரு விழித்திரு விழித்திருத்திநீ.

• ஆசையிற்கட்டுறு மகிலலோகமும், ஏசுறுசிந்தையி விருவினையினில், ஊசலிலாயுளுமோடலோர்கிலார், வீசியே விழித்திரு விழித்திருத்திநீ.

காதலுங் கோபமுலோபக் காலியும், மீதினிலுறைகுவ ரேய்க்குஞ் சோரரே, வேதமெய்ஞ்ஞான மாமணியையமே வுற, வாதலினனவுறு விழித்திரையனே.

வாயுநிரோதம் முடியாமையானே புருவத்திடையில் பிராணனைச்செலுத்தி மூர்த்தன்ய நாடியினாலே இஷ்டப்படி தேகத்தைவிடச் சமர்த்தர்களாகார்களோ மற்றோ பரவசமாகவே தேகத்தை விடுகின்றார்களோ அவர்கட்குக் கூறிய உபாசன மிரண்டும் உபயோகமாகாதாம், ஆகையினால் அகில சுலபமாய பரமகாருணிக பகவானைப் பற்றிய வேறுபாசனம் கூறுவாம்:—யாவன் பகவானை யெப்போது மெண்ணுகின்றனனோ அவனுக்குப் பகவான் சுலபன், அவன்றன் வயமாக வுடலைவிடினும் பரவயமாக வுடலைவிடினும் பாதகமில்லை, ஆகவே எப்போதும் பகவதநுசிந்தனமே பகவத்பிராப்தியின்கண் ணேதுவாம் என்றுணரலாம், மூர்த்தன்யத்தானாதல் சுவேச்சையானாதல் பிராணனது கிளம்புகையாகுக, ஆண்டபிநிவேசமின்று மென்பது கருத்து. சக்ஷுராதிகளினாலே யுந்தவந்த விடயக்கிரகண காலத்தில் அவ்வவ் வனுசிந்தனத்திற்கே பிராப்தியுண்மையின், எங்ஙனம் எப்போதும் பகவதனுசிந்தனம் பொருந்துமெனின்? அன்னியவிஷயக எண்ணமில்லாமலிருந்தாற் பொருந்தும், சித்தத்திற்கும் பகவதேக நிஷ்டத்தன்மையே சந்ததம் பகவதநுசிந்தனமாம், அதுவும் பாகியேந்திரியங்கட்கு அவ்வவ் விடயாந்தர சம்மந்தமிருந்தபோதினும்

கோதிலதாமெனப் பொருந்தாமை யொன்றுமிலதாம். இத் தகைய சந்தத சிந்தனமும் ஒருவருடமென்றேனும் ஆறு மாதமென்றேனுமில்லாமல் எப்போதுமே செய்யவேண்டும், தினந்தோறும் பகவானை யனுசிந்தனஞ் செய்யும் நித்திய யுக்தனுக்குப் பகவத்விஷயாகப் பிரேமபூரிதத் தன்மை யானே கணமாத்திரமும் பகவதநுசிந்தனமின்றித் தன்னி ருப்புக் கிடையாத யோகிக்குப், பகவான் சுலபமாயடை யத் தக்கவனாவன்; அவனது வியோகத்தைச் சகியாத பக வானே அவனையடைவன், அவ்வாறே சுருதியும் மிருதியு மிருத்தலின். பகவானது சௌலப்யத்தினாலே யென்னு மெனின் இதுவாம்:--பகவானையடைந்து ஆத்தியான்மவாதி துக்கங்களின் ஆசிரயபூதமும் அஸ்திரமுமாய புநர்ஜன் மத்தை யடையார் அம்மகான்மாக்கள் மோக்ஷமே யடைவ ராதலின். 18

(அ - கை) அன்னியதேவதை யன்பனும் என்னைக் கிரமமுக்தி நியாயத்தானே யடைவதில்லையாம், மற்றோ ஜன்மாந்தரலாப பூர்வகமாகவே யென்னை யடைவன், என் னுந் திருக்கருத்தால் உரைத்தருளல்:—

சு. ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்தி
நோர்ஜுந, மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வி
த்யதே ॥

அயன்மிகிந்திர னரிப்ரனுலகினை யடைந்தும், வியன் மறுமுறை விழுதலுந் தவறிலையெனையே, யுயவடைந்தவனை யமதொன்றுமே யிலனு, வியலவழிதலு மிழிதலுமெங்கணு மிலனே.

வி. பிரஹ்மவிஷ்ணு சிவ இந்த்ர ஆட்யாங்லோகாந் = அயன்விண்டுருத்திரன் ஆகண்டலன், ஐசுவரியமிகுத்த லோகங்களை, ப்ராப்ய = அடைந்து, புநঃபதேத் = மறுபடி விழுதறப்பாதாம், யঃமாம் உபைதி அசந்திக்தঃ = யாவன் என்னை ஐயம் ஒன்றுமின்றியவனு யடைவனோ, பதனம் தஸ்ய நக்வசித் — வீழ்ச்சியவனுக்கு யாண்டுமிலதாம், பிரஹ்மாதி ஈசுரர்களானே சருவகாம சம்பன்ன வுலகங்களை யடைந்து மீண்டு விழுதலாம், அவ்வுலகங்களினின்றும் மீண்டும் மண்ணையேயடைவன் அன்றி மேன்மேலுலகத்தை யடையான், யாவன்றான் அந்தரான்மாவாகிய என்னையடைவனோ முன்னருளிய யோகநெறியானே ஐயமில்லாதவனாகி = யான்பிரஹ்மமா அல்லவா என்னும் ஐயப்பாடின்றி, பிரஹ்மமாயேயிருக்கின்றேன் என்னுந் துணிபுடையவனாகி அடையாநிற்பனோ, அத்தகையனுக்குப் பதனம் எக்காலத்திலுமிலதாம், முக்தர்கட்கு மீண்டும் பந்த அசம்பவமாதலின் என்பது திருக்கருத்தாம்.

முத்தியே முதற்பரம் பொருளாகிய நித்தியப்பொருளாம் மற்றவை யெல்லாம் காரியப் பிரஹ்மலோகங்களாம் என்று தெரிந்து கொள்ளல்வேண்டும் அந்தச் சிற்சொரூபம் பாருண்ட மாலுண்டென் படைப்பவனோ டரனுண்டென் ஆருண்டென் ஆரொழிந்தென் அருகாது பெருகாது, இருந்தபடியே சகலலோக அதிஷ்டானமாயிருக்கும், என்பது பிரஹ்மகீதையில் வெளியாம்:—

வினவுற்ற கேள்விக்குக் கேட்பானாகி மேவியகாட்சியில் விழித்துக் காண்பானாகி, மனனத்தின் நினைந்தாவாய் ஞானநீதன்னின் மதித்திடு ஞாதாவாகி மன்னுகின்றான்,

சொன்வத்தற் பரனுகு மவனில்வேறுந் தோற்றமெலாமெய் யாகுந் தோற்றமன்று, நினையிற்றற்பரனே யிங்கெல்லா மென்று நினைவதுவே நினைவான நினைவுநேரே.

பாரிலேயெல்லாப் பொருள்களுங் கோவைப்பட்டதெப்படியிலப்படியே, நீரிலேபாரு நெருப்பிலே நீரு நிலவு காலதனிலே நெருப்பு, மூருகாலந்தரிக்கலோகத்து முண்டையும் பாவுமேபோலச், சாருமா மொன்றேடொன்று வேறறவே தன்னிலே பின்னியிச்சகத்தில்.

அந்தரிக்கங்கள் கந்தருவத்தே யாதித்தவுலகங்களிடையே, கந்தருவங்கள் சந்திரவுலகிற் கதிரவனுலகுகளெல்லாஞ், சந்திரவுலகுந் தாரகையுலகிற் றூரகை வானவருலகி, லிந்திரவுலகில் வானவருலகமியாவையுங் கோவையாயிருக்கும்.

அரசாகிய வமராதிப னுலகானவை யடையப், பிரசாபதி யுலகங்களி னிடையே பிரமனதா, முரைசாருலகமதானவை யுயர்மாலவனுலகிற், றிருமாலுலகஞ் சேர்வுறுமிடமுஞ் செப்புதுமே.

உருத்திரவுலகின் மாலுலகுருத்திர, னிருக்குமவ்வுலகெலா மீசலோகமே, திருந்தகு மீசலோகங்க டிண்ணமாய்க், கருத்தருஞ் சதாசிவவுலகின் கண்ணதே.

தற்பரந்தன்னிலே சதாசிவன்றன, தற்பவவுலகெலா மூறுதியாமதிற், கற்பிதமாய் நிகழ்ந்திடு மெய்காணுறி, லற்புதமாம் பரனல்ல தில்லையே.

உண்டையதொன் றுடையானெனும் வேறவையின்றி லோகத் திடையிருந்து மிருந்திலன யெவையும் முட்டம்

பாய்த், திடமிதென்றறியாவகை நின்றொரு செய்கையின்றி, யடையவுஞ்செயு மாரவனந்தரியாமி யாவன்.

காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவான லன்றான், காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவா னொருத்தன், றாண்டுசோதியினலனல் சோமனருக்கனென்லா, மீண்ட போதும் விளங்குமனக் கரியாகி நின்று.

சித்தமத்த மித்திடத்த பாவமுந் தெரிந்திடுஞ், சுத்த நற்சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடு, மத்தமித்தலும் பிறத்தலும் மிலானபாவபா, வத்தைவிட்டகண்டமா யறிந்தபோதடங்கவாம்.

பின்னமானதன்றியே பிரமமா யறிந்தவன், றுன்னு பேதமேவினுஞ் சொரூபமே நிகழ்ந்ததா, ஞன்னின்ஞான நாசமில்லைஞேய நாசமாகுநன், றன்னின்ஞான ஞேயமாக வேறுறாத தன்மையால்.

இதுபரமமானகதி யிதுபரமமாமுலகு, மதிசுகமுமாவதிது வழிவிறனமாவதிது, வுதறுதன தோலுரகமுடலென வுறுதுபர, மதனையறிவா னதிகனகமதிவையா னுடலில்.

தற்பரமமாகியுள தத்துவமதேயொழிய, வற்பமயகா ணுமவரத்துருவமே யடைவர், கற்பிதவஞ்ஞானமதி லுற்பவமதாமுலக, நற்பிரமமாயறிவர் நற்சிவமதா நயனர்.

இது பரம்பரமமிர்தமபய மென்பதுவுமிது, விதமுறும் பலவுலகும் விரவலின்றிப் பிரம, பதமிதன்கணி லிரவுபக லடைந்திலயிரண, முதயமொன்றில விருமைவினைகளொன் றதுவுமில்.

ஆதலிற் சில வினையினலிடர்ப்பனவுமில, ஞானுதலுற் றிடு பிரமலோக மிப்பரமிவனேர், சேதுவக்கரையடைஞர் சேர்ப்பவக்கடல்விடுவர், சாதுயர்ப்படினுமவர் தாமிடர்ப் படுவதிலர்.

ஆகமங்கள் பலவுமுறை யாடுகின்ற திவனையனு, போக மொன்றி லறியுமறிவாகிநின்ற புனிதனிவ, னேகனந்தவ னுபவமதே யிவன்றன் வடிவுதனை, யோகமொன்றவருள்ப வனு மோதுகின்ற பரமசிவன்.

நானுமந்த வரியமரர் ஞாலமொன்று நரர்விவித, யோ னியிந்த முழுதுமதனூடெழுந்த சிறுதிவலை, தாமெழுந்து சிறிதில் சிவசாகரந் தனிகரரியை, யூனமொன்றுமென மொழிவரோர் வொழிந்த வுணர்விலிகள்.

எல்லாம் வசிகரிப்பானு மெதுக்கு முள்ளாமொருவடி வைப், பல்லாயிரங் கோடிகளாகப் பண்ணுநிற்கும் பரம் பரனை, யல்லாதொன்றுமில்லை யெனவனுபவத்தா லகத்து ணர, வல்லார்தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறைதான்.

மகாராஜா துறவிலும் அதுவிஷ்ணுவின் பரமபதம் என்னும் சுருதிப்படி பரமபதமகிமை காணலாம்:—

பஞ்சபூதமறிந்துபேரும் பானுத்திங்களுடுக்கள்போம்,
வஞ்சவசுரர் மடிந்திடுவர் மாகர்பதம்போம் வல்லரக்கர்,
துஞ்சுவார்கள் போகிபதந் துஞ்சும் பிரமன்மதந்தானுந்,
துஞ்சுந்திருமால்பதந் துஞ்சுந்துஞ்சாதொன்றே பரமபதம்.

பரமபத மென்றது பிரஹ்மபதமாம் ஏனைய யாவுமே காரியங்களாம் என்றறிக.

ஸ்ரீ சௌந்தரியலகரியிலும் காணலாம்:—

வேதரஞ்சகன் மால்புரந்தரன் வேகசண்ட குபேரனே டாதியென்டிசை பாலர்பொன்றவு மாதியந்த மிலாதகோர் நாதர்பொன்றிலரே துன்மங்கல நாணுறுந்திற னுதலா, வீதழைந்தது யோகமம்பிகை நீலியென்பது பாவமே.

ஞானவாசிட்டத்துங்காணலாம்:—

சித்தர்பொன்றுவர் துருவனுஞ் சிதைகுவன் சிவனயன்றிருமார்பன், றத்துவந்தனி லொன்றுவர் காலமுந் தருமமுமுடிவாகு, மத்தவானும்போ மயக்கமேதருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச், சுத்தமாம் பொருளொன்றினு லிகழ்வுறத் தொல்லுலகிழிவாகும்.

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன்றானும், வியனிலுபசாந்தராம் வேலையினி லுபாதியெலாம் விட்டு நீங்கிப், பயனில் சகமென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூப, முயர்விகற்பமிலா வடிவாயெங்கு நிறைசிவமாகி யொன்றாய் நிற்கும்.

ஆயதேயத்தி லெம்பெரும்பூதமுமில்லைச், சேயகுன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்களில்லைத், தூயதேவரே முதலிய தொல்லுயிரில்லை, நாயகன்பெருஞ்சுடரெனு மொருவனே நண்ணும்.

தெரிவதாகிய வித்தையுமகற்றுவன் றெரிபொருணுணுமோ, பெரிதுசோடமாய் விகற்பமற்ற மலமாம் பேரறிவியானுகு, மரியயன் சிவனிந்திர னந்தகனதியாமிடந்தோறுஞ், சரிகொண்முத்தி னுண்ணுலென நிற்குமாற்றேன்றுமிவ் வுயர்போதம்.